# உலக சரித்திரம்

நேருஜீ சிறையிலிருந்த காலத்தில் தமது
மகள் இந்திராவுக்கு எழுதிய,
உலக சரித்திரத்தை விளக்கும்
கடிதங்களின் மொழிபெயர்ப்பு

ஆசிரியர் :
ஜவாஹர்லால் நேரு

மொழிபெயர்ப் பாசிரியர் :
ஒ. வி. அளகேசன்

பதிப்பாளர்கள் :
நவயுகப் பிரசுராலயம்

# பதிப்புரை

நமது தலைவர் நேருஜீ சிறையிலிருந்த காலத்தில் தமது மகள் இந்திராவுக்கு எழுதிய கடிதங்களை - உலக சரித்திரத்தை - Glimpses of world History - மூன்று புத்தகங்களாக வெளியிடுகின்றோம். முதற் புத்தகமே இது.

"நமக்குமுன் உலகம் எப்படி யிருந்தது" என்று அறிய நாம் ஒவ்வொருவரும் ஆவலுள்ளவர்களாய் இருக்கிறோம். பத்தே வயதுடைய (இக்கடிதங்கள் எழுதப்பட்ட காலத்தில்) தமது மகள் புரிந்துகொள்ள வேண்டுமென்ற கருத்தோடு எழுதப்பட்ட இக்கடிதங்கள் நமது ஆவலைப் பூர்த்தி செய்கின்றன. இப் புத்தகத்தை "நாங்கள் வெளியிடுகிறோம்" என்பதில் ஏற்படும் மகிழ்ச்சி சொல்லுந்தரமன்று.

அறிஞர் பலரால் புகழப்படும் இப் புத்தகத்தைக் குறித்து ஏதாவது சொல்லப் புகுவது இப்புத்தகத்திலே வரும் "செப்புத் தகடு கட்டிக்கொண்டவனின் கதை" யையே ஒக்கும். எனவே அறிஞர்களே அந்தப் பணியை ஆற்றட்டும்.

மொழிபெயர்ப்பு என்று உணர இடமளிக்கலாகாது என்ற கருத்தோடு, ஒரு சிலர்தான் புரிந்துகொள்ள வேண்டும் என்ற குறுகிய மனப்பான்மையுமின்றிச் சிறந்த முறையில் மொழிபெயர்த்துள்ளார் திரு. ஓ. வி. அளகேசன். தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டியின் செயலாளராக இருந்து செயலாற்றிவரும் அவரை மக்கள் நன்கறிவார்கள். 1941-ஆம் ஆண்டு முதலே, சிறையில் அவர் மொழிபெயர்த்துக் கொண்டிருந்த காலத்தில், அவருடன் சர்க்கார் பள்ளித் தோழனாக இருந்த எனக்கு அவர் மொழிபெயர்ப்பில் மிகுந்த அக்கறை யுண்டு. இப்பொழுது அது என் மூலமாகவே வெளிவருவது பெருமைப் படுவதற்குரியதே.

இப்புத்தகத்தை வெளியிட உரிமை தந்த நம் தலைவரவர்களுக்கும் மொழிபெயர்த்துதவிய நண்பர் ஓ. வி. அளகேசன் அவர்களுக்கும் எங்கள் நன்றி.

சென்னை
12-4-47

டி. ஆர். அருணாசலம்
நிர்வாகி.

# முன்னுரை

இக்கடிதங்கள் எங்கே அல்லது எப்பொழுது வெளியாகும் என்பது எனக்குத் தெரியாது. இவை வெளியாகுமா அல்லது ஆகாதா என்பதும் எனக்குத் தெரியாது. இந்தியா இன்றுள்ள விசித்திர நிலைமையில் நாளை என்ன நடக்கும் என்று சொல்வது கடினம். ஆகவே, சமயமுள்ளபோதே இவ்வரிகளை எழுதிவிடு கிறேன். இல்லாவிடில், வேறு நிகழ்ச்சிகள் வந்து குறுக் கிடலாம்.

சரித்திர சம்பந்தமான இக்கடிதங்களை நான் எழுதியதற்கு விளக்கமும் சமாதானமும் கூறவேண்டியது அவசியம். இக்கடிதங்களைப் படிக்கும் சிரமத்தை மேற்கொள்வோர் இக்கடிதங்களிலே அவ் விளக்கத் தையும் சமாதானத்தையும் காணலாம். குறிப்பாக, இறுதிக் கடிதத்தைப் படிக்குமாறு உங்களைக் கேட்டுக் கொள்ளுவேன். எல்லாம் தலைகீழாயிருக்கும் இவ்வுலகில் இறுதியிலிருந்து தொடங்குவதிலும் ஒரு பொருத்தம் இருக்கிறதல்லவா!

இக்கடிதங்கள் வளர்ந்துவிட்டன. இவற்றில் ஒரு வகைதொகையைக் காண்பது அரிது. இவை இவ்வாறு பெருகிவிடும் என்றும் நான் நினைக்கவில்லை. ஏறக்குறைய ஆறு ஆண்டுகளுக்குமுன், என் பெண் ணுக்கு வயது பத்தாயிருந்தபோது, உலகின் ஆதி வர

லாற்றை விளக்கமாகவும் சுருக்கமாகவும் கூறும் சில கடிதங்களை நான் அவளுக்கு எழுதினேன். அக்கடிதங்கள் பிறகு புத்தக வடிவில் வெளியாயின. அவற்றைப் பலர் விரும்பி ஏற்றார்கள். அவற்றைத் தொடர்ந்து எழுத வேண்டும் என்கிற எண்ணம் என் மனத்தில் ஊசலாடிக் கொண்டே இருந்தது. ஆனால், அவ்வெண்ணம் நிறைவேறுவதற்கு ஓய்ச்சல் ஒழிவில்லாத எனது அரசியல் வாழ்க்கை இடம் தரவில்லை. சிறைக்கு வந்ததும் எனக்கு வேண்டிய சந்தர்ப்பம் வாய்த்தது. அதை நான் நழுவ விடவில்லை.

சிறை வாழ்க்கையிலும் சில அநுகூலங்கள் உண்டு. முதலில் ஓய்வு கிடைக்கிறது. ஓரளவுக்கு நடுநிலையில் நின்று விஷயங்களை ஆராயவும் முடிகிறது. ஆனால், அதிலுள்ள பிரதிகூலங்கள் யாவரும் அறிந்தவையே. சிறையில் உள்ளவனுக்கு நூல் நிலையங்களின் உதவியோ, பார்க்கவேண்டிய புத்தகங்களோ கிடையா. இந்த நிலைமையில், எவ்விஷயத்தைப்பற்றியும் அதிலும் சிறப்பாகச் சரித்திரத்தைப்பற்றி எழுதத் துணிவது மூர்க்கத்தனம் என்றே சொல்லலாம். எனக்கு அநேக புத்தகங்கள் வந்தன. ஆனால், அவை போய்விட்டன. அவற்றை நான் நிலையாக என்னிடம் வைத்துக்கொள்வதற்கில்லை. பன்னிரண்டு ஆண்டுகளுக்கு முன், பல்லாயிரக்கணக்கான என் நாட்டவரைப் போலவே நானும் எனது சிறை யாத்திரைகளைத் தொடங்கியபோது, நான் படிக்கும் புத்தகங்களிலிருந்து குறிப்புகள் எழுதும் வழக்கத்தை மேற்கொண்டேன். எனது குறிப்புப் புத்தகங்களின் எண்ணிக்கை பெருகியது. நான் எழுத ஆரம்பித்தபோது அவை எனக்குப் பயன்பட்டன. வேறு நூல்களும் எனக்குப் பெரிதும் உதவின என்பதைக் கூறத் தேவையில்லை. அவற்றில் ஆசிரியர் எச். ஜி. வெல்ஸ் அவர்கள்

எழுதிய "சரித்திர விசேஷம்" (Outline of History) என்னும் நூலைச் சிறப்பாகக் கூறவேண்டும். ஆனால், அவ்வப்போது பார்ப்பதற்கு வேண்டிய நூல்கள் இல்லாதது உண்மையாகவே ஒரு பெருங் குறையாக இருந்தது. இதனாலேயே இந்நூலில் பல இடங்களை மழுப்பவும் அடித்துத் தள்ளவும் நேர்ந்தது.

இக்கடிதங்கள் தந்தை மகளுக்கு எழுதியவை. அதனால் இவற்றில் பல சொந்த விஷயங்களும் அந்தரங்க மான விஷயங்களும் இருக்கின்றன. அவற்றை என்ன செய்வதென்று எனக்குத் தெரியவில்லை. அவற்றை நீக்குவதென்பது எளிதல்ல. ஆகையால், அவற்றை அவ்வாறே விட்டுவைத்துள்ளேன்.

ஒரு வேலையும் இன்றிச் சும்மா இருந்தால் நமக்குள் நாமே யோசிப்பதும் இன்னும் பலவிதமான சித்தப் போக்குகளும் உண்டாகின்றன. இக்கடிதங்களில் அடிக்கடி மாறும் என் சித்தப் போக்குகளைத் தெளிவாகக் காணலாம். மேலும், ஒரு சரித்திர ஆசிரியனைப்போல் சொந்த உணர்ச்சிகளைப் புகுத்தாமல் ஸ்தூலப் பொருளை மட்டும் கருத்தில்கொண்டு நான் இந்நூலை நடத்திச் செல்லவில்லை. நான் ஒரு சரித்திர ஆசிரியன் என்று உரிமை கொண்டாடவும் இல்லை. சிறுவர்களுக்கு ஏற்றாற் போல் சாதாரணமாகவும் எழுதியிருக்கிறேன். சில இடங் களில் பருவ முதிர்ச்சிக்குரிய கருத்துக்களையும் எடுத்துப் பேசியிருக்கிறேன். இத்தகைய ஒரு கதம்பமாக இந்நூல் அமைந்திருக்கிறது. அநேக இடங்களில் சொன்னதையே திருப்பித் திருப்பிச் சொல்லியிருக்கிறேன். இதிற்காணும் குற்றங்களை ஆராயின் அதற்கு ஒரு எல்லையே இராது. மேலெழுந்தவாரியாக எழுதப்பட்ட இக்கடிதங்கள் இலேசாகவே பிணைக்கப்பட்டுள்ளன. கண்ட புத்தகங் களிலிருந்து உண்மைகளையும் கருத்துக்களையும் கடன்

வாங்கியிருக்கிறேன். இதில் பிழைகள் மலிந்திருக்கின்றன. ஒரு நல்ல சரித்திர ஆசிரியனைக் கொண்டு இக்கடிதங்களைத் திருத்தவேண்டுமென்று எண்ணியிருந்தேன். சிறைக்கு வெளியிலிருந்த சொற்ப காலத்தில் இதற்கு ஏற்பாடு செய்ய எனக்கு அவகாசமில்லை.

இக்கடிதங்களில் எனது அபிப்பிராயங்களைச் சற்று வன்மையாகவே தெரிவித்திருக்கிறேன். அவ்வபிப்பிராயங்களை நான் இன்னும் கொண்டிருக்கிறேன். ஆனால், இக்கடிதங்களை எழுதிக்கொண்டு வரும்போதே சரித்திரத்தைப்பற்றிய எனது நோக்கம் சிறிது சிறிதாக மாறுதலுற்று வந்தது. இன்று இவற்றை நானே திரும்ப எழுதுவேனாயின் வேறுவிதமாக எழுதுவேன் அல்லது வேறுவிதமாக வற்புறுத்துவேன். ஆனால், எழுதியதையெல்லாம் அழித்துவிட்டு அடியிலிருந்து ஆரம்பிக்க முடியாதல்லவா?

ஜனவரி 1,
1934.

ஜவாஹர்லால் நேரு

# மொழிபெயர்ப்பாசிரியர் முன்னுரை

நான் புஸ்தகம் எழுதுவது இதுதான் முதல் தடவை. இதை ஜனங்கள் விரும்பிப் படிக்க வேண்டுமென்று நான் ஆசைப்படுவது சகஜம். ஆனால், எழுத்தாளர்கள் இதை 'நல்ல புஸ்தகம்' என்று ஒப்புக்கொண்டால்தான் ஜனங்கள் ஏற்றுக்கொள்வார்கள். 'வசிஷ்டர் வாயால் பிரம்மரிஷி' என்பதுபோல, புதிதாக வரும் என்னை அன்னியன் என்று ஒதுக்காமல் தங்களுடைய கூட்டத்தில் ஒருவனுகச் சேர்த்துக் கொள்ளும்படி தமிழ் எழுத்தாளர்களைத் தாழ்மையுடன் கேட்டுக் கொள்ளுகிறேன். அவர்களை வணங்கிவிட்டு இந் நூலை அரங்கேற்றுகிறேன்.

ஜவாஹர்லால் இந்தியர். அவருடைய தாய்மொழி ஹிந்துஸ்தானி. அப்படியிருந்தும் அவர் ஆங்கிலத்தில் தித்திக்கத் தித்திக்க எழுதியிருக்கிருர். நானே என்னுடைய தாய்மொழியாகிய தமிழில் இதை எழுதியிருக்கிறேன். அதனல் இது இன்னும் அதிகமாகத் தித்திக்க வேண்டும். மூலத்தைவிட மொழிபெயர்ப்பு நன்ருயிருக்க வேண்டும் என்று சொல்வது அதிகப்பிரசங்கித்தனம் என்று சொல்லலாம். ஆயினும், அதுதான் என்னுடைய ஆசை. இந்த ஆசை எவ்வளவு தூரம் நிறைவேறியிருக்கிறதென்பதைப் படிக்கிறவர்கள்தான் தீர்மானிக்க வேண்டும்.

ஒரு மொழிபெயர்ப்புக்கு இலக்கணம் என்று நான் கருதுவது இது தான். மொழிபெயர்ப்பைப் படிக்கும்போது அது மொழிபெயர்ப்பென்றே தோன்றக் கூடாது. மொழிபெயர்ப்பு என்கிற ஞாபகத்தோடு படிக்க ஆரம்பித்தாலும் படிக்கும்போது அந்த ஞாபகம்

மறைந்துவிட வேண்டும். ஜவாஹர்லால் தமிழராயிருந்து தமிழில் சிந்தித்துத் தமிழில் எழுதினால் எப்படி யிருக்குமோ அப்படி யிருக்கவேண்டும் இத் தமிழ் மொழி பெயர்ப்பு. இந்தச் சோதனையில் எவ்வளவு தூரம் தேறுகிறதோ அவ்வளவுக்கே என் மொழிபெயர்ப்பு வெற்றி பெற்றதாகக் கருதுவேன். இந்த வெற்றியின் அளவைப் படிக்கிறவர்கள்தான் நிர்ணயிக்க வேண்டும்.

இதை எழுதியதில் எனக்கிருந்த இன்னும் சில ஆசைகளையும் சொல்லிவிடுகிறேன்.

ஒரு சரித்திர நூல் இலக்கியம் ஆகமுடியுமா? இக் கேள்விக்குப் பதில் அனேகமாக இல்லை என்றே சொல்ல வேண்டும். ஏனென்றால், இலக்கியத்துக்குக் கற்பனை அவசியம். சரித்திரத்தில் கற்பனைக்கு இடமில்லை. கற்பனை இடம் பெற்றால் அதை உண்மைச் சரித்திரம் என்று கூறமுடியாது. சற்பனை உள்ள அளவுக்குச் சரித்திரம் இல்லை. முதனூலுக்கே இது பொருந்தும். மொழிபெயர்ப்புக்குச் சொல்ல வேண்டியதில்லை.

ஆனால், கிப்பன் இலக்கியச் சுவைபடச் சரித்திரம் ('ரோம ராஜ்யத்தின் சிதைவும் வீழ்ச்சியும்') எழுதி யிருப்பதாகச் சொல்லுகிறார்கள். நான் அதைப் படிக்க வில்லை. ஆனால், ஜவாஹர்லால் எழுதியுள்ள இந்நூலில் இலக்கியச் சுவை மலிந்திருக்கிறது. அதைப்போலவே மொழிபெயர்ப்பும் தமிழ்ச்சுவை தோய்ந்து என்றென்றும் படிப்போருக்கு இன்பம் அளிக்கவேண்டும் என்பது என்னுடைய அவா.

இது தமிழ்நடை உருவாகிவரும் காலம். இன்னும் அது ஒரு நிலையை அடையவில்லை. அதனால் ஜாக்கிரதை யாக எழுதவேண்டி யிருக்கிறது. கரடுமுரடான தனித் தமிழா யிருந்தாலும் படிப்பவர்கள் புரிந்துகொள்ள

முடியாது. எளிய நடை என்கிற பேரில் பஞ்சுபோல் லேசாயிருந்தாலும் விஷய கவுரவம் கெட்டுவிடும். ஆகவே, இரண்டுக்கும் பொதுவான ஒரு நடையைக் கையாண்டிருக்கிறேன். சம்ஸ்கிருதச் சொற்களை அறவே விலக்கவும் இல்லை; அளவுக்கு மீறிச் சேர்க்கவும் இல்லை. இது தமிழ் எழுதுவோருக்கு ஒரு மாதிரியாக அமையவேண்டும் என்பதும் எனது ஆசை.

மொழிபெயர்ப்பது ரொம்பவும் சிரமமான காரியம். ஒரு புஸ்தகம் மொழிபெயர்ப்பதற்குள் பத்துப் புஸ்தகங்கள் சொந்தமாக எழுதிவிடலாம். மொழிபெயர்ப்பது பிறர் குழந்தையை வளர்ப்பது போன்றது. பிறர் கருத்துக்களையும் அபிப்பிராயங்களையும் நாம் சுவீகாரம் எடுத்துக்கொள்ள வேண்டும். பிறகு நமது பாஷையில் நமது மரபு வழுவாமல் சொல்லவேண்டும். மூலத்தைப் 'போட்டோ' எடுக்கவும் கூடாது. கருத்தைச் சொல்லுகிறேன் என்று சம்பந்தமில்லாமல் அதை விகாரப்படுத்தவும் கூடாது. கூடியவரையில் இந்த விதியை அனுசரித்தே மொழிபெயர்க்க முயன்றிருக்கிறேன்.

ஆங்கிலத்திலிருந்து மொழிபெயர்ப்பதில் சில பிரதிகூலங்கள் இருக்கின்றன. இன்று அது உலக மொழியாகவும் அரசியல் செல்வாக்குள்ள ஒரு மக்களின் மொழியாகவும் விளங்குவதால் அதில் எல்லா விஷயங்களும் காணப்படுகின்றன. ஆனால், அது எல்லாவற்றையும் தன் மேதைக்கு ஏற்பத் தன்னோடு இயைத்துக் கொள்ளுகிறது. உதாரணமாக, பூரி ஜகந்நாத சுவாமி பவனி வருகிற தேரைக் குறிக்கும் 'ஜகந்நாதம்' என்கிற சம்ஸ்கிருதச் சொல் 'ஜகர்நாட்' என்று ஆங்கிலத்தில் எழுதப்படுகிறது. இதை வேறு பாஷைக்காரர் அப்படியே எழுதினால் பிழையாகத்தானே முடியும்? கான்ஸ்டாண்டிநோபிளின் துருக்கிப் பெயர் 'இஸ்தம்பூல்' என்பது.

இதை ஆங்கிலத்தில் 'Istanbul' என்று எழுது கிறார்கள். அதை ஒட்டி நாமும் தமிழில் 'இஸ்டான்புல்' என்று எழுதிவிடுகிறோம். இது பிழை என்பதில் ஐயமில்லை. ஆனால், இதற்கு நமது அறியாமையும் ஆங்கிலத்தில் காணும் எல்லாவற்றையும் வேதவாக்காகக் கொள்ளும் துர்ப்பழக்கமுமே காரணமாகும். சீன, ஜப்பானியப் பெயர்களைப்பற்றிக் கேட்கவே வேண்டிய தில்லை. அவை ஆங்கிலத்தில் பெரிதும் திரிந்து மொழி பெயர்ப்பில் அடியோடு உரு மாறிவிட்டிருந்தால் ஆச்சரி யம் ஒன்றுமில்லை. நமது வியாபகமும் பிற பாஷை அறிவும் விருத்தியானால் இத்தகைய பிழைகளை விலக்க முடியும். கூடியவரையில், கற்றோர்களைக் கேட்டு இத்தகைய பிழை களைத் தெரிந்தவரையில் விலக்க முயன்றிருக்கிறேன்.

முதல் நூல் ஆசிரியருக்கும் எனக்கும் ஒருவிதத்தில் விசேஷ ஒற்றுமை உண்டு. அவரும் சிறையில் எழுதினார். நானும் சிறையில் எழுதினேன். எழுதும்போது அவர் அடைந்த சித்தப் போக்குகளையும் அநுபவங்களையும் நானும் அடைந்திருக்கிறேன். உதாரணமாக, அவருடைய மன நிலையைக் காட்டும் கீழ்க்காணும் பகுதி எனக்கும் பொருந்தும் :

"இக் கடிதங்களைப் பெரும்பாலும் சிறையிலிருந்தே, நினைத்தபோது திடீரென எழுதுவதும், பின்னர் நீண்ட இடைக்காலத்திற்குப் பின் எழுதுவதுமாக, எழுதி யிருக்கிறேன். அதிகம் எழுத எழுத எனக்கே நான் எழுது வது பிடிக்கவில்லை. இன்னொரு பயமும் எனக்குக் கூடவே உண்டாகிறது. இக்கடிதங்கள் உனக்கு அவ்வளவாகப் பிடிக்குமோ பிடிக்காதோ? ஒருவேளை இவை உனக்கு வெறும் பாரமாக முடிந்து விட்டால்? பின் ஏன் நான் இவைகளைத் தொடர்ந்து எழுதவேண்டும்."

இவ்வாறு பல உதாரணங்கள் கூறலாம்.

இதை முதல்முதலில் பெல்லாரி சிறையில் எழுத ஆரம்பித்தேன். இதற்கு முக்கிய காரணமா யிருந்தவர் எனது நண்பர் ஈரோடு டாக்டர் ல. கி. முத்துசாமி அவர்கள். பிறகு இதை அலிபுரம், வேலூர், தஞ்சாவூர் சிறைகளில் கொஞ்சம் கொஞ்சமாக எழுதினேன். எனக்கு ஊக்கம் குன்றியபோதெல்லாம் என்னை உற்சாகப்படுத்தி எழுதச் சொன்னவர் எனது நண்பர் ஆம்பூர் வி. பி. ராமசாமி அவர்கள். இதைப் பிழையின்றி மொழி பெயர்க்கப் பெரிதும் உதவியவர் தமிழிலும் சம்ஸ்கிருதத்திலும் ஆங்கிலத்திலும் நன்கு கற்றுத் தேர்ந்த எனது நண்பர் தஞ்சாவூர் வக்கீல் டி. வி. சடகோபாச்சாரியார் (மத்திய சட்டசபை அங்கத்தினர்) அவர்கள். கடைசியாக, இதை வெளியிடுவதற்கு உதவியவர் எனது நண்பர் தேவகோட்டை டி. ஆர். அருணசலம் அவர்கள். இவர்களுக்கும் எனக்கு ஊக்கமளித்து எழுதச்சொன்ன இன்னும் மற்ற அன்பர்களுக்கும் எனது வணக்கத்தையும் நன்றியறிதலையும் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

ஒழலூர்
12—4—47

ஒ. வி. அளகேசன்

# பொருளடக்கம்

## நைனி மத்திய சிறையிலிருந்து எழுதியவை

## அரபிக்கடலில் எஸ். எஸ். கிரகோவியா கப்பலிலிருந்து எழுதியவை



## பரில்லி ஜில்லா சிறையிலிருந்து எழுதியவை

டேராடூன் ஜில்லா சிறையிலிருந்து எழுதியவை

# பிறந்த நாள் கடிதம்*

சென்டிரல் ஜெயில்,
நைனி.
அக்டோபர் 26, 1930.

உன்னுடைய பிறந்த நாளன்று உனக்குப் பரிசுகளும் நல்வாழ்த்துக்களும் கிடைப்பது வழக்கம். உனக்கு வேண்டியமட்டும் நல்லாசி கூறுகிறேன்; ஆனால் நைனி சிறையிலிருந்து உனக்கு நான் என்ன பரிசு அனுப்ப முடியும்? என்னுடைய பரிசுகள் இம்மண்ணுலகத்தைச் சேர்ந்தவையாக இருக்க முடியாது. வானத்துத் தேவதை உனக்கு வழங்கக் கூடியதைப் போன்று காற்றாலும் மனத்தாலும் உயிராலும் ஆன பொருளையே உனக்கு நான் அனுப்பக்கூடும். சிறையின் உயர்ந்த புறமதில் சுவரும் அதைத் தடுக்க முடியாது.

என் அன்பே, பிறருக்கு 'உபதேசம்' பண்ணுவது எனக்கு எவ்வளவு பிடிக்காத விஷயம் என்பது உனக்குத் தெரியும். நான் உபதேசம் பண்ண ஆரம்பிக்கும்போதெல்லாம் எனக்கு ஒரு கதை நினைவுக்கு வருவதுண்டு. நீயே ஒரு காலத்தில் அக்கதை காணப்படும் நூலை வாசிக்கக் கூடும். ஆயிரத்துமுந்நூறு ஆண்டுகளுக்கு முன்பு சீன தேசத்திலிருந்து யுவான் சுவாங் (Hiuen Tsang) என்னும் பெரியார் அறிவுச் செல்வத்தையும், கலைச் செல்வத்தையும் நாடி இந்தியாவுக்கு வந்தார். ஆறுகளையும் மலைகளையும்

* இந்திரா பிரியதரிசினிக்கு அவளது பதின்மூன்றாவது பிறந்த நாளன்று எழுதியது.

628—1

பாலை நிலங்களையும் கடந்து, அபாயத்தை மதியாமல், தடைகள் பலவற்றையும் எதிர்த்து வென்று அவர் இங்கு வந்து சேர்ந்தார். அறிவை வளர்த்துக் கொள்வதிலே அவருக்கு அத்தனை ஆவல். அவர் இந்தியாவிலே பல வருஷங்களைக் கழித்தார். குறிப்பாக, நாளந்தா பல்கலைக் கழகத்தில் படித்தபோது தாமும் கற்றுப் பிறருக்கும் கற்பித்துக்கொண்டிருந்தார். இப்போது பாட்னா எனப் படும் பாடலிபுத்திர நகருக்கருகில் நாளந்தா இருக்கிறது.

யுவான் சுவாங் அவர்களின் கல்வி மேம்பாட்டை உணர்ந்த மேலோர் அவருக்குப் 'பௌத்த மதாசாரியர்' என்னும் பட்டத்தை வழங்கினார்கள். யுவான் சுவாங் இந்தியா முழுமையும் சுற்றிவந்தார்; மிகப் பழைய அந் நாளிலே இப்பெரிய நாட்டில் வாழ்ந்த மக்களையும், அவர் தம் பழக்கவழக்கங்களையும் நேரில் பார்த்துத் தெரிந்து கொண்டார். பிறகு, அவர் தமது அனுபவங்களையெல்லாம் திரட்டி ஒரு நூல் எழுதினார். அந்த நூலில்தான் நான் மேற்சொன்ன கதை வருகிறது. அது வருமாறு:—

தென் இந்தியாவிலிருந்து கர்ண சுவர்ணம் என்னும் பட்டணத்திற்கு ஒருவன் வந்தான். பீஹாரில் பாகல்பூர் என்று இப்போது வழங்கும் இடத்திற்கருகில் அப் பட்டணம் இருந்திருக்க வேண்டும். அவன் அரையில் செப்புத் தகடுகளைக் கட்டிக்கொண்டும் தலையின்மீது ஒரு தீப்பந்தத்தை வைத்துக்கொண்டும் கையில் ஒரு கோலைத் தாங்கிப் பெருமிதத்துடன் எங்கும் திரிந்து வந்தானும். அவனது விசித்திரமான கோலத்தைக் கண்ட ஒருவர் அதன் காரணத்தை வினவியபோது, 'என்னுடைய கல்வி ஞானத்துக்கு அளவே இல்லை. செப்புத் தகடுகளைக் கட்டிக்கொள்ளாவிட்டால் ஞான மிகுதியால் என் வயிறு வெடித்தே போய்விடும். அறியாமை இருட்டிலே கிடந்து உழலும் மக்களின்மீது பிறந்த இரக்கத்தாலே

என் தலையில் ஒளியைத் தூக்கிச் செல்கிறேன்' என்று அவன் பதிலளிப்பானும்.

நிற்க, அறிவு மிகுதியால் வயிறு வெடித்துவிடும் என்கிற பயம் எனக்கு இல்லை. ஆகவே நான் செப்புத் தகடுகளைக் கட்டிக்கொள்ள வேண்டுவதில்லை. மேலும் எனக்குள்ள அறிவும் என் வயிற்றினிடத்தே இல்லை என்று நான் நம்புகிறேன். அறிவு என் உடம்பில் எங்கு இருந்தாலும் அது மேலும் மேலும் பெருகுவதற்கு நிறைய இடம் இருக்கிறது. அறிவு நிரம்பிவிட்டது, இனி இடமில்லை என்கிற நிலைமை எந்நாளும் ஏற்படாது. இவ்வாறு நானே அறிவில் குறைந்தவனுயிருக்கும்போது பிறருக்கு உபதேசிக்கக்கூடிய அறிவாளியைப்போல் நான் எப்படி நடிப்பது? ஆகவே, நியாயம் இன்னது, அநியாயம் இன்னது, செய்யத்தக்கது இது, தகாதது இது என்று அறிவதற்குச் சிறந்த வழி பிறருக்கு நீண்ட பிரசங்கம் நிகழ்த்துவதல்ல என்று நான் எண்ணுகிறேன். ஆனால் பிறருடன் கலந்து பேசி விவாதிக்க வேண்டும்; அப்படிச் செய்வதால் சிறிது உண்மை புலப்படும். உன்னுடன் பேசுவதில் எனக்கு எப்போதுமே விருப்பம் உண்டு. நாம் பலவற்றைப் பற்றிக் கலந்து பேசியிருக்கிறோம். ஆனால் இவ்வுலகமோ பெரிது; இதற்கப்பால் வியக்கத்தக்க வேறு பல உலகுகளும் இருக்கின்றன. ஆகவே யுவான் சுவாங் கதையில் வரும் அந்தக் கர்வங் கொண்ட மூட மனிதனைப்போலக் கற்க வேண்டியதையெல்லாம் கற்று நிரம்பிவிட்டோம் என்றிராமல் 'கற்றது கைம்மண் ணளவு கல்லாத துலகளவு' என்பதை உணர்ந்து மேலும் மேலும் கற்றலே அறிவுடைமையாகும். எல்லாம் கற்றுந் தெளிந்தவர்கள் என்று சொல்லக்கூடியவர்கள் இருந்தால் அவர்கள்கூட இன்னும் கற்பதற்கு ஒன்றும் இல்லையே என்று சில சமயங்களில் ஏக்கம் அடைவார்கள். அறி

விஞல் புதிது புதிதாகக் கண்டுபிடிக்கும் இன்பத்தை அத்தகையவர்கள் இழக்க நேரிடுமன்ருே! நம்மில் விரும்புவோர் அவ்வின்பத்தை அடையலாம்.

ஆகவே, நான் 'உபதேசம்' செய்வது கூடாது. ஆனுல் நான் என்ன செய்வது? கடிதம் எழுதுவது நான் ஒருவனே செய்யும் காரியம் ஆதலால் அது நாம் இருவரும் பேசுவது போல் ஆகாது. ஆகவே நான் எழுதுவதில் ஏதேனும் உனக்குச் சிறந்த புத்திமதி கூறுவதைப்போலத் தோன்றிஞல் அதைக் கசப்பு மருந்து உட்கொள்ளுவதைப்போல எடுத்துக்கொள்ளாதே. நாம் உரையாடிக் கொண்டிருக்கும்போது கூறப்படும் ஒரு குறிப்புப் போன்று அதை எடுத்துக்கொண்டு நன்கு ஆராய்ந்து பார்ப்பாயாக.

தேச சரித்திரங்களில் நாம் பெருமையும் சிறப்பும் உடைய காலப் பகுதிகளைப்பற்றி (Great Periods) வாசிக்கிருேம். பெரியார்கள் தோன்றுகிருர்கள்; அவர்கள் செயற்கரிய செயல்கள் செய்கிருர்கள். நமது கனவிலும் கற்பனையிலும் அப்பண்டைக்காலத்து வீர புருஷர்களும் ஸ்திரீகளும் வாழ்ந்த காலங்களில் நாமும் வாழ்வது போலவும் அவர்களைப் போலவே நாமும் செயற்கருஞ் செயல்கள் புரிவதுபோலவும் எண்ணிச் சில சமயங்களில் இன்புறுகிருேம். ஆர்க் ஜோன் (Jeanne d'Arc) என்பவளின் கதையை நீ முதல்முதலில் வாசித்தபோது அதிலே மிகவும் ஈடுபட்டு அவளைப்போல நீயும் ஆக வேண்டுமென்று நினைத்தது உனக்கு ஞாபகம் இருக்கிறதா? சாமானிய மக்களிடையே வீரருக்கும் தலைவருக்கும் உரிய குணங்கள் சாதாரணமாகக் காணப்படுவதில்லை. அவர்களுக்கு உண்ணும் உணவைப் பற்றியும் வீடு, வாசல் குழந்தைகளைப் பற்றியும் நினைப்பதற்கே பொழுது சரியாய்ப் போய்விடுகிறது. ஆனுல் அதற்குரிய காலம் பிறக்கும்போது ஒரு ஜனசமுதாயம் முழுவதுமே

ஒரு பெரிய லட்சியத்தில் (Great Cause) ஆர்வம்கொண்டு ஆவேசம் நிறைந்து நிற்கிறது. அப்பொழுது சாதாரண மனிதர்களும் பெரிய வீரர்கள் ஆகிருர்கள். சரித்திரம் கிளர்ச்சி நிறைந்ததாகவும் முக்கியம் வாய்ந்ததாகவும் மாறுகிறது. பெரிய தலைவர்களிடத்தில் ஏதோ ஓர் சக்தி இருக்கிறது. அது ஜனசமுதாயத்தையே விழித்தெழுந்து தீரச் செயல்கள் புரியச் செய்கிறது.

நீ பிறந்த 1917-ஆம் வருஷம் சரித்திரத்திலே மிக முக்கியமான வருஷங்களில் ஒன்று. அவ்வருஷம், நீ பிறந்த மாதத்திலேயே லெனின் ருஷ்ய நாட்டிலே ஒரு பெரும் புரட்சியை ஆரம்பித்தார். அவர் ஏழைகளிடத்தும், துன்பத்துழல்வோரிடத்தும் நிறைந்த அன்பும் அனுதாபமும் கொண்டவர். அந்நாட்டு மக்களை, என்றும் மறக்க முடியாத ஓர் அரிய அத்தியாயத்தைச் சரித்திரத்தில் இணைக்கும்படி செயல்புரியச் செய்துவிட்டார். அப் பெரியார் ஆரம்பித்த புரட்சி ருஷ்யாவையும் சைபீரியாவையும் அடியோடு மாற்றிவிட்டது.

இன்று நம் நாட்டில் மற்ருெரு பெரியார், துன்பத்தில் உழலுவோர்க்கெல்லாம் இரங்கி அவர்கள் துன்பத்தைத் துடைக்க விரையும் அன்புவடிவான உத்தமர், அவருடைய ஆத்ம சக்தியால் தூண்டப்பட்டு நம் நாட்டு மக்கள் சுதந்தரமடையவும், ஏழைகள் வறுமை முதலான கொடுமைகளினின்றும் நீங்கிப் பிழைக்கவும் பெரும் பெரும் காரியங்களையும் தியாகங்களையும் செய்து வருகிருர்கள். *பாபுஜி இன்று சிறையில் கிடக்கிருர். ஆனுல் அவருடைய செய்தியோ மாய மந்திரம் போன்று கோடிக்கணக்கான இந்தியமக்களின் இதயத்தே புகுந்து நிற்கிறது. ஆண்களும் பெண்களும் குழந்தைகளுங்கூடத் தங்கள் சிறிய கூட்டை உதறித் தள்ளிவிட்டு

*பாபுஜி - தந்தையார் அதாவது மகாத்மா காந்தி.

இந்திய சுதந்தரப் போராட்டத்தின் முன்னணியில் நிற்கிறார்கள். இந்தியாவில் இன்று நாம் சரித்திரத்தையே சிருஷ்டித்துக்கொண் டிருக்கிறோம். நமது கண் முன்பாக இவை நடக்க நாம் பார்ப்பதாலும், இந்தப் பெரிய நாடகத்தில் நாமும் சிறிது பங்கு எடுத்துக்கொள்வதாலும் நீயும் நானும் பாக்கியசாலிகள்.

இந்தப் பெரிய இயக்கத்தில் நாம் எவ்வாறு நடந்து கொள்வது? நமது பங்குக்கு என்ன வரும் என்று நான் சொல்ல முடியாது. அது என்னவாயினும் நாம் எடுத்திருக்கும் பெருங் காரியத்துக்கு இழுக்குத் தருவதையோ, நமது மக்களின் மானத்துக்குக் கேடு விளைக்கக்கூடியதையோ நாம் செய்யக்கூடாது. இந்தியாவின் போர் வீரர்களாகிய நம்மிடத்தில் நமது நாட்டின் தூய்மையான மானம் ஒப்படைக்கப்பட்டிருக்கிறது. நாம் செய்ய வேண்டியதைப்பற்றி அடிக்கடி நம்முள் ஐயம் எழலாம். இது சரி, இது சரியல்ல என்று தேர்வது எளிதல்ல. உனக்கு ஐயம் எழும்போதெல்லாம் அதைத் தீர்த்துக் கொள்ள ஒரு சிறு வழி சொல்லித் தருகிறேன். "ரகசியமாக எதையும் செய்யாதே, பிறரிடமிருந்து நீ ஒளிக்க விரும்புவதை ஒருபோதும் செய்யாதே." நீ எதையாவது ஒளிக்க விரும்புவதன் அர்த்தம் உனக்குள் பயம் இருக்கிறது என்பதாகும். அச்சம் தீயது, தகாதது. எதற்கும் அஞ்சாதே. மற்றவையெல்லாம் தாமே வந்துசேரும். அச்சம் ஒழிந்தால் வெட்கப்படத்தக்க காரியம் எதையும் நீ செய்ய மாட்டாய். பாபுஜி தலைமையின்கீழ் நடந்துவரும் சுதந்தர இயக்கத்தில் ஒளிப்பதற்கும் மறைப்பதற்கும் ஒன்றுமில்லை என்று உனக்குத் தெரியும். நாம் சொல்வதையோ செய்வதையோ அஞ்சாமல் செய்கிறோம். வெளிப்படையாக வேலை செய்து வருகிறோம். அதேபோல நமது சொந்த வாழ்க்கையிலும் யாதொரு ஒளிவுமறைவுமின்றிச்

செயல்புரிய நாம் பயில வேண்டும். நாம் தனிமையில் செய்யவேண்டிய கடன்கள் பல இருக்கின்றன; அவற்றை நாம் பிறர் கண்ணுக்குப்படாமல் செய்யத்தான் வேண்டும். அது வேறு, ரகசியமாகக் காரியங்கள் செய்வது வேறு. குழந்தாய், நீ இம்முறையிலே பழகி வந்தால் ஒளியும் அமைதியும் பெற்று விளங்குவாய்; யாது நேரினும் கலங்காத உள்ளம் பெறுவாய்.

நீண்டதொரு கடிதம் எழுதிவிட்டேன். ஆயினும் உனக்கு நான் சொல்ல விரும்புவது இன்னும் எவ்வளவோ இருக்கிறது. ஒரு கடிதத்தில் எல்லாவற்றையும் எப்படிச் சொல்ல முடியும்?

நம் நாட்டில் நடைபெறும் இச்சுதந்தரப் போராட்டத்தை நீ உன் கண்ணெதிரிலேயே பார்க்கக் கொடுத்து வைத்திருக்கிறாய் என்று முன்பே சொன்னேன். இன்னொரு விதத்திலும் நீ அதிருஷ்டசாலி. உன் தாய் வீரமும் அன்பும் உடையவள். உனக்கு எப்போதாவது சந்தேகமோ கஷ்டமோ நேரிட்டால் அதைப் போக்க உன் தாயைப்போன்ற உற்ற துணைவி வேறு யாரும் இருக்க முடியாது.

அன்பே, விடைபெற்றுக் கொள்ளுகிறேன். இந்திய நாட்டுக்குத் தொண்டுபுரியும் வீரப் புதல்வியாக நீ வளர்ந்து விளங்க வேண்டும்.

எனது அன்பை யெல்லாம் ஆசியுடன் பெற்றுக் கொள்.

# 1

## புத்தாண்டுப் பரிசு

ஜனவரி 1, 1931.

இரண்டு வருஷங்களுக்கு முன்பு நான் அலகாபாத்தில் இருந்தேன்; நீ முசூரியில் இருந்தாய். அங்கிருந்து நான் உனக்குக் கடிதங்கள் எழுதியது ஞாபகம் இருக்கிறதா? உனக்கு அவைகள் மிகவும் பிடித்திருந்தன என்று நீ அப்போது சொல்லியிருக்கிருய். அவற்றைத் தொடர்ந்து இவ்வுலகத்தைப்பற்றி இன்னும் அதிகமாக உனக்குச் சொல்லவேண்டும் என்று நான் அடிக்கடி நினைத்ததுண்டு. ஆனல் பழைமை என்னும் பனிப்படலம் அதைப் போர்த்து நிற்கிறது. அப்படிச் செய்ய நான் தயங்கினேன். உலகத்தின் கடந்த கால சரித்திரத்தைப்பற்றியும் அப்போது வாழ்ந்த பெரியார்கள் அவர்கள் செய்த காரியங்கள் முதலியவற்றைப் பற்றியும் நினைத்துப் பார்ப்பதும் படிப்பதும் இன்பம் பயப்பதாகும். ஆனல் சரித்திரத்தைப் படிப்பதைவிட அதைச் சிருஷ்டிப்பது அதிக இனிமையானது. இன்று நம் நாட்டில் நாம் சரித்திரம் சிருஷ்டித்துக்கொண்டிருக்கிறேம். இந்தியாவின் கடந்த காலம் மிகமிக நீண்டது. அது பழமையில் மறைந்திருக்கிறது. அதில் நாம் வெட்கமும் துன்பமும் அடையக்கூடிய பல துக்ககரமான சகாப்தங்கள் நிறைந்திருக்கின்றன. ஆனல் மொத்தமாகப் பார்க்குமிடத்து நமது பழைமை மிகவும் போற்றற்குரியது. அதை நினைக்கும் எந்த இந்தியனும் தலை நிமிர்ந்து பெருமையையும் மகிழ்ச்சியையும் அடையாமல் இருக்கமுடியாது. ஆயினும் பழம் பெருமையை நினைத்

துக்கொண்டு உட்கார்ந்திருக்க நமக்கு இப்போது நேர மில்லை. வருங்காலமே நமது மனத்துள்ளும் கண்ணுள் ளும் நிறைந்து நீங்காமல் நிற்கிறது. அந்த வருங்காலத்தை நாம் சிருஷ்டித்துக்கொண் டிருக்கிறோம். அந்தச் சிருஷ்டி நிகழ்காலத்தில் நமது உழைப்பையும் நேரத்தையும் கவர்ந்து நிற்கிறது.

நைனி சிறையில் படிக்கவும் எழுதவும் எனக்குப் போதிய நேரம் இருக்கிறது. ஆனால் எனது மனமோ நிலையின்றித் திரிகிறது; அது சதா வெளியில் நடக்கும் போராட்டத்தைப் பற்றியே நினைத்துக்கொண் டிருக் கிறது. 'மற்றவர்கள் என்ன செய்துகொண்டிருக்கிறார் கள்? நான் வெளியில் இருந்தால் என்ன செய்வேன்?' என்று இப்படி யெல்லாம் எண்ணுகிறது. நிகழ்காலத் தைப்பற்றிய நினைவும் எதிர்காலத்தைப் பற்றிய நினைவும் என்னுள் நிறைந்து நிற்பதால் கழிந்த காலத்தைப் பற்றி எனக்கு எண்ண இடமில்லை. ஆயினும் இது தவறு என் பதை நான் உணருகிறேன். வெளியிலிருந்து வேலை செய்ய முடியாதபோது நான் ஏன் அதைப்பற்றி எண்ணி எண்ணி மனம் புண்ணாகவேண்டும்?

ஆனால் நான் எழுதாமல் இருந்ததற்கு உண்மையான காரணம் வேறு. அதை உன் காதில் மட்டும் ரகசிய மாகச் சொல்லட்டுமா? உனக்குச் சொல்லிக் கொடுக்கக் கூடிய அளவுக்கு எனக்குத் தெரியுமா என்று எனக்கே சந் தேகம்! நீ வேகமாய் வளர்ச்சியடைந்து வருகிறாய். அறிவி லும் மேம்பட்டு வருகிறாய். அதனால் நான் பள்ளிக்கூடத் திலும் கலாசாலையிலும் கற்றதும் கேட்டதும் உன்னைத் தெருட்டுவதற்குப் போதா. உனக்கு அவை சுவையுடை யனவாகவும் இரா என்று எனக்குத் தோன்றுகிறது. சில காலத்திற்குப் பிறகு நீயே எனக்குக் குருவாக மாறிப் பல புதிய விஷயங்களைக் கற்றுக் கொடுத்தாலும் கொடுக்

கலாம்! உனது பிறந்த நாளன்று நான் உனக்கு எழுதிய கடிதத்தில் கூறியதுபோல ஞானம் மேன்மேலும் சுரப்பதால் வயிறு வெடித்துவிடும் என்று பயந்து செப்புத் தகடுகளைக் கட்டிக்கொண்டு போன அந்த 'மகா மேதாவி' யின் நிலையை நான் அடையவில்லை.

நீ முசூரியிலிருந்தபோது இவ்வுலகத்தின் ஆதிகால வரலாறுகளைப்பற்றி எழுதுவது மிகவும் எளிதாயிருந்தது. ஏனெனில் அந்த நாட்களைப் பற்றி நமக்குத் தெளிவாகவும் திட்டமாகவும் ஒன்றும் தெரியவில்லை. ஆனால் அந்த ஆதிகாலத்தைக் கடந்து அப்பால் வந்தால் மனிதன் தனது விசித்திர வாழ்க்கையை உலகின் பல பாகங்களிலும் தொடங்குவதைக் காண்கிறோம். சரித்திரமும் ஆரம்பமாகிறது. மனிதனின் வாழ்க்கையை - சிறுபான்மை அறிவுடைமையும் பெரும்பான்மை மடமையும் மதியீனமும் நிறைந்த வாழ்க்கையைச் - சித்திரிப்பது எளிதல்ல. புத்தகங்களின் துணைகொண்டு ஒருவாறு முயற்சி செய்யலாம். ஆனால் நைனி சிறையில் புத்தகசாலை ஏது? ஆகவே, நான் விரும்பினாலும் உலக சரித்திரத்தைத் தொடர்ச்சியாகத் தொகுத்து உனக்குக் கூறுவதென்பது முடியாத காரியம். மாணவர்கள் ஒரு குறிப்பிட்ட தேச சரித்திரத்தை மட்டும் படிப்பதும், சில முக்கியமான தேதிகளையும் நிகழ்ச்சிகளையும் மனப்பாடம் செய்வதும் எனக்கு முற்றும் பிடிக்காத விஷயம். சரித்திரம் என்பது ஒன்றுக்கொன்று தொடர்புள்ள முழு நிகழ்ச்சி; ஒரு தேசத்தின் சரித்திரத்தை மட்டும் பூரணமாக உணர்வதென்றால்கூட உலகத்தின் மற்றப் பாகங்களில் நிகழ்ந்த நிகழ்ச்சிகளையும் அறிந்து கொள்ளாமல் முடியாது. நீ அந்தக் குறுகிய முறையில் ஒன்றிரண்டு தேசங்களின் சரித்திரத்தை அறிந்துகொள்வதோடு நின்றுவிடாமல் உலக முழுமையிலும் நடந்தவற்றை அறிய விரும்புவாய் என்று நம்பு

கிறேன். நாம் சாதாரணமாக எண்ணிக்கொள்வதுபோல ஒரு நாட்டு மக்களுக்கும் மற்றொரு நாட்டு மக்களுக்கும் அதிக வேற்றுமை கிடையாது என்பதை நீ எப்போதும் நினைவில் வைக்க வேண்டும். உலகப் படத்தைப் பார்த்தால் ஒவ்வொரு நாடும் ஒவ்வொரு நிறத்தில் தீட்டப்பெற்றிருக்கும். மக்கள் இடத்துக்கு இடம் மாறுபட்டிருக்கிறார்கள் என்பது என்னவோ உண்மைதான். ஆனால் அவர்கள் பெரும்பாலும் ஒத்திருக்கிறார்கள் என்பதையும் நினைவில் வைக்கவேண்டும். பல்வேறு நாடுகளின் எல்லைக் கோடுகளையும் பலதிறப்பட்ட நிறங்களையும் பார்த்து மக்களுக்குள்ளிருக்கும் அடிப்படையான ஒற்றுமையை நாம் மறந்துவிடக்கூடாது.

நான் விரும்புவதைப்போல் சரித்திரத்தை எழுத முடியாதது பற்றி வருந்துகிறேன். அதற்கு நீ மற்றப் புஸ்தகங்களைப் படிக்க வேண்டும். ஆனால் நான் சிற்சில நாளைக்கொரு முறை, கடந்துபோன காலத்தைப் பற்றியும் அக்காலத்தில் வாழ்ந்த மக்களைப் பற்றியும் அவர்கள் உலக அரங்கத்தில் நடித்துவிட்டுப் போன பெரிய நாடகத்தைப் பற்றியும் உனக்கு எழுதிவருவேன்.

என்னுடைய கடிதங்கள் உனக்குக் கவர்ச்சியைத் தருமா? அவை உன் அறிவை மேலும் மேலும் தூண்டி வளர்க்குமா? உண்மையில், நீ இவைகளை எப்பொழுது பார்க்க முடியும்? அல்லது ஒருவேளை பார்க்கவே முடியாது போய்விடுமோ என்று நான் எண்ணுகிறேன். நாம் இவ்வளவு அருகிலிருந்தும் ஒருவருக்கொருவர் தூரத்தில் இருப்பது ஆச்சரியமில்லையா? நீ முசூரியில் இருந்தபோது சில நூற்றுக்கணக்கான மைல்கள் தூரத்தில் இருந்தாய். ஆயினும் விரும்பியபோதெல்லாம் உனக்குக் கடிதம் எழுதுவேன். உன்னைக் காண வேண்டுமென்று ஆவல் உண்டானால் ஓடிவந்து உன்னைப் பார்ப்பேன். ஆனால்

இங்கோ நம்மைப் பிரிப்பது யமுனை ஆறு ஒன்றுதான். நீ அந்தக் கரையிலும் நான் இந்தக் கரையிலுமாக இருக்கிறோம். இவ்வளவு அண்மையில் இருந்தும் நைனி சிறையின் உயர்ந்த சுவர்கள் நம்மைப் பிரித்து வைத்திருக்கின்றன. பதினைந்து நாளைக்கு ஒரு கடிதம் எழுதலாம், ஒரு கடிதம் பெறலாம். இருபது நிமிஷம் வேண்டியவர்களைப் பார்த்துப் பேசலாம். இந்தத் தடைகள் ஒரு விதத்தில் நன்மையாகவே முடிகின்றன. ஏனெனில் நமக்கு எளிதில் கிடைப்பவற்றின் அருமையை நாம் உணர்வதில்லை. கல்வி கற்கும் ஒருவனுக்குச் சிறையில் சிறிது காலம் இருப்பதும் விரும்பத்தக்கது என்று நான் நினைக்கிறேன். நல்வினைப் பயனாக நம் நாட்டில் இன்று பல்லாயிரக் கணக்கான மக்கள் இக்கல்வியைப் பயின்றுகொண்டிருக்கிறார்கள்!

இக்கடிதங்களை நீ பார்க்கும் காலத்தில் இவை உனக்குப் பிடிக்குமா என்பது எனக்குச் சந்தேகமாயிருக்கிறது. ஆனால் என்னுடைய இன்பத்துக்காக இவைகளை எழுதி வருவதென்று தீர்மானித்துவிட்டேன். இக்கடிதங்களை எழுதும்போது நீ என் அருகில் இருப்பதுபோலவும் உன்னுடன் நான் பேசுவதுபோலவும் ஓர் உணர்ச்சி உண்டாகிறது. நான் அடிக்கடி உன் நினைவாகவே இருக்கிறேன். இன்று புதுவருஷம் பிறந்த நாளாகையால் நீ என் எண்ணத்தை விட்டு அகலவே இல்லை. இன்று விடியற்காலை படுக்கையில் படுத்தபடியே வானத்து மீன்களைப் பார்த்துக்கொண்டிருந்தேன். என் மனத்திரையிலே கடந்த வருஷத்தில் நாம் அடைந்த இன்பம், துன்பம் கொண்ட நம்பிக்கை, செய்த செயல்கள் எல்லாம் ஓடிக்கொண்டிருந்தன. எரவாடா சிறையில் உட்கார்ந்துகொண்டு தமது மந்திர சக்தியால் கிழத்தனம் அடைந்த நம் நாட்டுக்குப் புதிய உயிரையும் இளமையையும் கொடுத்துதவிய

பாபுஜியை நினைத்துப் பார்த்தேன். உன் தாத்தாவைப்* பற்றியும் இன்னும் வேறு பலரைப் பற்றியும் நினைத்தேன். விசேஷமாக உன் தாயையும் உன்னையும் அதிகமாக நினைத்துக்கொண்டிருந்தேன். பிறகு காலையில் உன் தாயைக் கைது செய்து சிறைக்குக் கொண்டுபோய் விட்டார்கள் என்கிற செய்தி கிடைத்தது. எனக்கு இதைவிட இன்பமான புதுவருஷத்துப் பரிசு வேறு என்ன இருக்கமுடியும்? இது நாம் நெடுநாளாக எதிர்பார்த்ததுதான். உன் தாயார் சந்தோஷமாக இருப்பாள் என்றே நம்புகிறேன்.

ஆனால் நீதான் இனித் தனியாக இருக்கவேண்டும். இரண்டு வாரத்துக்கொரு தடவை நீ உன் தாயாரையும் என்னையும் பார்க்கலாம். அவளிடமிருந்து எனக்கும் என்னிடமிருந்து அவளுக்கும் நீ செய்தி கொண்டு போவாய். பேனாவையும் காகிதத்தையும் கையிலெடுத்துக் கொண்டு உன்னைப்பற்றி நினைப்பேன். ஓசை படாமல் நீ என் அருகில் வருவாய். நாம் பல விஷயங்களைப் பற்றிப் பேசுவோம். கடந்த காலத்தைப் பற்றிக் கனவு காண்போம். கடந்த காலத்தைவிட வருங்காலத்தை மேன்மை பெறச்செய்யும் வழிகளை எண்ணிப் பார்ப்போம். புது வருஷப் பிறப்பாகிய இன்று நாம் ஒரு முடிவுக்கு வருவோம். இவ் வருஷம் முடிவதற்குள் நமது கனவையெல்லாம் நனவாக்கி இந்தியாவின் சரித்திரத்தை ஒளிவிடும்படி செய்வோமாக!

---

* பண்டித மோதிலால் நேரு.

# 2

## சரித்திரம் கற்பிக்கும் பாடம்

ஜனவரி 5, 1931.

என் அன்பே, நான் உனக்கு என்ன எழுதுவது? எங்கு ஆரம்பிப்பது? கடந்ததை எண்ணுங்கால் என் மனத்தில் பல காட்சிகள் வந்து குவிகின்றன. சில காட்சிகள் மற்றவைகளைவிட அதிக நேரம் மனக்கண் முன்பு நிற்கின்றன. அவை எனக்கு மிகவும் பிரியமானவைகள். அவைகளை எண்ணிப் பார்க்கும்போது என்னை அறியாமலே முன் நடந்தவற்றை இப்போது நடப்பனவற்றோடு ஒப்பிட்டுப் பார்த்து எனக்கு வழிகாட்ட அதில் ஏதேனும் இருக்கிறதா என்று பார்ப்பேன். படங்களை அதனதன் இடத்தில் ஒழுங்காக எடுத்துவைக்காத ஓவியக்கூடத்தைப் போன்று நமது உள்ளத்தில் பல எண்ணங்களும் காட்சிகளும் ஒன்றுக்கொன்று தொடர்பும் ஒழுங்குமின்றிக் கிடக்கின்றன. நம்மில் பெரும்பாலோர் அவைகளை ஒரு வரிசைப்படுத்தக்கூடும். ஆனால் சில சமயங்களில் விசித்திரமான அந்நிகழ்ச்சிகளே எந்த ஒழுங்குக்கும் கட்டுப்பட்டு வருவனவாக இல்லை.

சரித்திரத்தைக் கூர்ந்து கவனித்தால் இவ்வுலகம் 'புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப், பல்விருக்ஷமாகிப் பறவையாய்ப் பாம்பாகிக், கல்லாய் மனிதராய்' வளர்ந்து மாறிவருகிற பரிணாம முறையை அறியலாம். ஊர்வன, பறப்பன, விலங்கு முதலிய எல்லாவற்றிற்கும் பின்பு தோன்றிய மனிதன் தனது பகுத்தறிவின் வல்லமையினால் அவைகளை வெற்றிகொண்டு விளங்குகிறான். மனிதன்

காட்டுமிராண்டித்தனமான வாழ்க்கையிலிருந்து நாகரிக வாழ்க்கைக்குப் படிப்படியாக உயர்ந்துவந்த கதையே சரித்திரம் என்று கருதப்படுகிறது. நான் இதற்குமுன்பு எழுதிய கடிதங்கள் சிலவற்றுள் மனிதர்களுக்குள் கூடிவாழ வேண்டும் என்னும் எண்ணம் எப்படி வளர்ந்து வந்ததென்றும் பொது நலத்திற்காக உழைப்பதே நமது நோக்கமாக இருக்கவேண்டுமென்றும் உனக்கு எடுத்துக் காட்டியிருக்கிறேன். ஆனால் சரித்திரத்தின் பெரும் பகுதிகளைப் பார்க்கும்போது இந்த லட்சியம் சித்தியடைந்திருப்பதாகத் தோற்றவில்லை; நாம் நாகரிகத்தில் முதிர்ந்து வந்திருப்பதாகவும் தெரியவில்லை. சேர்ந்து வாழவேண்டுமென்ற எண்ணமின்றி ஒரு நாட்டார் இன்னொரு நாட்டாரை எதிர்த்துத் துன்புறுத்துவதையும் மனிதனை மனிதன் சுரண்டிப் பிழைப்பதையுமே இன்று எங்கும் காண்கிறோம். பல பத்து நூறாயிரம் ஆண்டுகளுக்குப் பிறகு இவ்வளவு குற்றம் குறைகளுடன் கூடிய நிலையில் இருப்போமானால் நாம் நல்லறிவுடன் நெறி பிறழாது நடக்க இன்னும் எத்தனை காலம் பிடிக்கும்? சில சமயங்களில், சரித்திரத்தின் சில பகுதிகளைப் படிக்கும்போது கடந்த காலப் பகுதிகளுள் சில நாம் வாழும் இக்காலத்தைவிடக் கலைப்பண்பும் நாகரிக மேம்பாடும் பெற்று விளங்கினமை புலப்படுகிறது. அதைப் பார்க்குமிடத்து இந்த உலகம் முன்னேக்கிச் செல்கிறதா அல்லது பின்னேக்கித்தான் செல்கிறதா என்ற சந்தேகம் உண்டாகிறது. நமது தேசம் இப்போது இருக்கும் நிலையைவிட எவ்வளவோ மேன்மைபெற்று விளங்கிய காலங்கள் பல இருக்கின்றன.

இந்தியா, எகிப்து, சீனு, கிரீஸ் இன்னும் சில தேசங்கள் இக்காலத்தைவிடப் பண்டைநாளில் நனி நாகரிகச் சிறப்பு வாய்ந்து விளங்கின காலங்கள் பல உண்டு. ஆனல்

அவை இப்போது வீழ்ச்சியுற்றிருப்பதும் உண்மையே. இதனால் நாம் மனம் தளரவேண்டியதில்லை. பரந்த இவ்வுலகமானது ஒரு நாட்டின் உயர்வினாலும் தாழ்வினாலும் அதிகமாகப் பாதிக்கப்படுவதில்லை.

தற்கால நாகரிகத்தையும் விஞ்ஞான விநோதங்களையும் புகழ்ந்து கூறுவார் பலர் இருக்கின்றனர். விஞ்ஞானத்தின் உதவியால் இன்று வியக்கத்தக்க காரியங்கள் நிகழ்ந்து வருவது உண்மைதான். இவற்றிற்கெல்லாம் காரணமான உயரிய விஞ்ஞானிகளை நாம் போற்றுகிறோம். ஆனால் வீண் பெருமை பேசுவோரெல்லாம் பெரியவராகமாட்டார். மற்ற விலங்கு சாதிகளைவிட மனிதன் பல வழிகளிலும் அதிக முன்னேற்றம் அடைந்துவிடவில்லை என்பதை மனத்தில் இருத்திக்கொள்வது நலம். சில வழிகளில் சில விலங்குகள் மனிதனைவிட உயர்ந்திருக்கின்றன. இக்கூற்றை அறிவிலிகள் மடமை என்று எண்ணி நகையாடலாம். தேனீ, கறையான், எறும்பு இவற்றின் வாழ்க்கையைப்பற்றி மேட்டர்லிங்க் (Maeterlinck) என்பார் எழுதியுள்ள நூலை நீ இப்போதுதான் படித்திருக்கிறாய். அந்தச் சிறிய ஜந்துக்கள் கூட்டங்கூடி வாழும் முறைமையைக் கண்டு நீ கட்டாயம் வியப்படைந்திருப்பாய். அவைகளை நாம் உயிர்வாழும் ஜந்துக்களுள் மிகக் கேவலமாக மதிக்கிறோம். என்றாலும் இச்சிறிய ஜந்துக்கள் கூட்டுறவு முறையில் வாழவும், பொது நன்மையின் பொருட்டுத் தங்களைத் தாமே தியாகம் செய்யவும் மனிதனைவிட அக்கலையை மிக நன்றாகக் கற்றுக்கொண்டிருக்கின்றன. கறையான் தன் இனத்திற்காகத் தன்னையே இரையாகக் கொடுப்பதைப் படித்தபிறகு அதனிடத்தில் எனக்கு ஒரு தனி அன்பு ஏற்பட்டிருக்கிறது. ஒருவருக்கொருவர் உதவிபுரிந்து கூடி வாழ்வதும், சமூக நன்மையை நாடி ஒருவன் தன்னைத் தியாகம் செய்

வதும் நாகரிகத்தின் அடையாளங்களானுல் கறையானும் எறும்பும் இம்முறையில் மனிதனைவிட எவ்வளவோ மேல் என்று நாம் துணிந்து கூறலாம்.

நமது பழைய சம்ஸ்கிருத நூல் ஒன்றில் ஒரு சுலோகம் காணப்படுகிறது. 'குடும்பத்துக்காகத் தனி மனிதனையும், சமூகத்துக்காகக் குடும்பத்தையும், தேசத்துக்காகச் சமூகத்தையும், ஆத்மலாபத்துக்காக உலகம் முழுமையையும் தியாகம் செய்யவேண்டும்' என்பது அந்தச் சுலோகம். உன் ஆத்மாவை அறிந்தவர்கள் வெகு சிலரே; அதைப் பலர் பலவிதமாகச் சொல்வார்கள். நான் முன்பு சொன்னபடி நாம் சகலரும் ஒன்றுபட்டு வாழவேண்டுமென்பதையும் பிறர் நலத்துக்காக ஒருவன் தன்னைத் தியாகம் செய்யவேண்டுமென்பதையுமே மேற்படி சுலோகம் தெரிவிக்கிறது.

இந்தியாவிலுள்ள நாம் இவ்வுயர் நெறியை நெடுங்காலமாக மறந்துவிட்டோம். அதனுல் வீழ்ச்சியுற்றிருக்கிறோம். ஆனுல் மறுபடியும் நற்காலம் பிறந்திருக்கிறது; தேசத்தின் நரம்புகளில் புதிய உயிர் துடித்துக்கொண்டிருக்கிறது. ஆடவரும் பெண்டிரும் சிறு பையன்களும் சிறுமிகளுங்கூடக் கவலை ஏதுமின்றிக் கஷ்டத்தைக் கண்டு சிரித்துக்கொண்டு நாட்டின் விடுதலையை நாடி நிற்கிருர்கள். அவர்கள் சிரித்துக் களிக்கலாம். ஏனெனில் பெரிய லட்சியத்துக்காகப் பாடுபடுவதும் தியாகம் செய்வதும் பெரிய ஆனந்தமல்லவா? இன்று நாம் இந்தியாவை விடுவிக்க முயன்றுகொண்டிருக்கிறோம். இது ஒரு பெருங் காரியம். இதைவிட மனிதவர்க்கம் முழுமைக்கும் பாடுபடுவது மிக உன்னதமானது. ஆனுல் உலகம் முழுமையிலும் தாழ்ந்த நிலையில் துயருற்றுக் கிடக்கும் ஏழை எளிய மக்களின் விடுதலைக்காகப் பாடுபடுவது இந்தியாவின் விடுதலையைவிடப் பெரியதாகும். நமது சிறிய

போராட்டம் அந்தப் பெரிய போராட்டத்தின் ஒரு பகுதியாகையால் உலக முன்னேற்றத்துக்கு நம்மாலானதைச் செய்கிறோம் என்று நாம் மகிழ்ச்சி கொள்ளலாம். நிற்க.

நீ ஆனந்தபவனத்தில் இருக்கிறாய். (அலகாபாத்திலுள்ள ஜவாஹர்லால் அவர்களின் வீட்டுக்குப் பெயர்.) அம்மா மலாக்கா சிறையில் இருக்கிறாள். நான் நைனி சிறையில் இருக்கிறேன். சில சமயங்களில் இந்தப் பிரிவு துன்பமாக இருக்கிறதல்லவா? ஆனால் நாம் மூவரும் சேரப் போகும் நாளை நினைத்துப் பார்! நான் அந்த நாளை நினைத்துக்கொண்டே கவலையை மறந்து உள்ளத்தில் களி துளும்ப வாழ்கிறேன்.

## 3

# புரட்சி நீடூழி வாழ்க!

ஜனவரி 7, 1931.

**பி**ரியதரிசினி,—பார்வைக்கு இனியவள் நீ; பார்க்க அனுமதிக்கப்படாதபோது இன்னும் அதிக இனிமையான வள்! இன்று உனக்கு எழுத வேண்டுமென்று உட்கார்ந்த பொழுது தூரத்தே வானம் குமுறுவது போன்ற ஓர் இரைச்சல் என் காதில் பட்டது. முதலில் இன்ன சப்தம் என்று தெரிந்துகொள்ள முடியவில்லை. ஆனால் அவ் வொலியை நான் பலமுறை கேட்டுப் பழகியிருப்பதுபோல வும் என்னுள்ளத்திலேயே அதன் எதிரொலி விம்முவது போலவும் தோன்றிற்று. கூச்சல் கிட்ட வரவரப் பெரி தாக ஆயிற்று. இப்போது சந்தேகமே இல்லை. அது நமது போர் முழக்கம் - "புரட்சி நீடூழி வாழ்க!" "புரட்சி நீடூழி வாழ்க!" சிறையெல்லாம் அவ்வீர முழக் கம் ஒலித்தது. அதைக் கேட்டு எங்கள் உள்ளமெல்லாம் குளிர்ந்தது. சிறைக்கு வெளியே இவ்வளவு அருகில் அம் முழக்கத்தைச் செய்தவர்கள் யார்? நகர மாந்தர்களா அல் லது கிராமக் குடியானவர்களா? ஒன்றும் தெரியவில்லை. இன்று அது நிகழ்ந்த காரணமும் தெரியவில்லை. அவர் கள் யாராயிருப்பினும் அதைக் கேட்ட எங்கள் உள்ளம் மலர்ந்தது. மௌனமாக அதற்கு நாங்கள் மறுமொழியும் நல்வாழ்த்தும் அனுப்பிவைத்தோம்.

'புரட்சி நீடூழி வாழ்க' என்று நாம் ஏன் முழங்க வேண்டும்? புரட்சியையும் மாறுதலையும் நாம் ஏன் விரும்ப வேண்டும்? இந்தியா இன்று பெரிய மாறுதலை வேண்டி

நிற்பதென்னவோ உண்மைதான். நாம் விரும்பும் அப் பெரிய மாறுதல் நிகழ்ந்த பின்பும், இந்தியா சுதந்தரம் பெற்ற பின்பும், நாம் சும்மா இருக்க முடியாது. இவ்வுலகில் மாறுதல் அடையாததெல்லாம் நசித்துப்போகும். இயற்கை நாளுக்கு நாள், நொடிக்கு நொடி மாறிக் கொண்டே இருக்கிறது. மாறி மாறி வளராது வாளா இருப்பதெல்லாம் மரணமடைகிறது. ஓடுகிற நீர் தூயதா யிருக்கிறது; அதன் ஓட்டத்தைத் தடுத்தால் நாற்ற மெடுத்துவிடுகிறது. மனிதவாழ்க்கையும் ஒரு தேசத்தின் ஜீவனும் இதைப்போன்றனவே. நாம் விரும்பினாலும் விரும்பாவிட்டாலும் முதுமை நம்மை வந்து அடைகிறது. குழந்தைகள் சிறு பெண்களாகவும் சிறுபெண்கள் பருவ மங்கையராகவும் பருவமங்கையர் பேரிளம் பெண்களாக வும் பேரிளம் பெண்கள் கிழவிகளாகவும் மாறுகிறார்கள். இம்மாறுதல்களுக்கு நாம் உட்பட்டே தீரவேண்டும். ஆனால் உலகம் மாறுகிறதென்பதையே பலர் ஒப்புக் கொள்ள மறுக்கிறார்கள். அவர்கள தங்கள் மனக்கதவு களை அடைத்துத் தாழிட்டுப் புதிய கருத்துக்களை உள்ளே விடமாட்டேனென்கிறார்கள். சிந்தித்துப் பார்ப்பது என்றாலே அவர்கள் பயந்து நடுங்குகிறார்கள். இதன் முடிவு என்ன? உலகம் அவர்களைப்பற்றிக் கவலைகொள்ளாமல் முன்னேறிச் செல்கிறது. உலகம் அவ்வாறு மாறி மாறிச் செல்லும்போது புதிய நிலைமைகளுக்கு ஒத்துப்போக முடியாதவர்கள் சிலர் இருக்கும் காரணத்தால் அவ்வப்போது பெரிய குழப்பமும் கொந்தளிப்பும் நேரிடுகின்றன. நூற்று நாற்பது ஆண்டுகளுக்குமுன் பெரிய பிரெஞ்சுப் புரட்சி ஏற் பட்டது; பதின்மூன்று ஆண்டுகளுக்குமுன் ருஷியப் புரட்சி தோன்றிற்று. இம்மாதிரி பெரிய புரட்சிகள் உண்டா கின்றன. நமது நாட்டிலும் இன்று ஒரு பெரும் புரட்சி நிகழ்ந்துகொண்டிருக்கிறது. நமக்குச் சுதந்தரம் வேண்

டும். ஆனால் சுதந்தரம் மட்டும் போதுமா? அதைவிட இன்னும் அதிகம் வேண்டும். நெடுநாள் பாசி நிறைந்து நீர்தேங்கி நிற்கும் குட்டைகள், அழுகல் நாற்றம் மூக்கைத் துளைக்கிறது. துர்நீரையெல்லாம் இறைத்துப் போக்கிவிட்டு எங்கும் தூய தண்ணீர் கொணர்ந்துவிட வேண்டும். நம் நாட்டின் அழுக்கைக் கழுவி வறுமையைப் போக்கித் துன்பத்தை நீக்கவேண்டும். இப்பெரிய திருப்பணியில் நம்முடன் கைகோத்து உழைக்காது விலகி நிற்போருடைய மனமாசுகளை நம்மால் இயன்றவரையில் அகற்றவேண்டும். இது பெரியதொரு காரியம். இதை நிறைவேற்ற நாள் பல செல்லலாம். ஆனால் இதை நாம் உடனே ஆரம்பித்துவிட வேண்டும். - புரட்சி நீடூழி வாழ்க.

புரட்சியின் வாயிலிலே இன்று நாம் நிற்கிறோம். எதிர்காலத்தில் என்ன நிகழும் என்று சொல்லமுடியாது; ஆனால் நமது உழைப்பு பெரும் பயனை அளித்திருக்கிறதென்பதை இப்போதே காண்கிறோம். நமது நாட்டின் பெண்மணிகளைப் பார்! போரின் முன்னணியிலே அவர்கள் கம்பீரமாக நடந்து செல்கிறார்கள். மென்மையானவர்கள், ஆனால் மனவன்மை படைத்தவர்கள். அவர்களை வெல்ல யாராலும் ஆகாது. அவர்கள் மற்றவர்களுக்கு வழி காட்டுகிறார்கள். 'பர்தா'- நம் வீரமாதர்களின் அழகிய முகமண்டலத்தை மறைத்துவந்த அக்கொடிய கோஷா வழக்கம் எங்கே? அது, மறுபடியும் திரும்பி வராத இடத்துக்குப் போய்விட்டது. பழம்பொருள்களைச் சேமித்துவைக்கும் பொருட் காட்சிச் சாலையில் அது குடிபுகுந்துவிட்டது!

குழந்தைகளைப் பார் - 'வானர சேனை' என்று சொல்லிக்கொண்டு ஊரை அமர்க்களப்படுத்துகிறார்கள். சிறு பிள்ளைகளும் பெண்களும் பால சபைகள், பாலிகா சபை

கள் அமைக்கிறார்கள். இக்குழந்தைகளின் பெற்றோர்கள் கோழைகளாகவும் அடிமைகளாகவும் இருந்திருக்கலாம். ஆனால் இந்தத் தலைமுறையைச் சேர்ந்த இக்குழந்தைகள் அடிமைத்தனத்தையும் கோழைத்தனத்தையும் அகழ்ந் தெறிவார்கள் என்பதில் ஐயமும் உண்டோ?

ஆகவே மாறுதல் சக்கரம் சுழலுகிறது. உயர்நிலையி லிருந்தவர்கள் கீழ் நிலைக்குப் போகிறார்கள். கீழ் நிலையி லுள்ளோர் உயர்நிலையில் ஏறுகிறார்கள். நம் நாட்டிலும் இது நிகழ்வதைப் பார்க்கிறோம். நமது முழு வல்லமையை யும்கொண்டு இம்மாறுதல் சக்கரத்தைச் சுழற்றிவிட்டிருப் பதால் அதை யாரும் தடுத்து நிறுத்த முடியாது. புரட்சி நீடூழி வாழ்க!

# 4

## ஆசியாவும் ஐரோப்பாவும்

ஜனவரி 8, 1931.

**நான்** உனக்குக் கடைசியாக எழுதிய கடிதத்தில் இவ்வுலகில் ஒவ்வொரு பொருளும் மாறி வருகிறது என்று சொன்னேன். இம்மாறுதலைத் தொகுத்துக் கூறுவதையே சரித்திரம் என்கிறோம். கடந்த காலத்தில் மாறுதல்கள் குறைவாக இருப்பின் சரித்திரத்துக்கு விஷயமும் குறைவாகவே இருக்கும்.

சாதாரணமாகப் பள்ளிக்கூடத்திலும் கலாசாலையிலும் நாம் படிக்கும் சரித்திரம் நுனிப்புல் மேய்வது போன்றது. மற்றவர்களைப்பற்றி எனக்குத் தெரியாது. என்னைப் பொறுத்த வரையில் நான் பள்ளிக்கூடத்தில் கற்றது மிகவும் சொற்பம். இந்திய சரித்திரம் படிக்கவே இல்லை என்று சொல்லிவிடலாம். இங்கிலாந்து தேச சரித்திரம் சிறிது வாசித்தேன். நான் வாசித்த இந்திய சரித்திரமும் நம் நாட்டை இகழ்வோரால் பெரும்பாலும் வேணுமென்றே திரித்துப் பொய்யாக எழுதப்பட்டதாகும். மற்ற நாடுகளின் வரலாறுகளைப்பற்றி நான் மிகவும் கொஞ்சமாகவே அறிந்திருந்தேன். கல்லூரியை விட்டு வெளியேறிய பிறகே உண்மையான சரித்திரம் வாசிக்கலானேன். நல்ல காலமாக நான் அடிக்கடி சிறைக்குப் போக நேர்ந்ததால் எனது அறிவை வளர்த்துக்கொள்ள அவகாசம் ஏற்பட்டது.

நான் இதற்கு முன்பு உனக்கு எழுதிய கடிதங்களில் இந்தியாவின் பழம்பெரும் நாகரிகத்தைப்பற்றியும் திரா

விடர்களைப் பற்றியும் ஆரியர்களின் வருகையைப் பற்றியும் எழுதியிருக்கிறேன். ஆரியர்கள் வருவதற்கு முற்பட்ட காலத்தைப்பற்றி நான் அதிகம் எழுதவில்லை. அதற்குக் காரணம் என்னுடைய அறியாமையே ஆகும். ஆனால் கடந்த சில ஆண்டுகளில் மிக மிகப் பழைய ஒரு நாகரிகத்தின் அடையாளங்கள் நம் நாட்டில் கண்டுபிடிக்கப்பட்டிருக்கின்றன. இவைகள் இந்தியாவின் வடமேற்குப் பாகத்தில் மொஹெஞ்ஜோ-தாரோ என்னுமிடத்தில் அகப்பட்டிருக்கின்றன. ஐயாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட இந்நாகரிகத்தின் சின்னங்களைப் பூமியைத் தோண்டிக் கண்டுபிடித்திருக்கிறார்கள். எகிப்தின் பழங்காலத்துச் சமாதிகளில் மனிதர்கள் இறந்த பின்பு அவர்களின் சவங்களைத் தைலத்திலிட்டு அவை மாறாமல் வைத்திருப்பதை இன்றும் காண்கிறோம். அத்தகைய சவங்கள் மொஹெஞ்ஜோ - தாரோவிலும் கண்டுபிடிக்கப்பட்டிருக்கின்றன! இவைகள் பல ஆயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்டவை. ஆரியர்கள் வருவதற்கு நெடுங்காலம் முன்பே இந்நாகரிகம் பரவியிருந்திருக்க வேண்டும்! அந்தக் காலத்தில் ஐரோப்பா ஒரு வனாந்தரமாக இருந்திருக்க வேண்டும்.

இன்று ஐரோப்பா பலமும் சக்தியும் வாய்ந்து இருக்கிறது. அங்கு வாழும் மக்கள் கலை, நாகரிகங்களில் தங்களைவிட மேம்பட்டவர்கள் இல்லை என்று எண்ணிக் கொண்டிருக்கிறார்கள். ஆசியாக் கண்டத்தில் வாழும் மக்கள் என்றால் அவர்களுக்கு அலட்சியம். ஆசியாவிலுள்ள தேசங்கள்மீது பாய்ந்து கிடைத்ததைச் சுருட்டிக் கொண்டு போகிறார்கள். என்னே காலத்தின் மாறுதல்! உலகப் படத்தை எடுத்துக் கவனித்துப் பார்த்தால் பரந்த ஆசியாக் கண்டத்தின் ஒரு மூலையிலே சின்ன ஐரோப்பாவானது ஒட்டிக்கொண்டிருப்பது தெரியவரும். ஆசியா

வையே சிறிது நீட்டிவிட்டது போலிருக்கிறது. ஐரோப்பா சரித்திரத்தை வாசித்தால் மிகவும் நீண்ட காலமாக ஆசியாவின் கை மேலோங்கி இருந்ததை அறியலாம். ஆசியாவிலிருந்தவர்கள் ,அலை அலையாகச் சென்று ஐரோப்பாவை வெற்றி கொண்டார்கள். அவர்கள் ஐரோப்பாவை நாசம் செய்தார்கள். ஆனால் அதற்கு நாகரிகத்தையும் வழங்கினார்கள். ஆரியர், ஸிதியர், ஹூணர், அராபியர், மங்கோலியர், துருக்கியர்-இவர்கள் புற்றிலிருந்து ஈசல் கிளம்புவதுபோல ஆசியாவில் எங்கேயோ ஓரிடத்திலிருந்து புறப்பட்டு ஆசியாவிலும் ஐரோப்பாவிலும் பரவினார்கள். நெடுங் காலமாக ஆசியர்கள் சென்று குடியேறுகிற நாடாகவே ஐரோப்பா இருந்து வந்தது. இப்போது ஐரோப்பாவில் வாழும் மக்களில் பெரும்பாலோர் ஆசியாவிலிருந்து படையெடுத்து வந்தோரின் கால் வழிகளே ஆவர்.

படத்தில் ஆசியா பெரிதாகவும் ஐரோப்பா சிறிதாகவும் இருக்கிறது. இதனால் ஆசியா மேலானதென்றும் ஐரோப்பா அல்பமானதென்றும் கருதக்கூடாது. உருவத்தைக்கொண்டு ஒரு மனிதனின் பெருமையையோ அல்லது ஒரு தேசத்தின் உயர்வையோ மதிப்பிடுவது தவறாகும். கண்டங்கள் எல்லாவற்றுள்ளும் ஐரோப்பா சிறியதாயிருந்தாலும் இன்று அது மற்றெல்லாவற்றையும்விட மேன்மை பெற்று விளங்குவதையும் நாம் அறிவோம். ஐரோப்பிய தேசங்கள் பலவற்றின் கடந்த கால சரித்திரம் சிறப்பு வாய்ந்ததென்பதையும் நாம் அறிந்திருக்கிறோம். பல பெரிய விஞ்ஞானிகளை அவைகள் அளித்திருக்கின்றன. அவர்கள் கண்டுபிடித்த உண்மைகளினால் மனித நாகரிகம் வெகுதூரம் முன்னேறி வந்திருக்கிறது. கோடிக்கணக்கான மக்களின் துன்ப வாழ்க்கை மாறியிருக்கிறது. 'நுண்மாண் நுழை புலம்' படைத்த புலவர்கள்,

ஆராய்ச்சியாளர்களையும், ஓவியம் சிற்ப முதற்கலை ஞானியர், இசை ஞானியர்களையும், செயல் திறமையிலே ஒப்புயர்வற்று விளங்கிய வீர புருஷர்களையும் ஐரோப்பா ஈன்றெடுத்திருக்கிறது. ஐரோப்பாவின் பெருமையை உள்ளபடி உணராவிட்டால் அது மடமையாகும்.

ஆனால் ஆசியாவின் பெருமையை உணராமலிருப்பதும் அறிவுடைமையாகாது. ஐரோப்பா தற்போது மின்னி மினிர்வதைப் பார்த்து நாம் சிறிது ஏமாந்துபோய் முன் காலத்தை மறந்துவிடக் கூடும். இன்று உலகில் விளங்கும் முக்கியமான மதஸ்தாபகர்களை யெல்லாம் பெற்றெடுத்தது ஆசியாதான். இவர்களைப் போல் உலகம் முழுமையிலும் உள்ள மக்களின் உள்ளங்களைக் கவர்ந்து அங்கு அரசு புரிவோர் வேறு யார் உளர்? இப்போது வழங்கும் மதங்களெல்லாவற்றுள்ளும் மிக மிகப் பழையதான ஹிந்து மதம் நமது இந்திய நாட்டிலே பிறந்தது. அதே போல இன்று சீனு, ஜப்பான், பர்மா, திபெத்து, இலங்கை முதலிய நாடுகளில் பரவியிருக்கும், ஹிந்து மதத்தோடு தொடர்புள்ள பௌத்த மதமும் நம் நாட்டிலே பிறந்ததாகும். யூத மதமும், கிறிஸ்தவ மதமுங்கூட மேற்கு ஆசியாவிலுள்ள பாலஸ்தீனத்தில் பிறந்து வளர்ந்தவைகளே. பார்சிகளின் மதமாகிய ஜராதுஷ்டிர மதம் பாரசீக நாட்டில் ஆரம்பமாயிற்று. இஸ்லாம் மதத் தலைவரான முகம்மது நபி அராபியாவிலுள்ள மெக்காவில் பிறந்தவர் என்பது உனக்குத் தெரியும். கண்ணன், புத்தன், ஜராதுஷ்டிரர், கிறிஸ்து, முகம்மது, சீனதத்துவ ஞானிகளான கன்பூஷியஸ், லௌ-ட்சே (Lao-Tse)— இவ்வாறு ஆசியாவில் பிறந்து சிந்தையிலும் சொல்லிலும் செயலிலும் ஒப்புயர்வற்று விளங்கிய மகா புருஷர்களின் பெயர்களை முடிவில்லாமல் எழுதிக் கொண்டே போகலாம். கடந்த நாட்களில் நாம் வாழும்

இப்பழைய கண்டமானது எப்படிப் பல வழிகளிலும் சிறப்புற்று விளங்கியதென்று இன்றும் எடுத்துக்காட்டக் கூடும்.

ஆனால் காலத்தின் அதிசய மாறுதலை என்னென்பது? நமது கண் முன்பும் அது மாறிக்கொண்டே இருக்கிறது. சரித்திரத்தில் சில சமயங்களில் குழப்பமும் கொந்தளிப்பும் ஏற்பட்டாலும் பெரும்பாலும் அது பல நூற்றாண்டுகளில் சிறிது சிறிதாகவே உருப்பெறுகிறது. ஆனால் இன்று ஆசியாவின் சரித்திர நிகழ்ச்சிகள் வெகு வேகமாக நிகழ்ந்து செல்கின்றன. இந்தப் பெரிய பூமிப் பரப்பானது தனது நீண்ட தூக்கத்தினின்றும் விழித்தெழுந்துகொண்டிருக்கிறது. உலகம் பூராவும் ஆசியாவை நோக்கி நிற்கிறது. ஏனெனில் வருங்காலத்தை அமைப்பதில் ஆசியா எடுத்துக்கொள்ளப் போகும் பங்கை அறியாதார் யார்?

# 5

## பழைய நாகரிகங்களும் அவைகளால் நாம் அடைந்த பலனும்

ஜனவரி 9, 1931.

நேற்று, 'பாரத்' என்னும் ஹிந்தி வாரமிரு முறைப் பத்திரிகையை வாசித்துக்கொண் டிருந்தேன். அதில் மலாக்கா சிறையில் உன் தாயாரைச் சரிவர நடத்தவில்லை என்று போட்டிருந்தது. லக்ஷ்மணபுரி சிறைக்கு அவளை மாற்றப் போவதாகவும் கண்டிருந்தது. அதைப் பார்த்ததும் எனக்குச் சிறிது ஆத்திரமும் கவலையும் உண்டாயின. ஒருவேளை 'பாரத்' பத்திரிகையில் வந்த செய்தி பொய்யாகவும் இருக்கலாம். ஆனால் அதைப்பற்றிச் சந்தேகம் ஏற்படுவதுகூட நல்லதல்ல. நமக்கு அசௌகரியமும் துன்பமும் ஏற்பட்டால் அதைப் பொறுத்துக் கொள்ளலாம். அதனால் நமக்கு நன்மை உண்டாகிறது. எப்படியென்றால் நமது மென்மைக் குணம் போய் வன்மைக் குணம் பிறக்கிறது. ஆனால் நமக்கு வேண்டியவர்களுக்குத் துன்பம் நேரிடுகிறதென்றால் அதைப் பொறுத்துக்கொள்வது எளிதல்ல. அவர்கள் துன்பத்தைத் துடைக்க நாம் ஒன்றும் செய்ய முடியாத நிலையிலிருப்பது இன்னும் நமது துயரத்தை அதிகமாக்குகிறது. ஆகவே 'பாரத்' பத்திரிகையைப் பார்த்ததும் உன் தாயாரைப்பற்றிய கவலை அதிகமாய்விட்டது. அவள் பெண் சிங்கம் போன்று அஞ்சாநெஞ்சம் படைத்தவள்தான். எனினும் அவள் பலவீனமாயிருக்கிறாள். அவள் மேலும் பலஹீனமடைவதை நான் விரும்பமாட்டேன். நாம்

மன வலிமை எவ்வளவு பெற்றிருந்தாலும், நமது உடல் நிலை கெட்டால் என்ன செய்ய முடியும்! நாம் ஏதாவது ஒரு காரியத்தைத் திறம்படச் செய்ய வேண்டுமானால் நமது உடல்நிலை சரியாகவும் உரம் பெற்றதாகவும் இருக்க வேண்டும்.

உன் தாயார் லக்ஷ்மணபுரிக்கு அனுப்பப்படுவதும் ஒரு விதத்தில் நன்மையாக முடியலாம். அவள் அங்கு அதிகச் சௌகரியமாகவும் சந்தோஷமாகவும் நண்பர்களோடு இருக்கலாம். மலாக்கா சிறையில் அவள் தனியாகவே இருக்கிறாள் என்று எண்ணுகிறேன். இவ்வளவெல்லா மிருந்தும், அவள் இந்தச் சிறையிலிருந்து அதிக தூரத்தி லில்லாமல் நாலைந்து மைல் தூரத்திற்குள் இருக்கிறாள் என்று எண்ணி இதுவரை சந்தோஷப்பட்டுக்கொண் டிருந்தேன். ஆனால் இதெல்லாம் மூடமனம் செய்கிற வேலை. இரண்டு சிறைகளின் உயர்ந்த சுவர்கள் இடை யில் நின்று தடுக்கும்போது ஐந்து மைல் என்றால் என்ன, நூற்றைம்பது மைல் என்றால் என்ன? எல்லாம் ஒன்று தான்.

உன் தாத்தா அலகாபாத்துக்குத் திரும்பி வந்து விட்டாரென்றும் அவருடைய உடல்நிலை முன்னைவிட நன்றாயிருக்கிறதென்றும் இன்று அறிந்து சந்தோஷப் பட்டோம். அவர் மலாக்கா சிறைக்கு உன் தாயாரைப் பார்க்கப் போயிருக்கிறார் என்று கேள்விப்பட்டு மகிழ்ந் தேன். ஒருவேளை நாளைத்தினம் நான் உங்களெல்லாரை யும் பார்த்தாலும் பார்க்கலாம். ஏனெனில் எனக்கு நாளைத் தினம் சந்திப்புநாள். சிறையில் இந்த நாள் மிகவும் விசேஷம் வாய்ந்ததாகும். நான் உன் தாத்தாவைப் பார்த்து இரண்டு மாதங்கள் ஆயின. அவர் முன்னைவிடக் குணம் அடைந்திருக்கிறாரா என்பதை நான் நேரில் பார்த்து

ஆறுதல் அடையக்கூடும். உன்னையும் பதினைந்து நாளைக்குப் பிறகு, மிகமிக நீண்ட பதினைந்து நாளைக்குப் பிறகு பார்ப்பேன். நீ. உன்னைப்பற்றியும் உன் தாயாரைப் பற்றியும் செய்தி கொண்டுவருவாய்.

அடடா! என்ன முட்டாள்தனம் செய்துவிட்டேன்! கடந்த கால சரித்திரத்தை எழுத ஆரம்பித்து ஏதேதோ பிதற்றிவிட்டேனே! கொஞ்ச நேரம் நிகழ்காலத்தை மறந்து இரண்டாயிரம் மூவாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட காலத்துக்குப் போவோமாக.

நான் உனக்கு முன்பு எழுதிய கடிதங்களில் எகிப்தைப்பற்றியும் கிரீட் தீவிலுள்ள நாசாசு (Knossos) என்னும் தொன்மை வாய்ந்த பட்டணத்தைப் பற்றியும் சிறிது கூறியிருக்கிறேன். பழைய நாகரிகங்கள், இந்த இரண்டு தேசங்களிலும், இப்போது இராக்கு அல்லது மெசபொடேமியா என்று வழங்கும் இடத்திலும், சீனு, இந்தியா, கிரீஸ் ஆகிய தேசங்களிலும் வேரோடிக் கிளைக்க ஆரம்பித்தன. கிரீஸ் நாகரிகம் மற்றவைகளுக்குச் சிறிது பிற்பட்டதென்று சொல்லலாம். இந்திய நாகரிகம் எகிப்து, சீனு, இராக்கு ஆகிய இடங்களில் முளைத்தெழுந்த தன் உடன்பிறந்த நாகரிகங்களோடு ஒத்த வயதுடையதாக இருக்கிறது. கிரீஸ் நாகரிகத்தை இவைகளுக்குத் தம்பி என்று கூறலாம். இந்தப் பழம் பெரு நாகரிகங்களின் கதி என்னவாயிற்று? நாசாசு இருக்கிற இடம் தெரியவில்லை. மூவாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே அது இல்லாது போயிற்று. அதற்கு வயதில் சிறிய கிரீஸ் நாகரிகம் தோன்றி அதை அழித்துவிட்டது. எகிப்து நாகரிகம் பல்லாயிர வருஷம் சிறப்புற்றோங்கி நின்றபின் எவ்வித அடையாளமும் காணப்படாமல் மறைந்துபோய் விட்டது. 'பிரமிட்' என்னும் சமாதிக் கோபுரங்களும்

(Pyramids) ஸ்பிங்சும்* (Sphinx) அழிந்துபோன கோயில்களும், தைலப்பதமிட்ட சவங்களுமே எகிப்து நாகரிகத்துக்கு இன்று சான்று பகர்கின்றன. எகிப்து என்னும் பெயருடைய தேசம் இன்றும் இருப்பது உண்மையே. முன்போலவே நைல் நதி பாய்ந்து அதை வளப்படுத்துவதும் மற்றத் தேசங்களைப்போல அங்கும் மனிதர்கள் வாழ்ந்துவருவதும் உண்மையே. ஆனால் தற்காலம் அங்கு வாழும் மக்களுக்கும் அந்நாட்டில் தளிர்ந்த அப் பழைய நாகரிகத்துக்கும் யாதொரு தொடர்பும் கிடையாது.

இராக்கு, பாரசீகம் என்ற இரு நாடுகளை எடுத்துக் கொள்வோம். ஒன்றன்பின் ஒன்ருக எத்தனை சாம்ராஜ்யங்கள் அங்கே தழைத்தோங்கி மறைந்துபோயின! பாபிலோன், அசீரியா, சால்டியா (Chaldea) இவைகள் மேற்கூறியவைகளில் மிகவும் பழைமையானவை பாபிலோன், நினேவே என்பவைகள் பெரிய நகரங்களாக ஒரு காலத்தில் விளங்கின. †பைபிளில் பழைய ஏற்பாடு என்னும் பகுதியில் இவைகளைப்பற்றிய விவரங்கள் காணப்படுகின்றன. இதற்குப் பிறகும் இவ்விடத்தில் வேறு சாம்ராஜ்யங்கள் தோன்றி மறைந்தன. 'அராபிய இரவுகள்' என்னும் நூலில் கூறப்படும் பாக்தாது என்னும் அற்புத நகரம் இங்கேதான் இருந்தது. சாம்ராஜ்யங்கள் தோன்றுகின்றன, அழிகின்றன. மன்னரும், மன்னர் மன்னரும் இவ்வுலகமேடையில் சிறிதுகாலம் நடித்துப் பின் மறைகிருர்கள். ஆனால் நாகரிகங்கள் நிலைபெற்று நிற்கும் தன்மையன. அப்படியிருந்தும் எகிப்து நாகரிகத்தைப்

---

*ஸ்பிங்சு - பெண்ணின் தலையும் சிங்கத்தின் உடலும் கொண்ட ஓர் எகிப்தியக் கற்சிலை. இது ஒரு காலத்தில் உயிரோடிருந்து பிறகு கற்சிலையாக மாறியது என்று எகிப்தியர் கூறுகிருர்கள்.

†கிறிஸ்தவ வேதப் புத்தகம்.

போலவே இராக்கு, பாரசீக நாகரிகங்களும் அடியோடு அழிந்துபோயின.

கிரீஸ் பழைய காலத்தில் மிகவும் பெருமை பெற்றிருந்தது. இன்றுகூட அதன் பெருமையைப்பற்றிப் படிக்கும்போது நாம் ஆச்சரியப்படுகிறோம். அந்நாட்டில் சலவைக் கல்லால் செய்யப்பட்டுள்ள சிற்பங்களைக் கண்டு இன்றும் நாம் பிரமிக்கிறோம். நமக்குக் கிடைத்துள்ள அந்நாட்டு இலக்கியத்தைக் கண்டு வியப்படைகிறோம். தற்கால ஐரோப்பாவுக்குக் கிரீஸைத் தாயகம் என்று சொல்லலாம். கிரேக்கர்களின் சிந்தனைகளும் பழக்க வழக்கங்களும் ஐரோப்பாவை வெகுதூரம் ஆட்கொண்டிருக்கின்றன. ஆனால் கிரீஸின் பழம் பெருமாட்சி இப்போது எங்கே? அதன் பழைய நாகரிகம் இறந்து நெடுங்காலமாயிற்று. வேறு வாழ்க்கை முறைகள் அதன் இடத்தில் தோன்றியிருக்கின்றன. இன்று ஐரோப்பாவின் தென் கிழக்கு முனையில் கிரீஸ் ஒரு சிறிய தேசமாக இருக்கிறது.

எகிப்து, நாசாசு, இராக்கு, கிரீஸ் - எல்லாம் போய் விட்டன. பாபிலோனியா, நினேவே நாகரிகங்களைப் போன்று இவைகளின் நாகரிகங்களும் இறந்துபட்டன. சீனா, இந்தியா - இவைகள் என்னவாயின? இவைகளும் பழைய நாகரிகங்களின் வரிசையைச் சேர்ந்தவைதாமே! மற்றத் தேசங்களைப்போலவே இந்த இரண்டு தேசங்களிலும் பல சாம்ராஜ்யங்கள் தோன்றி மறைந்தன. பலர் பல தடவை இந்த நாடுகளின்மீது படையெடுத்து வந்து கொள்ளையடித்து நாசம் செய்திருக்கிறார்கள். அரச பரம்பரைகள் பல நூறு வருஷங்கள் ஆண்டபிறகு மறைந்து அவைகளின் இடத்தில் வேறு பல அரச பரம்பரைகள் தோன்றி ஆண்டுவந்து அவைகளும் மறைந்து, மாறிமாறி வந்திருக்கின்றன. மற்ற நாடுகளிலும் இவைகள் நிகழ்ந்தன. ஆனால் இந்தியாவிலும் சீனாவிலும் மட்டுமே பழைய

நாகரிகம் அறுபடாமல் தொடர்ச்சியாக வந்திருக்கிறது. மாறுதல்கள், சண்டைகள், படையெடுப்புகள் எல்லா வற்றையும் மீறி அந்தப் பழைய நாகரிகம் வற்றாத ஜீவ நதிபோல் ஓடிக்கொண்டிருக்கிறது. இந்நாடுகள் தங்க ளுடைய பழைய உயர் நிலையிலிருந்து வீழ்ந்துவிட்டதும் இவைகளுடைய பழைய அரும்பெறல் கலைப்பண்பு காலத் தின் கொடுமையால் மங்கி மாசடைந்திருப்பதும் உண் மையே. ஆயினும் அவை இறந்துபடாது உயிருடன் இருக் கின்றன. இன்னும் இந்திய வாழ்க்கையின் அடிப்படை இந்தியாவின் பழைய நாகரிகமேயாகும். இப்போது உலகில் பல புதிய மாறுதல்கள் ஏற்பட்டிருக்கின்றன. ரெயில்வண்டி, நீராவிக்கப்பல், பெரிய தொழிற்சாலை இவைகள் ஏற்பட்ட பிறகு உலகமே மாறிவிட்டது. இந்தியாவிலும் இம் மாறுதல் நிகழலாம், நிகழ்ந்தும் வருகிறது. ஆனால் சரித்திரம் பிறந்த நாளிலிருந்து பல்லா யிரம் ஆண்டுகளாக வாழையடி வாழையாக வந்துகொண் டிருக்கும் இந்தியாவின் கலை நாகரிகங்களை உன்னிப் பார்க்கும்போது யார்தாம் உவகையும் வியப்பும் அடையாம லிருக்க முடியும்? ஒருவகையில் இன்று இந்தியாவில் வாழும் நாம் அப் பண்டைக் காலத்தின் நேர் பரம்பரைகள். பிரம்மாவர்த்தம், ஆரியாவர்த்தம், பாரதவர்ஷம், ஹிந்து ஸ்தானம் என்று பிறகு அழைக்கப்பட்ட, வளப்பம் மிகுந்த இத் தேசத்துக்கு வடமேற்கு மலைக் கணவாய்களின் வழியாக வந்த அப்பழம் பெருமக்களின் நேர் கால்வழியில் வந்திருப்பவர்களே நாம். தாங்கள் கண்டும் கேட்டுமிராத நிலத்தை நாடி அம் மலைக் கணவாய்களின் வழியாகக் கூட்டங் கூட்டமாகவும், வரிசை வரிசையாகவும் வருவதை இன்றும் நமது மனக் கண்ணால் பார்க்க முடிகிறதல்லவா? விளைவது கருதாமல், யாது நேரினும் நேரட்டுமென்று எதற்குமஞ்சாமல் அவர்கள் முன்னேறிச் சென்றார்கள்.

மரணம் வரினும் அவர்கள் கலங்கவில்லை. அதைப் புன்முறுவலுடன் வரவேற்றார்கள். இடுக்கண்களைப் பொருட்படுத்தாமல், தோல்வி வீழ்ச்சிகளுக்கு அஞ்சாமல் செல்வதே வாழ்க்கையில் இன்பம் நுகரும் வழி என்று அவர்கள் அறிந்திருந்தார்கள். ஏனெனில் அச்சமிலாதான் ஒருவனைக் கண்டு தோல்வியும் துன்பமுங்கூட வழிவிலகிப் போகும். இவ்வாறு வழி நடந்து வந்த நம் மூதாதையர்கள் திடீரென்று கம்பீரமாகச் செல்லும் கங்கை நதியின் கரையை அடைந்தவுடன் எவ்வளவு ஆனந்தம் அடைந்திருப்பார்கள்! கங்காதேவிக்கு அவர்கள் தலை வணங்கி அவளுடைய புகழ்களைத் தங்களுடைய மதுர மொழியில் பாடியதில் ஏதேனும் ஆச்சரியமுண்டா?

இவ்வளவு பழமைபெற்ற காலத்தின் வாரிசுகள் நாம் என்று நினைக்க ஆச்சரியத்தால் மெய்ம்மறந்து போகிறோம். ஆனால் நாம் கர்வம் படைக்கக் கூடாது. ஏனெனில் பழமையிலுள்ள நல்லது தீயது இரண்டுக்கும் நாம் வாரிசுகள். நமக்குக் கிடைத்துள்ள இப் பூர்விகச் சொத்தில் தீமை நிறைய இருக்கிறது. உலகிலேயே இன்று நாம் இழிந்த நிலையில் வறுமை வாய்ப்பட்டு உழலுவதற்கும் எடுப்பார் கைப்பிள்ளையாக ஏமாந்து விழிப்பதற்கும் நமது பழைய நாகரிகத்திலுள்ள தீய அம்சமே காரணமாகும். ஆனால் இந்நிலை இனி ஒழிய வேண்டுமென்று நாம் திட சங்கல்பம் செய்துகொண்டிருக்கிறோம் அல்லவா?

# 6

## கிரேக்கர்கள்

ஜனவரி 10, 1931.

நீங்கள் யாரும் இன்று என்னைப் பார்க்க வரவில்லை. சந்திப்புநாள் வெற்றுநாளாய் முடிந்தது. நான் பெரிய ஏமாற்றம் அடைந்தேன். உன் தாத்தாவுக்கு உடம்பு சரியாயில்லாததால்தான் பார்க்க வரவில்லை என்று கேட்டு இன்னும் கவலை அடைந்தேன். அதற்குமேல் ஒன்றும் தெரியவில்லை. சந்திப்பு இல்லாமற் போகவே என்னுடைய இராட்டையை எடுத்து வைத்துக்கொண்டு கொஞ்சம் நூல் நூற்றேன். இராட்டையில் நூல் நூற்பதும் நாடா (Niwar) செய்வதும் இனிமையாகவும் ஆறுதலாகவும் இருக்கின்றன. ஆகவே, உனக்கும் மனத்தில் கவலை உண்டானால் நூற்க ஆரம்பித்துவிடு!

சென்ற கடிதத்தில் நாம் ஆசியாவுக்கும் ஐரோப்பாவுக்குமுள்ள ஒற்றுமை வேற்றுமைகளைக் கவனித்தோம். பழைய காலத்தில் ஐரோப்பா எப்படி இருந்தது என்று சிறிது பார்ப்போம். நீண்டநாளாக ஐரோப்பா என்றாலே மத்தியதரைக் கடலைச் சுற்றியுள்ள நாடுகளையே அது குறித்துவந்தது. அக்காலத்தில் ஐரோப்பிய வடநாடுகளைப்பற்றிய சரித்திர ஆதாரம் ஒன்றும் தெரியவில்லை. அப்போது ஜெர்மனி, இங்கிலாந்து, பிரான்ஸ் முதலிய நாடுகளில் நாகரிகமற்ற காட்டுமிராண்டிகள் வசித்து வருவதாக மத்தியதரைக்கடல் பிரதேச மக்கள் எண்ணி வந்தார்கள். ஆரம்பத்தில், உண்மையிலேயே, கிழக்கு மத்தியதரைக்கடல் நாடுகளைத் தாண்டி நாகரிகம் பரவ

வில்லை. எகிப்து (இது ஆப்பிரிக்காவில் இருக்கிறது. ஐரோப்பாவில் இல்லை), நாசாசு இவ்விரண்டு நாடுகளே முதன்மையானவை என்பதை நீ அறிவாய். சிறிது சிறிதாக ஆரியர்கள் ஆசியாவிலிருந்து மேற்கே கிளம்பி, கிரீஸையும் அதைச் சுற்றிலுமுள்ள நாடுகளையும் கைப்பற்றிக்கொண்டார்கள். இந்த ஆரிய கிரேக்கர்களையே பண்டைய கிரேக்கர்கள் என்று நாம் போற்றுகிறோம். இதற்குமுன்பே இந்தியாவுக்குள் வந்த ஆரியர்களுக்கும் இவர்களுக்கும் ஆரம்பத்தில் அதிக வேற்றுமை இல்லை என்று எண்ணுகிறேன். ஆனால் பல மாறுதல்கள் காரணமாக ஆரிய ஜாதியின் இவ்விரு பிரிவினருக்குள்ளும் சிறிது சிறிதாக வேற்றுமைகள் அதிகரித்துக் காணப்படலாயின. ஆரியர்கள் இந்தியாவுக்கு வருமுன்பே இங்கே பரவியிருந்த மிகப் பழைய நாகரிகமான திராவிட நாகரிகம் இந்திய ஆரியர்களை வெகுவாக ஆட்கொண்டது. ஒரு வேளை இன்று மொஹெஞ்ஜோ - தாரோவில் அழிவுற்றுக் காணப்படும் நாகரிகமும் அவர்களைப் பாதித்திருக்கலாம். ஆரியர்களும் திராவிடர்களும் ஒருவருக்கொருவர் உள்ளதைக் கொடுத்து இல்லாததை வாங்கிக்கொண்டார்கள். இருவரும் சேர்ந்து இந்தியாவில் பொதுவான ஒரு நாகரிகத்தை வளர்த்தார்கள்.

அதேபோல ஆரிய கிரேக்கர்களும் கிரேக்க நாட்டில் சிறப்புற்று விளங்கிய நாசாசு நாகரிகத்தால் பெரிதும் பாதிக்கப்பட்டிருக்கவேண்டும். ஆனால் அவர்கள் அந்த நாகரிகத்தை அழித்து அதன்மீது தங்கள் சொந்த நாகரிகத்தை எழுப்பினார்கள். அந்நாளில் ஆரிய கிரேக்கர்களும் ஆரிய இந்தியர்களும் முரடர்களாகவும், சண்டையில் சளைக்காதவர்களாகவும் இருந்தார்களென்பதை நாம் ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டும். மிகச் சுறுசுறுப்பாகவும் இருந்தார்கள். அவர்கள் வரும் வழியில்

இருந்த நாகரிகத்திற் சிறந்து சுகவாழ்வு நடத்திய மக்களை அழித்துவிடுவார்கள். இல்லையேல் அவர்களோடு கலந்து விடுவார்கள்.

ஆகவே கிறிஸ்து பிறப்பதற்கு ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பே நாசாசு அழிக்கப்பட்டுவிட்டது. புதிய கிரேக்கர்கள் கிரீஸிலும் அதைச் சுற்றியுள்ள தீவுகளிலும் நிலைபெற்றுக் குடியேறினார்கள். அவர்கள் கடல் வழியாகச் சின்ன ஆசியாவின் மேற்குக்கரைக்கும், இதாலியின் தென்பாகம், சிசிலி, பிரான்சின் தென்பாகம் முதலிய இடங்களுக்கும் போனார்கள். பிரான்சிலுள்ள மார்சேல்ஸ் என்னும் பட்டணம் இவர்களால் தோற்றுவிக்கப்பட்டது. ஆனால் இவர்கள் போவதற்குமுன்பே பினிஷியர்கள் அங்குக் குடியேறியிருந்தார்கள். சின்ன ஆசியாவைச் சேர்ந்த பினிஷியர்கள் வியாபாரத்தை நாடிக் கடல்கடந்து பல தூரதேசங்களுக்குப் போனார்கள் என்பது உனக்கு நினைவிருக்கலாம். அந்த நாட்களிலேயே அவர்கள் இங்கிலாந்துக்கும் சென்றார்கள். ஜிப்ரால்டருக்கு அருகிலுள்ள குறுகிய கடல் வழியாக அவர்கள் செய்த பிரயாணம் மிகவும் அபாயம் நிறைந்ததாக இருந்திருக்கவேண்டும். இங்கிலாந்து அப்போது காட்டுமிராண்டி நாடாக இருந்தது. கிரீஸில் ஏதென்ஸ், ஸ்பார்ட்டா, தீப்ஸ், கொரிந்து முதலிய நகரங்கள் தோன்றிப் பேரும் புகழும் பெற்று விளங்கின. கிரேக்கர்களின் - அவர்களுக்கு ஹெலனியர் என்னும் ஒரு பெயர் உண்டு-பழைய வரலாறுகளைக் கூறும் மகாகாவியங்கள் இலியாது, ஒதீசியம் என்பன ஆகும். இவைகளைப்பற்றி உனக்குக் கொஞ்சம் தெரியும். இவைகள் ஒருவகையில் நமது இதிகாசங்களான ராமாயணத்தையும் மகாபாரதத்தையும் ஒத்திருக்கின்றன. இவைகளை இயற்றியவர் ஹோமர் என்னும் அந்தகக் கவி. கிரீஸிலிருந்த ஹெலன் என்னும் அழகிய மாதைப் பாரிஸ் என்பவன் திராய்

என்னும் தன்னுடைய பட்டணத்திற்குக் கவர்ந்துகொண்டு போனதையும், கிரீஸிலிருந்த அரசர்களும் சிற்றரசர்களும் சேர்ந்து ஹெலனை மீட்கத் திராய் நகரை முற்றுகையிட்டதையும் கூறுவதே இலியாது என்னும் காவியம். திராய் நகரை முற்றுகையிட்டுத் திரும்பும்போது ஓதீசியஸ் அல்லது உலீஸஸ் என்பவன் வழியில் அடைந்த அநுபவங்களைக் கூறும் கதையே ஓதீசியம் என்னும் காவியம். சின்ன ஆசியாவில் கடற்கரைக்கருகில் இந்தத் திராய் நகரம் இருந்தது. அந்நகரம் மறைந்து நெடுங்காலமாயிற்று. ஆனால் ஒரு மகாகவியின் கற்பனை சக்தியினால் அது இன்னும் இறவாது விளங்கிக்கொண்டிருக்கிறது.

இவ்வாறு கிரீஸ் சிறப்புற்று உச்சநிலைக்கு வரும் நாளிலே பிற்காலத்தில் கிரீஸை வென்று அதன் ஸ்தானத்தை வகிக்க இருக்கும் ரோமாபுரி பிறந்தது. ஏறக்குறைய இக்காலத்தில்தான் ரோம் நகரம் தோற்றுவிக்கப்பட்டது. ஆனால் சில நூற்றாண்டுகள்வரையில் உலகத்தில் அது முக்கியம் வாய்ந்ததாக இல்லை. அப்படியாயின் இப்போது ஏன் அதைக் கூறினேன் என்றால் பிற்காலத்தில் ரோமாபுரி பல நூற்றாண்டுகளுக்கு ஐரோப்பாவின் தலைநகரமாக விளங்கியது. 'புவியரசி' என்றும், 'என்றுமுள நகரம்' என்றும் அது பெருமையாக அழைக்கப்பட்டது. அத்தகைய நகரம் பிறந்ததைச் சொல்லவேண்டுமல்லவா? ரோமாபுரி நகர் தோன்றியதைப்பற்றிப் பல வேடிக்கைக் கதைகள் சொல்லப்படுகின்றன. அதைத் தோற்றுவித்த ரீமஸ், ரோமல்ஸ் என்பவர்களை ஒரு பெண் ஓநாய் எடுத்துக்கொண்டுபோய் வைத்திருந்ததாம். ஒருவேளை உனக்கு அந்தக் கதை தெரிந்திருக்கலாம்.

ரோமாபுரி தோற்றுவிக்கப்பட்ட காலத்திலேயே - அல்லது அதற்குச் சற்று முன்பு இருக்கலாம் - இன்னொரு பழம் பெரும் பட்டணம் தோற்றுவிக்கப்பட்டது. ஆப்

பிரிக்காவின் வடகரையில் பினிஷியர்கள் கார்தேஜ் என்னும் இப்பட்டணத்தை நிர்மாணித்தார்கள். அது கடலாதிக்கம் பெற்றுத் திகழ்ந்தது. ரோமாபுரிக்கும் கார்தேஜுக்கும் இடையே தீராப் பகை ஏற்பட்டுப் பல போர்களும் நிகழ்ந்தன. முடிவில் ரோமாபுரி வெற்றிபெற்றது. கார்தேஜ் அழிந்துபோயிற்று.

இக்கடிதத்தை முடிக்குமுன்பு பாலஸ்தீனத்தைச் சிறிது கவனிப்போம். பாலஸ்தீனம் ஐரோப்பாவில் இல்லை. அது சரித்திர முக்கியத்துவம் வாய்ந்ததல்ல. பழைய ஏற்பாட்டில் அதன் சரித்திரம் கூறப்பட்டிருப்பதால் அதை அறியப் பலரும் ஆவல்கொள்ளுகிறார்கள். அந்நாட்டில் வாழ்ந்த யூத ஜாதியாரைப் பற்றியும் அவர்களுக்குப் பக்கத்தில் வாழ்ந்த பாபிலோனியர், அசீரியர், எகிப்தியர் ஆகியோரால் அவர்கள் அடைந்த துன்பங்களைப் பற்றியும் பழைய ஏற்பாடு கூறுகிறது. யூத, கிறிஸ்தவ மதங்களின் ஒரு பாகமாக இக்கதை அமைந்திராவிட்டால் இதை அறிந்தவர் மிகவும் குறைவாகவே இருப்பர்.

நாசாசு அழிவுற்ற காலத்தில் பாலஸ்தீனத்தின் ஒரு பாகமாகிய இஸ்ரவேலுக்கு, ஸவுல் அரசனாக இருந்தான். அவனுக்குப் பிறகு தாவீது அரசாண்டான். அவனுக்குப் பின்பு சிம்மாசனம் ஏறிய ஸாலமோன் மகா மேதாவியாக விளங்கினான். இம்மூவரைப்பற்றியும் நீ அறிந்திருக்க வேண்டும். அதனால் அவர்களைப்பற்றிச் சொன்னேன்.

# 7

## கிரேக்க நகர - ராஜ்யங்கள்

ஜனவரி 11, 1931.

நான் கடைசியாக எழுதிய கடிதத்தில் கிரேக்கர்களைப் பற்றிச் சிறிது கூறியிருந்தேன். அவர்கள் எப்படி இருந்தார்கள் என்று தெரிந்துகொள்ள முயல்வோம். நாம் பாராத மக்களைப்பற்றி உண்மையைத் தெரிந்து கொள்வது கடினந்தான். தற்காலத்திய நிலைமைகளிலும் வாழ்க்கை முறைகளிலும் நாம் பழகி ஊறிப்போயிருப்பதால் இதற்கு மாறுபட்ட ஓர் உலகத்தை நம்மால் நினைத்துப் பார்ப்பதே கஷ்டமாக இருக்கிறது. ஆயினும் இந்தியாவிலும் சரி, சீனாவிலும் சரி, கிரீஸிலும் சரி, பழங் காலத்து நிலை தற்காலத்து நிலையினின்றும் முற்றும் மாறுபட்டிருந்தது. புஸ்தகங்களின் துணைகொண்டும் இன்னும் பழைய கட்டிடங்கள், கல்வெட்டுக்கள், தோண்டி யெடுக்கப்பட்டவைகள் இவற்றின் துணை கொண்டும் பழங்கால மக்கள் எப்படி இருந்தார்கள் என்று ஒருவாறு ஊகிக்கலாம். இதுதான் நாம் செய்யக்கூடியது.

கிரேக்கர்களைப் பற்றி ஒரு ரசமான விஷயம் தெரிய வருகிறது. அவர்கள் பெரிய ராஜ்யங்களையும் சாம்ராஜ்யங்களையும் விரும்பவில்லை. சிறிய நகர ராஜ்யங்களையே அவர்கள் விரும்பி ஏற்படுத்தினார்கள். அதாவது ஒவ்வொரு நகரமும் ஒரு தனிப்பட்ட ராஜ்யம். நடுவில் ஒரு நகரம். அதைச் சுற்றிலும் விளைநிலங்கள். அவற்றில் விளைந்த பொருள்கள் நகரத்துக்கு உணவாயின. இது ஒரு

குடியரசு. இம்மாதிரி பல குடியரசுகள். குடியரசு என்றால் அரசன் கிடையாது. கிரேக்க நகர-ராஜ்யங்களுக்கும் அரசர்கள் இல்லை; நகரத்தில் உள்ள செல்வர்கள் அவற்றை ஆண்டு வந்தார்கள். சாதாரண ஜனங்களுக்கு அரசாங்கத்தில் உள்ள செல்வாக்கு மிகவும் கொஞ்சம். அங்குப் பல அடிமைகள் இருந்தார்கள். அவர்களுக்கு அரசாங்கத்தில் யாதோர் உரிமையும் கிடையாது. பெண்களுக்கும் உரிமை கிடையாது. அந்நகர - ராஜ்யங்களில் வாழ்ந்த ஜனத்தொகையில் ஒரு பகுதியினரே நகர மாந்தர்களாகக் கருதப்பட்டனர்; அவர்களுக்குத்தான் பொது விஷயங்களை வாக்கு அளித்துத் தீர்மானிக்க உரிமை உண்டு. இந்நகர மாந்தர்கள் ஓர் இடத்தில் கூடி வாக்களிப்பது கஷ்டமான காரியமல்ல. இதற்குக் காரணம் அவை ஓர் அரசாங்கத்தின் ஆளுகைக்குட்பட்ட பெரிய தேசமாயிராமல் சிறு சிறு நகர—ராஜ்யங்களாக இருந்தமைதான். இந்தியா முழுவதிலுமுள்ள வாக்காளர்கள், அதுகூட வேண்டாம், வங்காளம், ஆக்ரா போன்ற ஒரு மாகாணத்தின் வாக்காளர்கள் ஓர் இடத்தில் ஒன்று சேருவதாக வைத்துக்கொள்! இது சாத்தியமா? ஒருகாலும் சாத்தியமில்லை. பிற்காலத்தில் மற்றத் தேசங்களில் இந்தக் கஷ்டம் ஏற்பட்டபோது அத்தேசத்தார்கள் 'பிரதிநிதித்துவம் வாய்ந்த அரசாங்க' முறையைக் கண்டுபிடித்தார்கள். இதன்படி ஒரு தேசத்தின் வாக்காளர்கள் அனைவரும் தங்கள் பிரச்னைகளைத் தீர்த்துக்கொள்ள ஓரிடத்தில் கூடுவதற்குப் பதிலாகத் தங்கள் 'பிரதிநிதி'களைத் தேர்ந்தெடுக்கிறார்கள். இவ்வாறு தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகள் ஒன்று கூடிப் பொதுப் பிரச்னைகளை ஆராய்ந்து நாட்டுக்கு வேண்டிய சட்டங்களை இயற்றுகிறார்கள். இவ்வாறு மறைமுகமாக ஒரு சாதாரண

வாக்காளர் தன் நாட்டின் அரசாங்கத்தை நடத்த உதவி புரிவதாகக் கருதப்பட்டு வருகிறது.

ஆனால் இம்முறை கிரீஸில் இல்லவே இல்லை. சிறு சிறு நகர ராஜ்யங்களை அமைத்துக் கொண்டபடியால் அங்கு இந்தக் கஷ்டமான பிரச்னை உண்டாகவில்லை. கிரேக்கர்கள், நான் முன்பு கூறியதுபோல, கிரீஸ் முழுவதும், இதாலி, சிசிலி இவற்றின் தென்பாகத்திலும், மத்தியதரைக் கடலின் மற்றக் கரைகளிலும் பரவியிருந்தாலும் ஒரு சாம்ராஜ்யமோ அல்லது தங்களுக்கு உட்பட்ட இடங்கள் எல்லாவற்றிற்கும் பொதுவாக ஒரு தனி அரசாங்கமோ ஸ்தாபித்து அவற்றை ஆளவில்லை. அவர்கள் சென்ற இடங்களிலெல்லாம் தங்கள் தனிப்பட்ட நகர-ராஜ்யங்களையே அமைத்து ஆட்சி புரிந்தார்கள்.

இந்தியாவில்கூடப் பழைய நாட்களில் கிரேக்க நகர-ராஜ்யங்களைப் போன்று சிறு சிறு குடியரசுகள் அல்லது ராஜ்யங்கள் இருந்ததைக் காண்கிறோம். ஆனால் அவைகள் நீண்ட காலம் நிலைபெற்றிருக்கவில்லை. பெரிய ராஜ்யங்கள் தோன்றி, அவைகளைத் தம்முள் அடக்கிக் கொண்டன. அப்படி யிருந்தும் நமது கிராமப் பஞ்சாயத்துக்கள் நெடுங்காலம் அதிகாரம் செலுத்தி வந்திருக்கின்றன. பண்டைக் கால ஆரியர் தாங்கள் போகுமிடங்களில் எல்லாம் நகர ராஜ்யங்கள் அமைப்பதையே முதலில் விரும்பினார்கள் போலும்.

பூகோள இயற்கை நிலைமைகளிலும் தங்களுடையதைக் காட்டிலும் பழமையான நாகரிக மக்களோடு கலந்து வாழ நேர்ந்தாலும் அவர்கள் தாங்கள் சென்று குடியேறிய பல நாடுகளில் இந்த எண்ணத்தைச் சிறிது சிறிதாகக் கைவிட்டு விட்டார்கள். சிறப்பாகப் பாரசீகத்தில் பெரிய ராஜ்யங்களும் சாம்ராஜ்யங்களும் வளர்ந்

தோங்கின. இந்தியாவிலும் இவ்வாறே நிகழ்ந்தது. ஆனால் கிரீஸில் நெடுங்காலமாக, மகா அலெக்சாந்தர் தோன்றும் வரையில், நகர-ராஜ்யங்கள் நடைபெற்று வந்தன. அலெக்சாந்தர் சரித்திரப் பிரசித்தி பெற்றவன். முதல் முதலாக உலகத்தை வென்று ஒரு குடையின்கீழ் கொண்டுவர விரும்பியவன் இவனே. இவனைப் பற்றிப் பிறகு சொல்கிறேன்.

ஆகவே, கிரேக்கர்கள் தங்கள் சிறு நகர-ராஜ்யங்களை ஒன்று சேர்த்து ஒரு பெரிய ராஜ்யம் அமைக்க விரும்பவில்லை என்பதைக் காண்கிறோம். அவர்கள் தனியாகவும் சுதந்தரமாகவும் வாழ்ந்ததுமட்டுமல்ல, சதா ஒருவரோடு ஒருவர் சண்டை போட்டுக்கொண்டும் இருந்தார்கள். அவர்களுக்குள் எப்பொழுதும் போட்டியும் போரும்தான்.

ஆயினும் இந்நகர-ராஜ்யங்கள் பல தொடர்புகளில் ஒன்றோடொன்று பிணிக்கப்பட்டிருந்தன. ஒரே பாஷை, ஒரே மாதிரியான கலை நாகரிகம், ஒரே மதம். அவர்களுடைய மதத்தில் பல தேவர்களும் தேவதைகளும் உண்டு. ஹிந்து மதத்தில் ரசமான பல புராணங்களும் கதைகளும் மலிந்திருப்பதுபோலவே அவர்கள் மதத்திலும் உண்டு. அவர்கள் அழகை வழிபட்டார்கள் என்று சொல்லலாம். அவர்கள் கல்லிலும் சலவைக் கல்லிலும் செய்த பழைய சிற்பங்கள் சில இன்றும் இருக்கின்றன. அவைகளின் அழகையும் அருமையான வேலைப்பாட்டையும் வர்ணித்தல் இயலாது. மனித உடம்பானது அழகும் நலமும் பெற்றுத் திகழவேண்டுமென்பது அவர்கள் கொள்கை. இதற்காக அவர்கள் பலவிதமான விளையாட்டுக்களையும் பந்தயங்களையும் ஏற்படுத்தினார்கள். கிரீஸில் ஒலிம்பியா என்னுமிடத்தில் இவைகள் அவ்வப்போது ஒரு திருவிழாவைப் போல நடைபெறும். கிரீஸின் எல்லாப் பாகங்களிலிருந்தும் ஜனங்கள் திரள் திரளாகக்

கூடுவார்கள். இப்போது நடக்கும் ஒலிம்பியா பந்தய விளையாட்டுக்களைப் பற்றி நீ கேள்விப்பட்டிருப்பாய். பழைய கிரீஸில் விளையாட்டுக்கள் நடைபெற்ற இடமாகிய ஒலிம்பியாவின் பெயரால் தற்போது வெவ்வேறு தேசங்களுக்குள் நடைபெறும் பந்தயங்களும் விளையாட்டுக்களும் வழங்கி வருகின்றன.

ஆகவே கிரேக்க நகர-ராஜ்யங்கள் தனித்திருந்த போதிலும், ஒலிம்பியா பந்தயங்களிலும் மற்றும் சில இடங்களிலும் யாவரும் அடிக்கடி ஒன்று கூடுவார்கள். ஒருவரோடு ஒருவர் அடிக்கடி சண்டையிட்டும் வந்தனர்.

ஒரு சமயம் கிரீஸின்மீது பாரசீகர்கள் படையெடுத்துப் பெரும் அபாயத்தை உண்டாக்கியபோது இவர்கள் எல்லோரும் ஒன்று சேர்ந்து அவ்வபாயத்தை எதிர்த்து நின்றார்கள். பின்னர் இதைப் பற்றிக் கவனிப்போம்.

# 8

## மேற்கு ஆசிய சாம்ராஜ்யங்கள்

ஜனவரி 13, 1931.

நேற்று உங்களெல்லோரையும் பார்த்து ஆறுதல் அடைந்தேன். ஆனால் உன் தாத்தாவைப் பார்த்ததும் எனக்குத் தூக்கிவாரிப் போட்டது. அவ்வளவு இளைத்து நோயுற்றிருந்தார். அவர் உடம்பை ஜாக்கிரதையாகப் பார்த்துக்கொள். அவர் குணமடைந்து முன்போல் ஆக வேண்டும். நேற்று உன்னோடு சரியாகப் பேச முடிய வில்லை. கொஞ்ச நேரச் சந்திப்பில் என்ன செய்ய முடிகிறது? நாம் ஒருவரோடொருவர் சந்தித்துப் பேச முடியாத குறையை இக் கடிதங்கள் எழுதுவதன் மூலம் நிவர்த்தி செய்யப் பார்க்கிறேன். ஆனால் கடிதம் எழுது வது பேசுவதுபோல் ஆகுமா? ஆகவே இந்தப் பாவனை நீண்ட நேரம் இருப்பதில்லை! அது இன்பத்தை அளிக் கிறது. ஆயினும் இம் முறை சில சமயங்களில் நன்மை யளிக்கிறது.

பழைய காலத்தைத் திரும்பிப் பார்ப்போம். ஆதி கிரேக்கர்களைப்பற்றித் தெரிந்துகொண்டோம். அதே காலத்தில் மற்றத் தேசங்கள் எப்படி இருந்தன? ஐரோப் பாவின் மற்றத் தேசங்களைப்பற்றி நாம் அதிகமாகக் கவ லைப்பட வேண்டியதில்லை. நமக்கு, அதிலும் எனக்கு, அவை களைப்பற்றி விசேஷமாக ஒன்றும் தெரியாது. வட ஐரோப் பாவின் சீதோஷ்ண ஸ்திதி மாறுபட்டு அங்கும் புதிய நிலைமைகள் ஏற்பட்டிருக்க வேண்டும். மிக மிகப் பழைய நாளில் வட ஐரோப்பாவும் வட ஆசியாவும் மிகவும்

குளிர்ச்சியாக இருந்தது உனக்கு நினைவிருக்கலாம். இது பனிக்கட்டிக் காலம் என்று சொல்லப்படுகிறது. பெரிய சலனப் பனிமலைகள் மத்திய ஐரோப்பா வரையில் வருவதுண்டாம். அந்நாளில் அங்கு அநேகமாக மனிதன் வாழ்ந்திருக்க முடியாது. வாழ்ந்திருந்தாலும் மனிதத்தன்மையை விட மிருகத்தன்மை அதிகமானவர்களே வாழ்ந்திருக்க வேண்டும். இவைகளைப்பற்றி நாம் புத்தகங்களிலிருந்து தெரிந்துகொள்ள முடியாது. ஏனெனில் அந்தக் காலத்தில் புத்தகங்களோ, புத்தகங்கள் எழுதுவோரோ இல்லை. ஆனால் நீ இயற்கைப் புத்தகத்தை மறந்திருக்க மாட்டாய் என்று நம்புகிறேன். கற்களிலும் கற்பாறைகளிலும் இயற்கை தனது சுய சரித்திரத்தை எழுதிவைத்திருக்கிறது. விரும்புவோர் அதைப் பார்த்துத் தெரிந்துகொள்ளலாம். இந்தச் சலனப் பனிமலைகள் தாங்கள் இருந்ததற்குச் சாட்சியாகச் சில அடையாளங்களை விட்டுப் போயிருக்கின்றன. அவைகளை ஒரு முறை பார்த்து அறிந்துகொண்டால் பின்னர் தவருமல் புரிந்துகொள்ளலாம்.

இந்த அடையாளங்களை நீ அறிய விரும்பினுல் இப்பொழுது அத்தகைய சலனப் பனிமலைகள் நிறைந்திருக்கும் இமய மலைக்கோ, ஆல்ப்ஸ் மலைக்கோ அல்லது வேறு இடங்களுக்கோ போய்ப்பார்க்க வேண்டும். ஆல்ப்ஸ் மலையிலுள்ள மாண்ட் பிளாங்க் சிகரத்துக்கு அருகில் நீயே இச் சலனப் பனிமலைகளைப் பார்த்திருக்கிருய். ஆனுல் அப்போது இந்த அடையாளங்களை யாரும் உனக்குச் சுட்டிக் காட்டியிருக்கமாட்டார்கள். காஷ்மீரத்திலும் ஹிமாலயத்தின் இதர பாகங்களிலும் சலனப் பனிமலைகள் பல இருக்கின்றன. பிண்டாரி சலனப் பனிமலை நமக்கு மிகவும் அருகிலிருப்பதாகும். அல்மோராவிலிருந்து ஒரு வாரத்தில் அங்குப் போய்ச்

சேரலாம். உன்னைவிட வயதில் சின்னவனுயிருந்தபோது நான் அதைச் சென்று பார்த்தேன். அது இன்னும் என் நினைவைவிட்டு அகலவே இல்லை.

பழங்கால சரித்திரத்தை விடுத்துச் சலனப் பனிமலைகளைப் பற்றியும், பிண்டாரியைப் பற்றியும் பேசிவிட்டேன். நீ என் பக்கத்திலிருப்பதுபோலவும், உன்னுடன் நான் பேசுவதுபோலவும் பாவனை செய்துகொள்வதால் அடிக்கடி இம்மாதிரி ஏதேதோ சொல்ல ஆரம்பித்து விடுகிறேன்.

பனிக்கட்டிக் காலத்தைப்பற்றி நான் குறிப்பிட்டதால் சலனப் பனிமலைகளைப் பற்றிப் பேச ஆரம்பித்தோம். அவைகள் மத்திய ஐரோப்பாவுக்கும் இங்கிலாந்துக்கும் வந்தன என்று சொல்லலாம். ஏனெனில் அவ்விடங்களில் அதற்குரிய அடையாளங்களை நாம் இன்றும் காண முடிகிறது. பழைய கற்பாறைகளின்மீது அவ்வடையாளங்கள் காணப்படுகின்றன. அதனுல் மத்திய ஐரோப்பாவும் வட ஐரோப்பாவும் மிகவும் குளிர்ந்த பிரதேசங்களாக இருந்திருக்க வேண்டுமென்று தோன்றுகிறது. பிற்காலத்தில் உஷ்ணம் அதிகமாக ஆக அப்பனிமலைகள் கொஞ்சம் கொஞ்சமாகக் கரைந்து குறைந்திருக்க வேண்டும். பூமிதத்துவ (Geologists) நிபுணர்கள் இக்குளிர்காலத்துக்குப் பிறகு உஷ்ணகாலம் ஏற்பட்டதாகச் சொல்லுகிருர்கள். அந்தக் காலத்தில் ஐரோப்பா இன்று இருப்பதைவிட அதிக உஷ்ணமாக இருந்ததாம். இந்த வெப்பநிலை காரணமாக ஐரோப்பாவில் அடர்ந்த காடுகள் வளர ஆரம்பித்தன.

ஆரியர்கள் அலைந்து திரிந்து மத்திய ஐரோப்பாவுக்கும் வந்து சேர்ந்தார்கள். இந்தக் காலத்தில் அவர்கள் அங்கு ஆச்சரியப்படத்தக்க காரியம் எதையும் செய்ததாகத் தெரியவில்லை. ஆகவே, நாம் இப்போது அவர்

களைப்பற்றிக் கவனிக்கவேண்டியதில்லை. கிரீஸிலும் மத்திய தரைக் கடல் நாடுகளிலும் வாழ்ந்த நாகரிகம் மிகுந்த மக்கள் ஐரோப்பாவின் மத்திய பாகத்திலும் வடபாகத்திலும் வசித்துவந்த இவர்களை நாகரிகமற்றவர்களாகவே மதித்திருக்க வேண்டும். ஆனால் இந்தக் 'காட்டுமிராண்டிகள்' காடுகளிலும், கிராமங்களிலும் திடகாத்திரர்களாய் வசித்து வந்தார்கள். இவர்கள் இயற்கையாகவே போர்க் குணமுடையோர். தெற்கேயுள்ள நாகரிகம் வாய்ந்த மக்களின் அரசாங்கங்களை அடித்து வீழ்த்தப் போகும் நாளுக்குத் தங்களை அறியாமலே தங்களைத் தயார்செய்து வந்தார்கள். ஆனால் இது நெடுங்காலத்துக்குப் பிறகு நடந்த நிகழ்ச்சியாதலால் அதைப்பற்றி நாம் இப்போது பேச வேண்டியதில்லை.

வட ஐரோப்பாவைப்பற்றி நமக்குச் சிறிதாவது தெரிந்திருக்கிறது. ஆனால் பெரிய கண்டங்களைப்பற்றியும், பரந்த நிலப்பரப்புகளைப் பற்றியும் ஒன்றுமே தெரியவில்லை. அமெரிக்கா கொலம்பஸ் என்பவரால் கண்டுபிடிக்கப் பட்டதாகச் சொல்லப்படுகிறது. அந்தக் காரணத்தினால் கொலம்பஸ் செல்லுமுன்பு அங்கு நாகரிகம் வாய்ந்த மக்கள் வாழவில்லை என்று சொல்லிவிட முடியாது. எது எப்படியிருந்தாலும் அக்காலத்திய அமெரிக்காவைப்பற்றி நமக்கு ஒன்றுமே தெரியவில்லை. அக்காலத்தில் எகிப்தின் மேன்மை பொருந்திய பழைய நாகரிகம் தாழ்ச்சியுற்றிருந்தது போலும். ஆயினும் அந்நாட்களில் அது மிகவும் முன்னேற்றமடைந்த தேசமாகவே விளங்கியது.

இப்பொழுது, ஆசியாவில் என்ன நடந்துகொண்டிருந்தது என்று கவனிப்போம். மெசபொடேமியா, இந்தியா, சீனா இம்மூன்றும் புராதன நாகரிகத்தின் முக்கிய தாயகமாக விளங்கின என்பது உனக்குத் தெரிந்ததே.

மெசபொடேமியாவிலும், பாரசீகத்திலும், சின்ன ஆசியாவிலும் இப்பண்டைக் காலத்திலேயே சாம்ராஜ்யங்கள் ஒன்றன்பின் ஒன்றாகத் தோன்றி மறைந்தன. அசீரியா, மீடியா, பாபிலோன், பிறகு பாரசீகம் - ஆகிய இந்தச் சாம்ராஜ்யங்கள் இருந்துவந்தன. அவையொன்றோடொன்று போரிட்டதும், சிறிதுகாலம் சமாதானமாக வாழ்ந்ததும், பிறகு ஒன்றையொன்று அழித்துக்கொண்டதும் ஆகிய விவரங்களையெல்லாம் நாம் இப்போது கவனிக்க வேண்டியதில்லை. கிரீஸின் நகர - ராஜ்யங்களுக்கும், மேற்கு ஆசியாவின் சாம்ராஜ்யங்களுக்குமுள்ள வித்தியாசத்தை நீ கவனித்திருப்பாய் என்று நம்புகிறேன். இந்த நாடுகளில் ஆதிகாலத்திலிருந்தே பெரிய ராஜ்யம் அல்லது சாம்ராஜ்யத்தை நிலைநாட்ட வேண்டும் என்னும் ஆசை இருந்து வந்ததைக் காண்கிறோம். இதற்குக் காரணம் அவைகளுடைய பழைய நாகரிகமாயிருக்கலாம்; அல்லது வேறு காரணங்களும் இருக்கலாம். கிரீசஸ் (Croesus) என்பவனைப்பற்றி உனக்குச் சொல்லவேண்டும். அவனைப்பற்றி நீ கேள்விப்பட்டிருக்கலாம். ஆங்கிலத்தில் 'கிரீசஸைப் போன்ற குபேரனாய்' என்ற பழமொழி ஒன்றுண்டு. இவன் நிறைந்த செல்வத்தோடும் கர்வத்தோடும் வாழ்ந்து வந்ததையும், கடைசியில் கர்வ பங்கம் அடைந்ததையும் நீ கதைகளில் வாசித்திருக்கலாம். இவன் ஆசியாவின் மேற்குக் கரையில் இப்போது சின்ன ஆசியா உள்ள இடத்திலிருந்த லிடியா என்னும் நாட்டுக்கு அரசனாயிருந்தான். அது கடற்கரையை அடுத்த நாடாக இருந்தபடியால் அங்கு அதிகமாக வியாபாரம் நடைபெற்றிருக்க வேண்டும். இவன் காலத்தில் பாரசீக சாம்ராஜ்யம் சைரஸ் என்பவனின்கீழ் வளர்ந்தோங்கி வல்லமை பெற்று வந்தது. கிரீசஸுக்கும் சைரஸுக்கும் ஏற்பட்ட போரில் கிரீசஸ் தோல்வி அடைந்தான். இவ்வாறு

தோல்வியும் துன்பமும் ஏற்பட்ட பிறகு கர்வம் படைத்த கிரீசஸுக்கு நல்லறிவு ஏற்பட்ட கதையை 'ஹெரடோடஸ்' என்னும் கிரேக்க சரித்திர நூலாசிரியர் எழுதி வைத்திருக்கிறார்.

சைரஸின் சாம்ராஜ்யம் கிழக்கே இந்தியா வரையில் பரவியிருந்தது. அவனுக்குப் பின்வந்தோர்களில் ஒருவனான டரையஸ் என்பவன் அதை இன்னும் விரிவுபடுத்தினான். எகிப்து, மத்திய ஆசியாவின் ஒரு பாகம், இந்தியாவில் சிந்து நதியை அடுத்த பாகம் ஆகியவை அவன் சாம்ராஜ்யத்துக்குள் இருந்தன. அவனுக்குக் கீழிருந்த இவ்விந்திய மாகாணத்திலிருந்து அவனுக்கு ஏராளமான பொன் கப்பமாக அனுப்பப்பட்டு வந்ததாம். சிந்து நதிக் கருகில் அக்காலத்தில் இவ்விதமான பொன் இருந்திருக்க வேண்டும். இப்பொழுது ஒன்றுமில்லை. எல்லாம் பாழ் நிலமாகக் கிடக்கிறது. தேசத்தின் வெப்பதட்ப நிலை எவ்வளவு தூரம் மாறியிருக்க வேண்டும் என்பதை இது காட்டுகிறது.

நீ சரித்திரம் படித்துக்கொண்டு போகும்போது பழைய நிலைமைகளைத் தற்கால நிலைமைகளோடு ஒப்பிட்டுப் பார்ப்பாயானால் எல்லாவற்றையும்விட மத்திய ஆசியாவில் ஏற்பட்டிருக்கும் மாறுதல் உனக்கு அதிசயத்தைக் கொடுக்கும். இந்த இடத்திலிருந்துதான் பல ஜாதியார்கள் கூட்டம் கூட்டமாகக் கிளம்பித் தூரத்திலுள்ள பல கண்டங்களில் பரவினார்கள். இந்த இடத்தில்தான் முற்காலத்தில் பெரிய பெரிய நகரங்கள் இருந்தன. செல்வத்திலும் ஜனத்தொகையிலும் தற்காலத்திய ஐரோப்பியத் தலைநகரங்களுக்கு ஈடாகச் சொல்லும்படியாகவும், நமது கல்கத்தா, பம்பாய் நகரங்களைக் காட்டிலும் பெரியவையாகவும் அவை விளங்கின. எங்கே பார்த்தாலும் சோலைகள் சூழ்ந்து ஒரே பசுமையாக விளங்கிற்று

அந்நாடு. அதிகக் குளிரோ உஷ்ணமோ இல்லாமல் சீதோஷ்ண ஸ்திதி சமநிலை பெற்று இனிமையாக இருந்தது. இதெல்லாம் பழங்கதை. இப்போது, பல நூறு வருஷங்களாக வெறும் பாழ்நிலமாகக் - பாலைவனம் என்றே சொல்லிவிடலாம் - கிடக்கிறது. பழைய நகரங்களில் சில இன்னும் இருக்கின்றன. ஸமர்க்கந்த், போகாரா - இவைகளின் பெயரைச் சொன்ன மாத்திரத்திலேயே பழைய நினைவுகள் வந்து குவிகின்றன. ஆனால் இந் நகரங்கள் தங்களுடைய புராதனச் சிறப்பை இழந்து நிற்கின்றன.

மறுபடியும், நான் பின்பு சொல்ல வேண்டியதை முன்பாகவே சொல்லுகிறேன். நாம் இப்போது பேசிக் கொண்டிருக்கும் பழைய நாட்களிலே ஸமர்க்கந்த் போகாரா நகரங்கள் தோன்றவே இல்லை. மத்திய ஆசியா பெருமையுறுவதும் பின்பு வீழ்ச்சியுறுவதும் எதிர்காலத்தில் நடக்கவிருக்கும் சம்பவங்களாகும்.

# 9

## பழைய சம்பிரதாய மூட்டை

ஜனவரி 14, 1931.

சிறையில் எனக்குச் சில புதுப் பழக்கங்கள் ஏற்பட்டிருக்கின்றன. இவைகளில் ஒன்று அதிகாலையில், விடியு முன்பே, எழுந்துவிடுவதாகும். சென்ற வருஷம் கோடைக் காலத்தில் இவ்வழக்கத்தை மேற்கொண்டேன். உதய ஒளி சிறிது சிறிதாகப் பரவி வானிலுள்ள நட்சத்திரங்களை ஓட்டுவதைப் பார்ப்பது எனக்கு ஆனந்தமாயிருக்கும். விடியுமுன் சந்திரிகையைப் பார்த்திருக்கிறாயா? அது மெல்ல மெல்லப் பகலாக மாறுவதைக் கவனித்திருக்கிறாயா? நிலவொளிக்கும் பகலொளிக்கும் நடக்கும் இப்போராட்டத்தில் பகலொளி எப்பொழுதும் வெற்றி பெற்று வருகிறது. இதை நான் அடிக்கடி கவனிப்பது உண்டு. இந்த மங்கலான வெளிச்சத்திலே சிறிதுநேரம் நிலவொளியா அல்லது பகலொளியா என்று சொல்வது கஷ்டமாயிருக்கும். பிறகு திடீரென்று - இப்போது சந்தேகமே இல்லை - விடிந்து பகல் தோன்றுகிறது. சந்திரன் ஒளி மழுங்கித் தோற்று, மறைந்துவிடுகிறான். *

என்னுடைய வழக்கப்படி நான் இன்று நட்சத்திரங்கள் வானிலிருக்கும் போதே எழுந்துவிட்டேன். விடியு முன்பு காற்றில் மிதந்துவரும் அந்த ஏதோ ஒன்றைக்

---

* "கண்ணார் இரவி கதிர்வந்து கார்கரப்பத்
தண்ணார் ஒளிமழுங்கித் தாரகைகள் தாமகல"

என்னும் மாணிக்கவாசகரின் திருவெம்பாவை அடிகள் ஞாபகத்துக்கு வருகின்றன.

கொண்டுதான் பொழுது புலர்வதை அறியக்கூடும். நான் வாசித்துக்கொண்டிருந்தேன். அப்போது தூரத்திலே கூப்பாடும் இரைச்சலும் உண்டாகி அதிகரித்துக்கொண்டிருந்தன. இதனால் அதிகாலையில் நிலவும் சாந்தி குலைந்தது. அன்றைத்தினம் சங்கராந்தி என்பது எனக்கு ஞாபகம் வந்தது. மாக்மேளா (மாக் - மாசி, மேளா - திருவிழா; இதைக் கும்பமேளா என்று சொல்வதும் உண்டு.) வின் முதல் நாளாகிய அன்று கங்கையும், யமுனையும், கண்ணுக்குத் தெரியாமல் ‡அந்தர்வாஹினியாக ஸரஸ்வதியும் வந்து கூடும் திரிவேணி சங்கமத்தில் ஸ்நானம் செய்வதற்கு ஜனங்கள் ஆயிரக்கணக்கில் போய்க்கொண்டிருந்தார்கள். போகும்போதே பாடிக்கொண்டும், 'கங்காமாய்கி ஜே' என்று கோஷித்துக்கொண்டும் சென்றூர்கள். அவர்களுடைய குரல் நைனி சிறையின் சுவர்களைத் தாண்டிவந்து என் காதில் பட்டது. அதைக் கேட்டபோது, இத்தனை பேர்களையும் தங்கள் வறுமையையும் துன்பத்தையும் ஒரு கணநேரம் மறக்கச் செய்து சங்கம ஸ்தானத்துக்கு இழுத்துச் சென்ற அந்த நம்பிக்கையின் சக்தியை நினைத்துப் பார்த்தேன். ஆயிரவருஷங்களாக, ஒரு வருஷங்கூடத் தவறுமல், இவர்கள் இவ்வாறு திரிவேணிக்குப் போய்க்கொண்டிருக்கிறுர்கள்! மனிதர்கள் வரலாம், மனிதர்கள் போகலாம்; அரசாங்கங்களும் சாம்ராஜ்யங்களும் சிறிது காலம் ஆட்சி செய்துவிட்டுப் பிறகு மறைந்து போகலாம். ஆனுல் பழைய சம்பிரதாயம் இடையீடின்றிச் சென்றுகொண்டே இருக்கிறது. அதைத் தடுப்பவர் யாருமில்லை. ஒவ்வொரு தலைமுறையும் அதற்குப் பணிந்து செல்கிறது. பழைய வழக்கங்கள் என்பனவற்றில் நல்லன நிறைய இருக்கின்றன. ஆனுல் சில சமயங்களில் சுமக்கமுடியாத மூட்டையாகி நாம் முன்னேறிச் செல்வதற்கு இடைஞ்சல்

‡ அந்தர்வாஹினி - உள்ளே பிரவகித்தல் அல்லது ஓடுதல்.

பண்ணுகின்றன. தூரத்தே மங்கலாகத் தெரியும் இறந்த காலத்தையும் நம்மையும் சேர்த்துப் பிணைக்கும் இவ்வறு படாத தொடர்பை நினைக்கும்போதும் இம்மேளாவைப் பற்றி 1300 வருஷங்களுக்கு முன் எழுதப்பட்ட விவரங் களைப் படிக்கும்போதும் ஒரு கவர்ச்சியும் பிரமிப்பும் உண் டாகின்றன. ஆனால் நாம் முன்னேறிச் செல்ல விரும்பும் போது இத் தொடர்பானது நம்மைச் சுற்றிக்கொண்டு பழைய வழக்கத்தின் பிடிப்பிலே நம்மைச் சிறைப்படுத்தி விடுகிறது. பழங்காலத்தோடு நமக்குள்ள பல தொடர்பு களை நாம் பாதுகாத்து வைத்துக்கொள்ளவேண்டும்; ஆனால் பழைய வழக்கம் என்பதை நமது முன்னேற்றத் தைத் தடுக்கும்போதெல்லாம் அதை முன்பின் பாராது, அறுத்தெறியவேண்டும்.*

கடந்த மூன்று கடிதங்களில் உலகமானது சென்ற மூவாயிரத்திலிருந்து இரண்டாயிரத்து ஐந்நூறு வருஷங் கள் வரையில் எப்படி இருந்தது என்று பார்க்க முயன் ரேும். நான் தேதிகள் ஒன்றும் குறிப்பிடவில்லை. தேதிகள் என்றால் எனக்குப் பிடிக்காது. அவைகளைச் சொல்லி உனக்கு அதிகத் தொந்தரவு கொடுக்கவும் நான் விரும்பவில்லை. மேலும் பழங்காலத்திய சம்பவங் கள் இன்ன தேதியில்தான் நிகழ்ந்தன என்று சரியாக அறிந்து சொல்ல முடியாது. போகப்போக நமது மனத்தில் விஷயங்களை வரிசைக்கிரமமாக வைத்துக்கொள் வதற்கான சில தேதிகளை ஆங்காங்குக் குறிப்பிடுவது அவ சியமாக இருக்கும். இப்போதைக்கு, உலகம் பழைய நாட் களில் எவ்வாறு இருந்ததென்று தெரிந்துகொள்ள முயன்று வருகிறோம்.

---

* பாட்டு: 'தொன்மையாம் எனும் எவையும் நன்றாகா இன்று தோன்றியவாம் எனும் எவையும் தீதாகா' என்னும் உமாபதி சிவப்பாட்டும் இதை வலியுறுத்துகிறது.

கிரீஸ், மத்தியதரைக்கடல் நாடுகள், எகிப்து, சின்ன ஆசியா, பாரசீகம் - இவைகளைப் பார்த்தோம். இப்போது நமது நாட்டிற்குத் திரும்பி வருவோம். இந்தியாவின் ஆதிகால சரித்திரத்தை அறிவதில் நமக்கு ஒரு பெரிய கஷ்டம் இருக்கிறது ; ஆதி ஆரியர்கள் அதாவது இந்திய ஆரியர்கள் சரித்திரம் எழுதிவைப்பது அவசியம் என்று கருதவில்லை. நமது முந்தின கடிதங்களில் அவர்கள் பல வழிகளில் எவ்வாறு மேன்மையுற்றிருந்தார்கள் என்று பார்த்தோம். அவர்களுடைய வேதங்கள், உபநிஷதங்கள், ராமாயணம், மகாபாரதம் - ஆகிய நூல்களை மகா மேதாவிகள்தாம் இயற்றியிருக்க முடியும். இந்நூல்களும் இதர விஷயங்களும் பழைய சரித்திரத்தை அறிவதில் நமக்கு உதவிசெய்கின்றன. நமது மூதாதையர்களின் பழக்க வழக்கங்களையும் அவர்கள் எவ்வழிகளில் தங்கள் சிந்தனைசக்தியைச் செலுத்தினார்கள் என்பதையும் எவ்வாறு வாழ்க்கை நடத்தினார்கள் என்பதையும் இவைகள் நமக்குத் தெரிவிக்கின்றன. ஆனால் இவைகளைச் சரியான சரித்திரம் என்று சொல்லமுடியாது. மிகவும் பிற்பட்ட காலத்தில் எழுதப்பட்ட காஷ்மீர சரித்திரமே சம்ஸ்கிருதத்தில் உள்ள உண்மையான சரித்திர நூலாகும். கல்ஹணன் (Kalhana) என்பவர் இயற்றிய காஷ்மீர அரசர்களின் வரலாற்றைச் சொல்லும் இந்நூலுக்கு 'ராஜ தரங்கிணி' என்று பெயர். நான் இக்கடிதங்களை எழுதிக்கொண்டிருக்கும்போது *ரஞ்சித் மாமா இப் பெரிய காஷ்மீர சரித்திரத்தை ஸம்ஸ்கிருதத்திலிருந்து மொழி பெயர்த்துக்கொண்டிருக்கிறார் என்பதைக் கேட்க நீ சந்தோஷப்படுவாய். ஏறக்குறையப் பாதி ஆகிவிட்டது. அது மிகவும் பெரிய நூல். அதன் மொழிபெயர்ப்பு முழுவதும்

---

* ஆர். எஸ். பண்டிதர்—ஜவாஹர்லால் அவர்களின் தங்கை கணவர்.

வெளியாகும்போது நாம் அதை ஆவலுடன் படிப்போம். ஏனெனில் துரதிருஷ்டவசமாக நம்மில் பலருக்கு மூலநூலை வாசிப்பதற்குப் போதிய சம்ஸ்கிருத ஞானம் இல்லையல்லவா? அது ஓர் அருமையான நூல் என்பது ஒருபுறமிருக்க அதில் பழைய வரலாறுகள், முக்கியமாக நமது பூர்விக வாசஸ்தலமாகிய காஷ்மீரத்தைப்பற்றிய வரலாறுகள் கூறப்படுவதால் நாம் அதை ஆவலுடன் வாசிப்போம்.

ஆரியர்கள் இந்தியாவுக்கு வந்தபொழுது அது ஏற்கெனவே நாகரிகம் வாய்ந்த நாடாக இருந்தது. மொஹெஞ்ஜோ - தாரோவில் நமக்குக் கிடைத்திருப்பனவற்றிலிருந்து ஆரியர்களின் வருகைக்கு நெடுங்காலத்துக்கு முன்னரே இந்தியாவின் வடமேற்குப் பாகத்தில் ஒரு பெரிய நாகரிகம் இருந்திருக்கவேண்டும் என்பது தெளிவாகத் தெரிகிறது. ஆனால் இதைப்பற்றி நமக்கு இன்னும் அதிகமாகத் தெரியவில்லை. நமது *புதைபொருள் ஆராய்ச்சி நிபுணர்கள் - அழிந்தும் சிதைந்தும் கிடக்கும் பழைய கட்டிடங்கள், கல்வெட்டுகள் முதலியவைகளை ஆராய்ந்து அறிவிப்பவர்கள் - அங்கே பூமியைத் தோண்டி எல்லாவற்றையும் கண்டுபிடித்த பிறகு இன்னும் சில ஆண்டுகளில் நாம் அதைப்பற்றி அதிகமாகத் தெரிந்துகொள்ளலாம்.

( இஃதன்றியும், தென் இந்தியாவில் - ஒருவேளை வட இந்தியாவில்கூட - திராவிடர்களின் நாகரிகம் மிகவும் சிறப்புற்றிருந்தது என்பது தெளிவாகத் தெரிகிறது. அவர்களுடைய பாஷைகள் ஆரியர்களின் சம்ஸ்கிருதத்திலிருந்து பிறந்தவை அல்ல. மிகவும் பழமையான அப்பாஷைகளில் சிறந்த இலக்கியங்கள் காணப்படுகின்றன. இம்மொழிகள் தமிழ், தெலுங்கு, கன்னடம், மலையாளம் ஆகும். ) இவை தென் இந்தியாவில் இன்றும்

* ஆர்கியாலஜி.

வழங்கி வருகின்றன பிரிட்டிஷ் அரசாங்கம் இந்தியாவைப் பிரித்திருப்பதுபோலன்றித் தேசீய காங்கிரஸ் மகாசபையானது இந்தியாவைப் பாஷாவாரியாகப் பிரித்திருப்பது உனக்குத் தெரிந்திருக்கலாம். ஏறக்குறைய ஒரேவிதமான நடை உடை பாவனைகளை உடைய ஒருமொழி பேசும் மக்களை ஒரு மாகாணத்தில் சேர்த்துவிடுவது சிறந்த ஏற்பாடாகும்.) தென் இந்தியாவிலுள்ள காங்கிரஸ் மாகாணங்கள் வருமாறு: 1. ஆந்திரதேசம் அதாவது சென்னைக்கு வடக்கே உள்ள, தெலுங்கு வழங்கும் ஆந்திர மாகாணம். 2. தமிழ்நாடு அதாவது தமிழ் வழங்கும் தமிழ் மாகாணம். 3. கர்நாடகம் அதாவது பம்பாய்க்குத் தெற்கே உள்ள கன்னடம் வழங்கும் நாடு. 4 கேரளம் அதாவது மலையாளம் வழங்கும் மலையாள நாடு. எதிர்காலத்தில் இந்தியாவை மாகாணங்களாகப் பிரிக்கும்போது அவ்வப் பிரதேசத்தின் பாஷை முக்கியமாகக் கவனிக்கப்படும் என்பதில் ஐயமில்லை.

இங்கே இந்தியாவின் பாஷைகளைப்பற்றிக் கொஞ்சம் அதிகமாகச் சொல்லலாமென்று நினைக்கிறேன். ஐரோப்பாவிலும் இதர இடங்களிலுமுள்ள சிலர் இந்தியாவில் நூற்றுக்கணக்கான பாஷைகள் வழங்குவதாக எண்ணிக்கொண்டிருக்கிறார்கள். இது முற்றும் தவறு. இவ்வாறு சொல்பவர்கள் அதன்மூலம் தங்கள் அறியாமையையே காட்டிவிடுகிறார்கள். தேசத்தின் பல பாகங்களில் வசிக்கும் பலவிதமான மலைஜாதியார்களும் வேறு சிறு சிறு கூட்டத்தினரும் வெவ்வேறு பாஷைகள் பேசுகிறார்கள். ஆனால் இந்தியாவை மொத்தமாக எடுத்துப் பார்க்கும்போது இவை முக்கியமானவை ஆகா. ஜனத்தொகைக் கணக்கு எடுப்பதற்குத்தான் இவை முக்கியமாகக் கொள்ளப்படுகின்றன. நான் ஏற்கெனவே என் கடிதங்களுள் ஒன்றில் சொல்லியிருப்பதுபோல இந்தியா

வின் உண்மையான பாஷைகளைத் திராவிட, இந்திய - ஆரியம் என்று இருபெரும் பிரிவுகளாகப் பிரிக்கலாம். இந்திய - ஆரிய பாஷைகளில் தலையாயது சம்ஸ்கிருதம். மற்றவைகள் அதனின்றும் பிறந்தவை. இவை ஹிந்தி, வங்காளி, குஜராத்தி, மராத்தி ஆகிய மொழிகளாகும். இவற்றினின்று சிறிதே மாறுபட்ட பாஷைகள் வேறு சில இருக்கின்றன. அஸ்ஸாமில் அஸ்ஸாமிய பாஷையும் ஒரிசாவில் உரியாவும் வழங்குகின்றன. உருது என்பது ஹிந்தியின் மாறுபாடு. ஹிந்துஸ்தானி என்னும் சொல் ஹிந்தி, உருது இரண்டையும் குறிக்கிறது. ஆகவே இந்தியாவின் முக்கிய பாஷைகள் பத்தேதான். ஹிந்துஸ்தானி, வங்காளி, குஜராத்தி, தமிழ், தெலுங்கு, கன்னடம், மலையாளம், உரியா, அஸ்ஸாமிய பாஷை ஆகப் பத்துப் பாஷைகள். இவற்றுள் நமது தாய்மொழியாகிய ஹிந்துஸ்தானி வட இந்தியா முழுவதும் - பஞ்சாப், ஐக்கிய மாகாணம், பீஹார், மத்திய மாகாணம், ராஜபுதனம், டில்லி, மத்திய இந்தியா ஆகிய இடங்களில் - பேசப்படுகிறது. பதினைந்து கோடி மக்கள் வாழும் பெரிய பிரதேசம் இது. ஆகவே ஹிந்துஸ்தானி சிற்சில சிறிய மாறுதல்களுடன் பதினைந்து கோடி மக்களால் பேசப்படுகிறது. இந்தியாவில் அநேகமாக எல்லாப் பாகங்களிலும் இது அறிந்து கொள்ளப்படுகிறது. இந்தியாவின் பொது பாஷையாக இது ஆகலாம். இப்படிச் சொல்வதால் மேற்கூறப்பட்ட மற்ற முக்கிய பாஷைகள் மறைந்துவிட வேண்டுமென்று அர்த்தமல்ல. அவைகள் கட்டாயம் மாகாண பாஷைகளாக இருந்தே தீரும். அவைகளில் சிறந்த இலக்கியங்கள் இருக்கின்றன. நன்கு வளம் பெற்று விளங்கும் ஒரு பாஷையை அதைப் பேசும் மக்களிடமிருந்து ஒழிக்க முயலுவது விரும்பத்தக்கதல்ல. தங்கள் சொந்த பாஷை ஒன்றின் மூலம்தான் ஒரு மக்கள்

வளர்ச்சியடைய முடியும். குழந்தைகளும் அதன்மூலமாகத்தான் கல்வி கற்கவேண்டும். இந்தியாவில் இப்பொழுது எல்லாம் தலைகீழ்ப்பாடமாக இருக்கிறது. நாம் நமக்குள்ளேயே அதிகமாக ஆங்கில பாஷையை வழங்குகிறோம். நான் உனக்கு ஆங்கிலத்தில் எழுதுவது எள்ளி நகையாடத் தக்கதே. அப்படியிருந்தும் நான் அதைச் செய்கிறேன்! இந்த வழக்கம் சீக்கிரமே தொலைந்துவிடும் என்று நம்புகிறேன்.

# 10

## புராதன இந்தியாவில் கிராமக் குடியரசுகள்

ஜனவரி, 15, 1931.

பழைய சரித்திரத்தைக் கவனிப்பதில் நாம் எவ்வாறு முன்னேறுவது? நான் சதா முக்கிய கதையை விட்டு விட்டுக் கிளைக்கதைகள் சொல்ல ஆரம்பித்துவிடுகிறேன். எனது கடைசிக் கடிதத்தில் முக்கிய விஷயத்தைப்பற்றிச் சொல்லப்புகுந்து அதை விடுத்து இந்தியாவின் பாஷைகளைப்பற்றிப் பேசிவிட்டேன்.

இப்போது புராதன இந்தியாவுக்குப் போவோம். இன்று ஆப்கானிஸ்தானம் என வழங்கும் நாடு அக்காலத்திலும் அதற்குப்பின் நெடுங்காலம் வரையிலும் இந்தியாவின் ஒரு பாகமாக இருந்தது. இந்தியாவின் வடமேற்குப் பாகம் காந்தாரம் என்று அழைக்கப்பட்டது. வடக்கில் சிந்து கங்கை சமவெளிப் பிரதேசத்தில் ஆரியர்கள் பல இடங்களில் கூட்டம் கூட்டமாகக் குடியேறியிருந்தார்கள். இவ்வாரியர்களில் பெரும்பாலோர் பெரிய நகரங்களுள்ள பாரசீகத்திலிருந்தும் மெசபொடேமியாவிலிருந்தும் வந்தவர்கள். ஆதலால் அவர்கள் கட்டிடம் கட்டுவதில் தேர்ந்தவர்களாக இருந்தார்கள். ஆரியர்கள் குடியேறியிருந்த இடங்களுக்கிடையே பல காடுகள் இருந்தன. முக்கியமாக வட இந்தியாவுக்கும் தென் இந்தியாவுக்கும் மத்தியில் ஒரு பெரிய ஆரணியம் இருந்தது. தெற்கே குடியேறுவதற்கு ஆரியர்கள் பெருவாரியாக இவ்வாரணியத்தைக் கடந்து போயிருக்க முடியாது. ஆனால் பல தனிப்பட்ட நபர்கள் நாட்டைப் பார்க்கவும், வியாபாரம் செய்யவும்,

தங்களுடைய கலாசாரங்களைப் பரவச் செய்யவும் தெற்கே போயிருக்கவேண்டும். தென்னாட்டுக்கு முதல் முதல் சென்ற ஆரியர் அகஸ்திய மகரிஷி என்று கர்ண பரம்பரை சொல்லுகிறது. அவருடன் ஆரியர் மதமும் கலைஞானமும் சென்றன.

இந்தியாவுக்கும் மற்ற வெளிநாடுகளுக்குமிடையே இதற்குமுன்பே நல்ல வியாபாரம் நடைபெற்று வந்தது. தெற்கே விளைந்த மிளகு, தங்கம், முத்து இவைகளை விரும்பி வெளிநாட்டு வியாபாரிகள் கடல் தாண்டி வந்தார்கள். அரிசிகூட ஏற்றுமதி செய்யப்பட்டிருக்கலாம். பாபிலோனின் பழைய அரண்மனைகளில் மலையாளத்துத் தேக்குமரம் காணப்படுகிறது.

சிறிதுசிறிதாக ஆரியர்கள் இந்தியாவில் தங்களுடைய கிராம அமைப்பு முறையை ஏற்படுத்தினார்கள். திராவிடர்களின் பழைய கிராம அமைப்பு முறையும் ஆரியர்களின் புதிய கருத்துக்களும் கலந்து பரிணமித்ததாகும் இப்புதிய முறை. இக்கிராமங்கள் அதிக சுதந்தரம் பெற்று விளங்கின. தேர்ந்தெடுக்கப்பட்ட பஞ்சாயத்துக்கள் கிராம ஆட்சியை நடத்திவந்தன. பல கிராமங்கள் அல்லது சிறு பட்டணங்கள் சேர்ந்து ஓர் அரசன் அல்லது தலைவனின் ஆளுகைக்குட்பட்டிருந்தன. அவன் சில சமயங்களில் தேர்ந்தெடுக்கப்படுவதும் உண்டு; அல்லது பரம்பரையாக வருவதும் உண்டு. இம்மாதிரி பல கிராமத் தொகுதிகள் ஒன்றுசேர்ந்து பல பொது நன்மையான காரியங்களைக் கவனித்து வந்தன. சாலைகள் அமைத்தல், சத்திரம் கட்டுதல், நீர் பாய்ச்சுவதற்கான கால்வாய்கள் தோண்டுதல் முதலிய பல பொது வேலைகளை அவர்கள் செய்தார்கள். அரசன் தனது நாட்டில் முதன்மையானவனாக இருந்தாலும் தன் மனம்போன போக்கில் ஒன்றும் செய்யமுடியாது. ஆரியச் சட்டங்களுக்கும் சம்பிரதாயங்

களுக்கும் அவன் கட்டுப்பட்டவன். அவனைச் சிம்மாசனத்தை விட்டு நீக்கவும், அவனுக்கு அபராதம் விதிக்கவும் ஜனங்களுக்கு அதிகாரம் இருந்தது. ஜனங்களின் பிரதிநிதிகளைக் கேட்டு அரசாங்கத்தை நடத்துமாறு 16-வது லூயி என்ற பிரெஞ்சு அரசன் கேட்டுக்கொள்ளப்பட்டபோது அவன், 'அரசாங்கமா? அது நான் தானே!' என்று சொன்னானாம். அத்தகைய மனோபாவம் இந்தியாவில் இல்லை. ஆகவே ஆரியர் குடியேறியிருந்த இடங்களில் ஒருவிதமான ஜனநாயக அரசுமுறை அமலில் இருந்தது என்று சொல்லலாம். அதாவது ஆரியக் குடிகள் தங்கள் அரசாங்கத்தின்மீது ஓரளவுக்கு ஆதிக்கம் செலுத்த முடிந்தது.

இந்திய ஆரியர்களையும் கிரேக்க ஆரியர்களையும் ஒப்பிட்டுப் பார்க்கும்போது பல வேற்றுமைகளும் பல ஒற்றுமைகளும் காணப்படுகின்றன. இரண்டு இடங்களிலும் ஒருவிதமான ஜனநாயகம் இருந்துவந்தது. ஆனால் இந்த ஜனநாயக உரிமைகள் ஆரியர்களுக்கு மட்டுமே என்பதை நாம் நினைவில் வைக்கவேண்டும். அவர்களின் கீழ் அடிமைகளாக இருந்தவர்களுக்கும் அவர்களால் தாழ்ந்த ஜாதிகள் என்று ஒதுக்கிவைக்கப்பட்டவர்களுக்கும் ஜனநாயகமோ சுதந்தரமோ கிடையாது. தற்போது இருப்பதுபோல் பலநூறு வகைப்பட்ட ஜாதிப் பிரிவுகள் அப்போது இல்லை. அந்நாளில் இந்திய ஆரியர்களுக்குள் நாலு பிரிவுகள் அல்லது ஜாதிகள் இருந்தன. கற்றறிந்தோரும், குருக்கள்மாரும், ரிஷிகளும் பிராமணர் என்றும், நாட்டை ஆளுவோர் க்ஷத்திரியர் என்றும், வியாபாரம் செய்வோர் வைசியர் என்றும், ஊழியம் செய்வோரும் தொழிலாளர்களும் சூத்திரர் என்றும் அழைக்கப்பட்டார்கள். ஆகவே இப்பிரிவுகள் தொழில் வேற்றுமைபற்றி ஏற்பட்டவை என்று தெரிகிறது. தங்களால் ஜயிக்கப்

பட்ட மக்களிலிருந்து பிரிந்துவாழக் கருதி ஆரியர்கள் இந்த ஜாதிமுறையை ஏற்படுத்தி யிருந்தாலும் இருக்கலாம். ஆரியர்கள் தங்களைத் தவிர மற்றவர்கள் இழிந்தவர்கள் என்று கருதி இறுமாப்பும் வீண்பெருமையும் கொண்டிருந்ததோடு மற்றவரோடு தாங்கள் கலப்பதையும் விரும்பவில்லை. ஜாதிக்கு சம்ஸ்கிருதத்தில் வர்ணம் என்று பெயர். வர்ணம் என்றால் நிறம் என்று பொருள் படுகிறது. இதிலிருந்து ஆரியர்கள் இந்தியாவில் பூர்வீகமாக இருந்தவர்களைவிடச் சிவந்த மேனி படைத்திருந்தார்கள் என்று தெரிகிறது.

ஆகவே நாம் ஒரு விஷயம் ஞாபகத்தில் வைக்கவேண்டும். ஆரியர்கள் தொழிலாளி வகுப்பினரைக் கீழ்நிலையிலேயே வைத்து அவர்களுக்கு ஜனநாயகத்தில் யாதொரு பங்கும் அளிக்கவில்லை; ஆனால் தங்களுக்குள் அதிக சுதந்தரத்துடன் வாழ்ந்து வந்தார்கள். தங்களை ஆளும் அரசர்கள் தவறி நடக்க அவர்கள் விடுவதில்லை. தவறி நடக்கும் அரசன் உடனே பதவியிலிருந்து நீக்கப்படுவான். சாதாரணமாக க்ஷத்திரியர்கள்தாம் அரசு புரிவார்கள். ஆனால் சில சமயங்களில் யுத்தங்கள் ஏற்படும்போதும் இதர குழப்பங்கள் நேரும்போதும் கீழ் ஜாதியைச் சேர்ந்த சூத்திரனும் அரசனாக வருவதுண்டு. பிற்காலத்தில் ஆரியர்கள் சீர்கெட்டுப் போகவே அவர்களுடைய ஜாதிமுறையும் கொடுமையாக மாறியது. பல பிரிவுகள் ஏற்படவே நாடு வலிகுன்றி வீழ்ச்சி அடைந்தது. அவர்கள் தங்களுடைய பழைய சுதந்தர நாட்டத்தையும் இழந்தார்கள். ஏனெனில் ஆதி நாட்களில் ஆரியன் ஒருவன் எக்காரணத்தைக்கொண்டும் பிறருக்கு அடிமையாகக்கூடாது என்றும் அவனுக்கு மரணத்தைவிட மானமே மேல் என்றும் சொல்லப்பட்டு வந்தது.

ஆரியர்கள் குடியேறி அமைத்த பட்டணங்களும் கிராமங்களும் கண்டபடி உண்டாகவில்லை. வரையறுக்கப்பட்ட ஒரு திட்டத்தின்படியே அவைகள் ஏற்படுத்தப் பட்டன. க்ஷேத்திரகணிதம் என்று இப்போது நாம் அறிந்திருக்கும் கணிதத்தின்படி அத்திட்டங்கள் வகுக்கப் பட்டன. வைதிக பூஜைகளில் இப்போதுகூட ஹிந்து கிருகங்களில் நடைபெறும் பலவிதப் பூஜைகளில் இவைகளை உபயோகிக்கிறார்கள். க்ஷேத்திர கணித முத்திரைகளை அக்காலத்தில் உபயோகித்து வந்தார்கள். இப்போது க்ஷேத்திரகணிதம் வீடுகள் கட்டுவதற்கும் நகரங்கள் நிர்மாணிப்பதற்கும் அதிகமாக உபயோகப்பட்டு வருகிறது. பழைய ஆரிய கிராமம் முதல்முதலில் அரண் செய்யப்பட்ட ஒரு கோட்டைபோல இருந்திருக்க வேண்டும். ஏனெனில் அந்நாட்களில் பகைவர் தாக்குவார்கள் என்கிற பயம் சதா இருந்துவந்தது. அந்தப் பயம் இல்லாத போதும் பழைய திட்டமே அனுசரிக்கப்பட்டு வந்தது. அதாவது நாலுபக்கமும் சுவர்கள். ஒவ்வொரு பக்கத்திலும் பெரிய வாயில் ஒன்று; சிறிய வாயில் ஒன்று. இந்தச் சுவர்களுக்கு உட்புறத்தில் ஓர் ஒழுங்கை அனுசரித்து வீதிகளும் வீடுகளும் அமைந்திருந்தன. கிராமத்தின் மத்தியில் பஞ்சாயத்து வீடு அல்லது சாவடி இருக்கும். இந்தப் பொது இடத்தில் கிராமப் பெரியோர் கூடுவார்கள். சிறு கிராமங்களில் சாவடிக்குப் பதிலாக ஒரு பெரிய மரம் இருக்கும். வருஷந்தோறும் கிராமத்திலுள்ள சுதந்தர மக்கள் அனைவரும் கூடித் தங்கள் பஞ்சாயத்தைத் தேர்ந்தெடுப்பார்கள்.

கற்றறிந்தோர் பலர் பட்டணங்களுக்கும், கிராமங்களுக்கும், அருகிலுள்ள காடுகளுக்கும் சென்று எளிய வாழ்க்கை நடத்தித் தங்கள் அறிவைப் பெருக்கி வந்தார்கள். அவர்களைச் சுற்றிப் பல மாணுக்கர்கள் சேரத் தலைப்

பட்டார்கள். இவ்வாறு பல குருகுலங்கள் உண்டாயின. இக் குருகுலங்களைச் சர்வகலாசாலைகளுக்கு ஒப்பாகச் சொல்லலாம். அங்கே அருமையான கட்டிடங்கள் கிடையா; ஆயினும் கல்வியறிவை விரும்பியவர்கள் தொலைவான இடங்களிலிருந்து இக்குருகுலங்களுக்கு வந்து சேர்ந்தார்கள்.

ஆனந்த பவனுக்கு எதிரில் பரத்துவாசர் ஆசிரமம் இருப்பது உனக்குத் தெரியும். ராமாயண காலத்தில் பரத்துவாசர் பெரிய ரிஷியாக விளங்கியதும் ராம பிரான் தனது வனவாசத்தின்போது அவரைத் தரிசித்த தும் உனக்குத் தெரிந்திருக்கலாம். பரத்துவாச மகரிஷி யோடு ஆயிரக்கணக்கான சீடர்களும் மாணுக்கர்களும் வாழ்ந்துவந்ததாகச் சொல்லப்படுகிறது. பரத்துவாச ரைத் தலைவராகக் கொண்ட ஒரு பெரிய சர்வகலாசாலை என்று அவர் ஆசிரமத்தைச் சொல்லலாம். அவருடைய ஆசிரமம் கங்கைக்கரையில் இருந்தது. இப்போது கங்கை ஒரு மைலுக்கு அப்பால் ஓடினுலும் இது உண்மையாக இருந்திருக்கக்கூடும். நமது தோட்டத்தில் சில இடங்கள் அதிக மணலாக இருப்பதிலிருந்து கங்கை அந்நாளில் இங்கு ஓடியது என்று ஊகிக்கலாம்.

ஆரியர்கள் மிகவும் மேன்மைபெற்று விளங்கிய காலம் அது. துரதிருஷ்டவசமாக அக்காலத்தைப்பற்றிய சரித்திரம் நமக்குக் கிடைக்காததால் சரித்திரமல்லாத வேறு புத்தகங்களிலிருந்து உண்மைகளைத் தெரிந்து கொள்ளவேண்டி யிருக்கிறது. அந்நாளிலிருந்த ராஜ்யங்களும் குடியரசுகளும் வருமாறு: மகதம் (தெற்கு பீகார்), விதேகம் (வடக்கு பீகார்), காசி, கோசலம் - இதன் தலைநகரம் அயோத்தி (தற்காலத்தில் பைசாபாத் என்று வழங்குகிறது), பாஞ்சாலம் (கங்கைக்கும் யமுனைக்

கும் இடையில்). பாஞ்சால நாட்டில் மதுரை, கான்ய குப்ஜம் என்று இரு முக்கிய நகரங்கள் இருந்தன. இந் நகரங்கள் பிற்கால சரித்திரத்திலும் பெயர்பெற்று விளங்கின. இவ்விரு நகரங்கள் இன்றும் இருக்கின்றன. கான்யகுப்ஜ நகரம் கான்பூருக்கு அருகில் கன்னோசி என்ற பெயருடன் இருக்கிறது. அக்காலத்தில் உஜ்ஜயினி நகர மும் இருந்தது; அது இப்போது குவாலியர் சம்ஸ்தானத் தில் ஒரு சிறு பட்டணம்.

பாடலிபுத்திரம் அல்லது பாட்னுவுக்கருகில் வைசாலி என்கிற நகரம் இருந்தது. புராதன இந்திய சரித்திரத் தில் புகழ்பெற்ற லிச்சவி வம்சத்தாரின் தலைநகரம் அது. இவர்களுடைய ராஜ்யம் குடியரசாக இருந்தது. அந் நாட்டிலுள்ள பெரியோர்கள் சபைகூடித் தங்களுக்கு ஒரு தலைவன் அல்லது நாயகனைத் தேர்ந்தெடுத்துக் கொண்டு ஆண்டுவந்தார்கள்.

காலம் செல்லச் செல்ல, பெரிய பட்டணங்களும் நகரங்களும் தோன்றின. வியாபாரம் பெருகியது. தொழிலாளியின் கைத்திறமையும் வேலைப்பாடும் உயர்வு பெற்று விளங்கின. நகரங்கள் பெரிய வியாபார ஸ்தலங் களாக மாறின. காடுகளில் பிராமண ரிஷிகள் தங்கள் மாணுக்கர்களுடன் வாழ்ந்துவந்த ஆசிரமங்கள் பெரிய கலாசாலைப் பட்டணங்கள் ஆயின. இவ்வாசிரமங்களில் சகல வித்தைகளும் கற்றுக் கொடுக்கப்பட்டன. பிரா மணர்கள் வில்வித்தைகூடச் சொல்லிக் கொடுத்தார்கள். மகாபாரதக் கதையில் பாண்டவர்களின் குருவாக விளங் கியவர் துரோணுசாரியார் என்கிற பிராமணர். அவர் பல வித்தைகளோடு போர்புரியும் வித்தையையும் கற்றுக் கொடுத்ததை நீ அறிந்திருக்கலாம்.

# 11

## ஓராயிரம் வருஷத்திய சீன சரிதம்

ஜனவரி 16, 1931.

வெளியிலிருந்து கலக்கத்தையும் துக்கத்தையும் உண்டுபண்ணும் செய்தி கிடைத்திருக்கிறது. ஆயினும் அதைக் கேட்கப் பெருமையும் சந்தோஷமும் ஏற்படுகின்றன. ஷோலாப்பூர் ஜனங்களுக்கு நேரிட்ட கதியைப்பற்றிக் கேள்விப்பட்டோம். இந்தத் துக்கச் செய்தி பரவியதும் தேசம் முழுவதும் என்ன நடந்தது என்பதும் சிறிது தெரிய வந்தது. நம் இளைஞர்கள் தங்கள் உயிரைக் கொடுக்கிறார்கள்; ஆண்களும் பெண்களும் ஆயிரக்கணக்கில் மூர்க்கத்தனமான தடியடியை எதிர்த்து நிற்கிறார்கள். இந்தச் சமயத்தில் இங்கே சும்மா உட்கார்ந்திருப்பது எனக்குக் கஷ்டமாக இருக்கிறது. ஆயினும் இது நமக்கு ஒரு நல்ல பயிற்சி என்று எண்ணுகிறேன். நம்மில் ஒவ்வொருவருக்கும் தன்னைப் பரிபூரணமாகச் சோதித்து அறிந்துகொள்ளக்கூடிய காலம் வருமென்று நினைக்கிறேன். இதற்கிடையில் நம் ஜனங்கள் கஷ்டங்களை வரவேற்க எவ்வாறு அஞ்சாது செல்கிறார்கள் என்பதையும், பகைவனின் ஒவ்வொரு புதிய ஆயுதமும் அடியும் எவ்வாறு அவர்களுடைய தீரத்தையும் உறுதியையும் அதிகமாக்குகின்றன என்பதையும் அறிந்துகொள்வது பெரிய ஆறுதலாக இருக்கிறது.

நிகழ்காலத்துச் செய்திகள் மனத்தில் நிறைந்திருக்கும் போது மற்ற விஷயங்களைப்பற்றிச் சிந்திப்பது கஷ்டமாக இருக்கிறது. ஆனால் சும்மா பகற்கனவு கண்டுகொண்

டிருப்பதில் யாதொரு பலனும் இல்லை. நாம் உருவான வேலை செய்யவேண்டுமாயின் மனத்தை அடக்கவேண்டும். ஆகவே நாம் சிறிது நேரம் நம் கஷ்டங்களை மறந்து ஆதி காலங்களுக்குத் திரும்பிச் செல்வோமாக.

புராதன சரித்திரத்தில் இந்திய மாதாவுக்குச் சகோதரியாக விளங்கும் சீன மாதாவை எடுத்துக்கொள்வோம். சீனுவிலும் கிழக்கு ஆசியாவிலுள்ள ஜப்பான், கொரியா, இந்தோ-சீனு, *சையாம், பர்மா ஆகிய நாடுகளிலும் வாழ்பவர்கள் ஆரியர்கள் அல்ல. அவர்கள் மங்கோலிய வகுப்பைச் சேர்ந்தவர்கள்.

ஏறக்குறைய 5000 ஆண்டுகளுக்கு முன்பு மேற்கேயிருந்து சிலர் சீனுமீது படையெடுத்து வந்தார்கள். படையெடுத்து வந்தவர்கள் மத்திய ஆசியாவைச் சேர்ந்தவர்களே. அவர்கள் நாகரிகத்தில் சிறந்தவர்கள். உழவுத் தொழிலை அறிந்திருந்த அவர்கள் மந்தை மந்தையாக ஆடு மாடுகள் வைத்து வளர்த்து வந்தார்கள். அவர்கள் நல்ல வீடுகள் கட்டி அவற்றில் வாழ்ந்துவந்தார்கள். அவர்களுடைய சமூகம் நல்ல வளர்ச்சி அடைந்திருந்தது. அவர்கள் மஞ்சள் நதி என்று அழைக்கப்படும் ஹோயாங்-ஹோவுக்கு அருகில் குடியேறித் தங்கள் ராஜ்யத்தை அமைத்தார்கள். பல நூற்றாண்டுகளாகச் சீனு முழுவதும் பரவி, கலையிலும் கைத்தொழிலிலும் அபிவிருத்தி அடைந்து வந்தார்கள். சீனமக்கள் பெரும்பாலும் குடியானவர்கள். அவர்களுடைய தலைவர்களை நான் முன் கடிதங்களில் சொல்லியது போல நாட்டாண்மைக்காரர்கள் (Patriarchs) என்றே சொல்லவேண்டும். அறு நூறு அல்லது எழு நூறு வருஷங்களுக்குப் பிறகு - அதாவது இன்றைக்கு 4000 வருஷங்களுக்கு முன் யோ (Yao) என்னும் பெயருடைய ஒருவன் தன்னைச் சக்கரவர்த்தி

* இது இப்போது தாய்நாடு என வழங்குகிறது.

என்று சொல்லிக்கொண்டதாக அறிகிறோம். இந்தப் பட்டம் இருந்தாலும் அவனைச் சக்கரவர்த்தி என்று சொல்வதைவிட நாட்டாண்மைக்காரன் என்று கூறுவதே பொருத்தமாயிருக்கும். எகிப்திலும் மெசபொடேமியாவிலும் நாம் பார்த்த சக்கரவர்த்திகள் மாதிரி அல்ல இவன். சீனமக்கள் உழவையே மேற்கொண் டிருந்தார்கள். அந்நாளில் மத்திய அரசாங்கம் என்பது அவ்வளவாக உருப்பெறவில்லை.

இந்த நாட்டாண்மைக்காரர்கள் முதலில் தேர்ந்தெடுக்கப்பட்டு வந்ததையும் பிறகு பரம்பரையை ஒட்டி வந்ததையும் நான் உனக்குச் சொல்லியிருக்கிறேன். சீனுவிலும் இம்மாதிரி நடைபெறுவதைக் காண்கிறோம். யோவுக்குப் பின் அவன் மகன் பட்டத்துக்கு வரவில்லை. ஆனால் அவன் தனக்குப் பின் யாவரினும் திறமைசாலி என்று கருதப்பட்ட ஒருவனை நியமித்தான். சீக்கிரமே இப்பதவி பரம்பரைப்பாத்தியதையாக மாறிவிட்டது. 400 ஆண்டுகளுக்கு மேலாக இந்த ஹிசையா (Hsia) வம்சம் சீனுவை ஆண்டு வந்தது. இந்த வம்சத்தில் கடைசியாக வந்த அரசன் கொடியவனுக இருந்தபடியால் ஜனங்கள் புரட்சிசெய்து அவனை ஒழித்தார்கள். அதற்குப் பிறகு ஷாங் அல்லது இன் (Shang or Yin) வம்சம் அதிகாரத்துக்கு வந்து 650 ஆண்டுகள் அரசாண்டது.

ஒரு சிறிய பாராவில் இரண்டு மூன்று வாக்கியங்களில் சீனுவின் ஆயிரம் வருஷத்துச் சரித்திரத்தைச் சொல்லி முடித்துவிட்டேன். இது ஆச்சரியமல்லவா? நான் இங்கு இவ்வாறு ஒரு சிறிய பாராவில் அடக்கிச் சொன்னாலும் அதனால் அந்த 1000 அல்லது 1100 வருஷங்களின் கால அளவு குறைந்துவிடவில்லை என்பதை நீ உணரவேண்டும். நாட்கள், மாதங்கள், வருஷங்கள் என்று இவ்வாறு பார்ப்பது நமக்கு வழக்கம். ஒரு நூறு

வருஷங்களைப்பற்றிக்கூட நீ தெளிவாகத் தெரிந்து கொள்வது கடினம். உனக்கு வயது பதின்மூன்று. இந்தப் பதின்மூன்று வருஷங்களே உனக்குப் பெரிதாகத் தோன்ற வில்லையா? அப்படியிருக்கும்போது ஆயிரம் வருஷத்துச் சரித்திரத்தை நீ உன் மனத்தில் எப்படிப் பாவிக்க முடியும்? இது மிக நீண்ட காலம். பல தலைமுறைகள் ஒன்றன்பின் ஒன்று வந்து போகின்றன. சிறிய பட்டணங்கள் பெரிய நகரங்களாகிப் பின் அழிந்துபோகின்றன. அந்த இடத்தில் வேறு புதிய நகரங்கள் உண்டாகின்றன. கடந்த ஆயிரம் வருஷத்துச் சரித்திரத்தைச் சிந்தித்துப் பார்த்தால் இந்த ஆயிரம் வருஷத்தைப்பற்றி ஒருவாறு தெரிந்துகொள்ள லாம். கடந்த ஆயிரம் ஆண்டுகளில் உலகத்தில் எத்தனை ஆச்சரியப்படத்தக்க மாறுதல்கள் நிகழ்ந்திருக்கின்றன!

சீனாவின் சரித்திரமே ஒரு பேராச்சரியம். அந்நாட்டின் மிகப் பழைய கலாசாரம், அதை 500 வருஷம், 800 வருஷம் அதற்கு மேலுங்கூட ஆட்சிபுரிந்த அரச பரம்பரைகள் - எல்லாம் ஆச்சரியத்தைத் தருகின்றன.

நான் ஒரு சிறிய பாராவில் கூறிய இந்த 1100 ஆண்டுகளில் சீனா சிறிது சிறிதாக முன்னேறி வளர்ச்சி அடைந்திருப்பதை எண்ணிப் பார். நாட்டாண்மைக்காரரின் ஆட்சி கொஞ்சம் கொஞ்சமாக மறைந்து மத்திய அரசாங்கம் உருப்பெற்று வருகிறது. பிறகு நன்கு அமைக்கப்பட்ட அரசாங்கம் தோன்றுகிறது. இந்தப் புராதன காலத்தில்கூடச் சீனர்கள் எழுதக் கற்றிருந்தார்கள். ஆனால், அவர்கள், நாம் எழுதுவதைப்போலவோ, அல்லது இங்கிலீஷ் பிரெஞ்ச் எழுதப்படுவதைப்போலவோ எழுதுவதில்லை. இம்மாறுபட்ட முறை உனக்குத் தெரிந்ததே. சீன மொழிக்கு எழுத்துக்கள் இல்லை. படங்கள் அல்லது குறிகள்மூலம் எழுதப்படுகிறது.

ஷாங் வம்சம் 640 ஆண்டுகள் ஆண்டபின்பு ஒரு புரட்சி ஏற்பட்டதனால் கவிழ்ந்து போயிற்று. அதற்குப் பிறகு சௌ (Chou) வம்சம் என்றொரு புதிய வம்சம் அதிகாரத்தை அடைந்தது. இவ்வம்சம் 867 வருஷங்கள் ஆட்சிபுரிந்தது. இந்த ஆட்சியில்தான் சீன அரசாங்கம் நன்கு அமைக்கப்படலாயிற்று. இவர்களின் காலத்தில் தான் சீனாவின் இரண்டு பெரிய தத்துவ ஞானிகளான கன்பூஷியஸ் (Confucius), லௌ-ட்சே (Lao-Tse) என்பவர்கள் வாழ்ந்தனர். அவர்களைப்பற்றி விரிவாகப் பிறகு தெரிந்துகொள்வோம்.

ஷாங் வம்சம் அரசாட்சியினின்றும் விரட்டப்பட்டபொழுது அவர்களின்கீழ் வேலைபார்த்த உயர்ந்த உத்தியோகஸ்தர்களில் ஒருவனான கி-ட்சே (Ki-Tse) என்பவன் சௌ வம்சத்தின்கீழ் வாழ்வதைவிடக் காட்டுக்குப் போய் விடுவது மேல் என்று தீர்மானித்து 5000 பேருடன் சீனாவிலிருந்து கொரியாவுக்குப் போய்ச் சேர்ந்தான். அவன் அந்நாட்டைத் 'தேர்ந்தெடுக்கப்பட்ட நாடு' அல்லது 'காலை நேரத்துச் சாந்தி நிறைந்த நாடு' என்று அழைத்தான். கொரியா சீனாவுக்குக் கிழக்கே இருக்கிறது. ஆகவே கி-ட்சே உதய சூரியனை நோக்கிக் கிழக்கே சென்றான். அவன் கீழ்க்கோடியிலுள்ள நாட்டைத் தான் அடைந்து விட்டதாக எண்ணி அதற்கு அப்பெயரை இட்டான் போலும். கிறிஸ்து பிறப்பதற்கு முற்பட்ட 1100 வருஷங்களில் கொரியாவின் சரித்திரம் கி-ட்சே அங்குச் சென்றதிலிருந்து ஆரம்பமாகிறது. சீனக் கலைகளையும் கைத்தொழில்களையும் கி-ட்சே தன் புதிய நாட்டில் புகுத்தினான். உழவுத் தொழில், வீடு கட்டுதல், பட்டு நெய்தல் இவைகளெல்லாம் ஏற்பட்டன. கி-ட்சேயைத் தொடர்ந்து சீனாவிலிருந்து பலர் வந்தார்கள். கி-ட்சேயின் சந்ததியார் கொரியாவை 900 வருஷங்களுக்குமேல் ஆண்டனர்.

கொரியா கீழ்க்கோடி நாடல்ல. அதற்கும் கிழக்கே ஜப்பான் இருக்கிறது. கி-ட்சே கொரியாவுக்குச் சென்ற போது ஜப்பானில் என்ன நிகழ்ந்துகொண்டிருந்தது என்பது நமக்குத் தெரியவில்லை. ஜப்பானிய சரித்திரம் சீனுவைப்போல அல்லது கொரியாவைப்போல அவ்வளவு பழைமையானதல்ல. ஜப்பானியர்களின் முதல் சக்கரவர்த்தியாகிய ஜிம்மு டென்னோ (Jimmu Tenno) என்பவன் கிறிஸ்துவுக்கு 600 அல்லது 700 வருஷங்களுக்குமுன் ஆண்டதாக ஜப்பானியர்கள் சொல்லுகிறார்கள். அந்த முதல் சக்கரவர்த்தி சூரிய தேவதையினின்றும் உதித்ததாக அவர்கள் நம்புகிறார்கள். ஜப்பானில் சூரியனைப் பெண்பாலாகக் கருதுகிறார்கள். இப்போதுள்ள ஜப்பானியச் சக்கரவர்த்தி ஜிம்மு டென்னோவின் நேர்கால் வழியில் வந்தவரென்றும், ஆகவே சூரிய வம்சத்தைச் சேர்ந்தவரென்றும் பல ஜப்பானியர்கள் நம்புகிறார்கள்.

நம் தேசத்தவர்களான ராஜபுத்திரர்கள்கூடத் தாங்கள் சூரியனிலிருந்தும் சந்திரனிலிருந்தும் உதித்தவர்கள் என்று சொல்லிக்கொள்வதை நீ அறிவாய். சூரிய வம்சத்தவர், சந்திரவம்சத்தவர் என்று அவர்கள் அழைக்கப்படுகிறார்கள். உதயபுரி மகாராணு சூரிய குலத்தின் தலைவர். அவருடைய வம்சம் மிகவும் பழைமையானது என்று சொல்லப்படுகிறது. நம் ராஜபுத்திரர்கள் ஆச்சரியமானவர்கள். அவர்களுடைய வீர தீர பராக்கிரமங்களைப்பற்றிக் கூறும் கதைகளுக்கு அளவே இல்லை.

# 12

## சென்ற காலத்தின் அழைப்பு

ஜனவரி 17, 1931.

**2500** ஆண்டுகளுக்குமுன் உலகம் எவ்வாறு இருந்தது என்று ஒருவாறு கவனித்தோம். நாம் எடுத்துச் சொன்னது மிகவும் குறைவாகவும் சுருக்கமாகவும் இருக்கிறதென்றே சொல்லவேண்டும். நன்கு முன்னேற்றமடைந்த தேசங்களையும் திட்டமான சரித்திர ஆதாரம் உள்ள தேசங்களையுமே நாம் கவனித்து வருகிறோம். எகிப்தில் சமாதிக் கோபுரங்களையும், ஸ்பிங்சையும், இன்னும் இங்கு விவரிக்க முடியாத பல விஷயங்களையும் அளித்த அப் பெரிய நாகரிகத்தைப் பற்றிச் சிறிது மட்டுமே குறிப்பிட்டோம். இந்நாகரிகம் உன்னத நிலையிலிருந்த நாளும் உண்டு. ஆனால் நாம் கவனித்த ஆதி நாளிலேயே அது வீழ்ச்சியுறத் தலைப்பட்டுவிட்டது. நாசாசு நாகரிகமும் தன் அந்திய காலத்தை நெருங்கிக்கொண்டிருந்தது. சீனா பல நூற்றாண்டுகளில் வளர்ந்து பெரிய சாம்ராஜ்யமாக விளங்கியதையும், எழுதவும், பட்டாடைகள் நெய்யவும் இன்னும் பல அழகிய பொருள்கள் செய்யவும் அவர்கள் கற்றுக்கொண்ட விதத்தையும் பார்த்தோம். கொரியாவிலும் ஜப்பானிலும் சிறிது எட்டிப் பார்த்து என்ன நிகழ்ந்தது என்று தெரிந்துகொண்டோம். இந்தியாவில் மொஹெஞ்சோ-தாரோ தெரிவிக்கும் பழைய நாகரிகத்தைப் பற்றிக் குறிப்பிட்டோம்; திராவிடர்களுடைய நாகரிகத்தைப் பற்றியும் அவர்கள் வெளிநாடுகளோடு வர்த்தகம் செய்ததைப் பற்றியும் பேசினோம்; கடைசியாக

ஆரியர்களுடைய நாகரிகத்தையும் தெரிந்துகொண்டோம். ஆரியர்களின் மிகச் சிறந்த நூல்களாகிய வேதங்கள், உபநிஷதங்களைப் பற்றியும் இதிகாசங்களாகிய ராமாயண மகாபாரதங்களைப் பற்றியும் குறிப்பிட்டோம். ஆரியர்கள் வட இந்தியாவில் பரவுவதையும், தென் இந்தியாவுக்கும் சென்று திராவிடர்களோடு கலப்புற்றுச் சிறுபான்மை திராவிடக் கருத்துக்களும் பெரும்பான்மை ஆரியக் கருத்துக்களும் கொண்ட ஒரு புதிய நாகரிகத்தையும் கலைப்பண்பையும் சிருஷ்டி செய்வதையும் பார்த்தோம். ஜனநாயக முறையை அடிப்படையாகக் கொண்டு அவர்களுடைய கிராமங்கள் எவ்வாறு வளர்ந்து பட்டணங்களாகவும் நகரங்களாகவும் ஆயின என்றும், வனங்களிலே தோன்றிய ஆசிரமங்கள் எல்லாம் சர்வகலாசாலைகள் ஆயின என்றும் பார்த்தோம். மெசபொடேமியாவிலும் பாரசீகத்திலும் சாம்ராஜ்யங்கள் ஒவ்வொன்றாகத் தோன்றி மறைந்ததையும் பிற்காலத்தில் தோன்றிய டரையஸ் என்பவனுடைய சாம்ராஜ்யம் இந்தியாவில் சிந்துநதி வரையில் பரவியிருந்ததையும் கவனித்தோம். உலகத்தின் ஒரு மூலையில், பாலஸ்தீனத்திலே வாழ்ந்து கொண்டு எண்ணிக்கையில் குறைந்தவர்களானாலும் நமது கவனத்தை அதிகமாகக் கவர்ந்த எபிரேயர்களைப் (Hebrews) பற்றியும் சொன்னோம். மன்னாதிமன்னர்களை யெல்லாம் உலகம் மறந்துவிட்டது. எபிரேயர்களின் அரசர்களான தாவீதைப் பற்றியும் சாலமோனைப் பற்றியும் கிறிஸ்தவ வேதப் புத்தகம் பைபில் கூறுவதால் நாம் அவர்களை மறக்க முடியவில்லை. கிரீஸில் பழைய நாகரிகமாகிய நாசாசு நாகரிகம் அழிந்துபட, அதன்மீது புதிய ஆரிய நாகரிகம் தோன்றி வளர்வதைப் பார்த்தோம். நகர-ராஜ்யங்கள் வளர்ச்சி அடைகின்றன. கிரேக்கர்கள் மத்தியதரைக் கடலின் ஓரங்களில் குடியேறுகிறார்கள்.

பிற்காலத்தில் பேர்பெற்று விளங்கவிருக்கும் ரோமா புரியும் அதன் கொடிய விரோதியாகிய கார்தேஜ் நகரமும் சரித்திரவானில் உதயம் செய்கின்றன.

நான் மேற்கூறிய விஷயங்களைப் பூரணமாக ஆராய்ந்து பார்த்துவிட்டதாகச் சொல்ல முடியாது. வட ஐரோப்பிய நாடுகளைப் பற்றியும் தென் கிழக்கு ஆசியாவி லுள்ள நாடுகளைப் பற்றியும் நான் உனக்கு ஒன்றும் சொல்லவில்லை. அவைகளைப் பற்றியும் சொல்லியிருக்க லாம். நான் பேசிக்கொண்டிருக்கும் இவ்வாதிகாலத்தி லேயே தென் இந்தியர்கள் துணிச்சலுடன் வங்காள குடாக்கடலைக் கடந்து மலாய் நாட்டுக்கும் அதற்குத் தெற்கிலுள்ள தீவுகளுக்கும் சென்றிருக்கிறார்கள். ஆனால் எங்காவது ஓரிடத்தில் நிறுத்திக் கொள்ளாவிட்டால் கதை வளர்ந்துகொண்டே போகும்.

நாம் பார்த்த நாடுகள் புராதன உலகத்தைச் சேர்ந்த நாடுகள் என்று கருதப்படுகின்றன. அந்நாளில் ஒரு நாட் டுக்கும் இன்னொரு நாட்டுக்கும் இடையே அதிகப் போக்கு வரத்து இல்லை என்பதை நாம் நினைவில் வைக்க வேண்டும். நெஞ்சுத் துணிவு படைத்த மாலுமிகள் கடல்கடந்து சென்றார்கள்; வேறு சிலர் வியாபார நிமித்தமாகவும் இதர காரியங்களுக்காகவும் தரை மார்க்க மாக நீண்ட பிரயாணம் செய்தார்கள். இப்பிரயாணங் களிலே அபாயம் அதிகமாக இருந்ததால் இவை மிகவும் அருமையாக இருந்திருக்க வேண்டும். பூகோள சாஸ்திர ஞானம் அக்காலத்தில் அவ்வளவாக இல்லை. பூமி உருண்டை வடிவமானதென்று யாருக்கும் தெரியாது. அது தட்டையானதென்றே எல்லாரும் நம்பினார்கள். தங்கள் தங்கள் நாடுகளுக்குச் சமீபமாயுள்ள நாடுகளைத் தவிர வேற்று நாடுகளைப் பற்றி யாருக்கும் ஒன்றும் தெரியாது. எப்படியென்றால் கிரேக்கர்களுக்கு இந்தியாவைப்பற்றி

யும் சீனுவைப் பற்றியும் ஒன்றும் தெரியாது ; அதேபோல இந்தியர்களுக்கும் சீனர்களுக்கும் மத்தியதரைக் கடல் நாடுகளைப் பற்றி ஒன்றும் தெரியாது.

உலகம் பழைய காலத்தில் இருந்த நிலைமையைக் காட்டும் படம் ஒன்று கிடைத்தால் அதைப் பார். பழைய காலத்தவர் உலகத்தைப் பற்றிச் சொல்லியிருக்கும் சில வர்ணனைகளும் எழுதியிருக்கும் படங்களும் வேடிக்கையாயிருக்கின்றன. அந்தப் படங்களில் சில தேசங்களுக்கு விசித்திரமான வடிவங்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. ஆதிகாலத்தைப் பற்றி இப்போது தயாரிக்கப்பட்டிருக்கும் படங்கள் பழைய படங்களைவிட மிகவும் உதவியாயிருக்கின்றன. ஆதிகாலத்தைப் பற்றி வாசிக்கும்போது நீ அத்தகைய படங்களைப் பார்ப்பாய் என்று நம்புகிறேன். படத்தின் உதவியின்றி நாம் உண்மையான சரித்திரத்தை அறிய முடியாது. சரித்திரத்தைக் கற்பதற்கே பல தேசப் படங்களும் சித்திரங்களும் வேண்டும். பழைய கட்டிடங்கள், பாழிடங்கள் இவை போன்றவைகளைக் காட்டும் படங்கள் சரித்திரத்துக்கு உடலும் உயிரும் கொடுக்கின்றன. சரித்திரம் கற்றுப் பயனடைய வேண்டுமானல் நாம் அதை வாசிக்கும்போது நம் மனக்கண் முன்பாக அச்சரித்திர நிகழ்ச்சிகள் நேரில் நடப்பது போன்ற ஒரு தோற்றம் உண்டாகவேண்டும். நமது உள்ளத்தையும் உணர்வையும் ஒருங்கே கவர்ந்து பிணிக்கும் நாடகம் போன்று அது இருக்கவேண்டும். அந்நாடகத்துக்கு உலகமே அரங்கம்; பழைய காலத்து மகாபுருஷர்களே நடிகர்கள். அந்நாடகம் சில சமயங்களில் சந்தோஷத்தில் முடியும். அநேகமாகச் சோகம் நிறைந்த முடிவே அதில் அதிகமாயிருக்கும்.

சரித்திரக் காட்சிகளை உள்ளபடி அறிவதற்கு ஓவியங்களும் தேசப் படங்களும் உதவி புரிகின்றன. நம் சிறுவர் சிறுமியர் ஒவ்வொருவருக்கும் அவை கிடைக்க

வேண்டும். ஆனால் அதைவிடப் புராதன சரித்திரச் சின்னங்கள் அழிவுற்றுக் கிடக்கும் இடங்களுக்கு நேரில் போய்ப் பார்ப்பது நல்லது. இவைகள் உலகம் முழுவதும் பரவிக் கிடப்பதால் நாம் எல்லாவற்றையும் பார்க்க முடியாது. ஆனால் நாம் அக்கறையுடன் ஆராய்ந்து பார்த்தால் நமக்கு அருகிலேயே கடந்தகாலச் சின்னங்கள் அகப்படாமல் போகா. பெரிய பொருட்காட்சிச் சாலைகளில் அளவில் சிறிய புராதனச் சின்னங்களைச் சேகரித்து வைத்திருக்கிறார்கள். இந்தியாவில் இறந்த கால சரித்திரத்தை அறிவிக்கும் சின்னங்கள் பல இருக்கின்றன; ஆனால் மிகவும் பழைய காலத்தைப் பற்றியவை குறைவாயிருக்கின்றன. இதுவரையிலும் நாம் அறிந்திருப்பவை மொஹெஞ்சோ—தாரோவிலும் ஹரப்பாவிலும் கிடைத்திருப்பவைகளே. சூரிய வெப்பத்தால் பல பழைய கட்டிடங்கள் மட்கி மண்ணோடு மண்ணாய்ப் போயிருக்கலாம். அல்லது பூமிக்கடியில் இன்னும் பல இருக்கலாம். தோண்டிப் பார்த்தால் தெரியும். நாம் பூமியைத் தோண்டிப் பழைய சின்னங்களையும் கல்வெட்டுகளையும் கண்டு பிடித்தோமானால் நமது தேசத்தின் தொல்பெருங் கதையைக் கொஞ்சம் கொஞ்சமாகத் தெரிந்துகொள்ளலாம். கல்லும் சுண்ணாம்பும் சொல்லும் கதையிலிருந்து நம் மூதாதைகள் மிகமிகப் பழைய காலத்தில் எவ்வாறு வாழ்ந்தார்கள் என்று தெரிந்துகொள்ளலாம்.

நீ டில்லிக்கு அருகிலுள்ள சில பாழிடங்களையும் பழைய கட்டிடங்களையும் பார்த்திருக்கிறாய். அவைகளை நீ மறுபடியும் பார்க்கும்போது பழைய காலத்தை நினைவு கூர்ந்து பார். சரித்திரத்தைப் புத்தகத்தினின்று அறிந்து கொள்வதைவிட அதிகமாக அவற்றினின்று அறிந்து கொள்ளலாம். மகாபாரத காலத்திலிருந்து டில்லியிலும் டில்லிக்கருகிலும் வாழ்ந்த மக்கள் டில்லியைப் பல பேரிட்டு அழைத்திருக்கிறார்கள். இந்திரப் பிரஸ்தம்,

அஸ்தினபுரம், துக்லகாபாத், ஷாஜஹானபாத் இத்யாதி. அதன் எல்லாப் பெயர்களும் எனக்குத் தெரியா. யமுனை நதி இடம் மாறி மாறிச் சென்றபோதெல்லாம் டில்லி நகரமும் ஏழு இடங்களுக்கு மாறியதாகக் கர்ணபரம்பரை கூறுகிறது. நாம் இப்போது எட்டாவது டில்லியைப் பார்க்கிறோம். அது 'ரைஸினு' அல்லது புது டில்லி என்ற பெயரோடு நம்மை ஆளுபவருடைய ஆஞ்ஞையினால் மேலே கிளம்புகிறது. சாம்ராஜ்யத்திற்குப் பின் சாம் ராஜ்யம் டில்லியிலேயே செழித்தோங்கி அங்கேயே அழிந்திருக்கின்றன.

நகரங்களில் மிகவும் பழமையான காசிக்குச் சென்று அது என்ன சொல்லுகிறது என்பதைக் காது கொடுத்துக் கேள். நினைவுக்கு எட்டாத நாளிலிருந்து அது தனது பழைய சரித்திரத்தைச் சொல்லத் தொடங்கும். சாம் ராஜ்யங்கள் பல அழிந்தும் தான் மட்டும் அழியாது நிற் பதையும், புத்தன் தோன்றித் தனது புதிய கொள்கை யைப் பிரசாரம் செய்ததையும், அநாதிகாலமாகக் கோடிக் கணக்கான மக்கள் அமைதியும் ஆறுதலும் பெறுதற்குத் தன்னை நாடி வருவதையும் அது எடுத்துச் சொல்லும். மூத்து, நரைத்து, வலிகுன்றி, மாசுபடிந்து, துர்நாற்றம் வீசும் காசி நகரம் எத்தனை உயிருடனும் யுகயுகாந்தரங் களாக வரும் உரத்துடனும் விளங்குகிறது! காசி—ஆஹா, அதன் வியப்பையும் மனங்கவர் வளப்பையும் என்னென் பேன்! காசியின் கண்களிலே இந்தியாவின் இறந்த காலத் தைக் காண்கிறோம்; கங்கையின் சலசலப்பிலே கடந்த காலத்தின் குரலைக் கேட்கிறோம்!

இன்னும் சமீபத்தில் பிரயாகையில் அதாவது நமது அலகாபாத் நகரிலுள்ள அசோகன் தூணைச் சென்று பார். அசோகன் ஆணையினால் அதன்மீது பொறிக்கப் பட்டிருக்கும் எழுத்துக்களை வாசித்தால் 2000 ஆண்டு களுக்கு முன்னால் அசோக மகாராஜா பேசியதைக் கேட்கலாம்.

# 13

## செல்வம் எங்கே செல்கிறது?

ஜனவரி 18, 1931.

நீ முசூரியிலிருந்தபோது நான் உனக்கு எழுதிய கடிதங்களில் மனிதன் முன்னேற்றம் அடைய அடைய எப்படிப் பல வகுப்புக்கள் தோன்றின என்று சொல்லியிருக்கிறேன். ஆதிகாலத்து மனிதர் வயிற்றுச் சோற்றுக்குக்கூடக் கஷ்டப்பட்டுப் பாடுபடவேண்டி யிருந்தது. அவர்கள் நாள்தோறும் வேட்டையாடினார்கள்; பழங்களையும் கொட்டைகளையும் சேகரித்தார்கள்; உணவைத் தேடி இடந்தோறும் அலைந்து திரிந்தார்கள். பிறகு நாளடைவில் கூட்டம் கூட்டமாகச் சேர ஆரம்பித்தார்கள். இக்கூட்டங்களைப் பெரிய குடும்பங்கள் என்றே சொல்ல வேண்டும். தனியாக இருப்பதைவிடக் கூடியிருப்பதில் பாதுகாப்பு அதிகமென்று கருதி அவர்கள் சேர்ந்து வாழ்ந்தும் வேட்டையாடியும் வந்தார்கள். பிறகு ஒரு பெரிய மாறுதல் ஏற்பட்டது. உழவுத் தொழில் கண்டுபிடிக்கப் பட்டது. இது பழைய நிலைமையை அடியோடு மாற்றிவிட்டது. காலம் முழுவதும் வேட்டையாடிப் பிழைப்பதைவிட நிலத்தை உழுது பிழைப்பது மிகவும் சுலபம் என்று ஜனங்கள் கண்டுகொண்டார்கள். நிலத்தை உழுதல், விதைத்தல், அறுத்தல் முதலியன செய்வதற்கு ஓரிடத்தில் குடியிருக்க வேண்டும். பழையபடி கண்ட கண்ட இடங்களில் அலைந்து திரிய முடியாது. ஆகவே அவர்கள் தங்கள் தங்கள் நிலங்களுக்கு அருகில் நிரந்தரமாக வாழவேண்டி நேரிட்டது. இவ்வாறு ஊர்களும் பட்டணங்களும் உண்டாயின.

விவசாயத்தினுல் வேறு பல மாறுதல்களும் விளைந்தன. நிலத்திலிருந்து விளைந்த உணவுப்பொருள் முழுவதையும் அவ்வப்பொழுதே உபயோகித்துவிட முடியாமையால் மிச்சம் ஏற்படலாயிற்று. இம்மிச்சத்தை அவர்கள் சேமித்து வைத்தார்கள். வேட்டையாடிப் பிழைத்த பழைய வாழ்க்கையைவிட இவ்வித வாழ்க்கையில் சிக்கல்கள் சற்று அதிகமாயின. சில வகுப்பார் வயல்களிலும் பிற இடங்களிலும் வேலை செய்ய, வேறு சில வகுப்பார் அந்த வேலையை மேற்பார்வை செய்து நிர்வகிக்கத் தலைப்பட்டார்கள். இந்த நிர்வாகிகளும் நிர்மாணிப்போரும் சிறிது சிறிதாகப் பலம் பெற்று நாட்டாண்மைக்காரர்களாகவும் (Patriarchs), சிற்றரசர் (Rulers) களாகவும், அரசர்களாகவும், பிரபுக் (Nobles) களாகவும் ஆகிவிட்டார்கள். அவர்கள் கையில் அதிகாரம் இருந்தபடியால் விளைந்த உணவுப் பொருளில் செல வழிந்தது போக மிகுதியில் பெரும்பாகத்தைத் தங்களுக்கென்று வைத்துக்கொண்டார்கள். இவ்வாறு இவர்கள் செல்வம் அதிகரித்துவர, வயல்களில் வேலை செய்து வந்தவர்களுக்கு உயிர் வாழ்வதற்கு மட்டும் போதிய உணவு கிடைத்து வந்தது. பிற்பாடு இந்த நிர்வாகிகளும் நிர்மாணிப்போரும் தங்கள் வேலையைச் செய்வதற்குக் கூடத் திறமையற்றவர்களாகவும் சோம்பேறிகளாகவும் ஆனுர்கள். அவர்கள் ஒரு தொழிலும் செய்யாமல் தொழிலாளிகளின் உழைப்பினுல் விளைந்த உணவில் பெரும்பகுதியைத் தங்களுக்கென்று எடுத்துக்கொள்வதில் மட்டும் அக்கறை காட்டி வந்தார்கள். தாங்கள் ஒன்றும் செய்யாமல் பிறருடைய உழைப்பினுல் வாழ்வதற்குத் தங்களுக்கு உரிமை உண்டு என்று அவர்கள் நினைக்க ஆரம்பித்தார்கள்.

ஆகவே மனிதர்கள் உழுதுண்டு வாழத் தலைப்பட்ட பிறகு அவர்கள் வாழ்க்கையில் எவ்வளவு பெரிய மாறுதல் நிகழ்ந்தது என்று தெரிகிறதல்லவா? உணவு தேடும் முறையை அபிவிருத்தி செய்து அது எளிதில் கிடைக்கும் படி செய்த காரணத்தால் உழவுத் தொழில் மனித சமூகத்தின் அடிப்படையை அடியோடு மாற்றிவிட்டது. அதனால் ஜனங்களுக்கு ஒழிவு கிடைத்தது. வெவ்வேறு வகுப்புக்கள் தோன்றின. ஒவ்வொருவரும் தமக்கு வேண்டிய உணவைத் தாமே தேடவேண்டும் என்கிற அவசியம் இல்லாததால் சிலர் வேறு வேலைகள் செய்ய முடிந்தது. பலவிதத் தொழில்களும் கைத்தொழில்களும் தோன்றின. அதிகாரம் மட்டும் எல்லாவற்றையும் நிர்வகிக்கும் வகுப்பாரிடையே இருந்தது.

பிற்கால சரித்திரத்திலும், உணவையும் பிற தேவை களையும் உற்பத்தி செய்வதற்குப் புதிய முறைகள் கண்டு பிடிக்கப்பட்ட காரணத்தால் பெரிய மாறுதல்கள் நிகழ்ந் திருப்பதை நீ காணலாம்.

உணவைப் போலவே மனிதன் வேறு பல பொருள் களையும் விரும்ப ஆரம்பித்தான். ஆகவே உற்பத்தி முறைகளில் ஏற்படும் பெரிய மாறுதல்கள் சமூகத்திலும் பெரிய மாறுதல்களை உண்டுபண்ணின. இதற்கு ஒரு நல்ல உதாரணம் சொல்லுகிறேன். நீராவியின் சக்தி கண்டுபிடிக்கப்பட்டதும் தொழிற்சாலைகளுக்கு அதை உபயோகிக்க ஆரம்பித்தார்கள். நீராவியின் உதவியால் ரெயில் வண்டிகளும் கப்பல்களுங்கூட இயங்கலா யின. இதனால் பொருள்களை உற்பத்தி செய்யும் முறை யிலும் விநியோகிக்கும் முறையிலும் பெரிய மாறுதல் ஏற் பட்டது. தொழிலாளி சாதாரணக் கருவிகளைக்கொண்டு கையினால் செய்வதைவிட வெகு விரைவாக நீராவித் தொழிற்சாலைகள் பல பொருள்களை உற்பத்தி செய்ய

முடிந்தது. இயந்திரம் உண்மையில் ஒரு பெரிய கருவியே ஆகும். ரெயில் மார்க்கமாகவும் நீராவிக் கப்பல்கள் மூலமாகவும் உணவுப் பொருள்களும் தொழிற்சாலைகளில் உற்பத்தி செய்யப்பட்ட பொருள்களும் தூர தேசங்களுக்கு விரைவில் போய்ச் சேர்ந்தன. இம்முறை உலகம் பூராவும் எவ்வித மாறுதலை விளைவித்திருக்க வேண்டுமென்பதை நீ எளிதில் அறியலாம்.

உலகில் உணவுப்பொருள்களையும் மற்றப் பொருள்களையும் மேலும் மேலும் விரைவாக உற்பத்தி செய்யும் புதிய சாதனங்கள் அவ்வப்போது கண்டுபிடிக்கப்பட்டு வருகின்றன. சிறந்த உற்பத்தி முறைகளைக் கையாளுவதால் உற்பத்தி மிகவும் அதிகரிக்குமென்றும், அதனால் உலகின் செல்வநிலை உயர்ந்து எல்லோருக்கும் க்ஷேமம் உண்டாகும் என்றும் நீ நினைக்கலாம். ஓரளவுக்கு நீ நினைப்பது சரி; ஓரளவுக்குச் சரியல்ல. உற்பத்தி முறைகள் விருத்தியடைய அடைய உலகத்தில் செல்வம் பெருகியிருக்கிறதென்பதில் ஆட்சேபம் இல்லை. ஆனால் உலகில் யாரிடம் அச்செல்வம் சென்று தங்கியிருக்கிறது? நமது தேசத்தில் மிகுந்த ஏழைமையும் துன்பமும் இருப்பது நன்ருகத் தெரிகிறது. ஆனால் பணக்கார தேசமாகிய இங்கிலாந்தில்கூட நிலைமை இம்மாதிரிதான் இருக்கிறது. ஏன் இவ்விதம் இருக்கவேண்டும்? செல்வமெல்லாம் எங்கே செல்கிறது? தினேதினே செல்வம் வளர்ந்து கொண்டே இருக்க ஏழைகள் ஏழைகளாகவே இருப்பது ஆச்சரியமாயில்லையா? சில தேசங்களில் ஏழைகள் சிறிது நலம் பெற்றிருக்கிருர்கள். ஆனால் உற்பத்தியாயிருக்கும் புதிய செல்வத்தோடு அதை ஒப்பிட்டுப் பார்க்கும்போது அவர்கள் அடைந்திருப்பது மிகவும் சொற்பமே. இச் செல்வம் பெரும்பாலும் யாரிடம் செல்கிறதென்று நாம் எளிதில் தெரிந்துகொள்ளலாம். வழக்கம்போல் நிர்வா

கிகளும் நிர்மாணிப்போரும் நல்ல பொருள்கள் எல்லா வற்றிலும் பெரும்பகுதியை எடுத்துக்கொள்ளுகிருர்கள். இதைவிட ஆச்சரியம் என்னவென்ருல் பிறர் உழைப்பின் பயனில் பெரும் பகுதியை எடுத்துக்கொள்ளும் இவ்வகுப் பினர் வேலை செய்வதாகப் பாவனைகூடச் செய்வதில்லை. இன்னும் என்ன? நான் சொன்னுல் அதை நீ நம்புவாயா? இந்தச் சோம்பேறி வகுப்பினர்தாம் மற்றவர்களால் கௌரவிக்கப்படுகிருர்கள். சில மடையர்கள், ஒருவன் தன் ஜீவனத்திற்காக உழைப்பது இழிவென்று கருதுகிருர்கள்! உலகில் எல்லாம் இவ்வாறு தலைகீழ்ப் பாடமாயிருக்கிறது. நிலத்தில் பாடுபட்டும் தொழிற்சாலையில் வேலை செய்தும் உலகத்துக்கு உணவையும் செல்வத்தையும் அளிக்கும் குடியானவனும் தொழிலாளியும் ஏழைகளாக இருப்பதில் ஏதேனும் ஆச்சரியமுண்டா? நமது தேசத்துக்குச் சுதந்தரம் வேண்டுமென்று நாம் கேட்கிருேம். ஆனல் இப்போதிருக்கும் தலைகீழ்ப் பாடத்தை ஒழித்து உழைப் பின் பயனை உழைப்பவனுக்கு அளிக்க முடியாவிட்டால் சுதந்தரத்தினுல் யாது பயன்? அரசியலைப் பற்றியும் அரசாங்கத்தை நடத்தும் முறையைப் பற்றியும் பொருளி யலைப் பற்றியும் தேசத்தின் செல்வம் எவ்வாறு விநியோகிக் கப்பட வேண்டுமென்பது பற்றியும் பெரிய பெரிய புத்தகங்கள் எழுதப்பட் டிருக்கின்றன. கற்றறிந்த ஆசிரியர்கள் இவைகளைப் பற்றிப் பேசுகிருர்கள். இம்மாதிரி பேச்சும் விவாதமும் நடந்துகொண்டிருக்கும் போது உழைப்பவர்கள் கஷ்டப்பட்டுக்கொண்டே இருக் கிருர்கள். இருநூறு ஆண்டுகளுக்கு முன்பு வாழ்ந்த புகழ்பெற்ற பிரெஞ்சு ஆசிரியராகிய வால்டேர் என்பவர் அரசியல்வாதிகளைப் பற்றிப் பின்வருமாறு கூறினர்: "நெற்றி வேர்வை நிலத்தில் விழ உழுது பாடுபட்டுப் பிறர் உயிர் வாழ உதவி புரியும் மக்களைப் பசியினுல் சாக

அடிக்கும் முறையை இவர்கள் தங்களுடைய அருமையான அரசியலில் கண்டுபிடித்திருக்கிறார்கள்."

ஆதிகாலத்து மனிதன் சிறிது சிறிதாக இயற்கையை ஆக்கிரமணம் செய்து முன்னேறினான். காட்டை அழித்து வீட்டைக் கட்டி நிலத்தைப் பண்படுத்தினான். ஓரளவுக்கு மனிதன் இயற்கையை வென்றுவிட்டதாகக் கருதப்படுகிறது. இயற்கையை வெற்றி கொண்டுவிட்டதாகப் பலர் பேசுகிறார்கள். இது வெறும் பேச்சு; இது சரியல்ல. மனிதன் இயற்கையை அதிகமாக உணர உணர, அதனுடன் அதிகமாக ஒத்துழைத்து அதைத் தன் காரியங்களுக்குப் பயன்படுத்திக்கொண்டான் என்று சொல்வது பொருத்தமாயிருக்கும். பழைய காலத்தில் மனிதர் இயற்கையையும் இயற்கையின் தோற்ற வேறுபாடுகளையும் கண்டு அஞ்சினர். அவர்கள் இயற்கையை உணர முயலாமல், ஒரு காட்டு மிருகத்தைச் சமாதானம் செய்து சந்தோஷப்படுத்துவதுபோல, அதற்குப் பூஜை செய்து வணங்க ஆரம்பித்தார்கள். இடியும் மின்னலும் கொள்ளை நோய்களும் அவர்களை அச்சுறுத்தின. பொங்கலிட்டுப் பூசை செய்வதே இவைகளைத் தடுப்பதற்கு வழி என்று அவர்கள் எண்ணினார்கள். சூரிய கிரகணமோ, சந்திர கிரகணமோ ஏற்பட்டால் அதைப் பெரிய பீடை என்று பலர் தெரியாமல் நினைக்கிறார்கள். அது ஒரு சாதாரண இயற்கை நிகழ்ச்சி என்று அறிந்துகொள்ளாமல் ஜனங்கள் அதைப்பற்றி வீணே கவலைப்பட்டுக் குளித்து முழுகிப் பட்டினியிருந்து சூரியனையும் சந்திரனையும் காப்பாற்ற முற்படுகிறார்கள்! சூரியனும் சந்திரனும் தங்களைக் காப்பாற்றிக்கொள்ளும் வல்லமை பெற்றிருக்கின்றன. நாம் அவைகளைப் பற்றிக் கவலைப்பட வேண்டியதில்லை.

மக்கள் கிராமங்களிலும் பட்டணங்களிலும் குடியேறி வாழ ஆரம்பித்தவுடன் கலைநாகரிகங்கள் தோன்றி வளர்வதைப் பார்த்தோம். உணவுப் பொருள் அதிகமாகக் கிடைக்கவே ஒழிவு நேரமும் அதிகமாயிற்று. வேட்டையாடுவதிலும் சாப்பிடுவதிலுமே பொழுதைப் போக்காமல் வேறு விஷயங்களைப் பற்றியும் அவர்கள் சிந்திக்க ஆரம்பித்தார்கள். சிந்தனை வளர வளரக் கைத்தொழில்களும், சித்திர வேலைப்பாடுகளும், கலைகளும் சிறிது சிறிதாக வளர ஆரம்பித்தன. ஜனத்தொகை பெருகவே ஒருவருக்கொருவர் நெருங்கி வாழ நேரிட்டது. பல காரியங்களின் நிமித்தம் சதா ஒருவரையொருவர் சந்தித்துப் பழகி வந்தார்கள். ஜனங்கள் சேர்ந்து வாழ வேண்டுமானால் ஒருவர் மற்றவர் மனத்தை அறிந்து ஒழுக வேண்டும். அண்டை அயலவர், தோழர்கள் ஆகியோருடைய மனம் புண்படும்படியான காரியத்தைச் செய்யக் கூடாது. இல்லாவிட்டால் சமுதாய வாழ்வு நடைபெற முடியாது. உதாரணமாக, ஒரு குடும்பத்தை எடுத்துக் கொள். குடும்பம் ஒரு சிறு சமூகம் மாதிரி. ஒரு குடும்பம் சந்தோஷமாக வாழ்க்கை நடத்த வேண்டுமானால் அதைச் சேர்ந்தவர்கள் ஒருவரோடொருவர் இணங்கி நடக்க வேண்டும். ஒரு குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் அன்பினால் பிணைக்கப்பட்டிருப்பதால் இது கஷ்டமல்ல. அப்படியிருந்தும் சில சமயங்களில் நாம் அதை மறந்து அநாகரிகமாக நடந்துகொள்ளுகிறோம். குடும்பத்தைவிட ஒரு பெரிய கூட்டத்திற்கும் இது பொருந்தும்—நமக்கு அருகில் வாழ்வோர், நமது நகரத்தைச் சேர்ந்தவர்கள், நம் தேசமக்கள், இன்னும் மற்ற நாட்டவர் எல்லாருக்கும் இது பொதுவானது. ஆகவே ஜனப் பெருக்கம் ஏற்பட்டதால் சிநேக பாவத்தோடும் தன்னடக்கத்தோடும் பிறர் மனமறிந்து நடக்கும்படி நேரிட்டது. பண்பு நாகரிகங்கள்

என்பன இன்ன இன்னவை என்று உறுதியிட்டுச் சொல்வது கடினம். நான் அக்காரியத்தை மேற்கொள்ளப் போவதும் இல்லை. பண்பாடெனப்படுவதில் பல அம்சங்கள் இருந்தபோதிலும், நிச்சயம், தன்னடக்கமும் விட்டுக் கொடுக்கும் தன்மையும் சேர்ந்திருக்கின்றன. ஒருவன் தன்னை அடக்கிப் பிறர் மனதறிந்து ஒழுகானாயின் அவனை நாகரிகமற்றவன் என்று சந்தேகமின்றிச் சொல்லலாம்.

# 14

## கி. மு. ஆருவது நூற்ருண்டும் மதமும்

ஜனவரி 20, 1931.

நீண்ட சரித்திரப் பாதையிலே நடந்து செல்வோமாக! 2500 ஆண்டுகளுக்குமுன் அதாவது கிறிஸ்து பிறப்பதற்கு 600 ஆண்டுகளுக்குமுன் ஒரு முக்கியமான கட்டத்தை அடைந்தோம். இதைச் சரியான தேதியென்று எடுத்துக்கொள்ளக் கூடாது. உத்தேசமாக ஒரு காலத்தைக் குறிப்பிட்டேன். இந்தக் காலத்தில் பல்வேறு நாடுகளிலும் பல மகான்களும், ஞானிகளும், மதஸ்தாபகர்களும் தோன்றுவதைக் காண்கிருேம். கிழக்கே சீனு இந்தியாவிலிருந்து, மேற்கே பாரசீகம் கிரீஸ் வரையில் இவர்கள் தோன்றிஞர்கள். இவர்கள் எல்லாரும் ஒரே காலத்தில் வாழ்ந்தவர்களல்ல. ஆனுல் சற்றேறக்குறைய நெருங்கிய காலத்தில் அவர்கள் வாழ்ந்தபடியால் கி. மு. ஆருவது நூற்ருண்டு மிகவும் கவர்ச்சியுடையதாக இருக்கிறது. உலகம் முழுவதும் சிந்தனை வெள்ளம் அலையெறிந்து மோதியிருக்கவேண்டும். அக்கால நிலைமைகளிலே அதிருப்தியும் அவற்றை மாற்றிப் புதிய உலகத்தைச் சிருஷ்டிக்கவேண்டும் என்கிற நம்பிக்கையும் ஆசையும் நல்லோர் உள்ளங்களிலே பொங்கியிருக்க வேண்டும். பெரிய பெரிய மதஸ்தாபகர்கள் எல்லாம், இருக்கும் நிலையைவிட மேலான ஒரு நிலையை உண்டாக்கவே எப்போதும் விரும்பிஞர்கள். மக்களை மாற்றிச் சீர்திருத்தி அவர்களின் துன்பத்தைக் குறைக்க முயன்று வந்தார்கள் என்பதை நாம் நினைவில் வைக்கவேண்டும். அவர்கள்

எல்லாரும் புரட்சிக்காரர்கள். தீமைகளை எதிர்த்துத் தாக்குவதற்கு அவர்கள் அஞ்சவில்லை. எங்கெங்கே பழைய வழக்கம் தவருன வழியில் சென்று எதிர்கால வளர்ச்சியைத் தடுத்து நின்றதோ அங்கெல்லாம் அவர்கள் அதை அஞ்சாது எதிர்த்து ஒழித்தார்கள். எல்லாவற்றிற்கும் மேலாக அவர்கள் இவ்வுலகில் நடத்திக் காட்டிய உயரிய வாழ்க்கையானது தலைமுறை தலைமுறையாகப் பல கோடிக்கணக்கான மக்களுக்கு ஒரு லட்சியமாகத் திகழ்ந்து ஊக்கத்தைக் கொடுத்து வருகிறது.

கிறிஸ்துவுக்கு முற்பட்ட அவ்வாரும் நூற்ருண்டில் இந்தியாவில் புத்தர்பிரானும் மகாவீரரும் தோன்றினுர்கள். சீனுவில் கன்பூஷியஸ், லௌ-ட்சே என்கிற பெரியார்கள் உதித்தார்கள். பாரசீகத்தில் * ஜோராஸ்டர் அல்லது ஜாரதுஷ்டிரர் என்பவர் விளங்கினுர். சாமாஸ் என்கிற கிரேக்கத் தீவில் பிதகோரஸ் துலங்கினுர். வெவ்வேறு சந்தர்ப்பங்களில் நீ இப்பெயர்களை முன்பே கேட்டிருக்கலாம். பள்ளிக்கூடத்தில் படிக்கும் ஒவ்வொரு பையனுக்கும் பெண்ணுக்கும் பிதகோரஸைத் தெரியும். அவர் வேலையற்றுப் போய் க்ஷேத்திர கணிதத்தில் ஒரு தேற்றத்தைக் கண்டுபிடித்துச் சொல்லிவிட்டுப் போக, அதை அவர்கள் இப்போது படித்துத் தொலைக்கவேண்டியிருக்கிறது! யூக்ளிது (Euclid) எழுதிய க்ஷேத்திர கணித நூலையாவது, வேறு எந்த க்ஷேத்திர கணித நூலையாவது எடுத்துப் பார்த்தால் பிதகோரஸ் கண்டுபிடித்த தேற்றத்தைக் காணலாம். ஒரு நேர் முக்கோணத்தினுடைய (Right angled Triangle) பக்கங்களின் சதுர அளவைப் பற்றியது இத்தேற்றம். க்ஷேத்திர கணிதத்தில் பல உண்மைகளைக் கண்டுபிடித்ததோடல்லாமல்

* ஜோராஸ்டர் கி. மு. எட்டாவது நூற்ருண்டினராக இருக்கலாம்.

அவர் பெரிய அறிஞராகவும் விளங்கினர் என்று தெரி கிறது. நமக்கு அவரைப்பற்றி அதிகமாக ஒன்றும் தெரியவில்லை. சிலர் பிதகோரஸ் என்று ஒருவர் வாழ்ந் தார் என்பதையே சந்தேகிக்கிறார்கள்.

பாரசீகத்தில் வாழ்ந்த ஜாரதுஷ்டிரர் ஜாரதுஷ்டிர மதத்தை ஸ்தாபித்ததாகச் சொல்லப்படுகிறது. ஆனல் அவ்வாறு சொல்வது சரியென்று எனக்குத் தோன்ற வில்லை. பாரசீகத்தின் பழைய மதத்துக்கு அவர் ஒரு புதிய அர்த்தத்தையும் உருவத்தையும் கொடுத்தார் என்று சொல்வது பொருத்தமாயிருக்கும் என்று நினைக்கிறேன். இம்மதம் பாரசீகத்தினின்றும் மறைந்து நெடுங்கால மாயிற்று. மிக நீண்ட நாளைக்கு முன்னரே பாரசீகத்தி லிருந்து இந்தியாவுக்கு வந்த பார்சிகள் தங்கள் மதத்தை யும் தங்களுடன் கொண்டுவந்து அந்நாள் தொட்டு அதை இங்கு அனுஷ்டித்து வருகிறார்கள்.

இக்காலத்தில் சீனவில் இரண்டு பெரியார்கள் வாழ்ந்துவந்தார்கள். ஒருவர் கன்பூஷியஸ். மற்றொருவர் லௌ-ட்சே. கன்பூஷியஸ் என்னும் பெயரை காங் பூ-சி என்று எழுதுவது சரியான முறை. இவர்கள் இருவரை யும் ஏதாவது ஒரு மதத்தை ஸ்தாபித்தவர்கள் என்று சொல்ல முடியாது. நீதி நெறிகளையும் ஒழுக்கமுறைகளை யும் இவர்கள் வகுத்தார்கள். இன்னது செய்யலாம், இன் னது செய்யக்கூடாது என்று விதி ஏற்படுத்தினர்கள். இவர்களுடைய காலத்திற்குப் பிறகு இவர்களுக்குப் பல கோயில்கள் கட்டப்பட்டன. ஹிந்துக்கள் வேதங்களைப் போற்றுவதுபோலவும் கிறிஸ்தவர்கள் பைபிளைப் போற்று வது போலவும் சீனமக்கள் இப்பெரியார்களின் நூல்களை மதித்துப் போற்றி வருகிறார்கள். உலகத்திலேயே இன்று சீனமக்கள் மற்ற எல்லாரைக் காட்டிலும் மரியா தையும், நல்லொழுக்கமும், நாகரிகமும் வாய்ந்து விளங்கு

கிருர்கள் என்ருல் அதற்குக் கன்பூஷியஸ் மகானின் போதனையே காரணமாகும்.

இந்தியாவில் மகாவீரரும் புத்தரும் அவதரித்தார்கள். இப்போதுள்ள ஜைன மதத்தை மகாவீரர் தோற்றுவித்தார். அவருடைய இயற்பெயர் வர்த்தமானர் என்பது. அவருடைய பெருமையைக் கருதி மகாவீரர் என்கிற பட்டம் அவருக்கு அளிக்கப்பட்டது. ஜைனர்கள் பெரும்பாலும் மேற்கு இந்தியாவிலும் கத்தியவாரிலும் வசிக்கிருர்கள். அவர்கள் அநேகமாக ஹிந்துக்களுடன் சேர்த்து எண்ணப்படுகிருர்கள். கத்தியவாரிலும் ராஜபுதனத்தில் ஆபு (Mount Abu) மலையிலும் உள்ள அவர்களுடைய கோயில்கள் மிகவும் அழகானவை. அவர்கள் அஹிம்சையில் அதிக நம்பிக்கை உடையவர்கள். ஒரு சிறிய ஜந்துவுக்குக்கூட மனதறிந்து தீங்கு செய்யமாட்டார்கள். இந்தச் சந்தர்ப்பத்தில் பிதகோரஸ் சைவ உணவையே சாப்பிட்டுவந்தார் என்று அறிய நீ ஆச்சரியப்படுவாய். தம்முடைய மாணுக்கர்களும் சீடர்களும் மரக்கறி உணவையே கொள்ள வேண்டுமென்று அவர் வற்புறுத்திஞர்.

இப்போது கௌதம புத்தரைப் பற்றிக் கவனிப்போம். அவர் ஒரு க்ஷத்திரிய ராஜகுமாரர். சித்தார்த்தர் என்பது அவருடைய இயற்கைப் பெயர். மாயாதேவி என்பது அவருடைய தாயாரின் திருநாமம். "சந்திரனை நிகர்த்த அழகும் பூமியை நிகர்த்த பொறுமையும் தாமரையை நிகர்த்த இதய பரிசுத்தமும் உடைய மாயாதேவியை அனைவரும் மகிழ்ச்சியுடன் வணங்கி வந்தார்கள்" என்று பழைய கதை சொல்லுகிறது. புத்தரின் தாய் தந்தையர் அவரைச் சீரிலும் செல்வச் சிறப்பிலும் வளர்த்துவந்தார்கள். உலகத்தின் கஷ்டங்களையும் துன்பங்களையும் அவர் பார்க்கக்கூடாதென்பது அவர்கள்

எண்ணம். ஆனால் வறுமையையும் துன்பத்தையும் சாவையும் அவர் பார்த்ததாகத் தெரிகிறது. அதனால் அவர் உள்ளம் பெரிதும் கலங்கியது. அரண்மனையில் அவருக்கு இருப்புக் கொள்ளவில்லை. அவரைச் சுற்றி நிறைந்திருந்த செல்வமும் ஆடம்பரமும் அவருடைய மனத்திற்கு அமைதி அளிக்க முடியவில்லை. அவருடைய காதல் மனையாளின் சுந்தரவதனங்கூடத் துன்பமுறும் மன்பதையினின்று அவருடைய மனத்தைத் திருப்ப இயலாமற் போயிற்று. உலகத்தின் தீமைகளுக்கு ஒரு மாற்றுக் கண்டுபிடிக்க வேண்டும் என்னும் எண்ணம் அவரை ஆட்கொண்டது. ஒரு நாள் இரவு தாம் காதலித்த மனைவி மக்களையும் சுற்றத்தாரையும் துறந்து, அரண்மனையினின்றும் புறப்பட்டுத் தம் மனத்தில் எழுந்த பிரச்னைகளுக்கு விடைகாணும் நோக்கத்துடன் அவர் தனியே சென்றுவிட்டார். உண்மையைக் காண நெடுங்காலம் வருந்தி முயன்றார். கடைசியில் பல ஆண்டுகளுக்குப் பிறகு கயை என்னும் இடத்தில் ஓர் அரசமரத்தின் (Peepal tree) கீழ் அமர்ந்திருந்த காலையில் அவருக்கு ஞானோதயம் உண்டாயிற்று. அன்றையிலிருந்து அவர் புத்தர் அதாவது 'ஞான ஒளி பெற்றவர்' என்று அழைக்கப்படலானார். அந்த மரத்திற்கு அந்நாள்தொட்டு, 'போதி விருக்ஷம்' அல்லது ஞான விருக்ஷம் என்று பெயர் வழங்கலாயிற்று. தொன்மை கொண்ட காசி நகருக்கருகில் அப்போது இசிபட்டணம் (Isipatana) என்று அழைக்கப்பட்ட சாரநாத்தில் உள்ள மான் தோட்டத்தில் (Deer Park) புத்தர் தாம் கண்ட உண்மைகளைப் போதிக்க ஆரம்பித்தார். மனிதர்கள் வாழ்வதற்குரிய 'சன்மார்க்கத்தை' அவர் எடுத்துக் காட்டினார். தெய்வங்களுக்குப் பலவித யாகங்கள் செய்வதையும் உயிர்களைப் பலியிடுவதையும் கண்டித்து அதற்குப் பதிலாக மனிதர்கள் தங்களுடைய

கெட்ட எண்ணம், பகைமை, கோபம், பொருமை முதலிய துர்க்குணங்களைப் பலி கொடுக்க வேண்டுமென்று உபதேசித்தார்.

புத்தருடைய காலத்தில் இந்தியாவில் பழைய வைதிக சமயம் பிரபலமாக இருந்தது. ஆனல் அதற்கு முன்பே அதில் புரை ஏற்பட்டு அது தன் உயர்நிலைமை மாறி வீழ்ச்சியடைய ஆரம்பித்துவிட்டது. அதில் பிராமணக் குருக்கள்மார்கள் பலவிதமான சடங்குகளையும், பூஜைகளையும், மூடப் பழக்க வழக்கங்களையும் கொண்டுவந்து புகுத்திவிட்டார்கள். பூஜைகள் அதிகமானல் குருக்கள் மாருக்குக் கொண்டாட்டம்தானே! ஜாதிக் கட்டுப்பாடு மிகவும் கடுமையாக அநுஷ்டிக்கப்பட்டு வந்தது. குருக்கள்மார் சாதாரண ஜனங்களை மந்திரம், தந்திரம், மாயம், உச்சாடனம் என்று சொல்லி மிரட்டித் தம் வசப்படுத்திக் கொண்டு க்ஷத்திரிய அரசர்களைக்கூட எதிர்க்க ஆரம்பித்தார்கள். இவ்வாருகப் பிராமணர்களுக்கும் க்ஷத்திரியர்களுக்கும் போட்டி வளர்ந்துகொண்டு வந்தது. பழைய வைதிக சமயத்தில் வந்து புகுந்துவிட்ட குற்றங்களையும் குருக்கள்மாரின் கொடுமையையும் புத்தர் அஞ்சாது தாக்கினர். அவருடைய சீர்திருத்தக் கொள்கைகளுக்கு ஜனங்களுடைய ஆதரவு கிடைத்தது. ஜனங்கள் நல்வழியில் வாழ்ந்து நற்செயல்கள் புரிய வேண்டுவதே முக்கியமென்றும் பூஜை புரஸ்காரங்கள் செய்வதில் யாதொரு பயனும் இல்லையென்றும் எடுத்துக் கூறினர். அவர் பௌத்த சங்கம் ஒன்றை நிறுவினர். புத்தருடைய போதனைகளைப் பின்பற்றி நடக்கும் துறவிகளைக் கொண்டது அச்சங்கம். ஆண் துறவிகளுக்குப் பிக்ஷுக்கள் என்றும் பெண் துறவிகளுக்குப் பிக்ஷுணிகள் என்றும் பெயர்.

சிலகாலம் வரையில் பௌத்த மதம் இந்தியாவில் அதிகமாகப் பரவவில்லை. பிறகு, அது எப்படி இந்தியாவில்

பரவியதென்றும் மறுபடி எவ்வாறு அது ஒரு தனிமதமாக நிலைபெருமல் மறைந்துபோயிற்றென்றும் பார்ப்போம். இலங்கை, சீனு முதலிய தூர தேசங்களில் பௌத்த மதம் வீறுகொண்டு பரவியது. ஆனுல் அதன் பிறந்தகமாகிய இந்தியாவில் அது மீண்டும் பிராமணமதம் அல்லது ஹிந்து மதத்தில் கலந்துவிட்டது. ஆனுல் அது பிராமண மதத்தை மிகவும் புனிதப்படுத்தி ஓரளவுக்கு அதனின் றும் மூடப் பழக்க வழக்கங்களையும் சடங்குகளையும் ஒழித்தது.

இன்று உலகில் பௌத்த மதத்தை அவலம்பிப்போர் மற்றெல்லா மதத்தினரைக் காட்டிலும் எண்ணிக்கையில் அதிகமாயிருக்கிருர்கள். பின்பற்றுவோரின் எண்ணிக்கை யில் பௌத்த மதத்துக்கு அடுத்தபடியாகச் சொல்லக் கூடியவை கிறிஸ்தவ மதம், இஸ்லாம் மதம், ஹிந்து மதம் ஆகியவைகளே. இவைகளன்றி எபிரேயர், சீக்கியர், பார்சிகள் முதலியோருடைய மதங்களும் இருக்கின்றன. மதங்களும் மதங்களை ஸ்தாபித்தவர்களும் உலக சரித்தி ரத்தை உருவாக்குவதில் எடுத்துக்கொண்டிருக்கும் பங்கு மிகவும் பெரிதாகும்; உலக சரித்திரத்தை ஆராய்வோன் எவனும் அவ்வுண்மையைப் புறக்கணிக்க முடியாது. ஆனுல் அவர்களைப்பற்றி எழுதுவது எனக்குச் சங்கடமா யிருக்கிறது. மதத் தலைவர்கள் உலகில் அவதரித்த உத்தமப் பெரியோர்களில் மிகவும் உத்தமமான பெரியோர் கள் என்பதில் யாதோர் ஐயமும் இல்லை. ஆனுல் அவர்க ளுடைய சீடர்களையும் அவர்களுக்குப் பின்னுல் வந்தவர் களையும் பெரும்பாலும் நல்லவர்கள் என்ருே பெரியவர்கள் என்ருே சொல்வதற்கில்லை. மக்களை உயர்நிலையில் ஏற்று வதற்கென்று தோற்றுவிக்கப்பட்ட மதமானது அவர்களை மிருகங்கள்போல் நடக்கும்படி செய்துவருவதை நாம் அடிக்கடி சரித்திரத்தில் காண்கிருேம். அவர்களுக்கு

அறிவொளியைக் கொடுக்கவேண்டிய மதம் அவர்களை அறியாமை இருளில் இருத்திவந்திருக்கிறது; பரந்த நோக்கத்தை உண்டாக்குவதற்குப் பதிலாகக் குறுகிய நோக்கத்தையும் பிறர்மீது கொடிய துவேஷத்தையும் உண்டாக்கி வந்திருக்கிறது. மதத்தின்பேரால் பல அரும் பெருஞ் செயல்கள் செய்யப்பட்டிருக்கின்றன. ஆனால் அதே மதத்தின்பேரால் பல்லாயிரக்கணக்கான பேர்கள் கொல்லப்பட்டிருக்கிருர்கள்; சொல்லமுடியாத அநீதிகளும் இழைக்கப்பட்டிருக்கின்றன.

ஆகவே, மதத்தைப் பொறுத்தவரையில் நாம் செய்ய வேண்டுவது என்ன? சிலருக்கு மதம் என்பது அடுத்த உலகத்தைக் குறிக்கிறது. சுவர்க்கத்தையும் மோக்ஷத்தையும் விரும்பி அவர்கள் மத அநுஷ்டானங்களைக் கைக்கொள்ளுகிருர்கள். இது, ஜிலேபிக்கு ஆசைப்பட்டு நடந்துகொள்ளும் ஒரு குழந்தையின் செயலுக்கு ஒப்பாக இருக்கிறது! சதா ஜிலேபியையே நினைத்துக்கொண்டிருக்கும் குழந்தையைச் சரியான முறையில் பழக்கப்பட்ட குழந்தை என்று நீ சொல்வாயா? ஒருகாலும் சொல்லமாட்டாய். ஜிலேபி அல்லது அதுபோன்ற பொருள்களை அடைவதற்காகவே எல்லாவற்றையும் செய்யும் சிறுவர் சிறுமியரின் செயலை நீ இன்னும் அதிகமாகக் கண்டிப்பாயல்லவா? வயது முதிர்ந்தவர்கள் இந்த ரீதியில் காரியங்கள் செய்தால் அதை என்னென்பது? சிறிய குழந்தைகள் விரும்பும் ஜிலேபிக்கும், இப் பெரிய குழந்தைகள் விரும்பும் சொர்க்க போகத்துக்கும் அதிக வித்தியாசம் இல்லை. நாம் எல்லாரும் ஏறக்குறையத் தன்னலம் படைத்தவர்களாகவே இருக்கிறோம். ஆனால் நம் குழந்தைகள் கூடியவரையில் தன்னலமற்றவர்களாக வளரும்படியான பயிற்சியை நாம் அளிக்கவேண்டும். நமது லட்சியங்கள் இயன்றவரையில் தன்னலமற்றவைகளாக

இருக்கவேண்டும்; அவைகளை ஒட்டி நாம் வாழ முயல வேண்டும்.

நாம் எல்லாரும் எடுத்த காரியத்தைச் சாதித்து அதன் பலனைக் காண விரும்புகிறோம். அது இயற்கையே. ஆனால் நமது நோக்கம் என்ன? நம்மைப்பற்றியே நாம் எண்ணுவதா? அல்லது சமூக நன்மை, தேச நன்மை, உலக நன்மை ஆகியவற்றை நாடுவதா? இப்பெரிய நன்மையிலே நமது நன்மையும் அடங்கித்தானே இருக்கிறது! சில நாட்களுக்குமுன் எழுதிய கடிதம் ஒன்றில் ஒரு சம்ஸ்கிருத சுலோகத்தைக் குறிப்பிட்டிருந்தேன். தனி மனிதனைக் குடும்பத்திற்காகவும் குடும்பத்தைச் சமூகத்துக்காகவும் சமூகத்தைத் தேசத்துக்காகவும் தியாகம் செய்ய வேண்டுமென்பது அச்சுலோகத்தின் கருத்து. பாகவதத்தில் காணப்படும் இன்னொரு சம்ஸ்கிருத சுலோகத்தைக் கீழே மொழிபெயர்த்துச் சொல்லுகிறேன். அது வருமாறு: "எண்குணங்கள் கொண்ட உயர்ந்த முக்தியின்பத்தை நான் விரும்பவில்லை. பிறவி நோயினின்று விடுபடவும் நான் விரும்பவில்லை. துன்பத்தில் உழலும் எல்லாப் பிராணிகளுள்ளும் புகுந்து அவற்றின் துன்பத்தை நான் எடுத்துக்கொண்டு அவற்றைத் துன்பத்தினின்றும் விடுவிக்க அருள் புரியவேண்டும்."

ஒரு மதவாதி ஒன்றைச் சொல்லுகிறார்; மற்றொருவர் வேறொன்றைச் சொல்லுகிறார். அநேகமாக ஒருவர் இன்னொருவரை மடையன் என்றோ அயோக்கியன் என்றோ கருதுகிறார். யார் சொல்வது சரி? காண முடியாத, நிரூபிக்க முடியாத விஷயங்களைப்பற்றி அவர்கள் பேசுவதால் அதை முடிவுகட்டுவது கஷ்டமாயிருக்கிறது. ஆனால் அவ்விருவரும் அப்பேர்ப்பட்ட விஷயங்களைப்பற்றி நிச்சயத்துடன் பேசுவதும் ஒருவர் மண்டையை ஒருவர் உடைத்துக்கொள்வதும் அதிகப்பிரசங்கித்தனம் என்று நமக்குத்

தோன்றுகிறது. நம்மில் பெரும்பாலோர் குறுகிய நோக்கமும் மந்தமதியும் படைத்திருக்கிருேம். நாம் முழு உண்மையையும் அறிந்துகொண்டு விட்டதாகப் பாவித்துக் கொண்டு அதை அயலார்மீது திணிக்க முயலுவது சரியா? நாம் சொல்வது சரியாயிருக்கலாம், அல்லது அயலவர் சொல்வதும் சரியாயிருக்கலாம். ஒரு மரத்தில் ஒரு பூவைப் பார்க்கிருேம். அதனுல் மரத்தைப் பூ என்று சொல்லலாமா? அதே மரத்தில் ஒருவன் இலேயையும் இன்னொருவன் அடிமரத்தையும் பார்க்கிருன். ஒவ்வொருவரும் மரத்தின் ஒரு பாகத்தைப் பார்த்திருக்கிருர்கள். ஒவ்வொருவரும் மரத்தைப் பூ, இலே, அடிமரம் என்று கூறி ஒருவரோடொருவர் சண்டையிட்டுக்கொண்டால் அது அறிவுடைமையாகுமா?

அடுத்த உலகத்தைப்பற்றிய கவலே எனக்கு இல்லே. இவ்வுலகத்தில் என்ன செய்யவேண்டுமென்பதைப்பற்றிய சிந்தனேயே என் மனத்தில் நிறைந்திருக்கிறது. இரண்டு நாள் செல்லவேண்டிய வழி எனக்குத் தெளிவாகத் தெரிந்தால் போதும். இம்மையில் எனது கடமையைச் சரிவர ஆற்றிஞல் மறுமையைப்பற்றி எனக்கு ஏன் கவலே?

உனக்கு வயது வந்தால் நீ பலவகைப்பட்ட மனிதர்களேச் சந்திக்க நேரிடும். மதப் பற்றுடையவர்கள், மதத்தை எதிர்ப்பவர்கள், இரண்டும் செய்யாமல் அலட்சியமாயிருப்பவர்கள் எல்லாரையும் பார்க்கலாம். மிகுந்த செல்வமும் அதிகாரமும் படைத்த பெரிய தேவாலயங்களும் மதஸ்தாபனங்களும் இருக்கின்றன. சிலவேளேகளில் தீய காரியங்களுக்கும் சில வேளேகளில் நல்ல காரியங்களுக்கும் அவை உபயோகப்படுகின்றன. மதப்பற்றுக் கொண்ட உத்தமப் பெரியோர்களேக் காண்பாய். மதத்தின் பெயரால் மக்களே வஞ்சித்துப் பொருள் பறிக்கும்

வேஷதாரிகளையும் அயோக்கியர்களையும் காண்பாய். இவ்விஷயங்களைப்பற்றி நீயே ஆலோசித்து ஒரு முடிவுக்கு வரவேண்டும். ஒருவன் பிறரிடமிருந்து எவ்வளவோ கற்கலாம். ஆனால் முக்கியமான உண்மை எதையும் அவன் தன் சொந்த அநுபவத்திலேயே கண்டு அறிய வேண்டும். சில பிரச்னைகள் இருக்கின்றன. அவற்றிற்குரிய விடைகளை ஒருவன் தானே கண்டுபிடித்துத் தீரவேண்டும்.

அவசரப்பட்டு ஒரு முடிவுக்கும் வராதே. பெரிய அல்லது முக்கியமான ஒரு முடிவுக்கு வருமுன்பு அதற்குத் தகுந்த அறிவையும் பயிற்சியையும் நீ பெற்றிருக்க வேண்டும். தாங்களே சிந்தித்துத் தாங்களே ஒரு முடிவுக்கு வருவது நல்லதுதான். ஆனால் அவ்வாறு முடிவுக்கு வரக்கூடிய சக்தியை முன்பே தேடிக்கொள்ள வேண்டும். புதிதாகப் பிறந்த ஒரு குழந்தையை எதையாவது முடிவுகட்ட விடலாமா? இம்மாதிரி மனிதர்களில் பலர் வயதில் பெரியவர்களானாலும் அறிவு வளர்ச்சியில் அநேகமாகக் குழந்தைக்குச் சமானமானவர்களாக இருக்கிறார்கள்.

நான் இன்று வழக்கமாக எழுதுவதைவிட நீண்ட கடிதம் எழுதிவிட்டேன். அது சுவாரசியமற்றதாகவும் இருக்கலாம். ஆனால் இவ்விஷயத்தைப்பற்றி நான் நினைப்பதைச் சிறிது சொல்ல விரும்பினேன். இப்போது உனக்கு ஒன்றும் புரியாவிட்டாலும் பாதகமில்லை. சீக்கிரத்தில் தெரிந்துகொள்வாய்.

# 15

## பாரசீகமும் கிரீஸும்

ஜனவரி 21, 1931.

உன்னுடைய கடிதம் இன்று கிடைத்தது. உன் அம்மாவும் நீயும் சுகமடைந்து வருகிறீர்கள் என்பதை அறிய ஆறுதலாயிருக்கிறது. ஆனல் உன் தாத்தாவுக்கு ஜுரம் குணமடைந்து அவர் உடல் நலமுற வேண்டுமென்று விரும்புகிறேன். அவர் தம் வாழ்நாள் முழுவதும் கஷ்டப்பட்டு உழைத்திருக்கிருர். இந்த வயது முதிர்ந்த நிலையிலும் அவருக்கு ஓய்வோ அமைதியோ இல்லை.

நீ நூல் நிலையத்திலிருந்து ஏராளமான புத்தகங்களை வாசித்திருப்பதாகவும் இன்னும் படிப்பதற்கு வேறு புத்தகங்களின் பெயர்களைச் சொல்லும்படிக்கும் எழுதியிருக்கிருய். ஆனல் நீ என்ன என்ன புத்தகங்கள் படித்தாய் என்பதைச் சொல்லவில்லை. புத்தகங்கள் படிப்பதென்பது நல்ல வழக்கம்தான். ஆனல் அதிகமான புத்தகங்களைக் கொஞ்ச காலத்தில் படித்து முடிப்பவர்களைக் கண்டால் எனக்குச் சந்தேகம் உண்டாகிறது. அவர்கள் ஒன்றையும் சரியாகப் படிக்காமல் மேற்போக்காய்ப் பார்த்துவிட்டு மறுநாளே மறந்துவிடுகிருர்கள் என்று சந்தேகிக்கிறேன். ஒரு புத்தகம் படிப்பதற்குத் தகுதியுடையதென்ருல் அதைச் சிறிது கவனத்தோடு முற்றக் கற்பதுதான் முறையாகும். ஆனல் படிக்க வேண்டாத புத்தகங்கள் பல இருக்கின்றன. நல்ல புத்தகங்களைப் பொறுக்கி எடுப்பதும் எளிதான காரியமல்ல. நமது நூல் நிலையத்திலிருந்து புத்தகங்களை எடுத்து வாசித்தால்

அவைகள் நல்லவைகளாகத்தான் இருக்க வேண்டும், இல்லாவிட்டால் அவைகள் நூல் நிலையத்தில் இடம் பெற்றிரா என்று நீ சொல்லலாம். நல்லது, நீ படித்துக் கொண்டே இரு. நான் நைனி சிறையிலிருந்து என்னுலான உதவியைச் செய்கிறேன். அதிவேகத்துடன் கூடிய உனது உடல் வளர்ச்சியையும் அறிவு வளர்ச்சியையும் பற்றி நான் அடிக்கடி நினைப்பதுண்டு. உன்னுடன் இருக்க வேண்டுமென்று நான் எவ்வளவு விரும்புகிறேன் தெரியுமா? நான் இப்போது உனக்கு எழுதிக்கொண்டிருக்கும் இக்கடிதங்கள் உன்னிடம் சேருகின்ற காலத்தில் நீ இவைகளின் தரத்துக்கு மீறிய வளர்ச்சி அடைந்தாலும் அடைந்துவிடலாம். அப்போது *சந்திரலேகா இவைகளைப் படிக்கத்தக்க பருவத்தை அடைந்துவிடுவாள் என்று நினைக்கிறேன். ஆகவே இவைகளைப் படித்து அனுபவிப்பதற்கு யாராவது ஒருவர் இருப்பார்.

பழைய கிரீஸுக்கும் பாரசீகத்துக்கும் திரும்பிச் சென்று அவைகளுக்குள் நடந்த சண்டைகளைச் சிறிது கவனிப்போம். நம் கடிதங்கள் ஒன்றில் கிரேக்க நகர-ராஜ்யங்கள் பற்றியும், டரையஸ் என்று கிரேக்கர்களால் அழைக்கப்பட்ட ஓர் அரசனின் கீழிருந்த பாரசீக சாம்ராஜ்யத்தைப்பற்றியும் பேசியிருக்கிறோம். இந்தச் சாம்ராஜ்யம் விஸ்தீர்ணத்தில் மட்டுமன்றி அமைப்பு முறையிலும் பெரியதாக விளங்கியது. சின்ன ஆசியாவிலிருந்து சிந்து நதிவரையில் அது பரவியிருந்தது. எகிப்தும் சின்ன ஆசியாவிலிருந்த சில கிரேக்க நகரங்களும் அதன் பாகங்களாக விளங்கின. இந்தப் பெரிய சாம்ராஜ்யத்தில் குறுக்கும் நெடுக்குமாகப் பல நல்ல சாலைகள் அமைக்கப்பட்டு அவைகளின் வழியாக அரசாங்கத் தபால் போக்குவரத்து ஒழுங்காக நடைபெற்று வந்தது. என்ன கார

*இந்திராவின் அத்தை மகள்.

ணத்திஞலோ கிரேக்க நகர—ராஜ்யங்களை ஜயிக்க வேண்டுமென்று டரையஸ் எண்ணினுன். இந்த யுத்தத்தில் சில சரித்திரப் பிரசித்தி பெற்ற சண்டைகள் நிகழ்ந்தன.

இந்நிகழ்ச்சிகளுக்குச் சிறிது பின்பு வாழ்ந்த ஹெரடோடஸ் (Herodotus) என்னும் கிரேக்க சரித்திராசிரியர் இந்தப் போர்களைப்பற்றி எழுதி வைத்திருக்கிருர். அவர் கிரேக்கர்மீதுள்ள அபிமானத்திஞல் ஒரு தலைப் பட்சமாக எழுதியிருந்தாலும் அவர் எழுதியிருக்கும் வரலாறு மிகவும் சுவையுடையதாக இருக்கிறது. இக் கடிதங்களில் அவர் எழுதிய சரித்திரத்திலிருந்து சில பகுதிகளை எடுத்துக் காட்டுகிறேன்.

கிரீஸின்மீது பாரசீகர்கள் முதல் தடவை படையெடுத்தபோது அவர்களுடைய சேனை உணவின்மையாலும் நோய்வாய்ப்பட்டதஞலும் தோற்றுப் போய் விட்டது. கிரீஸுக்குப் போகுமுன்பே அது திரும்ப நேரிட்டது. கி. மு. 490-ஆம் ஆண்டில் இரண்டாவது தாக்குதல் நிகழ்ந்தது. இந்தத் தடவை பாரசீகப் படை தரைமார்க்கத்தை விடுத்துக் கடல் மார்க்கமாகச் சென்று ஏதென்சுக்கருகிலுள்ள மாரதான் (Marathon) என்னும் இடத்தில் இறங்கியது. பாரசீக சாம்ராஜ்யத்தின் கீர்த்தி பெரிதாயிருந்தபடியால் இதைக் கண்டு ஏதென்சு நகரமாந்தர்கள் அதிகமான பீதியை அடைந்தார்கள். அதன் காரணமாக அவர்கள் தங்களுடைய பழைய விரோதிகளாகிய ஸ்பார்ட்டா நகரத்தாரோடு (Spartans) சமாதானம் செய்துகொண்டு இருவருக்கும் பொதுவான எதிரியைத் தாக்குவதற்கு அவர்கள் உதவிசெய்ய வேண்டுமென்று கேட்டார்கள். ஆஞல் ஸ்பார்ட்டாவிலிருந்து உதவி வருமுன்பே ஏதென்சு நகரத்தார் பாரசீகப் படையைத் தோற்கடித்துவிட்டார்கள். கி. மு. 490-இல்

மாரதான் என்னும் இடத்தில் நடந்த கீர்த்திவாய்ந்த போராகும் இது.

ஒரு சிறிய கிரேக்க நகர—ராஜ்யம் பெரிய சாம்ராஜ்யத்தின் சேனையை வெல்வதென்பது ஆச்சரியமாகத் தோன்றுகிறது. ஆனால் இதில் ஆச்சரியம் ஒன்றுமில்லை. கிரேக்கர்கள் தங்கள் நாட்டைக் காப்பாற்றுவதற்குத் தங்கள் நாட்டுக்கருகிலேயே போரிட்டார்கள். பாரசீக சேனையோ தன் நாட்டைவிட்டு வெகு தூரத்துக்கு அப்பால் வந்து போரிட வேண்டியிருந்தது. பாரசீக சாம்ராஜ்யத்தின் பல பாகங்களிலும் உள்ள சேனுவீரர்களைக் கொண்டிருந்தது அப்படை. அவர்கள் கூலிக்குப் போரிட்டார்கள். கிரீஸை ஜயிக்க வேண்டுமென்கிற அக்கறை அவர்களுக்கு இல்லை. இதற்கு மாருக ஏதென்சு நகரத்தார் தங்கள் சுதந்தரத்துக்காகப் போரிட்டார்கள். சுதந்தரத்தை இழப்பதைவிட உயிரை இழப்பது மேல் என்று அவர்கள் கருதினுர்கள். ஒரு காரியத்துக்காக உயிரைவிடத் துணிந்தவர்கள் தோல்வி அடைவதென்பது மிகவும் அபூர்வம்.

ஆகவே மாரதானில் டரையஸ் தோல்வியடைந்தான். பிறகு அவன் பாரசீகத்தில் இறந்துபோனுன். அவனுக்குப்பின் ஸெர்க்ஸிஸ் (Xerxes) என்பவன் பட்டத்துக்கு வந்தான். இவனுக்கும் கிரீஸை ஜயிக்க வேண்டுமென்கிற ஆசை இருந்தது. இதற்காக இவன் ஒரு சேனையைத் தயார் செய்தான். இங்கு ஹெரடோடஸ் தம் ஆச்சரியமான கதையைச் சொல்லும் விதத்தை உனக்குத் தெரிவிக்கிறேன். ஸெர்க்ஸிஸ் என்பவனுக்கு ஆர்ட்டாபேனஸ் (Artabanus) என்னும் பெயர்கொண்ட மாமன் ஒருவன் இருந்தான். பாரசீக சேனை கிரீஸுக்குப் போவதில் ஆபத்து இருக்கிறதென்று நினைத்து, கிரீஸுடன் ஸெர்க்ஸிஸ் போரிடவேண்டாமென்று அவன் சொல்லிப் பார்த்

தான். அவ்வாறு சொல்லிய தன் மாமனுக்குக் கீழ்க் கண்டவாறு ஸெர்க்ஸிஸ் மறுமொழி புகன்றதாக ஹெரடோடஸ் சொல்லுகிறார்:

"நீ சொல்வதில் நியாயம் இருக்கிறது. ஆனால் எங்கும் ஆபத்தைக் கண்டு என்ன நஷ்டம் நேரும் என்று கணக்குப் போட்டுக்கொண் டிருக்கக்கூடாது. வருவது எதையும் தராசில் நிறுப்பதுபோல் நிறுத்துப் பார்த்துக் கொண்டிருந்தால் கடைசியில் ஒன்றுமே செய்ய முடியாது. ஒரு கஷ்டமும் அனுபவிக்காமல் சதா என்ன நேருமோ என்று பயந்து சாவதைக் காட்டிலும் நன்மை உண்டாகும் என்கிற எண்ணத்துடன் செயல்புரிந்து அதில் பாதி கஷ்டத்தை அனுபவிப்பது எப்போதும் மேலாகும். இன்ன வழியில் போக வேண்டுமென்று சொல்லாமல் எங்களுடைய யோசனை ஒவ்வொன்றையும் நீ சரியல்ல என்று சொல்லிக் கழித்துவந்தால் நம் எதிரிகளைப்போலவே நாமும் துன்பமடைய வேண்டியதுதான். வெற்றி தோல்விக்கான காரணங்கள் தராசின் தட்டுக்களைப்போல் சமமாயிருக்கின்றன. அவை எந்தப் பக்கம் சாயும் என்பதை மனிதன் அறிய முடியுமா? முடியாது. ஆனால் பொதுவாக 'வெற்றி செயலுக்குண்டு விதியின் நியமம்' என்று கற்றுத் தெளிந்திருக்கிறோம். பயந்து பயந்து எதையும் நிறுத்துப் பார்ப்பவர்களுக்கு வெற்றி என்பது இல்லை. பாரசீகம் அளவற்ற ஆற்றல் வாய்ந்திருப்பதை நீ பார்க்கிறாய். எனக்கு முன்பு பாரசீக சிம்மாசனத்தில் வீற்றிருந்தவர்கள் உங்களைப்போன்ற கொள்கைகளை உடையவர்களாக இருந்திருந்தாலும் சரி, அல்லது அக்கொள்கைகள் அவர்களுக்கு இல்லாவிட்டாலும் உன்னைப்போல் ஆலோசனையாளர்கள் அவர்களுக்கு இருந்திருந்தாலும் சரி, நமது ராஜ்யம் இவ்வளவு பெரிதாக இன்று விளங்க முடியாது. அவர்கள் அபாயங்

களுக்கு அஞ்சாமல் செயல்புரிந்த காரணத்தால்தான் நாம் இன்றுள்ள நிலையில் இருக்கிறோம். பெரிய அபாயங்களின் மூலமாகத்தான் பெரிய வெற்றிகளையும் அடைய முடியும்."

இவ்வளவு நீண்ட பகுதியை எடுத்துச் சொன்னதற்குக் காரணம் வேறு எந்த வரலாற்றையும்விட இது அப்பாரசீக மன்னனின் உள்ளத்தை நாம் நன்கு அறிந்து கொள்ள உதவியாயிருப்பதேயாகும். ஆனால் நடந்தது என்னவென்றால் ஆர்ட்டாபேனஸ் பயந்தது சரியாகப் போயிற்று. கிரீஸில் பாரசீக சேனை தோல்வி அடைந்தது. ஸெர்க்ஸிஸ் தோற்றான்; ஆனால் அவன் அன்று சொன்ன சொற்கள் இன்றும் உண்மையாக இருக்கின்றன. அவை நமக்கு ஒரு பாடத்தையும் கற்பிக்கின்றன. இன்று நாம் பெருங் காரியங்களைச் சாதிக்க முயன்று கொண்டிருக்கிறோம். நமது லட்சியத்தை அடையு முன்பு நாம் பெரிய அபாயங்களைக் கடந்து செல்ல வேண்டும் என்பதை நினைவில் வைப்போமாக.

மன்னர் மன்னனாகிய ஸெர்க்ஸிஸ் தனது பெரிய சேனையைச் சின்ன ஆசியா வழியாக நடத்திச் சென்று டார்டனல்ஸ் ஜலசந்தி (அக்காலத்தில் அது ஹெல்லஸ் பான்ட் அதாவது கிரேக்க சமுத்திரம் என்று அழைக்கப் பட்டது) யைக் கடந்து ஐரோப்பாவுக்குள் பிரவேசித்தான். போகும் வழியில் கிரேக்க வீரர்கள் ஹெலன் என்னும் தங்கள் தேசத்து அழகியை மீட்பதற்குப் போரிட்ட இடமாகிய திராய் நகரின் அழிவுகளைக் காண்பதற்கு ஸெர்க்ஸிஸ் அங்கே சென்றான் என்று கூறப் படுகிறது. ஹெல்லஸ்பான்டைக் கடந்து சேனை செல்வதற்காக வேண்டி அதற்குக் குறுக்கே ஒரு பெரிய பாலம் நிருமிக்கப்பட்டது. பாரசீக சேனை அதன்மீது சென்ற போது அருகிலிருந்த ஒரு குன்றின் உச்சியில் சலவைக்

கல்லால் செய்யப்பட்ட சிம்மாசனத்தின்மீது வீற்றிருந்து பார்வையிட்டான் ஸெர்க்ஸிஸ். மேல் நிகழ்ந்ததை ஹெரடோடஸ் வார்த்தைகளில் கேட்போம்:

"ஹெல்லன்பான்ட் முழுமையும் தன் கப்பல்கள் மொய்த்து நிற்பதையும், கடற்கரையிலும் அபிடாஸ் சம வெளியிலும் தன் போர்வீரர்கள் நிறைந்திருப்பதையும் கண்டு ஸெர்க்ஸிஸ் தான் பாக்கியவான் என்று சொன்னான். பிறகு அவன் அழ ஆரம்பித்துவிட்டான். அவன் அழுவதைப் பார்த்து அவனுடைய மாமனாகிய ஆர்ட்டாபேனஸ் - கிரேக்கர்கள்மீது படையெடுத்துச் செல்ல வேண்டாமென்று முன்பு தைரியமாக ஆலோசனை கூறிய அதே ஆர்ட்டாபேனஸ் - 'ஓ, அரசனே! நீ இப்போது செய்யும் காரியமும் சற்று முன்பு செய்த காரியமும் ஒன்றுக்கொன்று எவ்வளவு வேற்றுமை உடையனவாய் இருக்கின்றன! பாக்கியவான் என்று உன்னைச் சொல்லிக்கொண்ட நீ இப்போது கண்ணீர் சிந்துகிறாயே?' என்று கேட்டான். ஸெர்க்ஸிஸ் அதற்கு விடையாக, 'ஆமாம், நான் எல்லாவற்றையும் எண்ணிப் பார்த்த பிறகு மனிதனுடைய வாழ்நாள் எவ்வளவு குறுகியது என்பதை நோக்க என் மனத்தில் இரக்கம் உண்டாயிற்று. இங்கே காணப்படும் இச்சேனை வெள்ளத்திலே ஒருவன்கூட நூறு வருஷங்களுக்குப்பின் உயிருடன் இருக்கப் போவதில்லையே' என்று கூறினான்."

ஆகவே அப்பெரிய சேனை நிலத்திலே முன்னேறிச் சென்றது. பல சேனைக் கப்பல்களும் அதனுடன் கடல் வழியாகச் சென்றன. ஆனால் கடல் கிரேக்கர்களின் பங்கில் இருந்தது. அதில் எழுந்த பெரும் புயலினால் பெரும்பாலான கப்பல்கள் அழிந்து போயின. கிரேக்கர்கள் தங்களைத் தாக்கவரும் எதிரியின் பெரும் பலத்தைக் கண்டு பயந்துபோய்த் தங்கள் சச்சரவுகளை மறந்து ஒன்று

பட்டார்கள். பாரசீகர்களுக்கு முன்னால் பின்வாங்கிச் சென்று 'தர்மாப்பைலி' என்னும் இடத்தில் தடுத்து நிறுத்த முயன்றார்கள். ஒரு பக்கத்தில் மலையும் மற்றொரு பக்கத்தில் கடலும் உடைய குறுகலான வழி இது. ஆகவே ஒருசிலர்கூடப் பெருஞ்சேனையை இங்கு எதிர்த்து நிற்கலாம். இதைச் சாகும் வரையில் காப்பதற்கு லியோனிடாஸ் (Leonidas) என்பவனைத் தலைவனாகக் கொண்ட 300 ஸ்பார்ட்ட வீரர்கள் அடங்கிய சிறு படை ஒன்று நியமிக்கப்பட்டது. மாரதான் சண்டை நடந்த பத்து வருஷங்களுக்குப் பிறகு இது நடந்தது. அஞ்சா நெஞ்சம் படைத்த இவ்வீரர்கள் தங்கள் தேசத்தின் தலை விதியை நிர்ணயிக்கக் கூடிய அந்நாளில் தங்கள் தேசத் திற்குப் போற்றற்குரிய சேவை செய்தார்கள். பாரசீக சேனையை இவர்கள் எதிர்த்து நின்றபோது கிரேக்க சேனை பின்வாங்கிச் சென்றது. அந்தக் குறுகலான வழியில் ஒருவன் இறந்தால் உடனே அவன் இடத்திற்கு வேறொருவன் வருவான். இப்படியாக எல்லா வீரர்களும் ஒருவர்பின் ஒருவராக மாண்டார்கள். பாரசீக சேனை முன்னேறிச் செல்ல முடியவில்லை. லியோனிடாஸ் என்பவனும் அவனுடைய 300 வீரர்களும் 'தர்மாப்பைலி' என்னும் இடத்தில் போரில் பட்டுவீழ்ந்த பிறகுதான் பாரசீக சேனை மேலே செல்ல முடிந்தது. 2410 ஆண்டு களுக்குமுன் அதாவது கி. பி. 480-இல் இது நிகழ்ந்தது. அவர்களின் வெல்லமுடியாத வீரத்தை இன்று நினைத்துக் கொண்டால்கூட நமது உள்ளம் குலுங்குகிறது. இன்று கூட நாம் தர்மாப்பைலிக்குப் போனால் லியோனிடாஸும் அவனுடைய வீரர்களும் கல்லில் பொறித்திருக்கும் கீழ் வரும் இச்செய்தியைக் கண்டு கண்கலங்கி நிற்போம்.

" இவ்வழியாகப் போகும் நீங்கள் ஸ்பார்ட்டாவுக்குச் சென்று நாங்கள் தேசத்தின் கட்டளைக்குப் பணிந்து

இங்கே இறந்துபட்டோம் என்று அங்குள்ளவர்களுக்குச் சொல்வீர்களாக !"

மரணத்தையும் வென்று நிற்கும் வீரம் வியப்பைத் தரவில்லையா? லியோனிடாஸும் தர்மாப்பைலியும் எந் நாளும் மனிதர் உள்ளத்திலே சிரஞ்சீவியாக விளங்கிக் கொண்டிருக்கும். தூரதேசமாகிய இந்தியாவிலுள்ள நாம்கூட அதை நினைக்கும்போது உத்வேகம் கொள்ளு கிறோம். அப்படியிருக்கும்போது நம் சொந்த ஜனங் களும் நம் மூதாதையர்களும் ஆகிய ஹிந்துஸ்தானத்து ஆடவர்களும் மாதர்களும் மரணத்தைக் கண்டு எள்ளி நகையாடினார்கள் என்றால், மானத்தை இழந்து அடிமை வாழ்வு வாழ்வதைவிடச் சாவதே மேல் என்று எண்ணினார்கள் என்றால், கொடுங்கோன்மையின் கீழ் வளைந்து வாழ விரும்பாமல், பிளந்து மடிந்தார்கள் என்றால் நாம் அதைப்பற்றி என்ன சொல்லுவோம், என்ன உணர்ச்சி கொள்ளுவோம்! சித்தூரின் ஒப்பற்ற கதையை உன்னிப் பார்! அங்கு வாழ்ந்த ராஜபுத்திர ஆண் பெண்களின் வீரம் நம்மைத் திகைக்க வைக்கிற தல்லவா? இந்தக் காலத்திலும் நம்மைப்போல் உணர்ச்சி மிகுந்த நம் தோழர்கள் இந்தியாவின் சுதந்தரத்துக் காகச் சாவுக்கும் அஞ்சாமல் முன்வருவதை எண்ணிப் பார்!

தர்மாப்பைலி சிறிது காலம் பாரசீக சேனையைத் தடுத்து நிறுத்தியது. ஆனால் அதிக காலம் முடியவில்லை. கிரேக்கர்கள் புறங்காட்டினார்கள்; சில கிரேக்க நகரங் கள் எதிரிக்குப் பணிந்தும் விட்டன. மானம் மிகுந்த ஏதென்சு நகரத்தார் தாங்கள் எதிரிக்குப் பணிவதை விடத் தங்கள் அழகிய நகரம் அழிவது மேல் என்று கருதி அனைவரும் நகரத்தை விட்டுவிட்டுக் கப்பல்களில் ஏறிச் சென்றுவிட்டார்கள். பாரசீகர்கள் அந்நகரில்

பிரவேசித்து அதை எரித்தார்கள். ஏதென்சின் கடற் படை இன்னும் தோல்வி அடையாததால் சலாமிஸ் என்னும் இடத்துக்கருகில் ஒரு பெரிய கடற் போர் நிகழ்ந்தது. பாரசீகக் கப்பல்கள் அழிக்கப்பட்டன. இதனால் ஸெர்க்ஸிஸ் மனம் உடைந்து பாரசீகத்துக்குத் திரும்பிப் போனான்.

சிலகாலம் வரையில் பாரசீகம் பெரிய சாம்ராஜ்ய மாகத் திகழ்ந்தது. ஆனால் மாரதான், சலாமிஸ் இரண்டும் அதன் வீழ்ச்சிக்குரிய வழியைக் காட்டின. அது எவ்வாறு வீழ்ச்சியுற்றதென்பதைப் பிறகு காண்போம். அந்தக் காலத்தில் இருந்தவர்கள் இப்பெரிய சாம்ராஜ்யம் நிலை கலங்கி ஆடுவதைக் கண்டு மிகவும் ஆச்சரியப்பட்டிருப் பார்கள். ஹெரடோடஸ் இதைப்பற்றிச் சிந்தித்து இதிலிருந்து ஒரு படிப்பினை எடுத்துக் காட்டியிருக்கிறார். ஒரு தேசத்தின் சரித்திரத்தில் மூன்று நிலைகள் உண்டு என்று அவர் சொல்லுகிறார். முதல் நிலை வெற்றி. இரண்டாவது நிலை வெற்றியின் பயனாக விளையும் அகங்காரமும் அநீதியும். மூன்றாவது நிலை இவற்றின் பயனாக விளையும் வீழ்ச்சி.

# 16

## புகழ்பெற்றிலங்கிய கிரேக்கர்

ஜனவரி 23, 1931

பாரசீகர்கள்மீது கிரேக்கர்கள் அடைந்த வெற்றியினால் இரண்டு பலன்கள் ஏற்பட்டன. பாரசீக சாம்ராஜ்யம் கொஞ்சம் கொஞ்சமாக வலிகுன்றி வீழ்ச்சியடையத் தலைப்பட்டதும் கிரேக்கர்களின் சரித்திரம் ஒளிவிட்டுப் பிரகாசிக்க ஆரம்பித்தது. கிரீஸ் தேசத்தின் சரித்திரத்தில் இத்தகைய சிறப்புப் பொருந்திய காலப் பகுதி மிகவும் குறுகியது என்று சொல்லலாம். இருநூறு ஆண்டுகளுக்குச் சற்றுக் குறைவாகவே அது பெருமையுடன் விளங்கியது. அந்தப் பெருமைகூடப் பரந்த சாம்ராஜ்யத்துக்குரிய - பாரசீகமும் அதற்கு முன்பு இருந்து அழிந்த சாம்ராஜ்யங்களையும்போன்ற - பெருமை அல்ல. பிற்பாடு மகா அலெக்சாந்தர் தோன்றித் தன்னுடைய வெற்றிகளால் சிறிது காலம் உலகத்தையே பிரமிக்கச் செய்தான். ஆனால் நாம் இப்போது அவனைப்பற்றிப் பேசவில்லை. பாரசீக யுத்தங்களுக்கும் அலெக்சாந்தர் தோன்றுவதற்கும் இடையே உள்ள காலத்தைப்பற்றிப் பேசிக்கொண்டிருக்கிறோம் - அதாவது தர்மாப்பைலி, சலாமிஸ் போர்களுக்குப் பிந்திய 150 வருஷ காலம். பாரசீக எதிர்ப்பு கிரேக்கர்களை ஒன்றுபடச் செய்தது. அந்த எதிர்ப்பினால் உண்டாகிய பயம் நீங்கியவுடனே அவர்கள் மறுபடியும் பிரிந்து ஒருவரோடு ஒருவர் சண்டை போட்டுக்கொள்ள ஆரம்பித்தார்கள். குறிப்பாக ஏதென்சு நகர-ராஜ்யத்துக்கும் ஸ்பார்டா நகர-ராஜ்யத்

துக்கும் பெருத்த போட்டியும் பகைமையும் ஏற்பட்டன. ஆனால் அந்தச் சண்டைகள் முக்கியம் வாய்ந்தவை அல்ல. அவைகளைப்பற்றி நாம் அதிகம் கவனிக்கவேண்டியதில்லை. அந்நாளில் கிரீஸ் வேறு வழிகளில் சிறந்து விளங்கியிரா விட்டால் நமக்கு இந்தச் சண்டைகளைப்பற்றிய ஞாபகங் கூட இராது.

அக்காலத்திய கிரீஸைப்பற்றி நமக்குக் கிடைத்துள்ள நூல்களும், உருவச்சிலைகளும், பாழிடங்களும் மிகச் சிலவே. ஆனால் இந்தச் சிலவற்றிலிருந்தே நாம் கிரேக்கர் கள் பல துறைகளிலும் அடைந்திருந்த மேன்மையைக் கண்டு விம்மிதம் அடைகிறோம். அழகிய சிலைகளையும் அற் புதமான கட்டிடங்களையும் சிருஷ்டித்த அவர்களுடைய மனப்பான்மையையும் கைத்திறனையும் என்னென்பது! அக்காலத்தில் வாழ்ந்த புகழ்பெற்ற சிற்பிகளில் பிடியாஸ் (Phidias) என்பவன் ஒருவன். கிரேக்கர்கள் இயற்றி யுள்ள துன்ப நாடகங்களும் இன்ப நாடகங்களும் மிகச் சிறந்தவையாகும் சோபோகிளீஸ் (Sophocles), ஈஸ்கைலஸ் (Aeschylus), யூரிபிடீஸ் (Euripides), அரிஸ்டோபேனஸ் (Aristophanes), பிண்டார் (Pindar), மினண்டர் (Menander), சாபோ (Sappho) - இவைகள் வெறும் பெயர்களாக உனக்கு இப்போது தோற்றலாம். ஆனால் உனக்கு வயதுவந்த பிறகு நீ அவர்கள் இயற்றிய நூல்களைப் படித்து, கிரீஸின் புகழை ஒருவாறு அறிந்து கொள்ளக்கூடும்.

கிரேக்க சரித்திரத்தின் இப்பகுதி ஒரு தேசத்தின் சரித்திரத்தை நாம் எவ்வாறு அர்த்தம் செய்துகொள்ள வேண்டும் என்பதற்கு ஒரு முன்னெச்சரிக்கையாக விளங்குகிறது. கிரேக்க ராஜ்யங்களின் சண்டைகளையும் அவற்றின் சின்னத்தனங்களையும் மட்டுமே நாம் கவனிப்போமானால் நாம் கிரீஸைப்பற்றி என்ன அறிந்து

கொள்ள முடியும்? அவர்களை நாம் சரியானபடி அறிந்து கொள்ள வேண்டுமானால் அவர்களுடைய உள்ளத்தில் புகுந்து அவர்களுடைய சித்த நிலையையும் செயலையும் மதித்துப் போற்ற முயலவேண்டும். ஒரு நாட்டின் புறச் சரிதையைவிட அதன் அகச்சரிதையே முக்கியமானது. இந்தக் காரணத்தினாலேதான் இன்றைய ஐரோப்பா பல வழிகளில் பண்டைய கிரேக்க கலாசாரத்தின் குழந்தையாக விளங்குகிறது.

தேசங்களின் வாழ்விலே இத்தகைய சிறப்புவாய்ந்த பகுதிகள் தோன்றி மறைவதை நினைத்துப் பார்த்தால் நமக்குஒருவிதமான கவர்ச்சியும் ஆச்சரியமும் உண்டாகின் றன. சிறிது காலம் எல்லாம் ஒளிமயமாக விளங்குகிறது. அக்காலத்தில் வாழும் அந்நாட்டு மக்கள் அழகுள்ளவற் றைச் சிருஷ்டிக்கிறார்கள். ஜனங்கள் அருளாவேசம் அடைந்தவர்கள்போல் ஆகிவிடுகிறார்கள். நமது தேசத்தி லும் அத்தகைய காலப்பகுதிகள் வந்துபோவதை நாம் காண்கிறோம். நமக்குத் தெரிந்தவரையில் இவற்றில் பழை மையாக விளங்குவது நம் வேதங்களும் உபநிஷதங்களும் வேறு நூல்களும் தோன்றிய காலமேயாகும். துரதிருஷ்ட வசமாக அந்நாட்களைப் பற்றிய வரலாறு நமக்குக் கிடைக்கவில்லை. பல அரிய பெரிய நூல்கள் அழிந்து போயிருக்கலாம். பல இனிமேல் கண்டெடுக்கப்பட்டா லும் படலாம். ஆனால் பழங்கால இந்தியர்கள் அறி வாற்றல்களில் இணையற்றவர்கள் என்பதைக் காட்டு வதற்குப் போதிய சான்று இருக்கிறது. பிற்பட்ட இந்திய சரித்திரத்திலும் இத்தகைய சிறப்புற்றொளிரும் பகுதிகள் காணக் கிடக்கின்றன. வருங்காலத்திலும் நாம் அவ்வாறு விளங்கலாம்.

இக்காலத்தில் சிறப்பாக ஏதென்சு பெரும்புகழுடன் ஒளிர்ந்தது. பெரிகிளீஸ் (Pericles) என்னும் ஒரு சிறந்த

ராஜதந்திரி 30 ஆண்டுகள் அதன் தலைவனாக விளங்கினான். அவன் காலத்தில் ஏதென்சு நகரத்தில் அழகிய மாட மாளிகைகள் தோன்றின. அங்கே கலைஞர்களும் அறிஞர்களும் நிறைந்திருந்தார்கள். இப்பொழுதுகூட, 'பெரிகிளீஸ் காலம்' என்றும், 'பெரிகிளீஸ் காலத்து ஏதென்சு' என்றும் சிறப்பித்துப் பேசுகிறோம்.

சற்றேறக்குறைய இக்காலத்தில்தான் நம் சரித்திராசிரியராகிய ஹெரடோடஸ் ஏதென்சில் வாழ்ந்திருந்தார். ஏதென்சின் வளர்ச்சியைப் பற்றி அவர் சிந்தித்துப் பார்த்து வழக்கம்போல் அதிலிருந்து ஒரு படிப்பினையை நமக்கு எடுத்துக் காட்டுகிறார். அவர் தாம் எழுதிய சரித்திரத்தில் பின்வருமாறு எழுதியிருக்கிறார்:

"ஏதென்சின் வல்லமை வளர்ந்தோங்கியது. சுதந்தரம் நன்மை பயக்கும் என்பதற்கு இதுவே சாட்சி. இதை எங்கும் காணலாம். ஏதென்சு யதேச்சாதிகாரக் கொடுங்கோன்மைக்கு உட்பட்டிருந்தபோது அந்த நகரத்தார் மற்றவர்களைப் போரில் வெல்ல முடியவில்லை. அந்தக் கொடுங்கோன்மையினின்றும் விடுபட்டபொழுது அவர்கள் மற்றவர்களை விஞ்சி நின்றார்கள். இதிலிருந்து, அடிமைத்தனத்தில் அவர்கள் ஓர் எஜமானனுக்காக உழைக்கவேண்டியிருந்தபடியால் பூரண முயற்சி செய்யவில்லை என்றும் விடுதலையடைந்த பிறகு ஒவ்வொருவனும் தானாகவே தன்னால் இயன்றதனைத்தையும் அக்கறையுடன் செய்தான் என்றும் நன்கு விளங்குகிறது."

அக்காலத்தில் வாழ்ந்த சில பெரியார்களின் பெயர்களை நான் உனக்குச் சொன்னேன். அக்காலத்திற்கு மட்டுமின்றி எக்காலத்திற்கும் பெரியாராக விளங்கும் ஒருவருடைய பெயரை நான் இன்னும் சொல்லவில்லை. அவருடைய பெயர் சாக்ரடீஸ் என்பது. சதா சத்திய சோதனையில் ஈடுபட்டிருந்த அவர் ஒரு சிறந்த தத்துவ

ஞானி. பெறுதற்குரியது என்று அவர் மதித்த ஒரே பொருள் உண்மை அறிவேயாகும். தம் நண்பர்களோடும் தமக்குத் தெரிந்தவர்களோடும் அடிக்கடி அரிய விஷயங்களைப்பற்றி அவர் விவாதிப்பது உண்டு. அத்தகைய விவாதங்களின் மூலம் உண்மை புலனாகுமென்பது புலனாகுமென்பது அவருடைய எண்ணம். அவருக்குப் பல சீடர்கள் உண்டு அவர்களில் தலைசிறந்தவர் பிளேடோ என்பவர். பிளேடோ இயற்றிய பல அரிய நூல்கள் நமக்குக் கிடைத்திருக்கின்றன. அவைகளிலிருந்து அவருடைய ஆசிரியர் சாக்ரடீசைப் பற்றி நாம் அதிகமாகத் தெரிந்துகொள்ள முடிகிறது. உண்மையைக் காணுவதற்குச் செய்யப்படும் முயற்சியையோ அம்முயற்சியைச் செய்பவர்களையோ கண்டால் அரசாங்கங்களுக்குப் பிடிப்பதில்லை போலும். பெரிகிளீஸ் காலத்துக்குப் பின்பு இருந்த ஏதென்சு அரசாங்கம் சாக்ரடீசின் முறைகளை விரும்பவில்லை. அவ்வரசாங்கத்தார் அவரை விசாரித்து அவருக்கு மரண தண்டனை விதித்தார்கள். ஜனங்களோடு அவர் நடத்தும் விவாதங்களை விட்டுவிட்டுத் தம் வழிகளை மாற்றிக்கொண்டால் அவரை ஒன்றும் செய்யாமல் விட்டுவிடுவதாக அவர்கள் தெரிவித்தார்கள். ஆனால் சாக்ரடீஸ் அதற்கு உடன்படவில்லை. தம் கடமையைத் துறப்பதைக் காட்டிலும் உயிரைத் துறப்பது மேல் என்று அவர் கருதினார். ஒரு கிண்ணத்தில் தமக்குக் கொடுக்கப்பட்ட விஷத்தை உண்டு அவர் உயிர் துறந்தார். உயிர் துறக்குமுன்பு தம்மீது குற்றம் சாட்டியவர்களையும், நியாயாதிபதிகளையும், ஏதென்சு நகர மாந்தர்களையும் பார்த்து அவர் பின்வருமாறு கூறினார்:

"நான் செய்துவரும் தத்துவ ஆராய்ச்சியைக் கைவிட்டுவிட்டால் என்னை விடுதலை செய்வதாக நீங்கள் சொல்வீர்களாயின், ஓ ஏதென்சு நகரவாசிகளே! உங்க

ளுக்கு என் மனமார்ந்த வந்தனம். ஆனால் உங்களுக்குக் கீழ்ப்படிவதைவிடக் கடவுள் எனக்கு விதித்திருப்பதாக நான் நம்பியிருக்கும் பணியைச் செய்ய உறுதி கொண்டிருக்கிறேன். என் உடலில் வலிவும் உயிரும் இருக்கும் வரையில் தத்துவ ஆராய்ச்சி செய்வதை நான் நிறுத்த மாட்டேன். நான் யாரைக் கண்டாலும் அவரை நெருங்கி, 'ஐயா, அறிவைப் பெறுவோம், உண்மையை உணர்வோம், ஆத்மலாபத்தை அடைவோம் என்னும் எண்ணமின்றிப் பொருளிலும் வீண் பெருமைகளிலும் மனம் வைத்து உழலுகிறீர்களே! உங்களுக்கு வெட்கமாக இல்லையா?' என்று கேட்கும் வழக்கத்தை விடமாட்டேன். எனக்குச் சாவு என்பது இன்னதென்று தெரியாது. ஒருவேளை அது நன்மையானதாகவும் இருக்கலாம். நான் அதைக் கண்டு அஞ்சவில்லை. ஆனால் ஒருவன் தன் கடமையினின்றும் வழுவுதல் தீது என்பதை நான் நன்கு அறிந்திருக்கிறேன். ஆகவே தீது என்று தெரிந்திருப்பதைச் செய்வதைக் காட்டிலும் ஒருவேளை நன்மையாக முடிந்தாலும் முடியக் கூடிய சாவையே நான் வரவேற்கிறேன்."

உயிர்வாழும்போது உண்மைக்கும் அதை அறியும் அறிவுக்கும் சிறந்த தொண்டு செய்துவந்த அப்பெரியார் அவ்வுயிரைத் தியாகம் செய்து அவைகளுக்கு இன்னும் சிறந்த தொண்டு செய்தார். அவர் வாழ்க!

இக்காலத்தில் அபேதவாத (Socialism) தத்துவத்தைப் பற்றியும், முதலாளித்துவத்தைப் (Capitalism) பற்றியும் இன்னும் பல விஷயங்களையும் பற்றிய வாதப் பிரதிவாதங்களையும் நீ அடிக்கடி படிக்கவும் கேட்கவும் நேரிடும். உலகத்தில் கொடுமையும் துன்பமும் நிறைந்திருக்கின்றன. பலருக்கு இந்நிலை அடியோடு பிடிக்காததால் அவர்கள் இதை மாற்றி அமைக்க விரும்புகிறார்கள். பிளேட்டோகூட அரசாங்கத்தைப் பற்றிய பிரச்னைகளை

ஆராய்ந்து அவற்றைப்பற்றி எழுதியிருக்கிறார். ஆகவே, மக்கள் யாவரும் இன்புறவேண்டும் என்ற நோக்கத்துடன் ஒரு நாட்டின் அரசாங்கத்தையும் சமூகத்தின் அமைப்பையும் எவ்வாறு உருவாக்குவது என்பதைப்பற்றிப் பலர் அக்காலத்திலேயே சிந்தித்து வந்திருக்கிறார்கள் என்பது தெரிகிறது.

பிளேட்டோவுக்கு முதுமைப் பருவம் வந்தெய்திய பொழுது அரிஸ்டாடில் என்னும் இன்னொரு கிரேக்கப் பெரியார் தோன்றி முன்னுக்கு வந்துகொண்டிருந்தார். இவர் மகா அலெக்சாந்தருக்குக் குருவாக இருந்தவர். இவர் தம் வேலையைச் செய்வதற்கு அலெக்சாந்தர் மிகவும் உதவியாக இருந்தான். சாக்ரடீஸ், பிளேட்டோ இவர்களைப்போல், அரிஸ்டாடில் தத்துவ ஆராய்ச்சியில் ஈடுபடவில்லை. இயற்கையைக் கவனித்து அதன் கூறுகளை அறிந்துகொள்வதில் இவர் அதிக ஊக்கம் காட்டினார். இதை இயற்கைத் தத்துவம் (Natural philosophy) அல்லது விஞ்ஞானம் (Science) என்று நாம் அழைக்கிறோம். ஆகவே, ஆதிகாலத்து விஞ்ஞானிகளில் அரிஸ்டாடில் ஒருவராக விளங்கினார்.

இனி நாம் அரிஸ்டாடில் அவர்களின் சீடனை மகா அலெக்சாந்தரையும் அவன் வாழ்க்கையில் அதிவேகமாக அடைந்த முன்னேற்றத்தையும் கவனிக்க வேண்டும். இதை நாளைக்கு வைத்துக்கொள்ளலாம். இன்று இவ்வளவு போதும்.

இன்றைத் தினம் வசந்தபஞ்சமி, அதாவது வசந்த காலத்தின் வருகையைக் குறிக்கும் நாள். குளிர்காலம் போய்விட்டது. கூதல் அடிப்பது நின்றுவிட்டது. பறவைகள் தினே தினே அதிகமாக வந்து பாட்டிசைக்கின்றன. பதினைந்து வருஷங்களுக்கு முன் இதே நாளில் டில்லிமாநகரில் எனக்கும் உன் அம்மாவுக்கும் திருமணம் நடந்தது!

# 17

# புகழ்பெற்ற இளம் வெற்றிவீரன், ஆனால் வீண் கர்வி

ஜனவரி 24, 1931.

கடந்த கடிதத்திலும் அதற்கு முன்பும் நான் மகா அலெக்சாந்தரைப்பற்றிக் குறிப்பிட்டிருக்கிறேன். அவனைக் கிரேக்க நாட்டான் என்று சொன்னதாக எனக்கு ஞாபகம். அது அவ்வளவு சரியல்ல. கிரீஸுக்கு வடக்கே யுள்ள மாசிடோனியா நாட்டைச் சேர்ந்தவன் அவன். மாசிடோனியர் பல வழிகளில் கிரேக்கர்களை ஒத்திருந் தார்கள். அவர்களைக் கிரேக்கர்களுடைய ஒன்றுவிட்ட சகோதரர்கள் என்று அழைக்கலாம். அலெக்சாந்தரின் தந்தையாகிய பிலிப் மாசிடோனியாவுக்கு அரசனாக இருந்தான். அவன் நல்ல சாமர்த்தியசாலி; தன் சிறு நாட்டை வல்லமை வாய்ந்ததாகச் செய்து தன் கீழ் நல்ல சேனை ஒன்றையும் வைத்திருந்தான். அலெக்சாந்தர் மகா அலெக்சாந்தர் என்று அழைக்கப்பட்டுச் சரித்திரத்தில் புகழுடன் விளங்குகிறான். ஆனால் அவன் சாதித்தவற்றில் பெரும்பகுதிக்குக் காரணமாய் விளங்கியது அவன் தந்தை அவனுக்கு முன்பு செய்து முடித்த வேலையேயாகும். அலெக்சாந்தர் உண்மையில் பெரியவனா என்பது சந்தேகத்துக்கிடமான விஷயம். நான் அவனைப் பெரியவ னாகக் கொள்வதில்லை. ஆனால் அவன் குறுகிய காலத்தில் இரண்டு கண்டங்களில் தன் பெயரை நிலைநாட்டி விட்டான். உலகத்தை வென்றவர்களில் முதலானவன் என்று சரித்திரத்தில் எண்ணப்படுகிறான். வெகு

தொலைவிலுள்ள மத்திய ஆசியாவில் அவனை இன்றும் மறவாமல் ‘சிகந்தர்’ என்று அழைக்கிறார்கள். அவன் உண்மையில் எத்தகையவனாக இருந்தாலும் சரித்திரத்தில் அவன் பெயருக்கு ஒரு மகிமை ஏற்பட்டுவிட்டது. பல நகரங்களுக்கு அவன் பெயரை வைத்து வழங்கி வருகிறார்கள். இன்றும் அவைகளைக் காண்கிறோம். அவைகளில் தலைசிறந்தது எகிப்திலுள்ள அலெக்சாந்திரியா நகரமாகும்.

அலெக்சாந்தர் அரசனானபொழுது அவனுக்கு வயது இருபதுதான். பேரும் புகழும் பெறவேண்டும் என்னும் ஆசை அவனுக்கு நிறைய இருந்தது. அவன் தன் தந்தையின் சிறந்த சேனையைத் திரட்டிக்கொண்டு பழைய விரோதி நாடாயகி பாரசீகத்தின்மீது படையெடுக்க ஆவலாக இருந்தான். கிரேக்கர்கள் பிலிப்பையோ அலெக்சாந்தரையோ விரும்பவில்லை. ஆனால் அவர்கள் பிலிப்-அலெக்சாந்தர் இவர்களின் வல்லமையைக் கண்டு அடங்கிப் போனார்கள். பாரசீகத்தைத் தாக்க இருக்கும் சகல கிரேக்க சேனைகளுக்கும் தலைவனாக அவர்கள் முதலில் பிலிப்பையும் பிறகு அலெக்சாந்தரையும் ஒப்புக்கொண்டார்கள். இவ்வாறு புதிதாகத் தோன்றிவந்த சக்திக்கு அவர்கள் பயந்துவிட்டார்கள். தீப்ஸ் என்கிற கிரேக்க நகரம் அலெக்சாந்தரை எதிர்த்துக் கிளர்ச்சி செய்தது. அவன் அதைக் கொடுமையாகத் தாக்கி அழித்தான். கட்டிடங்களை நாசம் செய்தான்; பலரைக் கொன்றான்; பல்லாயிரக்கணக்கான மக்களை அடிமைகளாக விற்றுவிட்டான். இவ்விதமான கொடிய செயல்களால் அவன் கிரீஸை நடுங்கவைத்தான். ஆனால் இவைபோன்ற செயல்களும் அவனை நாம் போற்றும்படி செய்யவில்லை, வெறுக்கும்படியே செய்கின்றன. ஸெர்க்ஸிஸ் என்பவனுக்குப் பின்வந்த மூன்றாவது

டரையஸ் என்னும் பாரசீக அரசனை அலெக்சாந்தர் போரில் ஜயித்தான். அப்போது பாரசீக மன்னனின் ஆளுகையில் இருந்த எகிப்து எளிதில் அலெக்சாந்தர் வசமாயிற்று. பிறகு அவன் மீண்டும் பாரசீகத்தின் மீது சென்று டரையஸை இரண்டாம் முறை தோற்கடித்தான். ஸெர்க்ஸிஸ் ஏதென்சு நகரைக் கொளுத்தியதற்குப் பழி வாங்கும்பொருட்டு, சக்கரவர்த்தியாகிய டரையஸின் பெரிய அரண்மனையை அலெக்சாந்தர் நிர்மூலமாக்கினன்.

ஆயிரம் ஆண்டுகளுக்குமுன் பாரசீகத்தில் பிர்தௌஸி என்கிற கவி ஒருவர் வாழ்ந்துவந்தார். அவர் பாரசீக மொழியில் 'ஷாநாமா' என்னும் அரிய காவியம் ஒன்றை இயற்றியுள்ளார். அக்காவியம் பாரசீக மன்னர்களின் சரித்திரத்தைத் தொடர்ச்சியாகக் கூறுகிறது. அலெக்சாந்தருக்கும் டரையஸுக்கும் நடந்த போர்களைக் கற்பனை நயத்துடன் கவி வர்ணித்திருக்கிறர். தோற்றுவிட்ட பிறகு டரையஸ் இந்தியாவிலிருந்து உதவி கோரினன் என்றும், வடமேற்கு இந்தியாவில் அரசாண்டுவந்த போரஸ் அல்லது புருஷோத்தமன் என்பவனுக்கு வாயு வேகத்தில் செல்லக்கூடிய ஓர் ஒட்டகத்தை அனுப்பினன் என்றும் அவர் சொல்லியிருக்கிறர். ஆனல் புருஷோத்தமன் அவனுக்கு உதவி செய்ய முடியவில்லை. அதற்குப் பின் கொஞ்ச காலத்திற்குள் அலெக்சாந்தர் புருஷோத்தமனையே சென்று தாக்கினன். ஷாநாமா என்னும் இந்நூலில் பாரசீக மன்னனும் அவனுடைய பிரபுக்களும் இந்தியப் பட்டாக் கத்திகளையும் (Swords), குத்துவாள்களையும் (Daggers) உபயோகித்ததாகப் பல குறிப்புகள் காணப்படுகின்றன. இதிலிருந்து அலெக்சாந்தர் காலத்திலேயே இந்தியாவில் நல்ல எஃகினலான கத்திகள் செய்துவந்தார்கள் என்றும் அவற்றை வெளிநாடுகளில் விரும்பி வரவேற்றர்கள் என்றும் தெரிகிறது.

பாரசீகத்திலிருந்து அலெக்சாந்தர் மேலும் மேலும் போனான். இப்போது ஹீரெட் (Herat), காபுல், ஸமர்க்கந்த் ஆகிய நகரங்கள் இருக்கும் பிரதேசத்தின் வழியாக அவன் சென்று சிந்து நதியின் மேற்பள்ளத் தாக்குகளை அடைந்தான். இங்கே அவன் தன்னை எதிர்த்த முதல் இந்திய அரசனைக் கண்டான். கிரேக்க சரித்திராசிரியர்கள் அவ்விந்திய அரசனைத் தங்கள் முறைப்படி போரஸ் என்று அழைக்கிறார்கள். அவனுடைய உண்மைப் பெயர் இதைப்போல் ஏதாவது இருந்திருக்க வேண்டும். ஆனால் அது என்னவென்று திட்டமாகத் தெரியவில்லை. போரஸ் வெகு தீரத்துடன் போர்புரிந்தான் என்றும், அலெக்சாந்தர் அவனை எளிதில் வெல்லக் கூட வில்லை என்றும் சொல்லப்படுகிறது. போரஸ் நல்ல உயரமும் சுத்த வீரத்தனமும் பொருந்தியவனாக இருந்தானும். அவனது துணிவையும் வீரத்தையும் மெச்சிய அலெக்சாந்தர் அவனைப் போரில் வென்றபிறகும் அவன் நாட்டை அவனுக்கே கொடுத்துவிட்டான். ஆனால் அதன் பிறகு போரஸ் தனி அரசனாக இராமல் கிரேக்கர் களுக்கு அடங்கிய ‘ கவர்னரா’க இருந்தான்.

அலெக்சாந்தர் கைபர் கணவாய் வழியாக இந்தியா வுக்குள் பிரவேசித்து ராவல்பிண்டிக்குச் சற்று வடக்கே யுள்ள தக்ஷசீலத்தைக் கடந்து வந்தான். இந்தப் புராதன நகரத்தின் அழிவுகளை இன்றும் காணலாம். போரஸை ஜயித்தபிறகு அலெக்சாந்தர் கங்கையை நோக்கித் தெற்கே செல்ல எண்ணியதாகத் தெரிகிறது. ஆனால் அவன் அப்படிச் செய்யாமல் சிந்துநதிப் பள்ளத்தாக்கு வழியாகத் திரும்பிப் போய்விட்டான். அலெக்சாந்தர் ஹிந்துஸ்தானத்தின் மத்திய பாகங்களின்மீது படை யெடுத்துச் சென்றிருந்தால் என்ன ஆகியிருக்கும் என்று யோசித்துப் பார்க்கலாம். நெடுக ஜயித்துக்கொண்டே

போயிருப்பானு? அல்லது இந்திய சேனைகள் இவனை வென்றிருக்க முடியுமா? எல்லைப்புறத்திலிருந்த ஒரு சிறிய அரசனுகிய போரஸை வெல்வதற்குள் இவன் திணறிப் போய்விட்டான். ஆகவே மத்திய இந்தியாவிலுள்ள பெரிய அரசர்கள் அலெக்சாந்தரைத் தடுத்து நிறுத்தியிருக்கக்கூடும். ஆனுல் மேலே செல்வது அலெக்சாந்தரின் விருப்பத்தைப் பொறுத்ததாக இல்லை. அவனுடைய போர்வீரர்கள் அவ் விஷயத்தை முடிவு செய்துவிட்டார்கள். அவர்கள் பல வருஷங்களாக அலைந்து திரிந்து களைத்துப்போயிருந்தார்கள். ஒருவேளை இந்தியர்களின் போர்த்திறமையைக் கண்டு இவர்களிடம் தோற்றுவிட்டால் என்ன செய்வது என்று அவர்கள் அஞ்சியும் இருக்கலாம். காரணம் எதுவாயிருந்தாலும் திரும்பிப் போகவேண்டும் என்று தன் சேனை சொன்னதற்கு அலெக்சாந்தர் ஒப்புக்கொள்வதைத் தவிர வேறு வழியில்லை. திரும்பிப் போகும்போது அவர்கள் உணவும் தண்ணீரும் இன்றி மிகவும் கஷ்டப்பட்டார்கள். கொஞ்ச நாளைக்குப் பிறகு கி. மு. 323-ஆம் ஆண்டில் அலெக்சாந்தர் பாபிலோனில் இறந்து போனுன். பாரசீகத்தின் மீது படையெடுத்துப் புறப்பட்டவன் மீண்டும் தன் தாய் நாடாகிய மாசிடோனியாவைக் காணுமலேயே இறந்துவிட்டான்.

அலெக்சாந்தர் இறந்தபோது அவனுக்கு வயது முப்பத்துமூன்று. தனது கொஞ்சகால வாழ்க்கையில் இப் ‘பெரிய’ மனிதன் சாதித்தது என்ன? சில போர்களை வென்று புகழ் பெற்றுன். அவன் பெரிய சேனுதிபதி என்பதில் சந்தேகம் இல்லை. ஆனுல் அவன் வீண் பெருமையும் அகங்காரமும் கொண்டவனுகவும் சில வேளைகளில் எவ்விதக் கொடிய செயலையும் செய்ய அஞ்சாதவனுகவும் இருந்தான். தன்னை ஏறக்குறையத் தெய்வத்துக்குச் சம

மானவன் என்றே அவன் எண்ணியிருந்தான். அவனுக்குக் கோப வெறி ஏற்படும்பொழுது தன்னுடைய சிறந்த நண்பர்களில் சிலரைக் கொன்று, பெரிய பட்டணங்களையும் அவற்றில் வாழும் மக்களையும் அழித்திருக்கிறான். அவனுடைய சாம்ராஜ்யத்தில் பேர் சொல்வதற்குக்கூட உருவான செயல்கள் எதையும் அவன் செய்துவிட்டுப் போகவில்லை. நல்ல சாலைகளைக்கூட அவன் அமைக்கவில்லை. வானத்தில் தோன்றும் விண்வீழ் கொள்ளியைப் போல அவன் தோன்றி மறைந்தான். அவனுடைய நினைப்பு ஒன்றைத்தான் அவன் விட்டுச் சென்றான். அவனுடைய மரணத்துக்குப் பின்பு அவனுடைய குடும்பத்தார் ஒருவரையொருவர் வெட்டிக்கொண்டு மடிந்தார்கள். அவனுடைய சாம்ராஜ்யமும் சீர்குலைந்து சிதறிப்போயிற்று. 'உலகத்தை வென்றவன்' என்று அலெக்சாந்தரை அழைக்கிறார்கள். ஒருசமயம் தான் இன்னும் ஜயிப்பதற்கு உலகில் வேறு நாடுகள் இல்லையே என்று அவன் அழுதானும்! ஆனால் இந்தியாவை - வடமேற்கில் ஒரு சிறிய பகுதியைத் தவிர - அவன் ஜயிக்கவில்லை. சீனா அலெக்சாந்தர் காலத்திலேயே ஒரு பெரிய ராஜ்யமாக இருந்தது. அவன் அதற்கு அருகில்கூடச் செல்லவில்லை.

அவன் இறந்தபின்பு அவனுடைய சேனாதிபதிகள் அவனுடைய சாம்ராஜ்யத்தைப் பங்கு போட்டுக்கொண்டார்கள். டாலமி என்பவன் பங்குக்கு எகிப்து கிடைத்தது. அவன் அங்கே பலம் வாய்ந்த ஓர் அரசாங்கத்தை ஏற்படுத்தித் தனக்குப்பின் ஓர் அரச வம்சத்தை ஸ்தாபித்தான். இவ்வரசாங்கத்தின் கீழ், அலெக்சாந்திரியாவைத் தலைநகராகக் கொண்டு, எகிப்து ஒரு வல்லரசாக விளங்கியது. அலெக்சாந்திரியா நகரம் கலைக்கும் கல்விக்கும் தத்துவஞானத்துக்கும் பேர்பெற்றுப் பிரகாசித்தது.

பாரசீகமும், மெசபொடேமியாவும், சின்ன ஆசியா வில் ஒரு பகுதியும் செலூகஸ் (Seleucus) என்னும் படைத் தலைவனுக்குக் கிடைத்தன. அலெக்சாந்தரால் ஜயிக்கப் பெற்ற இந்தியாவின் வடமேற்குப் பகுதியும் இவன் பங்குக்கே விழுந்தது. ஆனால் இவன் இந்தியாவில் எந்த இடத்தையும் தன்கீழ் அடக்கிவைத்து ஆள முடியவில்லை. அலெக்சாந்தர் இறந்தவுடனே கிரேக்கசேனை இந்தியாவை விட்டுத் துரத்தப்பட்டது.

கி. மு. 326-இல் அலெக்சாந்தர் இந்தியாவுக்கு வந்தான். அவன் திடீரென்று படையெடுத்து வந்து உடனே திரும்பிப் போய்விட்டதால் இந்தியா அதனால் அதிகமாகப் பாதிக்கப்படவில்லை. அலெக்சாந்தரின் படையெடுப்பினால் இந்தியர்களுக்கும் கிரேக்கர்களுக்கும் இடையே தொடர்பு உண்டாகத் தலைப்பட்டது என்று சிலர் நினைக்கிறார்கள். ஆனால் வாஸ்தவத்தில் அலெக்சாந்தரின் காலத்துக்கு முன்பே கிழக்குக்கும் மேற்குக்கும் போக்குவரவு இருந்தது. இந்தியாவுக்கும் பாரசீகம், கிரீஸ் ஆகிய நாடுகளுக்கும் இடைவிடாத உறவு இருந்து வந்திருக்கிறது. அலெக்சாந்தர் வந்ததால் இந்த உறவு மேலும் வளர்ந்து இந்தியக் கலை நாகரிகமும் கிரேக்கக் கலை நாகரிகமும் ஒன்றோடொன்று மிகுதியாகக் கலந்திருக்கவேண்டும் என்று சொல்லலாம்.

அலெக்சாந்தரின் படையெடுப்பும் அவனுடைய மரணமும் இந்தியாவில் மௌரிய சாம்ராஜ்யம் என்று ஒரு பெரிய சாம்ராஜ்யம் தோன்றுவதற்குக் காரணமாக இருந்தன. இந்திய சரித்திரத்தில் சிறப்புடன் விளங்கும் காலப் பகுதியில் இதுவும் ஒன்று. ஆகவே இதை நாம் சற்று விரிவாகக் கவனிப்போம்.

# 18

## சந்திரகுப்த மௌரியனும் அர்த்த சாஸ்திரமும்

ஜனவரி 25, 1931.

நம் கடிதங்கள் ஒன்றில் மகத நாட்டைப்பற்றிக் குறிப்பிட்டிருக்கிறேன். இப்போது பீகார் மாகாணம் இருக்குமிடத்தில் செழித்தோங்கிய இந்த ராஜ்யம் மிகவும் பழைமையானது. பாடலிபுத்திரம் இதன் தலைநகர். அது இப்போது பாட்னு என்று வழங்குகிறது. நம்மால் பேசப்படுகிற அக்காலத்தில் நந்த அரச வம்சத்தைச் சேர்ந்த அரசர்கள் மகத நாட்டை ஆண்டுவந்தார்கள். அலெக்சாந்தர் இந்தியாவின் வடமேற்கில் படையெடுத்து வந்தபோது பாடலிபுத்திரத்தில் நந்த வம்சத்தைச் சேர்ந்த ஓர் அரசன் ஆண்டுவந்தான். இவனுடைய உறவினர்களில் சந்திரகுப்தன் என்று ஓர் இளைஞன் இருந்தான். அவன் புத்தியும் சக்தியும் ஆசையும் கொண்டவனுக இருக்கவே நந்த அரசன் அவன் புத்திக்குப் பயந்தோ அல்லது அவன் ஏதோ தவறு செய்த காரணத்தாலோ அவனை நாட்டைவிட்டு ஓட்டிவிட்டான். சந்திரகுப்தன் வடக்கே தக்ஷசீலம் போய்ச் சேர்ந்தான். அலெக்சாந்தரைப் பற்றியும் கிரேக்கர்களைப்பற்றியும் கேள்விப்பட்டு அவன் அங்குச் சென்றிருக்கலாம். இவனுடன் விஷ்ணுகுப்தன் என்னும் பெயர்பூண்ட சாமர்த்தியசாலியாகிய பிராமணன் ஒருவன் இருந்தான். அந்தப் பிராமணனுக்குச் சாணக்கியன் என்னும் ஒரு பெயருண்டு. சந்திரகுப்தனும் சாணக்கியனும் எது நேர்ந்தாலும் ‘விதியின் செயல்’ என்று

பணிந்துபோகிற சாதுக்கள் அல்ல. அவர்கள் தங்கள் மனத்தில் பெரிய பெரிய ஆசைகளையும் திட்டங்களையும் உள்ளடக்கிக்கொண்டு அவை நிறைவேறும் காலத்தை எதிர்பார்த்துக்கொண் டிருந்தார்கள். ஒருவேளை சந்திர குப்தன் அலெக்சாந்தரின் பெரும்புகழைக் கண்டு மயங்கித் தானும் அவனைப்போல் ஆகவேண்டுமென்று எண்ணி யிருக்கலாம். சாணக்கியன் அவனுக்கு ஏற்ற நண்பனாகவும் மதி மந்திரியாகவும் விளங்கினான். இருவரும் தக்ஷசீலத்தில் என்ன நடக்கிறதென்பதைக் கூர்மையாகக் கவனித்துக்கொண்டு உற்ற காலத்தை எதிர்நோக்கியிருந் தார்கள்.

விரைவில் அக் காலம் வந்து வாய்த்தது. அலெக் சாந்தர் இறந்த செய்தியைக் கேட்டவுடனே தான் செயல் தொடங்குவதற்கான காலம் வந்துவிட்டது என்று சந்திர குப்தன் எண்ணினான். அங்குள்ள ஜனங்களைத் தூண்டி அவர்களின் உதவிகொண்டு அலெக்சாந்தர் விட்டுச் சென்ற கிரேக்கப் படையை விரட்டி அடித்தான். தக்ஷசீலத்தைக் கைப்பற்றிய பிறகு சந்திரகுப்தனும் அவனுடைய துணைவர்களும் தெற்கே பாடலிபுரத்தின் மீது படையெடுத்துச் சென்று நந்த அரசனை வென் றார்கள். அலெக்சாந்தர் இறந்து ஐந்து வருஷங்களுக் குப்பின் கி. மு 321-இல் இது நிகழ்ந்தது. இந்நாளிலிருந்து மௌரியவம்ச ஆட்சி தொடங்குகிறது. சந்திரகுப்தன் ஏன் மௌரியன் என்று அழைக்கப்பட்டான் என்பது தெளிவாகத் தெரியவில்லை. அவனுடைய தாயின் பெயர் முரா (Mura), அதிலிருந்து இப்பெயர் வந்தது என்று சிலர் சொல்லுகிறார்கள். வேறு சிலர் அவனுடைய தகப்பன் அரசனுடைய மயில்களை வைத்துக் காத்துவந்ததால் இப்பெயர் வந்தது என்று சொல்லுகிறார்கள். சம்ஸ் கிருதத்தில் மயிலை 'மயூரம்' என்று சொல்கிறார்கள்

அல்லவா? மௌரியன் என்ற சொல்லின் மூலம் எவ்வா றேனும் இருக்கட்டும். இவனுக்குப் பல நூற்றாண்டுகளுக் குப்பின் இந்தியாவில் சந்திரகுப்தன் என்னும் பெயர் கொண்ட வேறொரு மன்னன் கீர்த்தியுடன் அரசாண் டான். அவன் வேறு, இவன் வேறு என்று உணர்த்துவ தற்காக இவன் சந்திரகுப்த மௌரியன் என்று அழைக் கப்படுகிறான்.

மகாபாரதத்திலும் மற்றப் பழைய நூல்களிலும் பாரதநாடு முழுவதையும் ஒருகுடை நிழலில் ஆண்ட சக்கரவர்த்திகளைப்பற்றிப் படிக்கிறோம். ஆனால் அக்கால நிகழ்ச்சிகளைப்பற்றி நமக்கு ஒன்றும் தெளிவாகத் தெரிய வில்லை. பாரதநாடு அல்லது பாரதவர்ஷம் என்று எதுவரையில் பரவியிருந்த நிலப்பரப்பைக் குறிப்பிட் டார்கள் என்பதும் தெரியவில்லை. பழைய அரசர்களைப் பற்றிய கதைகளில் அவர்களின் வல்லமையை மிகைப் படுத்திக் கூறியிருக்கலாம். அது எப்படியிருந்தாலும் சரித்திரத்தில் நமக்குத் தெரிந்தவரையில் இந்தியாவில் தோன்றி விளங்கிய விசாலமும் பலமும் பொருந்திய முதல் சாம்ராஜ்யம் சந்திரகுப்த மௌரியன் கண்டதேயாகும். அவனுடைய அரசாங்கம் சிறப்பும் பலமும் வாய்ந்திருந்தது என்பதை நாம் போகப்போகப் பார்க்கலாம். இத்தகைய அரசாங்கமும் ராஜ்யமும் திடீரென்று தோன்றி யிருக்க முடியா என்பது நிச்சயம். இது சாத்தியமாவ தற்கு நெடுங்காலம் முன்னரே பல நிகழ்ச்சிகள் நிகழ்ந் திருக்கவேண்டும். சிறு ராஜ்யங்களை ஒன்றுசேர்ப்பதும் ஆட்சி முறையைச் சீர்திருத்துவதும் இதற்கு முன்பே நிகழ்ந்திருக்க வேண்டும்.

அலெக்சாந்தரின் தளபதி செலுகஸ் சின்ன ஆசியாவி லிருந்து இந்தியாவரையிலிருந்த நாடுகளைத் தன் பங்காகப் பெற்றான். இவன் சந்திரகுப்த மௌரியனின் ஆட்சியின்

போது ஒரு படையுடன் இந்து நதியைக் கடந்து இந்தியாவின்மீது படை எடுத்தான். தன்னுடைய அவசர புத்திக்காக அவன் தன்னைச் சீக்கிரத்தில் நொந்துகொள்ளும்படி நேரிட்டது. அவன் சந்திரகுப்தனிடம் தோற்று வந்தவழியே திரும்பிப் போனான். நாட்டை ஜயிப்பதற்கு மாறாக இப்போது ஆப்கானிஸ்தானம் எனப்படும் காந்தார தேசத்தின் பெரும் பகுதியை அவன் சந்திரகுப்தனிடம் தோற்கவேண்டியதாயிற்று. காபுல், ஹீரெட் வரையில் உள்ள பிரதேசத்தைச் சந்திரகுப்தன் வென்று செலூகசின் பெண்ணையும் மணந்துகொண்டான். அவனுடைய சாம்ராஜ்யம் வட இந்தியா முழுவதையும், ஆப்கானிஸ்தானத்தின் ஒரு பகுதியையும் தன்னுள் கொண்டு காபுலிலிருந்து வங்காளம் வரையிலும், அரபிக் கடலிலிருந்து வங்காள குடாக்கடல் வரையிலும் பரவியிருந்தது. தென் இந்தியா மட்டும் அவன் ஆட்சியின்கீழ் வரவில்லை. இப்பெரிய சாம்ராஜ்யத்துக்குப் பாடலிபுத்திரம் தலைநகராகத் திகழ்ந்தது.

சந்திரகுப்தனுடைய ராஜசபையில் தனக்குப் பிரதிநிதியாக இருக்கும்படி மெகஸ்தனிஸ் (Megasthenes) என்னும் தூதரைச் செலூகஸ் அனுப்பியிருந்தான். அவர் அக்கால வரலாற்றைச் சுவைபட எழுதி வைத்திருக்கிறார். ஆனால் அதைவிடச் சுவை மிகுதியுடன் சந்திரகுப்தனின் அரசாங்கத்தைப் பற்றிய முழு விவரங்களையும் தெரிவிக்கும் நூல் இன்னொன்று இருக்கிறது. அதுதான் கௌடில்யரின் அர்த்த சாஸ்திரம் என்பது. கௌடில்யர் வேறு யாருமில்லை. விஷ்ணுகுப்தன் என்றும், சாணக்கியன் என்றும் நாம் அறிந்துகொண்டிருக்கிற நம் பழைய நண்பரின் வேறொரு பெயர்தான் கௌடில்யர் என்பது. அர்த்தசாஸ்திரம் என்றால் 'பொருளியல் நூல்' என்று பொருள்.

அர்த்த சாஸ்திரம் பலதிறப்பட்ட பல்வேறு விஷயங் களைப்பற்றிக் கூறுவதால் நான் அதைப்பற்றி உனக்கு அதிகம் சொல்ல முடியாமலிருக்கிறது. அரசர், அமைச்சர், ஆலோசனையாளர் ஆகியோரின் கடமைகள், சபை கூடுவது, அரசாங்கத்தின் பல்வேறு கிளைகள் அல்லது இலாகாக்கள், வர்த்தகம், வியாபாரம், நகர நிர்வாகம், கிராம நிர்வாகம், நீதி, நீதிமன்றங்கள், சமூக வழக்கங்கள், பெண்ணுரிமைகள், வயது முதிர்ந்தோரையும் திக்கற்றவர் களையும் காப்பாற்றுவது, விவாகம், விவாகத்துக்கு வரி விதிப்பது, தரைப்படை, கடற்படை, யுத்தம், சமாதானம், ராஜதந்திரம், விவசாயம், நூல் நூற்றல், நெசவு, கைத்தொழில், அனுமதிச் சீட்டுக் கொடுப்பது, சிறை நிர்வாகம் முதலிய பல விஷயங்கள் அந்நூலில் பேசப் பட்டிருக்கின்றன. இன்னும் நான் அடுக்கிக்கொண்டே போகலாம். ஆனால் இக்கடிதம் பூராவையும் அர்த்த சாஸ்திரத்தின் அத்தியாயத் தலைப்புகளைச் சொல்லி நிரப்ப நான் விரும்பவில்லை.

அரசன் பட்டாபிஷேகத்தின்போது தன் அதிகா ரத்தை ஜனங்களிடமிருந்து பெற்றுக்கொண்டு ஜனங் களுக்குச் சேவை புரிவதாகக் கீழ்க்கண்ட பிரமாணத்தைச் செய்யவேண்டும்: “உங்களை நான் துன்புறுத்தினால் இம்மை மறுமைப் பயன்களையும் மக்கட்பேற்றையும் இழக்கக் கடவேனாக” என்று அரசன் சொல்லவேண்டும். அரசன் நாள்தோறும் செய்யவேண்டிய காரியங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. அவன் அவசர வேலைகளைக் கவனிக்க எப்போதும் தயாராக இருக்க வேண்டும். அரசனின் சௌகரியத்துக்காகப் பொது வேலை காத்துக் கொண்டிருக்காது. “அரசன் முயற்சியுடையவனாக இருந்தால் அவன்கீழ் வாழும் குடிகளும் முயற்சியுடைய வர்களாயிருப்பார்கள். அரசனின் க்ஷேமம் குடிகளின்

க்ஷேமத்தில் அடங்கியிருக்கிறது. தனக்கு இதமானதை அரசன் நன்மையென்று கருதாமல் குடிகளுக்கு இதமானவற்றையே நன்மையென்று கருதி ஒழுக வேண்டும்" என்று கூறப்பட்டிருக்கிறது. இப்போது உலகிலிருந்து அரசர்கள் மறைந்து வருகிறார்கள். இன்னும் இருக்கின்ற சிலரும் சீக்கிரத்தில் போய்விடுவார்கள். ஆனால் புராதன இந்தியாவில் அரசுரிமை என்பது ஜனங்களுக்குத் தொண்டு புரிவது என்று கருதப்பட்டு வந்திருப்பதை நினைக்க ஆறுதலாயிருக்கிறது. 'அரசர்கள் தெய்வத்தினிடமிருந்து உரிமை பெற்றிருக்கிறார்கள்' என்னும் அரசரின் தெய்வீக உரிமைக் கொள்கையும், யதேச்சாதிகாரமும் அப்போது இல்லை. ஓர் அரசன் தவறி நடந்தால் அவனை நீக்கிவிட்டு அவனுடைய இடத்தில் வேறொருவனை அரசனாக நியமிக்க ஜனங்களுக்கு உரிமை இருந்தது. இவ்விதமான எண்ணமும் கொள்கையும் அக்காலத்தில் இருந்துவந்தன. ஆனால் பல அரசர்கள் இந்த லட்சிய நெறியில் நடக்கமுடியாமல் தங்களுடைய அறியாமையினால் தங்களுக்கும் தங்கள் நாட்டுக்கும் கேட்டைத் தேடிக்கொண்டார்கள் என்பது உண்மையே.

'ஓர் ஆரியன் மற்றோர் ஆரியனை அடிமைப் படுத்துவது கூடாது' என்னும் பழைய கொள்கையையும் அர்த்த சாஸ்திரம் வற்புறுத்துகிறது. வெளிநாடுகளிலிருந்து கொணரப்பட்டோ அல்லது உள்நாட்டிலேயோ சில அடிமைகள் இருந்தார்கள் என்று தெரிகிறது. ஆனால் ஆரியர்களைப் பொறுத்தவரையில் ஒருவர் மற்றவருக்கு அடிமையாகாமல் கண்ணும் கருத்துமாய்ப் பார்த்து வந்தார்கள்.

மௌரிய சாம்ராஜ்யத்தின் தலைநகரம் பாடலீபுத்திரம். கங்கைக் கரையில் ஒன்பது மைல் நீளமுள்ள

முகப்போடு கூடியதாய்ப் பெருஞ்சிறப்புடன் விளங்கிக் கொண்டிருந்தது அந்நகரம். அந்நகருக்கு அறுபத்து நான்கு பிரதான வாயில்களும் நூற்றுக்கணக்கான சிறிய வாயில்களும் இருந்தன. வீடுகள் பெரும்பாலும் மரத்தினால் கட்டப்பட்டிருந்தன. ஆகவே தீயினால் விபத்துகள் நேரிடாமல் தடுப்பதற்குப் பல பாதுகாப்புகள் செய்யப்பட்டிருந்தன. நகரின் முக்கியமான வீதிகளில் ஆயிரக்கணக்கான பாத்திரங்களில் தண்ணீர் நிரப்பி வைத்திருந்தார்கள். ஒவ்வொரு வீட்டுக்குடையவனும் நெருப்புப் பிடித்தால் அணைப்பதற்குப் பாத்திரங்களில் தண்ணீரையும், ஏணி, கொக்கி முதலியவைகளையும் தயாராக வைத்திருக்கவேண்டும் என்கிற கட்டாயம் இருந்தது.

'நகரின் தெருக்களில் யாராவது குப்பைகூளங்களை எறிந்தால் அவர்களுக்கு அபராதம் விதிக்கப்படும்' என்கிற விதியைக் கௌடில்யர் குறிப்பிடுகிறார். தெருக்களில் மண் சேரும்படியாகவும் தண்ணீர் தேங்கும் படியாகவும் விட்டவர்களுக்கு இவ்வாறே தண்டனை உண்டு. இவ்விதிகள் அனுஷ்டிக்கப்பட்டிருப்பின் பாடலிபுத்திரமும் மற்ற நகரங்களும் சுத்தமாகவும் ஆரோக்கியமாகவும் அழகாகவும் இருந்திருக்கும். நமது நகர சபைகள் இத்தகைய விதிகளைக் கையாண்டால் எவ்வளவு நன்றாயிருக்கும்!

பாடலிபுத்திரத்தின் நிருவாகத்தைக் கவனிப்பதற்கு ஒரு நகர சபை இருந்தது. அந்தச் சபை ஜனங்களால் தேர்ந்தெடுக்கப்பட்டதாகும். அதில் முப்பது அங்கத்தினர்கள் இருந்தார்கள் ஐந்து அங்கத்தினர்கள் கொண்ட ஆறு கமிட்டிகளாக அந்தச் சபை வகுக்கப்பட்டிருந்தது. இந்த ஆறு கமிட்டிகளும் நகரத்தின் கைத்தொழில்கள்,

யாத்திரைவாசிகளுக்குச் செளகரியம் செய்து கொடுத்தல், வரி விதிப்பதற்காக ஜனன மரணக் கணக்கு எடுத்தல் முதலிய காரியங்களைக் கவனித்து வந்தன. சபை முழுவதும் சுகாதாரம், நிதி, குடிதண்ணீர் வசதி, பூங்கா வனங்கள், பொதுக் கட்டிடங்கள் முதலியவற்றைப் பரிபாலித்து வந்தது.

நீதி வழங்குவதற்குப் பஞ்சாயத்துகளும், 'அப்பீல்' செய்வதற்கு உயர்நீதி மன்றங்களும் இருந்தன. பஞ்சம் ஏற்பட்டால் ஜனங்களுக்கு உடனே உதவி அளிப்பதற்காக அரசாங்கத்தின் பண்டசாலைகளிலுள்ள பொருள்களில் பாதி எப்போதும் ஒதுக்கி வைக்கப்பட்டிருந்தது. இவ்வாறு பஞ்ச நிவாரணத்துக்காக விசேஷ ஏற்பாடுகள் செய்யப்பட்டிருந்தன.

2200 ஆண்டுகளுக்கு முன்பு சந்திரகுப்தனும் சாணக்கியனும் அமைத்து ஆண்ட சாம்ராஜ்யம் இவ்வாறு இருந்தது. கெளடில்யரும் மெகஸ்தனிஸூம் சொல்லியுள்ள விஷயங்களில் சிலவற்றை மட்டுமே நான் எடுத்துக் காட்டினேன். இவற்றிலிருந்தே அந்நாட்களில் வட இந்தியா எவ்வாறு இருந்தது என்று நீ ஒருவாறு ஊகம் செய்துகொள்ளலாம். அந்தச் சாம்ராஜ்யத்தின் தலைநகராகிய பாடலிபுத்திரத்திலும் வேறு பல பெரிய நகரங்களிலும் ஆயிரக்கணக்கான பட்டணங்களிலும் கிராமங்களிலும் ஜீவசக்தி ததும்பிக்கொண்டிருந்திருக்க வேண்டும். ஒரு பாகத்திலிருந்து இன்னொரு பாகத்துக்குப் போவதற்கு நல்ல பெரிய சாலைகள் அமைக்கப்பட்டிருந்தன. முக்கியமான ராஜவீதியானது பாடலிபுத்திரத்தின் வழியாக வடமேற்கு எல்லைப்புறத்துக்குச் சென்றது. நீர்ப்பாசனத்துக்குரிய பல கால்வாய்கள் இருந்தன. அவைகளை மேற்பார்ப்பதற்கு ஒரு தனி

இலாகாவும் இருந்தது. துறைமுகங்கள், ஓடத்துறைகள், பாலங்கள், ஓர் இடத்திலிருந்து இன்னோர் இடத்துக்குப் போகும் கணக்கற்ற படகுகள், கப்பல்கள் இவைகளையெல்லாம் கவனிப்பதற்கும் ஒரு தனி இலாகா இருந்தது. கப்பல்கள் கடல் மார்க்கமாகப் பர்மாவுக்கும் சீனாவுக்கும் சென்று வந்தன.

இத்தகைய சாம்ராஜ்யத்தின்மீது சந்திரகுப்தன் இருபத்துநான்கு ஆண்டுகள் ஆட்சி செலுத்தினான். கி. மு. 296-இல் அவன் இம்மண்ணுலக வாழ்வை நீத்தான். அடுத்த கடிதத்திலும் மௌரியசாம்ராஜ்ய சரித்திரத்தைத் தொடர்ந்து கவனிப்போம்.

## 19

## மூன்று மாதங்கள்!

எஸ். எஸ். 'கிரகோவியா'
ஏப்ரல் 21, 1931.

நான் உனக்கு எழுதி நீண்ட நாளாகிவிட்டது. ஏறக்குறைய மூன்று மாதங்கள் கழிந்துவிட்டன. துக்கமும் துன்பமும் நிறைந்த மூன்று மாதங்கள். இம்மூன்று மாதங்களில் இந்தியாவில் மாறுதலைக் கண்டோம். எல்லாவற்றிற்கும் மேலாக நம் குடும்பத்திலும் மாறுதல்கள் ஏற்பட்டுவிட்டன. சத்தியாக்கிரகம் அல்லது சட்டமறுப்பு இயக்கம் சிறிது காலம் வரையில் நிறுத்தி வைக்கப்பட்டிருக்கிறது. ஆனால் நம்மை எதிர்நோக்கியிருக்கும் பிரச்னைகள் எளிதில் தீருவதாகக் காணோம். நமது குடும்பம் தன் அருமைத் தலைவரை இழந்து வாடுகிறது. அவர் நம்மை வளர்த்து நமக்கு உயிரும் ஒளியும் கொடுத்தார். அவருடைய அன்புமிக்க ஆதரவில் நாம் நமது தாய்நாட்டுக்கு நம்மாலியன்ற சேவை செய்யக் கற்றுக்கொண்டோம்.

நைனி சிறையில் அந்த நாள் எனக்கு நன்றாக நினைவிருக்கிறது. அன்று ஜனவரி, 26. வழக்கம்போல் உனக்குக் கடந்த நாட்களைப்பற்றி எழுதுவதற்காக உட்கார்ந்தேன். அதற்கு முன் தினம்தான் சந்திர குப்தனைப்பற்றியும் அவன் ஸ்தாபித்த மௌரிய சாம்ராஜ்யத்தைப் பற்றியும் எழுதியிருந்தேன். அந்தக் கதையைத் தொடர்ந்து அவனுக்குப் பின்னால் வந்தவர்களைப்பற்றியும், முக்கியமாக அசோகனைப்பற்றியும்

உனக்குச் சொல்வதாக வாக்களித்திருந்தேன். தேவர்களுக்குப் பிரியமானவனும் பெரியோனுமாகிய அசோகன் இந்திய வானிலே ஒளிவிடும் விண்மீன்போல மின்னி என்றும் அழியாப் புகழை நிலைநாட்டிச் சென்றான்! அசோகனைப்பற்றி நான் நினைத்தபொழுது என் மனம் உனக்கு நான் எழுதத் தொடங்கிய ஜனவரி, 26 ஆகிய அன்றைத் தினத்துக்கு வந்து சேர்ந்தது. அந்தத் தினம் நமக்கு ஒரு விசேஷ தினம் அல்லவா? ஒரு வருஷத்துக்கு முன், அதே நாளில் நாம் இந்தியா முழுவதிலும் பட்டணங்களிலும் கிராமங்களிலும் 'பூரண சுதந்தர தினம்' கொண்டாடினோமல்லவா? அன்று நாமெல்லோரும் கோடிக்கணக்கில் 'சுதந்தரப் பிரதிக்ஞை' எடுத்துக் கொண்டோமல்லவா? அதற்குப்பின் ஓராண்டு சென்றுவிட்டது. துன்பமும் போராட்டமும் வெற்றியும் நிறைந்த அவ்வாண்டு கழிந்து மீண்டும் அந்நன்னாளை இந்தியா கொண்டாடப் போகிறது. நான் நைனி சிறையில் 6 நெ. சிறைக் கோட்டத்தில் உட்கார்ந்துகொண்டு அன்றைத் தினம் நாடெங்கும் நடக்கப் போகும் கூட்டங்களைப்பற்றியும், ஊர்வலங்களைப் பற்றியும், கைதுகளைப் பற்றியும் பெருமிதத்தோடும் உவகையோடும் துன்பத்தோடும் எண்ணிக்கொண்டிருந்தேன். திடீரென்று என் சிந்தனை தடைப்படுத்தப்பட்டது. உன் தாத்தாவுக்கு உடம்பு சரியில்லை என்றும் அவரைப் பார்ப்பதற்கு நான் விடுதலை செய்யப்பட்டிருக்கிறேன் என்றும் எனக்குத் தெரிவிக்கப்பட்டது. என் சிந்தனைகளை மறந்தேன். உள்ளத்தில் கவலை குடிகொண்டது. உனக்கு எழுதத் தொடங்கிய கடிதத்தை எடுத்து வைத்துவிட்டு நைனி சிறையினின்றும் ஆனந்த பவனத்துக்குப் புறப்பட்டேன்.

உன் தாத்தா நம்மைப் பிரிந்து போகுமுன் அவருடன் பத்து நாட்கள் இருந்தேன். அந்தப் பத்து நாளும் இராப்

பகலாக அவர் யமனுடன் போராடியதையும் அவர் பட்ட பொறுக்க முடியாத துன்பத்தையும் நாம் அருகிலிருந்து பார்த்துக்கொண் டிருந்தோம். அவர் உயிர் வாழ்ந்த காலத்தில் எத்தனையோ போராட்டங்களை நடத்தி எத்தனையோ வெற்றிகளை அடைந்திருக்கிறார். பணிந்து போவதென்பது அவருக்குத் தெரியாது. கூற்றுவன் எதிரே நின்றும் அவர் அவனுக்குப் பணிய மறுத்தார். அவரிடம் பெரிதும் அன்பு பூண்டுள்ள நான் அவரது துன்பத்தைக் குறைக்க என்னால் ஒன்றும் செய்ய முடியவில்லையே என்கிற ஏக்கத்துடன் அவருடைய கடைசிப் போராட்டத்தைப் பார்த்துக்கொண்டிருந்தேன். அப்போது நீண்ட நாட்களுக்கு முன் நான் வாசித்த 'எட்கார் அலன் போ'வின் கதையிலுள்ள கீழ்வரும் வாக்கியம் என் நினைவுக்கு வந்தது: "தேவ தூதர்களுக்கும் சாவுக்குங் கூட மனிதன் தன்னை ஒப்புவிப்பதில்லை. சித்தத்தில் உறுதி குன்றிய பிறகுதான் அவன் அவர்களுக்கு ஆட்படுகிறான்."

பிப்ரவரி, 6; அதிகாலையில் அவர் நம்மைப் பிரிந்து சென்றார். அவருடைய உடலை, அவர் மிகவும் அன்புடன் போற்றிய தேசீயக் கொடியில் சுற்றி, லக்ஷ்மணபுரியிலிருந்து ஆனந்த பவனத்துக்குக் கொண்டு வந்தோம். சில மணி நேரங்களில் அது வெந்து 'பிடி சாம்பலாய்'ப் போய்விட்டது. கங்காதேவி அருமை வாய்ந்த அச்சாம்பலை ஏந்திக்கொண்டு கடலை நோக்கிச் சென்றாள்.

பல கோடி மக்கள் அவருக்காகத் துயருற்று வருந்தினார்கள். ஆனால் அவருடைய எலும்பும் சதையுமாகிய நம்மைப்பற்றி என்சொல்வது? நாம் அவருடைய குழந்தைகளாயிருப்பது போலவே ஆனந்த பவனமும் அவர் அன்புடன் போற்றி வளர்த்த குழந்தையாகும். அதைப்

பற்றி என்சொல்வது? அதுவும் பொலிவிழந்து புலம்புகிறது. அதன் ஜீவன் அதை விட்டுப் போய்விட்டது போலிருக்கிறது. அதைச் சிருஷ்டித்தவருடைய ஆவியின் அமைதியைக் குலைக்கக் கூடாதென்று எண்ணி அதன் தாழ்வாரங்களில் நாம் ஓசை படாமல் நடந்து செல்கிறோம்.

ஒவ்வொரு நிமிஷமும் அவர் இல்லையே என்கிற துயரம் நம்மைக் கவ்வுகிறது. நாள் செல்லச் செல்ல, துக்கம் குறைவதாகக் காணோம்; அவர் பிரிவும் சிறிதேனும் சகிக்கக் கூடியதாக மாறவில்லை. நாம் இவ்வாறு துன்பத்தில் கலங்குவதை அவர் விரும்பமாட்டாரென்று நினைக்கிறேன். அவர் தமக்கு நேர்ந்த இடுக்கண்களை எதிர்த்து நின்று வென்றதுபோல நாமும் துக்கத்தைத் தவிர்த்து அவர் குறையாக விட்டுச் சென்ற வேலையைத் தொடர்ந்து செய்ய வேண்டுமென்பதுதான் அவர் விருப்பமாக இருக்கும். இந்திய சுதந்தரத்துக்கு நாம் செய்யவேண்டிய பணி நம்மைக் கைகாட்டி அழைக்கும் போது நாம் சோர்வுற்று வீணே கலங்குதல் அழகா? இந்திய சுதந்தரத்துக்காகவன்றோ அவர் உயிர் நீத்தார்? நாமும் அதற்காகவே உயிர் வாழ்ந்து, உழைத்து, அவசியமானல் உயிரையும் கொடுப்போம். நாமும் அவருடைய குழந்தைகள் தாமே; அவருடைய வீரமும் வன்மையும் உறுதியும், அவர் உள்ளத்தில் கொழுந்து விட்டெரிந்த நெருப்பும் நம்மிடத்திலும் கொஞ்சம் இருக்கும். அல்லவா?

நான் எழுதும்போது கண்ணுக்கெட்டிய தூரம் வரையில் நீல நிறமுள்ள அரபிக்கடல் பரவியிருக்கிறது. இந்தப் பக்கம் தொலைவிலே இந்தியாவின் கரை மறைந்து கொண்டே வருகிறது. இந்த எல்லையற்ற பெருவெளியுடன், நான் உனக்கு முந்திய கடிதங்களை எழுதி வந்த

னைனி சிறைக் கட்டிடத்தையும் அதன் உயர்ந்த சுவர்களை யும் ஒப்பிட்டுப் பார்க்கிறேன். இங்கு என் பார்வை வான மும் கடலும் சேருமிடம் வரையில் செல்கிறது. சிறையில் கைதியைச் சுற்றியிருக்கும் சுவரின் மேற்பக்கம் வரையில் தான் அவனுடைய பார்வை செல்ல முடியும். சிறையில் இருந்த எங்களில் பலர் இன்று வெளியே இருந்து சுதந் தரக் காற்றைச் சுவாசிக்கிறோம். ஆனால் எங்களுடைய தோழர்களில் இன்னும் பலர் பூமியையும், கடலையும், பூமியும் ஆகாசமும் சேரும் அடிவானத்தையும் பார்க்க முடியாமல் சிறைக் கூடுகளில் வாடி வதங்கிக்கொண் டிருக்கிறார்கள். பாரத மாதாவே இன்று சிறையில் இருக்கிறாள். சுதந்தரம் இன்னும் கிட்டவில்லை. இந்தியா சுதந்தரம் பெறாமல் நாம் மட்டும் சுதந்தரம் பெற்று என்ன பயன்?

# 20

## அரபிக் கடல்

எஸ். எஸ். 'கிரகோவியா'
ஏப்ரல், 22. 1931.

பம்பாயிலிருந்து கொழும்புக்கு நாம் இந்தக் 'கிர கோவியா' கப்பலில் பிரயாணம் செய்வது ஆச்சரியமாக இருக்கிறது! நாலு வருஷங்களுக்குமுன் இதே கப்பலின் வருகைக்காக நான் வெனிஸ் நகரில் காத்துக்கொண் டிருந்தது எனக்கு நன்ருக நினைவிருக்கிறது. நான், ஸ்விட்சர்லாந்திலே பெக்ஸ் நகரில் உள்ள உன்னுடைய பள்ளிக்கூடத்தில் உன்னை விட்டுவிட்டு, இக்கப்பலில் வந்துகொண்டிருந்த உன் தாத்தாவைப் பார்க்கச் சென்றேன். இதற்குச் சில மாதங்களுக்குப் பிறகு இதே கப்பலில் உன் தாத்தா ஐரோப்பாவிலிருந்து வந்தார். அவரைப் பார்க்க நான் பம்பாய் சென்றிருந்தேன். அந்தத் தடவை அவருடன் பிரயாணம் செய்த சிலர் இன்று நம்முடன் பிரயாணம் செய்கிருர்கள். அவர்கள் அவரைப் பற்றிய கதைகளை ஓயாமல் சொல்லிக்கொண்டே இருக்கிருர்கள்.

கடந்த மூன்று மாதங்களில் நிகழ்ந்த மாறுதல்களைப் பற்றி நேற்று எழுதினேன். கடந்த சில வாரங்களில் நிகழ்ந்த ஒரு நிகழ்ச்சியை நீ நினைவில் வைக்கவேண்டும். இந்தியாவும் நெடுங்காலம் வரையில் அந்நிகழ்ச்சியை மறக்க முடியாது. கான்பூரில் இந்தியாவின் சிறந்த வீரராகிய கணேச சங்கர வித்தியார்த்தி என்பவர் பிற ரைக் காப்பாற்றும் முயற்சியில் ஈடுபட்டிருக்கும்போது

கொல்லப்பட்டார். அவர் எனக்குச் சிறந்த நண்பர். தமக்கென வாழாப் பிறர்க்குரியாளராகிய அவருடன் வேலை செய்வதே ஒரு பாக்கியம் என்று சொல்லவேண்டும். சென்ற மாதம் கான்பூரில் இந்தியர்கள் வெறிகொண்டு ஒருவரை ஒருவர் குத்திக் கொன்றார்கள். கணேச்ஜி இந்தச் சண்டையின் நடுவில் குதித்தார். தம் நாட்டவரோடு சண்டை போடுவதற்காக அல்ல, அவர்களைக் காப்பாற்றுவதற்காக. நூற்றுக்கணக்கான பேர்களை அவர் காப்பாற்றினார். ஆனால் தம்மைமட்டும் அவரால் காப்பாற்றிக்கொள்ள முடியவில்லை, காப்பாற்றிக் கொள்ளவும் அவர் விரும்பவில்லை. யாரைக் காப்பாற்ற முயன்றாரோ அவர்களின் கையினாலேயே அவர் கொல்லப் பட்டார். கான்பூர் நகரமும் நமது மாகாணமும் ஓர் அரிய மணியை இழந்துவிட்டன. எங்களில் பலர் அறிவாற்றல்களில் மிகுந்த ஒரு நண்பரை இழந்து விட்டோம். ஆனால் அவருடைய மரணத்தின் சிறப்பை நான் என்னென்பேன்! ஜனங்களின் வெறியை அவர் கலங்காமல் எதிர்த்து நின்றார். ஆபத்தும் மரணமும் அவரைச் சூழ்ந்து நின்ற சமயத்திலும் அவர் பிறரைக் காப்பதிலேயே முனைந்து நின்றார்!

மாறுதல்கள் நிறைந்த மூன்று மாதங்கள்! கால வெள்ளத்தில் இதை ஒரு துளி என்று சொல்லலாம். ஒரு தேசத்தின் வாழ்க்கையில் இதை ஒரு நொடி என்று சொல்லலாம். மூன்று வாரங்களுக்கு முன்புதான் சிந்து மாகாணத்தில் சிந்து நதிப் பள்ளத்தாக்கிலுள்ள மொஹெஞ்சோ-தாரோ அழிவுகளைக் காணச் சென்றேன். நீ என்னுடன் அங்கு வரவில்லை. 5000 வருஷங்களுக்கு முன் நிர்மாணிக்கப்பட்ட ஒரு நகரம் செங்கல்லினால் கட்டப்பட்ட பல வீடுகளோடும் அகன்ற வீதிகளோடும் பூமியின் கர்ப்பத்திலிருந்து வெளிவந்துகொண்டிருப்பதை

நான் அங்குக் கண்டேன். இப்புராதன நகரில் கண்டு பிடிக்கப்பட்ட அழகிய நகைகளையும் பாத்திரங்களையும் பார்த்தேன். ஆடவரும் பெண்டிரும் நல்ல ஆடை யாபரணங்களை அணிந்துகொண்டு பெரிய வீதிகளிலும் சிறிய தெருக்களிலும் மேலும் கீழும் நடந்து செல்கிறார்கள். குழந்தைகள் தங்கள் இயற்கைக்கேற்ப விளையாடிக்கொண் டிருக்கின்றன. கடை வீதிகளில் பண்டங்கள் குவித்து வைக்கப்பட்டிருக்கின்றன. ஜனங்கள் விற்கவும் வாங்கவும் செய்கிறார்கள். கோயில் மணிகள் 'டணார் டணார்' என்று சப்திக் கின்றன. இக்காட்சியை என் கற்பனையிலே கண்டேன்.

இந்த 5000 ஆண்டுகளாக இந்தியா தன் வாழ்க்கையை நடத்தி வந்திருக்கிறது; பல மாறுதல்களை அது பார்த் திருக்கிறது. இதைப்பற்றி நான் சில சமயங்களில் இவ்வாறு நினைத்து இறும்பூது எய்துவதுண்டு. கணக்கற்ற காலம் வாழ்ந்தும் மாறாத இளமையோடும் கட்டழ கோடும் விளங்கும் நம் தாய் அவளுடைய குழந்தை களின் பொறுமையின்மையைக் கண்டும் நீர்க்குமிழி போன்று இன்று தோன்றி நாளை மறையும் அவர்க ளுடைய இன்பதுன்பங்களைக் கண்டும் புன்முறுவல் பூப்பாளல்லவா?

தொன்று நிகழ்ந்த தனைத்து முணர்ந்திடு
சூழ்கலை வாணர்களும்—இவள்
என்று பிறந்தவள் என்றுணராத
இயல்பினளாம் எங்கள் தாய்!
யாரும் வகுத்தற்கரிய பிராயத்தள்
ஆயினுமே எங்கள் தாய்—இந்தப்
பாருள் இந்நாளும் ஓர் கன்னிகை என்னப்
பயின்றிடுவாள் எங்கள் தாய்!

—பாரதியார்.

# 21

## இன்பமான பொழுது போக்கும் கனவுபோன்ற பிரயாணமும்

மார்ச்சு 26, 1932.

கடந்தகால சரித்திரத்தைப்பற்றி நைனி சிறையி லிருந்து நான் உனக்கு எழுதிப் பதினைன்கு மாதங்கள் ஆகிவிட்டன. மூன்று மாதங்களுக்குப் பிறகு அரபிக் கடலிலிருந்து இரண்டு சிறு கடிதங்கள் எழுதினேன். நாம் அப்பொழுது 'கிரகோவியா' கப்பலில் இலங் கைக்குப் பிரயாணம் செய்துகொண்டிருந்தோம். நான் எழுதிக்கொண்டிருந்தபோது சுற்றிலும் பரவியிருந்த கடற்காட்சியைக் கண்களால் பருகினேன். ஆனால் முழுவதும் பருக ஆற்றாதவனானேன். பிறகு இலங்கையை அடைந்தோம். ஒரு மாதம் இன்பமாகப் பொழுதைப் போக்கி நமது துயரத்தை மறக்க முயன்றோம். தீவுகளுக் கெல்லாம் அரசியாக விளங்கும் அவ்வழகிய தீவில் பல இடங்களுக்கும் சென்று அதன் மிகுதியான இயற்கை வனப்பைக் கண்டு ஆச்சரிய மடைந்தோம். பழம் பெருமையின் சின்னங்களையும் அழிவுகளையும் தன் னகத்தே கொண்டு விளங்கும் கண்டி, நூராலயம், அனுராதபுரம் முதலிய நாம் சென்ற பல இடங்களையும் நினைத்துப் பார்க்க எவ்வளவு இன்பமாயிருக்கிறது! ஆனால் எல்லாவற்றிற்கும் மேலாகக் குளிர்ச்சி பொருந்திய அந்தக் காடுகளை நினைக்க நினைக்க எனக்கு ஆனந்தம் பொங்குகிறது. ஜீவவேகம் ததும்பிக்கொண் டிருக்கும் அக்காடு நம்மை ஆயிரம் கண்கொண்டு பார்ப்பது போலிருக்கிறது. சிறுத்து நீண்டு நேராக வளர்ந்திருக்கும் கமுக மரங்களின் அழகுதான் என்னே! அடர்ந்த தென்னந் தோப்புகளை நாள் முழுவதும் பார்த்துக்

கொண்டிருக்கலாமே! தென்னை மரங்களின் விளிம்பு பெற்ற கடற்கரையின் பசுமை, கடலின் நீலத்தையும் வானின் நீலத்தையும் கலந்து, மயங்கும் அழகுதான் என்னே! 'அலை எற்றி நுரைகக்கி இசைக்கும் பாட்டிலும்' தென்னை ஓலைகளின் இடையே புகுந்து காற்று ஒலிக்கும் பாட்டிலும் யாரே மனத்தைப் பறி கொடாமல் இருக்க முடியும்?

உஷ்ணப் பிரதேசத்திலுள்ள ஓர் இடத்திற்கு நீ வந்தது அதுதான் முதல் தடவை. நான் அதற்கு முன்பு ஒரு தடவை போய்ச் சில காலம் தங்கியிருந்தேனாயினும் அது எனக்குச் சரியாக ஞாபகம் இல்லாததால் எனக்கும் அதுவே முதல் அனுபவமாகும். அங்குள்ள உஷ்ணத்தைக் கண்டு பயந்து நான் போவது கிடையாது. கடலும் மலையும் எல்லாவற்றிற்கும் மேலாகப் பனியும் பனிவரைகளுமே என் உள்ளத்தைக் கொள்ளை கொண்டவை. ஆனால் நான் இலங்கையில் சில காலமே தங்கியிருந்தாலும் உஷ்ணப் பிரதேசத்தின் அழகிலே மயங்கி மீண்டும் சென்று அதனுடன் நட்புக்கொள்ள வேண்டுமென்னும் எண்ணத்தோடு திரும்பி வந்தேன்.

இலங்கையில் சந்தோஷமாகப் போக்கிய அந்த ஒரு மாதமும் சீக்கிரத்தில் கழிந்துவிட்டது போலிருந்தது. அங்கிருந்து குறுகிய கடலைக் கடந்து இந்தியாவின் தெற்கு முனைக்கு வந்து சேர்ந்தோம். பரமேசுவரி என்றும் கன்னியாக வீற்றிருந்து காவல் புரிவதாகச் சொல்லப்படும் கன்யாகுமரிக்கு நாம் சென்றது உனக்கு நினைவிருக்கிறதா? நம் நாட்டுப் பெயர்களைத் திரித்தும் கெடுத்தும் கூறுவதில் தேர்ந்த மேல்நாட்டார் குமரி முனையைக் 'கேப் காமரின்' என்று அழைக்கிறார்கள். அன்று நாம் சாக்ஷாத் பாரத மாதாவின் பாதத்தடியில் உட்கார்ந்து அரபிக்கடலும் வங்காள விரிகுடாக் கடலும்

ஒன்றையொன்று கலந்து மருவுவதைக் கண்டு இரண்டும் பாரதத் தாய்க்கு வணக்கம் செலுத்துகின்றன என்று கற்பனை செய்து ஆனந்தம் அடைந்தோமல்லவா? அவ்விடத்திலே ஆச்சரியமான அமைதி பரவியிருந்தது. உடனே இந்தியாவின் தென்கோடியிலிருந்து சில ஆயிரம் மைல்களுக்கப்பாலுள்ள வடகோடிக்கு என் மனம் பறந்து சென்று இமயமலையின் பனிமூடிய சிகரத்தையும் அங்கும் அமைதி குடி கொண்டிருப்பதையும் எண்ணிப் பார்த்தது. ஆனால் இவ்விரு சாந்தமான பிரதேசங் களுக்கு இடையே உள்ள இடத்தில் எவ்வளவு போராட்டம்! எவ்வளவு துன்பம்! எவ்வளவு வறுமை!

குமரி முனையை விட்டு வடக்கே பயணப்பட்டுத் திருவாங்கூர், கொச்சி வழியாகச் சென்றோம். மலையாளத்தில் இருபுறமும் கானல் சூழ்ந்த கழிகளில் நிலவொளியில் நாம் படகில் சென்றது ஏதோ கனவில் செல்வது போலிருந்ததல்லவா? பிறகு நாம் மைசூர், ஹைதராபாத், பம்பாய் ஆகிய இடங்களுக்குச் சென்று கடைசியில் அலகாபாத் போய்ச் சேர்ந்தோம். இது நிகழ்ந்தது கடந்த ஜூன் மாதத்தில், அதாவது ஒன்பது மாதங்களுக்கு முன்.

ஆனால் தற்காலத்தில் இந்தியாவில் எல்லா வழிகளும் ஏறக்குறைய ஒரே இடத்துக்குத்தான் போய்ச் சேருகின்றன. கனவில் செய்யும் பிரயாணங்கள், நனவில் செய்யும் பிரயாணங்கள் எல்லாம் சிறையில் வந்து முடிகின்றன. ஆகவே நான் மறுபடியும் என்னுடைய பழைய இடத்திற்கு வந்துவிட்டேன். சிந்திப்பதற்கும் எழுதுவதற்கும் எனக்குப் போதிய அவகாசம் இருக்கிறது. ஆனால் நான் எழுதும் கடிதங்கள் உனக்கு வந்து சேரமாட்டா. மீண்டும் சுதந்தரப்போர் நடக்கிறது. நம் ஜனங்கள், ஆடவரும் மாதரும் சிறு பையன்களும் பெண்களும், இந்நாட்டின் ஏழைமையை ஒழிக்கவேண்டி

விடுதலைப் போரில் கலந்துகொள்ளுகிறார்கள். ஆனால் சுதந்தர தேவதையை நாம் எளிதில் அடையமுடியாது. அவள் வழக்கம்போலத் தன்னை நாடுவோரிடமிருந்து தியாகத்தைக் கேட்கிறாள்.

நான் சிறைக்கு வந்து இன்றோடு மூன்று மாதமாகிறது. மூன்று மாதங்களுக்கு முன் இதே நாளில் - டிசம்பர் 26-ஆம்தேதியன்று-என்னை ஆறுவதுதடவையாகக் கைது செய்தார்கள். இக்கடிதங்கள் எழுதுவதை என்னால் உடனே ஆரம்பிகக முடியவில்லை. நிகழ்காலம் நம் மனத்தில் நிறைந்திருக்கும்போது கடந்துபோன பழைய காலத்தைப் பற்றிச் சிந்திப்பது எவ்வளவு கஷ்டமான காரியம் என்பது உனக்குத் தெரியாததல்ல. வெளியில் நடக்கும் காரியங்களைப் பற்றிக் கவலை கொள்வதை விடுத்து அமைதியுடன் எழுத ஆரம்பிப்பதற்குச் சிறிது காலம் பிடிக்கிறது. இனி ஒழுங்காக எழுத முயல்வேன். ஆனால் இப்போது நான் முன் இருந்த இடத்தில் இல்லை. இந்த இடம் எனக்குப் பிடிக்கவில்லை. என் வேலையையும் அது சிறிது தடை செய்கிறது. அடிவானம் (Horizon) எனக்கு முன்னையிலும் உயர்ந்துவிட்டது. எனக்கு எதிரிலிருக்கும் சுவர், உயரத்தைப் பொறுத்தவரையிலாவது சீனாவின் பெரிய மதிலை ஒத்திருக்கும் போலும்! அதன் உயரம் 25 அடி இருக்கும் என்று நினைக்கிறேன். சூரியனை ஒவ்வொரு நாள் காலையிலும் பார்ப்பதற்கு இப்போது அதிகமாக ஒன்றரை மணி நேரம் ஆகிறது.

நமது திருஷ்டி சில காலம் கட்டுப்படுத்தப்பட்டிருக்கலாம். ஆனால் நீலக்கடலையும், வானளாவிய மலைகளையும், பாலைவனங்களையும், பத்து மாதங்களுக்குமுன் நீயும் நானும் உன் அம்மாவும் செய்த கனவுப்பிரயாணத்தையும் - அது உண்மையாகவே இப்போது தோன்றவில்லை - நினைத்துப் பார்ப்பது இனிமையாக இருக்கிறது.

## 22

# மனிதனின் வாழ்க்கைப் போராட்டம்

மார்ச்சு 28, 1932.

உலக சரித்திரத்தை நாம் மறுபடியும் விட்ட இடத்திலிருந்து ஆரம்பித்துக் கடந்த காலத்தைச் சிறிது கவனிப்போம். உலக சரித்திரம் ஒரு சிக்கலான பின்னல் போன்றது. அதைப் பிரித்துத் தனித்தனியாக அறிவது மிகவும் அரிது. அதை முழுமையாகப் பார்ப்பதுகூட அரிதாயிருக்கிறது. இன்னோர் அபாயமும் இதில் இருக்கிறது. அதனுடைய ஒரு சிறு பகுதியை எடுத்துக் கொண்டு அதில் நம்மை மறந்துபோய் அதன் தகுதிக்கு மீறிய ஒரு முக்கியத்தை நாம் அதற்குக் கொடுத்து விடலாம். அநேகமாக மக்கள் எல்லோரும் தங்கள் தங்கள் தேச சரித்திரந்தான் - அது எந்தத் தேசமாயிருந்தாலும் சரி - மற்றத் தேசங்களின் சரித்திரங்களை விட அதிகப் பெருமை வாய்ந்தது என்றும் கற்க உரியதென்றும் எண்ணிக்கொண் டிருக்கிறோம். இத்தகைய பிழையை நீ செய்யக்கூடாது என்று நான் முன் ஒரு முறை உன்னை எச்சரித்திருக்கிறேன். மீண்டும் அதையே சொல்ல விரும்புகிறேன். இந்த வலையில் விழுவது மிகவும் எளிது. இது கூடாது என்பதற்காகத்தான் நான் உனக்கு இக் கடிதங்களை எழுத ஆரம்பித்தேன். ஆனால் நானே இப் பிழையைச் சில சமயங்களில் செய்வதுபோல் தோன்றுகிறது. எனக்கு அளிக்கப்பட்ட கல்வி குறையுடையதாகவும், எனக்குச் சொல்லிக் கொடுக்கப்பட்ட சரித்திரம் தலைகீழ்ப் பாடமாகவும் இருந்திருப்பின் நான் என்ன

செய்வது? அந்தக் குறையை நீக்குவதற்காக நானே சிறையின் தனிமையில் என் கல்வியறிவைப் பெருக்கிக் கொண்டேன். அதில் ஓரளவு வெற்றியும் பெற்றேன் என்று நினைக்கிறேன். ஆனால் இளமையில் நான் என் மனத்திரையில் எழுதிவைத்த மனிதர்களையும் நிகழ்ச்சிகளையும் பற்றிய சித்திரங்களை என்னால் அழிக்க முடியவில்லை. முற்றும் கற்காததால் ஏற்கெனவே குறைவுடையதாக இருக்கும் என் சரித்திர ஞானத்தில் இந்தச் சித்திரங்களின் சாயலும் பதிந்துவிடுகிறது. ஆகவே நான் எழுதுவதில் பல பிழைகள் இருக்கலாம். முக்கியமான பல விஷயங்களை எழுத மறந்துவிடலாம். முக்கியமல்லாத பலவற்றைக் குறிப்பிடலாம். ஆனால் இக்கடிதங்கள் சரித்திர நூல்களின் ஸ்தானத்தை அடைவதற்காக எழுந்தவை அல்ல. இவைகளை உனக்கும் எனக்கும் இடையே நிகழும் சிறு சம்பாஷணைகளாகவே நான் மதிக்கிறேன். இப்படி நினைத்துக்கொள்வதில் எனக்கு ஓர் இன்பம் உண்டாகிறது. இப்போதிருப்பதுபோல ஆயிரம் மைல் தூரமும் பல திண்மையான சுவர்களும் உன்னையும் என்னையும் பிரிக்காமலிருந்தால் கூட நாம் இவ்வாறு பேசிக்கொள்ள முடியும்.

சரித்திரத்தில் பெரிதும் பேசப்படும், புகழ்நிறுவிச் சென்ற பலரைப்பற்றி நான் எழுதாமலிருக்க முடியாது. அவர்கள் தங்களுக்குரிய தனி முறையில் நமது கவனத்தைக் கவருகிறார்கள். அவர்களின்மூலம் அவர்கள் வாழ்ந்த கால இயல்பையும் நாம் தெரிந்துகொள்ள முடிகிறது. ஆனால் சரித்திரம் என்பது பெரிய மனிதர்கள், அரசர்கள், சக்கரவர்த்திகள் போன்றவர்கள் சாதித்த காரியங்களின் வரலாறு மட்டுமல்ல. அப்படியானால் இப்போது சரித்திரம் தன் கடையைக் கட்டிக்கொண்டு போய்விடலாம். ஏனெனில் உலக அரங்கத்தில் மன்னர்

களும் சக்கரவர்த்திகளும் வந்து கம்பீரநடை பழகுவது அநேகமாக நின்றுவிட்டது. ஆனால் உண்மையில் பெரியோர்களாயிருப்போரைக் காட்டுவதற்குச் சிம்மாசனமோ, கிரீடமோ, ஆபரணங்களோ, பட்டப்பெயர்களோ தேவையில்லை. ஆனால் அரசர்களுக்கும் சிற்றரசர்களுக்கும், உண்மையை மறைப்பதற்கு உதவும் அடையாள உடைகளும் ஆரவாரங்களும் தேவையாயிருக்கின்றன. ஏனெனில் அவர்களிடம் தங்கள் ராஜ்யம் அல்லது நாட்டைத் தவிர வேறொன்றும் கிடையாது. துரதிருஷ்டவசமாக நம்மில் பலர் இந்த வெளி ஆரவாரத்தைக் கண்டு மயங்கி, 'மகுடந்தரித்த மன்னவரெல்லாம் மாண்புடையார்' என எண்ணிவிடுகிறோம்.

அங்கும் இங்கும் சிலரைப்பற்றிக் கூறுவது உண்மையான சரித்திரமாகாது. ஒரு தேச மக்களின் - பாடுபடுகிற ஜனங்கள், தங்களுடைய உழைப்பினால் சாதாரண வாழ்க்கைக்கு அத்தியாவசியமான பொருள்களையும் ஆடம்பர வாழ்வுக்கு வேண்டிய பொருள்களையும் உற்பத்தி செய்பவர்கள், பல்வேறுபட்ட செயல்கள் புரிந்து தங்களுடைய செயலினால் பிறரைப் பாதித்தும் பிறருடைய செயலினால் தாங்கள் பாதிக்கப்பட்டும் வருகிற பொதுஜனங்கள் ஆகியவர்களின் - சரிதைகளைக் கூறுவதுதான் உண்மையான சரித்திரமாகும். இத்தகைய மனித சரித்திரம் உண்மையில் அற்புதமானதாக விளங்கும். மனிதன் யுகயுகாந்தரங்களாக இயற்கையோடும், பஞ்சபூதங்களோடும், காடுகளோடும், காட்டுமிருகங்களோடும் எல்லாவற்றிற்கும் மேலாகத் தன்னைச் சுரண்டித் தின்று கொழுக்க முயலும் தன் இனத்தாரில் சிலரோடும் நடத்தி வரும் போராட்டத்தின் கதையாக அது விளங்கும். சுருங்கச்சொல்லின் மனிதனுடைய வாழ்க்கைப் போராட்டத்தின் கதையாக அது முடியும். மனிதன் பிழைத்திருக்க

வேண்டுமானால் உண்ண உணவும், தங்க இடமும், உடுக்க உடையும் வேண்டுமல்லவா? ஆகவே இவ்வத்தியாவசிய மான பொருள்களை உடையவர்கள் மனிதனை அடக்கி ஆண்டுவந்திருக்கிறார்கள். ஆட்சி புரிவோரும், எஜமானர் களும் வாழ்க்கைக்கு அத்தியாவசியமான பொருள்களை உடையவர்களாகவும் அல்லது அவற்றின்மீது ஆதிக்கம் செலுத்துவோராகவும் அவ்வாதிக்கத்தின் காரணமாக ஜனங்களைப் பட்டினிபோட்டுப் பணியவைக்கக் கூடியவர் களாகவும் இருந்தபடியால் அவர்கள் மக்கள்மீது அதிகாரம் செலுத்த முடிந்தது. ஆகவே, ஒருசிலர் பெரும் பாலான மக்களைச் சுரண்டிப் பிழைக்கும் விபரீதக் காட்சியை நாம் பார்க்கிறோம். சிலர் ஒரு வேலையும் செய் யாமல் நிறையச் சம்பாதிக்கிறார்கள்; கோடிக்கணக் கான மக்கள் நன்றாக உழைத்தும் மிகவும் குறைவாகச் சம்பாதிக்கிறார்கள்.

ஆதியில் வேட்டையாடித் தனியே திரிந்த காட்டு மிராண்டி மனிதன், பின்பு சிறிதுசிறிதாக ஒரு குடும்ப மாக மலர்ச்சி அடைகிறான். ஒரு குடும்பத்தைச் சேர்ந்த வர்கள் கூட்டாகவும் ஒருவர் மற்றொருவருக்காகவும் உழைக்கும் வழக்கம் ஏற்படுகிறது. பல குடும்பங்கள் அல்லது வீடுகள் சேர்ந்து ஒரு கிராமம் உண்டாகிறது. பல கிராமங்களிலுமுள்ள வியாபாரிகளும் கைத்தொழி லாளிகளும் சேர்ந்து சங்கங்கள் அமைத்துக்கொள்ளு கிறார்கள். இவ்வாறு சிறிதுசிறிதாகச் சமூகம் என ஒன்று வளர்ச்சி பெறுகிறது. ஆரம்பத்தில் காட்டுமிராண்டி நிலையில் மனிதன் தனியாக வாழ்ந்தான். எந்தவிதமான சமூகமும் இல்லை. அதற்கு அடுத்த நிலை குடும்பம்; அதன் பிறகு கிராமம்; அதன்பிறகு பல கிராமங்களின் சேர்க் கையாலாகிய ஒரு சமூகம். இந்தச் சமூகம் இவ்வாறு வளர்ந்த காரணம் என்ன? பிழைப்புக்காகப் போராட வேண்டி யிருந்ததால்தான் இந்த வளர்ச்சியும் ஒத்

துழைப்பும் ஏற்பட்டன. யாவருக்கும் பொதுவான விரோதியைத் தாக்குவதாயினும் அல்லது அந்த விரோதியினின்றும் தம்மைக் காத்துக்கொள்வதாயினும் தனியே இருந்து அதைச் செய்வதைவிட எல்லாரும் சேர்ந்து செய்வது அதிகப் பலன் அளிக்கக்கூடியதாயிருந்தது. இதைவிட, வேலைசெய்வதில் ஏற்பட்ட ஒத்துழைப்பு அதிகப் பலனைக் கொடுத்தது. தனியாக உழைப்பதைவிடப் பலர் கூடி உழைத்தால் அதிகமான உணவுப்பொருள்களையும் இன்னும் வாழ்க்கைக்கு அவசியமான மற்றப் பொருள்களையும் உண்டாக்கலாம். தனக்காக மட்டும் வேட்டையாடிப் பிழைத்துவந்த காட்டுமிராண்டி நிலையிலிருந்து மக்கள் கூடி வேலைசெய்யத் தலைப்பட்டவுடன் அந்த வேலையில் ஏற்பட்ட ஒத்துழைப்பு காரணமாக அவர்கள் பொருளாதாரத் துறையிலும் வளர்ச்சிபெற்று வந்தார்கள். மனிதன் பிழைப்பை உத்தேசித்துச் செய்யும் முயற்சி பெருகப் பெருகப் பொருளாதாரத் துறையில் ஏற்பட்ட இவ்வளர்ச்சிதான் சமூகம் என ஒன்று உண்டாவதற்கும் அது வளர்ச்சியுறுவதற்கும் காரணம் என்று சொல்லலாம். நீண்டகாலமாக வரும் சரித்திரத்தைக் கவனித்துப் பார்த்தால் அதன் ஊடே, முடிவில்லாத போராட்டத்துக்கும் துன்பத்துக்கும் சில வேளைகளில் பிற்போக்குக்கும் இடையில், இவ்வளர்ச்சியைக் காணலாம். ஆனால் இவ்வளர்ச்சியின் பயனாக உலகம் முன் இருந்ததைவிடப் பிரமாதமாக முன்னேற்றம் அடைந்துவிட்டதென்றோ அல்லது அதிக இன்பம் பொங்குமிடமாக விளங்குகிறதென்றோ சொல்ல முடியாது. முன்னைவிடச் சிறிது உயர் நிலையை அடைந்திருக்கிறதென்று சொல்லலாம். ஆனால் எல்லாக் குற்றங்களும் நீங்கிய உத்தமமான நிலையை அடைவதற்கு இன்னும் வெகுதூரம் இருக்கிறது. எங்கு நோக்கினும் துன்பத்துக்குக் குறைவில்லை.

பொருளாதார வளர்ச்சியும் சமூக வளர்ச்சியும் அதிகமாக ஆக வாழ்க்கையும் அதிகச் சிக்கலுள்ளதாக மாறுகிறது. வியாபாரமும் வர்த்தகமும் பெருகுகின்றன. பெற்றுக்கொள்பவனிடம் ஒன்றையும் எதிர்பாராமல் பண்டங்களைக் கொடுத்துவந்தது போய், பதிலுக்கு வேறு பண்டங்களைப் பெற்றுக்கொள்வது என்கிற பண்டமாற்று முறை ஏற்படுகிறது. அதன்பிறகு பணம் வழங்க ஆரம்பிக்கிறது. அதனால் எல்லாவிதமான பேரங்களிலும் பெரிய மாறுதல் உண்டாகிறது. வாங்கின பொருளுக்குப் பொன் அல்லது வெள்ளி நாணயங்களைக் கொடுப்பது மிகவும் சுலபமான முறையாயிருப்பதால் வியாபாரம் பெருகுகிறது. இதற்குப் பிறகு ஜனங்கள் நாணயங்களைக் கூட எப்பொழுதும் உபயோகிக்காமல் அடையாளங்களை உபயோகிக்க ஆரம்பிக்கிறார்கள். இவ்வளவு பணம் கொடுக்கப்படும் என்று ஒரு காகிதத்தில் உறுதி எழுதப் பட்டிருந்தால் அதுவே போதும் என்று கருதப்படுகிறது. இவ்வாறு 'பாங்கி நோட்டு'களும் 'பண முறி'களும் வழங்கத் தலைப்படுகின்றன. அதாவது பணம் கொடுக்கப்படும் என்கிற நம்பிக்கையின்மீது கடன் வியாபாரம் செய்யப்படுகிறது என்று அர்த்தம் (doing business on credit). இந்த நம்பிக்கை காரணமாகவும் வியாபாரமும் வர்த்தகமும் விருத்தி யடைகின்றன. இக்காலத்தில் நோட்டுகளும் பணமுறிகளும் அதிகமாக உபயோகப் படுத்தப்படுகின்றன என்பது உனக்குத் தெரிந்ததே. தெரிந்தவர்கள் பொற்காசுகள் அல்லது வெள்ளிக்காசுகள் கொண்ட பைகளைத் தூக்கிக்கொண்டு போவதில்லை.

ஆகவே சரித்திரம் ஆதிகாலத்தைவிட்டு முன்னேறிச் செல்லச் செல்ல, மனிதர்கள் அதிகமாகப் பொருள்களை உற்பத்தி செய்கிறார்கள். ஒவ்வொருவரும் ஒவ்வொரு வியாபாரத்தை எடுத்துக்கொண்டு அதைச் செவ்வையாகச்

செய்கிருர்கள். பிறரிடமிருந்து பொருளைப் பெற்றுக் கொண்டு தங்களிடமுள்ள பொருளைக் கொடுக்கிருர்கள். இவ்வாறு வியாபாரம் விருத்தியடைகிறது என்று நாம் காண்கிருேம். புதியனவும் சிறந்தனவுமான போக்கு வரவு சாதனங்கள் வளர்ச்சியுறுவதையும் நாம் காண்கிருேம். சிறப்பாக, நீராவி இயந்திரம் வந்தபிறகு, கடந்த நூறு வருஷங்களில் இவை அதிகமாக விருத்தியடைந்திருக்கின்றன. பொருளின் உற்பத்தி அதிகமாஞல் உலகின் செல்வமும் அதிகமாகிறது. அதஞல் சிலருக்காவது அதிக ஒழிவு கிடைக்கிறது. இவ்வாருக 'நாகரிகம்' என்பது தோன்றி வளர்கிறது.

இவைகளெல்லாம் சாத்தியமாகிவிட்டன. நாம் வாழும் இக்காலம் கல்வியறிவிலும், கலைகளிலும், விஞ்ஞானத்திலும் முற்போக்குடையதாக விளங்குகிறதென்றும், தற்கால நாகரிகம் சாதித்துள்ள அதிசயங்கள் பல என்றும் பலர் வானளாவப் புகழ்ந்து சொல்லுகிருர்கள்; ஆயினும் ஏழைகள் ஏழைகளாகவே இருந்து கஷ்டப்பட்டுக்கொண் டிருக்கிருர்கள்; பெரிய தேசங்கள் ஒன்ருெடொன்று போரிட்டுக்கொண்டு கோடிக்கணக்கான மக்களைக் கொன்று குவிக்கின்றன. நமது தேசத்தைப்போன்ற பெரிய தேசங்கள் இன்னும் அந்நியரால் ஆளப்பட்டு வருகின்றன. நமது சொந்த வீட்டில் நமக்குச் சுதந்தரம் இல்லாதபோது நாகரிகத்தால் நமக்கு என்ன பயன்? ஆஞல் நாம் இப்போது விழித்தெழுந்து முயற்சி செய்து வருகிருேம்.

கிளர்ச்சி மிகுந்த இக்காலத்தில் வாழ நாம் எவ்வளவு பாக்கியம் செய்திருக்கிருேம்! இந்தியா மட்டுமின்றி உலகம் முழுவதுமே மாறுதலடைந்துகொண்டிருப்பதை நாம் பார்க்க முடிவதோடு இந்தப் பெரிய நாடகத்திலே (adventure) நாம் ஒவ்வொருவரும் பங்கு எடுத்துக்

கொள்ளக் கூடியவர்களாகவும் இருக்கிறோம். நீ அதிருஷ்டம் மிகுந்த பெண். ருஷியாவில் புதிய சகாப்தத்தைத் தோற்றுவித்த புரட்சி தோன்றிய அதே வருஷத்தில் அதே மாதத்தில் நீ பிறந்ததோடு, உன் சொந்த நாட்டிலேயே இப்போது நடக்கும் புரட்சியையும் பார்த்துக் கொண்டிருக்கிறாய். சீக்கிரத்தில் நீ அதில் பங்கு எடுத்துக் கொள்ளவும் கூடும். உலகம் முழுவதிலும் கொந்தளிப்பையும் மாறுதலையும் காண்கிறோம். கீழ்கோடியிலே ஜப்பான் சீனாமீது பாய்கிறது. மேற்கே, ஏன் உலகமெங்கணும், பழைய முறை ஆட்டம் கொடுத்துக் கீழே விழுந்துவிடும்போலிருக்கிறது. ஆயுதப்பரிகரணத்தைப் பற்றிப் பல நாடுகளில் பேசுகிறார்கள். ஆனால் ஒவ்வொரு நாடும் பிற நாடுகளின்மீது சந்தேகம்கொண்டு பூரண ஆயுதபலத்தைத் திரட்டிக்கொண்டிருக்கிறது. இவ்வளவு நீண்டகாலமாக உலகை ஆட்சி புரிந்துவந்த முதலாளித்துவம் அஸ்தமிக்கிற வேளை இது. அது உலகைவிட்டுத் தொலையும்போது அதனுடன் பல பீடைகளும் தொலைந்து போகும்.

# 23

## மீண்டும் ஒரு முறை

மார்ச்சு 29, 1932.

**கா**லத்தின் பாதையில் நாம் செய்துவரும் இப் பிரயாணத்தில் எவ்வளவு தூரம் வந்திருக்கிறோம்? எகிப்து, இந்தியா, சீனா, நாசாசு ஆகிய தேசங்களின் ஆதி காலத்தைப்பற்றிச் சிறிது பேசினோம். 'பிரமிட்' என்னும் சமாதிக் கோபுரங்களைத் (Pyramids) தோற்று வித்த வியக்கத்தகுந்த பழமையான எகிப்து நாகரிகம் கொஞ்சம் கொஞ்சமாக வலி குன்றித் தேய்ந்து, உயிர் அற்ற வெறும் தோற்றங்களையும் அடையாளங்களையும் கொண்ட போலியாக மாறிப் போனதைக் கண்டோம். நாசாசு நாகரிகத்தை அதன் சகோதர நாகரிகமாகிய கிரேக்க நாகரிகம் அழித்து ஒழித்ததையும் கண்டோம். போதிய சான்றுகள் இன்மையால் இந்தியா, சீனா இவற்றின் ஆதிகாலத்தைப்பற்றி நாம் ஒன்றும் தெளி வாகத் தெரிந்துகொள்ள முடியவில்லை. ஆனால் இந் நாடுகள் அக்காலத்திலேயே நாகரிகத்தின் கருத்துடையன வாய் விளங்கின. பல ஆயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட தங்கள் கலை நாகரிகங்களோடு இன்றுவரையில் தொடர்பு அற்றுப் போகாமல் விளங்கும் இவ்விரு நாடுகளையும் கண்டு இறும்பூது எய்தினோம். மெசபொடேமியாவில் சாம்ராஜ்யத்துக்குப்பின் சாம்ராஜ்யம் தோன்றிச் சிறிது காலம் இருந்து பிறகு எல்லாச் சாம்ராஜ்யங்களும் போன வழியே போய்விட்டதைப் பார்த்தோம்.

கிறிஸ்துவுக்கு 500 அல்லது 600 ஆண்டுகளுக்கு

முற்பட்ட காலத்தில் பல்வேறு தேசங்களில் தோன்றிய பல பெரியார்களைப்பற்றிச் சிறிது தெரிந்துகொண்டோம். இந்தியாவில் புத்தரும் மகாவீரரும் தோன்றினார்கள். சீனாவில் கன்பூஷியஸ், லௌ-ட்சே (Lao-Tse) என இரு மகான்கள் தோன்றினார்கள். பாரசீகத்தில் ஜாரதுஷ்டிரரும், கிரீஸில் பிதகோரஸூம் தோன்றினார்கள். இந்தியாவில் புத்தர் பழைய வைதிக சமயத்தின் சடங்கு முறைகளையும் குருக்கள்மாரின் இழிந்த போக்கையும் கண்டித்தார். ஏனெனில் குருக்கள்மார் என்போர் சாதாரண ஜனங்களைப் பல மூடப் பழக்க வழக்கங்களாலும் பூஜைகளாலும் மிரட்டி ஏமாற்றுவதை அவர் கண்டார். அவர் ஜாதி - வகுப்பு முறையைக் கண்டித்துச் சமத்துவத்தைப் போதித்தார்.

பிறகு மேற்கே ஆசியாவும் ஐரோப்பாவும் சேருமிடத்துக்குச் சென்று பாரசீகத்தைப்பற்றியும் கிரீஸைப் பற்றியும் கவனித்தோம். பாரசீகத்தில் ஒரு பெரிய சாம்ராஜ்யம் தோன்றிய வரலாற்றையும், 'மன்னர் மன்னனாகிய' டேரியஸ் என்பவன் அதை இந்தியாவில் சிந்து நதிதீரம் வரையில் பரவச் செய்ததையும், அந்தப் பெரிய சாம்ராஜ்யம் சிறிய கிரீஸ் தேசத்தை விழுங்க முயன்று ஆச்சரியமான விதத்தில் அதன் எதிர்ப்புக்கு ஆற்றாது தோற்றோடினதையும் கண்டோம். அதன்பிறகு, கிரீஸ் தேசத்தின் சிறிது காலமே நிலைத்திருந்த, ஆனால் ஒளி விட்டுப் பிரகாசித்த சரித்திரத்தைக் கவனித்தோம். அக்காலத்தில் அங்கே பல பெரிய அறிவாளிகளும் மகான்களும் தோன்றி அழகு மிக்க கலைகளையும் இலக்கியத்தையும் படைத்துவிட்டுச் சென்றார்கள்.

கிரீஸின் இவ்வுன்னதமான பொற்காலம் (Golden age) அதிக நாள் நீடித்திருக்கவில்லை. மாசிடோனியாவைச் சேர்ந்த அலெக்சாந்தர் தன் வெற்றிகளால்

கிரீஸின் புகழைப் பெரிதும் பரவச் செய்தான். ஆனால் அவன் காலத்திலிருந்து கிரீஸின் உயர்ந்த கலைச் செல்வம் சிறிது சிறிதாக மங்கி மறைந்து போயிற்று. அலெக்சாந்தர் பாரசீக சாம்ராஜ்யத்தை அழித்து இந்தியாவிலும் பிரவேசித்து வெற்றிமாலை சூடினான். அவன் பெரிய சேனாதிபதி என்பதற்குச் சந்தேகமே இல்லை. அவனைப் பற்றிக் கர்ண பரம்பரையாகப் பல கதைகள் வழங்கி வருவதால் அவன் தன் தகுதிக்கு மீறிய புகழை இன்று அடைந்துவிட்டான். பரந்த கல்வி கேள்வி உடையவர்களுக்குத்தான் சாக்ரடீஸ், பிளேடோ, பிடியாஸ், சோபோகிளீஸ் முதலிய கிரேக்கப் பெரியார்களைப் பற்றித் தெரியும். ஆனால் அலெக்சாந்தரை அறியாதார் யார்?

அலெக்சாந்தர் பிரமாதமாக ஒன்றையும் சாதித்து விடவில்லை. பாரசீக சாம்ராஜ்யம் ஏற்கெனவே கிழப் பருவமடைந்து ஆடி விழுந்துவிடும் நிலையில் இருந்தது. இந்தியாவுக்கு அலெக்சாந்தர் வந்து, உடனே திரும்பிப் போய்விட்டான். அது இந்தியாவை அதிகமாகப் பாதிக்கவில்லை. ஒருவேளை அலெக்சாந்தர் இன்னும் அதிக காலம் வாழ்ந்திருந்தால் நிலையான காரியங்களைச் சாதித்திருக்கவும் கூடும். ஆனால் அவன் இளவயதிலேயே இறந்துவிட்டான். அவனுக்குப்பின் அவனுடைய சாம்ராஜ்யமும் சிதறுண்டு போயிற்று. அவனுடைய சாம்ராஜ்யம் நீடித்திராவிட்டாலும் அவனுடைய பெயர் இன்னும் நிலைபெற்று விளங்குகிறது.

அலெக்சாந்தர் கிழக்கே படையெடுத்துப் போனதனால் விளைந்த ஒரு பெரும் பயன், கிழக்குக்கும் மேற்குக்கும் இடையே மீண்டும் புதிய உறவுகள் ஏற்பட்டமையேயாகும். பல கிரேக்கர்கள் கிழக்கே சென்று பழைய நகரங்களிலும் தாங்கள் புதிதாக வளைத்த இடங்

களிலும் குடியேறினார்கள். அலெக்சாந்தர் காலத்துக்கு முன்பே கிழக்குக்கும் மேற்குக்கும் வாணிகம் முதலிய சம்பந்தங்கள் இருந்து வந்தன. அவனுடைய காலத் துக்குப் பின்பு அவை இன்னும் பெருகின.

அலெக்சாந்தரின் படையெடுப்பினால் இன்னொரு பயனும் விளைந்ததாகக் கருதப்படுகிறது. அது வாஸ்தவ மாயின் கிரேக்கர்களுக்கு அதனால் பெருந் தீங்கு விளைந்த தென்றே சொல்ல வேண்டும். அலெக்சாந்தரின் போர் வீரர்கள் திரும்புகையில் அவர்களுடன் மெசபொடேமி யாவின் சதுப்பு நிலங்களிலிருந்து 'மலேரியா' ஜுரத் துக்குக் காரணமான கொசுக்களும் போயின என்றும், கிரீஸின் பள்ளமான பிரதேசங்களில் அவை பரவியதால் கிரேக்க ஜாதியின் வலிவும் சக்தியும் குன்றிவிட்டன என்றும் கருதப்பட்டு வருகிறது. கிரேக்கர்களின் வீழ்ச்சிக்கு இதுவும் ஒரு காரணமாகச் சொல்லப் படுகிறது. இது ஓர் அனுமானமே ஒழிய இதில் எவ்வளவு உண்மை இருக்கிறதென்று யாரும் சொல்ல முடியாது.

அலெக்சாந்தரின் அற்பாயுள் சாம்ராஜ்யம் முடி வடைந்ததும் அதன் இடத்தில் வேறு சில சிறு சாம் ராஜ்யங்கள் தோன்றின. இவைகளில் டாலமியின் ஆட்சிக்குட்பட்ட எகிப்தும் ஒன்று. இன்னொன்று செலூகசின் ஆட்சிக்குட்பட்ட மேற்கு ஆசியா. இவர்கள் இருவரும் அலெக்சாந்தரின் சேனாதிபதிகள். செலூகஸ் இந்தியாவை ஆக்கிரமித்துத் தன்கீழ்க் கொண்டுவர முயன்றான். ஆனால் அவன் இந்தியாவின் பலமான எதிர்ப்பைக் கண்டு திகைத்துப் போய்விட்டான். வட இந்தியா முழுவதும், மத்திய இந்தியா முழுவதும் சந்திர குப்த மௌரியன் ஏகசக்ராதிபத்தியம் செலுத்திவந்தான். சந்திரகுப்தனைப் பற்றியும் அவனுடைய கீர்த்தி வாய்ந்த

பிராமண மந்திரி சாணக்கியனைப் பற்றியும் அந்தச் சாணக்கியன் இயற்றிய 'அர்த்த சாஸ்திரம்' என்னும் நூலைப் பற்றியும் எனது முன் கடிதங்களில் சிறிது சொன்னேன். அதிருஷ்டவசமாக இந்த நூல் நமக்குக் கிடைத்திருப்பதால் அதிலிருந்து 2200 ஆண்டுகளுக்குமுன் இந்தியா இருந்த நிலையை நாம் நன்கு அறிந்துகொள்ள முடிகிறது.

இதுவரையில் சொல்லிவந்ததை நாம் மீண்டும் ஒரு முறை சுருக்கமாகக் கவனித்தோம். அடுத்த கடிதத்தில் மௌரிய சாம்ராஜ்யத்தைப் பற்றியும் அசோகனைப் பற்றியும் சொல்லுகிறேன். நைனி சிறையிலிருந்து, 1931 ஜனவரி, 25-ஆம் நாளன்றே அதாவது 14 மாதங்களுக்கு முன்பே இவ்விஷயத்தைக் கூறுவதாக வாக்களித்தேன். இன்னும் அதை நான் நிறைவேற்றவில்லை.

# 24

## தேவப்பிரியன் அசோகன்

மார்ச்சு 30, 1932

அரசர்களையும் குறுநில மன்னர்களையும் இழித்துக் கூற நான் அஞ்சுவதில்லை. புகழ்வதற்கும் வணக்கம் செலுத்துவதற்கும் உரிய அம்சம் எதையும் நான் அவர்களிடம் காண முடியவில்லை. ஆனால் அரசனாகவும் சக்கரவர்த்தியாகவும் இருந்தும் உண்மையில் பெரியவனாகவும் புகழுக்கு உரியவனாகவும் விளங்கிய ஒருவனைப் பற்றியே இப்போது நாம் பேசப் போகிறோம். அவன் தான் அசோகன், சந்திரகுப்த மௌரியனுடைய பேரன். எச். ஜி. வெல்ஸ் என்னும் ஆங்கில ஆசிரியர் (அவருடைய கற்பனைக் கதைகள் சிலவற்றை நீ அவசியம் வாசித்திருக்க வேண்டும்.) தம்முடைய 'சரித்திர விசேஷம்' (Outline of History) என்னும் நூலில் அசோகனைப் பற்றிப் பின்வருமாறு கூறுகிறார்:

"சரித்திரத்தில் பல்லாயிரக்கணக்கில் மண்டிக் கிடக்கும் ராஜமார்த்தாண்ட, ராஜகம்பீர, ராஜகோலாகல ராஜ ராஜர்களின் பெயர்களுக்கிடையே அசோகனின் பெயர் ஒப்பற்ற தனிப் பெருமையுடன் நட்சத்திரம் போல ஒளிவிட்டுப் பிரகாசிக்கிறது. வோல்கா (Volga) விலிருந்து ஜப்பான் வரையில் அவனுடைய பெயர் இன்றும் கௌரவிக்கப்பட்டு வருகிறது. சீனாவிலும், திபேத்திலும், அவனுடைய கொள்கையை விட்டுவிட்ட இந்தியாவிலுங்கூட அவனுடைய பெருமை வழிவழியாகப் பாராட்டப்பட்டு வருகிறது. இன்று கான்ஸ்டண்டைன்

(Constantine) அல்லது சார்லமேன் (Charlemagne) இவர்களுடைய பெயர்களைக் கேள்வி வாயிலாக அறிந்திருப்பவர்களை விட அதிகமான பேர்கள் அசோகனைப் போற்றி வருகிறார்கள்."

இவர் அசோகனை வானளாவப் புகழ்ந்திருக்கிறார் என்றே சொல்ல வேண்டும். ஆனால், அவ்வளவும் தகும். இந்திய சரித்திரத்தின் இப்பகுதியை எண்ணுந்தோறும் எந்த இந்தியனும் விசேஷ ஆனந்தம் கொள்வான் என்பதில் ஐயமில்லை.

கிறிஸ்து சகாப்தம் தொடங்குவதற்குச் சற்றேறக் குறைய 300 ஆண்டுகளுக்கு முன்னரே சந்திரகுப்தன் இறந்துவிட்டான். அவனுக்குப்பின் அவனுடைய மகன் பிந்துசாரன் பட்டத்துக்கு வந்து 25 ஆண்டுகள் அரசு புரிந்தான். அவனுடைய ஆட்சியில் அமைதி நிலவியிருந்தது. கிரேக்க உலகத்தோடு ஏற்பட்ட தொடர்புகள் அற்றுப்போகாமல் அவன் காப்பாற்றி வந்தான். எகிப்தின் அரசனாகிய டாலமியின் தூதனும், மேற்கு ஆசியாவை ஆண்டுவந்த செலூகஸின் மகன் ஆண்டியோகஸ் (Antiochus) அனுப்பிய தூதனும் அவனுடைய ராஜ சபையில் வந்திருந்தார்கள். வெளிநாடுகளோடு வியாபாரமும் நடந்து வந்தது. இந்தியாவிலிருந்து சென்ற அவுரியைக் கொண்டு எகிப்து நாட்டார் தங்கள் துணிகளுக்குச் சாயம் தோய்த்தார்கள் என்று சொல்லப்படுகிறது. அவர்கள் தைலப் பதமிட்ட சவங்களை (Mummies) இந்திய மஸ்லின் துணிகளில் சுற்றி வைத்தார்கள் என்றும் கூறப்படுகிறது. பீகாரில் சில பழங்காலத்துச் சின்னங்கள் கண்டுபிடிக்கப்பட்டிருக்கின்றன. அவற்றிலிருந்து மௌரியர் காலத்துக்குமுன்பே அங்கே கண்ணாடிப் பாத்திரங்கள் செய்யப்பட்டிருக்க வேண்டும் என்று தெரிகிறது.

சந்திரகுப்தன் அரசவையிலே வந்திருந்த கிரேக்க தூதராகிய மெகஸ்தனிஸ் என்பவர், இந்தியர்கள் அழகையும் அலங்கார ஆடை அணிகலன்களையும் விரும்பிப் போற்றி வந்தார்கள் என்றும், அவர்கள் உயரத்தை அதிகப்படுத்திக் காட்டுவதற்காக ஒருவிதப் பாதரட்சையை அணிந்து வந்தார்கள் என்றும் கூறுகிறார். இதைக் கேட்க நீ ஆச்சரியப்படுவாய். ஆகவே உயர்ந்த குதிகால்கள் கொண்ட பாதரட்சைகள் தற்காலத்தில் கண்டுபிடிக்கப்பட்டவை என்று சொல்வதற்கில்லை.

பிந்துசாரனுக்குப் பின் கி. மு. 268-ஆம் ஆண்டில் அசோகன் சிம்மாசனம் ஏறினான். வட இந்தியா முழுவதையும் மத்திய இந்தியாவையும் தன்னுள் கொண்டு மத்திய ஆசியா வரையில் பரவியிருந்த பெரிய சாம்ராஜ்யத்துக்கு அவன் தலைவன் ஆனான். தெற்கிலும் தென் கிழக்கிலும் தன் சாம்ராஜ்யத்துக்குள் அடங்காமலிருந்த வேறு பல நாடுகளையும் வென்று சேர்க்கக் கருதியே அவன் தான் பட்டத்துக்கு வந்த ஒன்பதாவது ஆண்டில் கலிங்கத்தின் மீது படையெடுத்துச் சென்றான். மகாநதி, கோதாவரி, கிருஷ்ணா ஆகிய நதிகளுக்கிடையே இந்தியாவின் கீழ்கரையில் இருப்பது கலிங்க தேசம். கலிங்கர்கள் வீரத்துடன் போரிட்டார்கள்; ஆனால் அவர்களில் ஏராளமானவர்கள் போர்க்களத்திலே மடிந்துபோனதனால் தோற்றுவிட்டார்கள். இந்தப் போரும் அதனால் விளைந்த கொலையும் அசோகன் மனத்தைப் பெரிதும் வாட்டின. போரையும் அதன் விளைவுகளையும் அவன் வெறுத்தான். இனிமேல் 'போர்' என்பதே கூடாது என்று அவனுக்குத் தோன்றிவிட்டது. தென்கோடியில் ஒரு சிறுபாகம் நீங்கலாக இந்தியா முழுமையும் அவன் ஆளுகையில் இருந்தது. அதையும் வென்று சேர்த்துக்கொள்வது அவனுக்கு மிக எளிதான

ஒரு காரியமே! ஆயினும் அவன் அவ்வாறு செய்யவில்லை. சரித்திரத்தில், வெற்றிக்குப்பின் போர்த் தொழிலை விட்டொழித்த அரசன் அசோகன் ஒருவனே என்று ஆசிரியர் எச். ஜி. வெல்ஸ் கூறுகிருர்.

நமது நல்வினையின் பயனுக அசோகன் தன் எண்ணங்களையும் செயல்களையும் தன் சொந்த வார்த்தைகளிலேயே எழுதிவைத்திருக்கிருன். தன்னுடைய பிரஜைகளும் பின் தலைமுறையார்களுங்கூடக் கடைப்பிடிக்க வேண்டுமென்று அவன் பல கட்டளைகளைக் (Edicts) கல்லிலும் செம்பிலும் செதுக்கி வைத்துச் சென்ருன். அலகாபாத் கோட்டையிலும் அத்தகைய அசோகன் தூண் ஒன்று இருப்பது உனக்குத் தெரியும். நமது மாகாணத்தில் அதைப்போல் இன்னும் பல இருக்கின்றன.

போரினுலும் வெற்றியினுலும் விளைகின்ற கொடிய கொலைத் தொழிலைக் கண்டு தான் அச்சமும் நடுக்கமும் இரக்கமும் எய்தியதை இந்தக் கட்டளைகளிலே அசோகன் தெரிவித்திருக்கிருன். ஒருவன் தன் மனத்தைப் புலன் வழி செல்லாது அடக்குவதும், தருமத்தினுல் பிறர் உள்ளங்களைக் கவர்வதுமே உண்மையான வெற்றியாகும் என்று அவன் கூறுகிருன். அந்தக் கட்டளைகள் சிலவற்றைக் கீழே தருகிறேன். அவற்றைக் கண்டு நீ இறும்பூது எய்துவதோடு அசோகனையும் இன்னும் நன்ருகத் தெரிந்துகொள்வாய்.

“மாட்சிமை பொருந்திய பிரியதரிசி மகாராஜா அவர்கள் சிம்மாசனமேறி எட்டு ஆண்டுகளுக்குப் பிறகு கலிங்கம் போரிலே வெல்லப்பட்டது. அந்தப் போரில் சிறை பிடிக்கப்பட்டவர்கள் ஒன்றரை லட்சம் பேர்கள், கொல்லப்பட்டவர்கள் ஒரு லட்சம் பேர்கள்; இதைப் போல் பல மடங்கு பேர்கள் மாண்டனர்.

"கலிங்கம் சாம்ராஜ்யத்தில் சேர்க்கப்பட்டவுடனே பிரியதரிசி மகாராஜாவுக்கு ஜீவகாருண்ய தருமத்தினிடத்து அன்பும், அதைக் காப்பாற்றவேண்டும் என்ற எண்ணமும் பிறந்து, அத்தருமத்தைப் பிறரும் கைக்கொள்ள வேண்டுமென்று அவர் வற்புறுத்த ஆரம்பித்தார். கலிங்கத்தின் மீது வெற்றி கொண்டதற்காக அவர் கழிபேரிரக்கம் கொண்டார். ஏனெனில் இதற்குமுன் வெல்லப்படாத ஒரு தேசத்தை வெல்வதிலே கொலையும், சாவும், ஜனங்களைச் சிறைபிடித்தலும் அடங்கியிருக்கின்றன. இதைக் கண்டு மகாராஜா அடைந்த துயரத்துக்கு அளவே இல்லை."

கலிங்கப் போரில் கொல்லப்பட்டவர்கள், சிறைபிடிக்கப்பட்டவர்கள் ஆகியோரின் எண்ணிக்கையில் ஆயிரத்தில் ஒரு பங்குகூடக் கொல்லப்படுவதையோ, சிறைபடுத்தப்படுவதையோ அசோகன் பொறுக்க மாட்டான் என்று அந்தக் கட்டளை கூறுகிறது.

"மேலும் யாராவது ஒருவன் பிரியதரிசி மகாராஜாவுக்குத் தீங்கிழைத்தால் அதையும் அவர் இயன்ற வரையில் பொறுத்துக் கொள்ள வேண்டும். தமது ஆளுகைக்குட்பட்ட காடுகளில் வாழும் ஜாதியாரிடத்துங் கூட அவர் அன்பும் அருளும் பூண்டு அவர்களையும் நல்வழியிலே நடக்குமாறு செய்ய வேண்டுமென்று விரும்புகிறார். அவ்வாறு செய்யாவிட்டால் அவர் அதற்காக மிகவும் வருந்துவார். ஏனெனில் உயிருள்ளன யாவும் பாதுகாவலும், தன்னடக்கமும், மன அமைதியும், மகிழ்ச்சியும் பொருந்தி வாழ வேண்டுமென்பதுதான் அவருடைய அவா."

மனிதர்களுடைய உள்ளங்களை அருளொழுக்கம் அல்லது ஜீவகாருண்ய தருமத்தினால் வெல்வதே உண்மையான வெற்றி என்று அசோகர் மேலும் கூறுகிறார்.

இத்தகைய உண்மையான வெற்றிகளைத் தமது ஆட்சிக் குட்பட்ட நாடுகளில் மட்டுமின்றித் தொலைவிலுள்ள வேறு பல நாடுகளிலும் அவர் ஏற்கெனவே அடைந்து விட்டார்.

இந்தக் கட்டளைகளில் தருமம் என்று அடிக்கடி குறிப்பிடப்பெறுவது பௌத்த தருமமேயாகும். அசோகர் பௌத்த மதத்திலே தீவிரப் பற்றுதல் உள்ளவராகிப் பௌத்த தருமத்தைப் பரவச் செய்வதற்குத் தம்மா லியன்ற யாவும் செய்தார். ஆனால் பலாத்காரமாக வற்புறுத்தி அவர் யாதொன்றும் செய்யவில்லை. மனி தருடைய இதயங்களை அன்பினால் வசப்படுத்தி அவர் அவர்களைப் பௌத்த மதத்தைத் தழுவும்படி செய்தார். அசோகரைப் போல் பிற மத துவேஷமற்ற மதவாதிகள் மிக மிக அருமையாகவே காணப்படுகின்றனர். தங்க ளுடைய மதத்துக்கு மற்றவர்களை மாற்றும் பொருட்டு அவர்கள் பயமுறுத்தல், பலாத்காரம், வஞ்சகம் முதலிய எதையும் உபயோகிக்கப் பின்வாங்குவதில்லை. சரித் திரத்தில் எங்கே பார்த்தாலும் மதக் கொடுமைகளும் மதப் போர்களும் நிறைந்திருக்கின்றன. மதத்தின் பேராலும் கடவுளின் பேராலும் ரத்தம் சிந்தப்பட்ட அளவுக்கு வேறு எதன்பேராலும் ரத்தம் சிந்தப்பட வில்லை என்று துணிந்து சொல்லலாம். ஆகவே இந்தியா வின் அரும்பெரும் புதல்வரும், பெரிய சாம்ராஜ்யத் துக்குத் தலைவரும், தீவிர மத உணர்ச்சி கொண்டவரு மாகிய அசோகர் தம்முடைய கொள்கைகளுக்குப் பிறரை எம்முறையில் மாற்ற முயன்றார் என்பது இங்கே நினைவுகூர்தற்குரியது. கத்தியைக் காட்டி ஒருவன்மீது மதத்தையும் நம்பிக்கையையும் திணிக்கலாம் என்று எண்ணுகிற மடமை நமக்கு மிகவும் வியப்பை உண்டு பண்ணுவதாயிருக்கிறது.

ஆகவே தேவப்பிரியரான அசோகர் - 'தேவானும் பிரிய :' என்று கட்டளைகளில் எழுதப்பட்டிருக்கிறது - மேற்கே ஆசியாவிலும், ஐரோப்பாவிலும், ஆப்பிரிக்கா விலும் உள்ள நாடுகளுக்குத் தம்முடைய தூதர்களையும் தரும மகாமாத்திரர்கள் என்று கூறப்பட்ட மதபோதகர் களையும் அனுப்பினர். இலங்கைக்கு அவர் தம்மோடு கூடப்பிறந்த சகோதரர் மகேந்திரரையும் சகோதரி சங்க மித்திரையையும் அனுப்பி வைத்ததும் அவர்கள் கயை யிலிருந்து பரிசுத்தம் பொருந்திய போதி விருக்ஷத்தின் கிளை ஒன்றைத் தங்களுடன் எடுத்துச் சென்றதும் உனக்குத் தெரிந்தவைகளே. அனுராதபுரத்திலுள்ள கோயிலில் நாம் பார்த்த அரச மரம் (Peepal tree) உனக்கு நினைவிருக்கிறதா? இந்த மரம் அவர்கள் கொண்டுவந்த அந்தப் பழைய கிளையினின்று வளர்ந்த தென்று சொல்லப்படுகிறது.

இந்தியாவில் பௌத்த மதம் விரைவில் பரவியது. வாசா கைங்கரியமாகத் தோத்திரங்கள் சொல்லுவதும் பூஜைகளும் சடங்குகளும் செய்வதும் தருமம் அல்ல என்றும், நற்செயல்கள் புரிந்து சமுதாயத்தை உயர் நிலைக்குக் கொண்டு வருவதே தருமம் என்றும் அசோகர் கருதியதால், நாடெங்கும் சாலைகளும் சோலைகளும் குளங்களும் வைத்தியசாலைகளும் ஏற்படலாயின. பெண் கள் கல்வி கற்க வேண்டித் தனியாக ஏற்பாடுகள் செய் யப்பட்டன. நான்கு பெரிய கலாசாலைப் பட்டணங்கள் - வடகோடியில் பெஷாவருக்கருகில் உள்ள தக்ஷசீலம்; மட்ரா என்று இப்போது ஆங்கிலேயரால் திரித்துக் கூறப்படுகிற வட மதுரை; மத்திய இந்தியாவில் உள்ள உஜ்ஜயினி; பீகாரில் பாட்னுவுக்கருகில் உள்ள நாளந்தா - தோன்றின. இவ்விடங்களுக்கு இந்தியாவிலுள்ளவர் களையன்றி, சீனுவிலிருந்து மேற்கு ஆசியா வரையில்

உள்ள தூரதேசங்களிலுள்ளவர்களும் மாணுக்கர்களாக வந்து சேர்ந்தனர். இவர்கள் தத்தம் வீடுகளுக்குத் திரும்பியபோது தங்களுடன் புத்தரின் உபதேசங்களையும் கொண்டு சென்றுர்கள். நாடெங்கும் பெரிய மடங்கள் - விஹாரங்கள் என்று அவைகளுக்குப் பெயர் - தோன்றின. பாட்ளு அல்லது பாடலிபுத்திரத்துக்கருகில் இந்த விஹாரங்கள் மிகவும் அதிகமாயிருந்தபடியால் அந்த மாகாணம் முழுவதுக்கும் 'விஹார்' என்பது பெயு ராயிற்று. விஹார் என்பது திரிந்து இப்போது பீஹார் என்று வழங்குகிறது. ஆனுல் வழக்கம்போல் இம் மடங்கள் சீக்கிரத்தில் அருள் விளக்கத்தையும் தூய சிந்தையையும் உய்க்கும் வன்மை (inspiration of teaching and of thought) இழந்து வெறும் பூஜைகள் மட்டும் கிரமமாக நடந்துவரும் இடங்களாக மாறின.

அசோகருடைய ஜீவகாருண்யம் ஆறறிவுடைய மக்களையன்றி ஐயறிவு படைத்த விலங்கு முதலியவை களையும் தழுவி நின்றது. மிருகங்களுக்கு நோய் வந்தால் அவைகளுக்கு வைத்தியம் செய்வதற்குத் தனியாக மிருக வைத்தியசாலைகள் ஏற்படுத்தப்பட்டன. மிருகங்களைப் பலியிடுவது தடுக்கப்பட்டது. இந்த இரண்டு விஷயங் களிலும் அவர் நம் காலத்தைவிட அதிகம் முன்னேறிச் சென்றுர் என்றே சொல்ல வேண்டும். துரதிருஷ்ட வசமாக மிருகங்களைப் பலி கொடுக்கும் வழக்கம் இன்னும் ஓரளவுக்கு இருந்து வருகிறது; அது மதத்தின் ஒரு பகுதி யாகவும் கருதப்பட்டு வருகிறது. மிருகங்களின் சிகிச் சைக்குப் போதிய ஏற்பாடுகள் தற்போது செய்யப் பட்டிருக்கின்றன என்று யாரும் சொல்ல முடியாது.

பௌத்த மதம் பரவியதாலும் அசோகரின் ஒழுக்கம் காரணமாகவும் பலர் சைவ உணவு கொள்ள ஆரம்பித் தார்கள். 'அதுவரையில் இந்தியாவில் க்ஷத்திரியர்களும்

பிராமணர்களும் பொதுவாக மாமிசம் உண்டும் மது அருந்தியும் வந்தார்கள். இந்தப் பழக்கம் மிகவும் குறைய ஆரம்பித்தது.

இவ்வாறு முப்பத்தெட்டு ஆண்டுகள் அசோகர் அரசாண்டார். பொதுநன்மையை அன்புமுறையிலேயே வளர்க்க அவர் எப்போதும் முயன்றுவந்தார். பொதுக் காரியத்தைக் கவனிக்க அவர் எக்காலத்தும் தயாராக இருந்தார்.

“நான் உண்ணுகிறேன் என்றும் உறங்குகிறேன் என்றும் பாராமல், மந்திராலோசனை மண்டபத்தி லிருக்கிறேன் என்றும் மாதர்களோடு அந்தப்புரத்தில் இருக்கிறேன் என்றும் பாராமல், வாகனத்தில் செல்கிறேன் என்றும் அரண்மனைத் தோட்டங்களில் உலவிக் கொண்டிருக்கிறேன் என்றும் பாராமல் எல்லா இடங்களிலும் எல்லா நேரங்களிலும் அரசாங்க உத்தியோகஸ்தர்கள் எனக்கு ஜனங்களின் காரியத்தை அறிவித்துக் கொண்டே இருக்கவேண்டும். நான் பொதுநன்மைக்காக எப்போதும் உழைக்கக் கடமைப்பட்டிருப்பதால், ஏதாவது சிக்கல் ஏற்படுங்காலத்து அதை இன்ன சமயம் இன்ன நேரம் என்று பாராமல், உடனே எனக்குத் தெரிவிக்கவேண்டியது” என்று அவர் சொல்லியிருக்கிறார்.

கி. மு. 226-ஆம் ஆண்டில் அசோகர் இவ்வுலக வாழ்வை நீத்தார். அதற்குச் சில காலத்துக்கு முன்பு அவர் பௌத்த பிக்ஷு ஆனார் என்று தெரிகிறது.

மௌரியர் காலத்துப் பொருள்களிலே எஞ்சி நின்றவை மிகவும் சிலவே. ஆனால் இப்போது நமக்குக் கிடைத்திருப்பவை, இந்தியாவில் ஆரிய நாகரிகத்தின் மிகவும் தொன்மையான பகுதியைக் குறிக்கின்றன. அதாவது மொஹெஞ்சோ - தாரோ அழிவுகள் நீங்கலாகப் பார்க்கும்போது, காசிக்கருகில் சாரநாத் என்னும்

இடத்தில் உள்ள மேலே சிங்கங்கள் செதுக்கப்பட்ட அழகிய அசோகன் தூணை நீ இன்றும் பார்க்கலாம்.

அசோகரது ராசதானியாகிய பாடலிபுத்திரப் பெரு நகரில் எஞ்சி நின்றது ஒன்றேனும் இல்லை. 1500 ஆண்டுகளுக்குமுன்னர் அதாவது அசோகர் காலத்துக்கு 600 ஆண்டுகளுக்குப் பிறகு பா-ஹியன் (Fa-Hien) என்கிற சீனதேசத்து யாத்திரிகர் இவ்விடத்தைப் பார்வையிட்டார். அக்காலத்திலும் அந்நகரமானது சீரும் செல்வமும் பெற்று விளங்கியது. ஆனால் கல்லினால் கட்டப்பட்ட அசோகரது அரண்மனை மட்டும் அழிவுற்றுக் கிடந்தது. அதைப் பார்த்தே அவர் பிரமித்துப் போய் விட்டார். தம் பிரயாணத்தைப்பற்றிய குறிப்பில், 'இது மனிதர்களால் செய்யக்கூடிய வேலை என்று எனக்குத் தோன்றவில்லை' என்று அவர் அழிந்துகிடந்த அவ்வரண் மனையைப்பற்றிக் கூறுகிறார்.

பெரிய கற்களினால் கட்டப்பட்ட அந்த அரண்மனை சுவடு காணமுடியாதபடி மறைந்து போய்விட்டது. ஆனால் அசோகரின் பெயர் ஆசியா கண்டம் முழுவதும் இன்றும் பசுமையாகவே விளங்கிக்கொண்டிருக்கிறது. அவருடைய கட்டளைகள் நாம் அறிந்து போற்றக்கூடியவையாக இருக்கின்றன. அவைகளிலிருந்து நாம் இன்னும் கற்றுக்கொள்ளவேண்டியன எவ்வளவோ இருக்கின்றன. இந்தக் கடிதம் மிகவும் வளர்ந்துவிட்டபடியால் உனக்கு அலுப்புத் தோன்றலாம். அசோகர் கட்டளையிலிருந்து ஒரு சிறிய வாக்கியத்தைக் கூறிவிட்டு இக்கடிதத்தை முடித்துவிடுகிறேன்.

"எல்லா மதங்களும் ஏதாவது ஒரு காரணம்பற்றி நமது வணக்கத்துக்கு உரியவைகளாக விளங்குகின்றன. இதை அறிந்து நடப்பவன் தன் மதத்தை உயர்த்துவ தோடு பிறருடைய மதங்களுக்கும் சிறந்த சேவை செய்த வனாகிறான்."

# 25

## அசோகர் காலத்திய உலகம்

மார்ச்சு 31, 1932.

அசோகர் தொலைவிலுள்ள நாடுகளுக்கும் தரும மகாமாத்திரர்கள் எனப்பட்ட மத போதகர்களையும் தூதர்களையும் அனுப்பினர் என்றும், இந்தியாவுக்கும் இந்நாடுகளுக்கும் இடைவிடாத தொடர்பும் வியாபாரமும் இருந்து வந்தன என்றும் கண்டோம். அக்காலத்திய தொடர்புகளைப் பற்றியும் வியாபாரத்தைப் பற்றியும் நான் பேசும்போது அவைகளுக்கும் இக்காலத்தில் ஏற்பட்டுள்ள தொடர்புகளுக்கும், நடைபெறும் வியாபாரத்துக்கும் உள்ள வேற்றுமையை நீ நினைவில் வைக்க வேண்டும். இக்காலத்தில் ரெயில் மார்க்கமாகவும், கப்பல் மார்க்கமாகவும்; ஆகாய விமானங்கள் மூலமாகவும் ஜனங்களும் பண்டங்களும் ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்துக்குப் போவது மிகவும் சுலபமான காரியம். ஆனால் பழைய காலத்தில் பிரயாணம் என்றால் அது அபாயம் நிறைந்ததாகவும் நீண்டதாகவும் இருந்தது. துணிச்சலும் தீரமும் படைத்தவர்களே அதை மேற்கொண்டார்கள். ஆகவே முற்காலத்திய வியாபாரத்தையும் தற்காலத்திய வியாபாரத்தையும் ஒப்பிட்டுப் பார்ப்பது பொருந்தாது.

அசோகர் குறிப்பிடும் இந்தத் ' தூர தேசங்கள் ' யாவை? அவருடைய காலத்தில் உலகம் எவ்வாறு இருந்தது? எகிப்து, மத்தியதரைக்கடல் நாடுகள் ஆகிய இவை நீங்கலாக ஆப்பிரிக்காவைப்பற்றி நமக்கு ஒன்றுமே

தெரியவில்லை. ஐரோப்பாவின் வட, மத்திய, கீழ்ப் பாகங்களைப் பற்றியும் ஆசியாவின் வட, மத்திய பாகங்களைப் பற்றியும் நாம் அறிந்திருப்பது மிகவும் சொற்பம். அமெரிக்காவைப் பற்றியும் நமக்கு ஒன்றும் தெரியவில்லை. ஆனால் ஆதிகாலத்திலிருந்தே அமெரிக்கா கண்டத்தில் நல்ல, வளர்ச்சியுற்ற நாகரிகங்கள் இருந்து வந்ததாகப் பலர் நினைக்கிறார்கள். இதற்கு நெடுநாளைக்குப் பிறகு கி. பி. பதினைந்தாம் நூற்றாண்டில் கொலம்பஸ் என்பவர் அமெரிக்காவைக் கண்டுபிடித்ததாகச் சொல்லப்படுகிறது. அந்தக் காலத்திலேயே தென் அமெரிக்காவிலுள்ள பெருவிலும் அதைச் சுற்றியுள்ள பிரதேசங்களிலும் ஓர் உயர்ந்த நாகரிகம் இருந்ததாக நாம் அறிகிறோம். கி. மு. மூன்றாவது நூற்றாண்டில் இந்தியாவில் அசோகர் வாழ்ந்துவந்த காலத்தில் அமெரிக்காவிலும் நாகரிக முதிர்ச்சி பெற்ற மக்கள், சமுதாயத்தைச் சீருற அமைத்து வாழ்ந்து வந்தார்கள் என்று எண்ண இடமிருக்கிறது. ஆனால் அவர்களைப்பற்றி யாதோர் உண்மையும் நமக்குத் தெரியவில்லை. ஆகவே வெறும் ஊகம் செய்துகொண்டிருப்பதில் பயனில்லை. உலகத்தில் நாம் கேட்டும் அறிந்தும் உள்ள இடங்களில்தான் நாகரிகம் வாய்ந்த மக்கள் வாழ்ந்தார்கள் என்று நாம் தவறாக எண்ணுவது இயற்கையா யிருப்பதால் நான் மேற்கூறியவற்றைச் சொன்னேன். நெடுங்காலமாக ஐரோப்பியர்கள், புராதன சரித்திரம் என்பது கிரேக்கர், ரோமர், யூதர் இவர்களைப் பற்றியதாகத்தான் இருக்க முடியுமென்று எண்ணி வந்தார்கள். பாவம், உலகில் மற்றப் பாகங்கள் வெறும் வனாந்தரங்களாக இருக்க வேண்டுமென்பது அவர்களுடைய கர்நாடக எண்ணம். பிறகு அவர்களிடையில் உதித்த அறிஞர்களும், புதை பொருள் ஆராய்ச்சி நிபுணர்களும் சீனாவைப்பற்றியும் இந்தியாவைப்பற்றியும்

இதர நாடுகளைப்பற்றியும் அவர்களுக்குத் தெரிவித்த போதுதான் தங்களுடைய பழைய அறியாமையை அவர்கள் கண்டார்கள். ஆகவே நாம் அத்தகைய தவறு தலைச் செய்யாமல் ஜாக்கிரதையாக இருக்க வேண்டும். உலகில் நிகழ்ந்ததனைத்தும் நமது சிற்றறிவிற்குள் அடங்கிக் கிடக்கிறது என்று நாம் நினைத்துவிடக் கூடாது.

தற்போதைக்கு நாம் அறிந்துகொண்ட வரையில் அசோகர் காலத்திய நாகரிக உலகம் - அதாவது கி. மு. மூன்ருவது நூற்ருண்டு - முக்கியமாக ஐரோப்பாவையும் ஆப்பிரிக்காவையும் சேர்ந்த மத்தியதரைக்கடல் நாடு களையும், மேற்கு ஆசியாவையும், சீனு, இந்தியா ஆகிய நாடுகளையும் தன்னகத்தே கொண்டிருந்தது என்று சொல்லலாம். அந்நாளில் சீனுவுக்கும் மேல்நாடுகளுக்கும், ஏன் மேற்கு ஆசியாவுக்குங்கூட, நேரான தொடர்பு இல்லையென்று தோன்றுகிறது. மேற்கே வாழ்ந்தவர்கள் சீனுவைப்பற்றி விசித்திரமான எண்ணங்கள் கொண் டிருந்தார்கள். மேல்நாடுகளையும் சீனுவையும் பிணைத்து நின்றது இந்தியா என்று சொல்லலாம்.

அலெக்சாந்தர் இறந்த பிறகு அவனுடைய சாம்ராஜ் யத்தை அவனுடைய தளகர்த்தர்கள் பங்கிட்டுக் கொண்டார்கள் என்று மேலே பார்த்தோம். அதனுல் மூன்று பெரும் பிரிவுகள் ஏற்பட்டன: (1) செலூகசின் ஆளுகைக்குட்பட்ட மேற்கு ஆசியா, பாரசீகம், மெசபொடேமியா; (2) டாலமியின் ஆளுகைக்குட்பட்ட எகிப்து; (3) ஆண்டிகோனசின் (Antigonus) ஆளுகைக் குட்பட்ட மாசிடோனியா. முற்கூறிய இரண்டும் நெடுங் காலம் இருந்தன. இந்தியாவுக்குப் பக்கத்து நாட்டாளுன செலூகஸ் இந்தியாவின் ஒரு பகுதியைத் தன் சாம்ராஜ்யத் துக்குள் சேர்த்துக்கொள்ள ஆசைப்பட்டதும் அவனிலும்

பலவானான சந்திரகுப்தன் அவனை இந்தியாவினின்று துரத்தியடித்ததோடு அவனிடமிருந்து ஆப்கானிஸ்தானத்தின் ஒரு பகுதியை எடுத்துக்கொண்டதும் உனக்கு நினைவிருக்கும்.

இம்மூன்று ராஜ்யங்களுக்குள் மாசிடோனியாவுக்குச் சற்று அதிருஷ்டம் குறைவாக இருந்தது. வடக்கேயிருந்து படையெடுத்து வந்த கால் (Gauls) ஜாதியாரால் அது அழிக்கப்பட்டது. அதில் ஒரு பாகம் மட்டும் அவர்களை எதிர்த்து நின்று தன் சுதந்தரத்தைக் காப்பாற்றிக் கொண்டது. அதன் பெயர் பெர்கமம் (Pergamum) என்பது. இப்போது சின்ன ஆசியாவில் துருக்கி இருக்கும் பிரதேசமே அது. அது ஒரு சிறிய கிரேக்க நாடு. ஆனால் நூறு வருஷங்களுக்கு மேலாக அது கிரேக்கக் கலை நாகரிகங்களுக்குத் தாயகமாக விளங்கியது. அழகிய மாடமாளிகைகள் அங்கே தோன்றின. நூல் நிலையம் ஒன்றும் பொருட்காட்சிச் சாலை ஒன்றும் அங்கே இருந்தன. ஒருவிதத்தில் அது அலெக்சாந்திரியா நகருக்குப் போட்டியாக விளங்கியது.

எகிப்தை ஆண்ட டாலமி வமிசத்தாரின் ராசதானி அலெக்சாந்திரியா நகரமாகும். புராதன உலகத்தில் மிகவும் கீர்த்திவாய்ந்த பெரிய நகரம் அது. ஏதென்சின் புகழ் சிறிது சிறிதாகக் குறைந்துவிட்டது. ஏதென்சு பெற்றிருந்த நிலையை அலெக்சாந்திரியா பெற்று, கிரேக்கர்களுடைய கலாசாரத்தின் தாயகமாக விளங்கியது. அங்கிருந்த பெரிய நூல் நிலயத்தையும் பொருட்காட்சிச் சாலையையும் காணவேண்டித் தூர தேசங்களிலிருந்து மாணவர் பலர் அங்கு வந்து குழுமினர். அவர்கள் அங்கே புராதன உலகத்தில் பிரதானமானவை என்று கருதப்பட்ட தத்துவ, கணித, சமய சாஸ்திரங்களையும் வேறு பல விஷயங்களையும் ஆராய்ந்து வந்தனர்.

யூக்கிளீது என்னும் கணித நூலாசிரியரைப் பற்றிக் கேள்விப்படாத பள்ளிக்கூடத்துப் பெண்ணோ பையனோ இல்லை. நீயும் அவரைப்பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறாய். அவர் அலெக்சாந்திரியா நகரில் வாழ்ந்தவர். அவரும் அசோகரும் ஒரே காலத்தவர்கள்.

டாலமி வமிசத்தார் கிரேக்கர்கள் என்பது உனக்குத் தெரியும். ஆனால் அவர்கள் பல எகிப்தியப் பழக்க வழக்கங்களை மேற்கொண்டார்கள். எகிப்தியரின் பழைய கடவுள்களையும் அவர்கள் வணங்க ஆரம்பித்தனர். மகாபாரதத்தில் வரும் கடவுளர்களைப்போல ஹோமர் என்னும் மகாகவி எழுதிய இதிகாசங்களில் வரும் [1] ஜுபிடர், [2] அபோலோ முதலான கிரேக்க நாட்டுத் தேவர்களும் தேவதைகளும் மறைந்துவிட்டனர்; அல்லது புதிய நாம ரூபங்களோடு காட்சி அளித்தனர். கிரீஸின் கடவுளர்களும், எகிப்தின் கடவுளர்களான ஐசிஸ் (Isis), ஆசிரிஸ் (Osiris), ஹோரஸ் (Horus) முதலானோரும் தங்களுக்குள் கலந்ததனால் புதிய கடவுளர்கள் தோன்றினார்கள். மக்கள் வணங்குவதற்கு அப்புதிய தெய்வங்கள் அவர்கள் முன்பு வைக்கப்பட்டன. எந்தத் தெய்வத்தை எந்தப் பெயரில் தொழுதாலென்ன? எவ்விதத்திலும் 'பூஜை' என ஒன்று நடைபெறுவதற்கு வழி ஏற்பட்டு விடுகிறதல்லவா? புதிய தெய்வங்களுக்குள்ளே மிகவும் போற்றப்பட்டுவந்த தெய்வத்தின் பெயர் செராபிஸ் (Serapis) என்பது.

அலெக்சாந்திரியா பெரிய வியாபாரஸ்தலமாகவும் விளங்கியது. நாகரிக உலகத்தின் பல பாகங்களிலிருந்தும் அங்கு வியாபாரிகள் வந்து குழுமினார்கள். அங்கு இந்திய வர்த்தகர்களின் குடியேற்றம் ஒன்று இருந்த

1 ஜுபிடர் - பிருகஸ்பதி பகவான்போல.
2 அபோலோ - சூரியன்போல.

தாகத் தெரிகிறது. அதேபோலத் தென் இந்தியாவில் மலையாளக்கரையிலும் அலெக்சாந்திரியாவைச் சேர்ந்த வர்த்தகர்கள் குடியேறி யிருந்ததாகத் தெரிகிறது.

எகிப்துக்குச் சமீபத்தில் மத்தியதரைக் கடலின் அக்கரையில் ரோமாபுரி சிறப்புற்று விளங்கியது எதிர் காலத்தில் அது இன்னும் பலமும் மேன்மையும் பெற்று விளங்கப் போகிறது. அதற்கு நேராக ஆப்பிரிக்காக் கரையில் அதனோடு போட்டியும் பகைமையும் கொண்ட கார்தேஜ் நகரம் இருந்தது. இவ்விரு நகரங்களின் கதையைச் சற்று விரிவாகத் தெரிந்துகொண்டால்தான் புராதன உலகத்தை நாம் ஓரளவுக்கு அறிந்தவர் களாவோம்.

மேற்கே ரோமாபுரியைப் போல் கிழக்கே சீனாவும் வளர்ச்சியும் மேன்மையும் பெற்று வந்தது. இதைப் பற்றியும் தெரிந்துகொண்ட பின்பே நாம் அசோகர் காலத்திய உலகத்தை நன்கு உணர்ந்தவர்களாவோம்.

26

## சின் சந்ததியும் ஹான் வமிசமும்

ஏப்ரல் 3, 1932.

சென்ற வருஷம் நைனி சிறையிலிருந்து நான் உனக்கு எழுதிய கடிதங்களில் சீனாவின் ஆதிகாலத்தைப்பற்றியும், ஹொயாங்-ஹோ நதிக்கரையில் ஏற்பட்ட குடியேற்றங்களைப்பற்றியும், சீனாவை முதல்முதல் அரசாண்ட ஹிசையா, ஷாங் அல்லது இன், சௌ ஆகிய வமிசங்களைப் பற்றியும், இந்நீண்ட காலத்திலே சீனராஜ்யம் எவ்வாறு படிப்படியாக வளர்ந்து அங்கு ஒரு மத்திய அரசாங்கம் தோன்றிற்றென்றும் கூறினேன். அதன் பிறகு நெடுங் காலம் பெயரளவில் சௌ வமிசத்தார் ஆண்டுவந்தார்கள். இந்தக் காலத்தில் மேற்கூறிய வளர்ச்சி தடையுற்று நின்று மத்திய அரசாங்கம் குலைய ஆரம்பித்தது. அந்த அந்தப் பிரதேசத்துக்கு அதிகாரிகளான சிற்றரசர்கள் மத்திய அரசாங்கத்துக்கு அடங்காமல் சுதந்தரமாக நின்று ஒருவரோடொருவர் சண்டையிட்டுக்கொண்டனர். இந்தத் துர்ப்பாக்கிய நிலைமை சில நூற்றாண்டுகள் - சீனாவில் நடைபெறும் எந்த நிகழ்ச்சியும் நூற்றாண்டுகள் கணக்கிலும் ஆயிரம் ஆண்டுகள் கணக்கிலும் செல்கிறது!- நீடித்திருந்தது. கடைசியில், மேற்கூறிய சிற்றரசர்களில் ஒருவனான சின் பிரபு (Duke of Ch'in) என்பவன் பழமை பொருந்திய ஆனால் வீரியம் இழந்துவிட்ட சௌ வமிசத்தாரை ஓட்டிவிட்டான். அவனுடைய கால்வழியில் வந்தவர்கள் சின் வமிசத்தார் என்று அழைக்கப் படுகிறார்கள். 'சீனா' என்னும் பெயர் 'சின்' என்பதிலிருந்து பிறந்ததாகும்.

இவ்வாருக, கி. மு. 255-ஆம் ஆண்டில சீனுவில் சின் ஆட்சி ஆரம்பமாயிற்று. இதற்குப் பதின்மூன்று வருஷங்களுக்குமுன் இந்தியாவில் அசோகரது ஆட்சி ஆரம்பமாயிற்று. ஆகவே இப்போது நாம் அசோகர் காலத்தில் சீனுவில் வாழ்ந்தவர்களைப்பற்றிப் பேசிக் கொண்டிருக்கிறேம். முதல் மூன்று சின் சக்கரவர்த்திகளின் அரசாட்சிக் காலம் குறுகியதாகவே இருந்தது. நான்காவதாக, கி.மு. 246-ஆம் ஆண்டில் ஒருவன் வந்தான். அவன் தன்னுடைய ரீதியில் ஓர் ஆச்சரிய புருஷனுக இருந்தான் என்றே கூறவேண்டும். அவனுடைய பெயர் வங் சங் (Wang Cheng) என்பது. ஆனுல் அவன் தன்னுடைய பெயரைமாற்றிஷி உவாங் டி (Shih Huang Ti) என்று வைத்துக்கொண்டான். 'முதல் சக்கரவர்த்தி' என்பது அதன் பொருள். இந்தப் பெயரே அவனுக்கு வழங்கி வருகிறது. அவன் கடந்த காலத்தை ஒரு பொருளாகக் கருதாமல் தன்னையும் தன் காலத்தையுமே உயர்வாக மதித்தான். மக்கள் கடந்த காலத்தை அடியோடு மறந்துவிட வேண்டுமென்றும், ஒப்பற்ற முதல் சக்கரவர்த்தியாகிய தன் பிறப்பிலிருந்தே சரித்திரம் ஆரம்பிக்கிறதென்று அவர்கள் நினைக்க வேண்டுமென்றும் அவன் விரும்பினுன். தனக்குமுன் 2000 ஆண்டுகளாகச் சீனுவைப் பல சக்கரவர்த்திகள் ஆண்டுவந்தார்கள் என்னும் உண்மையை அவன் பொருட்படுத்தவில்லை. அவர்களுடைய ஞாபகத்தையே நாட்டிலிருந்து அறவே ஒழித்து நீக்க அவன் எண்ணினுன். பழையகாலத்துச் சக்கரவர்த்திகளை மட்டுமல்ல, பழைய காலத்து மகான்களையும் மக்கள் மறந்துவிட வேண்டும் என்பதே அவனுடைய நோக்கம். ஆகவே பழைய வரலாறுகளைக் கூறும் எல்லா நூல்களையும் முக்கியமாகக் கன்பூஷியஸ் மகானின் உபதேசங்கள் அடங்கிய நூல்களையும் எரித்து அழித்துவிட

வேண்டுமென்று அவன் உத்தரவு பிறப்பித்தான். வைத்திய நூல்களும் வேறு சில விஞ்ஞான நூல்களுமே இவ்வுத்தரவுக்கு விலக்காக நின்றன. "பழமையைப் பாராட்டித் தற்காலத்தைப் பழிப்போரை அவர்களுடைய சுற்றத்தாருடன் கொன்று குவிப்பேன்" என்பது அவனுடைய ஆக்ஞை.

அவன் சொன்ன வண்ணமே செய்து முடித்தான். நூல்களின்மீதுள்ள அன்பினால் அவற்றை மறைக்க முயன்ற நூற்றுக்கணக்கான கல்விமான்கள் உயிரோடு புதைக்கப்பட்டனர். ஆஹா, இந்த முதல் சக்கரவர்த்தியின் கருணையே கருணை! இந்தியாவின் பழங்காலத்தைப்பற்றி அளவுக்கு மீறிய புகழை நான் கேட்கும்போதெல்லாம் அவனை நினைத்துக்கொள்வேன்; அச் சமயங்களில் அவனிடத்தில் எனக்குச் சிறிது அநுதாப உணர்ச்சி ஏற்படுவதும் உண்டு. நம் ஜனங்களில் சிலர் எப்போதும் இறந்துபோன காலத்தையே நோக்கிக்கொண்டும், அதையே புகழ்ந்துகொண்டும், அதிலிருந்தே ஆவேச உணர்ச்சியைப் பெற முயன்றுகொண்டும் இருக்கிறார்கள். கடந்த காலம் நம்மை அரும்பெருஞ் செயல்கள் செய்யத் தூண்டுமாயின் அது மிகவும் நல்லதுதான். ஆனால் எப்போதும் பின்புறமாகவே நோக்கிக்கொண்டிருப்பது ஒரு தனி மனிதனுக்கோ ஒரு தேசத்துக்கோ நன்மை பயக்கும் என்று எனக்குத் தோன்றவில்லை. யாரோ ஒருவர் சொன்னது போல, மனிதன் பின்நோக்கிச் செல்லவேண்டும் அல்லது சதா பின்புறமாகவே பார்த்துக்கொண் டிருக்கவேண்டும் என்பது ஈசன் திருவுள்ளமாயின் அவனுக்குக் கண்கள் தலையின் பின்புறத்தில் அமைக்கப்பட்டிருக்கும். கடந்த காலத்தை நாம் தாராளமாக ஆராய்ச்சி செய்யலாம், அதில் போற்றற்குரிய அம்சங்களையும் போற்றலாம். ஆனால் நமது கண்கள் எப்போதும் முன்னோக்கிப் பார்க்கவேண்

டும். நமது கால்கள் எப்போதும் முன்னோக்கி நடக்க வேண்டும்.

பழைய நூல்களையும் அவற்றைக் கற்போரையும் ஷி உவாங் டி எரித்தும் புதைத்தும் அழித்ததானது அநாகரிகமும் கொடுமையும் வாய்ந்த செயல் என்பதில் ஐயமில்லை. இதன் முடிவு என்னவென்றால் அவனோடு அவன் சாதித்தனவும் அழிந்தொழிந்தன. தான் முதல் சக்கரவர்த்தி, தனக்குப் பின் இரண்டாவது, மூன்றாவது என்று இப்படியாகச் சக்கரவர்த்திகள் காலாந்தரம் வரையில் வந்துகொண்டே இருக்கவேண்டும் என்பது அவன் எண்ணம். ஆனால் சீன அரசவமிசங்களுக்குள்ளே மிகவும் குறைந்த காலம் அரசுபுரிந்த வமிசம் சின் வமிசந் தான். நான் ஏற்கெனவே கூறியுள்ளபடி இவ்வமிசங்களில் பல, நூற்றாண்டுகள் நூற்றாண்டுகளாக ஆட்சி செலுத்தி வந்திருக்கின்றன. சின் வமிசத்துக்கு முந்திய வமிசத்தின் ஆட்சி 867 ஆண்டுகள் நடைபெற்றது. ஆனால் ஐம்பது ஆண்டுகளுக்குள் சின் வமிசத்தார் விரைவாக உயர்ந்து, வெற்றிபெற்று, பெரிய சாம்ராஜ்யத்தைக் கட்டி ஆண்டு, பிறகு வலிகுன்றி, முடிந்தும் போனார்கள். வழிவழியாகத் தொடர்ந்துவர இருக்கும் வலிமை பொருந்திய சக்கரவர்த்திகளின் பரம்பரைக்குத் தான் தலைவனாக இருக்க வேண்டுமென்று ஷி உவாங் டி மனக்கோட்டை கட்டினான். ஆனால் அவன் மாண்டொழிந்த மூன்றாண்டுகளுக்குள் அதாவது கி. மு. 209-ஆம் ஆண்டில் அவன் வமிசமே நாசமாய்ப் போயிற்று. உடனே கன்பூஷியஸ் மகான் இயற்றிய அரும்பெரும் நூல்கள் யாவும் மறைவிடங்களினின்றும் எடுக்கப்பட்டு, மீண்டும் தங்களுடைய உன்னத ஸ்தானத்தை அடைந்தன.

ஷி உவாங் டி சீனாவின் அரசர்களுக்குள்ளே மிகமிக வல்லமை வாய்ந்தவன். அவன் சிற்றரசர்கள் அனைவ

ருடைய கொட்டங்களையும் அடக்கி, பிரபு ராஜரீகத்தை (feudalism) ஒழித்து, பலம் பொருந்திய மத்திய அரசாங்கத்தை ஸ்தாபித்தான். அவன் சீனு முழுவதையும் அன்னும் (Annam) நாட்டையும் வென்று தன் கீழ்க் கொண்டுவந்தான். சீனுவின் 'பெரிய மதிலை'க் கட்ட ஆரம்பித்தவன் அவனே. இதைக் கட்டி முடிப்பதற்குக் கணக்கற்ற பொருள் செலவாயிற்று. ஆனுல் சீனர்கள், தங்களை வெளிநாட்டாரின் படையெடுப்பினின்றும் காப்பாற்றிக்கொள்வதற்கு, ஒரு நிரந்தரமான சேனையை வைத்துக்கொள்வதைக் காட்டிலும் எவ்வளவு பொருள் வேண்டுமாயினும் செலவழித்து அந்த மதிலைக் கட்டிவிடுவது நன்மையா யிருக்கும் என்று நினைத்தார்கள். பெரிய படையெடுப்பை அந்த மதில் தடுத்து நிறுத்த முடியாது. சிறிய படையெடுப்புக்களைத் தடுப்பதற்குத்தான் அது பயன்பட்டது. ஆனுல் இதிலிருந்து சீனர்கள் அமைதியாக வாழ விரும்பினுர்கள் என்றும், அவர்கள் வலிமை மிக்கவர்களாக இருந்தும் போரினுல் வரும் புகழை விரும்பவில்லை என்றும் தெரிகிறது.

முதல் சக்கரவர்த்தியாகிய ஷி உவாங் டி இறந்த பின்பு அவனுக்கு அடுத்தபடியாகப் பட்டத்துக்கு வரக் கூடியவர்கள் அவனுடைய வமிசத்தில் யாரும் இல்லை. ஆனுல் அவன் அரசாண்ட நாளிலிருந்து சீன தேசம் ஒருமைபெற்று விளங்கிவருகிறது

சின் வமிசத்துக்கு அடுத்தபடியாகச் சீனுவை ஆண்டது ஹான் (Han) வமிசமாகும். இதன் ஆட்சி 400 ஆண்டுகள் நிலைபெற்றிருந்தது. இவ்வமிசத்தின் ஆதி சக்கரவர்த்திகளிலேயே ஒரு சக்கரவர்த்தினியும் இருந்ததாகத் தெரிகிறது. இந்தப் பரம்பரையில் ஆருவது சக்கரவர்த்தியின் பெயர் ஊ-டி (Wu-Ti) என்பது. இவன் சீனுவை 50 ஆண்டுகள் அரசாண்டான். சீனுவை மிகுந்த வலிமை

யுடனும் புகழுடனும் ஆண்ட சக்கரவர்த்திகளிலே இவனும் ஒருவன். வடக்கேயிருந்து படையெடுத்து வந்து சதா தொந்தரவு கொடுத்துக்கொண்டிருந்த தார்த்தாரியரை (Tartars) இவன் அடக்கினன். கிழக்கே கொரியாவிலிருந்து மேற்கே காஸ்பியன் கடல்வரையிலும் இவன் தனி நாயகம் செலுத்திவந்தான். மத்திய ஆசியாவில் வாழ்ந்த ஜாதியார் அனைவரும் இவனுக்கு அடிபணிந்து நின்றார்கள். ஆசியாப் படம் ஒன்றை எடுத்துப் பார்த்தால் கி. மு. முதல், இரண்டாவது நூற்றாண்டுகளில் சீனு அடைந்திருந்த வல்லமையும், சீன சக்கரவர்த்தியின் ஆணை எவ்வளவு தூரம் சென்றதென்பதும் ஒருவாறு புலனுகும். இந்தக் காலத்தில் ரோமாபுரி அடைந்திருந்த மேன்மையைப்பற்றி நாம் அதிகம் படிப்பதால் அது உலகின் மற்றப் பாகங்களைவிட மிகுதியாகப் பிரகாசித்தது என்று எண்ணுதல் கூடும். ரோமாபுரியைப் புவியரசி (Mistress of the World) என்று அழைக்கிறார்கள். ஆனல் அக்காலத்தில் ரோமாபுரி மேன்மைபெற்றிருந்ததும் அதன் மேன்மை நாளுக்குநாள் வளர்ந்து சென்றதும் வாஸ்தவமாயினும், சீன சாம்ராஜ்யம் அதைவிடப் பெரியதாகவும் அதிக வல்லமை பொருந்தியதாகவும் இருந்ததென்பதை நாம் மறந்துவிடக்கூடாது.

ஊ-டி காலத்தில்தான் சீனுவுக்கும் ரோமாபுரிக்கும் தொடர்பு ஏற்பட்டதென்று நினைக்கவேண்டியிருக்கிறது. இன்று பாரசீகம், மெசபொடேமியா என்று அழைக்கப்படும் பிரதேசங்களில் அக்காலத்தில் குடியிருந்த பார்த்தியர்கள் (Parthians) மூலமாக இரு நாடுகளுக்கும் வியாபாரம் நடந்துவந்தது. பிறகு ரோமாபுரிக்கும் பார்த்தியாவுக்கும் போர் மூண்டபொழுது இந்த வியாபாரம் நின்றுவிட்டது. ஆனல் அதன்பிறகு ரோமாபுரி கடல் மார்க்கமாக வியாபாரம் நடத்த முயன்று சீனுவுக்கு

ஒரு கப்பலையும் அனுப்பிவைத்தது. இது நிகழ்ந்தது கி. பி. இரண்டாவது நூற்றூண்டில். நாம் இப்போது கிறிஸ்துவுக்கு முற்பட்ட காலத்தைப்பற்றிப் பேசிக்கொண்டிருக்கிறேம்.

ஹான் வமிசத்தாரின் ஆட்சி நடந்துகொண்டிருந்தபோது பௌத்த மதம் சீனுவுக்கு வந்தது. கிறிஸ்து பிறப்பதற்கு முன்னரே அதைப்பற்றிச் சீனர்கள் கேள்விப்பட் டிருந்தார்கள். ஆனல் பிறகுதான் அது அங்கே பரவ ஆரம்பித்தது. அக்காலத்தில் சீன சக்கரவர்த்தியாக இருந்தவர் ஓர் ஆச்சரியமான கனவு கண்டார். அவருடைய கனவில் 16 அடி உயரமுள்ள ஒரு திவ்ய புருஷன் ஒளிவட்டம் சூழ்ந்த முகத்தோடு தோன்றினுனும். இக் காட்சியை அவர் மேற்கே கண்டதால் அவர் அந்தத் திக்கில் தூதுவர்களை அனுப்பினுர். அவர்கள் சென்று புத்த விக்கிரகம் ஒன்றையும் புத்தருடைய போதனைகளையும் கொண்டுவந்தார்கள். பௌத்த மதத்தோடு இந்தியக் கலைகளும் சீனுவுக்குள் பிரவேசித்தன. அங்கிருந்து அவை கொரியாவுக்கும், கொரியாவிலிருந்து ஜப்பானுக்கும் சென்று பரவின.

ஹான் வமிசத்தாரின் ஆட்சியில் நிகழ்ந்த இருமுக்கிய நிகழ்ச்சிகளை நாம் கவனிக்கவேண்டும். மரத்தில் 'பிளாக்கு'கள் செய்து அச்சிடும் கலை முதல்முதலாகக் கண்டு பிடிக்கப்பட்டது. ஆனல் 1000 ஆண்டுகள் வரையில் இது அதிகமாக உபயோகத்துக்கு வரவில்லை. ஆயினும் இவ்விஷயத்தில் சீனு ஐரோப்பாவை 500 ஆண்டுகள் முந்திக்கொண்டுவிட்டது.

அரசாங்கப் பொது உத்தியோகஸ்தர்களை நியமிப்பதற்குப் பரீட்சைமுறை ஏற்படுத்தியது இரண்டாவது முக்கிய நிகழ்ச்சியாகும். சிறுவர் சிறுமியருக்குப் பரீட்சைகள் என்றுல் பிடிப்பதில்லை. எனக்கு அவர்களிடம்

அநுதாப உணர்ச்சி உண்டு. ஆனால் அக்காலத்தில் பொது உத்தியோகஸ்தர்களை நியமனம் செய்வதற்குச் சீனவில் ஏற்படுத்தப்பட்ட இம் முறையானது மிகவும் ஆச்சரிய மானது. சமீபகாலம் வரையில் மற்ற நாடுகளில் உத்தியோ கஸ்தர்கள் நியமனமானது முக்கியமாக வேண்டியவர் களுக்கும் அபிமானிக்கப்பட்ட ஒரு தனி வகுப்பு அல்லது ஜாதியைச் சேர்ந்தவர்களுக்கும் அளிக்கப்பட்டுவந்தது. சீனவில் பரீட்சையில் தேறியவன் எவனுயினும் அவனுக்கு உத்தியோகம் அளிக்கப்பட்டது. இதை ஒரு குற்றமற்ற முறை என்று சொல்வதற்கில்லை. ஏனெனில் கன்பூஷியஸ் நூல்களை நன்று கற்றுப் பரீட்சையில் தேறுகிற ஒருவன் திறம்பட அரசாங்க உத்தியோகத்தை வகிக்க முடியாத வனக இருக்கலாம். ஆனால் இப் பரீட்சைமுறையானது வேண்டியவர்களுக்கு உத்தியோகம் அளிப்பது போன்ற வைகளைவிட எவ்வளவோ மேலானது என்று சொல்ல வேண்டும். இம்முறை சீனவில் 2000 ஆண்டுகள் நடை முறையில் இருந்தது! சமீபத்தில்தான் இம்முறை கைவிடப்பட்டது.

## 27

# ரோமாபுரியும் கார்தேஜ் நகரும்

ஏப்ரல் 5, 1932.

இப்போது கீழ்கோடியிலிருந்து மேற்கே சென்று ரோமாபுரியின் வளர்ச்சியை முறையாக உற்று நோக்கு வோம். கி. மு. எட்டாவது நூற்றுண்டில் ரோமாபுரி தோன்றியதென்று கருதப்படுகிறது. ஆதி ரோமர்கள் ஆரியர்களின் பரம்பரையில் வந்தவர்களாக இருக்கலாம். டைபர் (The Tiber) நதிக்கருகில் உள்ள ஏழு குன்று களில் அவர்கள் குடியேறியிருந்தார்கள். இந்தக் குடியேற் றங்கள் நாளுக்கு நாள் வளர்ந்து ஒரு பெரிய நகரமாயின. இந்த நகர-ராஜ்யம் இதாலியில் மேன்மேலும் வளர்ந்து சிசிலித் தீவுக்கு எதிரிலுள்ள இதாலியின் தென்கோடி யாகிய மெசினு (Messina) வரையில் வியாபித்தது.

கிரேக்க நகர-ராஜ்யங்களைப்பற்றி உனக்கு ஞாபகம் இருக்கும். கிரேக்கர்கள் சென்ற இடங்களிலெல்லாம் இந்த நகர-ராஜ்ய அமைப்பு முறைபற்றிய கருத்துக்களும் கூடவே சென்றன. மத்தியதரைக் கடற்கரை முழுவதும் கிரேக்கர் குடியேற்றங்களும் நகர-ராஜ்யங்களும் நிறைந் திருந்தன. ஆனால் ரோமாபுரியில் வேறு விதமான அரசியல் முறையை நாம் காண்கிறோம். தொடக்கத்தில் ரோமாபுரி கிரேக்க நகர-ராஜ்யங்களைப்போல இருந் திருக்கலாம். ஆனால் விரைவில் ரோமர்கள் பக்கத்தில் வாழ்ந்த ஜாதியார்களை வென்று பரவ ஆரம்பித்தனர். இவ்வாறு ரோம ராஜ்யம் வியாபித்து இதாலியின் பெரும் பாகத்தைத் தன்னுள் கொண்டிருந்தது. இவ்வளவு பெரிய

பிரதேசம் ஒரு நகர-ராஜ்யமாக இருக்க முடியாது. இது ரோமாபுரியிலிருந்து ஆளப்பட்டுவந்தது. ரோமாபுரியில் நடைபெற்றுவந்த அரசாங்கம் ஒரு தனிவகையானது. பெரிய சக்கரவர்த்தி அல்லது அரசன் அங்கு ஆட்சிபுரிய வில்லை தற்காலத்தில் இருப்பதுபோன்ற குடியரசாகவும் (Republic) அது இல்லை. ஆயினும் அதை ஒருவிதமான குடியரசு என்றே சொல்லவேண்டும். பூமியும் பொருளும் நிறையப் படைத்த குடும்பங்களின் கையில் அரசாங்க ஆதிக்கம் இருந்துவந்தது. 'செனட்' (Senate) என்று கூறப்பட்ட முதியோர்கள் கொண்ட அரசாங்க சபை அரசாங்கத்தை நடத்திவந்தது என்று சொல்லலாம். 'கான்சல்' (Consul) என்று அழைக்கப்பட்ட இரண்டு சர்வாதிகாரிகள் இந்தச் செனட்சபைக்கு அங்கத்தினர்களை நியமிப்பது வழக்கம். இவ்வாறு நியமனம் செய்யும் சர்வாதிகாரிகள் தேர்ந்தெடுக்கப்பட்டவர்களாவர். நெடுங் காலம்வரையில் பிரபுவமிசத்தைச் சேர்ந்தவர்கள்தாம் (aristocrats) செனட்சபையில் அங்கம்வகித்துவந்தார்கள். ரோமராஜ்யத்து மக்களிடையே பிரபுக்கள் (Patricians), சாமானியர் (Plebeians) என்னும் இரண்டு வகுப்புக் கள் இருந்தன. பிரபுக்கள் என்போர் காணி, பூமி, தனம் முதலிய செல்வங்களைப் படைத்தவர்கள். சாமா னியர் எனப்பட்டோர் சாதாரண ஏழைக் குடிமக்கள். இவ்விரண்டு வகுப்பாருக்குள் சதா நடந்துவந்த போராட் டத்தின் கதையே சில நூற்றாண்டுகள் வரையில் ரோம ராஜ்யத்தின் சரித்திரமாக அமைந்திருக்கிறது என்று சொல்லலாம். பிரபுக்கள் சகல அதிகாரங்களையும் வகித்து வந்தார்கள். அதிகாரம் இருந்த இடத்தில் செல்வமும் இருந்தது. சாமானியர்களிடத்தில் அதிகாரமும் இல்லை, செல்வமும் இல்லை. அதிகாரத்தை அடைவதற்குச் சாமானியர்கள் இடைவிடாது போராடிவந்தார்கள்.

நாளடைவில் அவர்களுக்குச் சிறிதளவு அதிகாரமும் கிடைத்தது. இந்த நீண்ட போராட்டத்தில் சாமானியர்கள் ஒருவிதமான ஒத்துழையாமையை மேற்கொண்டு அதில் வெற்றியும் பெற்றூர்கள் என்பதை நோக்க நமக்கு ஆச்சரியம் உண்டாகிறது. அவர்கள் எல்லோரும் கட்டுப்பாடாக ரோமாபுரியைவிட்டுப் புறப்பட்டு வேறு புதிய நகரம் ஒன்றில் குடியேறினூர்கள். இதைக் கண்டு பிரபுக்கள் பயந்துபோனூர்கள். சாமானிய மக்கள் இல்லாவிட்டால் பிரபுக்களின் வாழ்க்கை நடைபெருதல்லவா? ஆகவே அவர்கள் சாமானியரோடு சமாதானம் செய்து கொண்டு அவர்களுக்குச் சில சிறப்புரிமைகளையும் சௌகரியங்களையும் (Privileges) அளித்தார்கள். சிறிது சிறிதாக, ஒரு சாமானியன் உயர்பதவிக்கு (High office) வருவதும், செனட் சபையில் அங்கம் வகிப்பதுங்கூடச் சாத்தியமாயின.

பிரபுக்களுக்கும் சாமானியர்களுக்கும் நடந்த போராட்டங்களைப்பற்றி நாம் பேசுவதால், ரோமராஜ்யத்தில் இவ்விரு வகுப்பினரைத் தவிர வேறு யாரும் இல்லை என்று எண்ணுவது சகஜம். ஆனல் இவர்களைத் தவிர அங்கு எண்ணற்ற 'அடிமைகள்' வாழ்ந்து வந்தனர். இவ்வடிமைகளுக்கு யாதொரு விதமான உரிமையும் கிடையாது. அவர்கள் குடிமக்களாகவே (Citizens) கருதப்படவில்லை. அவர்களுக்கு 'வாக்குரிமை'(Vote)யும் இல்லை. ஆடு மாடுகள், நாய்கள் இவற்றைப்போல அவர்கள் தங்களை வைத்து ஆளும் எஜமானனுடைய தனி உடைமைகளாக இருந்தனர். எஜமானன் அவர்களை விற்றுவிடலாம், ஒற்றி வைக்கலாம். தன் இஷ்டம்போல் தண்டிக்கலாம், இன்னும் எதை வேண்டுமானுலும் செய்யலாம். சில நிபந்தனைகளின்மீது அவர்கள் விடுதலை பெறுதலும் கூடும். அவ்வாறு 'விடுவிக்கப்பட்டவர்கள்'

(freed men) ஒரு தனி வகுப்பாகக் கருதப்பட்டார்கள். மேல்நாடுகளில் பழைய காலத்தில் அடிமைகளை வேண்டுவோர் பலர் இருந்தனர். அவர்களுடைய தேவையைப் பூர்த்தி செய்வதற்காகப் பல பெரிய அடிமைச் சந்தைகள் (Slave-markets) தோன்றின. பலர் கூட்டங் கூட்டமாகத் தொலைவிலுள்ள வேற்று நாடுகளுக்குச் சென்று அங்குள்ள ஆண்களையும் பெண்களையும் குழந்தைகளையுங் கூடப் பிடித்துவந்து அடிமைகளாக விற்றுவந்தார்கள். கிரீஸ், ரோம், எகிப்து ஆகிய புராதன சாம்ராஜ்யங்களின் கம்பீரத்துக்கும் மேன்மைக்கும், மக்களைப் பெருவாரியாக அடிமைப்படுத்திவைக்கும் இவ் வெறுக்கத்தக்க முறையே அஸ்திவாரமாக அமைந்து கிடந்தது.

இந்தியாவில் அக்காலத்தில் இவ் வடிமைகொள்ளும் முறை வழக்கத்தில் இருந்ததா என்றால், இல்லை என்றே சொல்லவேண்டும். சீனாவிலும் இம்முறை காணப்படவில்லை. இதனால் புராதன இந்தியாவிலும் சீனாவிலும் அடிமைத்தனம் என்பதே இல்லை என்று கொள்ளுவது பொருந்தாது. வீட்டு வேலைக்காரர்களில் சிலர் அடிமைகளாகக் கருதப்பட்டுவந்தனர். அந்த அளவோடு இந்தத் தீய பழக்கம் நின்றுவிட்டது. நிலங்களிலும் வேறு இடங்களிலும் பெரும்பெரும் கூட்டங்களாக வேலைசெய்யும் தொழில் அடிமைகள் (Labour-slaves) இந்தியாவிலும் சீனாவிலும் இல்லை. ஆகவே இவ்விரு நாடுகளும் அடிமைத்தனத்தின் இழிந்த அவகேடுகளினின்றும் தப்பிப் பிழைத்தன என்று கூறலாம்.

ரோமாபுரி வளர்ந்தோங்கியது. பிரபுக்கள் அதனால் செல்வமும் செழிப்பும் பெற்று விளங்கினார்கள். ஏழைச் சாமானியர்கள் ஏழைகளாகவே இருந்தார்கள். சாமானியர் முதுகின்மீது பிரபுக்கள் உட்கார்ந்திருந்தார்கள். அடிமை

கள் முதுகின்மீது பிரபுக்கள் சாமானியர் இருதிறத்தாரும் சேர்ந்து உட்கார்ந்திருந்தார்கள்.

ரோமாபுரி வளர வளர அதன் ஆட்சிமுறை எவ்வாறு மாறியதென்று கவனிப்போம். இரண்டு தேர்ந்தெடுக்கப் பட்ட 'கான்சல்' (சர்வாதிகாரிகள்) களால் நியமிக்கப் பட்ட 'செனட்' சபை ஆட்சி புரிந்து வந்தது என்று சொன்னேன். அந்தச் சர்வாதிகாரிகளைத் தேர்ந்தெடுத்த வர்கள் யார்? ஓட்டுரிமையுடைய குடிமக்கள் அவர்களைத் தேர்ந்தெடுத்தார்கள். ஆரம்பத்தில் ரோம் ஒரு சிறிய நகர-ராஜ்யமாக இருந்தது. அதில் வாழ்ந்த மக்கள் அனைவரும், ரோமிலும் ரோமுக்கு அருகிலும் வசித்து வந்தார்கள். ஆகவே அவர்கள் ஓரிடத்தில் கூடி வாக் களிப்பது கஷ்டமான காரியமல்ல. ஆனால் ரோம ராஜ்யம் வளர வளர நகருக்கு வெகு தொலைவில் வசித்து வந்த மக்கள் வாக்களிப்பதென்பது அவ்வளவு எளிய காரியமாக இல்லை. இப்போது நாம் அறிந்திருக்கிற 'பிரதிநிதித்துவ அரசாங்க முறை' அப்போது ஏற்பட வில்லை. இப்போது ஒவ்வொரு தொகுதியும் தனக்குப் பிரதிநிதியாக ஒருவரைத் தேர்ந்தெடுக்கிறது. இவ்வாறு தேசம் முழுவதிலும் தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள் அடங் கிய கூட்டத்தை நாம் 'தேசிய சபை', 'பார்லிமெண்டு', 'காங்கிரஸ்' முதலிய பெயர்களால் அழைக்கிறோம். ஆகவே இந்தச் சிறிய கூட்டம் ஒருவாறு தேசம் முழு வதுக்கும் பிரதிநிதித்துவம் வாய்ந்ததாக விளங்குகிறது. இம்முறை பழைய ரோமர்களுக்குத் தோன்றவில்லை. ஆகவே, ரோமில் எல்லோரும் வந்து வாக்குக் கொடுக்க வேண்டும் என்னும் வழக்கத்தை அவர்கள் அனுசரித்து வந்தார்கள். தூரத்திலிருந்த வாக்காளர்கள் வரமுடியாது போயிற்று. அவர்களுக்கு என்ன நடக்கிறதென்பது கூடத் தெரியாது. அக்காலத்தில் பத்திரிகைகளோ,

துண்டுப் பிரசுரங்களோ கிடையா. எழுதப் படிக்கத் தெரிந்தவர்களின் எண்ணிக்கையும் மிகவும் குறைவு. இதனால், ரோம் நகருக்குத் தொலைவிலிருந்த இடங்களில் வாழ்ந்து வந்தவர்களுக்குக் கொடுக்கப்பட்ட வாக்குரிமை அவர்களுக்கு யாதொரு பலனையும் அளிக்கவில்லை. அவர்களுக்கு வாக்குரிமை இருந்தது. ஆனால் தூரம் அவ்வுரிமையைப் பறித்துவிட்டது.

ஆகவே தேர்தல்களிலும் முக்கியமான முடிவுகளிலும் உண்மையில் பங்கு எடுத்துக்கொண்டவர்கள் ரோம் நகரைச் சேர்ந்த வாக்காளர்களேயாகும். திறந்த வெளிகளில் இதற்கென்று அமைக்கப்பட்டிருந்த மறைவிடங்களுக்குச் சென்று அவர்கள் வாக்குக் கொடுத்தார்கள். இவ்வாக்காளர்களில் பெரும்பாலோர் ஏழைச் சாமானியர்கள். உயர்பதவியையும் அதிகாரத்தையும் அடைய விரும்பிய கொழுத்த பிரபுக்கள் இவர்களுக்கு லஞ்சம் கொடுத்துத் தங்களுக்கு வாக்களிக்குமாறு செய்தனர். எனவே, ரோமாபுரித் தேர்தல்களில், சில சமயங்களில் தற்காலத்துத் தேர்தல்களிலும் நடைபெறுகிறது போல, ஏமாற்றும் லஞ்சமும் தலைவிரித்தாடின என்று கூறலாம்.

இதாலியில் ரோமாபுரி வளர்ச்சியுற்று வந்தகாலையில் வட ஆப்பிரிக்காவில் கார்தேஜ் நகரின் வல்லமையும் நாளுக்குநாள் பெருகி வந்தது. கார்தேஜ் நகரத்தார் பினிஷியரின் (Phoenicians) சந்ததியாராகையால், அவர்களுக்குக் கடல் ஓடுவதும் வியாபாரம் செய்வதும் பரம்பரை வழக்கங்களாக அமைந்தன. அவர்களுடைய அரசு முறையும் பணக்காரக் குடியரசு வகையைச் சேர்ந்ததுதான். பணக்காரர்களின் ஆதிக்கம் ரோமாபுரியைவிட இங்கு அதிகம் என்றே கூறவேண்டும். இந்த நகரக் குடியரசில் ஏராளமான அடிமைகள் இருந்தார்கள்.

ஆரம்பகாலத்தில் ரோமாபுரிக்கும் கார்தேஜ் நகருக்

கும் இடையே தெற்கு இதாலியிலும் மெசினாவிலும் கிரேக்கர்களின் குடியேற்றங்கள் இருந்தன. ஆனால் இருதிறத்தாரும் சேர்ந்து அவர்களை ஓட்டிவிட்டார்கள். கார்தேஜ் சிசிலித் தீவைக் கைப்பற்றிக் கொண்டது. ரோம் இதாலியின் தென்கோடி வரையில் தன்னுடையதாக்கிக்கொண்டது. ரோமுக்கும் கார்தேஜுக்கும் இடையே ஏற்பட்ட நட்பும் உறவும் நெடுநாளைக்கு நீடிக்கவில்லை. விரைவில் இருதிறத்தாருக்கும் போட்டியும் பகைமையும் மூண்டன. குறுகிய மத்தியதரைக் கடலின் இக்கரையிலும் அக்கரையிலும் நேருக்குநேர் நின்று விளங்கிய இவ்விரு பெரும் வல்லரசுகளின் ஆசைகளுக்கு அக்கடலின் அகலம் போதவில்லை. இளம்பருவத்துக்கு உரிய ஆசையும் நம்பிக்கையும் ரோமாபுரிக்கு இருந்தன. முதலில் கார்தேஜ் தனக்குள்ள கடலாதிக்கம் காரணமாக ரோமாபுரியை அவ்வளவாக லட்சியம் செய்யவில்லை. நூறு வருஷங்களுக்கு மேலாக இவ்விரு நாடுகளும் போரிட்டுவந்தன. இடையிடையே சில காலம் அமைதி நிலவும்; மறுபடியும் போராட்டம் ஆரம்பிக்கும். கொடிய காட்டு விலங்குகள் மாதிரி அவர்கள் சண்டையிட்டுக் கொண்டார்கள். அதனால் ஜனங்கள் அடைந்த துன்பத்துக்கு அளவில்லை. அவர்களுக்கிடையே மூன்று யுத்தங்கள் நடைபெற்றன. அவைகளுக்குப் 'பியூனிக் யுத்தங்கள்' (Punic Wars) என்று பெயர். முதல் யுத்தம் கி. மு. 264-ஆம் ஆண்டிலிருந்து 241-ஆம் ஆண்டு வரையில், இருபத்து மூன்று ஆண்டுகள் நடந்தது. இதில் ரோம் வெற்றி பெற்றது. இருபத்திரண்டு ஆண்டுகளுக்குப் பிறகு இரண்டாவது யுத்தம் ஆரம்பமாயிற்று. சரித்திரப் பிரசித்தி பெற்ற 'ஹனிபால்' (Hannibal) என்னும் சேனாதிபதியைக் கார்தேஜ் அனுப்பி வைத்தது. அவன் பதினைந்து வருஷங்கள் ரோமரைத் துன்புறுத்தி நடுங்க

வைத்தான். கி. மு. 216-ஆம் ஆண்டில் கானே (Cannae) என்னுமிடத்தில் நடைபெற்ற போரில் அவன் ரோமரின் சேனைகளைக் கொன்று, முறியடித்தான். இவ்வளவும் அவன் கார்தேஜிலிருந்து அதிக உதவி பெறுமலேயே செய்து முடித்தான். ரோமர்களின் ஆணை கடலின்மீது தங்கு தடையின்றிச் சென்றதால் அவர்கள் அவனுக்குக் கார்தேஜிலிருந்து யாதோர் உதவியும் வராமல் செய்து விட்டார்கள். ரோமர்களுக்குத் தோல்விமேல் தோல்வியும் நாசமும் ஏற்பட்டு வந்தாலும் அவர்கள் விடாப்பிடியாய் விரோதியை எதிர்த்துப் போரிட்டுக்கொண்டே இருந்தார்கள். ஹனிபாலுக்கு எதிர்நின்று போர்புரிய ஆற்ருதவர்களாய் அவர்கள் அவனை மறைவிலிருந்து துன்புறுத்தவும் அவனுக்கு உதவி கிடைக்கக்கூடிய வழிகளைத் தடுக்கவும் தலைப்பட்டார்கள். இவ்வாறு எதிர்நின்று போர்புரியும் முறையைத் தவிர்ப்பதில் அதிக விருப்பம் கொண்டிருந்த ரோமானியச் சேனுதிபதியின் பெயர் பேபியஸ் (Fabius). பத்து வருஷங்கள் அவன் இம்மாதிரி போர் புரிவதைத் தவிர்த்து வந்தான். அவன் பெரியவன் என்பதற்காகவும் அதனுல் நினைவு கூர்தற்குரியவன் என்பதற்காகவும் நான் அவன் பெயரை இங்கே குறிப்பிடவில்லை. ஆங்கிலமொழியில் அவன் பெயரிலிருந்து ஒரு சொல் பிறந்து வழங்கி வருகிறது. ஒரு பிரச்னையை நேரில் எடுத்து வலியுறுத்தாமல், போராட்டங்களையும் அபாயங்களையும் தவிர்த்து, சிறிது சிறிதாக முயற்சி செய்து காரியத்தைச் சாதித்துக்கொள்ள நினைப்பதற்கு, 'பேபியன் தந்திரம்' (Fabian tactics) என்று பெயர். இங்கிலாந்தில் 'பேபியன் சங்கம்' என ஒரு சங்கம் இருக்கிறது. அவர்கள் அபேதவாதக் கொள்கை (Socialism) யில் நம்பிக்கையுள்ளவர்கள். ஆனுல் அதற்காக அவசரப்பட்டுக் காரியங்கள் செய்வதிலும் திடீரென்று மாறுதல்

கள் விளைவிப்பதிலும் அவர்களுக்கு நம்பிக்கை இல்லை.

ஹனிபால் இதாலியின் பெரும்பாகத்தைப் பாலைவனமாக்கினான். ஆனால் ரோமரின் உறுதியும் விடாமுயற்சியும் இறுதியில் வெற்றிபெற்றன. கி. மு. 202-ஆம் ஆண்டில் ஜாமா (Zama) என்னுமிடத்தில் ஹனிபால் தோல்வியுற்றான். அவன் போன இடமெல்லாம் ரோமரின் தீவிரப் பகைமை அவனைப் பின்தொடர்ந்து சென்றது. கடைசியில் அவன் நஞ்சு அருந்தி உயிர் துறந்தான்.

அதன்பிறகு 50 ஆண்டுகள் ரோமுக்கும் கார்தேஜுக்கும் இடையே சமாதானம் நிலவியது. தாழ்ச்சியுற்ற கார்தேஜ் ரோமாபுரியை எதிர்க்கத் துணியவில்லை. ஆனால் ரோம் அத்துடன் திருப்தியடைந்து சும்மா இருக்கவில்லை. கார்தேஜியர்கள்மீது அது வலியப் போரைத் திணித்தது. இதற்கு மூன்றாவது பியூனிக் யுத்தம் என்று பெயர். இதனால் பெருத்த உயிர்ச்சேதம் விளைந்தது. கார்தேஜ் நகரம் 'வேரும் வேரடி மண்ணும் இல்லாமல்' அழிக்கப்பட்டது. ஒரு காலத்தில் மத்தியதரைக் கடலின் ஒப்புயர்வற்ற அரசியாக விளங்கிய கார்தேஜ் நகரம் இருந்த இடத்தை எதிரிகள் கலப்பையை நாட்டி உழுதார்கள்!

# 28

## ரோமானியக் குடியரசு சாம்ராஜ்யமாக மாறுகிறது

ஏப்ரல் 9, 1932.

கார்தேஜ் முடிவாகத் தோல்வியுற்று அழிந்த பிறகு, மேற்கு உலகத்தில் ரோமாபுரி ஒப்புயர்வற்று விளங்கியது. இதற்கு முன்பே அது கிரேக்க நாடுகளை ஜயித்துவிட்டது. இப்போது கார்தேஜுக்குச் சொந்தமான நாடுகளும் அதன் வசமாயின. இரண்டாவது 'பியூனிக்' யுத்தம் முடிந்தவுடனே ஸ்பெயின் தேசம் ரோமராஜ்யத்தில் சேர்ந்துவிட்டது. ஆயினும் ரோம ராஜ்யத்தில் அடங்கியிருந்தவை மத்தியதரைக் கடல் நாடுகளேயாகும். வட, மத்திய ஐரோப்பா முழுவதும் ரோமரின் ஆதிக்கத்துக்கு உட்படாமல் சுதந்தரமாகவே இருந்து வந்தது.

ரோமாபுரி அடைந்த வெற்றி காரணமாக அந்நகரில் செல்வமும் ஆடம்பரமும் மலிந்திருந்தன. வெல்லப்பட்ட நாடுகளிலிருந்த திரவியங்களெல்லாம் ரோம் நகரில் வந்து குவிந்தன. அவைமட்டுமா? அடிமைகளும் வந்து குவிந்தார்கள். ஆனால் இவைகளையெல்லாம் அனுபவித்தவர்கள் யார்? பிரபு வமிசத்தைச் சேர்ந்தவர்கள் அடங்கிய செனட் சபை ரோம ராஜ்யத்தை ஆண்டு வந்தது என்று முன்பே கூறியுள்ளேன். ரோம ராஜ்யத்தின் விஸ்தீர்ணமும் வல்லமையும் பெருகப் பெருக அதை ஆண்டு வந்த இப்பணக்காரக் கூட்டத்தாரின் செல்வமும் ஓங்கி

வந்தது. ஆகவே பணக்காரர் மேலும் பணக்காரர் ஆனார்கள்; ஏழைகள் ஏழைகளாகவே இருந்தார்கள் அல்லது இன்னும் அதிக ஏழையானார்கள். அடிமைகளின் தொகை அதிகமாயிற்று. இவ்வாறு ஒரு பக்கத்தில் செல்வமும் இன்னொரு பக்கத்தில் வறுமையும் ஒரே காலத்தில் வளர்ந்து வந்தன. இத்தகைய சந்தர்ப்பங்களில் பூசல் நிகழ்வதை நாம் வழக்கமாகக் காண்கிறோம். மனிதர்கள் எவ்வளவு தூரம் கொடுமைகளைப் பொறுத்துக் கொண்டு போகிறார்கள் என்பதை நினைக்கும்போது நமக்கு ஆச்சரியம் உண்டாகிறது. ஆனால் அந்தப் பொறுமைக்கும் ஓர் எல்லையுண்டு. அந்த எல்லை கடந்து விட்டால் பிரளயம்தான்.*

பணக்காரர்கள் பலவித விளையாட்டுக்களையும் சர்க்கஸ் பந்தயங்களையும் ஏற்படுத்தி ஏழைகளை மயக்க முயன்றார்கள். இவ்வரங்கங்களில், பார்க்க வருவோர் களிப்புற வேண்டி, மல்லர்கள் (Gladiators) தங்களுக்குள் போர் விளைத்து ஒருவரை ஒருவர் கொல்லும்படி வற்புறுத்தப்பட்டனர். இவ்வாறு வேடிக்கையினிமித்தம் ஏராளமான அடிமைகளும், யுத்தக்கைதிகளும் (Prisoners of War) கொல்லப்பட்டார்கள்.

ரோம ராஜ்யத்தில் குழப்பங்கள் மிகுந்தன. அரசாங்கத்துக்கு விரோதமான எழுச்சிகள் தோன்றின. மக்கள் கூட்டங் கூட்டமாகக் கொல்லப்பட்டனர். தேர்தல்களில் பொய், புரட்டு, லஞ்சம் முதலியன தாண்டவமாடின.

---

* பீலிபெய் சாகாடும் அச்சிறும் அப்பண்டம்
சால மிகுத்துப் பெயின்.
நுனிக் கொம்பர் ஏறினார் அஃது இறந்து ஊக்கின்
உயிர்க் கிறுதி யாகிவிடும்.
என்னும் குறள்கள் இங்கு நினைவு கூரத்தக்கன. (மொ-ர்.)

நசுக்கப்பட்டவர்களும் திக்கற்றவர்களுமாகிய அடிமைகள்கூட ஸ்பார்டகஸ் (Spartacus) என்னும் மல்லனைத் தலைவனாகக் கொண்டு அரசாங்கத்தை எதிர்த்துக் கலகம் செய்தார்கள். ஆனால் அவர்கள் ஈவு இரக்கமின்றி ஒடுக்கப்பட்டனர். 'அப்பியன் சாலை' என்னும் ரோம் நகரின் வீதியில் (Appian Way) ஆறாயிரம் பேர் சிலுவையில் அறையப்பட்டனர் என்று சொல்லப்படுகிறது.

சிறிது சிறிதாகச் செனட் சபையின் முக்கியத்துவம் குறைந்து சேனாதிபதிகளும் வெல்வாயர்களும் அதிகாரம் செலுத்த ஆரம்பிக்கிறார்கள். மாறுபட்ட சேனாதிபதிகளுக்குள் சண்டையும், உள்நாட்டுப் போரும் அவைகளால் கேடும் விளைகின்றன. கிழக்கே பார்த்தியா (Parthia) அதாவது மெசபொடேமியாமீது ரோமர்கள் படையெடுத்துச் சென்றார்கள். அங்கே கரே (Carrhae) என்னுமிடத்தில் கி. மு. 53-ஆம் ஆண்டில் நடந்த போரில் ரோமானியச் சைனியம் பார்த்தியர்களால் முறியடிக்கப்பட்டது. எண்ணற்ற ரோம சேனாதிபதிகளில் இரண்டு பேர் முக்கியமானவர்கள். ஒருவன் பாம்பே (Pompey); மற்றொருவன் ஜூலியஸ் சீசர் (Julius Caeser) சீசர். பிரான்சையும் (அப்போது அது 'கால்' (Gaul) என்று அழைக்கப்பட்டது.) பிரிட்டனையும் ஜயித்தது உனக்குத் தெரியும். பாம்பே கிழக்கே சென்று வெற்றி பெற்றான். இரண்டு பேருக்கும் நடுவே தீராத போட்டியும் பகைமையும் விளைந்தன. இரண்டு பேருடைய ஆசைக்கும் அளவு கிடையாது. செனட் சபையை இப்போது ஏன் என்று கேட்பார் இல்லை. ஆனால் இரண்டு பேரும் அதனிடம் விசுவாசம் உள்ளவர்கள் போல நடித்து வந்தார்கள். கடைசியில் பாம்பே தோல்வியுற்றான். சீசர் ரோம சாம்ராஜ்யத்தின் தலைவனாக விளங்கினான். ஆனால்

ரோமின் அரசியல், குடியரசு வகையைச் சேர்ந்ததாகையால் அவன் தன் இஷ்டப்படி எல்லாவற்றையும் செய்ய முடியவில்லை. ஆகவே அவனைச் சக்கரவர்த்தியாக முடி சூட்டுவதற்கு ஏற்பாடுகள் செய்யப்பட்டன. அவனுக்கும் அதில் விருப்பந்தான். ஆனால் ரோமாபுரியில் நீண்டகாலமாக வந்துகொண்டிருக்கும் குடியரசு முறை அவனைத் தயங்கும்படி செய்தது. இந்தக் குடியரசு முறையை அவனாலும் மீற முடியவில்லை. கடைசியில் புருடஸ் (Brutus) என்பவனும் வேறு சிலரும் செனட் மன்றத்தின் மண்டபத்தின் (forum) படிகளிலேயே அவனைக் குத்திக் கொன்றுவிட்டனர். ஆங்கில மகாகவி ஷேக்ஸ்பியர் எழுதிய 'ஜூலியஸ் சீசர்' என்னும் நாடகத்திலே இக்காட்சி வர்ணிக்கப்பட்டிருக்கிறது. அதைத்தான் நீ அவசியம் படித்திருப்பாயே!

கி. மு. 44-ஆம் ஆண்டில் ஜூலியஸ் சீசர் கொல்லப்பட்டான். ஆயினும் குடியரசு நிலைக்கவில்லை. சீசரின் சுவீகாரப் புத்திரனும் ஒன்றுவிட்ட சகோதரன் பேரனுமாகிய ஆக்டேவியன் (Octavian) என்பவனும், சீசரின் ஆருயிர் நண்பனாகிய மார்க்கு அந்தோணி (Marc Antony) என்பவனும் சீசரின் மரணத்துக்குப் பழி தீர்த்துக் கொண்டார்கள். ஆக்டேவியன் அரசனானான். குடியரசு முடிவுற்றது. செனட் சபை பேருக்கு இருந்து வந்தது. அதன் கையில் உண்மையான அதிகாரம் இல்லை.

ஆக்டேவியன் அரசனானதும் அகஸ்டஸ் சீசர் (Augustus Caesar) என்னும் பட்டப்பெயரைத் தரித்துக் கொண்டான். அவனுக்குப் பின் வந்தவர்களெல்லாம் சீசர்கள் என்று அழைக்கப்பட்டார்கள். சீசர் என்னும் சொல்லே சக்கரவர்த்தி என்னும் பொருளில் வழங்க ஆரம்பித்தது. 'கெய்சர்', 'ஜார்' என்னும் சொற்கள் 'சீசர்' என்னும் சொல்லிலிருந்து பிறந்தவைகளேயாகும்.

கெய்சர் என்னும் சொல் ஹிந்துஸ்தானி மொழியிலும் நெடுங்காலமாக வழங்கி வருகிறது. கெய்சர்-இ-ரோம் (ரோம் சக்கரவர்த்தி), கெய்சர்-இ-ஹிந்து (ஹிந்துஸ்தான் சக்கரவர்த்தி) என்று ஹிந்துஸ்தானியில் சொல்லுகிறோம். இங்கிலாந்தின் அரசராகிய ஜார்ஜ் மன்னர் இன்று 'கெய்சர்-இ-ஹிந்து' என்னும் பட்டத்தை மகிழ்ச்சியுடன் பூண்டு விளங்குகிறார். இன்று ஜெர்மனி தேசத்துக் கெய்சர் போய்விட்டார். ஆஸ்திரியா தேசத்துக் கெய்சரும் துருக்கி தேசத்துக் கெய்சரும் அவ்வாறே ஆனார்கள். ருஷ்யா தேசத்து ஜாரையும் காணோம். இங்கிலாந்து தேசத்து அரசர் ஒருவர்தாம் இன்று ஜூலியஸ் சீசரின் பெயரையும் பட்டத்தையும் தாங்கி நிற்பவர். ரோம ராஜ்யத்துக்காகப் பிரிட்டனை ஜயித்துக் கொடுத்த ஜூலியஸ் சீசரின் பெயரைப் பிரிட்டிஷ் மன்னர் தரித்து நிற்பது ஆச்சரியமல்லவா?

ஆகவே ஜூலியஸ் சீசரின் பெயர் சாம்ராஜ்ய காம்பீரியத்துக்கு அறிகுறியாக விளங்குகிறது. கிரீசில் பார்சலஸ் (Pharsalus) என்னுமிடத்தில் சீசர் பாம்பே யிடம் தோல்வியுற்றிருந்தால் என்ன ஆகியிருக்கும்? அப்பொழுது ஒருவேளை பாம்பே சக்கரவர்த்தியாகி இருக்கலாம். 'பாம்பே' என்னும் சொல் 'சக்கரவர்த்தி' என்னும் பொருளில் ஆரம்பித்திருக்கும். ஜெர்மனியின் சக்கரவர்த்தியாகிய இரண்டாவது வில்ஹெம் (Wilhelm II) தன்னைப்பாம்பே என்று அழைத்துக் கொண்டிருப்பார்; ஜார்ஜ் மன்னரும் 'பாம்பே-இ-ஹிந்து' என்னும் பட்டத்துடன் விளங்கலாம்.

இவ்வாறு ரோம் ராஜ்யம் குடியரசு நிலையிலிருந்து சாம்ராஜ்ய நிலைக்கு மாறிக்கொண்டிருந்த காலத்தில் எகிப்தில் ஒரு மாது வாழ்ந்து வந்தாள். அவள் பெயர் கிளியோபாத்திரை (Cleopatra) என்பது. தன்னுடைய

அழகினால் பிற்காலத்தில் சரித்திரப் பிரசித்தி பெற்று விளங்கும் நல்லூழ் அவளுக்கு இருந்தது. அவளை மாசு மறுவற்றவள் என்று சொல்வதற்கில்லை. ஆனால், தங்களுடைய அழகினால் சரித்திரத்தின் போக்கையே மாற்றி விட்டதாகக் கருதப்படும் ஒரு சில பெண்மணிகளுக்குள் அவளும் ஒருத்தி என்று எண்ணப்படுகிறாள். ஜூலியஸ் சீசர் எகிப்துக்குச் சென்றபோது அவள் சிறு பெண்ணாக இருந்தாள். பிற்காலத்தில் அவளும் மார்க்கு அந்தோணியும் சிறந்த நண்பர்களாக விளங்கினார்கள். ஆனால் அவள் அவனுக்கு யாதொரு நன்மையும் செய்யவில்லை. ஒரு பெரிய கடற்போர் நிகழ்ந்துகொண்டிருந்த சமயத்தில் அவள் அவனை விட்டுவிட்டுத் தன் கப்பல்களுடன் போய் விட்டாள். இதை நம்பிக்கைத் துரோகம் என்றே கூறவேண்டும். பாஸ்கல் என்னும் புகழ்பெற்ற பிரெஞ்சு ஆசிரியர் ஒருவர், "கிளியோபாத்திரையின் மூக்கும் (முக வெட்டு) சாயலும் உலகத்தின் போக்கையே மாற்றிவிட்டன" என்று கூறியிருக்கிறார். இது மிகைபடச் சொன்னதாயிருக்கலாம். கிளியோபாத்திரையின் மூக்குக் காரணமாக உலகத்தில் பெரிய மாறுதல் ஒன்றும் ஏற்பட்டிருக்க முடியாது. ஆனால் சீசர் எகிப்துக்குச் சென்று திரும்பிய பிறகு தன்னை அரசனாகவும், சக்கரவர்த்தியாகவும், தெய்வ அம்சம் பொருந்தியவனாகவும் (God-ruler) மதிக்க ஆரம்பித்தான் என்று சொல்வது உண்மையா யிருக்கலாம். எகிப்து குடியரசு நாடல்ல; அது முடியரசு நாடு (monarchy). அங்கே அரசன் இட்டது சட்டம். அது மட்டுமல்ல. *எகிப்தியர் அரசனைத் தெய்வத்துக்குச் சமமாகவே பாவித்து வந்தார்கள். இது

* அரசர்கள் மகாவிஷ்ணுவின் அம்சம் என்று கூறும் வழக்கம் நம் நாட்டிலும் உண்டு. (மொர்.) 'திருவுடை மன்னரைக் காணில் திருமாலைக் கண்டேனே என்னும்'—திருவாய் மொழி.

அவர்கள் மனத்தில் பழமைதொட்டே ஊறிவந்துள்ள எண்ணம். அலெக்சாந்தரின் மரணத்துக்குப் பிறகு எகிப்தை ஆண்டு வந்த கிரேக்கர்களாகிய டாலமி வமிசத்தாரும் எகிப்தியக் கருத்துக்களையும் பழக்க வழக்கங்களையும் தழுவி ஒழுகிவந்தனர். இந்த டாலமி வமிசத்தைச் சேர்ந்தவள்தான் கிளியோபாத்திரை. ஆகவே அவள் ஒரு கிரேக்க அல்லது மாசிடோனிய அரசிளங் குமரியாவள்.

அரசன் தெய்வாம்சம் பொருந்தியவன் என்னும் எகிப்தியக் கொள்கை ரோமுக்குச் சென்று அங்கு நிலைபெற்றுவிட்டது. இதற்குக் கிளியோபாத்திரை உதவியாக இருந்தாளோ இல்லையோ தெரியாது. குடியரசு நடைபெற்றுக்கொண்டிருந்த சீசர் காலத்திலேயே அவனைப்போல் உருவச் சிலைகள் அமைத்து அவற்றை மக்கள் வழிபட்டு வந்தனர். ரோம சக்கரவர்த்திகளைப் பொறுத்தவரையில் இவ்வழக்கம் வாலாயமாக மாறின விதத்தைப் பிறகு காண்போம்.

ரோமாபுரியின் சரித்திரத்தில் முக்கியமான மாறுதல் நிகழும் ஓர் இடத்துக்கு இப்போது நாம் வந்துவிட்டோம். அதாவது, குடியரசு முறைக்கு முற்றுப்புள்ளி வைக்கப் படும் காலம். கி. பி. 27-ஆம் ஆண்டில் ‘அகஸ்டஸ் சீசர்’ என்னும் பெயர்புனைந்து ஆக்டேவியன் அரசன் ஆனான். ரோமாபுரியின் கதையையும் ரோம சக்கரவர்த்திகளின் கதையையும் தொடர்ந்து கூறுமுன், குடியரசின் கடைசி நாட்களில் ரோம ராஜ்யம் எவ்வாறு இருந்ததென்று உற்று நோக்குவோம்.

ரோமாபுரியின் ஆளுகையில் இதாலியும், மேற்கில் ஸ்பெயின், கால் (பிரான்சு) ஆகிய தேசங்களும், கிழக்கே கிரீஸ், சின்ன ஆசியா ஆகிய தேசங்களும் இருந்தன. சின்ன ஆசியாவில் பெர்கமம் என்ற கிரேக்க ராஜ்யம்

இருந்தது உனக்கு நினைவிருக்கலாம். வட ஆப்பிரிக்காவில் எகிப்து தேசம் ரோமுக்குத் துணைநாடாக அதன் (ally) பாதுகாப்பில் இருந்துவந்தது. கார்தேஜும், மத்தியதரைக் கடல் நாடுகளின் வேறு சில பாகங்களும் அதன் ஆட்சிக்கு உட்பட்டிருந்தன. ஆகவே ரைன் நதி (The Rhine) ரோம ராஜ்யத்தின் வட எல்லையாக அமைந்து கிடந்தது. ஜெர்மனி, ருஷியா தேசங்களைச் சேர்ந்தவர்களும், வட மத்திய ஐரோப்பாவைச் சேர்ந்தவர்களும், மெசபொடேமியாவுக்குக் கிழக்கே வாழ்ந்தவர்களும் ரோம ராஜ்யத்துக்கு வெளியே இருந்தார்கள்.

அக்காலத்தில் ரோமாபுரி பெருமைபெற்று விளங்கியதென்பதில் ஐயமில்லை. ஆனால் பிற நாடுகளின் சரித்திரங்களை அறியாத பல ஐரோப்பியர், ரோம், உலகம் முழுவதும் ஆதிக்கம் செலுத்தி வந்தது என்று எண்ணிக் கொண்டிருக்கிறார்கள். இது உண்மையல்ல. இதே சமயத்தில் சீனாவை ஆண்டுவந்த ஹான் வமிசத்தார் ஆசியாவின் கீழ்கோடியிலிருந்து மேற்கே காஸ்பியன் கடல் வரையில் ஆணை செலுத்திவந்தனர். மெசபொடேமியாவில் கரே என்னுமிடத்தில் நடந்த சண்டையில் பார்த்தியர்களிடம் ரோமர்கள் தோல்வியுற்றார்கள் என்று கூறியிருக்கிறேன். ஒருவேளை பார்த்தியர்களுக்கு மங்கோலியர்கள் உதவி செய்திருந்தாலும் இருக்கலாம்.

ரோம சரித்திரம், முக்கியமாக ரோமக் குடியரசின் சரித்திரம் என்றால் ஐரோப்பியர்களுக்குப் பிரியம் அதிகம். பழைய ரோம ராஜ்யத்தின் கால்வழியில் வந்தவை தற்காலத்திய ஐரோப்பிய ராஜ்யங்கள் என்பது அவர்கள் எண்ணம். இது ஓரளவுக்கு உண்மையே. ஆகவே இங்கிலாந்தில் பள்ளிப் பிள்ளைகளுக்குத் தற்கால சரித்திரம் தெரிந்தாலும் தெரியாவிட்டாலும், அவர்கள் கட்டாயம் கிரேக்க, ரோம சரித்திரங்கள் படித்தாக

வேண்டும். ஜூலியஸ் சீசர் தான் கால் (Gaul) தேசத்தில் நடத்திய போரைப்பற்றி லத்தீன் மொழியில் எழுதி வைத்திருக்கும் நூலைப் படிக்கும்படி நான் வற்புறுத்தப் பட்டது எனக்கு நன்றாக நினைவிருக்கிறது. சீசர் போர்வீரன் மட்டுமல்ல, சிறந்த எழுத்தாளனுங்கூட. அவன் எழுதிய (De Bello Gallico) 'கால் (பிரான்சு) போரைப்பற்றிய நூல்' ஐரோப்பாவில் ஆயிரக் கணக்கான பள்ளிகளில் இன்றும் கற்கப்பட்டு வருகிறது.

அசோகர் காலத்தில் உலகம் எவ்வாறு இருந்தது என்று பார்க்க ஆரம்பித்தோம். நாம் அவ்வாறு பார்த்ததோடு, அவர் காலத்துக்குப்பின் சீனுவிலும் ஐரோப்பாவிலும் நிகழ்ந்த சில வரலாறுகளையும் கவனித் தோம். இப்போது நாம் ஏறக்குறையக் கிறிஸ்து சகாப் தத்தின் தொடக்கத்துக்கு வந்துவிட்டோம். ஆகவே நாம் சிறிது பின்சென்று இந்தியாவையும் அங்கு நிகழ்ந்த வற்றையும் தெரிந்துகொள்ளவேண்டும். ஏனெனில் அசோகர் மரணத்துக்குப் பின்பு அங்குப் பெரிய மாறு தல்கள் நிகழ்ந்தன. வடக்கிலும் தெற்கிலும் புதிய சாம் ராஜ்யங்கள் தோன்றின.

உலக சரித்திரமானது தொடர்ந்துவருகிற ஒரு முழு நிகழ்ச்சியாகும். இதை நீ உணரவேண்டுமென்று நான் முயன்று வந்திருக்கிறேன். ஆனுல், ஆதிநாட்களில் தூர தேசங்களுக்குள் ஏற்பட்டிருந்த தொடர்பு அவ்வளவு நெருக்கமானதல்ல என்பதை நீ நினைவில் வைக்க வேண்டும். பல வழிகளில் முன்னேற்றம் பெற்றிருந்த ரோமாபுரியில், பூகோள சாஸ்திர ஞானம் மிகவும் குறை வாகவே இருந்தது. அக்காலத்தில் தேசப் படங்கள் கிடையா. இவ்விஷயங்கள் கற்பதற்கும் முயற்சிசெய்யப் படவில்லை. ரோமாபுரியில் செனட் சபையில் அங்கம் வகித்த அறிவாளிகளும், இன்னும் பெரிய சேனுதிபதி

களும் தாங்கள் உலகம் முழுவதையும் கட்டி ஆள்வ தாகவே எண்ணிக்கொண் டிருந்தார்கள். ஆனால் இன்று பள்ளிக்கூடத்தில் வாசிக்கும் சிறு பையனுக்கோ பெண்ணுக்கோ உள்ள பூகோள சாஸ்திர அறிவு அவர்க ளுக்கு இல்லை. ரோமாபுரியை ஆண்டவர்கள் தாங்களே உலகுக்கு அதிபர்கள் என்று எண்ணியிருந்ததுபோலவே சில ஆயிரம் மைல்களுக்கு அப்பால் ஆசியா கண்டத்தில் சீனாவை ஆண்டுவந்தவர்களும் தாங்கள்தாம் உலகுக்கு அதிபர்கள் (Masters of the world) என்று எண்ணிக் கொண்டிருந்தார்கள்.

# 29

## தென் இந்தியா வட இந்தியாவை விஞ்சி நிற்கிறது

ஏப்ரல் 10, 1932.

கீழ்கோடியில் சீனுவிலும், மேற்கே ரோமிலும் நீண்ட காலம் சுற்றிவிட்டு நாம் மீண்டும் இந்தியாவுக்கு வருகிறோம்.

அசோகருக்குப் பிறகு மௌரிய சாம்ராஜ்யம் நெடு நாள் நீடிக்கவில்லை. சில ஆண்டுகளுக்குள்ளாகவே அது வலிகுன்றித் தேய்ந்துவிட்டது. வட மாகாணங்கள் பிரிந்துபோய்விட்டன. தெற்கே ஒரு புதிய வல்லரசு - ஆந்திர வல்லரசு தோன்றியது. ஐம்பது ஆண்டுகள் வரையில் அசோகர் சந்ததியார் தேய்ந்துவரும் தங்கள் சாம்ராஜ்யத்தை ஆண்டுவந்தார்கள். கடைசியில் அவர்களுடைய சேனைத் தலைவனுகிய புஷ்யமித்திரன் (Pushyamitra) என்னும் பிராமணன் பலாத்காரமாக அவர்களுடைய அரசைக் கவர்ந்து, தன்னையே அரசனுக்கிக் கொண்டான். இவன் காலத்தில் பிராமண மதம் மீண்டும் தலையெடுத்தது. பௌத்த சந்நியாசிகள் ஓரளவுக்குத் துன்புறுத்தப்பட்டனர். நீ இந்திய சரித்திரத்தைக் கூர்ந்து கவனித்தால், பிராமண மதம் பௌத்தமதத்தை எதிர்த்துத் தாக்கிய முறை மிகவும் நுட்பமானதென்று கண்டுகொள்வாய். துன்புறுத்துதல் முதலிய அநாகரிக முறைகளை அது மேற்கொள்ளவில்லை. ஓரளவுக்குப் பௌத்தமதத்தினர் துன்புறுத்தப்பட்டனர் என்பது உண்மையே. ஆனால் அவை அரசியல் காரணம் பற்றிய

வையே ஒழிய மத சம்பந்தமானவை அல்ல. பௌத்த சங்கங்கள் மிகப் பெரியவைகளாகவும் வல்லமை பொருந்தியவைகளாகவும் விளங்கின. அரசியலில் அவைகளுக்கிருந்த செல்வாக்கைக் கண்டு பல மன்னர்கள் அஞ்சினார்கள். ஆகவே அவர்கள் அவற்றின் பலத்தைக் குறைக்க முயற்சி செய்து வந்தார்கள். பிராமண மதமானது பௌத்த மதத்துக்குத் தன் வீட்டிலேயே ஓர் இடம் ஏற்படுத்திக் கொடுத்தது; அதை ஸ்வீகரித்துக் கொண்டும், ஓரளவு தழுவியும் சென்றது. இவ்விதமான முறைகளைக் கையாண்டு, கடைசியில், அதைத் தனது பிறந்த நாட்டினின்றும் துரத்திவிட்டது.

ஆகவே, இப்புதிய பிராமண மதம், பௌத்த மதம் சாதித்தவற்றையெல்லாம் ஒழித்து நீக்கிவிட்டு மீண்டும் பழைய நிலைமைகளையே நாட்டில் ஏற்படுத்திற்று என்று கூறுவதற்கில்லை. அக்காலத்துப் பிராமண மதாசாரியர்கள் உலகியல் அறிவு நிரம்பப் படைத்தவர்கள். ஆதிநாளிலிருந்து அவர்கள் வேற்றுக் கொள்கைகள் எவற்றையும் தம்முன் கொண்டு அவற்றைத் தம்மோடு இயைபுடையனவாகச் செய்துகொள்வது வழக்கமாயிருந்து வருகிறது. ஆரியர்கள் முதல்முதல் இந்தியாவுக்கு வந்தபொழுது அவர்கள் திராவிடக் கலைநாகரிகத்தையும் பழக்கவழக்கங்களையும் ஏற்று அவற்றைத் தம் வாழ்க்கையில் பொருந்துமாறு அமைத்துக்கொண்டனர். சரித்திரத்தைப் பார்த்தால், தெரிந்தோ தெரியாமலோ அவர்கள் எப்பொழுதும் இவ்வாறே ஒழுகி வந்திருக்கிறார்கள் என்பது புலனாகும். பௌத்த மதத்தின் விஷயத்திலும் அவர்கள் இவ்வாறே செய்தார்கள். கடவுளுடைய ஏனைய அவதாரங்களைப் போலப் புத்தரும் ஓர் அவதார புருஷர் என்று அவரையும் அறிந்துக் கடவுளர்களின் வரிசையில் சேர்த்துக்கொண்டு விட்டார்கள். புத்தரை ஜனங்கள் வணங்கிப் போற்றி

ஞர்கள். ஆனால் அவருடைய முக்கிய உபதேசம் புறக்கணிக்கப்பட்டது. பிராமண மதம் அல்லது ஹிந்து மதம் சில சிறிய மாறுதல்களுடன் தனது பழைய பாணியிலேயே சென்றுகொண்டிருந்தது. ஆனால் இவ்வாறு பௌத்த மதத்தை வைதிக மயமாக்குவதற்கு நீண்ட காலம் பிடித்தது. இந்நிகழ்ச்சி பிற்காலத்தில் நிகழ்ந்ததாகும். ஏனெனில், அசோகரின் மரணத்துக்குப்பின் பல நூற்றாண்டுகள்வரையில் பௌத்த மதம் இந்தியாவில் தழைத்திருந்தது.

மகத ராஜ்யத்தில் ஒருவர்பின் ஒருவராக வந்த அரசர்களைப்பற்றியும் அவர்களுடைய பரம்பரைகளைப்பற்றியும் நாம் அதிகம் தெரிந்துகொள்ள வேண்டியதில்லை. அசோகர் இறந்து 200 ஆண்டுகளுக்குப்பின் மகதம் இந்தியாவில் தான் வகித்துவந்த முதன்மை ஸ்தானத்தை இழந்துவிட்டது. ஆயினும், அது பௌத்த கலாசாரத்தின் கேந்திர ஸ்தானமாக விளங்கிவந்தது.

இதனிடையில், வடக்கிலும் தெற்கிலும் முக்கிய நிகழ்ச்சிகள் நிகழ்ந்துகொண்டிருந்தன. வடக்கில், மத்திய ஆசியாவிலிருந்து பல ஜாதியாரும், வகுப்பாரும் - பாக்திரியர் (Baktrians), சாகர் (Sakas), ஸிதியர் (Scythians), துருக்கியர் (Turkis), குஷாணர் (Kushans) - இந்தியா மீது படையெடுத்து வந்தவண்ணமாக இருந்தனர். மத்திய ஆசியாவில் பல கூட்டத்தினர் தோன்றி அடிக்கடி எவ்வாறு ஆசியாவிலும் ஐரோப்பாவிலும் பரவிவந்திருக்கிறார்கள் என்று முன்பு ஒரு தடவை சொல்லியிருக்கிறேன். கிறிஸ்துவுக்கு முற்பட்ட 200 ஆண்டுகளில் இத்தகைய படையெடுப்புக்கள் இந்தியாவில் பல நிகழ்ந்தன. ஆனால் இவைகளின் நோக்கம் நாட்டை ஜயிப்பதும் கொள்ளையடிப்பதும் அல்ல என்பதை நீ நினைவில் வைக்க வேண்டும். குடியேறுவதற்கு ஓர் இடத்தை நாடியே

அவர்கள் இவ்வாறு கிளம்பிவந்தார்கள். மத்திய ஆசியா வில் வாழ்ந்த ஜாதியார்களில் பெரும்பான்மையோர் ஓரிடத்திலும் நிலைக்காமல் அலைந்து திரியும் நாடோடிகள் ஆவர். அவர்களின் தொகை அதிகரிக்க அதிகரிக்க அவர்கள் வேறு புதிய இடங்களை நாடிப் புறப்பட்டு வந்தார்கள். இதைவிட முக்கிய காரணம் அவர்கள் பிறரால் விரட்டப்பட்டதேயாகும். ஒரு பெரிய, வல்லமை பொருந்திய ஜாதியார் மற்ற ஜாதியார்களைத் துரத்தி விடுவார்கள். இவ்வாறு துரத்தப்பட்டவர்கள் மற்ற நாடுகளின்மீது செல்வார்கள். ஆகவே இந்தியாவுக்குள் படையெடுத்து வந்தவர்கள் தங்கள் சொந்த நிலபுலன்களினின்றும் துரத்தப்பட்டு வேறு புகலிடம் இன்றி இங்கு வந்தவர்களேயாவர். சீன சாம்ராஜ்யம் ஹன் வமிசத்தாரின்கீழ் இருந்ததுபோன்ற வல்லமையுடன் இருந்த காலங்களிலெல்லாம் இந்த நாடோடிகளை ஓட்டிவந்தது. அதனாலும் இவர்கள் வேறு உறைவிடங்களைத் தேடிச் செல்லவேண்டியதாயிற்று.

மத்திய ஆசியாவிலிருந்து வந்த இந்த நாடோடி ஜாதியார் இந்தியாவை ஒரு விரோதி நாடாகப் பாவிக்கவில்லை. அவர்கள் 'காட்டுமிராண்டிகள்' என்று அழைக்கப்படுகிறார்கள். இந்தியாவில் அக்காலத்தில் வாழ்ந்திருந்தவர்களைப்போல் அவர்கள் அவ்வளவு நாகரிகமானவர்களல்ல என்பது உண்மையே. ஆயினும் அவர்கள் பௌத்த தருமத்தில் தீவிரமான பற்றுதல் கொண்டவர்கள். அத்தருமத்தின் தாயகமான இந்தியாவை அவர்கள் மிகவும் போற்றினார்கள்.

புஷ்யமித்திரன் காலத்திலேயே வடமேற்குத் திக்கிலிருந்து பாக்திரியா (Baktria) வைச் சேர்ந்த மினண்டர் (Menander) என்பவன் படையெடுத்து வந்தான். அவன் ஒரு சிறந்த பௌத்தன். இந்திய எல்லையை அடுத்திருந்த

தேசம் பாக்திரியா என்பது. அது செலுகசின் சாம்ராஜ்யத்தில் ஒரு பகுதியாக இருந்தது; பிறகு அதனின்றும் பிரிந்து சுதந்தரமாக இருக்கத் தலைப்பட்டது. மினண்டரின் படையெடுப்பு எதிர்த்து வெல்லப்பட்டதாயினும் அவன் காபுலையும் சிந்துப் பிரதேசத்தையும் கைப்பற்றிக் கொண்டான்.

அதன்பிறகு சாகர்கள் படையெடுத்து வந்தனர். அவர்கள் பெருந்தொகையினராக வந்து வட இந்தியா முழுவதும், மேற்கு இந்தியா முழுவதும் பரவினார்கள். சாகர்கள் என்போர் துருக்கி நாடோடி வகையைச் சேர்ந்த ஒரு ஜாதியார் ஆவர். அவர்களிலும் வல்லமை மிகுந்த குஷாணர் என்னும் ஜாதியார், அவர்களுடைய நிலங்களிலிருந்து அவர்களை ஓட்டிவிட்டனர். சாகர்கள் பாக்திரியா, பார்த்தியா முதலான நாடுகளை அழித்துவிட்டுக் கடைசியாக வட இந்தியாவில், முக்கியமாக பஞ்சாப், ராஜபுதனம், கத்தியவார் ஆகிய இடங்களில் குடியேறினார்கள். இந்தியா அவர்களை நாகரிக மக்களாக்கியது. அதன்பிறகு அவர்கள் தங்களுடைய நாடோடிப் பழக்கங்களை விட்டுவிட்டார்கள்.

இந்தியாவின் சில பாகங்களில் பாக்திரிய அரசர்களும் துருக்கி அரசர்களும் ஆண்டுவந்தாலும் அதனால் இந்திய - ஆரிய சமுதாயம் அதிக மாறுதல் அடையவில்லை. இந்த அரசர்கள் பௌத்தர்களானபடியால் பௌத்த சங்க அமைப்பு முறையைப் பின்பற்றியே ஆண்டுவந்தார்கள். இம்முறை பழைய இந்திய - ஆரிய முறையாகிய ஜனநாயக கிராம சமுதாயங்களை அடிப்படையாகக் கொண்டே நடைபெற்று வந்தது. ஆகவே இந்தப் புதிய அரசர்களின் கீழும், மத்தியிலிருந்து ஆளப்பட்ட பல கிராம சமுதாயங்கள் அல்லது குடியரசுகளைக் கொண்டதாகவே இந்தியா விளங்கியது. இவர்கள்

காலத்திலும் தக்ஷசீலமும் வடமதுரையும் சிறந்த பௌத்தக் கலாசாலைகளாக விளங்கின. சீனுவிலிருந்தும் மேற்கு ஆசியாவிலிருந்தும் பல மாணவர்கள் அவ்விடங்களில் குழுமிக் கல்வி பயின்றுவந்தனர்.

ஆனல் வடமேற்குத் திசையிலிருந்து அடிக்கடி நிகழ்ந்த படையெடுப்புக்களினுலும், மௌரிய சாம்ராஜ்ய அமைப்புச் சிதறிவிட்ட காரணத்தாலும் ஒரு பலன் ஏற்பட்டது. தென் இந்திய ராஜ்யங்கள் பழைய இந்திய-ஆரிய முறையின் சிறந்த பிரதிநிதிகளாக விளங்கத் தலைப்பட்டன. இவ்வாறு இந்திய-ஆரிய சக்தி தெற்கே சென்று நிலைபெற்றது. படையெடுப்புக்கள் காரணமாக அறிவாற்றல்களிற் சிறந்த பலர் வடக்கேயிருந்து தெற்கே சென்றிருக்கலாம். இதற்கு ஆயிரம் ஆண்டுகளுக்குப் பிறகு முஸ்லீம்கள் வடக்கே படையெடுத்துவந்த காலத்திலும் இத்தகைய நிகழ்ச்சி நிகழ்வதை நீ பின்பு தெரிந்து கொள்வாய். இன்றுகூட, அந்நியர்கள் படையெடுப்புக்களும் தொடர்புகளும் வட இந்தியாவைப் பாதித்த அளவுக்குத் தென் இந்தியாவைப் பாதிக்கவில்லை. தென் இந்தியா இவைகளால் மிகவும் குறைவாகவே பாதிக்கப்பட்டிருக்கிறது. மேனுட்டு நாகரிகத்தின் சாயல் படர்ந்த ஹிந்து, முஸ்லீம் நாகரிகங்களின் கலப்பிலேதான் வட இந்தியாவில் வாழும் நம்மில் பெரும்பாலோர் வளர்ந்து வந்திருக்கிருேம். ஹிந்தி, உருது அல்லது ஹிந்துஸ்தானி என்று கூறப்படும் நமது மொழிகூட நமது கலப்பு மொழிதான். ஆனல் தென் இந்தியாவில் பழைய ஹிந்து நாகரிகம் இன்றும் மேலோங்கி நிற்கிறது. பல நூற்றுண்டுகளாகத் தென் இந்தியா ஆரியர்களின் பரம்பரைச் செல்வத்தை வைத்துக் காப்பாற்ற முயன்று வந்திருக்கிறது. இதற்காக அவர்கள் நிர்மித்த சமுதாய முறை இன்றுகூடச் சிறிதேனும் வளைந்து கொடாமலும் பிற கொள்கை

களுக்கு இடம் கொடாமலும் இருப்பது ஆச்சரியத்தை உண்டுபண்ணுகிறது. நம்மைச் சுற்றிலும் சுவர்கள் எழுப்பிக் கொள்வது அபாயமான முறையாகும். வெளியிலிருந்து வரும் வேண்டாதவர்களேயும், தீமைகளையும் தடுத்து அவைகள் நம்மைச் சில சமயங்களில் காப்பாற்றலாம்.

ஆனால் அவைகள் நம்மை வெகுவாக அடிமைப்படுத்துகின்றன. நமது சுதந்தரத்தை விலையாகக் கொடுத்துப் பரிசுத்தத்தை வாங்க வேண்டியிருக்கிறது. ஆனால் எல்லாவற்றிலும் அபாயமான சுவர்கள், உள்ளத்தில் எழும் சுவர்களாகும். அதனால், பழமையாக வரும் காரணத்தாலேயே தீமையை விலக்கவும், புதுமையாக உள்ள காரணத்தாலேயே நன்மையை ஏற்றுக்கொள்ளவும் நாம் திறனில்லாதவர்கள் ஆகிவிடுகிறோம்.

ஆயிரம் ஆண்டுகளுக்கு மேலாக இந்திய-ஆரியர்களுடைய மதம், கலை, அரசியல் முதலான செல்வங்களையெல்லாம் தென் இந்தியா ஓம்பிப் பாதுகாத்து வந்திருக்கிறது. இது மகத்தான சேவையாகும். பழைய இந்தியக் கலையின் மாதிரியைக் காண வேண்டுமானால் நாம் தென் இந்தியாவுக்குத்தான் செல்ல வேண்டும். அரசியல் துறையில் தென்னாட்டு ஜனப் பிரதிநிதி சபைகள் அரசர்களின் அதிகாரத்தை ஒரு கட்டுக்கு உட்படுத்தி வைத்திருந்தன என்று கிரேக்க யாத்திரிகராகிய மெகஸ்தனிஸ் கூறுகிறார்.

மகதம் வீழ்ச்சியடைய ஆரம்பித்ததும் அங்கிருந்து கல்வி, கேள்வி வல்லார் மட்டுமின்றிக் கலை, கட்டிடம், கைத்தொழில் முதலியனவற்றில் வல்லாரும் தெற்கு நோக்கிச் சென்றனர். தென் இந்தியாவுக்கும் ஐரோப்பாவுக்கும் இடையே நல்ல வியாபாரம் நடந்துகொண்

டிருந்தது. முத்து, பொன், தந்தம், அரிசி, மிளகு முதலியவைகளும், மயில்களும், குரங்குகளுங்கூடப் பாபிலோன், எகிப்து, கிரீஸ் ஆகிய நாடுகளுக்கும், பிறகு ரோமாபுரிக்கும் அனுப்பப்பட்டன. இவைகளுக்கு முன்பே மலையாளக் கரையிலிருந்து தேக்குமரம் சால்டியா (Chaldaea) வுக்கும் பாபிலோனுக்கும் அனுப்பப்பட்டு வந்தது. திராவிடர்களால் ஓட்டப்பட்ட இந்தியக் கப்பல்களிலே இப்பொருள்கள் பெரும்பாலும் கொண்டு போகப்பட்டன. புராதன உலகத்தில் தென் இந்தியா எத்தகைய உன்னத ஸ்தானம் வகித்து வந்ததென்று நீ இதனால் தெரிந்துகொள்ளலாம். தென் இந்தியாவில் பல ரோமாபுரி நாணயங்கள் கண்டுபிடிக்கப்பட்டிருக்கின்றன. நான் ஏற்கெனவே சொல்லியுள்ளபடி மலையாளக்கரையில் அலெக்சாந்திரியரின் குடியேற்றமும், அலெக்சாந்திரியாவில் இந்தியரின் குடியேற்றமும் நிகழ்ந்துவந்தன.

அசோகர் இறந்தவுடனே தெற்கில் ஆந்திர ராஜ்யம் சுதந்தரம் பெற்று நின்றது. ஆந்திர தேசம் இப்போது சென்னைக்கு வடக்கே இந்தியாவின் கீழ் கரையில் உள்ள காங்கிரஸ் மாகாணம் என்பதை நீ அறிந்திருக்கலாம். ஆந்திர தேசத்தில் பேசப்படும் பாஷை தெலுங்கு. அசோகருக்குப்பின் ஆந்திர அரசு விரைவில் பரவிப் பெருகியது. கிழக்குக் கடலிலிருந்து மேற்குக் கடல் வரையில் தக்ஷிண பீடபூமி முழுவதும் அது வியாபித்தது.

தென் இந்தியாவிலிருந்து வெளித் தேசங்களுக்குச் சென்று அங்கே குடியேறும் முயற்சிகள் பல மேற்கொள்ளப்பட்டன. அவைகளைப் பற்றிப் பிறகு கூறுகிறேன்.

இந்தியாமீது படையெடுத்துவந்து வடக்கே குடியேறிய சாகர், ஸிதியர் முதலானோரைப்பற்றி மேலே

கூறினேன். அவர்கள் இந்தியரோடு ஒன்றி இந்தியராகவே ஆகிவிட்டார்கள். வட இந்தியாவிலுள்ள நாம் எவ்வளவுக்கு ஆரியர்களின் சந்ததியாரோ அவ்வளவுக்கு இவர்களின் சந்ததியாரும் ஆவோம். சிறப்பாக அழகும் வீரமும் படைத்த ராஜபுத்திரர்களும், ஆற்றல் படைத்த கத்தியவார் மக்களும் இவர்களுடைய சந்ததியார் ஆவார்கள்.

# 30

## குஷாணர்களின் எல்லைப்புற சாம்ராஜ்யம்

ஏப்ரல் 11, 1932.

சாகரும் துருக்கியரும் திரும்பத் திரும்ப இந்தியா மீது படையெடுத்துவந்த வரலாற்றைச் சென்ற கடிதத்தில் கூறினேன். தென் இந்தியாவில் அரபிக் கடலிலிருந்து வங்காள விரிகுடாக் கடல் வரையில் வியாபித்திருந்த ஆந்திர ராஜ்யத்தின் வளர்ச்சியைப் பற்றியும் கூறினேன். சாகர்களை விரட்டியவர்கள் குஷாணர்கள் என்று சொல்லியிருக்கிறேன். சில காலத்துக்குப் பிறகு இந்தக் குஷாணர்களே இந்தியாவுக்கு வந்துவிட்டார்கள். கி. மு. முதல் நூற்றாண்டில் இவர்கள் இந்திய எல்லைப் புறத்தில் ஒரு ராஜ்யத்தை ஸ்தாபித்தார்கள். இது பெரிய சாம்ராஜ்யமாக வளர்ந்தது. இந்தக் குஷாண சாம்ராஜ்யம் கிழக்கே காசி வரையிலும், தெற்கே விந்தியமலை வரையிலும், மேற்கே பாரசீக, பார்த்திய எல்லை வரையிலும், வடக்கே காஷ்கர் (Kashgar), யார்கந்த் (Yarkand), கோடான் (Khotan) வரையிலும் பரவியிருந்தது. ஆகவே, ஐக்கிய மாகாணம், பஞ்சாப், காஷ்மீரம் இவைகள் கொண்ட வட இந்தியப் பகுதி முழுவதும், மத்திய ஆசியாவில் ஒரு பகுதியும் குஷாணர்களின் ஆட்சியில் இருந்தன. இச்சாம்ராஜ்யம் 300 ஆண்டுகள் நிலைபெற்றிருந்தது. இதன் காலமும் தென் இந்தியாவில் ஆந்திர ராஜ்யம் செழித்தோங்கிய காலமும் ஏறக்குறைய ஒன்றென்றே சொல்லலாம். முதலில் காபுல் குஷாணர்களின் ராஜதானியாக

இருந்தது. பிறகு அது புருஷபுரத்துக்கு மாற்றப்பட்டு அங்கே இருந்துவந்தது. பெஷாவர் நகரம்தான் அக் காலத்தில் புருஷபுரம் என்று அழைக்கப்பட்டது.

இந்தக் குஷாண சாம்ராஜ்யம் பல வழிகளில் சிறப் புற்று விளங்குகிறது. இது பௌத்த சாம்ராஜ்யம். பேரும் புகழும் பூண்டு இதை ஆண்ட சக்கரவர்த்தி களில் ஒருவனுன கனிஷ்கன் என்பவன் பௌத்த தருமத் தில் மிகுந்த பற்றுதல் கொண்டவன். நெடுங்காலம் வரையில் பௌத்த மதக் கல்வி, கேள்வி, ஒழுக்கங் களுக்கு முக்கிய ஸ்தானமாக இருந்த தக்ஷசீலம், குஷா ணர்களின் ராஜதானிப் பட்டணமாகிய பெஷாவருக்கு அருகில் இருந்தது. குஷாணர்கள் என்போர் மங்கோலி யர்கள் அல்லது அவர்களோடு தொடர்புடையவர்கள் என்று சொல்லலாம். குஷாண ராஜதானிக்கும் மங்கோலியாவுக்கும் தொடர்ச்சியான போக்குவரவு இருந்திருக்க வேண்டும். இங்கிருந்து சீனுவுக்கும் மங் கோலியாவுக்கும் பௌத்தக் கலைகளும், நாகரிகமும் சென் றிருக்க வேண்டும். இவ்வாறே மேற்கு ஆசியாவுக்கும் பௌத்தக் கல்வி கேள்விகள் சென்றிருக்க வேண்டும். அலெக்சாந்தர் காலத்திலிருந்து மேற்கு ஆசியா, கிரேக்கர் களின் ஆட்சியில் இருந்துவந்தது. அதனுல் அங்கே கிரேக்கக் கலாசாரம் பரவியிருந்தது. இப்பொழுது அங்கே கிரேக்க ஆரியக் கலாசாரம், இந்திய பௌத்தக் கலாசாரம் இரண்டும் கலந்து ஒன்றுபட்டு விளங்கின.

இவ்வாறு சீனுவையும் மேற்கு ஆசியாவையும் இந்தியா மாற்றியது. அதேமாதிரி அவைகளாலும் இந்தியா மாறியது. மேற்கில் கிரேக்க-ரோம நாடுகளும், கிழக்கில் சீனமும், தெற்கில் இந்தியாவும் புடைசூழ குஷாண சாம்ராஜ்யம் ஆசியாவின் முதுகின்மீது பிரம் மாண்டமான வடிவுள்ள ஒரு சிலையைப்போல அமர்ந்

திருந்தது. இந்தியாவுக்கும் ரோமாபுரிக்கும், இந்தியாவுக்கும் சீனுவுக்கும், மத்தியில் அது இருந்தது.

குஷாண சாம்ராஜ்யம் மத்திய பாகத்தில் இருந்தபடியால் இந்தியாவுக்கும் ரோமாபுரிக்கும் நெருங்கிய தொடர்பு உண்டாயிற்று. ரோமக் குடியரசின் கடைசிக் காலமும்-அப்போது ஜூலியஸ் சீசர் உயிரோடிருந்தான்-ரோம சாம்ராஜ்யத்தின் முதல் இருநூறு ஆண்டுகளும் குஷாண சாம்ராஜ்யம் தழைத்திருந்த காலமாகும். குஷாண சக்கரவர்த்தி அகஸ்டஸ் சீசரிடம் சில தூதர்களை அனுப்பி வைத்தான் என்று கூறப்படுகிறது. இரு நாடுகளுக்கும் கடல் மார்க்கமாகவும் தரை மார்க்கமாகவும் வியாபாரம் நடைபெற்று வந்தது. வாசனைத் திரவியங்களும், ஏலம், மிளகு வகைகளும், பட்டு பீதாம்பரங்களும், பொன், வெள்ளிச் சரிகை மிடைந்த ஆடைகளும், மஸ்லின் வகைகளும், நவரத்தினங்களும், வேறு பல பொருள்களும் இந்தியாவிலிருந்து ரோமாபுரிக்கு அனுப்பப்பட்டன.

பிளினி (Pliny) என்னும் ரோம ஆசிரியர் ஒருவர் ஏராளமான பொன் ரோமாபுரியிலிருந்து இந்தியாவுக்குப் போவதைப்பற்றிக் குறைப்பட்டு எழுதியிருக்கிறார். இந்த ஆடம்பரப் பொருள்களை வாங்குவதற்காக ரோம சாம்ராஜ்யம் வருஷந்தோறும் பத்துக் கோடி செஸ்டர்ஸ் (Sesterces=ரோமாபுரி நாணயம்) செலவழித்து வந்தது என்று அவர் கூறுகிறார். இது ஏறக்குறையப் பத்து லட்சம் பவுன் அல்லது ஒன்றரைக் கோடி ரூபாய்க்குச் சமமான தொகையாகும்.

அக்காலத்தில் பௌத்த மடங்களிலும், பௌத்த சங்கக் கூட்டங்களிலும் பலத்த வாதப் பிரதிவாதங்கள் நிகழ்ந்து வந்தன. புதிய கருத்துக்களும், புதிய தோற்றத்தில் பழைய கருத்துக்களும் தெற்கிலிருந்தும் மேற்கிலிருந்தும் வந்துகொண்டிருந்தன. இவைகளால் பௌத்த

மதத்தின் இயல்பான எளிய தன்மை சிறிது சிறிதாகப் பாதிக்கப்பட்டு வந்தது. இந்த மாறுதல்கள் காரணமாக, பௌத்த மதம் மஹாயானம் (பெருவழி - Mahayana) என்றும் ஹீனயானம் (சிறுவழி - Hinayana) என்றும் இரண்டு பிரிவுகளாகப் பிரிந்தது. புதிய கருத்துக்களும் புதிய வியாக்கியானங்களும் தோன்றியவுடனே மனிதர்கள் மதத்தைப்பற்றியும் வாழ்க்கையைப் பற்றியும் கொண்டிருந்த எண்ணங்களும் மாறுதல் அடைந்தன. இவைகள் மாறுதல் அடையவே இவைகளை வெளிப்படுத்திக் காட்டும் ஓவியம், சிற்பம் முதலிய கலைகளும் மாறுதல் அடைந்தன. இம்மாறுதல்கள் எவ்வாறு நிகழ்ந்தன என்று கூறுவது அவ்வளவு எளிதல்ல. ஒருவேளை பிராமண நாகரிகம், கிரேக்க நாகரிகம் ஆகிய இரு சக்திகளும் சேர்ந்து பௌத்த மதத்தின் போக்கை ஒரே வழியில் மாற்றியிருக்கலாம் என்று தோன்றுகிறது.

ஜாதிக் கொடுமையையும், குருக்கள்மாரின் ஏமாற்று வித்தைகளையும், சடங்கு முறைகளையும் ஒழிக்க எழுந்தது பௌத்த மதம் என்று நான் பல தடவை கூறியிருக்கிறேன். கௌதமர் விக்கிரக ஆராதனையை அங்கீகரிக்கவில்லை. தன்னைப் பிறர் தெய்வமாகப் பாவித்து வணங்க வேண்டுமென்றும் அவர் சொல்லவில்லை. அவர் புத்தர், அதாவது ஞானப்பிரகாசம் பெற்றவர். அவ்வளவுதான். இந்தக் கொள்கைப்படி முதலில் புத்தரை விக்கிரகங்களாக அமைத்து யாரும் வணங்கவில்லை. அந்நாளையச் சிற்பங்களிலும் விக்கிரகங்களை விலக்கி வந்தார்கள். ஆனால் பிராமணர்கள் ஹிந்து மதத்துக்கும் பௌத்த மதத்துக்கும் உள்ள வேற்றுமைகளை எப்படியாவது ஒற்றுமைப் படுத்த வேண்டுமென்று விரும்பினார்கள். அவர்கள் எப்பொழுதும் ஹிந்துக் கருத்துக்களையும் குழூஉக் குறி

களையும் பௌத்த மதத்தில் புகுத்த முயன்று வந்தார்கள். கிரேக்க–ரோம ராஜ்யத்திலிருந்து வந்த சிற்பிகளும் தெய்வங்களுக்கு உருவங்கள் அமைக்கும் பழக்கமுடையவர்கள். இவ்வாருகப் பௌத்தக் கோயில்களில் நாளடைவில் விக்கிரகங்கள் ஏற்படலாயின. முதலில் புத்தருக்கு விக்கிரகம் செய்து வைக்கவில்லை. பௌத்த மத சாஸ்திரப்படி புத்தருக்கு முற்பட்ட அவதாரங்கள் எனக் கருதப்படும் போதி-சத்துவர்கள் (Bodhi-Sattvas) என்போருக்கு விக்கிரகங்கள் அமைக்கப்பட்டன. கடைசியில் புத்தருடைய உருவத்தையே விக்கிரகங்களாக அமைத்து வணங்க ஆரம்பித்துவிட்டார்கள்.

பௌத்த மதத்தில் மஹாயானப் பிரிவினர் இம் மாறுதல்களை ஒப்புக்கொண்டனர். அவர்களுடைய கொள்கைக்கும் பிராமணருடைய கொள்கைக்கும் அதிக ஒற்றுமை இருந்தது. குஷாண சக்கரவர்த்திகள் இந்த மஹாயான சித்தாந்தத்தைத் தழுவி அதைப் பரவச் செய்தார்கள். ஆனல் அவர்கள் ஹீனயான சித்தாந்தத்தினிடத்தும் மற்ற மதங்களிடத்துங்கூடத் துவேஷம் பாராட்டவில்லை. கனிஷ்கன் ஜாரதுஷ்டிர மதத்தைக் கூட ஆதரித்ததாகச் சொல்லப்படுகிறது.

இரண்டு சித்தாந்தங்களிலும் வல்லவர்கள் தங்கள் தங்கள் மதத்தின் பெருமைகளை எடுத்துச் சொல்லி நிகழ்த்திய வாதப் பிரதிவாதங்களின் வரலாறுகளை வாசிப்பது மிகவும் ரசமுடையதாயிருக்கிறது. இதற்காகப் பெரிய பெரிய சங்கக் கூட்டங்கள் நிகழ்ந்தனவாம். கனிஷ்கன் காஷ்மீரத்தில் ஒரு பெரிய சங்கக்கூட்டத்தைக் கூட்டியதாகத் தெரிகிறது. இது சம்பந்தமான சொற்போர்களும் வாதங்களும் பல நூறு வருஷங்கள் நடைபெற்றன. வட இந்தியாவில் மஹாயான சித்தாந்தமும் தென் இந்தியாவில் ஹீனயான சித்தாந்தமும் வெற்றி

பெற்றன. கடைசியில் இரண்டையும் ஹிந்து மதம் ஸ்வீகரித்துக் கொண்டது. இன்று மஹாயான சித்தாந்தம் சீனுவிலும், ஜப்பானிலும், திபெத்திலும் அனுஷ்டிக்கப் பட்டு வருகிறது. ஹீனயான சித்தாந்தம் இலங்கையிலும் பர்மாவிலும் அனுஷ்டிக்கப்பட்டு வருகிறது.

ஒரு மக்களின் உள்ளத்தைக் கண்ணுடிபோலக் காட்டுவன அவர்களுடைய கலைகளாகும். ஆதி பௌத்த மதம் தன் இயல்பான எளியதன்மை மாறி விரிவான சங்கேதங்களுக்கு இடங்கொடுத்தது போலவே இந்தியக் கலையும் வரவர விரிவாகவும் விசித்திரமாகவும் மாறியது. சிறப்பாக வடமேற்கிலுள்ள காந்தார நாட்டு மஹாயானச் சிற்பம் விசித்திரமான அலங்கார வேலைப்பாடுகள் நிறைந்து விளங்கியது. இப்புதிய முறை ஹீனயானச் சிற்பத்தையும் பாதிக்காமலில்லை. அது சிறிது சிறிதாகத் தன் ஆதி எளிமையையும் அடக்கத்தையும் இழந்து குழூஉக் குறிகளையும் அதிகமான செதுக்கு வேலைப்பாடு களையும் மேற்கொண்டது.

அக்காலத்து ஞாபகச் சின்னங்கள் சில இன்னும் இருக்கின்றன. இவைகளில் மிகவும் சிறந்தவை அஜந்தாக் குகையிலுள்ள அற்புதமான சித்திரங்களாகும்.

இப்பொழுது நாம் குஷாணர்களிடமிருந்து விடை பெற்றுக் கொள்ளலாம். ஆனால் இதைமட்டும் மறவாமல் நினைவில் வைத்துக்கொள். தங்களுக்கு முன்வந்த சாகர், துருக்கியரைப் போலவே, குஷாணர்களும் இந்தியாவுக்கு வரவும் இல்லை; அந்நியர்களாக ஆளவும் இல்லை. மதத் தொடர்பு, அவர்களை இந்தியாவுடனும் இந்திய மக்க ளுடனும் பிணைத்து நின்றது. மேலும் ஆரிய மக்கள் இந்தியாவில் அனுசரித்துவந்த அரசியல் கொள்கை களையே அவர்களும் ஏற்றுத் தங்கள் அரசியலை நடத்தி வந்தார்கள். பெரும்பாலும் ஆரிய முறையோடு பொருந்தி அவர்கள் வாழ்க்கை நடத்தியதால் வட இந்தியாவை அவர்கள் 300 ஆண்டுகள் ஆளுவது சாத்தியமாயிற்று.

# 31

## ஏசுவும் கிறிஸ்தவ மதமும்

ஏப்ரல் 12, 1932.

**வட**மேற்கு இந்தியாவில் நிகழ்ந்த குஷாண சாம்ராஜ்யத்தைப் பற்றிய வரலாறுகளையும், சீனவை ஆண்ட ஹன் வமிசத்தாரின் வரலாறுகளையும் நாம் ஆராய்ந்தபோது சரித்திரத்தில் ஒரு முக்கியமான கட்டத்தைக் கடந்து சென்றுவிட்டோம். இப்போது திரும்பிச் சென்று அது என்னவென்று கவனிக்க வேண்டும். இதுவரையில் நாம் கிறிஸ்து பிறப்பதற்கு முற்பட்ட காலத்தைப்பற்றி, (அதாவது கி. மு.) பேசிக் கொண்டிருந்தோம். இப்போது நாம் கிறிஸ்து சகாப் தத்தில் - அதாவது கிறிஸ்துவுக்குப் பிற்பட்ட காலத்தில் கி. பி. - வாழ்ந்துகொண்டிருக்கிறேம். இந்தச் சகாப்தம் கிறிஸ்து பிறந்ததாகக் கருதப்படும் நாளிலிருந்து ஆரம்ப மாகிறது. பார்க்கப்போனல் அந்த நாளைக்கு நாலு வருஷங்கள் முன்புகூடக் கிறிஸ்து பிறந்திருக்கலாம். ஆயினும், அதனல் அதிக வித்தியாசம் ஒன்றுமில்லை.

ஏசு கிறிஸ்துவின் சரித்திரம் பைபிளில் உள்ள புதிய ஏற்பாடு என்னும் பகுதியில் சொல்லப்பட்டிருக்கிறது. அது உனக்குச் சிறிதளவு தெரியும். சுவிசேஷங்களில் கூறப்படும் அவரைப் பற்றிய வரலாறுகளில் அவருடைய இளமைப் பருவத்தைப்பற்றி ஒன்றும் சொல்லப்பட வில்லை. 'அவர் நாசரேத்து (Nazareth) என்னும் ஊரில் பிறந்தார்; கலிலேயாவில் (Galilee) மக்களுக்கு நற் போதனைகள் செய்தார்; தம் முப்பதாவது வயதில்

எருசலேம் (Jerusalem) நகருக்கு வந்தார்; அதற்குப் பிறகு அவர் ரோம தேசாதிபதியாகிய (Roman Governor) பொந்தியு பிலாத்து (Pontius Pilate) என்பவனால் விசாரித்துத் தண்டிக்கப்பட்டார்' என்று கூறப் படுகிறது. மக்களுக்குப் போதிக்க ஆரம்பிக்கு முன் அவர் என்ன செய்தார், எங்கே சென்றார் என்பது தெளிவாகத் தெரியவில்லை. மத்திய ஆசியா முழுவதிலும், காஷ்மீரம், லடக் (Ladakh), திபெத்து ஆகிய இடங்களிலும், இன்னும் வடக்கேயுங்கூட ஏசு சென்றிருக்கிறார் என்று சிலர் உறுதியாக நம்புகிறார்கள். சிலர் அவர் இந்தியாவுக்குக்கூட வந்ததாக நம்புகிறார்கள். எதையும் நிச்சயமாகக் கூறுவதற்கில்லை. ஏசுவின் வாழ்க்கையை நன்கு ஆராய்ச்சி செய்தவர்களில் பெரும்பாலோர் அவர் இந்தியாவுக்கோ, மத்திய ஆசியாவுக்கோ போகவில்லை என்றே நம்புகிறார்கள். ஆனால் அவர் அவ்விடங்களுக்குச் சென்றிருப்பது சாத்தியமல்ல என்று கூற முடியாது. அந்நாளில் இந்தியாவின் புகழ்பெற்ற கலாசாலைகளுக்கு, முக்கியமாக வடமேற்கிலிருந்த தக்ஷசீலத்துக்குத் தூர தேசங்களிலிருந்து பல மாணவர்கள் வந்தார்கள். ஏசுவும் கல்வியறிவை நாடி அங்குச் சென்றிருக்கலாம். ஏசுவின் போதனை புத்தருடைய போதனையைப் பெரிதும் ஒத்திருப்பதால் அவர் பௌத்த மத உண்மைகளை நன்கு அறிந்திருந்தார் என்பது பெரும்பாலும் சாத்தியமானதேயாகும். ஆனால் பௌத்த மதம் பிற நாடுகளில் பெரிதும் பரவியிருந்தபடியால் ஏசு இந்தியாவுக்கு வராமலேயே அதைப்பற்றி அறிந்துகொண்டிருக்கக் கூடும்.

மதங்கள் பூசலுக்கும் பெரும் போராட்டங்களுக்கும் காரணமாயிருந் திருக்கின்றன. இது பள்ளிச் சிறுமியரும் அறிந்த விஷயம். ஆனால் உலக மதங்களின் தொடக்

களங்களைக் கவனித்து அவற்றை ஒப்பிட்டுப் பார்ப்பது பலன் தருவதாகும். அவைகளின் நோக்கங்களும் போதனைகளும் பெரும்பாலும் ஒத்திருப்பதால் ஜனங்கள் மூடத்தனமாக, சாரமற்ற விவரங்களைக் குறித்து ஏன் சண்டை போட்டுக்கொள்ள வேண்டும் என்று நாம் ஆச்சரியப் படுகிறோம். ஆனால் மதங்களின் ஆதி போதனைகள் தங்களுடைய பழைய வடிவத்திலேயே எப்போதும் இருப்பதில்லை. அவைகளோடு வேறு பல விஷயங்களும் சேருவதால் அவை திரிந்து உருமாறி விடுகின்றன. ஆதி போதகரின் ஸ்தானத்தில் குறுகிய மனமும், துவேஷ புத்தியும், பிடிவாத குணமும், மூட நம்பிக்கையும் கொண்ட மதவாதிகள் தோன்றுகிறார்கள். மதமானது, பெரும்பாலும் அரசியலுக்கும் சாம்ராஜ்ய தத்துவத்துக்கும் உற்ற கருவியாக இருந்துவந்திருக்கிறது. மக்களிடையே மூட நம்பிக்கைகளையும், மூடப் பழக்க வழக்கங்களையும் வளர்க்க வேண்டும் என்பது பழைய ரோமர்களின் ராஜதந்திர முறையாகும். ஏனென்றால் அந்த நிலையில் அவர்களை அடக்கி ஆண்டு சுரண்டிப் பிழைப்பது மிகவும் எளிதான காரியம். ரோமானியப் பிரபுக்கள் தங்களைப் பொறுத்தவரையில் உயர்ந்த தத்துவ ஆராய்ச்சியில் ஈடுபடுவார்கள். ஆனால் அவர்களுக்கு நன்மையானது ஜனங்களுக்கு நன்மையானதல்ல என்பது அவர்களுடைய எண்ணம். மெக்கியவெல்லி (Mechiavelli) என்னும் புகழ்பெற்ற பிற்காலத்து இதாலிய ஆசிரியர் அரசியலைப்பற்றி ஒரு நூல் எழுதியிருக்கிறார். அதில் அவர், அரசாங்கத்துக்கு மதம் அவசியம் என்றும், அரசன் தான் பொய் என்று கருதுகிற ஒரு மதத்தைக்கூடச் சில சமயங்களில் ஆதரிக்க வேண்டியது கடமையாகுமென்றும் கூறியிருக்கிறார். சமீப காலத்தில்கூட ஏகாதிபத்தியக் கொள்கை மதப் போர்வைக்குள் புகுந்துகொண்டு முன்னேறி

வருவதை நாம் பல நிகழ்ச்சிகளால் அறிந்திருக்கிறோம். ஆகவே கார்ல் மார்க்ஸ் (Karl Marx) என்னும் அறிஞர், "மதம் மக்களின் அறிவை மயக்கும் அபினி போன்றது" என்று கூறியிருப்பதில் யாதோர் ஆச்சரியமும் இல்லை.

ஏசு ஒரு யூதர். யூதர்கள் அன்றும் இன்றும் ஒரு தனி இயல்பு படைத்த ஜாதியாராக விளங்குகிறார்கள். அவர்கள் ஆச்சரியகரமான விடாமுயற்சி உடையவர்கள். தாவீது, சாலமோன் நாட்களில், சிலகாலம் வரையில் அவர்கள் சிறப்புடன் விளங்கினார்கள். அதன் பிறகு அவர்களுக்குக் கெட்ட காலம் பிறந்தது. அவர்கள் அடைந்திருந்த சிறப்பும் சாதாரணமானது என்றே சொல்லவேண்டும். ஆயினும் அவர்கள் அதைத் தங்களுடைய கற்பனையில் மிகவும் பிரமாதப்படுத்திக்கொண்டு அதை ஒரு பொற்காலம் என்றே பாவித்து வருகிறார்கள். மீண்டும், குறிப்பிட்ட ஒரு சமயத்தில் அந்நற்காலம் தங்களுக்குத் திரும்ப வரும் என்றும், அப்போது யூதர்கள் பெருமையும் வல்லமையும் பொருந்திப் பொலிவார்கள் என்றும் அவர்கள் நம்பிவருகிறார்கள். அவர்கள் ரோம ராஜ்யம் முழுவதிலும் வேறு இடங்களிலும் பரவியிருந்தார்கள். ஆனால் அவர்கள் தங்களிடையே ஒரு ரட்சகர் அதாவது கிறிஸ்து (Messiah) தோன்றுவார் என்றும், அவர் தங்களை விடுவித்து மீண்டும் தங்களுடைய பழம் பெருமையை நிலைநாட்டுவார் என்றும் உறுதியாக நம்பி ஒன்றுபட்டிருந்தார்கள். இந்த யூதர்கள் தங்களுக்கென்று ஒரு நாடு இல்லாமல், தங்களுக்கென்று ஒரு புகலிடம் இல்லாமல், பிறரால், அளவிட முடியாத துன்பத்துக்கும் அவமானத்துக்கும் உட்படுத்தப்படும் தங்களுடைய சிறப்பியல்பை (Identity) இழக்காமல் 2000 ஆண்டுகளாக ஒன்றுபட்டு நிற்பது, சரித்திரத்தில் நாம் காணும் விந்தைகளுள் ஒன்று.

யூதர்கள் தங்களை விடுவிப்பதற்கு ஒரு கிறிஸ்துவை எதிர்பார்த்துக்கொண் டிருந்தார்கள். ஏசுவே அக்கிறிஸ்து என்று அவர்கள் நம்பியிருக்கலாம். ஆனால் அவர்களுடைய ஆசை சீக்கிரத்தில் நிராசையாய் விட்டது. ஏசு அக்காலத்தில் சமுதாய அமைப்பையும் நிலைமைகளையும் எதிர்த்துப் பேச ஆரம்பித்தார். இது அவர்களுக்கு விபரீதமாகப் பட்டது. பணக்காரரும் மாயக்காரரும் வஞ்சகரும் சேர்ந்துகொண்டு மதத்தை வெறும் அனுஷ்டானங்களும் சடங்குகளும் கொண்டதாக மாற்றி விட்டார்கள். முக்கியமாக இவர்களை ஏசு எதிர்த்து நின்றார். செல்வமும் சிறப்பும் கொண்டுதருகிறேன் என்று மக்களுக்குச் சொல்வதற்கு மாறாக, அவர், காண முடியாத, நிச்சயமற்ற, மறுமையிலே கிடைக்கக்கூடிய பரலோக ராஜ்யத்திற்காக (Kingdom of Heaven) அவர்கள் இம்மையிலே தாங்கள் வைத்துக்கொண் டிருக்கும் சொற்பத்தையும் துறந்துவிட வேண்டுமென்று கூறினார். அவருடைய உபதேசத்தில் கதைகளும் உவமைகளும் நிறைந்திருந்தன. அவர் பிறவியிலேயே ஒரு புரட்சிக்காரர் என்பதும், அக்காலத்திலிருந்த நிலைமைகளைச் சகிக்கமாட்டாமல் அவைகளை மாற்றுவதற்குக் கங்கணம் கட்டிக்கொண்டிருந்தார் என்பதும் தெளிவாகத் தெரிகிறது. யூதர்கள் விரும்பியதும் எதிர்பார்த்ததும் இது அல்ல. ஆகவே அவர்களில் பெரும்பாலோர் அவருக்கு விரோதமாகக் கிளம்பி, அவரை ரோமாபுரி அதிகாரிகளிடம் ஒப்பித்துவிட்டனர்.

ரோமர்களுக்கு மதங்களைப் பொறுத்தவரையில் துவேஷம் ஒன்றும் கிடையாது. அவர்களுடைய சாம்ராஜ்யத்தில் எல்லா மதங்களுக்கும் இடம் இருந்தது. யாராவது எந்தத் தெய்வத்தையாவது தூஷித்தாலும் அவர்களுக்குத் தண்டனை கிடையாது. "தெய்வங்களை

யாராவது நிந்தனை செய்தால் அவர்களைத் தெய்வங்களே கவனித்துக் கொள்ளட்டும்'' என்று டைபீரியஸ் (Tiberius) என்னும் சக்கரவர்த்தி கூறினும். ஆகவே, ஏசுவை விசாரித்த ரோம தேசாதிபதியாகிய பொந்தியு பிலாத்து அவ்வழக்கின் மத சம்பந்தமான அம்சத்தை ஆராய்ந்து பார்த்திருப்பான் என்று சொல்வதற்கில்லை. ஏசுவை அரசியல் புரட்சிக்காரர் என்று அதிகாரிகள் கருதினார்கள்; யூதர்களோ அவரைச் சமூகப் புரட்சிக் காரர் என்று கருதினார்கள். இந்தக் காரணங்களுக்காக அவர் விசாரிக்கப்பட்டு, கபால ஸ்தலம் என்று பொருள் படும் கொல்கதாவில் சிலுவையில் அறையப்பட்டார். அவருக்குத் துன்பம் வந்த காலத்தில் அவருடைய சீடர்களும் அவரை விட்டு நீங்கியதோடு அவரைப் புறக்கணித்தும்விட்டார்கள். அவர்களுடைய இத்துரோகச் செயல் அவருடைய துன்பத்தைப் பின்னும் பன்மடங்கு அதிகமாக்கியது. அவர் சாகுந்தறுவாயில் துன்பத்தைப் பொறுக்கமாட்டாமல், "என் கடவுளே, என் கடவுளே! ஏன் என்னைக் கைவிட்டீர்," என்று கல்லும் கரைந்துருகு மாறு கதறினார்.

ஏசு இளவயதிலேயே இறந்துவிட்டார். அவர் இறந்தபோது அவருக்கு வயது முப்பதுக்குச் சற்று அதிகமாயிருக்கும். சுவிசேஷங்களில் அவர் சிலுவையில் அறையப்பட்ட சோக சரிதை அழகாக எடுத்துச் சொல்லப்பட்டிருக்கிறது. அதைப் படிக்கும்போது நாம் கசிந்து உருகுகிறோம். பிற்காலத்தில் கிறிஸ்தவ மதம் வளர்ச்சியடைந்தபோது கோடிக்கணக்கான பேர் ஏசுவை வணங்க ஆரம்பித்தார்கள். ஆனால் அவர்கள் அவருடைய போதனைகளை அவ்வளவாகப் பின்பற்றி நடக்கவில்லை. ஏசு சிலுவையில் அறையப்பட்டபோது பாலஸ்தீனத்துக்கு வெளியில் அவரைப்பற்றி யாருக்கும்

அதிகமாகத் தெரியாது. ரோமாபுரி மக்கள் அவரைப் பற்றிக் கேள்விப்பட்டே இருக்கமாட்டார்கள். பிலாத்தும் அந்தச் சம்பவத்தைப் பெரிதாகக் கருதியிருக்கமாட்டான்.

ஏசுவின் அணுக்கச் சீடர்கள் அச்சம் காரணமாக அவரைப் புறக்கணித்துவிட்டார்கள். ஆனால் அவர் இறந்த வுடன் பால் (Paul) என்று ஒருவர் தோன்றினார். அவர் ஏசுவைக் காணுதவராயிருந்தும் தாம் கிறிஸ்தவ மதக் கோட்பாடு என்று கருதியதைப் பரப்ப ஆரம்பித்தார். ஏசுவின் போதனைகளுக்கும் பால் என்பவர் போதித்த கிறிஸ்தவ மதத்துக்கும் அதிக வித்தியாசம் இருந்த தென்று பலர் எண்ணுகிறார்கள்.

பால் கல்வியறிவும் திறமையும் மிகுந்தவர். ஏசுவைப் போல் அவர் சமுதாயப் புரட்சிக்காரர் அல்ல. பால் தம்முடைய முயற்சியில் வெற்றி பெற்றார்; கிறிஸ்தவ மதம் சிறிது சிறிதாகப் பரவியது. ரோமர்கள் முதலில் இதை அவ்வளவாகக் காதில் போட்டுக்கொள்ளவில்லை. கிறிஸ்தவர்கள் என்போர் யூதர்களில் ஒரு பிரிவினர் என்று அவர்கள் நினைத்திருந்தார்கள். ஆனால் கிறிஸ்த வர்களின் தீவிரம் வரவர அதிகமாயிற்று. வேறு மதங்களை அவர்கள் எதிர்த்தார்கள். சக்கரவர்த்தியின் உருவச்சிலைக்கு வணக்கம் செலுத்த மறுத்துவிட்டார்கள். ரோமர்களுக்கு இக்குறுகிய மனப்பான்மை புரியவில்லை. கிறிஸ்தவர்களைப் பைத்தியம் பிடித்தவர்கள் என்றும், வலுச்சண்டைக்கு வருகிறவர்கள் என்றும், மனிதர்களின் முன்னேற்றத்தை எதிர்த்து நிற்கும் அநாகரிகர்கள் என்றும் ரோமர்கள் கருதினார்கள். கிறிஸ்தவ மதத்தை ஒரு மதம் என்கிற முறையில் அவர்கள் சகித்துக் கொண்டு இருந்திருப்பார்கள். ஆனால் சக்கரவர்த்தியின் உருவச் சிலைக்குக் கிறிஸ்தவர்கள் வணக்கம்செலுத்த மறுத்ததைப் பெரிய ராஜத்துரோகக் குற்றமாக அவர்கள் கருதினார்

கள். அக்குற்றத்துக்கு மரண தண்டனை விதிக்கப்பட்டது. மல்யுத்தக் காட்சிகளை நடத்தி வேடிக்கை பார்ப்பதையும் கிறிஸ்தவர்கள் கண்டித்தார்கள். இதனால் கிறிஸ்தவர்கள் பெருந்துன்பத்துக்கு ஆளானார்கள். அவர்களின் சொத்து சுதந்தரங்கள் பறிமுதல் செய்யப்பட்டன. அவர்கள் சிங்கங்களுக்கு இரையாக எறியப்பட்டுக் கொல்லப் பட்டார்கள். இவ்வாறு உயிர் துறந்த கிறிஸ்தவ மதத் தியாகிகளின் கதைகளை நீ வாசித்திருப்பாய்; இவற்றைக் காட்டும் சினிமாப் படங்களையும் நீ பார்த்திருக்கலாம். ஒருவன், ஒரு கொள்கைக்காக உயிரையும் கொடுக்கத் துணிந்திருக்கும்போது, அவ்வாறு உயிரைத் தியாகம் செய்வதே புகழ் என்று கருதும்போது அவனையோ அல்லது அக்கொள்கையையோ அடக்கிவிட யாராலும் ஆகாது. ரோம சாம்ராஜ்யத்தினால் இக்கிறிஸ்தவர்களைக் கொஞ்சமும் அடக்க முடியாது போயிற்று. இருவருக்கும் நடந்த போராட்டத்தில் வெற்றி பெற்றவர்கள் கிறிஸ்த வர்களே. கி. பி. நாலாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் ரோம சக்கரவர்த்தி ஒருவன் கிறிஸ்தவ மதத்தைத் தழுவினான். அது முதற்கொண்டு ரோம சாம்ராஜ்யத்தில் கிறிஸ்தவ மதமே அரசாள்வோர் (Official Religion) மதமாகிவிட்டது. இவ்வாறு கிறிஸ்தவ மதத்தைத் தழுவியவன் 'கான்ஸ்டாண்டிநோபிள்' என்னும் நகரத்தை நிர்மித்த 'கான்ஸ்டண்டைன்' (Constantine) என்பவனே. இவனைப்பற்றிப் பிறகு கூறுவோம்.

கிறிஸ்தவ மதம் வளர வளர ஏசுவின் தெய்வத் தன்மையைப்பற்றிப் பலத்த விவாதங்கள் எழுந்தன. கௌதம புத்தர் தமக்குத் தெய்வத்தன்மை உண்டென்று சொல்லாவிடினும் மக்கள் எப்படி அவரைக் கடவு ளாகவும் அவதாரமாகவும் கற்பித்து வணங்க ஆரம்பித் பித்தார்கள் என்பது உனக்கு நினைவிருக்கலாம்.

புத்தரைப் போலவே ஏசுவும் தமக்குத் தெய்வத்தன்மை உண்டென்று கூறவில்லை. அவர் தம்மை அடிக்கடி 'தேவ குமாரன்' என்றும் 'மனுஷ குமாரன்' என்றும் அழைத்துக்கொண்டதால் அவர் தமக்கு அமானுஷிக மான தெய்வ சக்தி உண்டென்று சொல்லியிருக்கிறார் என்று கொள்ளுவது பொருந்தாது. ஆனால் தங்களிடையே தோன்றும் பெரியவர்களைத் தெய்வங்களாகச் செய்துவிடு வது மனிதரின் சுபாவம் போலும். அவ்வாறு அவர்களைத் தெய்வ நிலையில் ஏற்றிவிட்டு, அதுவே போதும் என்று திருப்தி அடைந்து அவர்கள் சொற்படி நடவாமல் இருந்து விடுகிறார்கள்! அறுநாறு ஆண்டுகளுக்குப் பிறகு முகம்மது நபி வேறொரு பெரிய மதத்தை ஆரம்பித்தார். ஆனால் இவற்றையெல்லாம் கண்டு பயன்பெற எண்ணிய அவர், தாம் வெறும் மனிதனே என்றும், தமக்குத் தெய்வத் தன்மை கிடையாதென்றும் தெளிவாகப் பலகாலும் கூறிவிட்டார்.

ஆகவே, ஏசுவின் மொழிகளை உணர்ந்து அவற்றின் படி ஒழுகுவதற்கு மாறாகக் கிறிஸ்தவர்கள் அவருடைய தெய்வத் தன்மையைப் பற்றியும், *மும்மூர்த்தி ஸ்வ ரூபத்தைப்பற்றியும் வீணான சொற்போர்களும் மற்போர் களும் நிகழ்த்தி வந்தார்கள். ஒரு கூட்டத்தார் மற்றொரு கூட்டத்தாரை நாஸ்திகர் என்று வைவதும், துன்புறுத்து வதும், தலைகளைக் கொய்வதும் சர்வ சாதாரணமாக இருந்தன. கிறிஸ்தவர்களிலேயே பல உட்பிரிவுகள் தோன்றின. அவர்களுக்குள், ஒரு சமயம் இரண்டு உயிரெழுத்துக்களின் சேர்க்கையாலான ஓர் அசையைப் *(Diphthong) பற்றிப் பெரிய கடுமையான வாதப் போர்

---

* தந்தை, திருக்குமாரன், பரிசுத்த ஆவி மூன்றும் ஒன்றாகி நிற்கும் கடவுள் நிலை.

* Dipthong யுக்ம ஸ்வரம்.

நிகழ்ந்தது. ஒரு கட்சியார் தொழுகையின்போது 'Homo-ousion' (கடவுள் தன்மை பெற்ற மனிதனை வந்தார் என்னும் பொருளில்) என்று சொல்லவேண்டும் என்றார்கள். இன்னொரு கட்சியார் 'Homoi-ousion' (கடவுள் தன்மை பெற்ற மனிதன் என்னும் பொருளில்) என்பதே சரி என்றார்கள். ஏசுவின் தெய்வத்தன்மையைக் குறித்த இவ்வேற்றுமையின் காரணமாக இரு கட்சியாருக்கும் கொடும்போர் மூண்டு அதில் பலர் கொல்லப்பட்டு இறந்தார்கள்.

சர்ச்சு (Church) அல்லது கிறிஸ்தவ மதஸ்தாபனத்தின் சக்தி அதிகரிக்க அதிகரிக்க இவ்விதமான உள் சண்டைகளும் நிகழலாயின. மேல் நாடுகளில் அந்நாளிலிருந்து சமீப காலம் வரையில் கிறிஸ்தவர்களில், பல மதப் பிரிவுகளைச் சேர்ந்தவர்கள் இவ்வாறு சண்டை போட்டு வந்திருக்கிறார்கள்.

கிறிஸ்தவ மதம் இங்கிலாந்துக்கும் மேற்கு ஐரோப்பாவுக்கும் செல்வதற்கு நெடுங்காலம் முன்னரே இந்தியாவுக்கு வந்துவிட்டதென்பதை அறிய ஆச்சரியப்படுவாய். அது இந்தியாவுக்கு வந்த காலத்தில் ரோமாபுரியில்கூடக் கிறிஸ்தவர்கள் வெறுத்து ஒதுக்கப்பட்டவர்களாக இருந்தார்கள். ஏசுகிறிஸ்து இறந்த ஒரு நூற்றாண்டுக்குள் கிறிஸ்தவப் பாதிரிமார்கள் கடல் வழியாகத் தென் இந்தியாவுக்கு வந்து சேர்ந்தார்கள். அவர்கள் அங்கு மரியாதையாக வரவேற்கப்பட்டுத் தங்கள் மதத்தைப் பிரசாரம் செய்யவும் அனுமதிக்கப்பட்டார்கள். அவர்கள் இந்தியர் பலரைத் தங்கள் மதத்துக்கு மாற்றினார்கள். அவ்வாறு மதம் மாறினவர்களின் பரம்பரையைச் சேர்ந்தவர்கள் நாளது வரையில் நம் நாட்டில் வாழ்ந்து வருகிறார்கள். இவர்களில் பெரும்பாலோர் பழங் கிறிஸ்தவ மதப் பிரிவுகளைச் சேர்ந்தவர்கள். இப்பிரிவுகள்

இன்று ஐரோப்பாவில்கூட இல்லை. இவர்களில் சில பிரி வினருடைய தலைமை ஸ்தலம் இப்போது சின்ன ஆசியா வில் இருக்கிறது.

இன்று அரசியல் துறையில் ஆட்சிபெற்று விளங்குவது கிறிஸ்தவ மதம்தான். ஏனெனில் இன்று பலரையும் அடக்கியாளும் ஐரோப்பியர்கள் இம்மதத் தைச் சேர்ந்தவர்களாக இருக்கிறார்கள். ஆனால் சமுதா யத்தை மாற்றி அமைக்க வேண்டுமென்று கிளர்ச்சி செய்தவரும் அஹிம்சையைப் போதித்தவருமான ஏசுநாதர் எங்கே! அவரைப் பின்பற்றுவதாக இன்று வாய்ப்பறை அறைந்துகொண்டு, மண்ணுக்கும் பொன்னுக்கும் ஆசைப் பட்டு ஏகாதிபத்தியங்களையும் யுத்தங்களையும் யுத்தத் தளவாடங்களையும் வளர்த்துவரும் இவர்கள் எங்கே! ஏசுநாதர் மலையின்மீது திருவாய்மலர்ந்தருளிய உபதேசத் தில் அடங்கிய தத்துவங்களுக்கும் இன்று ஐரோப்பா விலும் அமெரிக்காவிலும் நாம் காணும் கிறிஸ்தவ மதத்துக்கும் எவ்வளவு வியக்கத்தக்க வேற்றுமை! ஆகவே இன்று மேல்நாட்டுப் போலிக் கிறிஸ்தவர்களைவிட உண்மையில் ஏசுவைப் பின்பற்றி நடப்பவர் பாபுதான் என்று பலர் எண்ணுவதிலும் சொல்வதிலும் என்ன ஆச்சரியம் இருக்கிறது!

# 32

## ரோம சாம்ராஜ்யம்

ஏப்ரல் 23, 1932.

என் அன்பே, நான் உனக்குக் கடிதம் எழுதிப் பல நாட்களாயின. அலகாபாத்திலிருந்து வந்த செய்திகள் எனக்குக் கலக்கத்தையும் ஆவேசத்தையும் உண்டு பண்ணின. எல்லாவற்றிற்கும் மேலாக வயது முதிர்ந்த உன் பாட்டிக்கு நேர்ந்ததைக் கேட்க என் உள்ளமும் உடலும் துடித்துப் போய்விட்டன. சிறையில் நான் சௌக்கியமாக இருப்பது, தள்ளாத நிலையில் என் தாயார் போலீஸ்காரரிடம் தடியடி வாங்குவது, இதை நினைக்க நினைக்க என் மனம் பதறியது. ஆனால் என்னுடைய சிந்தனைகள் கதைப்போக்கைத் தடைசெய்யுமாறு நான் விடக்கூடாது.

மறுபடியும் ரோமாபுரிக்குச் செல்வோம். ரோமக் குடியரசு முடிவுற்று ரோம சாம்ராஜ்யம் எழுந்த வரலாற்றைக் கவனித்தோம். ஜூலியஸ் சீசரின் சுவீகாரப் புதல்வனாகிய ஆக்டேவியன் என்பவன் அகஸ்டஸ் சீசர் என்னும் பெயர் தாங்கி முதல் முதல் சிம்மாசனம் ஏறினான். அவன் தன்னை அரசன் என்று அழைத்துக் கொள்ளவில்லை. அதற்கு இரண்டு காரணங்கள் உண்டு. அரசன் என்னும் பட்டம் அவனுக்கு அவ்வளவு பெரிதாகத் தோன்றாதது ஒரு காரணம்; குடியரசின் வெளித் தோற்றங்களை வைத்திருக்க வேண்டுமென்று அவன் நினைத்தது மற்றொரு காரணம். ஆகவே அவன் தன்னை 'இம்பெரடர்' (Imperator) என்று அழைத்துக்கொண்

டான். இதன் பொருள் 'சேனாதிபதி' என்பதாகும். பிறகு இந்தப் பட்டமே மிகப் பெரிதாய் விளங்கியது. ஆங்கிலத்தில் 'சக்கரவர்த்தி' என்னும் பொருளுடைய 'எம்பரர்' (Emperor) என்னும் சொல்லும் இதனின்றும் பிறந்ததேயாகும். ஆகவே, ஆதி ரோம சாம்ராஜ்யம் இரண்டு வார்த்தைகளை - 'எம்பரர்' என்பது ஒன்று, சீசர் அல்லது கெய்சர் அல்லது ஜார் என்பது மற்றொன்று - உலகுக்கு அளித்தது. உலகத்தின் மன்னர்களெல்லாரும் இவற்றை நெடுங்காலம் வரையில் விரும்பித் தாங்கி வந்தார்கள். முதலில், உலகம் முழுமைக்கும் ஒரே ஒரு சக்கரவர்த்திதான் இருக்க முடியும் என்று எண்ணப்பட்டு வந்தது. ரோமாபுரி, 'புவியரசி' என்று அழைக்கப்பட்டு வந்தது. உலகம் முழுவதிலும் ரோமாபுரிக்கு ஈடும் எடுப்பும் இல்லை என்று மேனாட்டார் எண்ணியிருந்தார்கள். இது அவர்களுடைய பூகோள, சரித்திர ஞான சூனியத்தைக் காட்டுகிறதே ஒழிய வேறில்லை. ரோம சாம்ராஜ்யத்தை மத்திய தரைக்கடல் சாம்ராஜ்யம் என்றே சொல்ல வேண்டும். கிழக்கில் அது மெசபொடேமியாவுக்கு அப்பால் செல்லவே இல்லை. இந்தியாவிலும் சீனாவிலும் அப்போதைக்கப்போது ரோம சாம்ராஜ்யத்தைவிட விஸ்தீர்ணத்திலும், வல்லமையிலும், நாகரிகத்திலும் மிகுந்த சாம்ராஜ்யங்கள் இருந்திருக்கின்றன. ஆயினும் மேற்கு உலகத்தைப் பொறுத்த வரையில் ரோம சாம்ராஜ்யம் ஒன்றுதான் அவர்களுக்குத் தெரியும். ஆகவே அக்காலத்தவர்கள் அதை ஒரு விதமான உலக-சாம்ராஜ்யம் என்று மதித்து வந்தார்கள். அதற்கு இருந்த கௌரவம் இவ்வளவு என்று சொல்ல முடியாது.

ரோமாபுரியைப் பற்றிய அதியாச்சரியமான விஷயம் என்னவென்றால் மக்கள் மனத்தில் அதைப்பற்றி ஏற்பட்டிருந்த மனோபாவம்தான், அதாவது உலகம் முழுவதுக்கும்

தலைமைபூண்டு அதை ஆண்டு வருவது ரோமாபுரிதான் என்கிற எண்ணம். ரோமாபுரி வீழ்ச்சியுற்ற காலத்தி லும் இந்த மனோபாவம் அதற்குப் பலத்தைக் கொடுத்துக் காப்பாற்றியது. ரோமாபுரிக்கும் சாம்ராஜ்யத்துக்கும் சம் பந்தம் அற்றுப்போன காலத்திலுங்கூட, இந்தப் பாவனை மட்டிலும் நிலைபெற்றிருந்தது; சாம்ராஜ்யம் மறைந்து வெறும் தோற்றமாகப்போன காலத்திலும் இந்தப் பாவனை மக்கள் மனத்தில் வேரூன்றியிருந்தது.

ரோம சாம்ராஜ்யத்தைப் பற்றியும் அதற்குப் பின் வந்தவைகளைப் பற்றியும் எழுதுவது சற்றுக் கடினமாக இருக்கிறது. பல பழைய நூல்களைப் பெரும்பாலும் சிறையில் படித்தேன். அவற்றிலுள்ள செய்திகள் என் மதியில் கூடிக் குவிந்திருக்கின்றன. உனக்குச் சொல்ல எதைக் கொள்வது, எதைத் தள்ளுவது என்பதொன்றும் புரியவில்லை. நான் சிறைக்கு வந்திராவிட்டால் ரோம சரித்திர நூல்களில் மிகவும் பேர்போன ஒன்றைப் படிக்கும் சந்தர்ப்பம் வாய்த்திராது. அது மிகவும் பெரிய நூல். மற்ற வேலைகளுக்கிடையே அதைப் படித்து முடிக்க நேரம் கிடைப்பது அரிது. கிப்பன் (Gibbon) என்னும் ஆங்கில ஆசிரியர் இயற்றிய அந்நூலுக்கு 'ரோம சாம்ராஜ்யத்தின் சிதைவும் வீழ்ச்சியும்' (The Decline and fall of the Roman Empire) என்று பெயர். ஸ்விட்சர்லாந்தில் லெமன் ஏரியின் (Lac Leman) கரையில் சுமார் 150 ஆண்டுகளுக்கு முன் அது எழுதப் பட்டது. எடுப்பான நடையும், ஓசை நயமும் கொண்ட அவ்வற்புத நூலை இப்பொழுது படித்தாலும் அதனிடத் தில் ஒரு நாவலைவிட அதிகமான கவர்ச்சி எனக்கு ஏற்படு கிறது. பத்து வருஷங்களுக்கு முன்பு லக்ஷ்மணபுரி ஜில்லாச் சிறையில் நான் அதை வாசித்தேன். ஒரு மாதத் துக்கு மேலாக, கிப்பனுடன் தோழமை பூண்டு கடந்தகால

நிகழ்ச்சிகளைச் சித்திரிக்கும் அவருடைய எழுத்தோவியங்களில் மூழ்கிக் கிடந்தேன். கடைசிவரையில் படித்து முடிப்பதற்குமுன் நான் திடீரென்று விடுதலை செய்யப்பட்டேன். என்னைக் கவர்ந்த அவ்வின்பத்துக்குத் தடை ஏற்பட்டுவிட்டது. மீண்டும் புராதன ரோமாபுரியைப் பற்றியும் கான்ஸ்டாண்டிநோபிளைப் பற்றியும் படிப்பதற்கு என் மனம் ஓடவில்லை. ஆகவே அந்நூலில் படிக்காதுவிட்ட சுமார் நூறு பக்கங்களை இன்னும் படிக்காமலேயே இருக்கிறேன்.

இது நிகழ்ந்து பத்து ஆண்டுகள் ஆயின. நான் அப்போது படித்ததில் பெரும்பகுதியை இப்போது மறந்துவிட்டேன். ஆயினும், என் நினைவில் எஞ்சிநிற்கும் செய்திகளே என் மனத்தை நிறைத்துக் குழப்புவதற்குப் போதியவையாக இருக்கின்றன. இந்தக் குழப்பத்தை உனக்கும் உண்டுபண்ண நான் விரும்பவில்லை.

முதல் முதலில், பல நூற்றாண்டுகளாக வந்துகொண்டிருக்கும் ரோம சாம்ராஜ்யம் அல்லது சாம்ராஜ்யங்களை ஒரு பார்வை பார்ப்போம். பிறகு விவரங்களைச் சிறிது அறிய முயலலாம்.

கிறிஸ்து சகாப்தம் ஆரம்பிப்பதற்குச் சற்று முன்பு அகஸ்டஸ் சீசரைத் தலைவனாகக் கொண்டு ரோம சாம்ராஜ்யம் தோன்றுகிறது. சில காலம்வரையில் சக்கரவர்த்திகள் செனட் சபைக்குத் தலைவணங்கி நின்றார்கள். பிறகு வெகு சீக்கிரத்தில் குடியரசின் கடைசிச் சின்னங்களும் மறைந்து வருகின்றன. இப்போது சக்கரவர்த்தி சர்வவல்லவராகவும் யதேச்சாதிகாரியாகவும் அரசு செலுத்துகிறார். அவர் ஏறக்குறைய ஒரு தெய்வமாகவே பாவிக்கப்படுகிறார். சக்கரவர்த்தியின் வாழ்நாளில் அவர் அரைத் தெய்வமாக வணங்கப்படுகிறார். அவர் இறந்த பிறகு 'முழுத் தெய்வ'மாகிவிடுகிறார். அக்காலத்திய

நூலாசிரியர்கள் எல்லாரும் ரோம ஆதி சக்கரவர்த்திகளை சகல நற்குணங்களுக்கும் உறைவிடம் போன்றவர்கள் என்று கூறுகிருர்கள். முக்கியமாக அகஸ்டஸ் சீசரை அவர்கள் குணக்குன்று என்றே போற்றுகிருர்கள். அவனுடைய ராஜ்யத்தில் தருமம் தழைத்தோங்கியது என்றும், நல்லோர் நலம் பெற்றனரென்றும், தீயோர் ஒடுக்கப்பட்டனர் என்றும், அவன் காலம் 'பொற்கால'மாகத் திகழ்ந்ததென்றும், பலபடியாகப் புகழ்ந்து கூறுகிருர்கள். எதேச்சாதிகார நாடுகளில் அரசன் புகழைப் பாடுவதே புலவர்கள் தொழிலாக இருந்து வந்திருக்கிறது. அதனுல் அவர்களுக்கு நன்மை பிறக்கிறதல்லவா? லத்தீன் பாஷையில் மிகச் சிறந்த புலவர்களான வர்ஜில் (Virgil), ஓவீது (Ovid), ஹொரேஸ் (Horace) முதலானவர்கள் இக்காலத்தில்தான் வாழ்ந்துவந்தார்கள். அவர்கள் இயற்றிய நூல்களை நாம் பள்ளிக்கூடங்களில் படித்திருக்கிறோம். குடியரசின் அந்திய காலத்தில் உள்நாட்டுச் சண்டைகளும் தொந்தரவுகளும் மலிந்திருந்தன. அதன் பிறகு அகஸ்டஸ் காலத்தில் அமைதி நிலவி, வியாபாரமும் நாகரிகமும் செழித்தோங்கியபடியால் மக்கள் துன்பம் நீங்கி இன்பம் எய்தியிருத்தல்கூடும். ஆனுல் அந்த நாகரிகம் எத்தகையது? அதைப் பணக்காரர்களின் நாகரிகம் என்றே சொல்லவேண்டும். பண்டைய கிரீஸில் வாழ்ந்த பணக்காரர்களாவது கலைகளை ரஸிக்கும் தன்மையும் கூர்மதியும் கொண்டவர்களாக இருந்தார்கள். ஆனுல் மந்தமதி படைத்த ரோமாபுரிப் பணக்காரர்களோ, ஐம்புல நுகர்ச்சிகளிலும் வீண் கேளிக்கைகளிலும் தங்கள் பொழுதைக்கழிப்பதிலேயே கண்ணுயிருந்தார்கள். உலகின் பல பாகங்களிலிருந்தும் பலவகையான உணவுகளும், ஆடம்பரப் பொருள்களும் அவர்களுக்கு வந்து சேர்ந்தன. எப்போதும் வெளிப்பகட்டும் ஆரவாரமும்

மலிந்து கிடந்தன. தற்காலத்திலும் இத்தகைய கூட்டத்தார் இல்லாமற் போகவில்லை. கண்ணைப்பறிக்கும் ஊர்வலங்களும், ஆடம்பரமும், வெளிமயக்கும், வேடிக்கை விளையாட்டுக்களும், மல்லர்கள் போர்புரிந்து மடிவதும் மாறி மாறி வந்துகொண்டே இருந்தன. இத்தனை வெளியாரவாரங்களையும் ஊடுருவி நோக்கினால் இவைகளுக்குப் பின்னே பொதுமக்கள் துன்புற்று வாடுவதை நாம் காண முடியும். சாதாரண ஜனங்கள் வரிச்சுமை தாங்க மாட்டாமல் அவதியுற்றார்கள். கணக்கற்ற அடிமைகள் தங்கள் உடலை ஒடித்து ஓயாமல் உழைத்து வந்தார்கள். ரோமாபுரியில் இருந்த மேன்மக்கள், வைத்திய சாஸ்திரம், தத்துவ சாஸ்திரம் முதலான சாஸ்திர ஆராய்ச்சியைக் கூடக் கிரேக்க அடிமைகளிடம் விட்டுவிட்டார்கள்! உலகத்தையே கட்டி ஆளுகிறோம் என்று சொல்லிக் கொண்ட அவர்கள், உலகத்தைப்பற்றிய உண்மைகளை அறிவதற்கும், கல்வியைப் பரப்புவதற்கும் யாதொரு முயற்சியும் செய்யவில்லை.

சக்கரவர்த்திகள் ஒருவர் பின் ஒருவராக வந்து ஆண்டார்கள். சிலர் நல்லோராகவும் சிலர் தீயோராகவும் இருந்தார்கள். சிறிது சிறிதாகச் சேனையின் ஆதிக்கம் வளர்ந்து, சக்கரவர்த்திகளை ஆக்கவும் அழிக்கவும் வல்ல நிலைமைக்கு அது வந்துவிட்டது. ஆகவே சேனையின் தயவைப் பெறுவதற்காக அதற்கு லஞ்சம் கொடுக்கப்பட்டது. லஞ்சம் கொடுக்கப் பணத்திற்கு எங்கே போவது? ஏழை மக்களையும் ஜயிக்கப்பட்ட நாடுகளையும் கசக்கிப் பிழிந்து பணம் வசூலிக்கப்பட்டது. அடிமை விற்பனையிலிருந்து அரசாங்கத்துக்கு ஏராளமான பணம் கிடைத்தது. கீழைநாடுகளில் ரோம சைனியங்கள் அடிமை - வேட்டையாடி அடிமைகளைப் பிடித்தார்கள். அடிமை - வியாபாரிகள் அவர்களோடு சென்று அவ்விடங்

களிலேயே அடிமைகளை விலைக்கு வாங்கினர். பண்டைய கிரேக்கர்களுக்குப் புனிதமான டிலாஸ் (Delos) தீவு பெரிய அடிமைச் சந்தையாக விளங்கியது. அங்குச் சில சமயங்களில் ஒரே நாளில் பதினையிரம் அடிமைகள் விற்கப்படுவதும் உண்டு. ரோமாபுரியிலிருந்த பெரிய அரங்கத்தில் ஒரு சக்கரவர்த்தி ஒரே சமயத்தில் 1200 மல்லர்களைக் கொணர்வது வழக்கமாம். சக்கரவர்த்தியும் ஜனங்களும் கண்டு களிப்பதற்காக இம்மல்லர்கள் ஒருவரோடு ஒருவர் போரிட்டு மடியவேண்டும்.

சாம்ராஜ்ய காலத்தில் ரோம நாகரிகம் இவ்வாறு இருந்தது. அப்படியிருந்தும் நம் நண்பர் கிப்பன் எழுதுவதைப் பார். "உலகத்தின் சரித்திரத்தில் மனித ஜாதி மிகவும் செழிப்புற்று, மகிழ்வுற்று வாழ்ந்த காலம் எது என்று ஒருவனைக் கேட்டால், அவன், டாமிடியன் (Domitian) இறப்பதற்கும் கம்மோடஸ் (Commodus) சிம்மாசனம் ஏறுவதற்கும் இடையே கழிந்த காலம்தான் அத்தகைய காலம் என்று தயங்காமல் கூறுவான்" என்று அவர் சொல்லுகிருர். அதாவது கி. பி. 96-ஆம் ஆண்டுக்கும் கி. பி. 180-ஆம் ஆண்டுக்கும் இடையேயுள்ள 84 ஆண்டுகளை அவர் இவ்வாறு குறிப்பிட்டிருக்கிருர். கிப்பனின் கல்வியறிவை நாம் எவ்வளவுதான் போற்றிஞலும் அவர் கூறுவதை நம்மில் பெரும்பாலோர் ஒப்புக்கொள்ள மாட்டார்கள் என்று நினைக்கிறேன். அவர் மானிட ஜாதி என்று கூறும்போது மத்தியதரைக்கடலைச் சூழ்ந்த உலகத்தையே குறிக்கிருர். ஏனெனில் இந்தியாவைப் பற்றியாவது, சீனுவைப்பற்றியாவது, புராதன எகிப்தைப் பற்றியாவது அவர் சிறிதேனும் அறிந்திருந்தாரா என்பது சந்தேகத்துக்கு இடமான விஷயம்.

ரோமாபுரியைப் பற்றிச் சற்றுக் கடுமையாகவே பேசிவிட்டேன் என்று நினைக்கிறேன். ரோமானியரின்

ஆட்சிக்கு உட்பட்ட நாடுகளில் ஓரளவுக்கு அமைதி நிலவியது. அதை அக்காலத்து மக்கள் மகிழ்ச்சியுடன் வரவேற்றிருப்பார்கள் என்பதில் ஐயமில்லை. எல்லைப் புறங்களில் அடிக்கடி போர்கள் நிகழ்ந்துவந்தன. ஆனால் ரோம சாம்ராஜ்ய ஆரம்ப காலத்திலாவது முழு அமைதி நிலவியிருந்தது. இதை 'Pax Romana' அதாவது 'ரோம சாம்ராஜ்ய அமைதி' என்று அழைக்கிறார்கள். சொத்து சுதந்தரங்களுக்குப் பாதுகாப்பும் இருந்தது. அதனால் வியாபாரம் ஓங்கியது. ரோம ராஜ்யத்தில் வாழ்ந்த அனைவருக்கும் பிரஜா உரிமை இருந்தது. ஆனால் ஏழை அடிமைகளுக்கு இவ்வுரிமை கிடையாது. இன்னொன் றையும் நீ நினைவில் வைக்கவேண்டும். சக்கரவர்த்திக்குச் சகல அதிகாரங்களும் இருந்தன. பிரஜைகளுக்கு இருந்த உரிமைகள் மிகவும் குறைவானவைகளே. அரசியலைப் பற்றி விவாதிப்பதுகூடச் சக்கரவர்த்திக்கு விரோதமான துரோகச் செயல் என்று கருதப்பட்டது. உயர் வகுப் பினருக்கு ஒரே விதமான அரசநீதியும் ஆட்சியும் கிடைத்தன என்று சொல்லலாம். இதைவிடப் பெரிய கொடுங்கோன்மைகளின் கீழ் இருந்து கஷ்டப்பட்டவர் களுக்கு இதுவே பெரிய லாபமாகத் தோன்றியிருக்க வேண்டும்.

சிறிது சிறிதாக ரோமானியர்கள் தங்கள் சேனையில் சேர்ந்து போர்புரிவதற்கும் தகுதியற்ற சோம்பேறிகளாகி விட்டார்கள். வரிச்சுமை தாங்க முடியாமல் நாட்டி லிருந்த குடியானவர்களும் நகரத்தில் வாழ்ந்த ஜனங்களும் வறுமையுற்று வாடினர். ஆனால் சக்கரவர்த்திகள், நகர மாந்தர்களால் யாதொரு தொந்தரவும் ஏற்படாம லிருப்பதற்காக அவர்களை சந்தோஷப்படுத்த முயன்று வந்தனர். ஆகவே ரோமாபுரியில் வாழ்ந்த மக்களுக்கு ரொட்டி இலவசமாகக் கொடுக்கப்பட்டது. அவர்கள்

கண்டு களிப்பதற்கு இலவசச் சர்க்கார்ப் பந்தயங்களும் விளையாட்டுக்களும் நடத்தப்பட்டன. இவ்வாறு அவர்கள் தட்டிக் கொடுக்கப்பட்டார்கள். சில இடங்களில்தான் ரொட்டி முதலியவற்றை இலவசமாக வழங்க முடிந்தது. அதுவும், எகிப்து முதலான வேறு நாடுகளில் வாழ்ந்த ஏழை அடிமைகளைத் துன்புறுத்தி, அவர்களிடமிருந்து இலவசமாக மாவு பெற்று, ரோமாபுரியில் இருந்த ஒரு சிலருக்கு மட்டும் இலவசமாகக் கொடுத்து வந்தார்கள்.

ரோமானியர்கள் சேனையில் சேர விருப்பத்தோடு முன் வராததால் சாம்ராஜ்யத்துக்குப் புறம்பான நாடுகளிலிருந்து 'காட்டுமிராண்டிகள்' என்று கருதப்பட்டவர்கள் சேனையில் சேர்த்துக் கொள்ளப்பட்டனர். ஆகவே, ரோம சைனியத்தில் பெரும்பாலோர் ரோமாபுரியின் விரோதிகளான 'காட்டுமிராண்டி'களைச் சேர்ந்தோராகவும் அவர்களுக்கு உற்றோராகவும் விளங்கினர். எல்லைப்புறங்களில் இருந்த 'காட்டு மிராண்டி' ஜாதியார் சதா ரோமானியர்களைத் தாக்கி வளைத்துக் கொள்ள முயன்றுவந்தனர். ரோமானியர்களின் பலம் குறையக் குறைய இக்'காட்டுமிராண்டி'களின் பலமும் துணிச்சலும் அதிகரித்துவந்தன. கிழக்கில் அபாயம் மிகுந்து வந்தது. கிழக்கு எல்லை ரோமாபுரியிலிருந்து அதிக தூரத்திலிருந்த படியால் அதைக் காப்பாற்றுவதும் கடினமாக இருந்தது. அகஸ்டஸ் சீசருக்கு 300 ஆண்டுகளுக்குப் பிறகு, கான்ஸ்டண்டைன் என்னும் சக்கரவர்த்தி செய்த ஒரு பெரிய காரியத்தால் பல விளைவுகள் ஏற்பட்டன. சாம்ராஜ்யத்தின் தலைநகரையே அவன் ரோமாபுரியிலிருந்து கிழக்கே மாற்றிவிட்டான். மத்திய தரைக் கடலுக்கும் கருங்கடலுக்கும் இடையே உள்ள 'பாஸ்பரஸ்' (Bosphorus) ஜலசந்தியின் கரையில் 'பைஜாண்டியம்' (Byzantium) என்னும் பழைய நகருக்கு

அருகில் தன் பெயரால் 'கான்ஸ்டாண்டிநோபிள்' என்னும் புதிய நகரம் ஒன்றை அவன் நிர்மாணித்தான். கான்ஸ்டாண்டிநோபிள், புது ரோமாபுரி என்றும் அழைக்கப்பட்டது. அதுவே ரோம சாம்ராஜ்யத்தின் தலை நகராகவும் ராஜதானியாகவும் விளங்கியது. இன்றுகூட ஆசியாவின் பல பாகங்களில் கான்ஸ்டாண்டிநோபிள், ரோம் என்று வழங்கப்பட்டு வருகிறது.

# 33

## ரோமசாம்ராஜ்யம் சிதைவுற்று முடிவில் வெறுந்தோற்றமாதல்

ஏப்ரல் 24, 1932.

ரோம சாம்ராஜ்ய வரலாற்றைத் தொடர்ந்து கவனிப்போம். கி. பி. 326-ஆம் ஆண்டில் கான்ஸ்டண்டைன் பழைய பைஜாண்டியம் நகருக்கருகில் கான்ஸ்டாண்டிநோபிள் என்னும் நகரை நிருமித்தான். அவன் தன் சாம்ராஜ்யத்தின் தலைநகரைப் பழைய ரோமாபுரியிலிருந்து வெகு தொலைவில் பாஸ்பரஸ் ஜலசந்தியின் கரையிலுள்ள இப் புது ரோமாபுரிக்கு மாற்றினான். படத்தைப் பார்த்தால், கான்ஸ்டாண்டிநோபிள் நகரம் பிரம்மாண்டமான ஆசியா கண்டத்தை நோக்கிக்கொண்டு ஐரோப்பாவின் ஓர் ஓரத்தில் நிற்பது தெரியவரும். இரண்டு கண்டங்களையும் சேர்த்துவைக்கும் பிணைப்பைப்போல இருக்கிறது அது. பல பெரிய வியாபார மார்க்கங்கள் கடல்வழியாகவும் தரைவழியாகவும் அதன் மூலம் சென்றன. அது உள்ள இடம் ஒரு தலைநகரத்துக்கு மிகவும் ஏற்றதாக இருக்கிறது. கான்ஸ்டண்டைன் அவ்விடத்தைத் தேர்ந்தெடுத்தது மெச்சத் தக்கதே. ஆனால் அவனும் அவனுக்குப் பின் வந்தோர்களும் இதற்குத் தக்க பலனை அனுபவிக்கவேண்டி வந்தது. பழைய ரோமாபுரி சின்ன ஆசியாவுக்கும் கீழ்நாடுகளுக்கும் சற்று அதிகத் தொலைவில் இருந்ததுபோலவே புதிய தலைநகரம் கால், பிரிட்டன் போன்ற மேலை நாடுகளுக்குச் சற்று அதிகத் தொலைவில் இருந்தது.

இந்தச் சங்கடத்தை நிவர்த்திப்பதற்காகச் சிறிது காலம் இரு கூட்டுச் சக்கரவர்த்திகள், ஒருவர் ரோமாபுரியிலும், மற்றொருவர் கான்ஸ்டாண்டிநோபிளிலுமாக இருந்து ஆண்டுவந்தார்கள். இதனால் சாம்ராஜ்யம் கீழ்ப்பகுதி, மேற்பகுதி என்று இரண்டு பகுதிகளாகப் பிரிந்துபோயிற்று. ஆனால் ரோமாபுரியைத் தலைநகராகக் கொண்ட மேற்குச் சாம்ராஜ்யம் இம்மாறுதலால் விளைந்த அதிர்ச்சியைச் சமாளித்து நெடுங்காலம் நிற்க முடியவில்லை. 'காட்டுமிராண்டி'கள் என்று அது கருதிவந்தவர்களை அதனால் எதிர்த்துப் போரிட முடியவில்லை. காதியர் (Goths) என்னும் ஒரு ஜெர்மானிய ஜாதியார் ரோமாபுரியைக் கைப்பற்றிக் கொள்ளையடித்தார்கள். அவர்களுக்குப் பிறகு வாண்டலர் (Vandals), ஹூணர் (Huns) என்னும் ஜாதியார்கள் படையெடுத்துவந்தனர். இவற்றைத் தாங்கலாற்றாது மேற்குச் சாம்ராஜ்யம் வீழ்ச்சியுற்றது. ஹூணர் என்ற வார்த்தையை நீ அடிக்கடி கேட்டிருப்பாய். சென்ற மகாயுத்தத்தின்போது ஜெர்மானியர் மிகவும் கொடுமையாகவும் காட்டுமிராண்டித்தனமாகவும் நடந்துகொண்டதற்காக ஆங்கிலேயர்கள் அவர்களை இப்பெயரால் அழைத்துவந்தனர். ஆனால், உண்மையைக் கூறப்புகின், யுத்த காலத்தில் அநேகமாக ஒவ்வொருவனும் தன்னை மறந்துவிடுகிறான். நாகரிகம், நல்லொழுக்கம் எல்லாவற்றையும் காற்றில் பறக்க விட்டுவிட்டுக் குரூரமாக நடந்துகொள்ளுகிறான். ஜெர்மானியர் இவ்வாறு நடந்துகொண்டார்கள். ஆங்கிலேயரும் பிரெஞ்சுக்காரருங்கூட இவ்வாறே நடந்துகொண்டார்கள். இவ்வகையில் பார்த்தால் இவர்களுக்குள் வித்தியாசமே இல்லை.

'ஹூணர்' என்ற சொல் பெரிய வசைமொழியாகிவிட்டது. 'வாண்டலர்' என்ற சொல்லும் அப்படியே*.

* அரக்கன், அசுரன், ராக்ஷசன் என்னும் சொற்களைப்போல.

ஒருவேளை இந்த ஹூணர்களும் வாண்டலர்களும் ஈவிரக்க மற்ற சிந்தையராய்ப் பலவற்றை அழித்திருக்கலாம். ஆனால் அவர்களைப் பற்றிய வரலாறுகள் அவர்களுடைய விரோதிகளான ரோமானியரிடமிருந்தே நமக்குக் கிடைத்திருப்பவை என்பதை நாம் நினைவில் வைக்கவேண்டும். ரோமானியர்கள் நடுநோக்குடன் அவர்களைப்பற்றிக் கூறியிருப்பார்கள் என்று நாம் எதிர்பார்க்க முடியாது. எப்படியிருந்தாலும், காதியர், வாண்டலர், ஹூணர் ஆகியோர் மேற்கு ரோம சாம்ராஜ்யத்தைத் தாக்கிய மாத்திரத்தில் அது பொலபொலவென்று உதிர்ந்து விட்டது. அந்தச் சாம்ராஜ்யத்தின்கீழ் வாழ்ந்த ரோமானியக் குடியானவர்கள் வரிச்சுமையும் கடன்சுமையும் தாங்க மாட்டாமல் பெருந் துன்பத்தில் உழன்றுகொண்டிருந்தபடியால், எவ்விதமான மாறுதலையும் விரும்பி வரவேற்கும் நிலையில் இருந்தார்கள். இன்று தரித்திரத்திலும் கஷ்டத்திலும் வாழும் ஏழை இந்தியக் குடியானவன் எவ்வித மாறுதலையும் விரும்பி ஏற்றுக் கொள்வான் அல்லவா? அதுபோல, எதிரிகள் அவ்வளவு எளிதில் அந்தச் சாம்ராஜ்யத்தை வென்றதற்கு இது காரணமாக இருக்கலாம்.

இவ்வாறு மேற்கு ரோம சாம்ராஜ்யம் வீழ்ச்சியுற்றது. சில நூற்றாண்டுகளுக்குப் பிறகு அதுவே வேறொரு வடிவத்தில் மீண்டும் உயிர்பெற்று எழுந்தது. ஹூணர் முதலானோர் கிழக்குச் சாம்ராஜ்யத்தையும் தாக்கினார்கள். ஆனால் அது, சிரமப்பட்டாகிலும் அவர்களை எதிர்த்து நின்றது. அவர்களை எதிர்த்து நின்றது மட்டுமின்றி, அவர்களுக்குப் பிறகு அரேபியரோடும், அரேபியருக்குப் பிறகு துருக்கியரோடும் சதா போரிட்டுக்கொண்டே அது பல நூற்றாண்டுகள் நிலைபெற்றிருந்தது. 1100 ஆண்டுகள் அது நிலைபெற்றிருந்தது

பெரிதும் வியக்கத்தக்க ஒரு விஷயமாகும். கடைசியில் கி. பி. 1453-ஆம் ஆண்டில் உதுமானியத் துருக்கியர் (Ottoman Turks or Osmanlis) அதை வென்று கான்ஸ்டாண்டிநோபிளைக் கைப்பற்றிக் கொண்டனர். அந்நாளிலிருந்து இந்நாள் வரையில் ஏறக்குறைய 500 ஆண்டுகளாக கான்ஸ்டாண்டிநோபிள் துருக்கியர் வசமே இருந்து வருகிறது. அவர்கள் அதை இஸ்தாம்பூல், குஸ்துன் துனியா (Istanbul) என்று அழைக்கிறார்கள்; அதாவது உலகத்திற்கே சிறப்பாய் ஒளிர்வது என்று அர்த்தம். அங்கிருந்து அவர்கள் அடிக்கடி ஐரோப்பாவின் மீது படையெடுத்து வியன்னு (Vienna) வரையில் வந்தார்கள். பிற்பட்ட நூற்றாண்டுகளில் அவர்கள் சிறிது சிறிதாக அவ்விடங்களினின்றும் துரத்தப் பட்டனர். பன்னிரண்டு வருஷங்களுக்குமுன், சென்ற மகா யுத்தத்தில் தோற்ற பிறகு, அவர்கள் கான்ஸ்டாண்டி நோபிளை ஏறக்குறைய இழந்துவிட்டார்கள். இந்நகரம் ஆங்கிலேயரின்கீழ் இருந்தது. துருக்கி சுல்தான் ஆங்கிலே யரின் கைப்பொம்மையாக இருந்தார். ஆனால் துருக்கி யரிடையே ஒரு பெரிய தலைவர் தோன்றினார். அவர்தான் முஸ்தபா கமால் பாஷா. அவர் தம் நாட்டு மக்களை மீட்க வேண்டி வீரத்துடன் போராடினார்; வெற்றி பெற்றார். இன்று துருக்கி ஒரு குடியரசு நாடு. அங்கு சுல்தான் இல்லை. குடியரசின் தலைவர் கமால் பாஷாதான்.* முதலில் கிழக்கு ரோம சாம்ராஜ்யத்துக்கும் பிறகு துருக்கி சாம்ராஜ்யத்துக்கும் 1500 ஆண்டுகள் தலைநகராக விளங்கிய கான்ஸ்டாண்டிநோபிள் இன்று துருக்கி ராஜ்யத்தின் ஒரு பாகமாக இருக்கிறது. ஆனால் அது தலைநகராக இல்லை. துருக்கியர் அந்நகரின் சாம்ராஜ்ய சம்பந்தங்களை விட்டுத் தூர இருக்க விரும்புகின்றனர்.

* கமால் பாஷா 1939-ஆம் ஆண்டில் இறந்துவிட்டார்.

அதற்கு வெகு தொலைவில் சின்ன ஆசியாவிலுள்ள அங்காரா (Ankara)வை அவர்கள் தங்கள் தலைநகராகக் கொண்டிருக்கிறார்கள்.

ஏறக்குறைய 2000 வருஷ சரித்திரத்தை நாம் மிகவும் விரைவாகப் பார்த்து வந்தோம். கான்ஸ்டாண்டிநோபிள் நிர்மாணிக்கப்பட்டதையும், ரோம சாம்ராஜ்யத்தின் தலைநகர் அப்புதிய நகருக்கு மாற்றப்பட்டதையும் பார்த்தோம். கான்ஸ்டண்டைன் இன்னொரு புதிய காரியத்தையும் செய்தான். அவன் கிறிஸ்தவ மதத்தைத் தழுவிக் கிறிஸ்தவனாகி விட்டான். அவன் சக்கரவர்த்தியாக இருந்தபடியால் சாம்ராஜ்யம் முழுவதிலும் கிறிஸ்தவ மதமே அரசாள்வோர் மதமாக இருந்தது. அடக்கு முறைக்கு ஆளான மதமாகிய கிறிஸ்தவ மதம் திடீரென்று சாம்ராஜ்ய மதமாக மாறியது அக்காலத்தில் பெரிய ஆச்சரியமாகக் கருதப்பட்டிருக்க வேண்டும். இந்த மாறுதல் சில காலம் வரையில் அதற்கு நன்மை பயக்கவில்லை. வேறுபட்ட பல பிரிவுகளைச் சேர்ந்த கிறிஸ்தவர்கள் ஒருவரோடொருவர் சண்டை போட்டுக்கொள்ள ஆரம்பித்தனர். கடைசியில், சேர்க்க முடியாதபடி இரண்டு பெரும் பிரிவுகள் ஏற்பட்டன. ஒன்று லத்தீன் பிரிவு. இன்னொன்று கிரேக்கப் பிரிவு. லத்தீன் பிரிவுக்கு ரோமாபுரி தலைமை ஸ்தானமாக விளங்கியது. ரோமாபுரியின் பிஷப் அதாவது மதகுரு (Bishop) அதன் தலைவராக விளங்கினார். பிற்காலத்தில் இம் மதகுருவே ரோமாபுரியின் போப்பாண்டவராக (Pope of Rome) மாறினார். கிரேக்கப் பிரிவுக்கு கான்ஸ்டாண்டிநோபிள் தலைநகராக விளங்கியது. லத்தீன் மதஸ்தாபனம் வடக்கு, மேற்கு ஐரோப்பா முழுவதும் பரவியது. அதற்கு ரோமன் கத்தோலிக்க மத ஸ்தாபனம் (Roman Catholic Church) என்று பெயராயிற்று. கிரேக்க மத

ஸ்தாபனத்துக்கு வைதிக மத ஸ்தாபனம் (Orthodox Church) என்று பெயர் வழங்கலாயிற்று. கிழக்கு ரோம சாம்ராஜ்யம் வீழ்ச்சியுற்ற பிறகு, முக்கியமாக ருஷியா தேசத்தில்தான் இந்த வைதிக மத ஸ்தாபனம் தழைத் தோங்கியது. இன்று ருஷியா போல்ஷிவிக்கர்களின் ஆளுகையில் இருப்பதால் இந்த மத ஸ்தாபனத்துக் காயினும் அல்லது வேறு எந்த மத ஸ்தாபனத்துக்கா யினும் அங்கு அரசாங்கச் செல்வாக்குக் கிடையாது.

கான்ஸ்டாண்டிநோபிளைத் தலைநகராகக் கொண்ட சாம்ராஜ்யத்தை நான் 'கிழக்கு ரோம சாம்ராஜ்யம்' என்று குறிப்பிட்டு வந்திருக்கிறேன். ஆனால் இந்தச் சாம்ராஜ்யத்துக்கும் ரோமாபுரிக்கும் யாதொரு சம்பந்த மும் இல்லை. இச் சாம்ராஜ்யத்தில் வழங்கிய பாஷையும் கிரேக்க பாஷையே; லத்தீன் அல்ல. ஒருவகையில் இதை அலெக்சாந்தர் ஸ்தாபித்த கிரேக்க சாம் ராஜ்யத்தின் தொடர்ச்சி என்றுகூடச் சொல்லலாம். மேற்கு ஐரோப்பாவைச் சேர்ந்த நாடுகள் சுதந்தரமாக இருக்கும் உரிமையை இது நெடுங்காலம் ஒப்புக்கொள்ளா விட்டாலும் இதற்கும் மேற்கு ஐரோப்பாவுக்கும் அதிக சம்பந்தம் இல்லையென்றே சொல்ல வேண்டும். அப்படி யிருந்தும் கிழக்கு சாம்ராஜ்யம், ரோம சாம்ராஜ்யம் என்றே அழைக்கப்பட்டது; ஜனங்களும் ரோமானியர்கள் என்றே அழைக்கப்பட்டார்கள். இவ்வாறு விடாமல் கெட்டியாகப் பிடித்துக்கொள்ள அந்த 'ரோம்' என்னும் வார்த்தையில் என்ன மாய மந்திரம் இருந்ததோ தெரிய வில்லை. இதைவிடப் பெரிய ஆச்சரியம் என்னவென்றால், ரோமாபுரி சாம்ராஜ்யத்தின் தலைமை ஸ்தானத்தை இழந்த பிறகுங்கூட அதன் கௌரவம் போகவில்லை. அந்நகரை ஜெயிக்கவந்த 'காட்டுமிராண்டி'களுங்கூட அதற்கு மரியாதையும் வணக்கமும் செலுத்தினார்கள்.

என்னே ஒரு பெயருக்கு உள்ள சக்தி! என்னே எண்ணங்களுக்கு உள்ள சக்தி!

சாம்ராஜ்யத்தை இழந்த ரோமாபுரி வேறுவகையான புதிய சாம்ராஜ்யம் ஒன்றை ஸ்தாபிக்க ஆரம்பித்தது. ஏசுவின் சீடரான பேதுரு (Peter) என்பவர் ரோமாபுரிக்குவந்து அங்கே முதல் மதகுருவாக இருந்ததாக ஒரு வரலாறு வழங்கிவந்தது. இதனால் ரோமாபுரி விசேஷ பரிசுத்தம் வாய்ந்ததென்று பல கிறிஸ்தவர்களால் கருதப்பட்டது. ரோமாபுரி மதகுருவின் பீடத்துக்கும் ஒரு தனி மகிமை ஏற்பட்டது. ஆரம்பத்தில் ரோமாபுரி மதகுருவுக்கும் மற்ற மதகுருக்களுக்கும் அதிக வித்தியாசம் இல்லை. ஆனால் ரோமானியச் சக்கரவர்த்தி தன் தலைநகரை கான்ஸ்டாண்டிநோபிளுக்கு மாற்றிக்கொண்ட பிறகு ரோம் மதகுருவின் பெருமை வரவர வளர்ந்து வந்தது. அவரிலும் மிக்கவர்கள் அப்போது ஒருவரும் இல்லை. மேலும் பேதுரு வீற்றிருந்த ஸ்தானத்தில் வீற்றிருப்பவராதலின் அவர் மதகுருக்கள் எல்லாருக்கும் தலைவராகக் கருதப்பட்டார். பிறகு அவர் போப்பாண்டவர் (Pope) என்று அழைக்கப்பட்டார். ரோமன் கத்தோலிக்க மத ஸ்தாபனத்தின் தலைவர்களாகப் போப்பாண்டவர்கள் இன்றும் இருந்து வருவது உனக்குத் தெரிந்த விஷயமே.

ரோமன் கத்தோலிக்க மத ஸ்தாபனத்துக்கும் கிரேக்க வைதிக மத ஸ்தாபனத்துக்கும் பிரிவினை ஏற்பட்டதற்கான காரணங்களில் விக்கிரக ஆராதனையும் ஒன்றாக இருந்தது என்பதை அறிய நமக்கு ஆச்சரியம் உண்டாகிறது. மதப் பெரியோர் (Saints)களின் விக்கிரகங்களையும் முக்கியமாக ஏசுவின் அன்னையான மரியம்மை (Mary) யின் விக்கிரகத்தையும் வணங்கும் வழக்கத்தை ரோமன் மத ஸ்தாபனம் ஆதரித்து

வளர்த்தது. வைதிக மத ஸ்தாபனம் இதைப் பலமாக ஆட்சேபித்தது.

வட ஐரோப்பாவில் வாழ்ந்துவந்த ஜாதியாரின் தலைவர்களால் ரோமாபுரி பல தலைமுறைகளாக ஆளப்பட்டு வந்தது. ஆனால் அவர்களும் அநேகமாக கான்ஸ்டாண்டிநோபிளில் இருந்த சக்கரவர்த்திக்குக் கீழ்ப்படிந்தே ஆண்டுவந்தார்கள். இதற்கிடையே ரோமாபுரி மதகுருவின் ஆதிக்கம் அதிகரித்து வந்தது. கடைசியில் அவர் சக்கரவர்த்திக்கு அடங்கி நடக்க மறுத்து விட்டார். விக்கிரக ஆராதனையைப் பற்றிய தகராறு எழுந்தபோது போப்பாண்டவர் ரோமாபுரிக்கும் கிழக்கு சாம்ராஜ்யத்துக்கும் இருந்த தொடர்பை அடியோடு அறுத்துவிடத் தீர்மானித்தார். இதற்கிடையில் நிகழ்ந்த வேறு பல நிகழ்ச்சிகளைப்பற்றி நாம் பிறகு கூற வேண்டியிருக்கும்.

அரேபியா தேசத்திலே இஸ்லாம் மதம் என்று ஒரு புதிய மதம் தோன்றியிருந்தது. அரேபியர் வடஆப்பிரிக்காவையும் ஸ்பெயினையும் ஜெயித்துவிட்டு ஐரோப்பாவின் மத்திய பிரதேசத்தைத் தாக்கிக் கொண்டிருந்தனர். வட ஐரோப்பாவிலும், மேற்கு ஐரோப்பாவிலும் புது ராஜ்யங்கள் ஏற்படுத்தப்பட்டு வந்தன. அரேபியர் கிழக்கு சாம்ராஜ்யத்தைக் கடுமையாகத் தாக்கிக் கொண்டிருந்தனர்.

வட ஐரோப்பாவில் வாழ்ந்த ஜெர்மானிய ஜாதியாராகிய பிராங்கர் (Franks) களின் தலைவன் ஒருவனுடைய உதவியைப் போப்பாண்டவர் நாடினார். இதற்குப் பிறகு பிராங்கர்களின் தலைவனாகிய கார்ல் அல்லது சார்லஸ் (Karl or Charles) என்பவன் ரோமாபுரியின் சக்கரவர்த்தியாக முடி சூட்டப்பட்டான். இது ஒரு புதிய சாம்ராஜ்யம். ஆனால் அவர்கள் இதையும் "ரோம சாம்ராஜ்யம்" என்றே அழைத்தார்கள். பிறகு

இதையே "பரிசுத்த ரோம சாம்ராஜ்யம்" என்று சொன்னார்கள். 'ரோம்' என்னும் அடைமொழி இல்லாத ஒரு சாம்ராஜ்யம் இருக்கக்கூடும் என்று அவர்களால் நினைக்க முடியவில்லை. சார்லமேனுக்கும் (Charlemagne) —அவன் மகா சார்லஸ் என்றும் அழைக்கப்பட்டான்— ரோமாபுரிக்கும் அதிக சம்பந்தம் இல்லாவிட்டாலும் அவனுக்கு 'இம்பெரடர்', 'சீசர்', 'அகஸ்டஸ்' என்னும் பட்டப் பெயர்கள் வழங்கலாயின. புது சாம்ராஜ்யம் பழைய சாம்ராஜ்யத்தின் தொடர்ச்சி என்றே கருதப் பட்டது. ஆனால் அதன் பெயர் நீண்டுவிட்டது. அது 'பரிசுத்த'மாகி விட்டது. அது போப்பாண்டவரின் ஆசீர்வாதத்தைப் பெற்ற ஒரு கிறிஸ்தவ சாம்ராஜ்யமாக இருந்தபடியால் பரிசுத்தமானது என்று கருதப்பட்டது

மறுபடியும் மனோபாவனைகளுக்குள்ள விசித்திரமான சக்தியை நாம் காண்கிறோம். மத்திய ஐரோப்பாவில் வசிக்கும் ஒரு பிராங்க்கன் அல்லது ஜெர்மானியன் ரோம சக்கரவர்த்தியாகி விடுகிறான்! இந்தப் 'பரிசுத்த' சாம் ராஜ்யத்தின் வருங்காலச் சரித்திரம் இன்னும் விசித்திரமா யிருக்கிறது. ஒரு சாம்ராஜ்யம் என்ற முறையில் அது வெறும் தோற்றமாக முடிந்துவிட்டது. கான்ஸ்டாண்டி நோபிளில் இருந்த கிழக்கு ரோம சாம்ராஜ்யம் தொடர்ந்து தன் அரசாங்கத்தை நடத்திக் கொண்டிருக்க, இந்த மேற்கு சாம்ராஜ்யம் மாறுதலடைவதும், மறை வதும், மீண்டும் மீண்டும் தோன்றுவதுமாக இருந்து வந்தது. இதை ஸ்தூலமான ஒன்று என்று சொல்வதற் கில்லை; சூட்சும சாம்ராஜ்யம் என்றே சொல்ல வேண்டும். இது வெறுங் கற்பனை, பொய்த் தோற்றம். ரோமாபுரி யின் பெயருக்கு இருந்த கௌரவத்தினாலும், கிறிஸ்தவ மத ஸ்தாபனத்துக்கு இருந்த செல்வாக்கினாலும் இது பெயரளவில் இருந்து வந்தது. யாரோ ஒருவர்—வால்டேர்

(Voltaire) என்று நினைக்கிறேன்—'பரிசுத்த ரோம சாம்ராஜ்யம்' என்பதற்கு வியாக்கியானம் சொல்ல ஆரம்பித்து அதில் பரிசுத்தமும் இல்லை, ரோமனும் இல்லை, சாம்ராஜ்யமும் இல்லை என்று கூறினாராம்! யாரோ ஒருவர் 'இந்தியன் சிவில் சர்வீசு' (Indian Civil Service) என்பதற்கு அதில் இந்தியரும் இல்லை, 'சிவில்' (அமைதி) ஆகவும் இல்லை, 'சர்வீசு' (சேவை)ம் செய்யவில்லை என்று சொன்னதுபோல! துரதிருஷ்டவசமாக அந்த 'இந்தியன் சிவில் சர்வீசி'ன் கீழ் நாம் இன்றும் கஷ்டப்பட்டுக்கொண் டிருக்கிறோம்.

இந்த மாயமான 'பரிசுத்த ரோம சாம்ராஜ்யம்' பெயரளவிலாவது ஏறக்குறைய 1000 ஆண்டுகள் இருந்தது. சுமார் 100 ஆண்டுகளுக்குமுன் நெப்போலியன் காலத்தில்தான் இது கடைசியாக முற்றுப் பெற்றது. திடீரென்று ஆச்சரியப்படத்தக்க விதத்தில் இதற்கு முடிவு நேரவில்லை. இது முடிந்துவிட்டது என்றுகூட யாரும் அவ்வளவாக உணர்ந்திருக்கமாட்டார்கள். ஏனெனில் இது உண்மையில் நிலவி நெடுங்காலமாயிற்று. ஆனால் கடைசியாக இதன் மாயத் தோற்றம் அழிக்கப்பட்டது; முடிவாக அழிக்கப்பட்டு விட்டது என்று சொல்ல முடியாது. ஏனெனில் இதுவே 'கெய்சர்' என்றும் 'ஜார்' என்றும் வேறு பல ரூபங்களைத் தாங்கி மீண்டும் உலவத் தொடங்கியது. ஆனால் பதினான்கு ஆண்டுகளுக்குமுன் முடிந்த மகா யுத்தத்தில் இவைகள் பெரும்பாலும் பூமிக்கடியில் புதைக்கப்பட்டு விட்டன என்று சொல்லலாம்.

## 34

# உலகத்தை ஒரு சமுதாயமாக்கும் எண்ணம்

ஏப்ரல் 25, 1932.

இந்தக் கடிதங்கள் உனக்குக் களைப்பையும் குழப்பத்தையும் உண்டாக்குமென்று அஞ்சுகிறேன். முக்கியமாக, ரோம சாம்ராஜ்யத்தைப் பற்றிக் கூறும் இதற்கு முந்திய இரண்டு கடிதங்களும் உன் பொறுமையைச் சோதித்திருக்கும் என்று நினைக்கிறேன். ஆயிரக்கணக்கான ஆண்டுகளில், ஒன்றுக்கொன்று ஆயிரக்கணக்கான மைல் தூரத்தில் இருக்கும் பல இடங்களில் நிகழ்ந்த வரலாறுகளை முன்னும் பின்னுமாகச் சொல்லி உன் மூளையைக் குழப்பிவிட்டேன். ஆனால் இதற்காக நீ கவலைப்பட வேண்டாம். பேசாமல் படித்துக் கொண்டு போ. எங்காவது நான் சொல்வது புரியாவிட்டாலும் விசாரப்படாமல் படித்துக்கொண்டே போ. உனக்குச் சரித்திரத்தை முறையாகப் போதிக்க வேண்டும் என்னும் எண்ணத்துடன் நான் இக்கடிதங்களை எழுதவில்லை. அங்கங்கே வரும் சரித்திரக் காட்சிகளைக் (Glimpses) காட்டி உன் ஆவலையும் ஆசையையும் தூண்டுவதற்காகவே இவைகளை எழுதி வருகிறேன்.

ரோம சாம்ராஜ்யங்களைப் பற்றிய வரலாறுகள் உனக்கு அலுப்பைத் தந்திருக்குமென்று நினைக்கிறேன். எனக்கென்னமோ அவை அலுப்பைத் தருகின்றன. ஆனால் இன்றுமட்டும் அவைகளைப்பற்றி இன்னும் சிறிது தெரிந்துகொண்டு சிலகாலம் வரையில் அவைகளிடமிருந்து விடைபெற்றுக் கொள்ளுவோம்.

தேசீயம், தேசபக்தி என்றெல்லாம் இந்நாளில் பெரிதும் பேசப்படுவது உனக்குத் தெரியும். அதாவது ஒருவன் தான் பிறந்த நாட்டின்மீது அன்பு செலுத்துவது. இந்தியாவில் நம்மில் பெரும்பாலோர் இன்று தீவிர தேசீயவாதிகளாயிருக்கிறோம். இந்தத் 'தேசீய'மானது சரித்திரத்தில் ஒரு புதிய விஷயம். அது எவ்வாறு பிறந்தது, வளர்ந்தது என்பதை இக்கடிதங்களில் நாம் ஒருவாறு தெரிந்து கொள்ளலாம். ரோம சாம்ராஜ்யங்கள் தழைத்தோங்கிய காலத்தில் இத்தகைய தேசீய உணர்ச்சி என்பதே யாருக்கும் இல்லை. சாம்ராஜ்யம் என்பது உலகத்தை ஆளும் ஒரு பெரிய அரசாங்கம் என்று கருதப் பட்டு வந்தது. உலகம் முழுவதையும் கட்டி ஆண்ட சாம் ராஜ்யமோ, அரசாங்கமோ எக்காலத்தும் இருந்ததில்லை. ஆனால் பழைய காலத்து மக்கள் அத்தகைய அரசாங்கம் ஒன்று இருந்ததாக எண்ணி வந்தார்கள். அதற்குக் காரணம் பூகோள சாஸ்திர ஞானக் குறைவும், உலகின் ஒரு மூலையிலிருந்து மற்றொரு மூலைக்குப் போவதில் இருந்த கஷ்டமும்தான். ஐரோப்பாவிலும் மத்தியதரைக் கடலைச் சுற்றியுள்ள பிரதேசத்திலும், ரோமானிய அர சாங்கமானது, சாம்ராஜ்யமாவதற்கு முன்பே மற்ற அர சாங்கங்களுக்கு மேற்பட்ட ஓர் அரசாங்கம் என்று (Super-State) கருதப்பட்டது. சின்ன ஆசியாவிலிருந்த கிரேக்க ராஜ்யமாகிய பெர்கமம், எகிப்து முதலான நாடுகளை ஆண்டவர்கள் தாங்களே வலுவில் சென்று ரோமானியர் களுக்குத் தங்கள் நாடுகளைத் தானமாக வழங்கினார்கள் என்றால், ரோம்-அரசாங்கத்துக்கு இருந்த கௌரவத் தைப் பற்றியும், மகத்துவத்தைப் பற்றியும் நான் அதிகம் சொல்ல வேண்டியதில்லை. ரோமாபுரி எவராலும் எதிர்க்க முடியாத சர்வ வல்லமை வாய்ந்தது என்று அவர்கள் கருதினார்கள். ஆயினும், ரோமாபுரி குடி

யரசாக இருந்த காலத்திலும் சரி, சாம்ராஜ்யமாக இருந்த காலத்திலும் சரி, மத்தியதரைக்கடல் நாடுகளுக்கு அப்பால் அதன் ஆட்சி செல்லவில்லை. வட ஐரோப்பாவில் வாழ்ந்த காட்டுமிராண்டிகள் அதற்கு அடங்கிப் போகவில்லை. அதுவும் அவர்களைப்பற்றி அதிகம் கவலை கொள்ளவில்லை. ரோமாபுரியின் ஆக்ஞா சக்கரம் சுழன்ற எல்லையின் அளவு எத்தகையதாயிருப்பினும் அது ஓர் உலக-அரசாங்கம் (World-State) என்கிற எண்ணம் அதற்குப் பின்னே இருந்தது. இவ்வெண்ணத்தை அந் நாளிலே மேல்நாடுகளில் வாழ்ந்த மக்களில் பெரும் பாலோர் ஒப்புக்கொண்டிருந்தனர். ரோம சாம்ராஜ்யங்கள் நெடுங்காலம் நிலைபெற்றிருந்ததற்குக் காரணம் இது தான். அவைகள் உயிரற்ற வெறுந் தோற்றமாக மாறிய காலத்திலும் அவைகளுக்கிருந்த பேரும் பிரதாபமும் பிரமாதமாக இருந்தன.

உலகம் முழுவதையும் ஒரு குடை நிழலில் ஆளுவது என்கிற எண்ணம் ரோமாபுரிக்கு மட்டும் உரியது என்று சொல்வதற்கில்லை. பண்டைய சீனாவிலும் இந்தியாவிலும் இதையே காண்கிறோம். காஸ்பியன் கடல் வரையில் பரவியிருந்த சீன ராஜ்யம் ரோம சாம்ராஜ்யத்தைவிடப் பெரிதாக இருந்ததென்றே சொல்ல வேண்டும். சீன சக்கரவர்த்தி "தெய்வ குமாரன்" (Son of Heaven) என்று அழைக்கப்பட்டார். அவர் உலகம் முழுவதிலும் ஒரு தனிச் செங்கோல் செலுத்தும் ஏக சக்கராதிபதி (Universal Sovereign) என்றே கருதப்பட்டார். பல ஜாதியாரும் ஜனங்களும் அச்சக்கரவர்த்திக்குக் கீழ்ப் படாமல் தொந்தரவு கொடுத்து வந்தது வாஸ்தவமே. ஆனால் அவர்கள் எல்லாரும் 'காட்டுமிராண்டிகள்' என்று அழைக்கப்பட்டனர். ரோமானியர்கள் வட ஐரோப்பிய ஜாதியாரை அழைத்தது போல.

இவ்விதமே, இந்தியாவிலும் ஆதிகாலத்திலிருந்து "ஒரு நாயகமாய் ஓர் உலகுடன் ஆண்ட'வர்களென்று கருதப்படும் சக்கரவர்த்திகளைப் பற்றிக் கேள்விப்பட்டு வருகிறோம். 'உலகத்'தைப்பற்றி அவர்கள் அறிந்திருந்தது மிகவும் குறைவு என்றே கூற வேண்டும். இந்தியா பெரிய நாடாகையால் அதுவே அவர்களுக்கு உலகமாகத் தோன்றிற்று. இந்தியா முழுவதையும் ஒரு குடைநிழலில் ஆளுவதையே அவர்கள் உலகம் பூராவையும் ஆளுவதென்று கருதினார்கள். வெளியிலிருந்த மற்றவர்களை இவர்களும் 'காட்டுமிராண்டிகள்' அல்லது 'மிலேச்சர்கள்' என்று அழைத்தார்கள். கதையில் வருகிற பரதன் நம் தேசத்தில் அத்தகைய ஏகசக்ராதிபத்தியம் செலுத்தினான் என்று கருதப்படுகிறது. அவன் பெயரால்தான் நம் தேசம் பாரதவர்ஷம் என்று அழைக்கப்படுகிறது. தருமராஜாவும் அவருடைய தம்பிமாரும் இந்த உலக-ஏகசக்ராதிபத்தியத்துக்காகத்தான் போரிட்டார்கள் என்று மகாபாரதம் கூறுகிறது. திக்குவிஜயம் செய்து பகைவர்கள் எல்லாரையும் வென்று செய்யும் அசுவமேத யாகமும் இந்த உலக ஆதிபத்தியத்தின் அடையாளமாகவே விளங்கியது. அசோகருக்கும் முதலில் இந்த எண்ணம் இருந்திருக்கலாம். ஆனால் பிறகு அவர் இரக்க மிகுதியால் போர் செய்வது அறவே கூடாது என்று நீக்கிவிட்டார். அசோகருக்குப்பின் இந்தியாவை ஆண்ட குப்தர்களைப் போன்ற சக்கரவர்த்திகள் இதே எண்ணம் கொண்டிருந்தார்கள் என்று அறிகிறோம்.

இவ்வாறு பண்டைய காலத்தில் வாழ்ந்த மக்கள் உலக-சக்கரவர்த்திகள், உலக-அரசாங்கம் என்று இப்படியெல்லாம் எண்ணி வந்தார்கள் என்று தெரிகிறது. இதற்கு நெடுங்காலத்துக்குப் பிறகு தேசியமும், ஒரு புது விதமான ஏகாதிபத்தியக் கொள்கையும் (Imperialism)

தோன்றின. அவைகளால் உலகில் வேண்டிய அனர்த்தங்கள் விளைந்திருக்கின்றன. மறுபடியும் ஓர் உலக-அரசாங்கம் ஏற்படுத்த வேண்டுமென்று பேசப்பட்டு வருகிறது. உலக-அரசாங்கம் என்றால் ஒரு பெரிய சாம்ராஜ்யம், உலகம் முழுவதையும் ஆளும் ஓர் ஏக சக்ரவர்த்தி என்றெல்லாம் அல்ல. ஒருவிதமான உலக-குடியரசை ஸ்தாபிக்க வேண்டும். இப்புதிய ஏற்பாட்டின்படி ஒரு தேசம் மற்றொரு தேசத்தையும், ஒரு சமூகம் மற்றொரு சமூகத்தையும், ஒரு வர்க்கம் மற்றொரு வர்க்கத்தையும் சுரண்டிப் பிழைக்கும் கேவலமான வாழ்க்கை ஒழிய வேண்டும். இந்நோக்கம் சமீபத்தில் நிறைவேறுமா, நிறைவேறாதா என்று சொல்வது கடினம். ஆனால் இவ்வுலகத்தின் இன்னல்களுக்கும் நோய்களுக்கும் வேறு மாற்றோ, மருந்தோ இருப்பதாகத் தெரியவில்லை.

வட ஐரோப்பாவில் வாழ்ந்த 'காட்டுமிராண்டி'களைப் பற்றிப் பலதடவை சொல்லியிருக்கிறேன். நான் அந்த வார்த்தையை உபயோகித்ததற்குக் காரணம் ரோமானியர்கள் அவர்களை அந்தப் பெயரால்அழைத்ததேயாகும். அவர்களும், மத்திய ஆசியாவில் வாழ்ந்த நாடோடி ஜாதியார்களைப் போல, ரோமாபுரியிலும் இந்தியாவிலும் வாழ்ந்த மக்களைவிட நாகரிகத்தில் தாழ்ந்தவர்களாகவே இருந்தார்கள். அவர்கள் திறந்த வெளிகளில் வசித்துவந்தபடியால் அதிக உரனும் உறுதியும் வாய்ந்து விளங்கினர். பிறகு அவர்கள் கிறிஸ்தவர்கள் ஆனார்கள். ரோமாபுரியை அவர்கள் ஜெயித்து ஆண்ட காலத்திலும் இரக்கமற்றவர்களாக நடந்து கொள்ளவில்லை. வட ஐரோப்பாவில் தற்காலம் இருக்கும் தேசங்களில் வாழ்வோர் இக் 'காட்டுமிராண்டி'களின், அதாவது காதியர், பிராங்கர் முதலானோரின் கால்வழியில் வந்தவர்களேயாவர்.

ரோம் சக்கரவர்த்திகள் எல்லாருடைய பெயரையும் நான் உனக்குச் சொல்லவில்லை. அவர்கள் மிகப் பலர். அவர்களில் சிலரைத்தவிர மற்றெல்லோரும் தீயோராகவே இருந்தனர். சிலரைக் கொடிய ராக்ஷசர்கள் என்றே கூறவேண்டும். * நீரோ (Nero) என்பவனைப் பற்றி நீ கேள்விப்பட்டிருப்பாய். அவனை விடக் கொடியவர் எத்தனையோ பேர் இருந்தனர். ஐரீன் (Irene) என்ெருரு மாது, தான் சக்கரவர்த்தினி ஆவதற்காகச் சக்கரவர்த்தியாக இருந்த தன் மகனையே கொன்று விட்டாளாம். இது கான்ஸ்டாண்டிநோபிளில் நிகழ்ந்தது.

ரோம் சக்கரவர்த்திகள் யாவரினும் ஒருவர் தலைசிறந்து விளங்குகிறார். அவரது திருநாமம் மார்க்க அரேலிய அந்தோணியார் (Marcus Aurelius Antoninus). என்பது. அவர் பெரிய தத்துவஞானி என்று கருதப்படுகிறார். அவரது ஆத்ம சிந்தனைகளைக் கொண்ட நூலொன்று யாவரும் படித்துப் பயனடையத்தக்கதாயிருக்கிறது. ** மார்க்க அரேலியருடைய உயர்வுக்கு ஈடு செய்யக் கருதியோ என்னவோ அவருக்குப்பின் பட்டத்துக்கு வந்த அவருடைய மகன் ரோமாபுரியின் கொடுங்கோல் மன்னர்களில் ஒருவனாக இருந்தான்.

ரோம சாம்ராஜ்யத்தின் முதல் 300 ஆண்டுகளில் ரோமாபுரி மேற்கு உலகத்தின் கேந்திர ஸ்தானமாக விளங்கியது. அது மாடமாளிகைகளும் கூடகோபுரங்களும் நிறைந்த பெரிய நகரமாக இருந்திருக்க வேண்டும். சாம்ராஜ்யத்தின் சகல பாகங்களிலிருந்தும், அதற்கு

---

* இவன் ரோமாபுரி தீப்பற்றி எரிந்தபோது பிடில் வாசித்துக் கொண்டிருந்தானும்.

** இது 'மார்க்க அரேலியர் ஆத்மசிந்தனை' என்னும் பெயருடன் ஸ்ரீ. சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார் அவர்களால் தமிழில் மொழி பெயர்க்கப்பட்டிருக்கிறது.

அப்பாலிருந்துங்கூட அளவற்றபேர் அங்கு சென்றிருக்க வேண்டும். வெளி நாடுகளிலிருந்து மதுரமான உண்டி வகைகளும் வேறு பல விலையுயர்ந்த பொருட்களும் எண்ணற்ற கப்பல்களில் அங்கு வந்து இறங்கின. ஒவ்வொரு வருஷமும் 120 கப்பல்கள் செங்கடலிலிருந்த ஓர் எகிப்தியத் துறைமுகத்திலிருந்து புறப்பட்டு இந்தியாவுக்குப் போயினவாம். பருவக்காற்று அடிக்கும் காலத்தில் அவைகள் புறப்படுவது வழக்கமாயிருந்தபடியால் காற்று அவைகளுக்குப் பெரிதும் துணைபுரிந்தது. அவைகள் தென் இந்தியாவுக்குச் சென்று அங்குள்ள அரிய பொருள்களை ஏற்றிக்கொண்டு மீண்டும் காற்றின் உதவியால் எகிப்துக்குத் திரும்பின. எகிப்திலிருந்து தரை மார்க்கமாகவும் கடல் மார்க்கமாகவும் அவ்வரிய பொருள்கள் ரோமாபுரிக்கு அனுப்பப்பட்டன.

இந்த வியாபாரத்தால் செல்வந்தர்களுக்குத்தான் அதிக லாபம் கிடைத்தது. சிலருடைய ஆடம்பர வாழ்க்கைக்குப் பின்னால் பலருடைய துன்பவாழ்க்கை மறைந்து நின்றது. 300 வருஷகாலம் ரோமாபுரி மேற்கில் ஒப்பு, உயர்வு அற்று விளங்கிற்று. அதற்குப் பிறகு கான்ஸ்டாண்டிநோபிள் அதற்கு ஒப்பாக விளங்கியது. இந்த மிக நீண்ட காலத்தில் ரோமாபுரி அறிவுத்துறையில் பிரமாதமாக ஒன்றையும் சாதிக்கவில்லை என்பதைக் காண நாம் வியப்படைகிறோம். இதற்கு மாறாக புராதன கிரீஸ் மிகக் குறுகிய காலத்தில் எவ்வளவோ சாதித்திருப்பதைக் காண்கிறோம். உண்மையில், ரோமானிய நாகரிகம் பல விதத்திலும் கிரேக்க நாகரிகத்தின் மங்கலான தோற்றம் என்றே தோன்றுகிறது. ஒரு துறையில் ரோமானியர்கள், எல்லாருக்கும் பெரிய வழிகாட்டியாக இருந்தனர் என்று கருதப்படுகிறது. இத்துறைதான் சட்டம். இன்றுகூட மேல் நாடுகளில் வக்கீல்கள் ரோமானியச் சட்டம்

(Roman Law) கற்றுத் தீரவேண்டும். ஏனெனில் அதுவே ஐரோப்பாவில் வழங்கும் சட்டங்களுக்குப் பெரும்பாலும் மூலகாரணமாகவும் அஸ்திவாரமாகவும் இருப்பதாகக் கருதப்படுகிறது.

ஆங்கிலேயர்கள் அடிக்கடி தங்களுடைய பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தை ரோம சாம்ராஜ்யத்தோடு ஒப்பிட்டுப் பேசுவது வழக்கம். இதில் அவர்களுக்குப் பரமதிருப்தி. எல்லாச் சாம்ராஜ்யங்களும் ஏறக்குறைய ஒரே தன்மை கொண்டவைதான். பலரையும் சுரண்டிக் கொழுப்பது தான் அவைகளுடைய தொழில். ரோமானியருக்கும் ஆங்கிலேயருக்கும் இன்னொரு விதத்திலும் அதிக ஒற்றுமை இருக்கிறது. இரண்டு பேருக்கும் கற்பனைசக்தி (Imagination) என்பது கிஞ்சிற்றும் கிடையாது. உலகம் முழுமையும் தங்களுடைய நன்மைக்காகவே படைக்கப்பட்டிருக்கிறது என்னும் எண்ணத்தோடு, தங்களுக்குள்ளேயே பரமதிருப்தி அடைந்தவர்களாய், நிர்விசாரமாக இவர்கள் தங்களுடைய வாழ்க்கையைச் செலுத்திக்கொண்டு போகிறார்கள்!

# 35

## பார்த்தியாவும் சசநீதரும்

ஏப்ரல் 26, 1932.

ரோம சாம்ராஜ்யத்தையும் ஐரோப்பாவையும் விடுத்துச் சிலகாலம் உலகின் மற்றப் பாகங்களுக்குச் சென்றுவருவோம். நாம் ஆசியாவில் என்ன நடந்ததென்று பார்க்கவேண்டும். இந்தியா, சீனு இவற்றின் கதையையும் தொடர்ந்து கவனிக்கவேண்டும். இப்போது வேறு சில தேசங்களும் சரித்திரவானில் தோன்றுகின்றன. அவைகளைப்பற்றியும் தெரிந்துகொள்ள வேண்டும். போகப் போகப் பல இடங்களைப்பற்றியும் நான் கூறவேண்டிய செய்திகள் அளவுக்கு மீறிப் பெருகுமாதலால், அவற்றைச் சொல்லும் திறன் இன்றி என் கடையைக் கட்டிவிட நேருமோ என்று கூட நான் அஞ்சுகிறேன்.

எனது கடிதங்கள் ஒன்றில், பார்த்தியாவில் கரே (Carrhae) என்னும் இடத்தில் ரோமானியக் குடியரசின் சேனைகள் தோல்வி யுற்றதைப்பற்றிக் கூறி யிருக்கிறேன். பார்த்தியர்களைப் பற்றியும் அவர்கள் இன்று பாரசீகமும் மெசபொடேமியாவும் உள்ள இடத்தில் எவ்வாறு ஒரு ராஜ்யம் கண்டார்கள் என்பதைப் பற்றியும் நான் உனக்கு அப்போது சொல்லவில்லை. அலெக்சாந்தரின் மரணத்துக்குப் பிறகு அவனுடைய சேனுதிபதி செலூகசும் (Seleucus) அவன் வழி வந்தோரும் இந்தியாவிலிருந்து சின்ன ஆசியா வரையில் வியாபித்திருந்த ஒரு சாம்ராஜ்யத்தை ஆண்டார்கள் என்பது உனக்கு நினைவிருக்கும். சுமார் 300 ஆண்டுகள் வரையில் அவர்

களுடைய ஆட்சிநடந்தது. அதன்பிறகு மத்திய ஆசியாவி லிருந்து கிளம்பிவந்த பார்த்தியர் என்னும் ஒரு ஜாதியார் அவர்களை ஓட்டிவிட்டார்கள். இந்தப் பார்த்தியர்கள் தான் ரோமானியக் குடியரசின் அந்திய காலத்தில் அதன் படைகளைப் பாரசீகத்தில் அல்லது பார்த்தியாவில் முறி யடித்து வெற்றிகொண்டவர்கள். அக்குடியரசுக்குப் பின் வந்த சாம்ராஜ்யமும் இவர்களை முற்றும் வெல்ல இயலாது போயிற்று. இவர்கள் 250 ஆண்டுகள் பார்த்தியாவை ஆண்டார்கள். அதன்பிறகு ஏற்பட்ட உள்நாட்டுப் புரட்சி காரணமாக இவர்கள் அரசாட்சியினின்றும் ஓட்டப்பட்டார்கள். பாரசீகர்களே தங்களை ஆண்டு வந்த இவ்வந்நியருக்கு விரோதமாகக் கிளம்பி இவர்களை ஓட்டிவிட்டு இவர்களுடைய இடத்தில் தங்கள் வகுப் பையும் மதத்தையும் சேர்ந்த ஒருவனை அரசனாக நியமித் தார்கள். இவன் முதலாவது அர்தெஷர் (Ardeshir I) என்று அழைக்கப்படுகிறான். இவனுடைய வமிசம் சசனீத வமிசம் (Sassanid Dynasty) என்று அழைக்கப் படுகிறது. அர்தெஷர் ஜாரதுஷ்டிர மதத்தைத் தீவிர மாக ஆதரித்தான். இதுவே பார்சிகளுடைய மதம் என்பது உனக்கு நினைவிருக்கலாம். அவனுக்குப் பிற மதத்துவேஷம் அதிகம். சசனீதர்களுக்கும் ரோம சாம் ராஜ்யத்துக்கும் சதா போர் நிகழ்ந்து வந்தது. அவர்கள் ஒரு ரோமானியச் சக்கரவர்த்தியைக் கூடச் சிறைப்படுத்தி னார்கள்; பல தடவை அவர்களுடைய சேனைகள் கான்ஸ்டாண்டிநோபிளுக்கு அருகில் வந்திருக்கின்றன. அவர்கள் எகிப்தையும் ஒரு சமயம் வென்றார்கள். சசனீத சாம்ராஜ்யம் ஜாரதுஷ்டிர மத ஆவேசத்துக்குப் பேர் போனது. கி. பி. ஏழாவது நூற்றாண்டில் இஸ்லாம் மதம் வந்து சசனீத சாம்ராஜ்யம், ஜாரதுஷ்டிர மதம் இரண் டுக்கும் முற்றுப்புள்ளி வைத்துவிட்டது. இம்மாறுதல்

காரணமாகத் தாங்கள் துன்புறுத்தப்படலாம் என்று அஞ்சிப் பல ஜாரதுஷ்டிர மதத்தினர் இந்தியாவுக்கு வந்து விட்டார்கள். அடைக்கலம் என்று சொல்லித் தன்னை நாடிவரும் எல்லோரையும் 'அஞ்சல்' என்று ஏற்றுக்கொள்ளும் இந்தியாவானது இவர்களையும் அவ்வாறே ஏற்றுக்கொண்டது. இன்று இந்தியாவில் வாழும் பார்சிகள் இவர்களுடைய சந்ததியாரே ஆவர்.

பிற மதத்தினரை நடத்தும் விஷயத்தில் மற்ற நாடுகளையும் இந்தியாவையும் ஒப்பிட்டுப் பார்க்கும்போது நமக்குப் பேராச்சரியம் உண்டாகிறது. கடந்த காலத்தில் அநேகமாக எல்லா இடங்களிலும், முக்கியமாக ஐரோப்பாவில், அரசாள்வோர் மதத்தை (Official faith) ஒப்புக்கொள்ளாதவர்களிடம் காட்டிய துவேஷமும் அவர்களைப் படுத்தியபாடும் இவ்வளவு அவ்வளவு என்று சொல்ல முடியாது.

அரசாள்வோர் மதத்தை ஒப்புக் கொள்ளுமாறு அனைவரும் பலாத்காரமாக வற்புறுத்தப்பட்டனர். ஐரோப்பாவில் மத விசாரணை சபையார் (Inquisition) நடத்திய கொடுஞ்செயல்களைப்பற்றியும், சூனியக்காரிகள் (Witches) என்று அழைக்கப்பட்டோரை உயிரோடு எரிக்கும் வழக்கத்தைப்பற்றியும் நீ வாசித்திருப்பாய். இதற்கு மாறாக இந்தியாவில் ஆதிகாலத்தில் நாம் மதத் துவேஷம் என்பதையே காணமுடியவில்லை. இங்கு, ஹிந்துமதத்துக்கும் பௌத்த மதத்துக்கும் விளைந்த பூசலோடு மேல்நாடுகளில் மதவாதிகள் விளைத்த பயங்கரப் போர்களை ஒப்பு நோக்கினால், ஒன்று கடுகத்தனை அளவாகவும் மற்றொன்று மலையத்தனை அளவாகவும் காணப்படுகின்றன. இதை இப்போது நினைவில் வைத்துக் கொள்ள வேண்டியது மிகவும் அவசியம். ஏனெனில் இங்கே சமீபகாலத்தில் துரதிர்ஷ்டவசமாகச் சில மதச்

சண்டைகளும் வகுப்புப்பூசல்களும் நிகழ்ந்து வருகிறபடியால்,அதைப்பார்க்கும் சரித்திரம் அறியாத சிலர் காலாகாலமாக இந்தியாவின் தலைவிதி இவ்வாறே இருந்து வந்திருக்கிறது என்று எண்ணிவிடுகிறார்கள். இது முற்றிலும் தவறாகும். இந்தச் சண்டைகள் சமீபகாலத்தில் வளர்ச்சியுற்றவைகளே. இஸ்லாம் மதம் ஏற்பட்ட பிறகு பல நூற்றாண்டுகள் வரையில் முஸ்லீம்கள் இந்தியாவின் பல பாகங்களிலும் தங்கள் அண்டை அயலாரோடு சகோதரபாவத்துடன் சமாதானமாகவே வாழ்ந்து வந்ததை நாம் காண்கிறோம். முஸ்லீம்கள் வியாபாரிகளாக முதல் முதல் வந்தகாலத்தில் அவர்களைப் பிரியத்துடன் வரவேற்று அவர்களுக்குத் தக்க இடமும் கொடுத்தது இந்நாடு. இதெல்லாம் பின்னர் சொல்ல வேண்டிய விஷயம்.

கி. பி. முதல் நூற்றாண்டில் கொடுமை தாங்க மாட்டாமல் ரோமாபுரியிலிருந்து ஓடிவந்து தன்னிடம் சரண்புகுந்த யூதர் பலருக்கும் அபயதானம் வழங்கிக் காப்பாற்றியது போல இப்பொழுது ஜாரதுஷ்டிர மதத்தினருக்கும் இந்தியா நல்வரவேற்பு அளித்தது.

பாரசீகத்தில் சசனீதர் ஆட்சி நடைபெற்று வந்த காலத்தில் சிரியாவின் (Syria) பாலைவெளிகளில் பல்மைரா (Palmyra) என்றொரு சிறு ராஜ்யம் சில காலம் தழைத்தோங்கி நின்றது. சிரியாவின் பாலைவன மத்தியில் சிறந்ததொரு வியாபார ஸ்தலமாக அது விளங்கியது. இன்று அவ்விடத்தில்காணப்படும் அழிவுகளைப் பார்க்கும் பொழுது அக்காலத்தில் அங்கு வானளாவிய பெரியபெரிய மாளிகைகள் இருந்திருக்கவேண்டும் என்று தோன்றுகிறது. ஒரு காலத்தில் ஜெனோபியா (Zenobia) என்னும் பெண்மணி அந்த ராஜ்யத்தை ஆண்டுவந்தாள். ஆனால் ரோமானியர்கள் அவளைப் போரில் வென்று பெண்

என்றும் பாராமல் சங்கிலிகளால் பிணித்து ரோமா புரிக்குக் கொண்டு சென்றனர்.

கிறிஸ்து சகாப்த ஆரம்பத்தில் சிரியா நல்வளம் பல கொழிக்கும் நாடாக இருந்தது. இதைப்பற்றிப் புதிய ஏற்பாடு நமக்குச் சொல்லுகிறது. அதிக ஜனத்தொகை கொண்ட பெரிய நகரங்கள் அங்கு இருந்தனவாம். ஆனால் அங்குச் செவ்விதான ஆட்சி நடைபெறவில்லை; கொடுங் கோன்மை அதிகமாயிருந்தது. அப்படியிருந்தும் நீர்ப் பாசனத்துக்காகப் பெரிய பெரிய கால்வாய்கள் வெட்டப் பட்டிருந்தன என்றும், வியாபாரம் மிகவும் பெருகியிருந்த தென்றும் தெரிகிறது. ஆனால் தொடர்ச்சியான போராட்டமும், நடுநிலை கோடிய ஆட்சி முறையும் அதை 600 ஆண்டுகளில் வெறும் வனாந்தரமாக்கிவிட்டது. பெரிய பட்டணங்களைவிட்டு மக்கள் வேறு இடங்களுக்குச் சென்றனர்; அங்கிருந்த பழைய கட்டிடங்களும் அழிந்து போயின.

இந்தியாவிலிருந்து ஐரோப்பாவுக்கு ஆகாய விமானத்தில் சென்றால் வழியில் பல்மைராவிலும், பால்பக் (Baalbak) கிலும் உள்ள இவ்வழிவுகளை நீ காணலாம். பாபிலோன் (Babylon) இருந்த இடத்தையும், ஒரு காலத்தில் சரித்திரப் பிரசித்தி பெற்று விளங்கி இப்போது இல்லாதொழிந்த வேறு பல இடங்களையும் நீ காண்பாய்.

# 36

## தென் இந்தியாவின் வெளிநாட்டுக் குடியேற்றம்

ஏப்ரல் 28, 1932.

நெடுந்தூரம் அலைந்து திரிந்துவிட்டோம். மீண்டும் இந்தியாவுக்குத் திரும்பி, நமது மூதாதையர் என்னசெய்து வந்தனர் என்பதைக் கவனிப்போம். எல்லைப்புற சாம்ராஜ்யமாகிய குஷாண சாம்ராஜ்யத்தை நீ மறந்திருக்க முடியாது. வட இந்தியா முழுவதிலும் மத்திய ஆசியாவில் ஒரு பாகத்திலும் வியாபித்திருந்த அப் பெரிய பௌத்த சாம்ராஜ்யத்துக்குப் புருஷபுரம் அல்லது பெஷாவர் தலைநகராக விளங்கியது. ஏறக்குறைய இதே காலத்தில் மேற்கடலிலிருந்து கீழ்கடல் வரையில் பரவியிருந்த ஆந்திர ராஜ்யத்தையும் நீ மறந்திருக்க மாட்டாய். சுமார் 300 ஆண்டுகள் வரையில் குஷாணர்களும் ஆந்திரர்களும் ஓங்கிநின்றனர். கி. பி. மூன்ருவது நூற்ருண்டின் இடையில் இவ்விரண்டு சாம்ராஜ்யங்களும் முடிவு பெற்றன. அதற்குப் பிறகு சில காலம் இந்தியாவில் பல சிறு ராஜ்யங்கள் தோன்றிவிளங்கின. மறுபடியும் 100 ஆண்டுகளுக்குள் இன்னொரு சந்திரகுப்தன் பாடலிபுரத்தில் தோன்றி, ஹிந்து சாம்ராஜ்யத்தைப் பலாத்காரமாகப் பரப்பத் தொடங்கினுன். ஆனல் குப்தர்கள் எனப்படுவோரைப்பற்றி ஆராயுமுன் தென் இந்தியாவுக்குச் சென்று அங்கு நிகழ்ந்த பெருமுயற்சிகளைப் பற்றிக் கவனிப்போம். இம் முயற்சிகள் காரணமாக இந்தியக் கலையும், நாகரிகமும் கிழக்கே நெடுந்

தொலைவிலுள்ள தீவுகளுக்கெல்லாம் கொண்டு போகப் பட்டன.

வடக்கில் இமயமலை, கிழக்கிலும் மேற்கிலும் கடல், இவைகளுக்கு மத்தியில் அமைந்துகிடக்கும் இந்திய தேசத்தின் உருவத்தை நீ நன்கு அறிவாய். இதன் வட பாகம் கடலுக்கு வெகுதூரத்தில் இருக்கிறது. தரை வழியாக அடுத்த நாடுகளிலிருந்து படையெடுத்து வந்த விரோதிகளை எதிர்த்து நிற்பதே அதன் முக்கிய வேலையா யிருந்து வந்தது. ஆனால் இந்தியாவின் கிழக்கிலும், மேற்கிலும், தெற்கிலும் மிக நீளமான கடற்கரை அமைந்துகிடக்கிறது. தெற்கே போகப் போகக் குறுகிச் சென்று, இறுதியில் கிழக்கும் மேற்கும் கன்யாகுமரியில் கலந்து உறவாடுகின்றன.* கடலுக்கு அருகில்வாழும் ஜனங்கள் 'திரைகடலோடுவதில்' தீரர்களாயிருப்பார்கள் என்று நாம் எதிர்பார்ப்பது இயற்கையே. மிகப் பழைய காலத்திலிருந்தே தென் இந்தியா மேல்நாடுகளோடு நடத்திவந்த வியாபாரப் பெருமையைப்பற்றிக் கூறி யிருக்கிறேன். ஆகவே ஆதிகாலத்திலிருந்தே இந்தியாவில் கப்பல்கட்டும் தொழில் பிரபலமாயிருந்ததும், மக்கள் வியாபார நோக்கத்துடனும் வேறுபல நோக்கங்களுடனும் கடல்கடந்து சென்றதும் ஆச்சரியப்படத்தக்க விஷயங்க ளல்ல. கௌதமபுத்தர் வாழ்ந்த காலத்தில் விஜயன் (Vijaya) என்பான் இந்தியாவி லிருந்து சென்று இலங்கையை வென்றதாகச் சொல்லப்படுகிறது. அஜந்தாக் குகைகளில், விஜயன் யானைகளையும் குதிரைகளையும் கப்பல்களில் ஏற்றிக்கொண்டு இலங்கைக்குச் செல்வதைக்

---

* வடக்கில் இமயமலை - பாப்பா - தெற்கில் - வாழும் குமரி
[முனை பாப்பா
கிடக்கும் பெரிய கடல்கண்டாய் - இதன் - கிழக்கிலும் மேற்கிலும்
[பாப்பா. பாரதியார்.

காட்டும் சித்திரம் ஒன்று இருக்கிறது என்று நினைக்கிறேன். விஜயன் இலங்கைக்குச் "சிங்களத்தீவு" என்னும் பெயரை அளித்தான். சிங்களம் என்னும் சொல் 'சிங்கம்' என்ற சொல்லிலிருந்து பிறந்ததாகும். சிங்கத்தைப்பற்றிய பழையகதை ஒன்று இலங்கையில் இன்றும் வழங்கி வருகிறது. எனக்கு அது ஞாபகம் இல்லை. 'சிலோன்' என்னும் ஆங்கிலப் பெயரும் 'சிங்களம்' என்பதிலிருந்தே பிறந்திருக்கலாம் என்று நினைக்கிறேன்.

மிகவும் குறுகலான கடலைக் கடந்து தென் இந்தியாவிலிருந்து இலங்கைக்குச் சென்றது அவ்வளவு பெரிய காரியமல்ல. ஆனால் அக்காலத்தில் கப்பல்கட்டும் தொழில் சர்வசாதாரணமாக இருந்தது என்பதற்கும், வங்காளத்திலிருந்து குஜராத்வரையில் நீண்டுகிடக்கும் கடற்கரையின் பல துறைமுகப்பட்டினங்களி லிருந்தும் மக்கள் வெளிநாடுகளுக்குக் கப்பல்களில் சென்றார்கள் என்பதற்கும் பல சான்றுகள் இருக்கின்றன. சந்திரகுப்த மௌரியனுக்கு மந்திரியாயிருந்த அமைச்சர் திலகரான சாணக்கியர் தமது அர்த்த சாஸ்திரத்தில் கடற்படையைப் பற்றிக் கூறியிருக்கிறார்.

சந்திரகுப்தனின் ராஜசபையில் வீற்றிருந்த கிரேக்க தூதரான மெகஸ்தனிஸ் என்பவரும் இதைப்பற்றிக் குறிப்பிட்டிருக்கிறார். இதனால் மௌரிய சாம்ராஜ்யத்தின் ஆரம்பகாலத்திலேயே இந்தியாவில் கப்பல் கட்டும் தொழில் வளர்ந்தோங்கி நின்றது என்பது தெரிய வருகிறது. கப்பல்களை அழகுக்காகவா கட்டியிருப்பார்கள்? ஒருக்காலும் இல்லை. ஆகவே பலர் கப்பல் ஏறிக் கடல் கடந்து பிறநாடுகளுக்குச் சென்றிருக்க வேண்டும். இதையும், இக்காலத்தில் சிலர் கடல்கடந்து செல்ல அஞ்சுவதையும், அது நமது மதத்துக்கு விரோதம் என்று சொல்வதையும் பார்த்தால் நமக்கு ஆச்சரியம் உண்டா

கிறது. இவர்களை நாம் பழைமைப் பித்தர்கள் (Relics of the past) என்று அழைக்க முடியாது. ஏனெனில் அந்தக் காலத்தில் மிகச் சிறந்த புத்திமான்களாக விளங்கிய நம்மவர்களை அது மிகவும் குறைவுபடுத்துவதாகும். அதிர்ஷ்டவசமாக இத்தகைய விசித்திர எண்ணங்கள் இப்போது பெரும்பாலும் மறைந்து விட்டன என்று சொல்லலாம். இவைகளைப் பின்பற்றுவோரும் அதிகமாக இல்லை.

வட இந்தியாவைவிடத் தென் இந்தியா கடலோடு அதிக உறவு கொண்டாடியது; வெளிநாட்டு வியாபாரம் பெரும்பாலும் தென் இந்தியாவுடன்தான் நடைபெற்று வந்தது. பழந்தமிழ்ப் பாடல்களிலே 'யவனர்'களைப் பற்றிய குறிப்புகள்* மிகுந்து காணப்படுகின்றன. யவன தேசத்து மதுவகைகள், பூந்தாழிகள், அணிவிளக்குகள் முதலியவற்றைப்பற்றித் தமிழ் நூல்கள் கூறுகின்றன. 'யவனர்' என்ற சொல் முதலில் முக்கியமாகக் கிரேக்கர்களைக் குறித்து நின்றது. பிறகு அந்நிய நாட்டவர் அனைவருக்கும் அப்பெயர் பொதுவாக வழங்கலாயிற்று. கி. பி. இரண்டாவது, மூன்றாவது நூற்றாண்டுகளைச் சேர்ந்த ஆந்திர நாணயங்களில், இரண்டு பாய்மரங்களையுடைய கப்பல் முத்திரை காணப்படுகிறது. இதிலிருந்து புராதன ஆந்திரர்கள் கப்பல்கட்டுவதிலும், கடல், வியாபாரத்திலும் எவ்வளவு தூரம் முன்னேறியிருந்தார்கள் என்பது தெரிகிறது.

---

* "மகத வினைஞரும் மராட்டக் கம்மரும்
அவந்திக் கொல்லரும் **யவனத்** தச்சரும்
தண்டமிழ் வினைஞர் தம்மொடு கூடிக்
கொண்டினி தியற்றிய ... பசும்பொன் மண்டபம்"

—**மணிமேகலை**

"கடிமதில் வாயில் காவலில் சிறந்த
கடல்வாள் **யவனர்**" —**சிலப்பதிகாரம்**

ஆகவே, கிழக்குத் தீவுகளில் இந்தியக் குடியேற்றங்கள் ஏற்படுவதற்குக் காரணமாக இருந்த பெரு முயற்சியில் தென் இந்தியாவே வழிகாட்டியாக இருந்தது. வெளிநாடுகளில் குடியேறும் நோக்கத்துடன் பலர் புறப்பட்டுச் சென்றார்கள். இது கி. பி. முதல் நூற்றாண்டில் ஆரம்பித்துப் பல நூற்றாண்டுகள் வரையில் தொடர்ச்சியாக நடைபெற்று வந்தது. மலாய் நாட்டுக்கும் கம்போடியாவுக்கும், ஜாவா, சுமத்திரா, போர்னியோ முதலான தீவுகளுக்கும் அவர்கள் சென்று குடியேறினார்கள். அவர்கள் தங்களோடு கூடவே இந்தியக் கலை, நாகரிகங்களையும் கொண்டு சென்றனர். பர்மாவிலும், சையாமிலும் (தாய்லாந்து), இந்தோ - சீனாவிலும் பெரிய இந்தியக் குடியேற்றங்கள் இருந்தன. அவர்கள் தங்களுடைய புதிய நகரங்களுக்கும் குடியேற்றங்களுக்கும், அயோத்தி, ஹஸ்தினாபுரம், தக்ஷசீலம், காந்தாரம் முதலான பல இந்தியப் பெயர்களை அளித்தனர். சரித்திர நிகழ்ச்சிகள் அதேமாதிரி திரும்பத் திரும்ப வரும் அற்புதத்தை என்னென்பது! அமெரிக்காவுக்குச் சென்று குடியேறிய ஆங்கிலோ - சாக்சனியரும் (Anglo - Saxon) இவ்வண்ணமே செய்தனர். இன்று அமெரிக்காவில் பழைய ஆங்கிலேய நகரங்களின் பெயர்பூண்ட இடங்கள் பல இருக்கின்றன.

வெளிநாடுகளில் குடியேறுவோர் அனைவருக்கும் இயல்பாக உள்ள குணம், கிழக்குத் தீவுகளில் குடியேறிய இந்தியர்களுக்கும் இருந்தது. அவர்கள் அங்குள்ள ஜனங்களிடம் ஒழுங்காக நடந்துகொள்ளாமல் அவர்களைச் சுரண்டிப் பிழைக்க முயன்றார்கள். ஆனால் சில காலத்துக்குப் பிறகு அத்தீவுகளின் பழங்குடிகளும் புதிதாகக் குடியேறிய இந்தியர்களும் ஒன்றாகக் கலந்துபோயிருக்க வேண்டும். ஏனெனில் அங்குக் குடியேறியவர்கள் தங்கள் தாய்

நாடான இந்தியாவுடன் தொடர்ச்சியான சம்பந்தம் வைத்துக்கொள்ள முடியவில்லை. அத்தீவுகளில் ஹிந்து ராஜ்யங்களும் சாம்ராஜ்யங்களும் ஏற்பட்டன. அதற்குப் பிறகு அங்கே பௌத்த மன்னர்கள் அரசாண்டார்கள். ஹிந்துக்களும் பௌத்தர்களும் அரசு குறித்துச் சண்டையிட்டுக் கொண்டார்கள். பரந்த இந்தியா (Further or greater India) வின் விரிந்த சரித்திரம் மிகவும் அற்புதமானது. இவ்விந்தியக் குடியேற்றங்களில் அழிந்து காணப்படும் பெரிய பெரிய கோயில்களும் கட்டிடங்களும் அவற்றின் பழம் பெருமையை இன்றும் நமக்குத் தெரிவிக்கின்றன. சிறந்த இந்திய இளைஞர்களால் நிர்மாணிக்கப்பட்ட காம்போஜம் (Kamboja), ஸ்ரீ விஜயம் (Sri Vijaya), * அங்கோர் அணிநகரம் (Angkor the Magnificent), மத்திய பாஹிதம் (Madjapahit) போன்ற பெரிய நகரங்கள் அங்கே விளங்கின.

அத்தீவுகளில் 1400 ஆண்டுகள் வரையில் ஹிந்து ராஜ்யங்களும் பௌத்த ராஜ்யங்களும் நிலைபெற்றிருந்தன. அவை ஒன்றோடொன்று போரிட்டுக்கொண்டும், கைமாறிக்கொண்டும், சிலசமயங்களில் ஒன்றையொன்று அழித்துக்கொண்டும் வந்தன. கி. பி. 15-ஆம் நூற்றாண்டில் முஸ்லீம்கள் வந்து முடிவாக அதிகாரத்தைக் கைப்பற்றிக்கொண்டார்கள். அவர்களை அடுத்துப் போர்த்துகீசியரும், ஸ்பானியரும், டச்சுக்காரரும், ஆங்கிலேயரும், கடைசியாக அமெரிக்கரும் வந்தார்கள். பக்கத்தில் வாழ்ந்த சீனர்கள் பெரும்பாலும் நண்பர்களாக இருந்து, பொருள்களைக் கொடுத்தும் வாங்கியும், எப்போதும் தங்கள் கலை நாகரிகங்களின் பயனை உதவியும் வந்தார்கள். சில சமயங்களில் அவர்கள் இந்நாடுகளை ஜெயித்ததும் உண்டு.

---

* இதை அங்கோர்வாட் என்றும் கூறுகிறார்கள்.

இந்த இந்தியக் குடியேற்றங்களைப்பற்றி நாம் அறிந்து கொள்ள வேண்டிய அரிய விஷயங்கள் பல இருக்கின்றன. அக்காலத்தில் தென் இந்தியாவில் இருந்த பெரிய அரசாங்கங்களில் ஒன்று இக்குடியேற்றங்களுக்கு மூலகாரணமாக இருந்து இவைகளை ஏற்படுத்தியது. முதலில் தனிப்பட்டவர்கள் பலர் போயிருக்கலாம். பிறகு வியாபாரம் பெருகப் பெருகப் பல குடும்பங்களும் கூட்டத்தாரும் தாங்களாகவே சென்றிருக்கலாம். ஆதியில் குடியேறியவர்கள் கலிங்கத்தி (ஒரிசா) லிருந்தும் கீழ்கரையிலிருந்தும் சென்றதாகத் தெரிகிறது. சிலர் வங்காளத்திலிருந்தும் சென்றிருக்கலாம். குஜராத்திலிருந்து, தங்கள் வீடுவாசல்களினின்றும் துரத்தப்பட்ட சிலர் இத்தீவுகளுக்குச் சென்றதாகவும் ஒரு கதை வழங்குகிறது. ஆனால் இவைகள் வெறும் ஊகங்களே யாகும். தொடர்ச்சியாகக் குடியேறியவர்களில் பெரும்பாலோர் பல்லவ தேசத்தினின்று சென்றவர்களேயாவர். தமிழ்நாட்டின் தென்பாகத்தை ஒரு பெரிய பல்லவ வமிசம் ஆண்டுவந்தது. இந்தப் பல்லவ அரசாங்கம் 'மலாயாசியா'வில் * (Malaysia) இக்குடியேற்றத்தை அமைத்ததாகத் தெரிகிறது. வட இந்தியாவிலிருந்து பலர் தென் இந்தியாவுக்கு வந்தபடியால் அங்கே ஜனநெருக்கம் அதிகமாகி அவர்கள் இம்மாதிரி வெளிநாடுகளில் குடியேறச் சென்றிருக்கலாம். காரணம் எதுவாயினும், இந்தியாவுக்கு நெடுந்தூரத்திலுள்ள வெவ்வேறு இடங்களில் பலர் சென்று குடியேறுவதற்கான திட்டங்கள் முன்யோசனையுடன் வகுக்கப்பட்டு, அனைவரும் ஏக காலத்தில் சென்று குடியேறி யிருக்கிறார்கள் என்பது

---

* 'மலாயாசியா' என்னும் சொல் பர்மா, இந்தோ சீனா, சையாம், மலாய்நாடு, கிழக்குத் தீவுகள் இவையனைத்தும்கொண்ட பிரதேசத்தைக் குறிக்கிறது.

தெளிவாகத் தெரிகிறது. இந்தோ-சீனா, மலாய்நாடு, போர்னியோ, சுமத்திரா, ஜாவா இன்னும் பல இடங்களிலும் இக்குடியேற்றங்கள் இந்தியப் பெயர்கள் கொண்டு விளங்கின. இவைகளெல்லாம் பல்லவர்களின் முயற்சியால் ஏற்பட்டவைகளாகும். இந்தோ-சீனாவிலிருந்த குடியேற்றத்துக்குக் காம்போஜம் (தற்காலத்துக் கம்போடியா) என்று பெயர். இப்பெயர் காந்தார நாட்டுக் காபூல் பள்ளத்தாக்கிலுள்ள ஓர் ஊரின் பெயராகும்.

சுமார் 400 அல்லது 500 ஆண்டுகள்வரையில் இக்குடியேற்றங்கள் ஹிந்துமதத்தை அவலம்பித்து வந்தன. பிறகு சிறிதுசிறிதாகப் பௌத்த மதம் எல்லா இடங்களிலும் பரவியது. நெடுங்காலத்துக்குப் பின்னர் இஸ்லாம் மதம் மலாயாசியாவின் ஒருபாகத்தில் பரவியது; மற்றொரு பாகம் பௌத்த மதத்தையே அனுஷ்டித்து வந்தது.

மலாயாசியாவில் பல சாம்ராஜ்யங்கள் தோன்றி மறைந்தன. ஆனால் இங்கு ஏற்பட்ட தென் இந்தியக் குடியேற்றங்களால் விளைந்த நிலையான பலன் என்னவென்றால், இவ்விடத்தில் இந்திய-ஆரிய நாகரிகம் பரவி வேரூன்றியதேயாகும். இன்று மலாயாசிய நாடுகளில் வாழ்வோரும் நாமும் ஏறக்குறைய ஒரே நாகரிகத்தின் குழந்தைகள் என்று கூறலாம். வேறு பல சக்திகளும் அங்கு ஊடாடியிருக்கின்றன. அவற்றுள் முக்கியமானது சீன நாகரிகம். இந்திய நாகரிகம், சீன நாகரிகம் ஆகிய இவ்விரு பெரிய சக்திகளின் சேர்க்கையால் மலாயாசியாவின் வெவ்வேறு நாடுகளில் வெவ்வேறு பலன்கள் விளைந்திருக்கின்றன. சில, இந்திய மயமாகவும், வேறுசில, சீன மயமாகவும் இருக்கின்றன. மத்தியப் பிரதேசமாகிய பர்மா, சையாம், இந்தோ-சீனா ஆகிய நாடுகளில் சீன நாகரிகத்தின் பிரபாவம் (Chinese influence) அதிகமாக

இருக்கிறது; ஆனால் மலாய்நாட்டில் அவ்வாறு இல்லை. ஜாவா, சுமத்திரா முதலிய தீவுகளில் இந்திய நாகரிகத்தின் பிரபாவம் அதிகமாயிருக்கிறது. சமீபத்தில் தோன்றிய இஸ்லாம் மார்க்கத்தின் சாயலும் அங்கே கலந்து காணப்படுகிறது.

ஆனால் இந்திய நாகரிகத்துக்கும் சீன நாகரிகத்துக்கும் யாதொரு போராட்டமும் நிகழவில்லை. இரண்டும் வேறுபட்ட தன்மையனவாக இருந்தும் அவை ஒன்றோடொன்று முட்டிக்கொள்ளாமல் தத்தம் வழியில் தத்தம் வேலையைச் செய்துவந்தன. மதத்தைப் பொறுத்தவரையில் ஹிந்து மதம் பௌத்த மதம் இரண்டுக்கும் இந்தியாவே பிறப்பிடமாக இருந்தது. சீனாவுக்குக்கூட மதம் இந்தியாவிலிருந்துதான் சென்றது. கலைத்துறையில் இந்தியாவின் பிரபாவம் மலாயாசியாவில் ஒப்புயர்வற்று விளங்கியது. சீனாவின் பிரபாவம் அதிகமாயிருந்த இந்தோ - சீனாவில்கூடச் சிற்பக்கலை முழுவதும் இந்தியமயமாகவே இருந்தது. அந்நாடுகளில், மக்களின் பொதுவான வாழ்க்கைத் தத்துவம், அரசாங்க முறைகள் இவற்றைப் பொறுத்தவரையில் சீனச் சார்பு அதிகமாகக் காணப்பட்டது. ஆகவே இன்று இந்தோ - சீனா, பர்மா, சையாம் ஆகிய நாடுகளில் வாழும் மக்கள் இந்தியர்களைவிடச் சீனர்களோடு அதிக சம்பந்தம் உடையவர்கள் போல் காணப்படுகிறார்கள். வகுப்பைப் பொறுத்தவரையில் அவர்களுடைய உடம்பில் மங்கோலிய ரத்தம் அதிகமாக ஓடுகிற காரணத்தாலும் அவர்கள் ஓரளவுக்குச் சீனர்களை ஒத்திருக்கிறார்கள்.

ஜாவாவில் பொரபுதூர் (Borobodur) என்னும் இடத்தில் இந்திய இளைஞர்களால் கட்டப்பட்ட பெரிய பௌத்தக் கோயில்கள் இன்று சிதைந்து கிடக்கின்றன. அக்கோயில்களின் சுவர்களில் புத்தர்பிரானுடைய

வாழ்க்கைச் சரிதை முழுவதும் செதுக்கப்பட்டிருக்கிறது. அவை புத்தருக்கு மட்டுமின்றி அக்காலத்திய இந்தியக் கலைக்கும் ஒப்பற்ற ஞாபகச் சின்னங்களாக விளங்கு கின்றன.

இந்தியப் பிரபாவம் (Influence) இத்துடன் நிற்க வில்லை. அது மேலும் மேலும் சென்று பிலிப்பைன் (Philippines) பர்மோசாத் (Formosa) தீவுகளையும் எட்டிற்று. அவையிரண்டும், சுமத்திராவில் விளங்கிய ஹிந்து சாம்ராஜ்யமாகிய விஜய சாம்ராஜ்யத்தின் பகுதியாக ஒருகாலத்தில் இருந்தன. இதற்கு நெடுங் காலத்துக்குப் பிறகு பிலிப்பைன் தீவுகள் ஸ்பானியரால் ஆளப்பட்டுவந்தன. இப்போது அவைகள் அமெரிக் காவின் ஆதிக்கத்தின்கீழ் இருக்கின்றன. பிலிப்பைன் தீவுகளின் தலைநகரம் மணிலா (Manila) என்பது. அங்குச் சில காலத்துக்குமுன் சட்டசபைக் கட்டிடம் ஒன்று புதிதாகக் கட்டப்பட்டது. அதன் முகப்பில் பிலிப்பைன் நாகரிகத்தின் பிறப்பிடங்களை உணர்த்தும் நான்கு உருவங்கள் அமைக்கப்பட்டன. ஒன்று புராதன இந்தியாவின் தரும சாஸ்திரி (Law - Giver) யான மனுவி னுடையது. ஒன்று சீன தத்துவ ஞானியான லௌ-ட் சேயினுடையது. ஒன்று ஆங்கிலோ - சாக்சன் சட்டத் தையும் நீதியையும் குறித்து நின்றது. ஒன்று ஸ்பெயினைக் குறித்து நின்றது.

# 37

# குப்த அரசர்களின் கீழ் ஹிந்து ஏகாதிபத்தியம்

ஏப்ரல் 29, 1932

தென் இந்தியாவில் உள்ளவர்கள் கடல்கடந்து தூர தேசங்களுக்குச் சென்று அங்கே குடியேற்றங்களையும் நகரங்களையும் ஸ்தாபித்துக்கொண் டிருந்த காலத்தில் வட இந்தியாவில் பெரிய கொந்தளிப்பு ஏற்பட்டு வந்தது. அங்கே குஷாண சாம்ராஜ்யம் தன் பெருமை இழந்து வலிகுன்றித் தேய்ந்து வந்தது. வட இந்தியா முழுதும் இருந்த சிறுசிறு ராஜ்யங்களை, வடமேற்கு எல்லை வழியாக இந்தியாவுக்கு வந்த சாகர்கள், ஸிதியர், துருக்கியர் முதலானோரின் பரம்பரையைச் சேர்ந்தவர்கள் ஆண்டு வந்தார்கள். அவர்கள் பௌத்தர்கள். அவர்கள் விரோதிகளைப் போல் இந்தியா மீது படையெடுத்து வரவில்லை என்றும் இங்குக் குடியேறி வாழும் நோக்கத்துடன் வந்தார்கள் என்றும் முன்பே கூறியிருக்கிறேன். அவர்களுக்குப் பின்புறமிருந்த மற்ற மத்திய ஆசியக்குடிகள் அவர்களை இரக்கமின்றி இந்தியாவினுள் தள்ளினார்கள். இந்த மத்திய ஆசியக் குடிகளை அவர்களுக்குப் பின்புறமிருந்த சீன ராஜ்யத்தார் தெற்கே தள்ளினர். இந்தியாவுக்கு வந்தபிறகு அவர்கள் இந்திய-ஆரியப் பழக்கவழக்கங்களைப் பெரும்பாலும் மேற்கொண்டார்கள். மதம், கலை, நாகரிகம் ஆகியவற்றிற்கெல்லாம் அவர்களுக்கு இந்தியாவே தாயகமாக விளங்கியது. குஷாணர்கள்கூடப் பெரும்பாலும் இந்திய-ஆரியப் பழக்க வழக்கங்களையே அனுஷ்டித்து

வந்தனர். இந்தியாவில் தங்கி அதில் பெரும்பாகத்தை அவர்கள் அவ்வளவு நீண்டகாலம் ஆட்சி புரிந்ததன் காரணம் இதுவே. அவர்கள் இந்திய-ஆரியரைப்போல் வாழ முயற்சித்ததோடு தாங்கள் அந்நியர் என்பதையும் ஜனங்கள் மறந்துவிட வேண்டுமென்று விரும்பினார்கள். இதில் அவர்கள் ஓரளவு வெற்றி பெற்றார்கள் என்றே சொல்லவேண்டும்; ஆனால் முழுவதும் வெற்றிபெற முடியவில்லை. ஏனெனில், தங்களை அந்நியர் ஆளுகிறார்கள் என்ற உணர்ச்சி முக்கியமாக க்ஷத்திரியர்களின் நெஞ்சை அறுத்து வந்தது. இவ்வந்நிய ஆட்சியை ஆற்ற மாட்டாது அவர்கள் பொருமிக்கொண் டிருந்தார்கள். மக்களின் மனமானது ஆத்திர மிகுதியால் கொந்தளித்துக் கொண்டிருந்தது. கடைசியில் அவர்களுக்கேற்ற தலைவனும் கிடைத்தான். அவனுடைய கொடியின் கீழ் அவர்கள் ஆரியாவர்த்தத்தை விடுவிப்பதற்குப் புனித யுத்தம் தொடங்கினார்கள்.

இந்தத் தலைவன்தான் சந்திரகுப்தன். இவன் வேறு; அசோகருக்குப் பாட்டனை சந்திரகுப்தன் வேறு. இதை நீ தெளிவாக மனத்தில் வைக்கவேண்டும். இவனுக்கும் மௌரிய வமிசத்துக்கும் யாதொரு சம்பந்தமும் இல்லை. இவன் பாடலிபுரத்தை ஆண்டுவந்த ஒரு சிற்றரசன். இவன் காலத்தில் அசோகரின் சந்ததியார் இருந்த இடம் தெரியாமல் போய்விட்டனர். இப்போது நாம் கி. பி. நாலாம் நூற்றாண்டின் ஆரம்பத்தில் அதாவது கி. பி. 308-ஆம் ஆண்டில் இருக்கிறோம். அசோகர் இறந்து இப்போது 534 ஆண்டுகள் கழிந்துவிட்டன.

சந்திரகுப்தனுக்கு ஆசை அதிகமாக இருந்தது; திறமையும் இருந்தது. அவன் வட இந்தியாவிலிருந்த மற்ற ஆரிய அரசர்களையெல்லாம் தன் பக்கம் இழுத்துக் கொண்டு அவர்களோடு ஒருவிதமான சமஷ்டியை

ஏற்படுத்திக்கொள்ள முயன்றான். வலியும் புகழும் படைத்த லிச்சாவி வமிசத்தைச் சேர்ந்த குமாரதேவி என்பவளை அவன் மணந்து கொண்டான். அதனால் அந்த வமிசத்தாரின் ஆதரவு அவனுக்குக்கிடைத்தது. வேண்டிய முன் ஏற்பாடுகளை ஜாக்கிரதையாகச் செய்து முடித்த பிறகு, சந்திரகுப்தன் இந்தியாவிலுள்ள அன்னிய அரசர்கள் மீது 'புனித யுத்தம்' தொடங்கினான். அன்னியரால் தங்களுடைய அதிகாரத்தையும் பதவிகளையும் இழந்த க்ஷத்திரியர்களும் உயர்குல ஆரியரும் இந்த யுத்தத்துக்கு ஆதரவு அளித்தார்கள். பன்னிரெண்டு ஆண்டுகள் போர்புரிந்த பின்னர் சந்திரகுப்தன் வட இந்தியாவில் ஒரு பாகத்தைக் கைப்பற்றித் தன்னை மன்னர் மன்னனாக மகுடம் சூட்டிக் கொண்டான். அவன் கைப்பற்றிய பாகத்தில் இப்போது ஐக்கிய மாகாணம் என வழங்கும் பகுதியும் அடங்கியிருந்தது.

இவ்வாறு குப்த வமிசம் ஆரம்பமாயிற்று. அது இருநூறு ஆண்டுகள் நிலைத்திருந்த பிறகு அதற்கு ஹூணர்களால் தொந்தரவு ஏற்பட்டது. குப்த வமிசத்தார் அரசாண்ட காலத்தை ஹிந்துமத உணர்ச்சியும் தேசீய உணர்ச்சியும் ஓங்கியிருந்த காலம் என்று கூறலாம். ஆரியரல்லாத, பார்த்திய, துருக்கிய இத்தியாதி வகுப்புகளைச் சேர்ந்த அந்நிய அரசர்கள் 'வேரும் வேரடி மண்ணும் இல்லாமல்' அழித்து ஒழிக்கப்பட்டனர். வகுப்பு விரோதம் இவ்வாறு தலையெடுத்தாடுவதை நாம் காண்கிறோம். இந்திய உயர்குல ஆரியன் ஒருவனுக்குத் தன் வகுப்பு என்றால் பெரிய பெருமை. அவன் இந்தக் காட்டுமிராண்டிகளையும் மிலேச்சர்களையும் இழிவாகக் கருதி வந்தான். குப்தர்கள் தங்களால் வெல்லப்பட்ட ஆரிய ராஜ்யங்களிலும் ஆரிய அரசர்களிடத்திலும் சற்றுத் தாட்சணியத்துடன் நடந்து கொண்டார்கள்.

ஆனால் ஆரியர் அல்லாதவர்களிடம் மிகவும் கடுமையா யிருந்தனர்.

சந்திரகுப்தனுடைய புதல்வனாகிய சமுத்திரகுப்தன் தந்தையைவிடப் பராக்கிரமமும் போர் வன்மையும் மிகுந்தவன். அவன் பெரிய சேனாதிபதி. அவன் சக்கர வர்த்தியானதும் தேசமுழுவதும், தெற்கிலும்கூடப் பல போர்களை நடத்தி வெற்றி பெற்றான். அவன் கீழ்க் குப்த சாம்ராஜ்யம் இந்தியாவின் பெரும்பாகத்தில் பரவியிருந் தது. ஆனால், தென் இந்தியாவில் அவனுடைய அதிகாரம் பெயரளவில்தான் இருந்தது. வடக்கில் குஷாணர்கள் சிந்து நதிக்கு அப்பால் விரட்டியடிக்கப்பட்டனர்.

சமுத்திரகுப்தனுடைய புதல்வனாகிய இரண்டாவது சந்திரகுப்தனும் பெரிய சேனா வீரனே. நெடுங்காலமாக சாகர் அல்லது துருக்கியரின் ஆளுகையில் இருந்த கத்தியவார், குஜராத் ஆகிய நாடுகளை அவன் ஜெயித் தான். அவன் விக்கிரமாதித்தியன் என்னும் பெயரை ஏற்றுவிளங்கினான். அந்தப் பெயரே அவனுக்கு வழங்கி வருகிறது. ஆனால், சீசர் என்பதைப்போல இந்தப் பெயரும் பல அரசர்களின் பட்டப்பெயராய் விளங்குவதால் நமக்குச் சிறிது குழப்பம் ஏற்படுகிறது.

டில்லியில் 'குதுப்மினார்' என்னும் ஸ்தம்பத்துக் கருகில் பெரிய இரும்புத்தூண் ஒன்றைப் பார்த்தது உனக்கு நினைவிருக்கிறதா? இது விக்கிரமாதித்தியன் கட்டிய ஜெயஸ்தம்பம் என்று சொல்லப்படுகிறது. சிறந்த வேலைப்பாடமைந்த அந்த ஸ்தம்பத்தின் உச்சியில் சாம்ராஜ்யத்துக்கு அறிகுறியான தாமரைப்பூ செதுக்கப் பட்டிருக்கிறது.

இந்தியாவில் குப்தர்களின் காலம் ஹிந்து ஏகாதி பத்தியத்தின் காலமாக விளங்கியது. ஆரியர்களின் பழைய கலைகளும் சம்ஸ்கிருதக் கல்வியும் புத்துயிர்

பெற்றன. கிரேக்கர்களாலும் குஷாணர்களாலும் மற்றவர்களாலும் கொண்டுவரப்பட்டு இந்தியர்களின் வாழ்க்கையிலும் கலையிலும் மிளிர்ந்த கிரேக்க, மங்கோலிய அம்சங்கள் ஆதரிக்கப்படவில்லை. அவை வேண்டுமென்றே அடக்கப்பட்டு இந்திய-ஆரியப் பழக்க வழக்கங்கள் வலியுறுத்தப்பட்டன. சம்ஸ்கிருதம் அரசாங்க பாஷையாக இருந்தது. ஆனால் அக்காலத்திலேயே சம்ஸ்கிருதம் சாதாரண ஜனங்கள் பேசும் பாஷையாக இல்லை. அவர்கள் சம்ஸ்கிருதத்தோடு நெருங்கிய தொடர்புடைய ஒருவகையான பிராகிருத மொழியையே பேசிவந்தார்கள். ஆனால் சம்ஸ்கிருதம் அக்காலத்தில் மக்கள் பேசும் மொழியாக இல்லாமலிருந்தாலும் உயிருள்ள ஒரு மொழியாக இருந்து வந்தது. வடமொழியில், காவியமும் நாடகமும் பூத்து மலர்ந்த காலம் அதுவே. அப்போது இந்திய-ஆரியக்கலை புத்துயிர் பெற்று விளங்கியது. வேத, இதிகாச காலத்திற்குப் பிறகு வடமொழி இலக்கிய சரித்திரத்திலேயே இக்காலம் மிகவும் சிறந்ததாகும். மகாகவியாகிய காளிதாசன் வாழ்ந்தது இக்காலத்தில்தான். விக்கிரமாதித்தியனுடைய ராஜசபையில் சிறந்த கவிவாணரும், இசைவாணரும், கலைவாணரும் நிரம்பியிருந்தனர். அவனுடைய ராஜசபையில் இருந்த நவரத்தினங்களைப் பற்றி நீ கேள்விப்பட்டதில்லையா? காளிதாசனை அந்நவமணிகளில் ஒருவனாகக் கூறுவது வழக்கம்.

சமுத்திரகுப்தன், சாம்ராஜ்யத்தின் தலைநகரைப் பாடலிபுத்திரத்திலிருந்து அயோத்திக்கு மாற்றினான். வால்மீகியின் சிரஞ்சீவிக் காவியத்தில் சொல்லப்பட்டிருக்கும் ஸ்ரீ ராமச்சந்திரன் வாழ்ந்த இடமான அயோத்தியே தனது வீரமும் வலிவும் செறிந்த இந்திய-ஆரிய மனோபாவத்துக்கு ஏற்ற இடமென்று அவன் எண்ணினான் போலும்.

ஆரியத்துக்கும் ஹிந்து மதத்துக்கும் புத்துயிர் அளித்த குப்தர்கள் பௌத்த மதத்தை ஆதரிக்காது விட்டது இயற்கையே. இதற்குக் காரணம் க்ஷத்திரிய அரசர்களின் ஆதரவு பெற்ற இவ்வியக்கம் பிரபுத்துவ ரீதியில் (aristocratic) இருந்ததும், பௌத்த மதத்தில் ஜனநாயகம் (democracy) அதிகமாக இருந்ததுமே ஆகும். பௌத்த மதத்தின் மஹாயானப் பிரிவைக் குஷாணர்களும் வட இந்தியாவிலிருந்த ஏனைய அந்நிய அரசர்களும் ஆதரித்து வந்தது இன்னொரு காரணமாகும். ஆனால் பௌத்தர்கள் துன்புறுத்தப்பட்டதாக ஒன்றும் தெரியவில்லை. பௌத்த மடங்கள் (monasteries) இன்னும் பெரிய கல்விச்சாலைகளாகவே விளங்குகின்றன. பௌத்தம் வளர்ந்தோங்கிய இலங்கையை ஆண்ட அரசர்களோடு குப்தர்கள் நட்புப் பாராட்டி வந்தனர். இலங்கை மன்னனான மேகவர்ணன் சமுத்திரகுப்தனுக்கு விலையுயர்ந்த வெகுமதிகள் அனுப்பியதாகவும், சிங்கள மாணவர்களுக்காகக் கயையில் ஒரு மடம் ஸ்தாபித்ததாகவும் அறிகிறோம்.

ஆனால் இந்தியாவில் பௌத்த மதம் மங்கி மறைந்துவிட்டது. பிராமணர்களோ அல்லது அக்காலத்திய அரசாங்கமோ தங்கள் பலத்தை வெளிப்படையாக உபயோகித்துப் பௌத்த மதத்தை அழிக்கவில்லை. ஆனால் நாளடைவில் பிற மதங்களைத் தன்னுள் ஏற்றுக்கொண்டு ஜீரணிப்பதற்கு ஹிந்து மதத்தினிடம் உள்ள சக்தியே இதற்குக் காரணமாகும்.

சற்றேறக்குறைய இக்காலத்தில்தான் சீன யாத்திரிகர்களுள் மிகவும் புகழ்பெற்ற ஒருவர் இந்தியாவுக்கு வந்தார். இவர் நான் ஏற்கெனவே சொல்லியிருக்கும் யுவான்-சுவாங் (Hiuen-Tsang) அல்ல. பாஹியன்

(Fa-Hien) என்பது இவருடைய பெயர். பௌத்த மத கிரந்தங்களைத் தேடி வந்த பௌத்தர் இவர். மகதநாட்டு மக்கள் சீரும் செழிப்பும் உற்று இன்பமாக வாழ்ந்து வந்ததையும், நீதி பரிபாலனம் செம்மையாக நடைபெற்று வந்ததையும், யாருக்கும் மரண தண்டனையே கிடையா தென்பதையும் இவர் நமக்குத் தெரிவிக்கிறார். கயை அழிந்து கிடந்தது; கபிலவாஸ்து காடு மண்டிக் கிடந்தது; ஆனால் பாடலிபுரத்து மக்கள் செல்வமும் செழிப்பும் பொருந்தி அறவழியில் நடந்து வந்தார்கள் என்று இவர் சொல்லுகிறார். அக்காலத்தில் செல்வமும் சிறப்பும் படைத்த பல பௌத்த மடங்கள் இருந்தன. வழிநெடுகிலும் அறச்சாலைகள் இருந்தன. அங்கே வழிப்போக்கர்கள் தங்கி, உண்டு இளைப்பாறிச் சென்றார்கள். பெரிய நகரங்களில் இலவச வைத்திய சாலைகள் இருந்தன. இவைகள் எல்லாம் பொதுப் பணத்திலிருந்து நிர்வகிக்கப்பட்டு வந்தன.

இந்தியாவில் சுற்றிவிட்டு பாஹியன் இலங்கைக்குச் சென்று அங்கே இரண்டு வருஷங்கள் தங்கினார். ஆனால் அவருடைய தோழரான டாஓ-சிங் (Tao-Ching) என்பவர் இந்தியாவைப் பெரிதும் விரும்பினார். அவருக்கு இங்கிருந்த பௌத்த பிக்ஷுர்களின் பரிசுத்த வாழ்க்கை மிகவும் உகப்பாயிருந்தது. ஆகவே அவர் இங்கேயே தங்கி விட்டார். பல வருஷங்களுக்குப் பிறகு பாஹியன் இலங்கையிலிருந்து கடல் வழியாகச் சீனாவுக்குச் சென்றார். அவருடைய தேச யாத்திரையில் நிகழ்ந்த அரிய பெரிய நிகழ்ச்சிகள் பலவாகும்.

விக்கிரமாதித்தியன் இருபத்து மூன்று வருஷங்கள் அரசாண்டான். அவனுக்குப் பின் அவனுடைய மகனான குமாரகுப்தன் நாற்பது ஆண்டுகள் வரையில் ஆட்சி

செலுத்தினான். அடுத்தபடியாக கி. பி. 453-ஆம் ஆண்டில் பட்டத்துக்கு வந்தவன் ஸ்கந்தகுப்தன். இவன் ஒரு புதிய பகையை எதிர்த்து நிற்கவேண்டி யிருந்தது. அந்தப்பகை குப்த சாம்ராஜ்யத்தின் முதுகையே ஒடித்து விட்டது. இதைப்பற்றி அடுத்த கடிதத்தில் சொல்லு கிறேன்.

அஜந்தாவிலுள்ள சிறந்த சித்திரங்களும் மண்டபங் களும் குப்த காலத்துக் கலையின் உயர்வுக்குச் சான்று பகர்கின்றன. அவற்றைப் பார்க்கும்போது நாம் ஆச்ச ரியத்தால் ஸ்தம்பித்து விடுகிறோம். ஆனால் துரதிருஷ்ட வசமாக இவைகளும் நீண்டநாளாகக் காற்று, மழை முதலியவற்றைத் தாங்கமாட்டாமல் மறைந்து வரு கின்றன.

இந்தியாவில் குப்தர்கள் ஆண்ட காலத்தில் உலகின் மற்றப் பாகங்களில் நடந்தது என்ன? முதலாவது சந்திர குப்தனும் கான்ஸ்டாண்டிநோபிளைக் கண்ட கான்ஸ் டண்டைன் என்னும் ரோமானியச் சக்கரவர்த்தியும் ஒரே காலத்தவர்கள். பிற்பாடு வந்த குப்தர்களின் காலத்தில் தான் ரோம சாம்ராஜ்யம் கிழக்கென்றும் மேற்கென்றும் பிளவுபட்டது. கடைசியில் மேற்கு சாம்ராஜ்யம் வடக்கே யிருந்து வந்த 'காட்டுமிராண்டி' ஜாதியார்களால் வெல்லப்பட்டது. இவ்வாறு ரோம சாம்ராஜ்யம் வலி குன்றி வந்த காலத்தில் பெரிய சேனாதிபதிகளையும் பலம் பொருந்திய சேனைகளையும் கொண்ட ஒரு ராஜ்யம் இந்தியாவில் நடைபெற்று வந்தது. சமுத்திரகுப்தனை 'இந்திய நெப்போலியன்' என்று அழைப்பது வழக்கம். அவனுக்கு நாட்டாசை அதிகமாக இருந்தபோதிலும் இந்தியாவுக்கு வெளியில் அவன் திருஷ்டி செல்லவில்லை.

குப்தர்களின் காலத்தைப் பலாத்காரமும் போரும் வெற்றியும் மிகுந்த ஹிந்து ஏகாதிபத்தியம் என்றே கூறவேண்டும். ஆனால் ஒவ்வொரு தேசத்தின் சரித்திரத்திலும் இத்தகைய ஏகாதிபத்திய காலங்கள் பல வருகின்றன. நாளடைவில் அவைகளை யாரும் பிரமாதமாக நினைப்பதில்லை. குப்தர்களுடைய காலத்தை இந்தியாவிலுள்ள நாம் பெருமையுடன் நினைவு கூறுவதற்குக் காரணம் அக்காலத்தில் இலக்கியமும் கலையும் அடைந்த மறுமலர்ச்சியேயாகும்.

# 38

## இந்தியாவுக்கு ஹூணரின் வருகை

மே 4, 1932

இந்தியாவிலே இப்போது ஒரு புதிய பயம் உண்டாயிற்று. வடமேற்கு மலைகளின் வழியாக வந்த ஹூணர்களால் ஏற்பட்ட பயம்தான் அது. ரோம சாம்ராஜ்யத்தைப்பற்றி நாம் பேசிக்கொண்டிருந்த முன் கடிதம் ஒன்றில் நான் இவர்களைப் பற்றிச் சிறிது கூறினேன். ஐரோப்பாவில் இவர்களுடைய தலைவனான அட்டிலா (Attila) என்பவன் பல வருஷங்கள் வரையில் ரோமாபுரியையும் கான்ஸ்டாண்டிநோபிளையும் தனது கொடுஞ் செயல்களால் நடுங்கவைத்தான். ஏறக்குறைய இதே காலத்தில் இந்தியாவுக்கு வந்த ஹூணர்கள் இவர்களைச் சேர்ந்தவர்களே. இவர்கள் வெண்ணிறம் உடையவர்களாயிருந்தபடியால் வெள்ளை ஹூணர்கள் (White Huns) என்று அழைக்கப்பட்டனர். இவர்களும் மத்திய ஆசியாவிலிருந்து வந்த நாடோடி ஜாதியாரே ஆவர். இதற்கு நெடுங்காலம் முன்னரே இவர்கள் இந்தியாவின் எல்லைப்புறத்தைச் சுற்றி வட்டமிட்டுக் கொண்டும் அங்குள்ளவர்களுக்குத் தீங்கிழைத்துக் கொண்டும் வந்தனர். பிறகு இவர்களின் தொகை அதிகமாயிற்று. ஒருவேளை வேறு ஜாதியார்கள் இவர்களைப் பின்னிருந்து துரத்தியும் இருக்கலாம். ஆகவே இவர்கள் இந்தியாமீது படையெடுத்து வரலாயினர்.

ஹூணர்களின் படையெடுப்பைக் குப்த அரசர்களில் ஐந்தாமவனான ஸ்கந்தகுப்தன் எதிர்த்து நிற்க வேண்டி

யிருந்தது. அவன் இவர்களை வென்று விரட்டி அடித்தான். ஆனால் பன்னிரண்டு வருஷங்களுக்குப்பின் இவர்கள் மீண்டும் வந்தார்கள். சிறிது சிறிதாக இவர்கள் காந்தாரத்தையும் வட இந்தியாவில் பெரும் பாகத்தையும் கைப்பற்றினர். இவர்கள் பௌத்தர்களை இம்சித்தனர்; இவர்கள் புரியாத கொடுமையும், இழைக்காத அநீதியும் இல்லை.

இவர்களோடு பலர் இடைவிடாது போரிட்டிருக்க வேண்டும். ஆயினும் குப்தர்களால் இவர்களைத் துரத்தி அடிக்க முடியவில்லை. ஹூணர்கள் மேலும் மேலும் அலை அலையாக வந்து மத்திய இந்தியா முழுவதும் பரவினர். இவர்களுடைய தலைவனான தோரமாணன் (Toroman) என்பவன் தன்னை அரசனாக முடி சூட்டிக் கொண்டான். இவன் தீயவன் என்பதில் ஐயமில்லை. ஆனால் இவனுக்குப் பின் வந்த இவனுடைய மகன் மிஹிரகுலனை ஈவிரக்கமற்ற கொடிய ராக்ஷசன் என்றே கூற வேண்டும். காஷ்மீர சரித்திரத்தைக் கூறும், 'ராஜ தரங்கிணி' ஆசிரியரான கல்ஹண கவி, யானைகளை மலை உச்சிக்குக் கொண்டுபோய் அங்கிருந்து அவைகளைக் கீழே கிடுகிடு பாதாளத்தில் தள்ளி அதைப் பார்த்துக் களிப்பது இவனுடைய வேடிக்கைகளுள் ஒன்றென்று சொல்லுகிறார். கடைசியில், இவனுடைய கொடுமைகளைப் பொறுக்கமாட்டாமல் ஆரியாவர்த்தம் கொதித்தெழுந்தது. குப்த பரம்பரையைச் சேர்ந்த பாலாதித்தியன், மத்திய இந்தியாவில் அரசுபுரிந்த யசோதர்மன், இவர்களுடைய தலைமையின்கீழ் ஆரியர் சீறி எழுந்து ஹூணர்களைத் தோற்கடித்து மிஹிரகுலனையும் சிறைப்படுத்தினர். ஆனால் பாலாதித்தியன் ஹூணர்களைப் போலில்லாமல் மிஹிரகுலனிடம் கருணைகாட்டி அவனைத் தேசத்துக்கு வெளியே போய்விடுமாறு சொன்னான். மிஹிரகுலன் காஷ்மீரத்தில்

அடைக்கலம் புகுந்து, பின்னர், தன்னிடம் இரக்கம் பாராட்டிய பாலாதித்தியனைத் தாக்கினன். அவனுடைய துரோகத்தை என்னென்பது!

இந்தியாவில் ஹூணர்களின் வலி விரைவில் குறைய லாயிற்று. ஆனால் அவர்களுடைய சந்ததியார் பலர் இங்குத் தங்கிச் சிறிது சிறிதாக ஆரியருடன் கலப் புற்றனர். மத்திய இந்தியாவிலும் ராஜபுதனத்திலும் உள்ள சில ராஜபுத்திர வமிசத்தாரின் உடலில் வெள்ளை ஹூண ரத்தமும் சிறிது கலந்திருக்கிறது என்று சொல்லலாம்.

ஹூணர்கள் வட இந்தியாவை ஆண்ட காலம் ஐம்பது வருஷத்துக்கும் குறைவாகவே இருக்கும். அதன் பிறகு அவர்கள் அமைதியாக வாழத் தலைப்பட்டனர். ஆனால் ஹூண யுத்தங்களும் அவர்களுடைய கொடுமை யும் இந்திய ஆரியரின் மனத்தில் நன்கு பதிந்துவிட்டன. ஹூணரின் வாழ்க்கை முறையும் அரசியல் முறையும் ஆரிய முறையினின்று பெரிதும் மாறுபட்டிருந்தன. ஆரியர் இன்னும் பெரும்பாலும் சுதந்தரப் பிரியர் களாகவே இருந்தனர். அவர்களுடைய அரசர்களும் பொதுஜன அபிப்பிராயத்துக்குப் பணிந்து நடந்தனர். அவர்களுடைய கிராம சபைகள் பெரிய அதிகாரம் செலுத்தி வந்தன. ஆனால் ஹூணர்கள் வந்து இந்திய மக்களோடு கலந்து வாழ ஆரம்பித்த பிறகு இவ்வாரிய முறைகளில் மாறுதல் ஏற்பட்டு அவற்றின் தரம் குறைந்துவிட்டது.

கீர்த்தி வாய்ந்த குப்த வமிசத்தின் கடைசி அரசனான பாலாதித்தியன் கி. பி. 530-இல் இறந்தான். அசல் ஹிந்து பரம்பரையில் உதித்த இவ்வரசன் பௌத்த மதத்திடம் அன்பு பூண்டொழுகியதும், பௌத்த பிக்ஷு ஒருவரைக் குருவாகக் கொண்டிருந்ததும் ஸ்வாரஸ்யமான விஷயங்

கள். குப்தர்களுடைய காலம் கிருஷ்ண - வணக்கம் புத்துயிர் பெற்று விளங்கியகாலம். அப்படியிருந்தும் இதற்கும் பௌத்தத்துக்கும் பெரிய மாறுபாடு ஒன்றும் இருந்ததாகத் தெரியவில்லை.

குப்தர்களின் இருநூறாண்டு ஆட்சிக்குப் பிறகு பல சிறு ராஜ்யங்கள் வட இந்தியாவில் தோன்றுவதைப் பார்க்கிறோம். இவைகள் எந்த மத்திய அரசாங்கத்துக்கும் அடங்காமல் சுயேச்சையாக இருக்கின்றன. இதே காலத்தில் தென் இந்தியாவில் ஒரு பெரிய ராஜ்யம் வளர்ந்து வருகிறது. ஸ்ரீ ராமச்சந்திரனின் கால் வழியில் வந்தவன் என்று சொல்லிக்கொண்ட புலிகேசி என்னும் அரசன் ஒருவன் தெற்கே ஒரு சாம்ராஜ்யத்தை ஸ்தாபித்தான். அதற்குச் சாளுக்கிய சாம்ராஜ்யம் என்று பெயர். இத் தென்னிந்தியர் கிழக்குத் தீவுகளில் இருந்த இந்தியக் குடியேற்றங்களோடு நெருங்கிய தொடர்புடையவர்களாக இருந்திருக்கவேண்டும். இந்தியாவுக்கும் மேற்படி தீவுகளுக்கும் இடையே இடைவிடாத போக்கு வரத்தும் இருந்திருக்கவேண்டும். இந்தியக் கப்பல்கள் பண்டங்களைச் சுமந்து கொண்டு பாரசீகத்துக்கு அடிக்கடி போய்வந்ததாகவும் அறிகிறோம். சாளுக்கிய மன்னர்கள் பாரசீகத்தை ஆண்ட சசநீதர்களோடு, முக்கியமாக அவர்களில் சிறந்த இரண்டாம் குஸ்ரா (Khusrau II) என்பவனோடு தூதர்களைப் பரிமாறிக் கொண்டார்கள் என்று தெரிகிறது.

# 39

## வெளிநாடுகளில் இந்திய வர்த்தக ஆதிக்கம்

மே 5, 1932.

நாம் பேசிவரும் இந்த ஆயிரம் வருஷத்துப் பழங்கால சரித்திரத்தில் இந்திய வர்த்தகம், கிழக்கிலும் மேற்கிலும் செழித்தோங்கி வளர்வதைப் பார்க்கிறோம். மேற்கே, ஐரோப்பாவிலும் மேற்கு ஆசியாவிலும், கிழக்கே, சீனு வரையிலும் இந்திய வர்த்தகம் இவ்வாறு வளர்ந் தோங்கியதற்குக் காரணம் என்ன? அந்நாளில் இந்தியர் கப்பலோட்டுவதில் தேர்ந்தவர்களாகவும், நல்ல வியாபாரிகளாகவும், சிறந்த கைத்தொழில் திறமை வாய்ந்தவர்களாகவும் இருந்தது வாஸ்தவமே. ஆனால் இவைகள் மட்டுமே வியாபார வளர்ச்சிக்குக் காரணம் என்று சொல்வதற்கில்லை. இவைகள் உதவியாயிருந்தன என்று வேண்டுமானால் சொல்லலாம். ஆனால் இதற்கான முக்கிய காரணங்களுள், இந்தியர் ரசாயன சாஸ்திரத்தில் வல்லவர்களாகவும், சாயம் தோய்ப்பதில் தேர்ந்தவர்களாகவும் இருந்தது ஒன்றாகும். துணிகளுக்குக் கெட்டிச் சாயங்கள் தயாரிக்கும் சில விசேஷ முறைகளை அவர்கள் கண்டு பிடித்திருந்தார்கள். அவுரிச் செடியிலிருந்து சாயம் இறக்கும் முறையையும் அவர்கள் அறிந்திருந்தார்கள். அவுரிக்கு ஆங்கிலத்தில் 'இண்டிகோ' என்று பெயர். இந்தச் சொல் இந்தியா என்னும் சொல்லிலிருந்து பிறந்ததாகும். பண்டைய இந்தியர் எஃகை நன்கு வடிக்கவும் அதிலிருந்து நல்ல ஆயுதங்கள் செய்யவும் அறிந்திருந்தார்கள். அலெக்சாந்தரின் படையெடுப்பைப் பற்றிய பழைய

பாரசீகக் கதைகளில் இந்தியாவிலிருந்து வந்த வாள்களைப் பற்றியும் கத்திகளைப்பற்றியும் பேசப்படுகிறதென்று நான் கூறியது உனக்கு நினைவிருக்கலாம்.

சாயங்கள் தயாரிப்பதிலும் பிற பொருள்களைச் செய்வதிலும் இந்தியா பிறநாடுகளைக் காட்டிலும் விசேஷ அபிவிருத்தி அடைந்திருந்தபடியால் அயல் நாட்டு வியாபாரம் அதன் கையில் இருந்தது இயற்கையே ஆகும். ஒரு மனிதன் பிறன் ஒருவனைவிட நல்ல கருவி படைத்திருந்தாலும் அல்லது அவனை விட ஒரு பொருளைக் குறைந்த செலவிலோ அல்லது உயரிய முறையிலோ செய்யக் கற்றிருந்தாலும், அவன் பிறன் ஒருவனை நாளடைவில் தலையெடுக்க வொட்டாமல் செய்துவிடுவான். இவ்வுண்மை, ஒரு தேசத்துக்கும் பொருந்தும். கடந்த 200 ஆண்டுகளில் ஐரோப்பா ஆசியாவைவிட வெகுதூரம் முன்னேறிச் சென்றிருப்பதற்கு இதுதான் காரணம். புதுப்புது உண்மைகளும் புதுப்புது முறைகளும் கண்டு பிடிக்கப்பட்ட காரணத்தால் ஐரோப்பாவுக்கு, புதிய சக்தி வாய்ந்த கருவிகளும் புதிய பொருள் உற்பத்தி முறைகளும் கிடைத்தன. இவைகளின் துணைகொண்டு ஐரோப்பா உலகெங்கணுமுள்ள வியாபாரத்தைக் கைப்பற்றிச் செல்வமும் வல்லமையும் கொண்டு விளங்குகிறது. இதற்கு வேறு காரணங்களும் உள. ஆனால், இப்போதைக்கு, கருவி என்பது எவ்வளவு முக்கியமான ஒரு வஸ்து என்பதை நீ ஆலோசிக்க வேண்டுகிறேன். மனிதன், கருவி செய்யும் மிருகம் என்று ஒரு பெரியார் சொன்னார். ஆதிநாளிலிருந்து இதுநாள் வரையில் மனிதனின் சரித்திரம் கருவிகளின், மேலும் மேலும் சிறந்த கருவிகளின் சரித்திரமே ஆகும். கல்லினால் அம்புகளும் சம்மட்டிகளும் செய்து உபயோகித்த பழைய கற்கருவிக் காலம் முதல் ரயில் வண்டியும், நீராவி இயந்திரமும்,

இன்னும் பெரிய பிரம்மாண்டமான இயந்திரங்களும் இயங்கும் இக்காலம் வரையில் இது உண்மையாயிருந்து வருகிறது. நாம் எதையும் ஒரு கருவியின் உதவி யின்றிச் செய்ய முடிவதில்லை. கருவிகளில்லாவிட்டால் நம் கதி தான் என்ன?

கருவி நல்லதுதான். அதனால் வேலை குறைகிறது. ஆனால் அதைத் தீய வழியிலும் உபயோகிக்கலாம். வாள் பயனுள்ள கருவிதான். ஆனால் ஒரு குழந்தை அதனால் தனக்கு ஊறு உண்டாக்கிக் கொள்ளலாம். கத்தி மிகவும் பிரயோஜனகரமான பொருள்களில் ஒன்று. ஒவ்வொரு சாரணனும் கத்தி வைத்திருக்கவேண்டும். ஆயினும் ஒருவன் மூடத்தனமாக வேறொருவனை அதனால் கொன்று விடலாம். அது கத்தியின் தவறாகுமா? அதைத் தீய வழியில் பயன்படுத்தியவனுடைய தவறென்றுதான் அதைச் சொல்ல வேண்டும்

இதே போல, தற்கால இயந்திர சாதனமும் சால நல்லதேயாயினும் அது பல வழிகளில் துஷ்பிரயோகப் படுத்தப்பட்டு வருகிறது. சாதாரண ஜனங்கள் மீது சுமந்துள்ள வேலையின் பளுவைக் குறைப்பதற்குப் பதிலாக, அது அவர்கள் நிலையை முன்னைவிட மோசமாக்கியும் இருக்கிறது. மக்களுக்குச் சுகத்தையும் சந்தோஷத்தையும் அளிக்க வேண்டியதற்கு மாறாக அது அவர்களுக்குப் பெருந்துன்பத்தைக் கொடுத்து வருகிறது. இயந்திர சாதனத்தால் அரசாங்கங்களின் கையில் அளவில்லாத அதிகாரம் குவிந்து போய் அவ்வரசாங்கங்கள் தாங்கள் நடத்தும் யுத்தங்களில் லட்சக்கணக்கான பேர்களை மடிப்பது சாத்தியமாயிருக்கிறது.

ஆனால் குற்றம் இயந்திரத்தினிடத்து இல்லை; அதைத் தவறாக உபயோகிப்பதில் தான் இருக்கிறது. பெரிய இயந்திர சாதனங்கள், தங்கள் சொந்த லாபம்

ஒன்றையே கருதும் பொறுப்பற்ற தனி மனிதர்களின் ஆதிக்கத்தின் கீழிராமல், பொது ஜனங்களின் சார்பில் பொது ஜனங்களின் நன்மைக்காக உபயோகப்படுத்தப் பட்டால் பெரும்பயன் விளையும் என்பதில் ஐயமில்லை.

ஆகவே, அந்நாளில் இந்தியா இன்றிருப்பது போல் இல்லாமல் உலகின் மற்றப் பாகங்களைவிட உற்பத்தி முறைகளில் மேலோங்கி யிருந்தது. அதனால் இந்தியத் துணிகளும் இந்தியச் சாயங்களும் இதர பொருள்களும் தூர தேசங்களுக்குச் சென்று அங்கு எல்லோராலும் விரும்பி ஏற்றுக்கொள்ளப்பட்டன. இந்த வியாபாரம் காரணமாக இந்தியாவில் செல்வம் மங்கியது. இஃதன்றியும், தென் இந்தியா மிளகையும் வேறு பல வாசனைத் திரவியங்களையும் வெளிநாடுகளுக்கு உதவி வந்தது. இந்த வாசனைத் திரவியங்கள் கிழக்குத் தீவுகளிலிருந்து இந்தியா வழியாக மேல்நாடுகளுக்குச் சென்றன. ரோமாபுரியிலும் மேல்நாடுகளிலும் மிளகுக்குப் பெரு மதிப்பு இருந்ததாம். கி. பி. 410-ஆம் ஆண்டில் ரோமாபுரியைக் கைப்பற்றிய காதியர் தலைவனை அலரிக் (Alaric) என்பவன் அங்கிருந்து 3000 பவுண்டு மிளகு எடுத்துச் சென்றதாகச் சொல்லப்படுகிறது. இந்த மிளகு முழுவதும் இந்தியாவிலிருந்தோ அல்லது இந்தியா வழியாகவோ சென்றிருக்க வேண்டும்.

# 40

## தேசங்கள், நாகரிகங்கள் இவற்றின் வாழ்வும் தாழ்வும்

மே 6, 1932.

நாம் சீனுவைப் பிரிந்து நெடுநாள் ஆகிவிட்டது. மீண்டும் அங்குச் சென்று, விட்ட இடத்திலிருந்து கதையை ஆரம்பிப்போம். மேற்கில் ரோமாபுரி அஸ்தமித்த காலத்தும், இந்தியாவில் குப்த அரசர்களின்கீழ் தேசீய மறுமலர்ச்சி உதயமான காலத்தும், சீனுவில் என்ன நிகழ்ந்ததென்று பார்ப்போம். ரோமாபுரியும் சீனுவும் ஒன்றுக்கொன்று வெகு தூரத்தில் இருந்தபடியால், ரோமாபுரியின் உயர்ச்சியும் வீழ்ச்சியும் சீனுவை அதிகமாகப் பாதிக்கவில்லை. ஆனுல் சீன ராஜ்யம் மத்திய ஆசிய ஜாதியார்களைத் துரத்தி அடித்ததால் ஐரோப்பாவிலும் இந்தியாவிலும் விபரீத பலன்கள் விளைந்தன என்று முன்பே கூறியிருக்கிறேன். இந்த ஜாதியார்களும் மேற்கிலும் தெற்கிலும் சென்ருர்கள். போகும்போதே இவர்கள் ராஜ்யங்களைக் கவிழ்த்துக்கொண்டும் குழப்பத்தை உண்டாக்கிக்கொண்டும் சென்ருர்கள். பலர் கிழக்கு ஐரோப்பாவிலும் இந்தியாவிலும் சென்று குடியேறினுர்கள்.

ரோமாபுரிக்கும் சீனுவுக்கும் நேர்முகமான தொடர்பு இருந்தது. ஒரு தேசத்துத் தூதர்கள் இன்னெரு தேசத்தில் இருந்துவந்தார்கள். கி. பி. 166-இல் அன் - டூன் (An - Tun) என்னும் ரோமானியச் சக்கரவர்த்தி முதன் முதல் ஒரு தூதுகோஷ்டியை அனுப்பிவைத்ததாகச் சீன

நூல்கள் கூறுகின்றன. இந்த அன்-டூன் வேறு யாருமில்லை. முன் கடிதம் ஒன்றில் நான் கூறிய மார்க்க அரேலிய அந்தோணியரே இவர்.

ஐரோப்பாவைப் பொறுத்தவரையில் ரோமாபுரியின் வீழ்ச்சி ஒரு பெரிய சம்பவமாகும். கேவலம் ஒரு நகரம், அல்லது ஒரு சாம்ராஜ்யத்தின் வீழ்ச்சி என்று அதைச் சொல்வதற்கில்லை. ஒருவிதத்தில், இதற்குப் பிறகு நெடுங்காலம் வரையிலும், ரோம ராஜ்யம் கான்ஸ்டாண்டிநோபிளில் நடந்துவந்தது. ஏறக்குறைய 1400 ஆண்டுகள் வரையில் அந்த சாம்ராஜ்யத்தின் ஆவி ஐரோப்பா முழுவதும் வட்டமிட்டுக்கொண்டிருந்தது. ஆனால் ரோமாபுரியின் வீழ்ச்சியோடு ஒரு பெரியகாலம் முடிவடைகிறது. பண்டைய கிரேக்க-ரோம உலகத்தின் முடிவாகும் அது. மேற்கே, ரோமாபுரியின் அழிவுகளின்மீது ஒரு புதிய உலகம். ஒரு புதிய கலாசாரம், ஒரு புதிய நாகரிகம் தோன்றி வளர்ந்துவந்தன. நாம் வெறும் வார்த்தைகளைக் கண்டு மயங்கிவிடுகிறோம். ஒரே வார்த்தையை உபயோகிப்பதால் அதற்கு எப்போதும் ஒரே அர்த்தம் என்று எண்ணிவிடுகிறோம். ரோமாபுரி வீழ்ந்தபிறகு மேற்கு ஐரோப்பா ரோமாபுரியின் பாஷையிலேயே பேசிற்று. பாஷை ஒன்றுயினும் அதன் கருத்தும் பொருளும் மாறியிருந்தன. இன்றைய ஐரோப்பிய நாடுகளைக் கிரீசும் ரோமாபுரியும் ஈன்றெடுத்த குழந்தைகள் என்று சொல்லுகிறார்கள். இது ஓரளவுக்கு உண்மையே. ஆயினும் இது நம்மைத் தவறுனவழியில் செலுத்துகிறது. ஏனெனில், கிரீசும் ரோமாபுரியும் எந்தக் கொள்கைக்காக வாழ்ந்தனவோ அதனின்றும் மாறுபட்ட ஒரு கொள்கையின் பிரதிநிதியாக இன்று ஐரோப்பிய நாடுகள் இருக்கின்றன. பண்டைய கிரேக்க-ரோம உலகம் அடியோடு அழிந்துபட்டது. ஆயிரம் ஆண்டு

களாக வளர்க்கப்பட்ட இதன் நாகரிகம் உருக்குலைந்து பட்டுப்போயிற்று. இந்தச் சமயத்தில்தான் மேற்கு ஐரோப்பாவைச் சேர்ந்த நாகரிகமில்லாத நாடுகள் சரித்திரவானில் உதயம் ஆகி ஒரு புதிய கலைப் பண்பையும் நாகரிகத்தையும் மெல்லமெல்லக் கட்ட ஆரம்பிக்கின்றன. அவர்கள் ரோமாபுரியிடம் கற்றுக் கொண்டதும் பழைய உலகத்தினிடம் கடன் வாங்கியதும் எவ்வளவோ உண்டு. ஆனால் கற்றுக்கொள்வதென்பது எளிதல்ல. அது கரடுமுரடான ஒரு பாதை. ஐரோப் பாவில் சில நூற்றாண்டுகள் வரையில் கலைப்பண்பும் நாகரிகமும் கும்பகர்ண உபாசனை செய்துவந்தன. எங்கும் அறியாமை இருள் சூழ்ந்து மூடப்பற்றுதலும் கொள் கையும் மலிந்துகிடந்தன. இந் நூற்றாண்டுகளைச் சரித்தி ரக்காரர் 'இருண்டகாலம்' என்று சொல்லுகிறார்கள்.

இது ஏன்? உலகம் ஏன் பின்னேக்கிச் செல்ல வேண்டும்? நூற்றுக்கணக்கான வருஷங்களாக முயன்று தேடிவைத்த கல்வியறிவு ஏன் மறைந்து போகவேண்டும்? அல்லது மறந்துபோக வேண்டும்? இவை பெரிய கேள்விகள். இவைகளுக்கு விடை காண நம்மில் அறிஞர் பலர் முயன்று வருகிறார்கள். நான் இவைகளுக்கு விடை சொல்ல முற்படப் போவதில்லை. சிந்தனையிலும் செயலி லும் சிறந்த இந்தியா ஏன் வீழ்ச்சியுற்று நெடுங்காலமாக அடிமைவாழ்வில் உழலவேண்டும்? இது ஆச்சரிய மல்லவா? அல்லது சீறுவைத்தான் எடுத்துக்கொள் வோம். சென்ற காலத்தில் அது அடைந்திருந்த பெருமை என்ன; இப்போது இடைவிடாத போரினால் பிய்த்துப் பிடுங்கித் தின்னப்படுவதென்ன! ஒருவேளை, யுக யுகாந் தரங்களாக மனிதன் சிறிது சிறிதாகச் சேமித்துவைத்த ஞான பொக்கிஷமானது மறையாமலிருக்கலாம். ஆனால், சில சமயங்களில் எப்படியோ நமது கண்கள் மூடிவிடு

கின்றன; நாம் பார்வை இழந்துவிடுகிறோம். ஜன்னலை மூடிவிடவே அந்தகாரம் சூழ்ந்துகொள்கிறது. ஆனால் நமக்கு வெளியே நம்மைச் சுற்றிலும் ஞான ஒளி பிரகாசித்துக் கொண்டுதான் இருக்கிறது. நமது கண்களையோ அல்லது ஜன்னலையோ நாம் மூடிக்கொண்ட காரணத்தால் ஞான விளக்கே அணைந்து போய்விட்டதென்று நாம் சொல்ல முடியாது.

ஐரோப்பாவின் இருண்ட காலத்துக்குக் காரணம் கிறிஸ்தவமதம் என்று சிலர் சொல்லுகிறார்கள். அதாவது ஏசு போதித்த மதமல்ல; ரோமானியச் சக்கரவர்த்தி கான்ஸ்டண்டைன் அதைத் தழுவிய பிறகு மேற்கே தழைத்திருந்த அரசாங்க ஆதரவுபெற்ற கிறிஸ்தவ மதத்தையே இவர்கள் குறிப்பிடுகிறார்கள். கி. பி. நாலாம் நூற்றாண்டில் கான்ஸ்டண்டைன் கிறிஸ்துவ மதத்தைத் தழுவியபிறகு ஆயிரவருஷ காலம்வரையில் 'அறிவு கட்டுண்டும், சிந்தனை தடையுற்றும், ஞானம் மழுங்கியும் கிடந்தன' என்று இவர்கள் கூறுகிறார்கள். அக்காலத்தில் மதத்துவேஷமும், மூடக்கொள்கையும், பிறரை இம்சித்தலும் மலிந்திருந்ததோடு விஞ்ஞான ஆராய்ச்சியிலும் வேறுபல துறைகளிலும் மக்கள் முன்னேறுவது கஷ்டமாயிருந்தது. பரிசுத்த வேதாகமங்கள் எனப்படும் நூல்கள் பெரும்பாலும் அறிவு வளர்ச்சிக்குத் தடையாக அமைந்துவிடுகின்றன. அவைகள் எழுதப்பட்ட காலத்தில் உலகம் எவ்வாறு இருந்தது என்பதையும், அக்காலத்து மக்களின் உள்ளத்தில் தோன்றிய கருத்துக்களையும், அவர்களுடைய பழக்க வழக்கங்களையும் அவைகள் நமக்கு எடுத்துக் கூறுகின்றன. இவ்விஷயங்கள் 'பரிசுத்த' கிரந்தங்களில் காணப்படுவதால் யாரும் இவைகளை எதிர்த்துக் கேட்கக் கூடாது. ஆகவே, உலகம் பெரிதும் மாறுதலுற்றாலும் நாம் அதற்கேற்றாற்போல் நமது எண்ணங்களையும் பழக்க

வழக்கங்களையும் மாற்றிக்கொள்ள அநுமதிக்கப்படுவதில்லை. முடிவு என்னவென்றால், நாம் தற்கால நிலைக்குப் பொருத்தமற்றவர்களாக ஆவதோடு கஷ்டத்துக்கும் உள்ளாகிறோம்.

ஆகவே, ஐரோப்பாவை இருள் மூடினதற்குக் கிறிஸ்தவ மதமே காரணம் என்று சிலர் அதன்மீது குற்றம் சாட்டுகிறார்கள். வேறு சிலர், கிறிஸ்தவ மதமும் கிறிஸ்தவத் துறவிகளும், கிறிஸ்தவ மத போதகர்களுமே இவ்விருண்ட காலத்தில் ஞானவிளக்கு அவியாமல் காப்பாற்றியவர்கள் என்று கூறுகிறார்கள். இவர்கள் ஓவியக் கலையையும் வேறு பல கலைகளையும் ஓம்பி வளர்த்ததோடு அரிய நூல்கள் பலவற்றை வைத்துக் காப்பாற்றி அவைகளைப் பிரதிசெய்தும் வந்தார்கள் என்று சொல்லப்படுகிறது.

இவ்வாறு இரு திறத்தாரும் வாதிக்கிறார்கள். இருவர் கூற்றும் சரியாயிருக்கலாம். ஆனால் ரோமாபுரியின் வீழ்ச்சிக்குப்பின் விளைந்த கேடுகளுக்குக் கிறிஸ்தவ மதத்தைப் பொறுப்பாக்குவது எள்ளி நகையாடத்தக்கது. ரோமாபுரியின் வீழ்ச்சிக்கே இக்கேடுகள்தான் காரணம்.

நான் சுற்றிச்சுற்றி ஏதேதோ சொல்லிவிட்டேன். நான் எடுத்துக்காட்ட விரும்பியது என்னவென்றால் ஐரோப்பாவில் இவ்வாறு திடீரென்று சமூக அமைப்புக் குலைந்து திடீரென்று மாறுதல் விளைந்ததுபோலச் சீனாவிலும் இந்தியாவிலும் நிகழவில்லை என்பதுதான். ஐரோப்பாவில் ஒரு நாகரிகம் முடிவடைந்து வேறொரு நாகரிகம் தோன்றுவதை நாம் காண்கிறோம். அப் புது நாகரிகம் சிறிது சிறிதாக வளர்ந்து முதிர்ந்திருக்கும் நிலையே இன்று நாம் காணும் நாகரிகமாகும். சீனாவில் கலைப்பண்பும் நாகரிகமும் தமது உயரிய நிலையிலிருந்து வழுவாமலும் அறுபடாமலும் தொடர்ந்து வருவதைப்

பார்க்கிறோம். வாழ்வும் தாழ்வும் மாறிமாறி வருகின்றன. நல்ல காலங்கள் வந்து போகின்றன. கெட்ட அரசர்களும் சக்கரவர்த்திகளும் வருகிறார்கள்; போகிறார்கள். அரச பரம்பரைகள் மாறுகின்றன. ஆனால் சீனாவின் கலைச் செல்வம்மட்டும் அறுபடவே இல்லை. சீனராஜ்யம் சிதறுண்டு சிறுசிறு ராஜ்யங்களாக மாறி, ஒன்றோடொன்று இகலிநிற்கும் காலத்திலும் கலை வளர்ச்சியும் இலக்கிய வளர்ச்சியும் தடையுறுவதில்லை; கண்ணையும் கருத்தையும் ஒருங்கே கவரும் சித்திரங்களையும், அழகிய பூந்தாழிகளையும், அருமையான கட்டிடங்களையும் நாம் அங்கே காண்கிறோம். அச்சிடும் முறை வழக்கத்துக்கு வருகிறது. தேயிலைப் பானம் அருந்தும் வழக்கம் பிரபலமடைந்து கவிகளிலும் போற்றப்படுகிறது. உயரிய நாகரிகத்தினின்று மட்டுமே பிறக்கக்கூடிய ஒப்பற்ற கலையழகு சீனாவில் தொடர்ந்துவரும் அருமையே அருமை!

இந்தியாவிலும் இதையே காண்கிறோம். ரோமாபுரியைப்போல் திடீர்ப்பிளவு ஒன்றும் இங்கே நிகழவில்லை. நல்லகாலமும் கெட்டகாலமும் நேருகின்றன. மகத்தான இலக்கியமும் கலைகளும் தோன்றும் காலங்களும், கேடும் அழிவும் பீடிக்கும் காலங்களும் மாறிமாறி வருகின்றன. ஆனால் நாகரிகம்மட்டிலும் ஒரே மாதிரியாகச் செல்கிறது. அது இந்தியாவிலிருந்து கீழ் நாடுகளுக்கும் பரவுகிறது. கொள்ளையடிக்கவரும் அநாகரிக ஜாதியாரையும் அது ஏற்றுக்கொண்டு சீர்திருத்திவிடுகிறது.

இந்தியாவையும் சீனாவையும் புகழ்ந்தும் மேல் நாடுகளை இகழ்ந்தும் நான் கூறுவதாக நினைக்கவேண்டாம். இந்தியாவும் சீனாவும் இன்று உள்ள நிலையில், அவற்றைப் பறை சாற்றுவதற்கும் ஒருவனுக்கு வாய் இருக்கிறதா என்ன? பழம் பெருமை வாய்ந்திருந்தும் இவ்விரு தேசங்களும், இன்று மற்றத் தேசங்களோடு ஒப்பிட்டு நோக்கும்

போது எவ்வளவு தாழ்ச்சியுற்றிருக்கின்றன என்பதைக் குருடனும் காணுமல் இருக்கமுடியாது. இவைகளின் பழைய நாகரிகம் திடீரென்று கத்தரிக்கப்படவில்லை யென்ருல் கேட்டிற்கான மாறுதல் ஒன்றும் விளையவில்லை என்று அர்த்தமல்ல. நேற்று உயர்ந்திருந்தோம்; இன்று தாழ்ந்திருக்கிறோம். இதில் சந்தேகமே இல்லை. நமது நாகரிகம் ஜீவநதியைப்போல் தொடர்ந்து வருகிறதென்று நாம் மகிழ்ச்சி அடையலாம். ஆனல் அந்நாகரிகமே இளமை இழந்து மூப்படைந்துவிட்டபிறகு அதனுல் நமக்கு என்ன பிரயோஜனம்? ஒருவேளை கடந்த காலத்தின் தொடர்பு திடீரென்று அறுக்கப்பட்டிருந்தால் அது நமக்கு அநுகூலமாகவும் முடிந்திருக்கலாம். அது நம்மை ஒரு குலுக்குக் குலுக்கி நமக்குப் புதிய உயிரையும் புதிய ஆற்றலையும் அளித்திருக்கும். இன்று இந்தியா விலும் உலகிலும் நடைபெறும் சம்பவங்கள் நமது பழைய தேசத்துக்கு அத்தகைய உத்வேகத்தை உதவி, அதற்கு நவ யௌவனத்தையும் நவ ஜீவனையும் நல்கும் என்று நம்புகிறேன்.

அக்காலத்தில் இந்தியாவின் பலமும் உறுதியும் எங்கும் பரந்திருந்த அதன் கிராமக் குடியரசு அல்லது பஞ்சாயத்து முறையில் ஆழ்ந்துகிடந்தன என்று சொல்ல லாம். இன்று இருப்பதுபோல் பெரிய நிலச்சுவான் தார்களோ அல்லது பெரிய ஜமீன்தார்களோ அந்நாளில் இல்லை. நிலம் பூராவும் கிராம சமுதாயத்துக்கோ, அல்லது பஞ்சாயத்துக்கோ, அல்லது அதில் பாடுபட்ட குடியானவர்களுக்கோ சொந்தமாக இருந்தது. இந்தப் பஞ்சாயத்துகளுக்குச் செல்வாக்கும் அதிகாரமும் நிறைய இருந்தன. பஞ்சாயத்து கிராம ஜனங்களால் தேர்ந் தெடுக்கப்பட்டபடியால் அம்முறைக்கு ஒரு ஜனநாயக அஸ்திவாரம் இருந்துவந்தது. அரசர்கள் வந்தார்கள்

போனார்கள்; அல்லது ஒருவரோடொருவர் சண்டையிட்டுக் கொண்டார்கள். ஆனால் அவர்களில் யாரும் இக்கிராம அமைப்பு முறையில் தலையிடவோ, கிராமப் பஞ்சாயத்துகளின் உரிமைகளில் கையை வைக்கவோ துணியவில்லை. ஆகவே, சாம்ராஜ்யங்கள் மாறின காலத்திலும் இக்கிராம அமைப்பு முறையை அடிப்படையாகக் கொண்ட சமுதாயமானது பெரிய மாறுதல் ஒன்றும் இன்றியே நடைபெற்றுவந்தது. படையெடுப்புக்களையும், போர்களையும், அரசர்கள் மாறுவதையும்பற்றிய வரலாறுகளை நாம் கேட்கும்போது இவைகளால் ஜன சமுதாயம் முழுவதும் பாதிக்கப்பட்டது என்று தவருக எண்ணுதல் கூடும். சில வேளைகளில், அதுவும் விசேஷமாக வட இந்தியாவில் ஜனங்கள் பாதிக்கப்பட்டார்கள் என்பது உண்மையே. ஆனால், மொத்தமாகப் பார்க்குமிடத்து, மேல்நிலையில் எத்தகைய மாறுதல்கள் நிகழ்ந்தாலும் ஜனங்கள் அதற்காக அதிகக் கவலைகொள்ளாமல் தங்கள் பாட்டில் தங்கள் வாழ்க்கையை நடத்திச் சென்றார்கள் என்பது பெறப்படுகின்றது.

இந்தியாவில் சமுதாய அமைப்பு நெடுங்காலம் வரையில் சீர்குலையாமல் பலம்பொருந்தி யிருந்ததற்கு இன்னொரு காரணம், இங்கு ஆதியில் வழங்கிவந்த ஜாதிமுறையே ஆகும். முதலில் ஜாதிமுறை அவ்வளவு கடுமையானதாக இல்லை. பிறகுதான் ஜாதிக் கட்டுப்பாடு வலுத்தது. அப்போது அது பிறப்பைமட்டும் அநுசரித்ததாகவும் இல்லை. மாறுதலையும் வளர்ச்சியையும் தடைப்படுத்தாமல் அவற்றைத் தாராளமாக அநுமதித்ததன் மூலம் அது இந்திய வாழ்க்கையைச் சிதருமல் பல்லாயிர வருஷங்களாகக் கட்டிக் காப்பாற்றிவந்தது. மதம் வாழ்க்கை ஆகிய இரண்டிலும் பழைய இந்திய மனோபாவமானது துவேஷமற்றதாகவும், ஆராய்ச்சியையும் சோதனை

யையும் மாறுதலேயும் வரவேற்பதாகவும் இருந்தது. அதனுல் அதற்குப் பலம் ஏற்பட்டது. ஆனுல், அடிக்கடி ஏற்பட்ட படையெடுப்புக்களாலும் வேறு பல இன்னல்களாலும் ஜாதிக்கட்டுப்பாடு கடுமையாக மாறத் தலைப்பட்டது. அத்துடன் இந்திய மனேபாவமும் தாராளமற்றதாகவும் பிடிவாதம் நிறைந்ததாகவும் மாறியது. இந்திய மக்கள் தற்காலம் இருக்கும் பரிதாப நிலைக்கு வருகிறவரையில் இம்மாறுதல் நிகழ்ந்துகொண்டே வந்தது; ஜாதி எல்லாவித முன்னேற்றங்களுக்கும் முட்டுக்கட்டையாக நின்றது. ஜாதியானது சமுதாய அமைப்பைச் சேர்த்துப் பிடிப்பதற்கு மாருக, அதைப் பல நூறு பிரிவுகளாகப் பிரித்து நம்மைப் பலவீனப்படுத்தியும் சகோதரனுக்கு விரோதமாகச் சகோதரனை நிறுத்தியும் வருகிறது.

கடந்த காலத்தில் இந்தியாவின் சமுதாய அமைப்பைப் பலப்படுத்த ஜாதி உதவியது. ஆயினும் அதனிடத்து அழிவுக்கான வித்துகள் புதைந்து கிடந்தன. உயர்வு தாழ்வையும் அநீதியையும் நிலைநிறுத்துவதை அடிப்படையாகக்கொண்ட எந்த முயற்சியும் முடிவில் பயன்படாதொழிவது திண்ணம். உயர்வு தாழ்வையும், அநீதியையும் ஒருவகுப்போ, கூட்டமோ பிறிதொன்றைச் சுரண்டுவதையும் அடிப்படையாகக் கொண்டு அமைக்கப்பட்ட எந்தச் சமுதாயமும் செம்மையாகவும் ஸ்திரமாகவும் இருக்க முடியாது. இன்றும் இவ்வநீதியான சுரண்டல் முறை இருந்துவருவதால்தான் உலகில் இவ்வளவு இன்னலும் போராட்டமும் இருக்கின்றன. ஆனுல் எங்கும் ஜனங்கள் இதை உணர்ந்து இத்தீமையை அகற்ற அரும்பாடுபட்டு வருகிருர்கள்.

இந்தியாவைப்போல், சீனுவிலும் சமுதாய அமைப்பின் பலம் கிராமங்களிலும், நிலத்தைப் படைத்து அதை

உழுது பயிரிட்ட பல்லாயிரக் கணக்கான குடியானவர்களிடத்திலும் இருந்தது. அங்கும் பெரிய ஜமீன்தார்கள் இல்லை. மதமானது சில மூடக் கொள்கைகளைப் பிடிவாதமாகப் பற்றிக்கொண்டு துவேஷம்பாராட்ட அநுமதிக்கப்படவில்லை. சீனர்கள், அன்றும் இன்றும் மற்றெல்லா நாட்டினரைக் காட்டிலும், மத சம்பந்தமான விஷயங்களில் மூடப்பிடிவாதம் அற்றவர்களாக இருக்கிறார்கள் என்று சொல்லலாம்.

கிரீசிலும், ரோமாபுரியிலும், இவைகளுக்கும் முந்தி எகிப்திலும் இருந்ததுபோன்ற தொழில் அடிமைத்தனம் இந்தியா, சீனா இரண்டிடங்களிலும் இல்லை என்பதை நீ நினைவில் வைக்கவேண்டும். வீடுகளில் சிலர் அடிமைகளாக இருந்தது உண்மையே. ஆயினும் அதனால் சமுதாய அமைப்புப் பாதிக்கப்படவில்லை. இவ்வடிமைகள் இல்லாவிட்டாலும் சமுதாயம் நடைபெற்று வந்திருக்கும். பண்டைய கிரீஸ் அல்லது ரோமாபுரியின் நிலைமை இவ்வாறல்ல. அங்கு நடைபெற்ற முறைக்குப் பல்லாயிரக் கணக்கான அடிமைகள் இன்றியமையாதவர்களாக இருந்தார்கள். வேலை முழுவதும் அவர்கள் தலைமீது விழுந்தது. எகிப்தில் இந்தத் தொழில் அடிமைகள் இருந்திராவிட்டால் அங்கே சமாதிக் கோபுரங்கள் (பிரமிட்கள்) தோன்றுவது எங்ஙனம்?

இக்கடிதத்தில் சீனாவைப்பற்றி ஆரம்பித்து அதன் கதையைத் தொடர்ந்து சொல்ல எண்ணினேன். ஆனால் வேறு விஷயங்களைப்பற்றிப் பேசிவிட்டேன். இது எனக்கு இயற்கையாய்ப் போய்விட்டது. அடுத்த தடவையாவது சீனாவைப்பற்றிமட்டும் பேசுகிறேனா என்று பார்ப்போம்.

# 41

## சீனு, டாங் வமிச ஆட்சியில் செழித்தோங்குகிறது

மே 7, 1932.

சீனுவை ஆண்ட ஹன் வமிசத்தைப்பற்றியும் பௌத்த மதத்தின் வருகையைப் பற்றியும் கூறினேன். அச்சிடும் முறை கண்டுபிடிக்கப்பட்டதைப் பற்றியும் பொது உத்தியோகஸ்தர்களை நியமிப்பதற்குப் பரீட்சை முறை ஏற்படுத்தப்பட்டதைப் பற்றியும் சொன்னேன். கி. பி. மூன்ரும் நூற்ருண்டில் ஹன் வமிசம் முடிவுற்று சாம்ராஜ்யம் மூன்று தனி ராஜ்யங்களாகப் பிரிந்து விடுகிறது. இவ்வாறு 'இம்மூன்று ராஜ்யங்கள்' பிரிந்து நின்று சில நூற்ருண்டுகள் வரையில் நடைபெறுகின்றன. ஒரு புதிய வமிசத்தின்கீழ் சீனு மீண்டும் ஒன்றுபட்டுப் பலம் பொருந்திய ஒரே ராஜ்யமாகத் திகழ்கின்றது. இப்புதிய வமிசம் டாங் (Tang) வமிசம் என்று அழைக்கப் படுகிறது. இது நிகழ்ந்தது ஏழாம் நூற்ருண்டின் ஆரம்பத்தில்.

சீனு மூன்று ராஜ்யங்களாகப் பிரிந்து நின்ற காலத்தும் கலையும் நாகரிகமும் நிலைகுலையாமல் வளர்ந்து வந்தன. வடக்கே யிருந்து வந்த (Tartars) தார்த்தாரி யரின் தாக்குதல்களும் கலை வளர்ச்சியைப் பாதிக்கவில்லை. பெரிய நூல் நிலையங்களைப்பற்றியும் அரிய ஓவியங்களைப் பற்றியும் நாம் கேள்விப்படுகிருேம். இந்தியா உயர்ந்த ஆடைகளையும் வேறு பல பொருள்களையும் அனுப்பிய தோடு தன் மதத்தையும், கலையையும், அறிவையும்

சீனுவுக்கு அனுப்பி வந்தது. பல பௌத்த மதப் பிரசார கர்கள் இந்தியாவிலிருந்து சீனுவுக்குச் சென்ருர்கள். அவர்கள் தங்களுடன் இந்தியாவின் கலைச் செல்வங் களையும் கொண்டு சென்ருர்கள். அவர்களுடன் இந்தியக் கலைவினைஞரும் தொழில் வினைஞரும் சென்றிருத்தல் கூடும். பௌத்த மதத்தின் வருகையும் இந்தியாவிலிருந்து சென்ற புதிய கருத்துக்களும் சீனுவில் பெரும்பலனை விளைத்தன. இதற்குமுன்பே சீனு உயர்ந்த நாகரிகம்பெற்று விளங்கிவந்தது. இந்தியாவின் மதமும், கலையும், அறிவும் ஒரு பிற்போக்கான நாட்டுக்குச் சென்று அதை ஆட் கொண்டன என்று கூறுவதற்கில்லை. இவை சீனுவில் அதன் பண்டைய கலைஞானங்களோடு மோதவேண்டி யிருந்தது. இம்மோதுதலின் விளைவாக இவ்விரண்டி னின்றும் மாறுபட்ட ஒன்று பிறந்தது. அதில் இந்திய அம்சம் நிறைய இருந்ததாயினும் அது சீனத்தன்மை வாய்ந்ததாகவும், சீன முறையில் உருவாக்கப்பட்டதாகவும் இருந்தது. இவ்வாறு இந்தியாவிலிருந்து வந்த சிந்தனு சக்திகள் சீனுவைக் கலைத் துறையிலும் அறிவுத் துறையிலும் தட்டி எழுப்பின.

இவ்வாறே பௌத்த மதமும் இந்தியக் கலையும் இன்னும் கிழக்கே கொரியாவுக்கும் ஜப்பானுக்கும் சென்றன. அதனுல் இந்நாடுகள் எவ்வாறு பாதிக் கப்பட்டன என்று பார்ப்போம். ஒவ்வொரு நாடும் தனக்கென உரிய மேதைக்கு ஏற்ப அவற்றை ஏற்றுப் பொருத்திக்கொண்டது. ஆகவே சீனு, ஜப்பான் இரண் டிடங்களிலும் பௌத்த மதம் செழித்தோங்கி யிருந்தாலும் ஒவ்வொன்றிலும் ஒவ்வொரு விதமாகக் காணப்படுகிறது. இவ்விரண்டும் இந்தியாவினின்று வந்த பௌத்தத்தினின்று பெரிதும் மாறுபட்டிருக்கலாம். கலையும் மக்களின் இயல்புக்கேற்றவாறு மாறுபடுகிறது.

இந்தியாவில் இப்போது நாம் கலையுணர்ச்சியையும் அழகுணர்ச்சியையும் அடியோடு மறந்துவிட்டோம். நெடுங்காலமாக அழகுள்ள எதையும் நாம் சிருஷ்டிக்காததோடு நம்மில் பெரும்பாலோர் அழகை அநுபவிக்கவும் தெரியாதவர்களாய் இருக்கிறோம். கட்டுண்டு கிடக்கும் ஒரு நாட்டில் கலையும் அழகும் செழிப்பது எங்ஙனம்? அடிமைத் தளையாகிற இருட்டில் அவை அழிந்தொழிகின்றன. ஆனால், சுதந்தரத்தை நாம் அகக்கண்ணால் காண ஆரம்பித்த உடனேயே நமது அழகுணர்ச்சி சிறிது சிறிதாக விழிப்படைந்து வருகிறது. சுதந்தரம் வந்தவுடனே நம் நாட்டில் கலையும் அழகும் புத்துயிர் பெற்று மலர்வதை நீ காண்பாய். அது பிரவாகம் போல் பெருகி நமது வாழ்க்கையிலும், இல்லங்களிலும், நகரங்களிலும் காணப்படும் அசுத்தங்களை ஒரேயடியாக அடித்துக் கொண்டு போய்விடும். இந்தியாவைப் போலில்லாமல் சீனாவும் ஜப்பானும் அதிர்ஷ்ட வசமாகத் தங்கள் கலையுணர்ச்சியையும் அழகுணர்ச்சியையும் போற்றிக் காத்து வந்திருக்கின்றன.

சீனாவில் பௌத்த மதம் பரவப் பரவ இந்தியாவிலிருந்து பல பௌத்தர்களும் பிக்ஷுகளும் அங்குச் சென்றார்கள். சீனத் துறவிகள் இந்தியாவுக்கும் வேறு நாடுகளுக்கும் யாத்திரிகர்களாக வந்தார்கள். பாஹியனைப் பற்றிச் சொல்லியிருக்கிறேன். யுவான் சுவாங்கையும் நீ அறிவாய். ஹுயிஷெங் (HuiSheng) என்னும் சீனத் துறவியொருவர் கிழக்குக் கடல்களில் பிரயாணம் செய்து திரும்பிய வரலாறு ஒன்று கூறப்படுகிறது. கி. பி. 499-இல் அவர் சீனாவின் தலைநகருக்குத் திரும்பினார். அவர் சீனாவுக்குக் கிழக்கே பல்லாயிர மைல்களுக்கப்பால் புசங் (FuSang) என்னும் ஒரு தேசத்தைத் தான் கண்டு வந்ததாகச் சொன்னார். சீனாவுக்கும் ஜப்பானுக்கும்

கிழக்கே பசிபிக் மகா சமுத்திரம் இருக்கிறது. அவர் இந்தச் சமுத்திரத்தைக் கடந்து ஒருவேளை மெக்சிகோவுக்குச் சென்றிருக்கலாம். ஏனெனில் மெக்சிகோவில் அந்நாளிலேயே ஒரு பழைய நாகரிகம் வழங்கிவந்தது.

சீனுவில் பௌத்த மதம் பரவியதைக் கண்டு, இந்தியாவில் பௌத்த மதத்தின் தலைவராக விளங்கிய போதிதர்மன் என்பவர் தென் இந்தியாவிலிருந்து கடல் மார்க்கமாகப் புறப்பட்டுச் சீனுவிலுள்ள கான்டனுக்குச் சென்றார். இந்தியாவில் பௌத்த மதம் சிறிது சிறிதாக க்ஷீணித்து வந்த காரணத்தாலும் அவர் சீனு சென்றிருக்கலாம். கி. பி. 526-இல் அவர் சென்றபோதே அவருக்கு வயது அதிகம் ஆகியிருந்தது. அவருடனும், அவருக்குப் பிறகும் வேறு பல துறவிகள் சீனுவுக்குச் சென்றார்கள். லோ-யாங் (Lo-Yang) என்னும் சீன மாகாணம் ஒன்றில் மட்டும் 3000 இந்தியத் துறவிகளும் 10,000 இந்தியக் குடும்பங்களும் அக்காலத்தில் இருந்ததாகச் சொல்லப்படுகிறது.

இந்தியாவில் இதற்குப் பிறகு பௌத்த மதம் மீண்டும் ஒரு முறை புத்துயிர் பெற்று விளங்கியது. புத்தபிரானின் ஜன்மபூமி என்ற காரணத்தாலும் பரிசுத்த கிரந்தங்கள் இருந்த இடமாகையாலும் பல பக்தி வாய்ந்த பௌத்தர்கள் இந்தியாவுக்கு வந்துகொண்டிருந்தார்கள். ஆனுல் இந்தியாவில் பௌத்த மதத்தின் பெருமை மங்கி மறைந்துவிட்டது. இப்போது சீனு தலை சிறந்த பௌத்த நாடாக விளங்குகிறது.

டாங் வமிசம் கி. பி. 618-இல் கௌட்சு (Kao Tsu) என்னும் சக்கரவர்த்தியின் காலத்திலிருந்து ஆரம்பமாகிறது. அவர் சீனுவை ஒன்றுபடுத்தியதோடல்லாமல் தெற்கே அன்னும், கம்போடியா வரையிலும், மேற்கே பாரசீகம், காஸ்பியன் கடல் வரையிலும் தம் ஆட்சியை

விஸ்தரித்தார். இந்தப் பெரிய சாம்ராஜ்யத்தில் கொரியாவின் ஒரு பாகமும் சேர்ந்திருந்தது. கிழக்கு ஆசியாவில் நாகரிகத்துக்கும் வேறு பல சிறப்புகளுக்கும் பேர்போன சி-அன்-பு (Si-an-Fu) என்னும் நகரம் இந்த சாம்ராஜ்யத்தின் தலைநகராயிருந்தது. சீனுவின் கலைகளையும், தத்துவ ஞானத்தையும், முறைகளையும் கற்றுக்கொண்டு போவதற்காக அறிவாளிகள் பலர் ஜப்பானிலிருந்தும் சுதந்தர நாடாயிருந்த தென்கொரியாவிலிருந்தும் வந்தனர்.

டாங் சக்கரவர்த்திகள், அயல் நாடுகளிலிருந்து வருவோருக்கும் அயல்நாட்டு வியாபாரத்துக்கும் பெரிய ஆதரவு அளித்தனர். வெளி நாடுகளிலிருந்து வந்த அல்லது குடியேறிய அயல் நாட்டவருக்கென்று விசேஷச் சட்டங்கள் இயற்றப்பட்டன. இயன்றவரையில் அவரவர்களின் பழக்க வழக்கங்களுக்குத் தகுந்தவாறு நியாயம் வழங்குவதற்காக இவ்வாறு செய்யப்பட்டது. கி. பி. 300-ஆம் ஆண்டில் தென் சீனுவில் கான்டனுக்கு அருகில் முக்கியமாக அரேபியர் குடியேறுவதைப் பார்க்கிறோம். இது இஸ்லாமின் வருகைக்கு முன், அதாவது மகம்மது நபி பிறப்பதற்கு முன் நடந்தது. இந்த அரேபியரின் உதவியால் வெளி நாடுகளுடன் கப்பல் வியாபாரம் விருத்தியடைந்தது. அரேபியக் கப்பல்களும் சீனக் கப்பல்களும் பண்டங்களை ஏற்றிச் சென்றன.

சென்சஸ் அதாவது ஒரு தேசத்தின் ஜனத்தொகையைக் கணிக்கும் வழக்கம் சீனுவில் ஆதிகாலத்திலேயே உண்டென்பதை அறிய நீ ஆச்சரியப்படுவாய். கி. பி. 156-ஆம் ஆண்டிலேயே ஒரு சென்சஸ் எடுக்கப்பட்டதாம். இது ஹன் வமிசத்தாரின் ஆட்சியில் நிகழ்ந்திருக்க வேண்டும். தனி மனிதர்களை எண்ணுமல் குடும்பம் குடும்பமாக எண்ணிக் கணக்கெடுக்கப்பட்டது. ஒவ்வொரு குடும்பத்திற்கும் சராசரி ஐந்துபேர் வீதம் கணக்கிட்டுப்

பார்த்தால், கி. பி. 156-இல் சீனுவின் ஜனத்தொகை ஐந்து கோடி என்று ஏற்பட்டது. இவ்வாறு கணக்கிடும் முறை அவ்வளவு சரியானது என்று சொல்வதற்கில்லை. ஆயினும் இந்த 'சென்ஸஸ்' மேல் நாடுகளுக்கு ஒரு புதுமையான விஷயம் என்பதை நாம் நினைவில் வைக்கவேண்டும். அமெரிக்க ஐக்கிய நாடுகளில் 150 ஆண்டுகளுக்கு முன்னர் தான் முதல் சென்சஸ் எடுக்கப்பட்டதென்று நினைக்கிறேன்.

டாங் வமிச ஆட்சியின் ஆரம்ப காலத்தில் கிறிஸ்தவ மதமும் இஸ்லாம் மதமும் சீனுவுக்கு வந்தன. மேல் நாடுகளில் நாஸ்திகர் என்று ஒதுக்கப்பட்டுத் துரத்தப் பட்ட ஒரு பிரிவினரால் கிறிஸ்தவமதம் சீனுவுக்குக் கொண்டு வரப்பட்டது. அவர்களுக்கு நெஸ்தோரியர் (Nestorians) என்று பெயர். கிறிஸ்தவ மதப் பிரிவின ருக்குள் நடந்த வாத தர்க்கங்களைப்பற்றியும், போர்களைப் பற்றியும் முன்பே எழுதியிருக்கிறேன். இவ்வாதங்கள் ஒன்றின் காரணமாகத்தான் நெஸ்தோரியர் ரோமாபுரியி லிருந்து விரட்டியடிக்கப்பட்டனர். ஆனால் அவர்கள் சீனுவிலும், பாரசீகத்திலும், ஆசியாவின் மற்றப் பாகங் களிலும் பரவினுர்கள். அவர்கள் இந்தியாவுக்கும் வந்து சிறிது வெற்றியும் பெற்ருர்கள். ஆனல் பிறகு கிறிஸ்தவ மதத்தின் வேறு பிரிவினரும் இஸ்லாம் மதத்தினரும் வந்து நெஸ்தோரியரை இருந்த இடம் தெரியாமல் செய்துவிட்டனர். நாம் சென்ற வருஷம் தென் இந்தியாவுக்குச் சென்றபோது இவர்கள் ஒரு சிறு கூட்டத்தாராக வசிப்பதைக் காண மிகவும் ஆச்சரிய மடைந்தேன். அது உனக்கு ஞாபகம் இருக்கிறதா? அவர்களுடைய மத குரு நமக்குத் தேநீர் விருந்து அளித் தாரே, அந்தப் பெரியவர் ரொம்பவும் குஷியான மனிதர்.

கிறிஸ்தவ மதம் சீனுவுக்குச் செல்லச் சிறிது காலம்

பிடித்தது. ஆனால் இஸ்லாம் விரைவில் பரவியது. நெஸ்தோரியர் வருவதற்குச் சில வருஷங்களுக்கு முன்பே முகம்மது நபி உயிர் வாழ்ந்திருந்த காலத்திலேயே இஸ்லாம் சீனாவுக்கு வந்துவிட்டது. சீன சக்கரவர்த்தி இரு கோஷ்டியாரையும் மரியாதையாக வரவேற்று அவர்கள் சொல்லியவற்றைக் கவனத்துடன் கேட்டார். இருதிறத்தாரின் கொள்கைகளையும் அவர் பாராட்டியதோடு இருவருக்கும் பட்சபாதமற்ற முறையில் தயவு காட்டினார். கான்டனில் ஒரு மசூதி கட்டிக்கொள்ள அரேபியருக்கு அநுமதி அளிக்கப்பட்டது. 1300 ஆண்டுகளுக்கு முன் கட்டப்பட்ட இம்மசூதி இன்னும் இருக்கிறது. உலகில் உள்ள மிகப் பழைய மசூதிகளில் இதுவும் ஒன்றாகும்.

இதே போலக் கிறிஸ்தவர்கள் மாதாகோயில் ஒன்று கட்டிக்கொள்வதற்கும், மடம் ஒன்று கட்டிக்கொள்வதற்கும் டாங் சக்கரவர்த்தி அநுமதி அளித்தார். பிற மதத்துவேஷமற்ற இம் மனோபாவம் எங்கே! ஒரே, மதத்துவேஷம் குடிகொண்ட அந்நாளைய ஐரோப்பிய மனோபாவம் எங்கே!

அரேபியர் சீனரிடமிருந்து காகிதம் செய்யக் கற்றுக் கொண்டு அதைப் பிறகு ஐரோப்பியருக்குக் கற்றுக் கொடுத்தார்கள் என்று சொல்லப்படுகிறது. கி.பி 751-இல் மத்திய ஆசியாவிலுள்ள துருக்கி ஸ்தானத்தில் சீனர்களுக்கும் அரேபிய முஸ்லிம்களுக்கு மிடையே ஒரு போர் நிகழ்ந்தது. அரேபியர் அதில் சீனர் பலரைச் சிறை பிடித்தனர். அவர்கள் அரேபியருக்குக் காகிதம் செய்யக் கற்றுக் கொடுத்தார்கள்.

டாங் வமிசத்தார் 300 ஆண்டுகள் அதாவது கி. பி. 907-ஆம் ஆண்டுவரையில் ஆண்டனர். இம் முன்னூறு ஆண்டுகள் சீனாவின் மிகப் பெரிய காலம் என்று சிலரால்

கருதப்படுகிறது. அக்காலத்தில் மக்கள் உயரிய நாகரிகம் உற்றிருந்ததோடு சந்தோஷமான வாழ்க்கை நடத்தி வந்தார்கள். மேனுட்டார் மிகவும் பிற்பட்ட காலத்தில் அறிந்துகொண்ட பல விஷயங்களைச் சீனர் அப்போதே அறிந்திருந்தார்கள். காகிதத்தை முன்பே குறிப்பிட்டிருக்கிறேன். துப்பாக்கி மருந்து இன்னென்று. அவர்களில் தேர்ந்த சிற்ப வல்லவர்கள் இருந்தார்கள். எதை எடுத்துக் கொண்டாலும் அவர்கள் ஐரோப்பியரைவிட முன்னேறி யிருந்தார்கள். அவ்வாறு இருந்தவர்கள் இன்று விஞ்ஞானத் துறையிலும் புதுப் புது உண்மைகளைக் கண்டுபிடிப்பதிலும் ஏன் ஐரோப்பாவை விஞ்சி நிற்கக்கூடாது? ஆனல் ஐரோப்பா சிறிது சிறிதாக ஊர்ந்து வந்து சீனுவைப் பிடித்துவிட்டதோடு இளைஞன் ஒருவன் கிழவன் ஒருவனை முந்திக்கொண்டு செல்வது போலச் சில விஷயங்களிலாவது சீனுவை வெகு சீக்கிரத்திலேயே முந்திக்கொண்டு விட்டது. தேசங்களின் சரித்திரத்தில் ஏன் இவ்வாறு நிகழவேண்டும்? தத்துவ சாஸ்திரிகள் மண்டைகளை உடைத்துக்கொண்டு யோசிக்க வேண்டிய பிரச்னை இது. இதைப்பற்றி யோசிப்பதற்கு நீ இன்னும் ஒரு தத்துவ சாஸ்திரி ஆகாததால் நானும் இதைப்பற்றிக் கவலைப்படப் போவதில்லை.

இக்காலத்தில் சீனு அடைந்திருந்த பெருமை ஆசியாவின் மற்ற நாடுகளையும் வசீகரித்தது. அவைகள் கலையிலும் நாகரிகத்திலும் சீனுவைத் தங்களுக்கு வழி காட்டியாகக் கொண்டன. குப்த சாம்ராஜ்யம் முடிவுற்ற பிறகு இந்தியா தன் உச்ச நிலையிலிருந்து தாழ்ந்து விட்டது. வழக்கம்போல், சீனுவின் முன்னேற்றமும் நாகரிகமும் ஆடம்பர வாழ்க்கைக்கும் சோம்பேறித்தனமான சுகவாழ்க்கைக்கும் அடிகோலின. இதனுல் அரசாங்கம் சீர்கேடடைந்தது. வரிப்பளுவு அதிகமாயிற்று. டாங் வமிசத்தின் ஆட்சி மக்களுக்குப் போதும் போதும் என்ருகிவிட்டது. ஆகவே அவர்கள் அதன் ஆட்சிக்கு முற்றுப்புள்ளி வைத்தார்கள்.

# 42

# தேர்ந்தெடுக்கப்பட்ட நாடும் சூரியோதய நாடும்

மே 8, 1932.

**நா**ம் உலகத்தின் கதையைத் தொடர்ந்து கவனிக்கும் போது மேலும் மேலும் பல தேசங்கள் நம் ஆராய்ச்சியுள் அடங்கும். ஆகவே, சீனுவுக்கு அண்டையிலுள்ள, பல வழிகளில் சீன நாகரிகத்தின் குழந்தைகள் என்று கருதத்தக்க கொரியாவையும் ஜப்பானையும் சிறிது நோக்கு வோம். ஆசியாவின் கீழ்பாகத்தில், கடைக்கோடியில் அவை இருக்கின்றன. அவைகளுக்கப்பால் பசிபிக் சமுத்திரம் இருக்கிறது. சமீப காலத்துக்கு முன்பு அமெரிக்கா கண்டத்தோடு அவைகளுக்குத் தொடர்பு இருந்ததில்லை. ஆகவே அவைகளுடைய உறவெல்லாம் ஆசியாவின் மத்திய பாகத்திலிருந்த சீனுவுடன்தான். சீனுவிலிருந்தும், சீனு மூலமாகவும் அவைகள் தங்களுடைய மதம், கலை, நாகரிகம் ஆகியவற்றைப் பெற்றன. கொரியாவும் ஜப்பானும் சீனுவுக்குப் பெரிதும் கடமைப் பட்டிருக்கின்றன; ஓரளவு இந்தியாவுக்கும் அவை கடமைப்பட் டிருக்கின்றன. இந்தியாவிலிருந்து அவை எதைப் பெற்றிருந்தாலும் அது சீனு மூலமாக, சீனமய மாக்கப்பட்டுச் சென்றதேயாகும்.

ஆசியாவிலும் பிற இடங்களிலும் நிகழ்ந்த பெரு நிகழ்ச்சிகளுக்கும், கொரியா ஜப்பானுக்கும் யாதொரு சம்பந்தமும் இல்லை. அதற்குக் காரணம் அவைகள் இருந்த இடமேயாகும். பிரதான க்ஷேத்திரத்துக்கு வெகு

தூரத்தில் இருந்தது அவைகளுக்கு—முக்கியமாக ஜப்பானுக்கு அனுகூலமாகவே முடிந்தது. ஆகவே நாம் அவைகளுடைய சமீபகாலச் சரித்திரம் நீங்கலாகவுள்ள ஏனைய சரித்திரத்தை அவ்வளவாகப் பாராட்ட வேண்டியதில்லை. ஆசியாவின் மற்றப் பாகங்களில் நிகழ்ந்த நிகழ்ச்சிகளை அறிவதில் இது நமக்கு அதிகம் துணைபுரியவில்லை. ஆனால் மலாயாசியா, கிழக்குத் தீவுகள் இவற்றின் பண்டைய சரித்திரத்தை நாம் புறக்கணிக்காததுபோல் இதையும் புறக்கணிக்க வேண்டியதில்லை. ஐயோ பாவம், கொரியாவை இப்போது எல்லாரும் மறந்து விட்டார்கள். ஜப்பான் அதை விழுங்கித் தன் சாம்ராஜ்யத்தில் ஒரு பாகமாகச் சேர்த்துக் கொண்டது. ஆனால் கொரியா இன்னும் சுதந்தரக் கனவு கண்டுகொண்டு அதற்காகப் போராடியும் வருகிறது. இப்போது ஜப்பானின் பெயர் பத்திரிகைகளில் அதிகமாக அடிபடுகிறது. அது சீனாவைத் தாக்கும் செய்திகளை அவைகள் நமக்குத் தெரிவிக்கின்றன. இதை நான் எழுதும்போது மஞ்சூரியாவில் யுத்தம் நடைபெற்றுக் கொண்டிருக்கிறது. ஆகவே கொரியா, ஜப்பான் இவைகளின் கடந்த காலத்தைச் சிறிது தெரிந்து கொள்வது தற்காலத்தைப் புரிந்துகொள்ள உதவியாயிருக்கும்.

முதல் முதல் நாம் தெரிந்துகொள்ள வேண்டியது என்னவென்றால், அந்நாடுகள் நீண்டகாலமாகத் தனித்து நின்றமையேயாகும். ஜப்பான் தனித்து நின்று பிறர் படை யெடுப்பினின்றும் தப்பிவந்தது ஒரு பெரிய ஆச்சரியம். ஜப்பானின் சரித்திரம் முழுவதையும் பார்த்தால் அதன்மீது படையெடுக்கச் சில முயற்சிகளே செய்யப்பட்டன; அவைகளும் பலிக்காமற் போய் விட்டன. சமீபகாலம் வரையில், ஜப்பானின் கஷ்டங்களெல்லாம் உள்நாட்டில் ஏற்பட்டவையே. சிலகாலம் ஜப்பான் உலகத்தோடு தனக்குள்ள சம்பந்தம் எல்லா

வற்றையும் அறுத்துக்கொண்டு தனியாக வாழ்ந்து வந்தது. ஜப்பானியர் யாரும் வெளியே போகமுடியாது. வெளியார் யாரும், ஏன் சீனர்கள்கூட ஜப்பானுக்குள்ளே பிரவேசிக்கமுடியாது. ஐரோப்பாவிலிருந்து வந்த அந்நியரிடமிருந்தும், கிறிஸ்தவப் பாதிரிகளிடமிருந்தும் தங்களைக் காத்துக்கொள்ள அவர்கள் இவ்வாறு செய்தனர். . இது பெரிய முட்டாள்தனம்; அபாயகரமானதும் கூட. ஏனெனில் இது ஒரு தேசம் முழுவதையும் சிறையில் அடைத்து வெளியில் இருந்துவரும் நல்லது கெட்டது எதையும் பரிசிக்க ஒட்டாமல் செய்வதற்கு ஒப்பாகும். பிறகு திடீரென்று ஜப்பான் தன் கதவுகளைத் திறந்து, ஐரோப்பா கற்பிக்கக்கூடியது அனைத்தையும் கற்றுக் கொள்ளப் பாய்ந்து சென்றது. அதில் அவ்வளவு தூரம் தன் சிந்தையை ஊன்றவைத்துக் கற்றதனால் ஜப்பான் ஒன்றிரண்டு தலைமுறைக்குள் வெளிப் பார்வைக்கு எந்த ஐரோப்பிய நாட்டுக்கும் ஈடு சொல்லக்கூடிய நிலைமைக்கு வந்துவிட்டது. அது மட்டுமா? ஐரோப்பாவின் தீய அம்சங்களையும் அது பற்றிக்கொண்டது. இவையெல்லாம் கடந்த எழுபதாண்டுகளில் நிகழ்ந்த நிகழ்ச்சிகளாகும்.

கொரியாவின் சரித்திரம் சீன சரித்திரத்துக்கு நெடுங்காலம் பின்னரும், ஜப்பானியச் சரித்திரம் கொரியாவின் சரித்திரத்துக்கு நெடுங்காலம் பின்னரும் ஆரம்பமாகின்றன. சென்ற வருஷம் எழுதிய கடிதங்களுள் ஒன்றில் சீனாவை ஆண்ட ராஜவமிசம் மாறியது காரணமாகக் கிட்-சே(Ki -T se) என்பவன் 5000 பேருடன் சீனுவினின்றும் புறப்பட்டுக் கிழக்கு நோக்கிச் சென்றதைப் பற்றிக் கூறியிருக்கிறேன். அவன் கொரியாவில் தங்கி அதைத் 'தேர்ந்தெடுக்கப்பட்ட நாடு' அல்லது 'காலை நேரத்துச் சாந்தி நிறைந்த நாடு' என்று அழைத்

தான். இது கி. மு. 1122-இல் நிகழ்ந்தது. கி-ட்சே வந்த போது அவனுடன் சீனக்கலை, கைத்தொழில், விவசாயம், பட்டாடை நெய்தல் முதலிய தொழில்கள் யாவும் வந்தன. தொள்ளாயிரம் ஆண்டுகளுக்கு மேலாக கி-ட்சேயின் சந்ததியார் கொரியாவை ஆண்டனர். சீனுவிலிருந்து பலர் அவ்வப்போது வந்து கொரியாவில் தங்கியபடியால் சீனுவுக்கும் கொரியாவுக்கும் இடையே நெருங்கிய சம்பந்தம் இருந்து வந்தது.

சீனுவில் ஷி உவாங் டி அரசாண்டகாலையில் சீனர் பெருங் கூட்டமாகக் கொரியாவுக்கு வந்தனர். அசோகர் காலத்தில் வாழ்ந்த இச்சீன சக்கரவர்த்தியை நீ மறந் திருக்கமாட்டாய். இவன்தான் தன்னை 'முதல் சக்கர வர்த்தி' என்று அழைத்துக்கொண்டு பழைய நூல்களை யெல்லாம் கொளுத்திப் போட்டவன். இரக்கமற்ற இம் மன்னனுல் துரத்தப்பட்ட சீனர் பலர் கொரியாவில் தஞ்சம்புகுந்து வலி குறைந்த கி-ட்சேயின் சந்ததியாரை ஆட்சியினின்று ஓட்டிவிட்டனர். இதற்குப்பிறகு 800 ஆண்டுகள் வரையில் கொரியா பல சிறு சிறு ராஜ்யங் களாகப் பிரிந்து கிடந்தது. இந்த ராஜ்யங்கள் சதா தங்களுக்குள் சண்டையிட்டு வந்தன. இவைகளில் ஒன்று சீனுவின் உதவியைக் கோரியது—இது எவ்வளவு அபாயகரமான விஷயம் என்பது பிறகு புலனுயிற்று. சீன உதவி வந்தது ; ஆனுல் அது திரும்பிப் போக மறுத்து விட்டது. வல்லரசுகளின் வாடிக்கையே இதுதான். சீனு அங்கேயே அழுந்தி நின்று கொரியாவின் ஒரு பாகத்தைத் தன் சாம்ராஜ்யத்தில் சேர்த்துக்கொண்டது. எஞ்சியிருந்த மற்றப் பாதியும் சீனுவை ஆண்ட டாங் வமிச சக்கரவர்த்திகளுக்கு, சில நூற்றுண்டுகள்வரையில் அடங்கிக் கிடந்தது.

கி. பி. 935-இல் கொரியா ஓர் ஐக்கிய சுதந்தரநாடாக

மாறியது. இதைச் சாதித்தவன் வாங் - கீன் (Wang-Kien) என்பவன். இவனுடைய சந்ததியார் 450 ஆண்டுகள் வரையில் அந்நாட்டை ஆண்டனர்.

இரண்டு மூன்று பாராவில் கொரியாவின் 2000 வருஷத்துச் சரித்திரத்தைச் சொல்லிவிட்டேன்! கொரியா சீனுவுக்குப் பெரிதும் கடமைப்பட்டுள்ள விஷயம் ஒன்று தான் நினைவில் வைக்கத் தகுந்ததாகும். கொரியா சீனுவிட மிருந்தே எழுதக் கற்றுக்கொண்டது. ஆயிரம் ஆண்டுகள் வரையில் அவர்கள் சீன எழுத்துகளையே உபயோகித்து வந்தனர். சீன எழுத்துகள் வெறும் எழுத்துகளல்ல என்பதும், அவை சொற்களையும், சொற்றொடர்களையும், கருத்துக்களையும் குறித்து நிற்பன என்பதும் உனக்கு நினைவிருக்கலாம். பிறகு அவர்கள் இதிலிருந்து தங்கள் பாஷைக்குப் பொருத்தமான எழுத்துகளைச் சிருஷ்டித்துக் கொண்டார்கள்.

பௌத்தமதம் சீனு வழியாக வந்தது. கன்பூஷிய மதமும் சீனுவிலிருந்து வந்தது. கலையுணர்வு இந்தியாவி லிருந்து சீனுமூலமாகக் கொரியாவுக்கும் ஜப்பானுக்கும் சென்றது. கொரியா கலைத்துறையில் சிறந்து விளங்கியது. முக்கியமாக, சிற்பக்கலையில் அது மேன்மை பெற்றிருந்தது. அவர்களுடைய கட்டிடமுறை சீன முறையை ஒத் திருந்தது. கப்பல்கட்டும் தொழில் மிகவும் அபிவிருத்தி அடைந்திருந்தது. ஒரு காலத்தில் கொரியாவின் பலம் பொருந்திய கப்பற்படை ஜப்பான்மீது படையெடுத்தும் சென்றது.

ஒருவேளை தற்கால ஜப்பானியரின் மூதாதையர் கொரியாவிலிருந்து வந்தவர்களா யிருக்கலாம். சிலர் தெற்கே மலாயாசியாவிலிருந்து வந்திருக்கலாம். ஜப் பானியர் மங்கோலிய வகுப்பைச் சேர்ந்தவர்கள் என்பது உனக்குத் தெரியும். 'ஐனஸ்' (Ainus) என்று அழைக்கப்

படும் ஜாதியார் இன்றும் ஜப்பானில் இருக்கிறார்கள். இவர்கள்தான் ஜப்பானின் பூர்விகக் குடிகள் என்று கருதப்படுகிறது. இவர்கள் சிவந்த நிறமும், நிறைந்த தலைமயிரும் உடையவர்களாகவும், சாதாரண ஜப்பானியரினின்றும் வேறுபட்டவர்களாகவும் இருக்கிறார்கள். இந்த ஐனஸ் ஜாதியார் ஜப்பான் தீவுகளின் வடபாகத்துக்குத் துரத்தப்பட்டனர்.

ஏறக்குறைய கி. பி. 200-ஆம் ஆண்டில் யாமாடோ (Yamato) ராஜ்யத்தை ஜிங்கோ (Jingo) என்னும் பெயர் பூண்ட சக்கரவர்த்தினி ஆண்டதாகத் தெரிகிறது. யாமாடோ என்பது ஜப்பானின் ஆதிப் பெயர். அல்லது வெளியிலிருந்து சென்றவர்கள் குடியேறிய பாகத்துக்கு அப்பெயர் வழங்கி யிருக்கலாம். ஜிங்கோ என்னும் பெயரைச் சிறிது எண்ணிப்பார். ஜப்பானை ஆதி காலத்தில் ஆண்ட ஓர் அரசியின் பெயராக அது அமைந்திருப்பது விந்தையாயிருக்கிறது. 'ஜிங்கோ' என்னும் சொல்லுக்கு ஆங்கிலத்தில் ஒரு குறிப்பிட்ட அர்த்தம் ஏற்பட்டிருக்கிறது. அந்தச் சொல், தான் என்ற ஆணவம் படைத்த ஏகாதிபத்திய வெறியாரைக் குறிக்கிறது; அல்லது பொதுவாக சாம்ராஜ்ய வாதிகளைக் குறிக்கிறது என்று சொல்லலாம். ஏனெனில் அத்தகையவர் யாரும் ஓரளவுக்கு ஆணவமும் திமிரும் படைத்தவர்களாகத் தான் இருக்கமுடியும். இந்தச் சாம்ராஜ்ய வாதம் அல்லது ஜிங்கோ வாதம் என்னும் வியாதியானது ஜப்பானையும் பீடித்திருப்பதாகக் கருதப்படுகிறது. சென்ற சில ஆண்டுகளில் ஜப்பான் கொரியாவிலும் சீனாவிலும் மிகவும் அக்கிரமமாக நடந்து வந்திருக்கிறது. ஆகவே சரித்திரம் சொல்லும் முதல் ஜப்பானிய அரசியின் பெயர் 'ஜிங்கோ' என்றிருப்பது விந்தையே யாகும்.

யாமாடோவுக்கும் கொரியாவுக்கும் நெருங்கிய உறவு

இருந்துவந்தது. கொரியா மூலமாகத்தான் சீன நாகரிகம் யாமாடோவை அடைந்தது. எழுதப்பட்ட சீனபாஷையும் கொரியா மூலமாக கி. பி. 400-இல் வந்தது. இவ்வாறே பௌத்த மதமும் வந்தது. கி பி. 552-இல் கொரியாவின் மூன்று ராஜ்யங்களில் ஒன்ருகிய பாக்ச்சி (Pakche)யை ஆண்ட அரசன், யாமாடோவை ஆண்ட அரசனுக்குப் பொன்னுலாகிய புத்த விக்கிரகம் ஒன்றையும், பௌத்த நூல்களையும், மதப் பிரசாரகர்களையும் அனுப்பி வைத்தான்.

ஜப்பானியரின் ஆதி மதம் 'ஷின்டோ' (Shinto) என்பது. இந்தச் சீனச் சொல்லுக்கு 'தேவர் வழி' (Way of the Gods) என்று அர்த்தம். அது இயற்கை வணக்கமும் மூதாதையர் வணக்கமும் கலந்த ஒன்ருகும். மரணத்துக்குப் பின்னிட்ட வாழ்க்கையைக் குறித்தும், ரகசியங்களைக் குறித்தும், இதர பிரச்சினைகளைக் குறித்தும் அது கவலைகொள்ளவில்லை. போர்வீரம் பூண்ட ஒரு ஜாதியாரின் மதம் அது. ஜப்பானியர், சீனருக்கு அருகிலிருந்தும், நாகரிகத்தில் அவர்களுக்குப் பெரிதும் கடன்பட்டிருந்தும், அவர்களினின்று முற்றிலும் மாறுபட்டிருக்கிருர்கள். சீனர் அன்றும் இன்றும் சமாதானப்பிரியர்கள். அவர்களின் நாகரிகம், வாழ்க்கைத் தத்துவம் முழுவதும் சமாதானத்தை அடிப்படையாகக் கொண்டது. ஜப்பானியர், இதற்குமாருக. அன்றும் இன்றும் போரில் விருப்பமுடையவர்கள். ஒரு போர்வீரனின் விசேஷகுணம் என்னவென்ருல் தன் தலைவனிடத்தும் தோழனிடத்தும் விசுவாசமுடையவனுயிருப்பதேயாகும். இதுதான் ஜப்பானியரின் குணமும். அவர்களுடைய பலம், பெரும்பாலும் இதைப் பொறுத்தே இருக்கிறது. ஷின்டோ மதம் இக்குணத்தை வளர்த்தது. அது 'தேவர்களைப் பெருமைப்படுத்தி அவர்களின் சந்ததி

யாரிடம் விசுவாசமாயிரு' என்று போதித்தது. ஆகவே அது ஜப்பானில் இன்றுவரையில் பௌத்த மதத்தோடு கூடவே இருந்துவருகிறது.

ஆனால் இதை ஒரு நற்குணம் என்று சொல்லலாமா? தோழனிடத்தோ அல்லது ஒரு கொள்கையினிடத்தோ விசுவாசமாயிருப்பது நல்லதுதான். ஆனால் ஷின்டோ மதமும் பிற மதங்களும், நமது விசுவாசத்தை நம்மை ஆளும் ஒரு சிறு கூட்டத்தாருக்கு நன்மை தரும் முறையில் பயன்படுத்த முயற்சித்து வந்திருக்கின்றன. ஜப்பானிலும் ரோமாபுரியிலும் பிற இடங்களிலும் போதிக்கப்பட்ட இவ்வதிகார வணக்கம் எவ்வளவு கேட்டிற்குக் காரணமாயிருந்ததென்பதைப் பிறகு நீ காண்பாய்.

பழைய ஷின்டோ மதத்துக்கும் புதிய பௌத்த மதத்துக்கும், அது முதலில் வந்தபோது சிறிது போராட்டம் இருந்தது. ஆனால் சீக்கிரத்தில் அவை ஒன்றின் பக்கலில் ஒன்று நிலைத்திருக்க ஆரம்பித்தன. இதுகாறும் அவ்வாறே இருந்து வருகின்றன. இவ்விரண்டில் ஷின்டோ மதம் அதிக ஜன ஆதரவு பெற்றது. ஆளுவோரும் அதை ஊக்கி வளர்க்கிறார்கள். அதற்குக் காரணம் அது அவர்களுக்குக் கீழ்ப்படிதலையும் விசுவாசத்தையும் போதிப்பதுதான். பௌத்த மதம் சற்று அபாயகரமானது. ஏனெனில் அதைத் தோற்றுவித்தவரே ஒரு புரட்சிக்காரர் அல்லவா?

ஜப்பானின் கலைச் சரிதம் பௌத்த மதத்தின் வருகையிலிருந்து ஆரம்பமாகிறது. ஜப்பான் சீனாவுடன் நேர்முகமான சம்பந்தம் வைத்துக்கொள்ள ஆரம்பித்தது. டாங் வமிசத்தாரின் ஆட்சியில் சீனாவின் புதிய தலைநகராகிய சி-அன்-பு கிழக்கு ஆசியா முழுவதிலும் புகழ் பரப்பி விளங்கிய காலத்தில், ஜப்பானிலிருந்து அடிக்கடி தூது கோஷ்டிகள் சீனாவுக்குச் சென்று வந்தன.

ஜப்பானியர் அதாவது யாமாடோவில் வாழ்ந்தவர்கள் நரா (Nara) என்னும் புதிய தலைநகர் ஒன்றைச் சிருஷ்டித்து அதை சி-அன்-புவைப்போல் எல்லாவிதத்தும் ஆக்க முயன்று வந்தனர். பிறரைக் 'காப்பி' அடிப்பதில் ஜப்பானியர் எப்போதுமே அதிசமர்த்தர்களாயிருந்து வந்திருக்கிறார்கள்.

ஜப்பானியச் சரித்திரம் நெடுகிலும், பெரிய குடும்பங்கள் ஒன்றையொன்று எதிர்த்து அதிகாரத்துக்காகப் போரிடுவதை நாம் காண்கிறோம். பழைய நாளில் இதையே பிற இடங்களிலும் காண்கிறோம். இந்தக் குடும்பங்களில் பழைய ஜாதிப்பற்று (Clan-idea) அப்படியே இருந்து வருகிறது. ஆகவே ஜப்பானியச் சரித்திரம் விசேஷமாகக் குடும்பங்களுக்கிடையே நிகழும் போட்டியின் சரித்திரமேயாகும். அவர்களுடைய சக்கரவர்த்தி—மிகாடோ—சூரியனின் பரம்பரையில் வந்தவரென்றும், தெய்வாம்சம் பொருந்தியவரென்றும், சர்வ வல்லமையும் உடைய தனி மன்னவர் என்றும் கருதப் படுகிறார். ஷின்டோ மதமும் மூதாதையர் வணக்கமும் சேர்ந்து ஜனங்களைச் சக்கரவர்த்தியின் யதேச்சாதிகாரத்தை ஒப்புக் கொள்ளும்படியும், தேசத்தில் செல்வாக்கும் அதிகாரமும் உடையவர்களுக்குக் கீழ்ப்படியுமாறும் செய்துவிட்டன. ஆனால் ஜப்பானில் சக்கரவர்த்திகளாயிருப்போர் பெரும்பாலும் உண்மையான அதிகாரம் அற்ற பொம்மைகளாகவே இருந்து வந்திருக்கிறார்கள். அதிகாரம் ஏதாவதொரு பெரிய குடும்பத்தாரிடம் அல்லது கூட்டத்தாரிடம் இருக்கும் அவர்கள் தாங்கள் விரும்பியவர்களை அரசர்களாகவும் சக்கரவர்த்திகளாகவும் ஆக்குவது வழக்கம்.

சரித்திரத்தில் நாம் அறியக் கிடக்கும், அரசாங்கத்தைத் தன் ஆதிக்கத்தின்கீழ் வைத்திருந்த முதல்

ஜப்பானியக் குடும்பத்தின் பெயர் 'சோகா குடும்பம்' (Soga family) என்பது. அவர்கள் பௌத்த மதத்தைத் தழுவினார்கள். அதிலிருந்து பௌத்தம் அரசாள்வோர் மதமாயிற்று. அவர்களுடைய தலைவர்களில் ஒருவனான ஷோடுகு தைஷி (Shotuku Taishi) என்பவன் ஜப்பானியச் சரித்திரத்திலேயே நாம் காணும் மிகவும் பெரிய மனிதர்களில் ஒருவன். அவன் சிறந்த பௌத்தனாகவும் கலை வல்லோனாகவும் இருந்தான். அவன் சீன பாஷையிலுள்ள கன்பூஷிய நூல்களைக் கற்று, அரசாங்கத்தை வெறும் பலத்தை மட்டும் அடிப்படையாகக் கொண்டு நடத்தாமல் தருமத்தை அடிப்படையாகக்கொண்டு நடத்த முயன்றான். ஜப்பான் அப்போது சிற்சில சிறு கூட்டத்தாரின் ஆட்சியில் இருந்தது. அக்கூட்டத்தாரின் தலைவர்கள், யாருக்கும் அடங்காமல் சுயேச்சையாக வாழ்ந்து ஒருவரோடொருவர் போரிட்டு வந்தனர். சக்கரவர்த்திக்குப் பேர் பெரிதாய் இருந்தாலும் அவரும் ஒரு கூட்டத் தலைவர் மாதிரிதான். ஷோடுகு தைஷி இதை மாற்றி மத்திய அரசாங்கத்தைப் பலப்படுத்த ஆரம்பித்தான். அவன், கூட்டத் தலைவர்கள் அனைவரையும், மற்ற பிரபுக்களையும் சக்கரவர்த்திக்கு அடங்கியவர்களாக ஆக்கினான். இது கி. பி. 600-இல் நிகழ்ந்தது.

ஆனால் ஷோடுகு தைஷியின் மரணத்துக்குப் பின்பு சோகா குடும்பம் துரத்தப்பட்டது. சிறிது காலத்துக்குப் பிறகு ஜப்பானியச் சரித்திரத்திலேயே மிகவும் கீர்த்தி வாய்ந்த ஒருவன் தோன்றுகிறான். அவன் பெயர் காகா டோமி நோ காமாடோரி (Kakatomi no Kamatori) என்பது. அவன் சீன முறைகள் பலவற்றைக் 'காப்பி' அடித்து அரசாங்கத்தில் பலவகையான மாறுதல்களைச் செய்தான். ஆனால், பரீட்சைகள் வைத்து அரசாங்க உத்தியோகஸ்தரை நியமனம் செய்யும் சீன முறையை அவன்

பின்பற்றவில்லை. இப்போது சக்கரவர்த்தி ஒரு கூட்டத் தலைவனைவிட உயர்ந்த ஒரு ஸ்தானத்தை அடைகிறுர். மத்திய அரசாங்கமும் பலம் பெறுகிறது.

இந்தக் காலத்தில்தான் நரா தலைநகராக இருந்தது. ஆனுல் இது கொஞ்ச காலத்திற்குத்தான். கி. பி. 794-இல் கியோடோ (Kyoto) தலைநகராயிற்று. அது 1100 ஆண்டுகள் வரையில் தலைநகராக இருந்தது. சிறிது காலத்துக்கு முன்புதான் அதன் ஸ்தானத்தை டோக்கியோ (Tokio) பெற்றது. தற்காலத்துச் சிறப்புப் பெற்ற பெரிய நகரம் டோக்கியோ என்பதில் ஐயமில்லை. ஆனுல் ஜப்பானின் ஆத்மாவைப்பற்றி நமக்கு எடுத்துக் கூறுவது கியோடா தான். அந்நகரில் கடந்த ஆயிரம் ஆண்டுகளின் நினைவுகள் பொதிந்து கிடக்கின்றன.

காகாடோ மினோ காமாடோரி என்பவன் புஜிவாரா (Fujiwara family) குடும்பத்தை ஸ்தாபித்தான். ஜப்பானியச் சரித்திரத்தை இவர்கள் பெரிதும் உருவாக்கினுர்கள். இவர்கள் ஆண்ட 200 வருஷங்களில் சக்கரவர்த்திகளைத் தங்களுடைய கைம்பொம்மைகளாக ஆட்டி வைத்தனர். தங்கள் குடும்பத்தில் பெண்கொள்ளும்படி சக்கரவர்த்திகளை வற்புறுத்தினர்; பிற குடும்பங்களில் திறமையுடையோர் இருந்தால் அவர்களுக்கு அஞ்சி, அவர்களை மடங்களுக்கு அனுப்பி, துறவு பூணும்படி பலவந்தப்படுத்தினர்.

தலைநகர் நராவில் இருந்தபோது சீன சக்கரவர்த்தி ஜப்பானிய அரசனுக்கு ஒரு செய்தி அனுப்பினுன். அவன் ஜப்பானிய அரசனை அதில் தாய்-நி-புங்-கோக் (Tai-Nyih-Pung-Kok) நாட்டின் சக்கரவர்த்தி என்று குறித்திருந்தான். அதற்குப் 'பெரிய சூரியோதய நாடு' என்று பொருள். யாமாடோ என்னும் பெயரைவிட இதில் ஆரவாரம் அதிகம் இருந்தபடியால் ஜப்பானியருக்கு

இப்பெயர் பிடித்திருந்தது. ஆகவே அவர்கள் தங்கள் நாட்டை 'டாய் நிப்பன்' அதாவது 'சூரியோதய நாடு' என்று அழைத்தார்கள். இன்றும் அவர்கள் ஜப்பானை இவ்வண்ணமே அழைக்கிறார்கள். ஜப்பான் என்னும் சொல்லே 'நிப்பன்' என்பதிலிருந்து வந்தது. அறுநூறு வருஷங்களுக்குப் பிறகு மார்க்கோ போலோ என்னும் பிரசித்திபெற்ற இதாலிய யாத்திரீகர் ஒருவர் சீனவுக்குச் சென்றார். அவர் ஜப்பானுக்குச் செல்லவில்லை. ஆனால் அவர் அதைப்பற்றித் தம் பிரயாண வரலாற்று நூலில் எழுதினார். நி-புங்-கோக் என்னும் பெயரை அவர் கேள்விப்பட்டிருந்தார். ஆகவே அவர் அதைச் 'சிபாங்கோ' என்று தம் நூலில் எழுதினார். இதிலிருந்து ஜப்பான் என்னும் சொல்பிறந்தது.

நமது தேசத்துக்கு இந்தியா அல்லது ஹிந்துஸ்தானம் என்ற பெயர் வந்த வரலாறு உனக்குத் தெரியுமா? அல்லது நானவது சொல்லியிருக்கிறேனா? இரண்டு பெயர்களும் சிந்து நதியின் பெயரிலிருந்து வந்தவை. ஆகவே சிந்து நதிதான் இந்தியாவின் நதி. 'சிந்து' என்பதிலிருந்து கிரேக்கர்கள் நம்நாட்டை 'இண்டஸ்' என்று அழைத்தனர். இதிலிருந்து 'இந்தியா' பிறந்தது. இதே 'சிந்து' என்பதைப் பாரசீகர் 'ஹிந்து' என்று அழைத்தனர். இதிலிருந்து 'ஹிந்து ஸ்தானம்' பிறந்தது.

# 43

## ஹர்ஷவர்த்தனனும் யுவான் சுவாங்கும்

மே 11, 1932.

**ம**றுபடியும் இந்தியாவுக்குத் திரும்பிச் செல்வோம். ஹூணர்கள் தோல்வி அடைந்து, சிற்சில இடங்களில் துரத்தப்பட்டும் இருக்கிறார்கள். பாலாதித்தியனுக்குப் பிறகு குப்த வமிசம் மங்கிமறைகிறது. வட இந்தியாவில் பல சிறு ராஜ்யங்கள் தோன்றுகின்றன. தெற்கே புலி கேசி சாளுக்கிய சாம்ராஜ்யத்தை ஸ்தாபித்திருக்கிறான்.

கான்பூருக்கு அருகில் கன்னோசி என்னும் சிறிய பட்டணம் இருக்கிறது. கான்பூர் இப்பொழுது பெரிய நகரம். ஆனால் அதிலுள்ள தொழிற்சாலைகளும் புகை போக்கிகளும் அதன் தோற்றத்தைக் கெடுக்கின்றன. கன்னோசியோ ஒரு கிராமத்தைப்போ லிருக்கிறது. ஆனால் நாம் பேசுகின்ற நாளில் கன்னோசி ஒரு பெரிய தலைநகரம். அங்கே கவிஞரும், கலைஞரும், தத்துவ நூலாசிரியரும் குழுமி இருந்தனர். அப்பொழுதும், அதற்குப் பலநூறு வருஷங்களுக்குப் பிறகும் கான்பூர் தோன்றவே இல்லை.

கன்னோசி என்பது தற்காலத்தில் வழங்கும் பெயர். அதன் உண்மைப் பெயர் 'கன்யாகுப்ஜம்' என்பது. அதாவது 'கூனல் பெண்' என்பது பொருள். கதை என்ன வென்றால், பழைய காலத்தில் யாரோ ஒரு ரிஷி ஓர் அரசனுடைய பெண்கள் நூறுபேரும் தம்மை மதிக்க வில்லை என்ற காரணத்துக்காக அவர்கள் அத்தனை பேருடைய முதுகும் கூனிப்போகும்படி சபித்துவிட்டா ராம்! அதிலிருந்து அவர்கள் வாழ்ந்த அந்நகருக்குக் 'கூனல்

பெண்களின் நகரம்'—கன்யாகுப்ஜம்—என்பது பெயராயிற்று.

ஆனால் நாம் அதைச் சுருக்கமாகக் 'கன்னோசி' என்று அழைப்போம். ஹூணர்கள் கன்னோசி அரசனைக் கொன்று அவன் மனைவி ராஜ்யஸ்ரீயைச் சிறைபிடித்தனர். அவளுடைய சகோதரனான ராஜவர்த்தனன் அவளை மீட்பதற்காக ஹூணர்களுடன் போரிட்டான். அவர்கள் அவனிடம் தோல்வியுற்றனர். ஆனால் அவன் பிறகு வஞ்சகமாகக் கொல்லப்பட்டான். பிறகு அவன் தம்பியாகிய ஹர்ஷவர்த்தனன் தன் சகோதரி ராஜ்யஸ்ரீயைத் தேடிக்கொண்டு சென்றான். ஐயோ பாவம், அவள் காடுகளுக்குத் தப்பியோடிச் சென்று அங்குத் துன்பம் பொறுக்காமல் தன் உயிரை மாய்த்துக்கொள்ள எண்ணியிருந்தாள். அவள் தன் உயிரை மாய்த்துக் கொள்ளப் போகும் தருணத்தில் ஹர்ஷன் அவளைக் கண்டு காப்பாற்றியதாகக் கூறப்படுகிறது.

தன் சகோதரியை மீட்ட பிறகு ஹர்ஷன் தன் தமையனை வஞ்சனையால் கொன்ற சிற்றரசனைத் தண்டிக்கப் புறப்பட்டான். அவனைத் தண்டித்ததோடு நில்லாமல் வட இந்தியா முழுவதையும்—ஒரு கோடியிலிருந்து மற்றக் கோடிவரையில், தெற்கே விந்திய பர்வதம் வரையில்,—ஜெயித்தான். விந்திய பர்வதத்துக்கு அப்பால் சாளுக்கிய சாம்ராஜ்யம் இருந்தது. அவன் அதனால் தடுத்து நிறுத்தப்பட்டான்.

ஹர்ஷவர்த்தனன் கன்னோசியைத் தலைநகராகக் கொண்டான். ஹர்ஷன் ஒரு பெரிய கவி. நாடகாசிரியருங்கூட. ஆகவே அவனுடைய ராஜசபையைப் பல கவிஞரும் கலைஞரும் அலங்கரித்தனர். கன்னோசியின் கீர்த்தி எங்கும் பரவிற்று. ஹர்ஷன் சிறந்த பௌத்தன். பௌத்த மதம் ஒரு தனி மதம் என்கிற முறையில்

இந்தியாவில் பெரிதும் க்ஷீணித்துவிட்டது. அது பிராமண மதத்தால் விழுங்கப்பட்டுவிட்டது. ஹர்ஷனை இந்தியாவில் கடைசியாக வாழ்ந்த பெரிய பௌத்த மன்னன் என்று சொல்லலாம்.

ஹர்ஷனுடைய அரசாட்சிக் காலத்தில்தான் நமது பழைய நண்பரான யுவான் சுவாங் இந்தியாவுக்கு வந்தார். அவர் திரும்பிச் சென்ற பிறகு எழுதிய தம் பிரயாண வரலாற்று நூலில் இந்தியாவைப்பற்றியும், வழியில் தாம் கடந்து சென்ற மத்திய ஆசிய நாடுகளைப்பற்றியும் மிகவும் விரிவாகப் பேசியிருக்கிறார். பௌத்த மதத்தில் பேரன்பு கொண்ட அவர் பரிசுத்த ஸ்தலங்களைத் தரிசிக்கவும், பௌத்த மத கிரந்தங்களை எடுத்துச் செல்லவும் இங்கு வந்தார். கோபி பாலைவனம் வழியாக டாஷ்கந்த், சாமர்கந்த், பால்க், கோடான், யார்கந்த் முதலான நகரங்களைப் பார்த்துக் கொண்டே வந்தார். இந்தியா முழுவதும் சுற்றினார். இலங்கைக்கும் அவர் சென்றிருக்கலாம். அவர் எழுதிய அற்புதமான நூல் படிக்கப்படிக்க ஆனந்தமாயிருக்கும். அவர், தாம் சென்ற நாடுகளில் கண்டதையும் கேட்டதையும் அப்படியே எழுதியிருக்கிறார். இந்தியாவின் பல பாகங்களில் அவர் கண்ட மனிதர்களின் குணுதிசயங்களை வர்ணித்திருப்பது இன்றும் நிஜம்போலத் தோன்றுகிறது. அவர் தான் கேட்டறிந்த பல கற்பனைக் கதைகளையும், புத்தர் பிரானையும் போதி சத்துவர்களையும் பற்றிய பல அற்புதக் கதைகளையும் கூறியிருக்கிறார். வயிற்றைச் சுற்றி செப்புத் தகடுகளைக் கட்டிக்கொண்டு திரிந்த 'அதிமேதாவி'யைப் பற்றிய அவருடைய ரசமான கதை ஒன்றை நான் முன்பே உனக்குச் சொல்லியிருக்கிறேன்.

இந்தியாவில், அதிலும் முக்கியமாகப் பாடலி புத்திரத்துக் கருகிலிருந்த நாளந்தா சர்வகலாசாலையில்

அவர் பல ஆண்டுகள் இருந்தார். நாளந்தாவில் பௌத்தமடம், கலாசாலை இரண்டும் சேர்ந்து நடந்து வந்தன. அங்குப் பத்தாயிரம் மாணவர்களும் சந்நியாசிகளும் குருகுலவாசம் செய்து வந்ததாகக் கூறப்படுகிறது. பௌத்தமதக் கல்விக்குப் பேர்போன இடமாகிய இது பிராமண மதக் கல்வி தழைத்தோங்கிய காசிமா நகருக்குப் போட்டியாக விளங்கியது.

முற்காலத்தில் இந்தியாவுக்கு இந்து பூமி என்று பெயர் வழங்கிவந்தது. இந்து என்றால் சந்திரன் என்று அர்த்தம். யுவான் சுவாங் இதைப்பற்றி நமக்குக் கூறுவதோடு இது எவ்வளவு பொருத்த முடையதென்பதையும் விவரிக்கிறார். சீனபாஷையில் இன்-டு என்னும் சொல் சந்திரனைக் குறிக்கிறது. ஆகவே நீ சீனபாஷைப் பெயரை வைத்துக்கொள்வது எளிதான காரியமாகும்.*

யுவான் சுவாங் கி.பி. 629-இல் இந்தியாவுக்கு வந்தார். சீனாவிலிருந்து அவர் புறப்படும்போது அவருக்கு வயது இருபத்தாறு. அவர் உயரமாகவும் அழகாகவும் இருந்தார் என்று ஒரு சீனக் குறிப்பில் காணப்படுகிறது. அது மேலும் சொல்லுவதாவது: 'அவர் சிறந்த நிறமும் ஒளி வீசும் கண்களும் உடையவரா யிருந்தார். அவருடைய தோற்றம் பெருந்தன்மையும் கம்பீரமும் பொருந்தியதா யிருந்தது. தேஜஸ் விளங்கும் அவருடைய முகமண்டலம் அனைவருள்ளத்தையும் கவர்ந்து இன்பக் கடலில் ஆழ்த்தியது. அவருடைய கம்பீரம் இந்நிலவுலகைச் சூழ்ந்திருக்கும் கடலின் கம்பீரத்துக்கு ஒப்பாயிருந்தது. அவரிடத்திலே குடிகொண்டிருந்த சாந்தமும் பிரகாசமும் தண்ணீரிலே முளைக்கும் தாமரை மலரை நமக்கு நினைவூட்டின.,

---

* இந்தியாவின் செல்வப் பெயர் ' இந்து '

பௌத்த பிக்ஷுவின் காவி உடையை அணிந்து அவர் தமது மகத்தான பிரயாணத்தைத் தன்னந் தனியாகத் தொடங்கினார். சீன சக்கரவர்த்தி இதற்கு அநுமதிதர மறுத்தும் அவர் புறப்பட்டார். அவர் கோபி பாலை வனத்தைக் கடப்பதற்குள்ளாகவே உயிர் தப்பியது தம்பிரான் புண்ணியம் என்றாய்விட்டது. அப்பாலை வனத்தின் விளிம்பில் இருந்த டர்பன் (Turfan) ராஜ்யத்தை அடைந்தார். அக்காலத்தில் இச்சிறு பாலைவன ராஜ்யம் நாகரிகம் விளையும் பசியநிலமா யிருந்தது; இப்போது வெறும் பாழாகக்கிடக்கிறது. புதைபொருள் ஆராய்ச்சியாளரும் பழம்பொருள் ஆராய்ச்சியாளரும் அவ்விடத்திலுள்ள பழங்காலத்துச் சின்னங்களைக் கண்டெடுப்பதற்காக அதை இப்போது தோண்டிக்கொண்டிருக்கிறார்கள். ஆனால் ஏழாவது நூற்றாண்டில், யுவான் சுவாங் அதைக் கடந்து சென்ற காலையில் அது ஜீவ வேகமும் உயர்ந்த நாகரிகமும் ததும்பும் நாடாயிருந்தது. இந்நாகரிகம் இந்தியா, சீனா, பாரசீகம், ஐரோப்பாவின் சில பாகங்கள் ஆகிய இவ்வெல்லா நாகரிகங்களும் கலந்த ஒன்றாகும். அங்குப் பௌத்த மதமும் சம்ஸ்கிருதக் கல்வியும் தழைத்திருந்தன. ஆயினும் அவர்கள் தங்களுடைய வாழ்க்கை முறையில் சீனரையும் பாரசீகரையும் பெரும்பாலும் ஒத்திருந்தார்கள். நாம் எதிர்பார்க்கிறபடி அவர்கள் மங்கோலிய பாஷை பேசவில்லை. அவர்களுடைய பாஷை ஒருவிதமான இந்திய - ஐரோப்பிய பாஷை. அது ஐரோப்பாவில் வழங்கிய கெல்டு பாஷைகளைப் பெரும்பாலும் ஒத்திருந்தது. இதைவிட ஆச்சரியம் என்னவென்றால் அவர்கள் கற்களில் பொறித்த சித்திரங்கள் ஐரோப்பிய வகையைச் சேர்ந்தவையா யிருக்கின்றன. புத்தர்பிரானையும், போதி சத்துவர்களையும், இதர தேவர்கள் தேவிகளையும் உருவகப்படுத்தி, அவர்கள்

கற்பனு சக்தியுடன் தீட்டியுள்ள அவ்வோவியங்கள் உவமையில்லா அழகுவாய்ந்து விளங்குகின்றன. தேவி களின் உருவங்கள் இந்திய ஆடைகள் அல்லது கிரேக்க ஆடைகளை அணிந்து காண்கின்றன. கிரேக்கத் தலையணி யும் காணப்படுகிறது. பிரெஞ்சு விமர்சகர் குரோசே கூறுகிறார் :—'அச்சித்திரங்களில் ஹிந்துக் குழைவும் கிரேக்கக் கற்பனையும், சீனவனப்பும் ஒன்றோடொன்று மிக அழகாக உறவாடிப் பொலிகின்றன.'

டர்பன் இன்னும் இருக்கிறது. அதை நீ படத்தில் காணலாம். ஆனால் அது இப்போது முக்கியம் வாய்ந்த தல்ல. நீண்டகாலத்துக்கு முன் ஏழாவது நூற்றாண்டில் பல தூரதேசங்களிலிருந்து பிரவகித்து வந்த நாகரிக ஆறுகள் இங்கு ஒன்றுகூடிக் கலந்த அழகை என்னென்பது !

டர்பனிலிருந்து நமது யாத்திரிகர் யுவான் சுவாங் குச்சா (Kucha) வுக்குச் சென்றார். மத்திய ஆசியாவில் உயர்ந்த நாகரிகமும் கீர்த்தியும் வாய்ந்து விளங்கிய இன்னொரு பிராந்தியம் இது. இது சங்கீத வித்துவான் களுக்கும் சுந்தர நாரீமணிகளுக்கும் பேர்போன இடம். இதனுடைய மதமும் கலையும் இந்தியாவிலிருந்து வந்தவை. நாகரிகமும் வியாபாரப் பொருள்களும் ஈரானிலிருந்து வந்தவை. பாஷையோ சம்ஸ்கிருதம், பாரசீகம், லத்தீன், கெல்டு இவைகளுடன் தொடர்புடையது. இது இன்னொரு ஆச்சரியமான கலப்பு !

இங்கிருந்து யுவான் சுவாங் துருக்கி ஸ்தானம் சென்றார். அங்கிருந்த பௌத்த மன்னனான மகாகான் (Great Khan) மத்திய ஆசியாவின் பெரும்பாகத்தை ஆண்டுவந்தார். பிறகு ஸமர்கந்த் நகரத்திற்கும் அவர் வந்தார். அப்பொழுதே அது ஒரு புராதன நகரம். அதற்கு ஆயிரம் ஆண்டுகளுக்குமுன் அலெக்சாந்தர்

அவ்வழியாகப் போனன். அதன் பிறகு அவர் பால்க் நகருக்கும், காபூல் நதிப்பள்ளத்தாக்கிற்கும், காஷ் மீரத்துக்கும், கடைசியாக இந்தியாவுக்கும் வந்தார்.

அந்நாளில் சீனவில் டாங் வமிசத்தாரின் ஆட்சி ஆரம்பமாயிருந்தது. சீனவின் தலைநகரான சி-அன்-பு கலைக்கும் கல்விக்கும் புகலிடமாயிருந்தது. நாகரிகத்தில் சீன உலகுக்கே வழிகாட்டியாக இருந்த காலம் அது. ஆகவே யுவான் சுவாங் இத்தகைய உயரிய நாகரிகம் படைத்த ஒரு தேசத்திலிருந்து வந்தவரென்பதையும், அவர் ஒப்புநோக்கின அளவை மிகவும் உயர்தரமாக இருந்திருக்க வேண்டுமென்பதையும் நீ நினைவில் வைக்க வேண்டும். அதனல், அவர் இந்தியாவுக்கு அளித்திருக்கும் நற்சாட்சிப் பத்திரம் அருமையும் பெருமையும் உடைய தாகும். அவர் இந்தியரையும் இந்திய பரிபாலனத்தையும் வாயாரப் புகழ்கிருர். அவர் கூறுவதாவது :—'சாதாரண ஜனங்கள் இயற்கையாகவே கவலையற்றிருக்கிருர்கள். ஆனல் அவர்கள் நேர்மையாகவும் யோக்கியமாகவும் நடந்து கொள்ளுகிருர்கள். பண விஷயத்தில் அவர் களிடம் நம்பிக்கை மோசம் என்பதே இல்லை. நியாயம் வழங்குவதில் நிரம்பவும் கவனம் செலுத்துகிருர்கள். அவர்கள் ஏமாற்றுவதோ, வஞ்சிப்பதோ கிடையாது. சொன்ன சொல்லும் தவறுவதில்லை. அவர்களுடைய அரசியல், தருமத்தையும் நடுநிலை கெடாத நீதியையும் அடிப்படையாகக் கொண்டிருக்கிறது. அவர்கள் பிறருடன் பழகுவதில் ஒரு நயத்தையும் இனிமையையும் காண் கிறேம். குற்றம் செய்வோரின் தொகை மிகவும் குறைவு. இவர்களுடைய தொந்தரவு அடிக்கடி நேருவதில்லை.'

அவர் மேலும் கூறுகிருர் : — 'அரசாங்கம் காருண்ய அரசாங்கமா யிருந்தபடியால் நிர்வாக முறை

விரிவாக இல்லை...........ஜனங்களைப் பலவந்தப்படுத்தி வேலை வாங்கும் வழக்கமும் இல்லை...........ஜனங்கள் செலுத்தும் வரி மிகவும் கொஞ்சம். அவர்களிடமிருந்து பெறப்படும் ஊழியமும் கொஞ்சமே. எல்லோரும் தங்கள் உடைமைகளை ஒருவித பயமும் இன்றி வைத்துக்கொண்டிருக்கிறார்கள். எல்லோரும் நிலத்தை உழுது பிழைக்கிறார்கள். அரசனுக்குச் சொந்தமான நிலத்தைப் பயிரிடுவோர், விளைவதில் ஆறில் ஒரு பங்கை அவனுக்கு வரியாகச் செலுத்துகிறார்கள். வியாபாரிகள் தங்கள் வியாபாரத்தின்பொருட்டு வந்து போகிறார்கள்.'

ஜனங்களுக்குக் கல்வி கற்பிக்கச் சிறந்த ஏற்பாடுகள் செய்யப்பட்டிருந்ததையும் சிறு வயதிலேயே கல்வி ஆரம்பிக்கப்பட்டதையும் யுவான் சுவாங் கண்டார். பால சிக்ஷை முடிந்தபிறகு பையனோ பெண்ணோ தன் ஏழாவது வயதில் சாஸ்திரங்கள் ஐந்தையும் கற்கத் தொடங்க வேண்டும். சாஸ்திரங்கள் என்பன மத கிரந்தங்களைத்தான் குறிக்கின்றன என்று நாம் இப்போது எண்ணிக்கொண்டிருக்கிறோம். ஆனால் அந்நாளில் அவை சகல அறிவு நூல்களையும் குறித்தன. சாஸ்திரங்கள் ஐந்தாவன :—1. இலக்கணம். 2. கலைத் தொழில், கைத் தொழில். 3. வைத்தியம். 4. தர்க்கம். 5. தத்துவம். மேற்கூறிய சாஸ்திரங்கள் சர்வ கலாசாலைகளில் கற்றுக் கொடுக்கப்பட்டு வந்தன. அநேகமாக அவைகளைக் கற்று முடிக்க முப்பது வயது ஆகும். நிரம்பப் பேர் அந்த வயது வரையில் படித்திருக்க மாட்டார்களென்று நான் நினைக்கிறேன். ஆனால் ஒப்பிட்டுப் பார்க்கும்போது ஆரம்பக் கல்வி பரந்த முறையில் பரவியிருந்தது என்று நான் நினைக்கிறேன். எல்லாத் துறவிகளும் மத போதகர்களுமே ஆசிரியர்களாய் இருந்ததால் ஆசிரியர்கள் வேண்டுமென்ற குறையே இல்லை. இந்திய ஜனங்கள் கல்வியில் காட்டி

ஆர்வம் யுவான் சுவாங்கின் மனதைக் கவர்ந்தது. அவர் இதைத் தம் நூலில் அடிக்கடி குறிப்பிடுகிறார்.

பிரயாகையில் நடக்கும் கும்பமேளாவை நமது யுவான் வர்ணிக்கிறார். இம்மேளாவை நீ மறுபடி பார்க்கும்போது, 1300 ஆண்டுகளுக்கு முன்னால் யுவான் சுவாங் இதைப் பார்த்ததையும், அந்தக் காலத்திலேயே இது வேதகாலத்திலிருந்து நடைபெற்றுவரும் ஒரு பழைய திருவிழாவாக இருந்ததையும் நினைவு கூர்வாயாக. நரைத்துப் பழுத்த, புராதனமான பிரயாகை எங்கே! நேற்று முளைத்த அலகாபாத் எங்கே! 400 வருஷங்களுக்குமுன் அலகாபாத் அக்பரால் ஸ்தாபிக்கப்பட்டது. பிரயாகையோ இதனினும் மிகப் பழைமையானது. ஆனால் ஆயிரக்கணக்கான வருஷங்களாக, ஒரு வருஷமும் தவறாமல், கோடிக்கணக்கான பேரைக் கங்கையும் யமுனையும் கூடும் அந்தத் திரிவேணி சங்கமத்துக்கு இழுத்துச் செல்லும் சக்தியோ எல்லாவற்றையும்விடப் பழைமையானது!

ஹர்ஷன் பௌத்தனாயிருந்தும் இந்த அசல் ஹிந்துத் திருவிழாவுக்குச் சென்ற வரலாற்றை யுவான் சுவாங் நமக்குக் கூறுகிறார். மேளா நடக்கும்போது பஞ்சத்வீபங்கள் என்று அழைக்கப்படும் ஐந்து கண்டங்களிலுமுள்ள சகல ஏழைகளும்வந்து சக்கரவர்த்தியின் விருந்தினராயிருக்கலாம் என்று உத்தரவு பிறப்பிக்கப்பட்டதாம்! இத்தகைய விருந்தோம்பல் ஒரு சக்கரவர்த்திக்குக் கூடச் சற்று அருமையானதுதான். அநேகர் வந்தார்கள் என்று சொல்ல வேண்டியதில்லை. தினந்தோறும் லட்சம் பேர் விருந்துண்டனர் என்று கூறப்படுகிறது! இந்த மேளாவில் ஐந்து வருஷங்களுக்கொருமுறை ஹர்ஷன் தன் பொக்கிஷத்தில் மிகுதியாக இருந்த பொன்னையும் மணியையும், பட்டு பீதாம்பரங்களையும், இன்னும் தன்

உடைகள் எல்லாவற்றையும் தானமாகக் கொடுத்தான். அவன் தன்னுடைய மணிமகுடத்தையும், ஆடை யாபரணாதிகளையும்கூடக் கொடுத்து விட்டுத் தன்னுடைய சகோதரி ராஜ்யஸ்ரீயிடமிருந்து ஒரு கிழிந்த பழைய வஸ்திரத்தை வாங்கிக் கொண்டானாம்!

ஹர்ஷன், சிறந்த பௌத்தனாகையால், உணவுக்காக உயிர்க் கொலை செய்வதை நிறுத்தினான். இதைப் பிராமணர்கள் அதிகமாக ஆட்சேபிக்கவில்லை. புத்தர் காலத்திலிருந்தே அவர்கள் சிறிது சிறிதாகச் சைவ உணவை மேற்கொண்டு வந்தார்கள்.

யுவானின் நூலில் உனக்கு ஒரு ரசமான செய்தி இருக்கிறது. இந்தியாவில் ஒருவன் வியாதியாகப் படுத்தால் உடனே ஏழுநாள் உண்ணாவிரதம் இருப்பானாம். இந்தப் பட்டினியினாலேயே பலர் குணமடைந்து விடுவார்கள். இதில் குணமில்லாவிட்டால்தான் அவர்கள் மருந்துண்பார்களாம். அந்நாளில் நோயும் அதிகமாக இருந்திராது; மருந்தையும் வைத்தியனையும் சிந்துவோரும் அதிகமாக இருந்திருக்கமாட்டார்கள்.

அந்நாளைய இந்தியாவில் இன்னொரு பெரிய விசேஷம் என்னவென்றால், அரசர்களும் க்ஷத்திரியர்களும், படித்தவர்களுக்கும் பெரியவர்களுக்கும் காட்டிய விசேஷ மரியாதையே ஆகும். இந்தியாவிலும் சீனாவிலும் கல்விக்கும் ஒழுக்கத்துக்குமே கௌரவ ஸ்தானம் அளிக்கப்பட்டது. பலத்துக்கும் பணத்துக்கும் அந்த ஸ்தானம் அளிக்கப்படவில்லை. இது, தெரிந்து, வேண்டுமென்றே செய்யப்பட்டது. இதில் இவ்விரு தேசங்களும் வெற்றியே பெற்றன.

இந்தியாவில் பல வருஷங்கள் வாழ்ந்த பிறகு யுவான் சுவாங் தம் தாய்நாட்டுக்குத் திரும்பிச் சென்றார். மலைகளையும் வனாந்தரங்களையும் மீண்டும் கடந்து சென்றார்.

சிந்து நதியில் அவர் அடித்துக்கொண்டு போகப்பட்டார். ஆனால் எப்படியோ கரையேறினார். அவருடைய அரிய நூல்கள் பல, வெள்ளத்தில் போய்விட்டன. ஒழிந்தவை போக எஞ்சியிருந்த பல கையெழுத்துப் பிரதிகளை அவர் எடுத்துச் சென்றார். அவர் இவற்றைச் சீன பாஷையில் மொழிபெயர்க்கப் பல ஆண்டுகள் சென்றன. சி-அன்-பு நகரில் டாங் சக்கரவர்த்தி இவரை அதிக அன்புடன் வரவேற்று இவருடைய பிரயாண வரலாற்றை எழுதச் செய்தார்.

யுவான் தாம் மத்திய ஆசியாவில் பார்த்த துருக்கியரைப்பற்றிக் கூறுகிறார். இப்புதிய ஜாதியார் பிற்காலத்தில் மேற்கே சென்று பல ராஜ்யங்களைக் கவிழ்த்தனர். மத்திய ஆசியா முழுவதும் இருந்த பௌத்த மடங்களைப்பற்றி அவர் கூறுகிறார். பாரசீகம், இராக் அல்லது மெசபொடேமியா, கொராசான் (Khorasan) மோசூல் இவ்வாறாக சிரியா எல்லை வரையிலும் பௌத்த மடங்கள் இருந்தன. பாரசீகரைப்பற்றி யுவான் கூறுவதாவது :—'கல்வியைப்பற்றி அவர்கள் கவலை கொள்ளவில்லை. கலைகளை வளர்ப்பதிலேயே அவர்கள் கண்ணும் கருத்துமாயிருக்கிறார்கள். அவர்கள் செய்வனவற்றைப் பக்கத்து நாடுகள் பெரிதும் மதித்துப் போற்றுகின்றன.'

அந்நாளில் வாழ்ந்த யாத்திரிகர்கள் மிகவும் ஆச்சரியமானவர்கள். பண்டைக் காலத்திய மாபெரும் பிரயாணங்களை நோக்கும்போது இக்காலத்தில் மத்திய ஆப்பிரிக்காவுக்கும், வட, தென் துருவங்களுக்கும் செய்யும் பிரயாணங்கள் அற்பமாகத் தோன்றுகின்றன. வருஷக்கணக்கில் காடுகளையும், மலைகளையும், நதிகளையும், வனாந்தரங்களையும் தாண்டி அவர்கள் சென்றுகொண்டே இருந்தனர். அவர்களுக்குத் துணையாவார் யாரும் இல்லை. சில வேளைகளில் அவர்களுக்கு வீட்டு ஞாபகம் வந்திருக்கலாம்.

மானத்தில் திருஷ்டி உடைய அவர்கள் அதை நமக்குச் சொல்லவில்லை. இந்த யாத்திரீகர்களில் ஒருவர் மட்டும் தம் மனத்தைச் சிறிது திறந்து நமக்குக் காட்டுகிறார். தூரதேசத்தில் இருந்த அவர் தம் வீட்டை நினைத்து அதை அடைய ஆவல்கொண்டாராம். அவருடைய பெயர் சூங்-யூன் (Sung-Yun) என்பது. யுவான் சுவாங் வருவதற்கு நூறு வருஷங்களுக்குமுன் அவர் இந்தியாவுக்கு வந்தார். அவர் இந்தியாவுக்கு வடமேற்கில் காந்தாரத்திலுள்ள மலைப் பிராந்தியத்தில் இருந்தார். "வானில் மிதந்துவந்த மெல்லிய பூங்காற்று, பட்சி ஜாலங்களின் இனிமையான கானம், வசந்த தருக்களின் கண்கொள்ளா வனப்பு, பூக்கள்தோறும் சென்று தேனை நுகரும் வண்டுகளின் ரீங்காரம் ஆகிய இவ்வழகிய காட்சிகளையெல்லாம் தூரதேசத்தில் சூங்-யூன் பார்த்தபோது அவர் மனம் வீட்டை நாடிச் சென்றது. வீட்டின் கவலை பெரிதாகி அதுவே அவருக்கு நோயாகவும் முற்றி விட்டதாம்."

# 44

# தென் இந்தியாவில் பல அரசர்களும் போர் வீரர்களும் ஒரு பெரிய மகானும் தோன்றுகிறார்கள்

மே 13, 1932.

ஹர்ஷ மகாராஜா கி. பி. 648-இல் காலமானார். ஆனால் அவர் இறப்பதற்கு முன்னரே இந்தியாவின் வடமேற்கு எல்லையில், பலுசிஸ்தானத்தில் ஒரு சிறிய மேகம் கவிந்தது. அது மேல் ஆசியாவிலும், வட ஆப்பிரிக்கா விலும், தென் ஐரோப்பாவிலும் வீசிக்கொண்டிருந்த பெரும் புயலுக்கு ஓர் அறிகுறியாக இருந்தது. அரேபிய நாட்டில் ஒரு பெரிய தீர்க்கதரிசி தோன்றியிருந்தார். அவர் பெயர் முகம்மது. அவர் போதித்த புதிய மதம் இஸ்லாம். தங்கள் புதிய மதத்தின்பால் ஏற்பட்ட ஆர்வம் காரணமாகவும், தங்களிடமுள்ள அபார நம்பிக் கையினாலும் அரேபியர் கண்டம் கண்டமாகச் சென்று நாடுகளை வென்றனர். இது, ஆச்சரியப்படத்தக்க பெரியதொரு சாதனை. உலகில் இவ்வளவு மாறுதலை விளைத்த இப்புதிய சக்தியை நாம் ஆராய்ந்து பார்க்க வேண்டும். ஆனால், அதற்கு முன்பு தென் இந்தியா வுக்குச் சென்று அது அந்நாளில் எவ்வாறிருந்தது என்று பார்ப்போம். ஹர்ஷன் காலத்தில் முஸ்லீம் அரேபியர் பலுசிஸ்தானத்துக்கு வந்தனர். சீக்கிரத்திலேயே அவர் கள் சிந்துவைக் கைப்பற்றினர். அதற்குமேல் அவர்கள் செல்லவில்லை. அதற்கப்புறம் 300 ஆண்டுகள் வரையில் முஸ்லீம்கள் இந்தியாமீது படையெடுத்து வரவில்லை.

இவ்வாறு படையெடுத்து வந்தவர்களும் அரேபியர் அல்லர் ; இஸ்லாம் மார்க்கத்தைத் தழுவிய மத்திய ஆசிய ஜாதியார்களில் சிலரே படையெடுத்து வந்தவர்கள்.

இப்போது தென்னாட்டைக் கவனிப்போம். மேற்கிலும் மத்திய பாகத்திலும் சாளுக்கிய சாம்ராஜ்யம் வியாபித்திருந்தது. பெரும்பாலும் மகாராஷ்டிர தேசத்தைத் தன்னுள் கொண்ட இச்சாம்ராஜ்யத்திற்குப் பாதாமி (Badami) தலைநகராக இருந்தது. யுவான் சுவாங் மகாராஷ்டிரர்களின் வீரத்தைப் பெரிதும் புகழ்ந்து பேசுகிறார். 'போர் வீரமும் செருக்கும் படைத்த அவர்கள், நன்மை புரிவோரிடம் நன்றியுடையோராகவும், தீமை புரிவோரைப் பழி வாங்குவோராகவும் இருக்கிறார்கள்,' என்று அவர் கூறுகிறார். சாளுக்கியர் வடக்கே ஹர்ஷனையும், தெற்கே பல்லவர்களையும், கிழக்கே கலிங்கர்களையும் எதிர்த்து நிற்க வேண்டியதாயிற்று. அவர்களுடைய பலம் பெருகியது. அவர்களுடைய ராஜ்யம் அரபிக் கடலிலிருந்து வங்காள குடாக்கடல் வரையில் பரந்திருந்தது. பிறகு அவர்கள் ராஷ்டிரகூடர்களால் விரட்டப்பட்டார்கள்.

ஆகவே, தென்னாட்டில் பெரிய ராஜ்யங்களும், சாம்ராஜ்யங்களும் தழைத்திருந்தன. சில சமயங்களில் அவைகள் சமபலமுடையவைகளாகவும், சில சமயங்களில் ஒன்று மற்றவற்றை விஞ்சி நிற்பதாகவும் இருந்து வந்தன. பாண்டிய மன்னர்களின்கீழ் மதுரை தமிழ்க் கலையின் நடுநாயகமாக விளங்கிற்று. அங்கே தமிழ்ப் புலவர்களும் தமிழாசிரியர்களும் கூடித் தமிழ் ஆராய்ந்து வந்தனர். பண்டைத் தமிழிலக்கியங்களில் பெரும்பாலானவை கிறிஸ்தவ சகாப்தத்தின் ஆரம்ப காலத்தைச் சேர்ந்தவை. பல்லவ மன்னர்கள் காஞ்சிபுரத்தைத் தலைநகராகக் கொண்டு சிறப்புடன் ஆண்டனர். மலாயாசியா

வில் இந்தியர்கள் குடியேறியதற்கு இவர்கள் தான் முக்கிய காரணம்.

பிறகு சோழ சாம்ராஜ்யம் பலமடைந்து, ஒன்பதாம் நூற்றாண்டின் மத்தியில் நிகரின்றி விளங்கியது. சோழர்கள் கடல் ஆதிக்கம் உள்ளவர்கள். அவர்களுடைய பெரிய கப்பற்படை அரபிக் கடலிலும், வங்காள குடாக் கடலிலும் கம்பீரமாக உலவி வந்தது. அவர்களுடைய முக்கியத் துறைமுகம் காவிரி ஆறு கடலொடு கலக்கும் சங்கமுகத்தில் விளங்கிய காவிரிப்பூம்பட்டினம். அவர்களுடைய முதல் பெரிய அரசன் விஜயாலயன். வடக்கே பரவிய சோழர்களைத் திடீரென்று ராஷ்டிரகூடர்கள் தோற்கடித்து நிறுத்தினர். ஆனால் ராஜராஜ சோழன் மீண்டும் சோழர்களுடைய ஆதிக்கத்தை நிலைநாட்டினான். இது பத்தாம் நூற்றாண்டின் இறுதியில் நிகழ்ந்தது. அப்போதுதான் முஸ்லீம்கள் வட இந்தியாவின்மீது படையெடுத்து வந்துகொண்டிருந்தார்கள். வடகோடியில் நிகழ்ந்தவற்றால் ராஜராஜன் பாதிக்கப்படவில்லை. அவன் தன் ராஜ்யத்தை விஸ்தரித்துக்கொண்டே போனான். அவன் இலங்கையை ஜெயித்தான். சோழர்கள் அங்கே எழுபது வருஷம் அரசாட்சி செய்தனர். அவனுடைய மகன் ராஜேந்திர சோழனும் போர் வலியும் மற மிகுதியும் உடையவனாக இருந்தான். அவன் தன்னுடைய போர் யானைகளைக் கப்பலில் ஏற்றிச் சென்று பர்மாவை வென்றான். அவன் வட இந்தியாவுக்கும் வந்து வங்காள மன்னனைப் புறங்கண்டான். இவ்வாறு சோழ சாம்ராஜ்யம் பெரிதும் பரந்து கிடந்தது. குப்தர்களின் காலத்துக்குப் பின்பு இதைத்தான் மிகப் பெரிய சாம்ராஜ்யம் என்று சொல்ல வேண்டும். ஆனால் இது நெடுநாள் நிலைத்திருக்கவில்லை. ராஜேந்திரன் சிறந்த வீரன் என்பதில் ஐயமில்லை. ஆனால் அவன் கருணையில்லாதவனா

யிருந்தான். தான் வென்ற நாடுகளை அன்பினுல் வசப் படுத்திக்கொள்ள அவன் யாதொன்றும் செய்யவில்லை. அவனுடைய ஆட்சிக் காலம்—கி. பி. 1013-லிருந்து 1044 வரையில். அவனுக்குப் பின்னர், கப்பம் கட்டிவந்த சிற்றரசர்கள் கலகம் செய்ததன் காரணமாகச் சோழ சாம்ராஜ்யம் சிதறுண்டது.

போரில் அவர்கள் அடைந்த வெற்றி ஒருபுறமிருக்க, சோழர்கள் வெகு காலமாகக் கடல் வியாபாரத்துக்குப் பேர்போனவர்கள். அவர்களுடைய மெல்லிய வஸ்திரங் கள் பிறநாட்டினரால் பெரிதும் விரும்பப்பட்டன. அவர்களுடைய துறைமுகப்பட்டினமாகிய காவிரிப்பூம் பட்டினத்தில் கப்பல்கள் சரக்குகளை ஏற்றிக்கொண்டு தூர தேசங்களுக்கு ஓயாமல் போய் வந்துகொண் டிருந்தன. அங்கே யவனர் அல்லது கிரேக்கர்களின் குடியேற்றம் இருந்ததாகத் தெரிகிறது. மகாபாரதமும் சோழர்களைப் பற்றிப் பேசுகிறது.

தென் இந்தியாவின் பல நூறு வருஷகாலச் சரித்திரத் தைச் சில வரிகளில் சுருக்கமாகச் சொல்லிவிட்டேன். இவ்வாறு சுருங்கக் கூறும் முறை உன்னைக் குழப்பத்துக் குள்ளாக்கும் என்று நினைக்கிறேன். ஆனுல் நாம் பல திறப்பட்ட ராஜ்யங்கள், ராஜ பரம்பரைகள் இவற்றின் சிக்கலில் மாட்டிக்கொள்ளக் கூடாது. நாம் உலகம் பூராவையும் கவனிக்க வேண்டியவர்களாக இருக்கிருேம். அதில் ஒரு சிறிய பாகம், அது நாம் வசிப்பதாயிருந் தாலுங்கூட—நமது கவனத்தை அளவுக்குமீறி ஈர்ப்ப தென்ருல் நாம் மற்றவைகளைக் கவனிக்கவே முடியாது.

அரசர்களையும் அவர்களுடைய வெற்றிகளையும்விட அதிக முக்கியமானது அக்காலத்திய கலை, நாகரிகங்களின் அருமை பெருமைகளேயாம். கலைத் துறையைப் பொறுத்த

வரையில் வட இந்தியாவைவிடத் தென் இந்தியாவில் தான் பழங்காலத்துச் சின்னங்கள் அதிகம். வட இந்தியாவில் இருந்த ஞாபகச் சின்னங்கள், கட்டிடங்கள், சிற்ப வேலைப்பாடுகள் இவற்றில் பெரும்பாலானவை முஸ்லீம் படையெடுப்புக்களாலும், யுத்தங்களாலும் அழிந்து விட்டன. தென் இந்தியாவுக்கு முஸ்லீம்கள் சென்றும் இவைகள் தப்பிப் பிழைத்தன. வடக்கே இவை அழிவுற்றது பெரிய துரதிர்ஷ்டமேயாகும். அங்கு வந்த முஸ்லீம்கள்—அவர்கள் மத்திய ஆசியாவைச் சேர்ந்தவர்கள், அரேபியர் அல்ல என்பதை நினைவில் வைக்க வேண்டும்—தங்கள் மதாவேசம் காரணமாக விக்கிரகங்களை அழித்தனர். இந்த அழிவுக்கு இன்னொரு காரணம் பழைய காலத்தில் கோயில்கள் கோட்டைகளாகவும், போரிடும் இடங்களாகவும் உபயோகிக்கப்பட்டமையாயிருக்கலாம். இப்பொழுதுகூடத் தென்னாட்டுக் கோயில்களில் பல, கோட்டைகளைப் போல், எதிரிகள் தாக்கினால் காத்துக்கொள்ளும் வசதி உடையனவாக இருப்பதைக் காணலாம். இக்கோயில்கள் கடவுள் வணக்கத்துக்கு மட்டுமின்றி வேறு பல காரியங்களுக்கும் பயன்பட்டன. ஊர்ப் பள்ளிக்கூடமாகவும், ஊரார் கூடும் இடமாகவும், ஊர்ப் பஞ்சாயத்து ஸ்தலமாகவும், கடைசியாக அவசியம் நேருமாயின், எதிரிகளிடமிருந்து காப்பாற்றிக் கொள்ளத் தக்க ஊர்க் கோட்டையாகவும் கோயில் விளங்கியது. இவ்வாறாக ஊர் வாழ்க்கை முழுவதும் கோயிலைச் சுற்றி நடைபெற்றது. ஆகவே, பிராமணர்கள் அல்லது கோயில் அர்ச்சகர்கள்தான் எல்லாவற்றையும் எஜமான ஸ்தானம் வகித்து நடத்தியிருக்க வேண்டும். படையெடுத்துவந்த முஸ்லீம்கள் கோயில்களை அழித்ததற்குக் காரணம் அவைகள் சில சமயங்களில் கோட்டைகளாக உபயோகிக்கப்பட்டமையே ஆகும்.

தஞ்சாவூரிலுள்ள அழகிய பிரகதீசுவரர் ஆலயம் அக்காலத்தில் ராஜராஜ சோழனால் கட்டப்பட்டது. பாதாமி (Badami) யிலும், காஞ்சிபுரத்திலும் அருமையான கோயில்கள் பல இருக்கின்றன. ஆனால் அக்காலத்திய கோயில்களில் மிகவும் பிரசித்தி பெற்றது எல்லோரா மலைப் பாறையில் குடையப்பட்ட அற்புதமான கைலாச ஆலயம்தான். இது எட்டாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் ஆரம்பிக்கப்பட்டது. வெண்கலத்தில் செய்யப்பட்ட அதி அற்புதமான சிற்ப வடிவங்கள் வேறு இருக்கின்றன. சிவபெருமானின் திருநடனத்தைக் குறிக்கும் நடராஜ விக்கிரகத்தின் பெருமையை யாரால் அளவிட்டுச் சொல்லமுடியும்!

முதலாவது ராஜேந்திர சோழன் கங்கைகொண்ட சோழபுரத்தில் ஆச்சரியமான நீர்ப்பாசன சாதனங்களை இயற்றினான். பதினாறு மைல் நீளமுள்ள அணை ஒன்றைக் கட்டிப் பெரிய நீர்த் தேக்கத்தை உண்டாக்கினான். இதற்கு நூறு வருஷங்களுக்குப் பிறகு இதைக் கண்ட அல்பெருனி (Alberuni) என்னும் அரேபிய யாத்திரீகர் பெரிதும் ஆச்சரியமுற்று, 'நமது ஜனங்கள் இதைக் காணும்போது வியப்படைகிறார்கள். இதை அவர்கள் வர்ணிக்கவும் முடிவதில்லை. இதைப்போல் கட்டுவதற்கு அவர்களால் எப்படி முடியும்?' என்று சொல்லுகிறார்.

இக்கடிதத்தில் சில அரசர்களின் பெயர்களையும், சில அரச பரம்பரைகளின் பெயர்களையும் குறிப்பிட்டேன். அவர்கள் சிறிது காலம் பெருமையுடன் அரசாண்டு, பின்னர் மறைந்தும் மறக்கப்பட்டும் போயினர். ஆனால் தென் இந்தியாவில் ஓர் அதியாச்சரியமான மனிதர் தோன்றினார். இந்தியாவின் வாழ்க்கையில் மன்னரும் மன்னர் மன்னரும் செய்ததைவிட அதிமுக்கியமான

காரியங்களை இவர் செய்ய வேண்டுமென்று விதி வகுத்திருந்தது. இளம் பிராயத்தினரான இவருடைய பெயர் சங்கராச்சாரியார் என்பது. எட்டாவது நூற்றாண்டின் இறுதியில் இவர் பிறந்திருக்கலாம். இவருடைய மேதா விசாலம் வாயினால் பேச ஒண்ணாதது. இவர் ஹிந்து மதத்துக்குப் புத்துயிர் அளிக்கும் நன்முயற்சியில் ஈடுபட்டார். சிவபெருமானை வணங்கும் சைவ சமயத்தை இவர் பரப்ப ஆரம்பித்தார். இவர் பிரசாரம் செய்த *சைவத்தைப் பகுத்தறிவுக்கு ஒத்த ஹிந்து மதம் என்று சொல்லலாம். இவர் பௌத்த மதத்தை எதிர்த்து நிகழ்த்திய சொற் போருக்கும் வாதப் போருக்கும் அளவே இல்லை. பௌத்த சங்கத்தைப் போன்று சகல ஜாதியாரும் சேரக்கூடிய ஒரு சந்நியாசி சங்கத்தை இவர் ஸ்தாபித்தார்.

இச்சந்நியாசிகள் உறைந்து, பயிற்சி பெறுவதற்காக இவர் இந்தியாவின் வடக்கு, மேற்கு, தெற்கு, கிழக்கு ஆகிய நாலு மூலைகளிலும் நாலு பீடங்கள் ஸ்தாபனம் செய்தார்.** இந்தியா முழுவதும் திக்கு விஜயம் செய்து, சென்ற இடங்களில் எல்லாம் ஜெயக் கொடி நாட்டினார். வெற்றியுடன் இவர் காசிமா நகருக்கு எழுந்தருளினார். ஆனால் இவரடைந்த வெற்றி அறிவுத் துறையிலும் வாதத் திறமையிலும் அடைந்த வெற்றியாகும். கடைசியாக இவர் இமய மலையிலுள்ள கேதார்நாத் என்னும் திருக்கேதார க்ஷேத்திரத்துக்குச்

---

* சங்கராச்சாரியர் ஸ்தாபித்த அத்வைத மதத்தை அவலம்பிப்போர் பெரும்பாலும் சைவர்களாக இருப்பதால், அவர் சைவ சமயத்துக்குப் புத்துயிர் அளித்ததாக ஆசிரியர் கூறுகிறார் என்று தோன்றுகிறது.

** பத்ரிநாத், துவாரகை, சிருங்கேரி, பூரி ஆகிய இடங்களிலும் காஞ்சிபுரத்திலும் இவர் காமகோடி பீடம் ஸ்தாபித்தார்.

சென்று அங்கே சமாதிநிலை கூடினார். இவருக்கு அப்போது வயது முப்பத்திரண்டுக்கு மேல் இராது.

ஸ்ரீமத் சங்கராச்சாரியார் அவர்களின் சாதனை ஆச்சரியமானதாகும். வடக்கேயிருந்து தெற்கே விரட்டப்பட்ட பௌத்த மதம் இப்போது இந்தியாவிலிருந்தே ஏறக்குறைய மறைந்துவிடுகிறது. ஹிந்து மதமும் அதன் ஒரு பிரிவான சைவமும் தேச முழுவதிலும் ஆதிக்கம் பெறுகின்றன. சங்கரர் இயற்றிய நூல்களும், கண்ட உரைகளும், செய்த வாதங்களும் அறிவுத் துறையில் தேசத்தைத் தட்டி எழுப்பின. அவர் பிராமணர்களுக்குப் பெரிய தலைவராக விளங்கியதோடல்லாமல் பாமர ஜனங்களின் மனதையும் கவர்ந்தார். ஒருவர் தமது அறிவு முதிர்ச்சி காரணமாகப் பெரிய தலைவராவதும், கோடிக் கணக்கான மக்களின் உள்ளத்தைக் கொள்ளை கொள்வதும், சரித்திரத்தை உருவாக்குவதும் சாதாரணமாக நிகழக்கூடியனவல்ல. பெரிய போர்வீரர்களும், ஜெயசீலர்களும் சரித்திரத்தில் பிரதானமாக விளங்குகிறார்கள். ஜனங்கள் அவர்களை விரும்புவதும் உண்டு, வெறுப்பதும் உண்டு. சில சமயங்களில் அவர்கள் சரித்திரத்தையும் உருவாக்குகிறார்கள். பெரிய மதத் தலைவர்கள் கோடிக்கணக்கான பேர்களின் உள்ளத்தில் பக்தியையும் ஆவேசத்தையும் எழுப்பியிருக்கிறார்கள். ஆனால் இதற்கு எப்போதும் நம்பிக்கையே அடிப்படையாக இருந்து வந்திருக்கிறது. மக்களின் உணர்ச்சியைத் தொட்டும் தூண்டியுமே அவர்கள் அக்காரியத்தைச் சாதித்திருக்கிறார்கள்.

ஆனால், மக்களுடைய சிந்தனை சக்தியையும், அறிவையும் தூண்டுவது எளிதல்ல. துரதிர்ஷ்டவசமாகப் பெரும்பாலோர் சிந்திப்பதில்லை; அவர்கள் உணர்கிறார்கள். அவ்வுணர்ச்சி வசத்தாராய்க் காரியம் செய்

கிறார்கள். ஆயினும் சங்கரர் மக்களுடைய சிந்தனை சக்தியையும் பகுத்தறிவையுமே தட்டி எழுப்பினார். பழைய நூல்களில் கண்டவற்றைக் கிளிப்பிள்ளைபோல் அவர் திரும்பத் திரும்பச் சொல்லவில்லை. அவருடைய வாதம், சரியா தப்பா என்பது விஷயமல்ல. மத சம்பந்த மான பிரச்சினைகளை அறிவுக் கண்கொண்டு பார்த்ததும், அதைவிட, அவர் அவ்வாறு பார்த்தும் அதில் அடைந்த வெற்றியுமே நாம் கவனிக்க வேண்டிய விஷயங்கள். இதிலிருந்து அந்நாளில் அரசாட்சி செய்தவர்களுடைய மனதை நாம் ஒருவாறு அறிய முடிகிறது.

ஹிந்து தத்துவ ஞானிகளுள் சார்வாகன் (Charvaka) என்று ஒருவர் இருந்தார். அவர் நாஸ்திகம் போதித்தார். அதாவது கடவுளே இல்லை என்று சொன்னார். இன்று கடவுள் நம்பிக்கை இல்லாதவர்கள், முக்கியமாக ருஷியா தேசத்தில் பலர் இருக்கிறார்கள். அதை நாம் இப்போது எடுத்துக்கொள்ள வேண்டியதில்லை. ஆனால், பண்டைக் காலத்தில் இந்தியாவில் காணப்பட்ட சிந்தனை சுதந்தரமும் எழுத்து சுதந்தரமும் நமக்கு ஆச்சரியத்தைத் தருகின்றன. அதாவது ஒருவன் தன் மனச்சாட்சிக்கு ஒத்தபடி நடக்கும் சுதந்தரம் உடையவனாயிருந்தான். சமீபகாலம் வரையில் ஐரோப்பாவில் இச் சுதந்திரம் இல்லை; தற்காலத்திலும் சில தடைகள் இருக்கின்றன.

சங்கரரின் வாழ்க்கையிலிருந்து நாம் இன்னொரு உண்மையையும் தெரிந்து கொள்ளுகிறோம். அதுதான் இந்தியா கலைத்துறையில் அடைந்திருந்த ஒற்றுமை யாகும். பண்டைய சரித்திரம் முழுவதிலும் இது ஒப்புக் கொள்ளப்பட்டிருப்பதைக் காண்கிறோம். பூமியின் இயற்கை அமைப்பில் இந்தியா ஏறக்குறைய ஒரு தனிப் பட்ட பிராந்தியமாக இருக்கிறது. அரசியலில் அது அநேகமாகப் பிளவுபட்டே இருந்து வந்திருக்கிறது. சில

சமயங்களில் அது ஏறக்குறைய ஒரே மத்திய அரசாட்சியின்கீழ் இருந்து வந்திருப்பதையும் நாம் கண்டோம். ஆனால் ஆதியிலிருந்தே இந்தியா கலைத்துறையில் ஒன்று தான். ஏனெனில் பாரததேசம் எங்கணும் பழக்க வழக்கங்கள், மதங்கள், கதைகள், கதைகளில் வரும் தலைவர் தலைவியர், மதத்துக்குரிய பாஷை (சம்ஸ்கிருதம்), தேசத்தின் நாலாபக்கங்களிலும் பரவிக்கிடக்கும் புண்ணிய க்ஷேத்திரங்கள், கிராமப் பஞ்சாயத்து முறை, தத்துவம், அரசியல் எல்லாம் ஒரே மாதிரியாக இருந்து வந்துள்ளன. சாதாரண இந்தியன் எவனும் இந்நாட்டை ஒரு புண்ணிய பூமியாகக் கருதுகிறான். உலகின் மற்றப் பாகங்களில் மிலேச்சர்களும் காட்டுமிராண்டிகளும் வாழ்வதாக அவன் எண்ணம். இவ்வாறாக எழுந்த ஒரு பொதுவான இந்திய மனோபாவம் தேசத்தின் அரசியல் பிளவுகளைப் பொருட்படுத்தாமலும் அவற்றின் மீது வெற்றிகொண்டும் நின்றது. அரசாட்சியின் மேல் நிலையில் எவ்வித மாறுதல் ஏற்பட்டபோதிலும் அதன் அடிநிலையாகிய பஞ்சாயத்து முறை மாறுபாடின்றி நடந்து வந்தது இதற்கு முக்கிய காரணம் ஆகும்.

சங்கரர் இந்தியாவின் நாலு பக்கங்களிலும் நாலு இடங்களைத் தேர்ந்தெடுத்துத் தம் மடங்கள் அல்லது பீடங்களை ஸ்தாபித்ததே அவர் இந்தியாவைக் கலைத் துறையில் ஒன்றாகக் கண்டதற்குச் சான்றாகும். தேசம் முழுவதிலும் அவருடைய பிரசாரம் சொற்ப காலத்திலேயே வெற்றி பெற்றது, அறிவுப் பிரவாகமும் கலைப் பிரவாகமும் எப்படி தேசத்தின் ஒரு மூலையிலிருந்து மற்றொரு மூலைக்குப் பாய்ந்து சென்றன என்பதைக் காட்டுகிறது.

சங்கரர் சைவ மதத்தைப் போதித்தார். இது விசேஷமாகத் தென் இந்தியாவில் பரவிற்று. அங்குள்ள

பழைய கோயில்களில் பல, சிவன் கோயில்களாக இருப்பதை இன்றும் காணலாம். வட இந்தியாவில் குப்தர்கள் காலத்தில் வைஷ்ணவ மதமும் கிருஷ்ண-வணக்கமும் புத்துயிர் பெற்றன. ஹிந்து மதத்தின் இரு பிரிவுகளான சைவ, வைஷ்ணவ ஆலயங்கள் ஒன்றோடொன்று மாறுபட்டிருக்கின்றன.

இக்கடிதம் மிகவும் நீண்டுவிட்டது. ஆனால் இடைக்காலத்து இந்தியாவின் நிலைமையைப்பற்றி இன்னும் எவ்வளவோ சொல்ல வேண்டியிருக்கிறது. அதை அடுத்த கடிதத்துக்கு வைத்துக் கொள்ளுகிறேன்.

# 45

## இடைக்காலத்து இந்தியா

மே 14, 1932.

அசோகரின் பாட்டனாகிய சந்திரகுப்த மௌரியனுடைய பிரதம மந்திரி சாணக்கியன் எழுதிய அர்த்த சாஸ்திரத்தைப் பற்றி நான் கூறியது உனக்கு நினைவிருக்கும். இந்நூல் அக்காலத்து மக்களைப்பற்றியும் அரசாங்க முறைகளைப்பற்றியும் விரிவாகப் பேசுகிறது. கி. மு. நான்காம் நூற்றாண்டிலிருந்த இந்தியாவை நாம் பார்ப்பதற்கு ஒரு சிறு ஜன்னலைத் திறந்துவிட்டது போலிருக்கிறது இந்நூல். அரசாட்சி முறையின் சிறு அம்சங்களையும் விடாது கூறும் இத்தகைய நூல்கள், அரசர்களையும் அவர்களுடைய வெற்றிகளையும் மிகைப் படுத்திக் கூறும் ஏனைய நூல்களைவிட நமக்கு எவ்வளவோ உதவியாயிருக்கின்றன.

*இடைக் காலத்தில் இந்தியாவின் நிலைமையை அறிவதற்கு இன்னொரு நூலும் நமக்குச் சிறிது உதவுகிறது. சுக்கிராச்சாரியார் எழுதிய இந்நூலுக்கு நீதிசாரம் என்று பெயர். இது அர்த்த சாஸ்திரத்தைப் போல் அவ்வளவு பயனுள்ளதல்ல. ஆயினும் இதன் துணை கொண்டும் மற்றும் சில கல்வெட்டுகள், வரலாறுகள் இவற்றின் துணைகொண்டும் கி. பி. ஒன்பது அல்லது

---

* இடைக்காலம் சுமார் 9-ஆம் நூற்றாண்டிலிருந்து 18-ஆம் நூற்றாண்டு வரையில் உள்ள ஆயிரம் வருஷம் என்று கொள்ளலாம்.

பத்தாம் நூற்றுண்டு இந்தியாவை ஒருவாறு அறிந்து கொள்ள நாம் முயற்சிப்போமாக.

'ஒருவன் வர்ணத்தாலும் முன்னோர்களாலும் பிராமணனுக்குரிய தகுதியை அடைய முடியாது' என்று நீதிசாரம் கூறுகிறது. அதன்படி ஜாதி பாகுபாடு பிறப்பை அனுசரித்ததாயிராமல் திறமையை அனுசரித்திருக்கவேண்டும் என்று ஏற்படுகிறது. 'ஜாதியையும் குடிப் பிறப்பையும் பாராமல், ஒழுக்கம், உழைப்பு, தகுதி இவைகளைப் பார்த்தே அரசாங்க ஊழியர்களை நியமிக்க வேண்டும்' என்றும் அது கூறுகிறது. அரசன் தன் சித்தப்படி ஒன்றும் செய்யாமல் மக்களில் பெரும் பாலோருடைய அபிப்பிராயப்படியே எதையும் செய்ய வேண்டும். 'பொதுஜன அபிப்பிராயம் அரசனைவிட அதிகச் சக்தி வாய்ந்தது. எதைப் போலென்றுல், பல சிறு நார்களாலாகிய கயிறு சிங்கத்தையும் இழுக்கக்கூடிய வலிமை பெற்றிருப்பது போல்.'

இவைகளெல்லாம் சிறந்த நீதிவாக்கியங்கள். சொல்லளவில் இவை இன்னும் நன்ருயிருக்கின்றன. ஆனல் செயலுக்கு வரும்போது இவை அதிகப் பயனைத் தருவதில்லை. திறமையும் தகுதியும் இருக்குமாயின் ஒருவன் முன்னுக்கு வரக்கூடும். ஆனல் அவன் அந்தத் திறமையையும் தகுதியையும் எவ்வாறு அடைவது? ஒரு பையனோ பெண்ணோ கூரிய அறிவு படைத்திருக்கலாம். தகுந்த கல்வியும் பயிற்சியும் அளித்தால் கெட்டிக்காரத்தனமும் திறமையும் பெறலாம். ஆனல் அத்தகைய படிப்புக்கும் பயிற்சிக்கும் ஏற்பாடு செய்யாவிட்டால் அந்த ஏழைப் பையனோ பெண்ணோ என்ன செய்ய முடியும்?

இதே மாதிரி, பொதுஜன அபிப்பிராயம் என்பது என்ன? யாருடைய அபிப்பிராயத்தைப் பொதுஜன

அபிப்பிராயமாக எடுத்துக்கொள்வது? நீதிசாரத்தை இயற்றியவர் பெரும்பான்மையோரான சூத்திரர் எவ்வித மான அபிப்பிராயமும் சொல்லத் தகுதியற்றவர்கள் என்று கருதியிருக்கலாம். அவர்களைப் பொருட்படுத்து வோர் எவரும் இல்லை. பொதுஜன அபிப்பிராயம் என்பது மேல் வகுப்பார், ஆளும் வகுப்பார் இவர்களுடைய அபிப்பிராயமே போலும்.

ஆயினும் இந்திய அரசியலில் இடைக் காலத்திலும் சரி, அதற்கு முன்பும் சரி, யதேச்சாதிகாரத்துக்கும் அரசரின் தெய்விக உரிமைக் கொள்கைக்கும் இடமில்லை என்பதைக் காண நாம் வியப்படைகிறோம்.

அரசனுக்கு யோசனை கூற ஒரு மந்திராலோசனை சபை இருந்தது. பொது மராமத்து வேலைகள், தோட்டங்கள், காடுகள் இவைகளை மேற்பார்வை செய்யப் பெரிய அதிகாரிகள் நியமிக்கப்பட் டிருந்தார்கள். கிராம வாழ்க்கையும், நகர வாழ்க்கையும் நன்கு அமைக்கப்பட்டு நடந்து வந்தன. பாலங்கள், ஓடங்கள், சத்திரங்கள், சாலைகள், இன்னும் ஒரு கிராமம் அல்லது நகரத்துக்கு முக்கியமான வடிகால்கள் எல்லாம் நன்கு பராமரிக்கப்பட்டு வந்தன.

கிராமப் பஞ்சாயத்து சபை கிராம விவகாரங்களில் முழு ஆதிக்கம் செலுத்தி வந்தது. அப்பஞ்சாயத்து சபையின் அங்கத்தினர்களை அரசாங்க அதிகாரிகள் மிகவும் மரியாதையுடன் நடத்தி வந்தார்கள். பஞ்சாயத்து சபையே நிலங்களைப் பலருக்கும் பகிர்ந்து கொடுத்தும், அவர்களிடமிருந்து வரிகளை வசூலித்தும், பிறகு அரசாங் கத்துக்குக் கிராமத்தின் சார்பாக வரி செலுத்தியும் வந்தது. இப்பஞ்சாயத்துகளின் வேலைகளை மேற்பார்வை செய்ய ஒரு பெரிய பஞ்சாயத்து அல்லது மகாசபை இருந்தது. அவசியம் நேரிட்டால் அது பஞ்சாயத்து

விவகாரங்களில் தலையிடும். இப்பஞ்சாயத்து சபைகள் நியாயஸ்தலங்களாகவும் இருந்து ஜனங்களை விசாரித்து நியாயம் வழங்கி வந்தன.

தென் இந்தியாவிலுள்ள சில பழைய கல்வெட்டுகளிலிருந்து பஞ்சாயத்து சபைக்கு அங்கத்தினர்கள் எவ்வாறு தேர்ந்தெடுக்கப்பட்டார்கள் என்றும், இன்ன யோக்கியதை உடையவர்கள் அங்கத்தினர்கள் ஆகலாம் என்றும், இன்னன்னுர் அங்கத்தினர்கள் ஆக யோக்கியதை அற்றவர்கள் என்றும் அறியக் கிடக்கிறது. எந்த அங்கத்தினராவது பொதுப் பணத்துக்குக் கணக்கு ஒப்புவிக்காவிட்டால் அவர் அங்கத்தினராக இருக்க முடியாது. அக்காலத்தில் அமுலில் இருந்த இன்னொரு நல்ல விதி என்னவென்ருல், அங்கத்தினர்களின் நெருங்கிய உறவினர்களுக்கு உத்தியோகம் கொடுக்கக் கூடாது என்பதே யாகும். இந்த விதி நமது தற்காலச் சட்ட சபைகளிலும், நகர சபைகளிலும் அமுலில் இருந்தால் எவ்வளவு நன்ருயிருக்கும்!

ஒரு ஸ்திரீ ஒரு கமிட்டியில் அங்கத்தினராக இருந்ததாகச் சொல்லப்படுகிறது. ஆகவே பஞ்சாயத்துகளிலும் அவற்றின் கமிட்டிகளிலும் ஸ்திரீகள் அங்கம் வகிக்கலாம் என்று ஏற்படுகிறது.* பஞ்சாயத்துகளுக்கு, தேர்ந்தெடுக்கப்பட்ட அங்கத்தினர்களைக் கொண்ட கமிட்டிகள் நிறுவப்பட்டன. ஒவ்வொரு கமிட்டியும் ஒரு வருஷம் உத்தியோகம் வகிக்கும். எந்த அங்கத்தின

* மேலே கூறிய விஷயங்கள் செங்கல்பட்டு ஜில்லாவைச் சேர்ந்த உத்திரன்மேரூரில் உள்ள கல்வெட்டுகளில் காணக் கிடக்கின்றன. பெருங்கரநாயகி என்னும் பெண்மணி ஒருத்தி பஞ்சாயத்து அங்கத்தினராக இருந்ததாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

ராவது தவருக நடந்தால் அவர் தம் ஸ்தானத்திலிருந்து நீக்கப்படுவார்.

இந்தக் கிராம சுயாட்சி முறைதான் ஆரிய அரசியலின் அடிப்படையாக இருந்தது. அதற்குப் பலம் அளித்ததும் இதுவே. கிராம சபைகள் தங்களுடைய சுதந்தரங்களைக் கண்ணும் கருத்துமாகப் பாதுகாத்துவந்தன. அதனுல் அரசனுடைய படை வீரர் யாரும் அரசனுடைய அனுமதிச் சீட்டு இல்லாமல் கிராமத்துக்குள் பிரவேசிக்கக்கூடாது என்று விதி செய்யப்பட்டது. குடிகள் அரசனிடம் ஓர் அதிகாரியைப்பற்றிக் குறை கூறிஞல் அவன் 'அதிகாரியின் பக்கம் சேராமல் குடிகளின் பக்கம் சேரவேண்டும்' என்று நீதிசாரம் சொல்லுகிறது. 'பலர் ஓர் அதிகாரியின்மீது புகார் செய்தால் அந்த அதிகாரியை அரசன் உத்தியோகத்திலிருந்தே நீக்கிவிடவேண்டும். ஏனெனில் அதிகாரஸ்தானம் கிடைத்துவிட்டால் அதில் மயங்கி வெறிகொள்ளாமல் யாரே இருக்கமுடியும்?' இப்பொன்மொழிகள் நம் நாட்டில் இன்று அதிகாரத் திமிர்பிடித்து அலையும் அதிகார வர்க்கத்துக்கு எவ்வளவு பொருத்தமா யிருக்கின்றன!

தொழிலாளிகளும், வியாபாரிகளும் அதிகமாயிருந்த பெரிய பட்டணங்களில் சங்கங்கள் அமைக்கப்பட்டன. இவ்வாருக, கைத் தொழிலாளிகள் சங்கம், நிதி நிலையங்கள் (Banking Corporation), வியாபாரிகள் சங்கம் ஆகியவை ஏற்பட்டன. மத ஸ்தாபனங்களும் இருந்தன. இந்த ஸ்தாபனங்கள் எல்லாம் தங்கள் தங்கள் விவகாரங்களில் பெரிதும் ஆதிக்கம் செலுத்தி வந்தன.

அரசன், குடிகள் பொறுக்கமாட்டாத அல்லது அவர்களுக்குத் துன்பம் தரும்படியாக வரி விதிக்கக்கூடாதென்றும், லேசாகவே வரி விதிக்க வேண்டுமென்றும்

நூல்கள் ஆணையிட்டிருந்தன. பூமாலை தொடுப்போன் காட்டுக்குச் சென்று பூக்களையும், இலைகளையும் கொய்வதுபோல அரசன் வரிவிதிக்க வேண்டுமென்றும், காட்டை அழித்துக் கரி கொளுத்துவோனைப் போல அவன் வரி விதிக்கக் கூடாதென்றும் நீதி நூல்கள் அறுதியிட்டுரைத்தன.

இடைக்காலத்து இந்தியாவைப்பற்றி நாம் தெரிந்து கொள்ளக் கூடியவைகள் மேற்கூறியவைகளே. நூல்களில் காணப்படும் கொள்கைகள் எவ்வளவு தூரம் அனுஷ்டானத்திற்குக் கொண்டுவரப்பட்டன என்பதைக் கண்டுபிடிப்பது சிறிது கடினமான காரியம். நூல்களில் அரிய கொள்கைகளைப்பற்றியும் லட்சியங்களைப்பற்றியும் எழுதிவிடுவது எளிது. ஆனால் அவற்றை நடைமுறையில் கொண்டுவருவது மிகவும் சிரமமானது. ஆயினும், அக்காலத்து மக்கள் அவைகளைப் பூராவும் செயலில் காட்டாவிட்டாலும் அவர்களுடைய கருத்துக்கள் என்ன என்பதை அறிந்துகொள்ள அந்நூல்கள் நமக்குத் துணைபுரிகின்றன. அரசர்கள் அநேகமாக யதேச்சாதிகாரம் செலுத்தவில்லை என்பதைக் காண்கிறோம். அவர்களுடைய அதிகாரம் அளவுக்கு மீறிப் போகாமல் பஞ்சாயத்து சபைகள் பார்த்துவந்தன. கிராமங்களிலும், பட்டணங்களிலும் சற்றேறக்குறைய முற்போக்கான சுய ஆட்சி முறை இருந்ததையும், இதில் மத்திய அரசாங்கம் அதிகமாகத் தலையிடவில்லை என்பதையும் காண்கிறோம்.

ஜனங்களின் கருத்துக்கள், சுய ஆட்சி, என்றெல்லாம் நான் பேசும்போது எதைக் குறிக்கிறேன்? இந்தியாவில் சமுதாய அமைப்பு முழுவதும் ஜாதிமுறையை அடிப்படையாகக் கொண்டது. வாயளவில் இது கடுமையாக இல்லாமல் இருந்திருக்கலாம். நீதிசாரம் கூறுகிறபடி திறமையும் தகுதியும் வாய்ந்தவர்களுக்கு அவர்கள்

யாராயினும் ஜாதிமுறை இடம் கொடுத்திருக்கலாம். ஆனால் உண்மையில் இதற்கு அதிக அர்த்தம் கிடையாது. பிராமணர்களும், க்ஷத்திரியர்களுமே அரசாட்சியை நடத்தியவர்கள். சில சமயங்களில் இவ்விரு வகுப்பாருக்குள்ளேயே அரசுகுறித்துப் போராட்டம் நிகழுவதுண்டு. ஆனால் அநேகமாக அவர்கள் ஒருவருக்கொருவர் விட்டுக்கொடுத்துக் கூட்டாகவே அரசுபுரிந்து வந்தனர். மற்றவர்களை அவர்கள் அடக்கிவைத்தனர். சிறிது சிறிதாக வியாபாரம் பெருகவே வியாபாரிகளிடம் அல்லது வைசியர்களிடம் செல்வமும் பெருகியது. வைசிய வகுப்பாரின் முக்கியத்துவம் அதிகரிக்கவே அவர்களுக்குச் சில விசேஷ சலுகைகளும், தங்கள் சங்க விவகாரங்களைத் தாங்களே நடத்திக்கொள்ளும் சுதந்தரமும் அளிக்கப்பட்டன. ஆயினும், வைசியருக்கு அரசாங்க அதிகாரத்தில் பங்கு கிடையாது. ஏழைச் சூத்திரர்களைப்பற்றிக் கேட்கவே வேண்டியதில்லை. அவர்கள் எப்பொழுதும் கீழ் நிலையிலேயே இருந்துவந்தனர். அவர்களுக்குக் கீழும் வேறு சிலர் இருந்தார்கள்.

சில வேளைகளில் கீழ்ஜாதிகளைச் சேர்ந்தவர்கள் மேலுக்கு வருவதும் உண்டு. சூத்திரர்களும் அரசர்களாகியிருக்கிறார்கள். ஆனால் இது மிகவும் அருமை. ஒரு தாழ்ந்தஜாதி முழுவதும் சமுதாய ஏணியில் ஒருபடி மேலே ஏறிச் சென்றுவிடுவது அடிக்கடி நிகழ்ந்துவந்தது. ஹிந்து மதத்தில் அவ்வப்போது புதிய ஜாதியார்கள் சேர்ந்துவந்தார்கள். இவர்கள் சிறிது சிறிதாக மேலுக்கு வந்தார்கள்.

ஆகவே, நம்நாட்டில் மேல்நாடுகளைப்போல் தொழில்-அடிமைத்தனம் இல்லாவிட்டாலும் நமது சமுதாய அமைப்பு முழுவதும் படிப்படியாக அமைந்திருந்தது. அதாவது ஒரு வகுப்புக்குமேல் இன்னொரு வகுப்பு,

அதற்குமேல் வேருெரு வகுப்பு, இப்படியாக இருந்தது. அடிநிலையிலுள்ள கோடிக்கணக்கான மக்கள் மேல் நிலையில் உள்ளவர்களைத் தாங்கியும் அவர்களால் சுரண்டப்பட்டும் வந்தார்கள். மேல் படியில் உள்ளவர்கள் இம்முறை சாசுவதமாக இருக்கப் பார்த்துக்கொண்டு, கீழ்ப்படியில் உள்ள ஏழை ஜனங்களுக்குக் கல்வியோ, பயிற்சியோ அளிக்காமல் அதிகாரம் முழுவதையும் தங்கள் கையிலேயே வைத்திருக்க முயன்றுவந்தார்கள். கிராமப் பஞ்சாயத்துகளில் குடியானவர்களுக்குச் சிறிது சுதந்தரம் இருந்திருக்கலாம். அவர்களை அங்கு அலட்சியம் செய்ய முடியாமலும் இருந்திருக்கலாம். ஆனல் இப் பஞ்சாயத்துகளும் அநேகமாகச் சில கெட்டிக்காரப் பிராமணர்களின் ஆதிக்கத்தின்கீழ் இருந்திருக்கவேண்டும்.

ஆரியர் இந்தியாவுக்கு வந்து இங்குள்ள திராவிடர்களுடன் தொடர்புகொண்ட நாளிலிருந்து இப்போது நாம் பேசும் இடைக்காலம் வரையில் இப்பழைய ஆரிய அரசியல் இடையீடின்றி வந்திருக்கிறது. ஆனல் காலம் செல்லச் செல்ல இது கேடுற்றும், பலவீனமுற்றும் வந்தது. ஒருவேளை இது கிழப்பருவம் எய்தியிருக்கலாம். அடிக்கடி நிகழ்ந்த அந்நியப் படையெடுப்புக்களாலும் இது நசித்துப் போயிருக்கலாம்.

பண்டைக்காலத்தில் இந்தியா கணித சாஸ்திரத்தில் மேன்மை உற்றிருந்த தென்பதை அறிய நீ இறும்பூது எய்துவாய். கணிதத்தில் நிகரற்று விளங்கியவர்களுள் லீலாவதி என்ருெரு மாதும் இருந்தாள். அவளும், அவள் தந்தை பாஸ்கராச்சாரியரும், பிரம்மகுப்தர் என்னும் இன்னெருவரும் முதல்முதலில் தசாம்ச பின்ன முறையைக் கண்டுபிடித்ததாகச் சொல்லப்படுகிறது. பீஜ கணிதமும் இந்தியாவில் பிறந்ததாகவே கருதப்படுகிறது. அது இந்தியாவிலிருந்து அரேபியாவுக்கும், அங்கிருந்து ஐரோப்பாவுக்கும் சென்றது. ஆங்கிலத்தில் அதற்கு 'அல்ஜீப்ரா' என்று பெயர். 'அல்ஜீப்ரா' என்னும் சொல் அரபு மொழியிலிருந்து வந்ததாகும்.

# 46

## அங்கோர் அணி நகரும் ஸ்ரீவிஜயப் பெரு நகரும்

மே 17, 1932

இப்போது நாம் அகண்ட இந்தியாவுக்குச் செல்வோம். அதாவது தென் இந்தியர், மலாயாசியாவிலும், இந்தோ-சீனுவிலும் ஸ்தாபித்த குடியேற்றங்களைக் குறிப்பிடுகிறேன். அவைகள் எவ்வாறு முன்யோசனையுடன் ஏற்படுத்தப்பட்டன என்பதை முன்பே கூறியிருக்கிறேன். அவைகள் எப்படியோ தோன்றி வளர்ந்தன என்று சொல்லமுடியாது. ஏககாலத்தில் வெவ்வேறு இடங்களில் குடியேற்றத்திற்கான திட்டங்கள் முன்னதாகவே வகுக்கப்பட்டு நிறைவேற்றப்படுவ தென்றால், அடிக்கடி ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்துக்குக் கடற்பிரயாணம் நிகழ்ந்திருக்க வேண்டும். அத்துடன் போதிய கடலாதிக்கமும் இருந்திருக்க வேண்டும். கிறிஸ்து சகாப்தத்தின் முதலிரண்டாம் நூற்றுண்டுகளில் அக்குடியேற்றங்கள் ஆரம்பித்தன என்றும் சொல்லியிருக்கிறேன். அவை தென் இந்தியப் பெயர்கள்பூண்ட ஹிந்துக் குடியேற்றங்கள். சில நூற்றுண்டுகளுக்குப் பிறகு பௌத்த மதம் சிறிது சிறிதாகப் பரவி ஏறக்குறைய ஹிந்து மலாயாசியா முழுவதையும் தன்மயமாக்கியது.

முதலில் இந்தோ-சீனுவுக்குப் போவோம். அங்கு அன்னும் மாகாணத்தில் ஆதியில் ஏற்பட்ட குடியேற்றத்துக்குச் சம்பா என்று பெயர். மூன்றும் நூற்றுண்டில்

பாண்டுரங்கம் என்னும் நகரம் அங்கே தோன்றி வளர் வதைக் காண்கிறோம். இரு நூறு ஆண்டுகளுக்குப் பிறகு காம்போஜ நகரம் சீருற்று விளங்கியது. அந்நகரில் பெரிய கட்டிடங்களும் கல்லால் கட்டப்பட்ட கோயில் களும் நிறைந்திருந்தன. இவ்விந்தியக் குடியேற்றங்க ளெங்கும் மாட மாளிகைகளும், கூட கோபுரங்களும் தோன்றுவதைப் பார்க்கிறோம். சிறந்த சிற்பிகளும், கட்டிடக் கலை வல்லோரும் இந்தியாவிலிருந்து கொண்டு செல்லப்பட் டிருக்கவேண்டும். அவர்கள் இந்திய முறை களை அங்கே புகுத்தினார்கள். வெவ்வேறு ராஜ்யங் களுக்கும் தீவுகளுக்கு மிடையே கோயில்கள் கட்டுவதில் பெரும் போட்டி ஏற்பட்டது. இதன் பயனாக மிகவும் உயர்ந்த கலை வளர்ச்சி அங்கே ஏற்பட்டது.

அக்குடியேற்றங்களில் வாழ்ந்த மக்கள் இயற்கை யாகவே கடலோடிகளாய் இருந்தார்கள். அவர்களும் அவர்களுடைய முன்னோர்களும் முன்பே கடல் கடந்து அவ்விடங்களுக்குச் சென்றிருக்கிறார்கள். அவர்களைச் சுற்றிலும் இருந்தது கடல். கடல்மீது செல்வோர் எளிதில் வியாபாரத்தை மேற்கொள்ளுகிறார்கள். ஆகவே அவர்கள் தங்கள் சரக்குகளைக் கப்பல்களில் ஏற்றிக் கொண்டு மேற்கே இந்தியாவுக்கும், கிழக்கே சீனாவுக்கும், வேறு பல தீவுகளுக்கும் சென்று வர்த்தகம் செய்து வந்தனர். இவ்வாறு மலாயாசியாவிலிருந்த பல நாடுகளும் வர்த்தக வகுப்பாரின் ஆதிக்கத்தின்கீழ் இருந்தன. அடிக்கடி இந்நாடுகளுக்குள் பெரும் போர்களும் கொலை களும் நிகழ்ந்துவந்தன. சில சமயங்களில் ஒரு ஹிந்து ராஜ்யம் பௌத்த ராஜ்யத்துடன் போரிடும். ஆனால், அக்காலத்தில் நடந்த பல போர்களுக்கு வர்த்தகப்போட்டி தான் உண்மையான காரணம் என்று தோன்றுகிறது. இக்காலத்தில் பெரிய வல்லரசுகளுக்கிடையே தாங்கள்

செய்யும் சாமான்களை விற்பதற்குரிய இடங்களைக் குறித்து யுத்தங்கள் நிகழ்வது போலவேதான் அவைகளும் நிகழ்ந்தன.

ஏறக்குறைய 300 வருஷங்களாக, எட்டாவது நூற்றாண்டு வரையில், இந்தோ - சீனுவில் மூன்று வெவ்வேறு ஹிந்து ராஜ்யங்கள் இருந்தன. ஒன்பதாம் நூற்றாண்டில் ஜயவர்மன் என்றொரு பெரிய அரசன் தோன்றி இம்மூன்றையும் ஒன்றுபடுத்தி ஒரு பெரிய சாம்ராஜ்யத்தை ஸ்தாபித்தான். அவன் பௌத்தனுயிருக்கலாம் என்று தோன்றுகிறது. அவன் அங்கோர் என்னுமிடத்தில் தனது சாம்ராஜ்யத்தின் தலைநகரை நிருமாணித்தான். அவ்வேலையை அவனுக்குப் பின்வந்த யசோவர்மன் பூர்த்தி செய்தான். இந்தக் கம்போடிய சாம்ராஜ்யம் 400 ஆண்டுகள் நிலைபெற்றிருந்தது. எல்லாச் சாம்ராஜ்யங்களையும்போல் அதுவும் சிறப்பும் வலிமையும் வாய்ந்திருந்தது. தலைநகரான அங்கோர்தோம், 'அங்கோர் அணி நகரம்' என்று கீழ்த்திசை முழுவதும் பிரசித்தி பெற்றிருந்தது. அதில் பத்து லட்சம் பேருக்குமேல் வாழ்ந்துவந்தனர். சீசர்கள் ஆண்ட ரோமாபுரியைவிட அது பெரிதாயிருந்தது. அதற்கருகில் அழகிய அங்கோர்வாட் ஆலயம் இருந்தது. பதின்மூன்ரும் நூற்றாண்டில் கம்போடியா நாலாபக்கங்களிலும் தாக்கப்பட்டது. கிழக்கேயிருந்து அன்னும் தேசத்தாரும் மேற்கேயிருந்து அங்கு வாழ்ந்த சில ஜாதியாரும் தாக்கினுர்கள். மங்கோலியர்களால் தெற்கே துரத்தப்பட்ட ஷான் ஜாதியார் வேறு போக்கிடமின்றி வடக்கேயிருந்து கம்போடியாவைத் தாக்கினுர்கள். இவ்வாறு நாற்றிசையிலும் சதா நிகழ்ந்துவந்த போரினுல் அந்த ராஜ்யத்தின் வலி குன்றிவிட்டது. ஆனுல், அதற்குப் பின்னரும் அங்கோர் மட்டும் கீழ்த்திசையிலுள்ள ஒப்பற்ற நகரங்களில்

ஒன்ருக விளங்கிவந்தது. கி. பி. 1297-இல் கம்போடிய அரசனிடம் அனுப்பப்பட்ட சீன தூதர் அதன் வானளாவிய மாட மாளிகைகளை வியந்து கூறியிருக்கிருர்.

ஆனல், திடீரென்று அங்கோர் நகருக்குப் பெரிய ஆபத்து நேர்ந்தது. கி. பி. 1300-இல் மீகாங் நதியின் முகத்துவாரம் எக்கல் மணலிட்டுத் தூர்ந்துவிட்டது. ஆற்று வெள்ளம் போகமுடியாமல் திரும்பி, அங்கோரைச் சுற்றியுள்ள பிரதேசத்தில் தேங்கி, நன்ருக விளையும் நஞ்சை நிலங்களையெல்லாம் ஒன்றுக்கும் உதவாத சதுப்பு நிலமாக்கிவிட்டது. நகரில் வாழ்ந்த பெருந் தொகையினரான மக்கள் பட்டினியால் வாடினர். வேறு வழியின்றி அவர்கள் நகரைத் துறந்து வேறு இடங்களுக்குச் சென்ருர்கள். ஆகவே, பெருமைபெற்ற 'அங்கோர் அணி நகரம்' நிர்மாநுஷ்ய மாய்விட்டது. அந்த இடத்தில் காடு மண்டியது. அதன் ஆச்சரியமான அரண்மனைகளிலும் மாளிகைகளிலும் காட்டு மிருகங்கள் வாழலாயின. பிறகு அவைகள் மண்ணேடு மண்ணுய்ப் போயின.

இந்த அழிவிற்குப் பிறகு கம்போடிய ராஜ்யம் சீக்கிரத்தில் சிதைந்துபோயிற்று. சிலசமயம் சையாம் நாட்டினராலும், சிலசமயம் அன்னம் நாட்டினராலும் ஆளப்பட்ட ஒரு மாகாணமாக அது மாறிவிட்டது. ஆனல், இன்றுகூட அற்புதமான அங்கோர்வாட் ஆலயத்தின் அழிவுகள், அவற்றின் அருகே ஒருகாலத்தில் கம்பீரமான ஒரு நகரம் இருந்ததையும், அதை நாடி நாலா தேசங்களிலிருந்தும் வியாபாரிகள் தங்கள் நாட்டுப் பொருள்களுடன்வந்து அதற்குமாற்ருக அங்கே செய்யப்பட்ட அழகிய பொருள்களைக் கொண்டு சென்றதையும் நமக்குப் பறை சாற்றுகின்றன.

இந்தோ-சீனுவுக்குச் சிறிது தொலைவில் சுமத்திரா தீவு இருக்கிறது. இங்கும், தென்னிந்தியாவில் அரசுபுரிந்த பல்லவர்கள் கி பி. முதல் அல்லது இரண்டாம் நூற்றுண்டில் தங்கள் முதல் குடியேற்றங்களை ஸ்தாபித்தனர். அவை சிறிது சிறிதாக வளர்ச்சிபெற்றன. ஆரம்பத்திலேயே மலாய் நாடு சுமத்திரா ராஜ்யத்தின் ஒரு பாகமாக ஆய்விட்டது. அதற்குப் பின்னர் நெடுங்காலம் வரையில் இவ்விரு நாடுகளின் சரித்திரங்களும் ஒன்றோடொன்று தொடர்புற்றே வந்திருக்கின்றன. ஸ்ரீவிஜயம் என்னும் பெரிய நகரம் இதற்குத் தலைநகராக இருந்தது. உள்நாட்டில் சுமத்திராவின் மலைச்சாரலிலே இருந்த இந்நகருக்கு, பாலாம்பாங் (Palembang river) நதியின் முகத்துவாரத்தில் ஒரு துறைமுகம் இருந்தது. ஐந்து அல்லது ஆரும் நூற்றுண்டில் சுமத்திராவில் பௌத்த மதம் ஆதிக்கம் பெற்றது. சுமத்திரா பௌத்த மதத்தைத் தீவிரமாகப் பிரசாரம் செய்து ஹிந்து மலாயாசியாவில் பெரும் பகுதியைப் பௌத்தத்தைத் தழுவுமாறு செய்துவிட்டது. ஆகவே இதற்கு ஸ்ரீவிஜய பௌத்த சாம்ராஜ்யம் என்று பெயர் வழங்கலாயிற்று.

ஸ்ரீவிஜய சாம்ராஜ்யம் விரிவடைந்துகொண்டே சென்றது. சுமத்திரா, மலாய் நாடு மட்டுமின்றி, போர்னியோ, பிலிப்பைன் தீவுகள், செலிபீஸ், ஜாவாவில் பாதி, இப்போது ஜப்பானுக்குச் சொந்தமாயுள்ள பர்மோசாத் தீவில் பாதி, இலங்கை, சீனுவில் கான்டனுக்கு அருகில் ஒரு துறைமுகம் ஆகியவைகளையும் அது தன்னுள் கொண்டிருந்தது. இலங்கைக்கு எதிர்த்தாற்போல் இந்தியாவின் தென்கோடியிலுள்ள ஒரு துறைமுகமும் அதில் சேர்ந்ததா யிருந்திருக்கலாம். இப் பரந்த சாம்ராஜ்யத்தில் மலாயாசியா முழுவதும் அடங்கியிருந்ததைக் காண்கிறோம். இவ்விந்தியக் குடியேற்றங்களின் முக்கியத்

தொழில்கள் வாணிகமும், கப்பல் கட்டுதலுமே. இந்தச் சாம்ராஜ்யத்துக்குள் அடங்கிய துறைமுகங்களையும் புதிய குடியேற்றங்களையும் கொண்ட நீண்ட ஜாபிதாக்களை சீன, அரேபிய நூலாசிரியர்கள் நமக்குக் கொடுத்திருக்கிறார்கள். அவைகள் மேலும் மேலும் பெருகிக் கொண்டே போகின்றன.

இன்று பிரிட்டிஷ் சாம்ராஜ்யம் உலக முழுவதும் பரவியிருக்கிறது. எங்கு பார்த்தாலும் அதற்குத் துறைமுகங்களும், நிலக்கரி நிரப்பிக்கொள்ளும் இடங்களும் இருக்கின்றன: ஜிப்ரால்டர், சூயஸ்கால்வாய் (இது பெரும்பான்மையும் பிரிட்டிஷ் ஆதிக்கத்துக்கு உட்பட்டது), ஏடன், கொழும்பு, சிங்கப்பூர், ஹாங்காங் இத்தியாதி. சென்ற 300 வருஷங்களாகப் பிரிட்டிஷார் ஒரு வர்த்தக நாட்டினராக இருந்து வருகிறார்கள். அவர்களுடைய வியாபாரமும் பலமும் கடலாதிக்கத்தைச் சார்ந்து நிற்கின்றன. ஆகவே, அவர்களுக்கு உலகின் பல பாகங்களிலும் சௌகரியமான தூரத்தில் துறைமுகங்களும், நிலக்கரி நிரப்புவதற்கான இடங்களும் தேவையாயிருக்கின்றன. ஸ்ரீ விஜய சாம்ராஜ்யமும் வர்த்தகச் செழிப்பை அடிப்படையாகக்கொண்ட ஒரு கடலரசாகவே இருந்தது. ஆகவே, அது கால்வைக்க முடிந்த இடங்களிலெல்லாம் தனக்குத் துறைமுகங்களை ஏற்படுத்திக்கொண்டது. அதன் குடியேற்றங்களெல்லாம் யுத்தகால அனுகூலத்துக்குப் பெயர்போனவை. சுற்றுப்புறத்திலுள்ள கடல்களின்மீது ஆதிக்கம் செலுத்துவதற்கு அனுகூலமாக அவை அமைக்கப்பட்டன. அவைகள் பெரும்பாலும் ஜோடி ஜோடியாக அமைந்து, இவ் ஆதிக்கம் செலுத்துவதில் ஒன்று மற்றொன்றுக்கு உதவியாக யிருந்துவந்தன.

இன்று பெரிய நகரமாக விளங்கும் சிங்கப்பூர்

ஆதியில் சுமத்திரா நாட்டார் ஸ்தாபித்த குடியேற்றமே ஆகும். சிங்கப்பூர் என்னும் பெயரே அசல் இந்தியப் பெயர். அவர்கள் ஜலசந்தியின் அக்கரையில் சிங்கப் பூருக்கு எதிர்த்தாற்போல் ஒரு குடியேற்றத்தையும் ஏற் படுத்தினார்கள். சிலசமயம் அவர்கள் ஜலசந்தியின் குறுக்கே ஒரு இரும்புச்சங்கிலியைக் கட்டிவிட்டு, போகிற வருகிற கப்பல்களையெல்லாம் நிறுத்தி அவைகளிட மிருந்து ஏராளமான பணத்தைச் சுங்கமாகப் பெற்றுக் கொண்ட பிறகே அவைகளுக்கு வழிவிடுவார்கள்.

ஸ்ரீ விஜய சாம்ராஜ்யம் பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தை விடச் சிறிதாயிருந்தாலும் அதைப்போலவே இருந்ததைக் காண்கிறோம். ஆனால் அது பிரிட்டிஷ் சாம்ராஜ்யம் நிலைத்திருக்கக்கூடிய காலத்தைவிட நீண்டகாலம் நிலைத் திருந்தது. அதன் மகோன்னத காலம் பதினோராம் நூற்றாண்டாகும். ஏறக்குறைய அதே காலத்தில்தான் தென் இந்தியாவில் சோழ சாம்ராஜ்யம் தழைத்திருந்தது. ஆனால் சோழ சாம்ராஜ்யத்தைவிட அது அதிக காலம் நீடித்திருந்தது. இரண்டும் நெடுங்காலம் நட்புபூண் டிருந்தன. ஆனால் இரண்டும் பரந்த வியாபாரமும், பலம்பொருந்திய கப்பற்படையும், மிகுந்த படைவலியும் உடையனவா யிருந்தன. ஆகவே பதினோராம் நூற் றாண்டின் தொடக்கத்தில் இரண்டுக்கும் போர் மூண்டது. சோழ மன்னனான முதலாம் ராஜேந்திரன் பெரும் படையுடன் கடல்கடந்து சென்று ஸ்ரீ விஜய சாம்ராஜ் யத்தை அடக்கினான். ஆனால் அது மீண்டும் சீக்கிரத்தில் தலையெடுத்துவிட்டது.

பதினோராம் நூற்றாண்டின் ஆரம்பத்தில் சீன சக்கர வர்த்தி சுமத்திரா மன்னருக்குப் பல வெண்கல மணிகளைப் பரிசாக அனுப்பினார். அதற்குப் பதிலாக அவர் முத்து,

தந்தம், சம்ஸ்கிருத நூல்கள் ஆகியவற்றை அனுப்பினார். பொன் தகட்டில் இந்திய எழுத்துக்கள் செதுக்கப்பட்ட கடிதம் ஒன்றும் அனுப்பப்பட்டதாகச் சொல்லப்படுகிறது.

ஸ்ரீ விஜய சாம்ராஜ்யம் முதல் அல்லது இரண்டாம் நூற்றாண்டில் ஆரம்பித்து, ஐந்து அல்லது ஆறாம் நூற்றாண்டில் பௌத்த மதத்தைத் தழுவி, பிறகு பதினோராம் நூற்றாண்டு வரையில் வளர்ச்சியுற்று வந்தது; அதற்குமேலும் 300 ஆண்டுகள் வரையில் மலாயாசியாவில் வர்த்தக ஆதிக்கம் பூண்டு பெரிய சாம்ராஜ்யமாக விளங்கியது. கி. பி. 1377-இல் வேறொரு பழைய பல்லவ குடியேற்ற நாட்டால் அது இறுதியாக வீழ்த்தப்பட்டது.

ஸ்ரீ விஜய சாம்ராஜ்யம் இலங்கையிலிருந்து சீனாவில் கான்டன் வரையில் பரவி யிருந்ததென்று முன்பே சொன்னேன். இடையிலுள்ள தீவுகளில் பெரும்பாலானவை அதன் ஆட்சியில் இருந்தன. ஆனால் ஒரு சிறு பகுதியை மட்டும் அதனால் அடக்கியாள முடியவில்லை. அது ஜாவா தீவின் கீழ்ப்பகுதியாகும். அது கடைசி வரையில் சுதந்தர நாடாகவும், பௌத்த மதத்தை ஏற்றுக்கொள்ள மறுத்து, ஹிந்து நாடாகவும் இருந்து வந்தது. ஆகவே ஜாவாவின் மேற்பகுதி ஸ்ரீ விஜய சாம்ராஜ்யத்திற்கு அடங்கி யிருந்தபோது அதன் கீழ்ப்பகுதி சுதந்தரத்துடன் இருந்தது. ஹிந்து மதத்தை அனுஷ்டித்துவந்த கீழ் ஜாவா நாடும் தன் செழிப்புக்கு வியாபாரத்தையே நம்பி யிருந்தது. சிங்கப்பூர் சரியான இடத்தில் சிறந்த வியாபார ஸ்தலமாக விளங்கியதைக் கண்டு அது மிகவும் பொறாமைப்பட் டிருக்கவேண்டும். இவ்வாறு ஸ்ரீ விஜய சாம்ராஜ்யத்துக்கும் கீழ் ஜாவாவுக்கும் போட்டி ஏற்பட்டு அது தீராப்பகையாக முற்றி விட்டது. பன்னிரெண்டாம் நூற்றாண்டிலிருந்து கீழ்

ஜாவா மெல்ல மெல்ல வளர்ச்சியுற்று, நான் முன்பு கூறிய வாறு, பதினான்காம் நூற்றாண்டில்—கி. பி. 1377—ஸ்ரீ விஜய சாம்ராஜ்யத்தை முற்றும் அழித்துவிட்டது. மிகவும் கொடிய அப்போரில் ஸ்ரீ விஜயம், சிங்கப்பூர் ஆகிய இரு நகரங்களும் அழிக்கப்பட்டன. மலாயாசி யாவின் இரண்டாவது சாம்ராஜ்யமான ஸ்ரீ விஜய சாம் ராஜ்யம் இவ்வாறு முடிவுற்றது. அதன் அழிவின்மீது மத்தியபாஹிதம் என்னும் மூன்றாவது சாம்ராஜ்யம் தோன்றியது.

ஸ்ரீ விஜய சாம்ராஜ்யத்துடன் நடந்த போரில் கீழ் ஜாவா நாட்டார் மிகவும் கொடுமையாகவும் மூர்க்கத்தன மாகவும் நடந்துகொண்ட போதிலும், அவர்கள் உயரிய நாகரிகம் அடைந்திருந்தார்கள் என்று தெரிகிறது. சிற்பக் கலையில் அவர்கள் சிறந்து விளங்கினார்கள். அதிலும், முக்கியமாகக் கோயில்கள் கட்டுவதில். அங்கு 500 கோயில்களுக்குமேல் இருக்கின்றன. அவற்றில் சில கற்கட்டிடக் கலையில் உலகிலேயே தலைசிறந்து விளங்கு கின்றன. அக்கோயில்களில் பெரும்பாலானவை கி. பி. 650-லிருந்து கி. பி. 950-வரையில் உள்ள காலத்தில் கட்டப்பட்டவை. அவைகளைக் கட்டுவதற்கு ஜாவா நாட்டினர் இந்தியாவிலிருந்தும், தங்களை அடுத்துள்ள நாடுகளிலிருந்தும் ஏராளமான சிற்பிகளையும் கட்டிட நூல் வல்லோரையும் உதவிக்காகக் கொண்டுவந்திருக்க வேண்டும். ஜாவா, மத்தியபாஹிதம் இவற்றின் வர லாற்றைப் பிறகு கவனிப்போம்.

போர்னியோவிலும், பிலிப்பைன் தீவுகளிலும் வாழ்ந்தவர்கள் இந்தியாவிடமிருந்தே முதன்முதலில் எழுதக் கற்றுக்கொண்டார்கள் என்பது இங்கே குறிப் பிடத் தக்கது. ஆதியில் பல்லவ ராஜ்யத்திலிருந்து வந்து

குடியேறியவர்கள் அவர்களுக்கு எழுதக் கற்பித்தார்கள். துரதிர்ஷ்டவசமாகப் பிலிப்பைன் தீவுகளில் இருந்த கையெழுத்துப் பிரதிகளில் பல, ஸ்பானியரால் அழிக்கப் பட்டன.

ஆதியிலிருந்தே, அதாவது இஸ்லாமின் தோற்றத் துக்கு நெடுங்காலம் முன்னரே, இத்தீவுகளில் அரேபியரின் குடியேற்றங்கள் இருந்தன என்பதை நீ நினைவில் வைக்க வேண்டும். அரேபியர் வர்த்தகத்துக்குப் பேர்போனவர் கள். எங்கேயாவது வர்த்தகத்துக்கு வழியுண்டென்றால், அரேபியர் அங்கே சென்று விடுவார்கள்.

# 47

## ரோமாபுரியை மீண்டும் இருள் சூழ்கிறது

மே 19, 1932.

கடந்தகால சரித்திரம் என்னும் சிக்கலில் உன்னை அழைத்துச்செல்ல நான் தகுதியற்றவன் என்பதை அடிக்கடி உணர்கிறேன். நானே வழி, துறை தெரியாமல் மயங்கும்போது உனக்கு வழிகாட்டுவதெப்படி ? ஆனால், நான் எழுதுவது உனக்குச் சிறிதளவு உதவியாயிருக்கும் என்று மீண்டும் எண்ணுகிறேன். ஆகவே, இக்கடிதங்களைத் தொடர்ந்து எழுதுகிறேன். என்னைப் பொறுத்தவரையில் அவை எனக்கு எவ்வளவோ உதவியாயிருக்கின்றன. என் கண்ணே, அவைகளை எழுதிக் கொண்டே உன்னை நினைக்கும்போது, நான் வெயிலின் கடுமையையும் (உட்கார்ந்துள்ள இடத்தில் உஷ்ணம் 112 டிகிரி), காற்று அக்னிஜ்வாலை வீசுவதையும் மறந்துவிடுகிறேன். சில வேளைகளில் நான் பரில்லி ஜில்லா ஜெயிலில் இருக்கிறேன் என்பதையே மறந்துவிடுகிறேன்.

சென்ற கடிதத்தில் 14-ஆம் நூற்றாண்டின் இறுதி வரையில் மலாயாசியாவில் நிகழ்ந்ததைக் கூறினேன். ஆயினும், வட இந்தியாவில் ஹர்ஷன் காலம்—7-ஆவது நூற்றாண்டு - வரையில்தான் பார்த்தோம். ஐரோப்பாவிலும், நாம் பின்சென்று கவனிக்கவேண்டியது எவ்வளவோ இருக்கிறது. எல்லா இடங்களிலும் ஒரே கால அளவைப் பின்பற்றுவது கஷ்டமாயிருக்கிறது. அவ்

வாறு செய்ய முயற்சிக்கிறேன். ஆனால், அங்கோர், ஸ்ரீ விஜயம் இவைகளைப்பற்றிக் கூறுமிடத்து, அவற்றின் கதையை முடிப்பதற்காகச் சில நூற்றாண்டுகள் முன் சென்றதுபோலச் சிலசமயங்களில் நேர்ந்துவிடுகிறது. கிழக்கே கம்போடிய சாம்ராஜ்யமும், ஸ்ரீ விஜய சாம்ராஜ்யமும் தழைத்தோங்கிய காலத்தில் இந்தியாவிலும் சீனாவிலும், ஐரோப்பாவிலும் பலதிறப்பட்ட மாறுதல்கள் நிகழ்ந்துகொண்டிருந்தன என்பதை நீ நினைவில் வைக்கவேண்டும். இந்தோ—சீனா, மலாயாசியா இவற்றின் 1000 வருஷத்துச் சரித்திரத்தைச் சென்ற கடிதத்தில் சுருக்கமாகக் கூறியுள்ளேன் என்பதையும் நினைவில் வை. அந்நாடுகள் ஆசிய, ஐரோப்பியச் சரித்திரத்துடன் பிணைப்புண்டிராத காரணத்தால் அவைகளை யாரும் அதிகமாகக் கவனிப்பதில்லை. ஆனால் அவைகளுடைய நீண்ட சரித்திரம் மிகவும் சிறப்பு வாய்ந்தது. வியாபார விருத்தியிலும், கலாவிருத்தியிலும், முக்கியமாகச் சிற்பக்கலையிலும் அவைகள் அடைந்திருந்த மேன்மை யாரும் அறிந்து பலனடையத் தக்கதாகும். இந்தியருக்கு அந்நாடுகளின் சரித்திரத்தில் விசேஷ ஊக்கம் இருக்க வேண்டும். ஏனெனில் அவை ஏறக்குறைய இந்தியாவின் ஒரு பாகமாக விளங்கின. இந்திய ஆடவரும் மாதரும் கீழ்கடலைக் கடந்து தங்களுடன் இந்தியக் கலை, நாகரிகம், மதம் முதலியவைகளை அங்குக் கொண்டு சென்றார்கள்.

ஆகவே, மலாயாசியாவில் நாம் கால அளவில் முன்னேறிச் சென்றாலும், உண்மையில் ஏழாம் நூற்றாண்டில் தான் இருக்கிறோம். நாம் அரேபியாவுக்குச் சென்று இஸ்லாமின் வருகையையும் அதனால் ஐரோப்பாவிலும் ஆசியாவிலும் விளைந்த மாறுதல்களையும் கவனிக்கவேண்டியவர்களாக இருக்கிறோம். ஐரோப்பாவில் நிகழ்ந்தவற்றையும் நாம் கவனிக்கவேண்டும்.

சிறிது பின்சென்று நாம் ஐரோப்பாவை இன்னொரு முறை பார்ப்போம். பாஸ்பரஸ் ஜலசந்தியின் கரையில் ரோமானியச் சக்கரவர்த்தி கான்ஸ்டன்டைன் என்பவன் கான்ஸ்டாண்டிநோபிள் என்னும் நகரத்தை ஸ்தாபித்தது உனக்கு நினைவிருக்கும். பழைய ரோமாபுரியிலிருந்த தன் சாம்ராஜ்யத் தலைநகரை அவன் இப்புதிய ரோமாபுரிக்கு மாற்றினான். இதற்குப் பிறகு ரோம சாம்ராஜ்யம் இரண்டாகப் பிரிந்தது. ரோமாபுரியைத் தலைநகராகக் கொண்ட மேல் சாம்ராஜ்யமும், கான்ஸ்டாண்டி நோபிளைத் தலைநகராகக்கொண்ட கீழ் சாம்ராஜ்யமும் தோன்றின. கீழ் சாம்ராஜ்யத்துக்குப் பெரிய இன்னல்கள் விளைந்தன. எதிரிகளும் பலர் ஏற்பட்டனர். ஆயினும் அது 1100 ஆண்டுகள் நிலைத்திருந்தது ஆச்சரியப்படத்தக்க விஷயமாகும். கடைசியில் துருக்கியர் அதற்கு முற்றுப்புள்ளி வைத்தனர்.

மேல் சாம்ராஜ்யத்துக்கு இத்தகைய வாழ்க்கை ஒன்றும் இல்லை. ரோம் என்னும் பெயருக்கே பெரிய மகிமை இருந்தும், சாம்ராஜ்யத் தலைநகராகிய ரோமாபுரி மேற்கு உலகத்துக்கே அரசியாக நெடுங்காலம் இருந்தும், அது வெகு சீக்கிரத்தில் வீழ்ச்சியுற்றது. வடக்கேயிருந்து படையெடுத்துவந்த ஜாதியார் எவருடைய தாக்குதலையும் அதனால் எதிர்த்து நிற்க முடியவில்லை. காதியர் தலைவனை அலரிக் (Alaric) இதாலியில் பிரவேசித்து கி. பி. 410-இல் ரோமாபுரியைக் கைப்பற்றினான். அதற்குப் பிறகு வாண்டலர் வந்து அதை அழித்தனர். வாண்டலர் ஒரு ஜெர்மானிய ஜாதியார். அவர்கள் பிரான்ஸையும், ஸ்பெயினையும் கடந்து ஆப்பிரிக்காவில் பிரவேசித்து கார்தேஜ் நகரின் அழிவுகளின்மீது ஒரு ராஜ்யத்தை ஸ்தாபித்தனர். அங்கிருந்து அவர்கள் கடல்கடந்து வந்து ரோமாபுரியைக் கைப்பற்றினர். அச்செய்கை பியூ

னிக் யுத்தங்களில் ரோமாபுரி அடைந்த வெற்றிக்குச் கார் தேஜ் நகரம் மிகவும் தாமதித்துப் பழிதீர்த்துக்கொள்வது போலிருந்தது.

இக்காலத்தில் மத்திய ஆசியா அல்லது மங்கோலியா விலிருந்து வந்தவர்களான ஹூணர்கள் அதிக வலியுடன் விளங்கினர். நாடோடிகளான அவர்கள் டான்யூப் நதிக்குக் கிழக்கேயுள்ள பிரதேசத்திலும், கிழக்கு ரோம சாம்ராஜ்யத்திற்கு வடக்கிலும் மேற்கிலும் குடியேறி யிருந்தார்கள். அவர்களுடைய தலைவனை அட்டிலா என்பவனின்கீழ் அவர்கள் மிகுந்த போர் வலியுடன் விளங்கினர். கான்ஸ்டாண்டிநோபிள் சக்கரவர்த்திக்கும் அரசாங்கத்துக்கும் ஹூணர்கள் என்றால் சிம்ம சொப் பனம் அட்டிலா அவர்களைப் பயமுறுத்திப் பயமுறுத்திப் பெருந்தொகைகளைப் பறித்தான். கீழ் சாம்ராஜ்யத்தைக் கர்வபங்கம் செய்த பிறகு அவன் மேல் சாம்ராஜ்யத்தின் மீது பாயத் தீர்மானித்தான். கால்மீது படையெடுத்துச் சென்று தென் பிரான்சிலுள்ள பல பட்டணங்களை அழித்தான். சாம்ராஜ்ய சேனைகள் அவன் சேனைகளுடன் சமமாக நின்று போர்புரியச் சக்தியற்றிருந்தன. ஆனால் ரோமானியர்களால் 'காட்டுமிராண்டிகள்' என அழைக் கப்பட்ட ஜெர்மானிய ஜாதியார்கள் ஹூணர்களின் இப் படையெடுப்பைக் கண்டு அஞ்சினர். ஆகவே பிராங் கரும், காதியரும் சாம்ராஜ்ய சேனையில் சேர்ந்து அட்டி லாவை எதிர்த்தனர். டிராயிஸ் (Troyes) என்னு மிடத்தில் பெரும்போர் நிகழ்ந்தது. 1,50,000 பேருக்கு மேல் அதில் மாண்டனர். அட்டிலா தோற்றான். இது நிகழ்ந்தது கி. பி. 451-இல். அட்டிலா தோற்றாலும் போரிடும் சக்தியை இழக்கவில்லை. அவன் இதாலிக்குச் சென்று அதன் வடபாகத்திலுள்ள பல பட்டணங்களைக் கொளுத்திச் சூறையாடினான். அவன் சீக்கிரத்தில்

இறந்துபோனான். ஈவிரக்கமற்ற கொடுமையின் உருவமாகவும், அதற்கு ஓர் எடுத்துக் காட்டாகவும் அவன் இன்றும் விளங்குகிறான். அவன் இறந்த பிறகு ஹூணர்களின் அட்டகாசம் ஓய்ந்துவிட்டது. அவர்கள் மற்றவர்களுடன் கலந்துவாழத் தலைப்பட்டனர். ஏறக்குறைய இக்காலத்தில்தான் வெள்ளை ஹூணர்கள் இந்தியாவுக்கு வந்தனர்.

நாற்பதாண்டுகளுக்குப் பிறகு காதிய வகுப்பைச் சேர்ந்த தியோடரிக் (Theodoric) என்பவன் ரோமாபுரிக்கு அரசன் ஆனான். அதோடு, மேல் சாம்ராஜ்யம் முடிவுற்றது என்று சொல்லலாம். அதற்குச் சிறிது காலம் கழித்துக் கீழ் சாம்ராஜ்யச் சக்கரவர்த்தியாகிய ஜஸ்டினியன் (Justinian) என்பான் இதாலியைத் தன் கீழ்க் கொண்டுவர முயற்சித்தான். அவன் அதில் வெற்றியும் பெற்றான். அவன் இதாலி, சிசிலி இரண்டையும் வென்றான். ஆனால் அவை சீக்கிரத்திலேயே தங்களை விடுவித்துக்கொண்டன. மேலும் கீழ் சாம்ராஜ்யத்துக்குத் தன்னைக் காத்துக்கொண்டாலே போதும் என்றாகி விட்டது.

தன்னைத் தாக்கவரும் எந்தக் கூட்டத்தாரின் முன்பும் பெரிய ரோம சாம்ராஜ்யம் வெகு விரைவிலும் எளிதிலும் வீழ்ந்துவிட்டது ஆச்சரியமாயில்லையா? ரோமாபுரி தூள் தூளாகப் போய்விட்டதென்றோ அல்லது அது உள்ளே ஒன்றுமில்லாத வெறும் ஓடு என்றோ நமக்கு நினைக்கத் தோன்றுகிறது. இதுதான் உண்மை என்று நினைக்கவும் ஏது இருக்கிறது. நீண்ட காலமாகவே ரோமாபுரியின் பலம் அதன் கௌரவத்தில்தான் இருந்தது. அதன் கடந்த சரித்திரத்தைக்கொண்டு மற்ற ஜனங்கள் அதை உலகத்தின் தலைவி என்று நினைத்து மரியாதையுடனும், பயபக்தியுடனும் போற்றி வந்தார்கள். ஆகவே, ரோமாபுரி

வெளிப்பார்வைக்கு உலகத்தின் முடிதரித்த மகாராணி யாக விளங்கியபோதிலும் உண்மையில் அதற்குப் பலம் ஏதும் இல்லாதிருந்தது. புறத்தே அமைதி காணப் பட்டது; ரோமாபுரியின் கடைவீதிகளிலும், நாடகசாலை களிலும், பந்தய அரங்குகளிலும் ஜனக்கூட்டத்துக்குக் குறைவில்லை. ஆனால் அதற்கு முடிவு காலம் நெருங்கி விட்டதென்பது நன்றாகத் தெரிந்தது. அதற்குக் காரணம் அதன் பலவீனம் மட்டுமல்ல. பாமர ஜனங்களின் அடி மைத்தனத்தின் மீதும், அவர்கள் 'அல்லல்பட்டு ஆற்றாது அழுதகண்ணீரி'ன் மீதும் ரோமாபுரி எழுப்பிய பணக் காரர்களின் நாகரிகமே அதன் அழிவுக்குக் காரணமா யிருந்தது. எனது கடிதங்கள் ஒன்றில் ஏழைமக்கள் அரசாங்கத்தை எதிர்த்துக் கலகங்கள் விளைத்ததைப் பற்றியும், அடிமைகள் கலகம் செய்ததைப் பற்றியும், அது எவ்வாறு கடுமையாக அடக்கப்பட்ட தென்பதைப் பற்றியும் கூறியிருக்கிறேன். ரோமாபுரியின் சமுதாயக் கட்டுக்கோப்பு எவ்வளவு சீர்கேடுற்றிருந்ததென்று இக் கலகங்கள் நமக்குக் காட்டுகின்றன. அது பிறர் உதவி யின்றித் தானே அழியும் நிலையில் இருந்தது. இந்தச் சமயத்தில் வடதிசையிலிருந்து வந்த காதியர் முதலான கூட்டத்தார் அப்பணியை நிறைவேற்றி வைத்தனர். அவர்களை எதிர்ப்பதற்கு ஒருவரும் இல்லை. தன் தலைவிதியை எண்ணித் துன்பப்பட்டுக்கொண் டிருந்த ரோமானியக் குடியானவன் எவ்வித மாறுதலையும் ஏற்கத் தயாராயிருந்தான். தொழிலாளிகளைப் பற்றியும் அடிமை களைப் பற்றியும் கேட்கவே வேண்டியதில்லை. அவர்க ளுடைய நிலை இன்னும் மோசமாயிருந்தது.

மேல் ரோம சாம்ராஜ்யம் முடிவுற்றதும் மேற்கு ஐரோப்பாவின் புதிய ஜாதியார்களான காதியர், பிராங்கர் முதலானவர்கள் முன்னுக்கு வருவதைக் காண்கிறோம்.

அவர்கள் இக்காலத்து மேற்கு ஐரோப்பாவின் மக்களான ஜெர்மானியர், பிரெஞ்சுக்காரர் முதலானவர்களின் மூதாதையர் ஆவர். மெல்லமெல்ல இந்நாடுகள் ஐரோப்பாவில் உருவம் பெறுவதைக் காண்கிறோம். அதே சமயத்தில் இந்நாடுகள் நாகரிக ஏணியில் மிகவும் கீழ்நிலையில் இருப்பதைக் காண்கிறோம். சாம்ராஜ்யத் தலைநகரான ரோமாபுரி வீழ்ச்சியடைந்தவுடன் அதன் ஆடம்பரமும், வெளிப்பகட்டும், அஸ்திவாரமில்லாத நாகரிகமும் அதே க்ஷணத்தில் மறைந்துவிட்டன. வேர் உலர்ந்து போனபிறகு அவைகள் எவ்வாறு நிற்க முடியும்? ஆகவே மானிட ஜாதி பின்னோக்கிச் செல்லும் விசித்திரத்தை நாம் கண்கூடாகக் காண்கிறோம். இந்தியாவிலும், எகிப்திலும், சீனாவிலும், கிரீசிலும், ரோமிலும், வேறு இடங்களிலும் இது நிகழ்கிறது. இடைவிடாத உழைப்பின்பேரில் அறிவையும் அனுபவத்தையும் சம்பாதித்து, ஒரு கலைப் பண்பையும் நாகரிகத்தையும் சிருஷ்டித்த பிறகு அவற்றின் போக்கு தடைபடுகிறது. முற்போக்கு தடைபடுவது மட்டுமின்றிப் பிற்போக்கும் ஆரம்பமாகிறது. கடந்த காலம் முழுவதும் ஒரு திரையினால் மறைக்கப்படுவதுபோல் ஆகிவிடுகிறது. சில சமயங்களில் பழமையை ஒருவாறு காண முடிகிறதாயினும் அறிவு-அனுபவம் என்னும் மலையின்மீது மீண்டும் கஷ்டப்பட்டு ஏறவேண்டியிருக்கிறது. ஒவ்வொரு தடவையும் உயரப் போகப்போக மேற்கொண்டு ஏறுவது சுலபமாக இருக்கலாம். இமயமலையிலுள்ள எவரெஸ்ட் சிகரத்தை அடைய கோஷ்டிக்குப் பின் கோஷ்டி முயன்று வருவது போல. ஒவ்வொரு கோஷ்டியும் அதற்கு முன் சென்ற கோஷ்டியைவிட அச்சிகரத்துக்கு அதிக சமீபத்தில் செல்கிறது. இமயமால்வரையின் சிமயக் குடுமியைச் சீக்கிரத்திலேயே எட்டிப் பிடித்துவிடுவார்கள் என்று தோன்றுகிறது.

ஆகவே, ஐரோப்பாவில் இருள் சூழ்கிறது. இரவு—இருண்ட காலம்—ஆரம்பமாகிறது. வாழ்க்கை கீழ் நிலை எய்துகிறது. கல்வி சிறைவைக்கப்படுகிறது. போரிடுவதே தொழிலாகவும் விளையாட்டாகவும் மாறுகிறது. சாக்ரடீசும் பிளேடோவும் வாழ்ந்த காலம் எங்கேயோ நிரம்ப தூரத்தில் இருப்பதுபோல் தோன்றுகிறதல்லவா?

மேல்திசையை விடுத்துக் கீழ்த்திசையை நோக்குவோம். கீழ் சாம்ராஜ்ய சக்கரவர்த்தியான கான்ஸ்டண்டைன் கிறிஸ்தவமதத்தை அரசாள்வோர் மதமாக ஆக்கியது உனக்கு நினைவிருக்கும். அவனுக்குப் பின் வந்தவர்களில் ஒருவனான ஜூலியன் என்பான் கிறிஸ்தவ மதத்தை ஒப்புக்கொள்ள மறுத்துவிட்டான். அவன் பழைய தெய்வங்களையே மக்கள் வணங்கவேண்டுமென்று விரும்பினான். இதில் அவனால் வெற்றி பெற முடியவில்லை. ஏனெனில் பழைய தெய்வங்களுக்கு ஒரு காலம் இருந்தது. ஆனால் அது இப்போது போய்விட்டது. கிறிஸ்தவ மதத்தை மீறி அவைகளால் நிற்க முடியவில்லை. கிறிஸ்தவர்கள் அவனை அவிசுவாசி (Apostate) என்று அழைத்தார்கள். சரித்திரத்திலும் அவன் அப்பெயராலேயே வழங்கப்படுகிறான்.

ஜூலியனுக்குப் பிறகு அவனோடு முற்றிலும் மாறுபட்ட வேறொரு சக்கரவர்த்தி வந்தான். அவன் பெயர் தியோடோசியஸ் (Theodosius). அவன் பெரியவன் என்று அழைக்கப்படுகிறான். பழைய கோயில்களையும், பழைய தெய்வங்களின் உருவச்சிலைகளையும் அவன் அழித்தது அதற்குக் காரணமாயிருக்கலாம். அவன் கிறிஸ்தவர் அல்லாதவர்களிடம் விரோதம் பாராட்டியது மட்டுமின்றிக் கிறிஸ்தவர்களுக்குள்ளும் தன் கொள்கைப்படி வைதிக நெறியில் நில்லாதவர்களையும் விரோதித்து

வந்தான். தான் ஒத்துக்கொள்ளாத எந்தக் கொள்கையும் மதமும் நிலவுவதை அவனால் பொறுக்க முடியவில்லை. அவன் சிறிது காலம் கீழ் சாம்ராஜ்யம் மேல் சாம்ராஜ்யம் இரண்டையும் பிணைத்து இரண்டுக்கும் சக்கரவர்த்தியாக இருந்தான். ரோமாபுரியின்மீது 'காட்டுமிராண்டிகள்' படையெடுப்பதற்கு முன்னால் கி. பி. 392-இல் இது நிகழ்ந்தது.

கிறிஸ்தவ மதம் பரவ ஆரம்பித்தது. இப்போது கிறிஸ்தவர் அல்லாதவர்களுடன் போராடும் அவசியம் அதற்கு நேரவில்லை. எல்லாப் போராட்டமும் கிறிஸ்தவ மதத்தின் உட்பிரிவினர்களுக்குள்ளேயே நிகழ்ந்தது. அவர்கள் ஒருவர்மீதொருவர் காட்டிய துவேஷம் நமக்கு வியப்பைத் தருகிறது. வட ஆப்பிரிக்காவிலும், மேற்கு ஆசியாவிலும், ஐரோப்பாவிலும் கிறிஸ்தவர்கள் தங்களுக்குள் பல இடங்களில் போரிட்டு அடி, குத்து, உதை, வெட்டு முதலிய நயமான வழிகளில் சகோதர கிறிஸ்தவர்களைத் தங்கள் கொள்கைக்கு மாற்ற முயன்றுவந்தனர்.

கி. பி. 527-லிருந்து 565-வரையில் ஜஸ்டினியன் கான்ஸ்டாண்டிநோபிளில் சக்கரவர்த்தியாயிருந்தான். அவன் இதாலியிலிருந்து காதியரைத் துரத்திவிட்டு இதாலி, சிசிலி இரண்டையும் தன் சாம்ராஜ்யத்தில் சேர்த்துக் கொண்டான் என்று முன்பே கூறியிருக்கிறேன். சிறிது காலத்துக்குப் பிறகு காதியர் இதாலியை மீண்டும் கைப்பற்றிக் கொண்டனர்.

ஜஸ்டினியன் கான்ஸ்டாண்டிநோபிளில் சாந்தா சோபியா என்னும் அழகிய ஆலயத்தைக் கட்டினான். பைஜாண்டிய முறையில் கட்டப்பட்டுள்ள கிறிஸ்தவ ஆலயங்களுள் இது மிகவும் சிறப்பானது. அவன் தேர்ந்த சட்ட நிபுணர்களைக் கொண்டு அக்காலத்தில் வழங்கிய சட்டங்களையெல்லாம் முறையாகத் தொகுத்து வைத்-

தான். கீழ் ரோம சாம்ராஜ்யத்தைப் பற்றியும் அதை ஆண்ட சக்கரவர்த்திகளைப் பற்றியும் நான் தெரிந்து கொள்ளுமுன்பே ஜஸ்டினியனின் பெயர் எனக்குத் தெரியும். அவனால் தொகுக்கப்பட்ட 'ஜஸ்டினியன் சட்டங்கள்' (Institutes of Justinian) என்னும் இந்நூலை நான் வாசிக்க வேண்டியிருந்தது. அவன் கான்ஸ்டாண்டிநோபிளில் ஒரு சர்வகலாசாலையை ஸ்தாபித்தான். ஆனால், ஏதென்ஸ் மாநகரில் பிளேடோவால் ஸ்தாபிக்கப்பட்டு ஆயிரம் ஆண்டுகளாக நடைபெற்று வந்த பழைய தத்துவ ஆராய்ச்சிக் கழகங்களை அவன் மூடிவிட்டான். தான் கூறுவதே சரி என்று சாதிக்கும் எந்த மதத்துக்கும் தத்துவ ஆராய்ச்சி என்பது அபாயகரமானது. ஏனெனில் அது மக்களைப் பகுத்தறியுமாறு தூண்டுகிறது.

ஆகவே, நாம் இப்போது ஆறும் நூற்றாண்டுக்கு வந்துவிட்டோம். ரோமாபுரியும் கான்ஸ்டாண்டிநோபிளும் சிறிது சிறிதாகப் பிரிந்து போகின்றன. ரோமாபுரியை வடதிசையிலிருந்து வந்த ஜெர்மானிய ஜாதியார்கள் கைப்பற்றிக் கொள்ளுகிறார்கள். கிரேக்க சாம்ராஜ்யத்தின் முக்கிய ஸ்தானமாக கான்ஸ்டாண்டிநோபிள் விளங்குகிறது. அது ரோம சாம்ராஜ்யம் என்று அழைக்கப்பட்டாலும் உண்மையில் அதை கிரேக்க சாம்ராஜ்யம் என்றே சொல்ல வேண்டும். ரோமாபுரி சின்னாபின்னமாகிறது. தான் வாழ்ந்த காலத்தில் யாரைக் காட்டுமிராண்டிகள் என்று அழைத்ததோ அவர்களால் ஜெயிக்கப்பட்டு அவர்களுடைய கீழ்த்தரமான நாகரிகத்தில் அது ஆழ்ந்துவிடுகிறது. கான்ஸ்டாண்டிநோபிள் ஏதோ பழைய முறையில் நடந்துவந்தாலும் நாகரிகத்தில் கீழ்நோக்கிச் செல்லுகிறது. கிறிஸ்தவ மதத்தைச் சேர்ந்த உட்பிரிவினர் ஒருவரோடொருவர் சண்டையிடுகிறார்கள். துருக்கிஸ்தானம், சீனா, அபிசீனியா

வரையில் பரவியுள்ள கீழைக் கிறிஸ்தவ மதத்துக்கும் கான்ஸ்டாண்டிநோபிள், ரோமாபுரி இவைகளுக்கும் தொடர்பு அற்றுப்போய்விடுகிறது. இருண்ட காலம் ஆரம்பமாகிறது. இது வரையில் கிரேக்க, அல்லது அதன் தொடர்பு பெற்ற பழைய லத்தீன், இம்மொழிகளி லுள்ள பண்டைய இலக்கியங்களையே அனைவரும் கற்று வந்தார்கள். கடவுளர்களைப் பற்றியும் தத்துவ ஆராய்ச்சி களைப் பற்றியும் கூறும் இப்பழைய கிரேக்க நூல்கள், தன் மத பக்தியும், பிற மதத் துவேஷமும் கொண்ட ஆதி நாள் கிறிஸ்தவர்கள் கற்பதற்குத் தகுதியானவை அல்ல என்று கருதப்பட்டன. அந்நூல்கள் ஆதரிக்கப்படாத காரணத்தால் கல்வி குறைந்தது. வேறு பல கலைகளும் மங்கி மறைந்தன.

ஆனால், கல்வியையும் கலையையும் காப்பாற்று வதற்குக் கிறிஸ்தவமதம் சிறிது உதவியும் புரிந்தது. பௌத்த சங்கத்தைப்போல் பல கிறிஸ்தவ மடங்கள் ஸ்தாபிக்கப்பட்டுப் பரவின. இம்மடங்களில் பழைய கல்வி தஞ்சம் புகுந்தது. மேலும் இங்கே ஒரு புதிய கலையின் வித்தும் ஊன்றப்பட்டது. இது பல நூற் றுண்டுகள் கழித்துத் தன் பூரண சௌந்தரியத்தோடு மலர்ந்து விளங்கியது. இம்மடங்களில் வாழ்ந்துவந்த கிறிஸ்தவத் துறவிகள், கல்வி விளக்கும் கலை விளக்கும் அவிந்து போகாமல்—அவை மங்கலாக எரிந்தாலும்—காத்து வந்தனர். அவர்கள் அதை அணையாமல் காத்து வந்ததே பெரிய சேவையாகும். ஆனால் ஒரு முனையில் மட்டும் அவ்விளக்கு பிரகாசித்துக் கொண்டிருந்தது. வெளியில் ஓரே அந்தகாரம் குடிகொண்டிருந்தது.

கிறிஸ்தவ மதத்தின் இவ்வாரம்ப நாட்களில் இன்னொரு விசித்திரத்தையும் நாம் காண்கிறோம். மதா வேசம்கொண்ட பலர் பாலைவனங்களுக்கும், மனித

சஞ்சாரம் அற்ற தனி இடங்களுக்கும் சென்று அங்கே மிருகங்கள்போல் வாழ்ந்து வந்தனர். அவர்கள் தங்களைப் பலவிதங்களில் துன்புறுத்தியும், ஸ்நானபானுதிகளை வெறுத்தும் வாழ்ந்து வந்தனர். மற்ற இடங்களைவிட எகிப்தில் இது அதிகமாக இருந்தது. பாலைவனங்களில் பல தவசிகள் இவ்வாறு தங்களை இம்சித்து வாழ்ந்து வந்தனர். தாங்கள் எவ்வளவுக்கெவ்வளவு துன்பம் அனுபவித்துக்கொண்டும் குளிக்காமலும் இருக்கிருர்களோ அவ்வளவுக்கவ்வளவு பரிசுத்தர்கள் ஆவதாக அவர்களுடைய எண்ணம். அவர்களில் ஒருவர் பல வருஷங்களாக ஒரு ஸ்தம்பத்தின்மீது உட்கார்ந்து கொண்டிருந்தாராம்! இத் தவசிவர்க்கம் சிறிது சிறிதாக மறைந்துவிட்டது. இதற்குப் பின் நெடுங்காலம் வரையில் பயபக்தியுள்ள கிறிஸ்தவர்கள் ஐம்புலன்களால் எதையும் நுகருவது பாவம் என்றே நம்பிவந்தார்கள். கிறிஸ்தவ மனோபாவத்தை இது பெரிதும் பாதித்தது. ஐரோப்பாவில் இதை நாம் இன்று பார்க்கவே முடியாது. அங்கு எல்லாரும் ஐம்புலன்களால் நுகரும் இன்பம் அத்தனையையும் நுகருவதற்கு வெறி கொண்டு அலைகிருர்கள். இதனுல் அவர்கள் உடற்சோர்வும், உளச்சோர்வும் அடைகிருர்களே ஒழிய யாதொன்றையும் அனுபவிப்பதாகத் தெரியவில்லை.

ஆனுல், இந்தியாவிலோ இன்றுகூட, எகிப்தில் வாழ்ந்த கிறிஸ்தவத் தவசிகளைப்போல் பலர் வாழ்வதைக் காண்கிறேம். சிலர் ஒரு கையை அது வற்றி உலர்ந்து போகும் வரையில் உயர்த்திப் பிடித்துக் கொண்டிருக்கிருர்கள். வேறு சிலர் முள் முனையின்மீது உட்கார்ந்து கொண்டிருக்கிருர்கள். இம்மாதிரி பல முட்டாள் காரியங்கள் செய்கிருர்கள். சிலர் ஒன்றும் தெரியாத மக்களை ஏமாற்றிப் பொருள் பறிப்பதற்காக இவ்வாறு செய்யலாம். வேறு சிலர் தாங்கள் அதிக பரிசுத்தம் அடைவதாக

நினைத்தும் இவ்வாறு செய்யலாம்! நமது உடலை எவ்விதத் தொழிலுக்கும் பயனற்றதாகச் செய்து கொள்வது எக் காலத்தேனும் விரும்பத்தக்கதாகுமா? ஒருகாலும் இல்லை.

புத்தரைப் பற்றிய கதை ஒன்று என் நினைவுக்கு வருகிறது. நமது நண்பர் யுவான் சுவாங்தான் அதைச் சொல்லுபவர். இளம் பிராயத்தினனான புத்தருடைய சிஷ்யன் ஒருவன் தவம் செய்துகொண் டிருந்தானாம். புத்தர் அவனைப் பார்த்து, 'பிள்ளாய், உன்னுடைய பூர்வாசிரமத்தில் உனக்கு யாழ் வாசிக்கத் தெரியுமா?' என்று கேட்டார். அவன் தெரியும் என்று பதில் உரைத்தான். அதைக்கேட்டுப் புத்தர் அவனுக்குச் சொன்னதாவது: 'இதிலிருந்து உனக்கு ஓர் உண்மையைத் தெரிவிக்கிறேன். யாழின் நரம்புகள் அதிகமாக முறுக் கேற்றப்பட்டு இருந்தபோதும் அல்லது அதிகமாகத் தளர்ந்து இருந்தபோதும் ஓசைநயமும் இன்பமும் உண் டாகவில்லை. அதிக முறுக்கு, அதிகத் தளர்ச்சி இரண்டும் இல்லாமல் சமமாக இருந்தபோது நாதத்தின் இன்பம் பொங்கிற்று மனித உடலும் அந்த யாழைப்போல் இருக்கிறது. அதை விரதாதிகளால் வற்றவைத்துக் கடுமையாக நடத்தினால் களைத்துப்போய்விடும்; மனமும் சோர்ந்துவிடும். அதை சுகத்தில் ஆழ்த்தி மேன்மையாக நடத்தினால் புலன்கள் மயங்கிச் சித்த உறுதி குலைந்து விடும்.'

# 48

## இஸ்லாமின் உதயம்

மே 21, 1932.

**நா**ம் பல தேசங்களின் சரித்திரத்தையும், பல ராஜ்யங்கள், சாம்ராஜ்யங்கள் இவற்றின் உயர்வு, வீழ்ச்சிகளையும் பார்த்தோம். ஆனால் அரேபியா தேசத்தைப்பற்றி நாம் அதிகம் தெரிந்துகொள்ளவில்லை. அது உலகின் தூரமான பாகங்களுக்கெல்லாம் தன் மாலுமிகளையும் வியாபாரிகளையும் அனுப்பிவந்தது என்று மட்டும் அறிந்திருக்கிறோம். படத்தைப் பார். அரேபியாவுக்கு மேற்கில் எகிப்து இருக்கிறது. வடக்கில் சிரியாவும், இராக்கும் இருக்கின்றன. இதற்குச் சற்றுக் கிழக்கில் பாரசீகம் அல்லது ஈரான் இருக்கிறது. வடமேற்கில் சிறிது தொலைவில் சின்ன ஆசியாவும், கான்ஸ்டாண்டிநோபிளும் இருக்கின்றன. கிரீசும் அதிக தூரத்தில் இல்லை. இந்தப் பக்கம், கடலுக்கப்பால் இந்தியா இருக்கிறது. சீனாவும், கீழ்க்கோடியும் நீங்கலாகப் பழைய நாகரிகங்கள் வளர்ந்தோங்கிய இடங்களுக்கு மத்தியில் அரேபியா இருக்கிறது. இராக்கில் டைகிரிஸ், யூப்ரடிஸ் நதிகளின் கரையில் பெரிய பெரிய நகரங்கள் தோன்றின. எகிப்தில் அலெக்சாந்திரியா, சிரியாவில் டமாஸ்கஸ், சின்ன ஆசியாவில் ஆன்டியோக் ஆகியவை பெரிய நகரங்கள். அரேபியாவில் வாழ்ந்தவர்கள் பல நாடுகளுக்கும் சென்று வியாபாரம் செய்து வந்தார்கள். அவர்கள் இந்நகரங்களுக்கு அடிக்கடி சென்றிருக்கவேண்டும். ஆயினும் அரேபியா சரித்திரத்தை உருவாக்குவதில் ஒரு பங்கும் எடுத்துக்

கொள்ளவில்லை. அதை அடுத்துள்ள நாடுகளில் காணப்பட்ட உயர்தரமான நாகரிகம் அங்குக் காணப்படவில்லை. அது பிற நாடுகளை ஜெயிக்க முயலவில்லை; பிற நாடுகள் அதை ஜயிப்பதும் அவ்வளவு எளிதல்ல.

அரேபியா ஒரு பாலைவனப் பிரதேசம். பாலை வனங்களிலும் மலைகளிலும் வாழ்பவர்கள் எப்போதுமே முரட்டு சுபாவம் உடையவர்களாகவும், சுதந்தரப் பிரியர்களாகவும் இருப்பார்கள். அவர்களை அடக்குவதென்பது லேசான காரியமல்ல. அரேபியா ஒரு வளம் கொழிக்கும் நாடாக இல்லாத காரணத்தால் வெளியார் யாரும் அதை ஜெயிக்க ஆசை கொள்ளவில்லை. கடற்கரை ஓரத்தில் மக்கா, யேதிரிப் (Yethrib) என்னும் இரண்டே இரண்டு சிறு பட்டணங்கள் இருந்தன. மீதியெல்லாம் சிறு சிறு பாலைவன ஊர்கள். ஜனங்கள் பெரும்பாலும் 'பதாவின்' களாக, அதாவது பாலை வனத்தில் வாழ்பவர்களாக இருந்தார்கள். வேகமாய்ச் செல்லும் ஒட்டகங்களும் அழகான குதிரைகளுமே அவர்களுடைய இணைபிரியாத தோழர்கள். பொறுமையில் மிகுந்த கழுதையும் அவர்களுக்கு உற்ற நண்பனே. மற்றத் தேசங்களில் ஒருவனைக் கழுதைக்கு ஒப்பிட்டால் அது மிகவும் இழிவு. ஆனல், அரேபியாவிலோ கழுதைக்கு ஒப்பிடப்படுவது மிகவும் உயர்வாகக் கருதப்பட்டது. ஏனெனில், பாலை வனத்தில் வாழ்க்கை நடத்துவது மிகவும் கஷ்டமான காரியம். ஆகவே, மற்ற இடங்களைவிட அங்கு வலிவும் ஆற்றலும் அதிகமாகப் போற்றப்படுகின்றன.

பாலைவனத்தில் வாழ்ந்துவந்த அம்மக்களுக்கு மானத்தில் திருஷ்டி அதிகம். பிறர் ஒன்று சொன்னல் தாங்க மாட்டார்கள். சதா தங்களுக்குள் சண்டையிட்டுக் கொள்வார்கள். அவர்கள் கூட்டம் கூட்டமாகவும், குடும்பம் குடும்பமாகவும் வாழ்ந்து வந்தார்கள். ஒரு

கூட்டத்தார் அல்லது குடும்பத்தார் இன்னொரு கூட்டத்தார் அல்லது குடும்பத்தாரோடு சண்டையிட்டுக் கொள்ளுவது சகஜமாயிருந்து வந்தது. வருஷத்திற்கு ஒருமுறை அவர்கள் எல்லாரும் தங்களுக்குள் சமாதானம் செய்துகொண்டு, மக்காவுக்கு யாத்திரை சென்று அங்குத் தாங்கள் வணங்கும் பல கடவுளர்களின் விக்கிரகங்களுக்கு வழிபாடு செய்வார்கள். எல்லாவற்றிலும் அதிகமாக அவர்கள் ஒரு பெரிய கருநிறக் கல்லை வணங்கி வந்தார்கள். அதற்குக் காபா (Kaaba) என்று பெயர்.

மத்திய ஆசியாவிலும், மற்றப் பாகங்களிலும் வாழ்ந்த பூர்விகக்குடிகள், தாங்கள் நகர வாழ்க்கையையும்,நாகரிகத்தையும் மேற்கொள்ளுமுன் இருந்ததைப் போலவே இவர்களும் நாடோடிகளாய் வாழ்ந்தார்கள். அரேபியாவைச் சுற்றிலும் எழுந்த சாம்ராஜ்யங்கள் அரேபியாவைத் தம்முள் கொண்டிருந்தன, ஆயினும் அவைகளின் ஆதிக்கம் பெயரளவுக்குத்தான். பாலை வனங்களில் அலைந்து திரியும் மக்களை அடக்கி ஆளுவது சுலப சாத்தியமான ஒன்றல்ல.

கி. பி. மூன்றும் நூற்றாண்டில் சிரியாவில் ஓர் அரேபிய ராஜ்யம் சிறிது காலம் சிறந்தோங்கி யிருந்தது உனக்கு நினைவிருக்கலாம். ஆனால் அது அரேபியாவுக்கு அப்புறத்தில் இருந்ததென்றுதான் சொல்ல வேண்டும். ஆகவே, பாலைவனவாசிகள் தலைமுறை தலைமுறையாகத் தங்கள் வாழ்க்கையை ஒரு மாறுதலுமின்றி நடத்தி வந்தார்கள். அரேபிய வர்த்தகக் கப்பல்கள் வெளிநாடுகளுக்குச் சென்று வந்தன. சிலர் கிறிஸ்தவ மதத்தையும் வேறு சிலர் யூத மதத்தையும் தழுவினர். ஆனால் பெரும்பாலோர் மக்காவிலிருந்த 360 விக்கிரகங்களையும் அந்தப் பெரிய கல்லையுமே வணங்கி வந்தனர்.

வெளி யுலகத்தில் நிகழ்ந்தவற்றோடு தொடர்பு

அற்றவர்களாய் நெடுங்காலம் உறங்கிக்கிடந்த இந்த அரேபிய ஜாதியார் திடீரென்று விழித்தெழுந்து உலகத்தையே தலைகீழாகக் கவிழ்த்துப் பிரமிக்கச் செய்து பேராற்றல் காட்டியது விந்தையினும் விந்தையாகும். அரேபியரின் கதை—அவர்கள் ஆசியாவிலும், ஐரோப்பாவிலும், ஆப்பிரிக்காவிலும் அதிவிரைவில் பரவியதும், அவர்கள் அடைந்த உயரிய கலைப்பண்பும் நாகரிகமும்—சரித்திரத்தின் அதிசயங்களில் ஒன்ருகும்.

அரேபியரை உறக்கத்திலிருந்து தட்டி எழுப்பித் தன்னம்பிக்கையையும் வல்லமையையும் அவர்களுக்கு அளித்த புதிய சக்தி இஸ்லாம். முகம்மது என்னும் புதிய தீர்க்கதரிசி ஒருவரால் இம்மதம் ஆரம்பிக்கப்பட்டது. அவர் கி. பி. 570-இல் மக்காவில் பிறந்தார். அவர் அவசரப்பட்டு இம்மதத்தைத் தோற்றுவிக்கவில்லை. பிறர் நம்பிக்கைக்கும் பிரியத்துக்கும் பாத்திரமானவராய் அமைதியான வாழ்க்கையை அவர் நடத்திவந்தார். 'அல்-அமீன்' —நம்பிக்கைக்குப் பாத்திரமானவர் — என்றே அவர் அழைக்கப்பட்டார். ஆனால் அவர் தம் புதிய மதத்தைப் போதிக்க ஆரம்பித்ததும், அதுவும் முக்கியமாக மக்காவிலிருந்த விக்கிரகங்களுக்கு விரோதமாக அவர் பேச ஆரம்பித்ததும் அவருக்கு எதிராகப் பலர் கிளம்பினுர்கள். முடிவில் அவர் உயிர் தப்புவதே அரிதாகிவிட்டது. ஆகவே அவர் மக்காவைவிட்டு ஓடிவிட்டார். எல்லாவற்றைக் காட்டிலும், கடவுள் ஒருவரே என்றும் முகம்மதுவாகிய தாம் அக்கடவுளின் தீர்க்கதரிசி என்றும் அவர் வற்புறுத்திக் கூறினுர்.

மக்காவிலிருந்து தம் சொந்த ஜனங்களால் விரட்டப்பட்ட அவர் யேதிரிப்பில் சில நண்பர்களிடம் அடைக்கலம் புகுந்தார். மக்காவிலிருந்து அவர் ஓடினதற்கு அரபுமொழியில் ஹிஜரத் என்று பெயர். முஸ்லீம்

பஞ்சாங்கம் இந்தத் தேதியிலிருந்துதான்—கி. பி. 622—ஆரம்பமாகிறது. இந்த ஹிஜார் பஞ்சாங்கம் சாந்திரமான பஞ்சாங்கம். அதாவது சந்திரனைக்கொண்டு கணிக்கப்படுவது. ஆகவே அது நாம் வழக்கமாக அனுசரிக்கும் சௌரமான—சூரியனைக்கொண்டு கணக்கிடப்படுவது—வருஷத்தைவிட *ஐந்தாறு நாட்கள் குறைவாக இருக்கும். ஹிஜார் மாதங்களும் வருஷத்தின் பருவகாலங்களை ஒட்டி வருவதில்லை. இவ்வருஷம் கார்காலத்தில் வருகிற மாதம் சில வருஷங்கள் கழித்து வேனிற்காலத்தில் வரலாம்.

இஸ்லாம் மதம் கி. பி. 622-இல், ஹிஜரத் அதாவது முகம்மது நபியின்† ஓட்டத்திலிருந்து ஆரம்பமாகிறது என்று சொல்லலாம். ஒரு வகையில் அது அதற்குச் சற்று முன்பே ஆரம்பமாய்விட்டது எனலாம். யேதிரிப் நகரம் முகம்மது நபியை வரவேற்றது. அவர் வருகையின் ஞாபகார்த்தமாக அதன் பெயர் 'மதீனத்-உன்-நபி'-நபிகளின் நகரம்—என்று மாற்றப்பட்டது. அதையே நாம் இப்போது சுருக்கமாக மதீனு என்று அழைக்கிறோம். மதீனுவில் முகம்மது அவர்களுக்கு உதவி அளித்தவர்கள் 'அன்சார்' — உறவினர்கள் — என்று அழைக்கப்படுகிறார்கள். இவ்வுதவியாளர்களின் சந்ததியார் 'அன்சார்' என்னும் பட்டத்தை இன்னும் பெருமையுடன் வகித்து வருகிறார்கள்.

இஸ்லாமின் வெற்றியைப் பற்றியும் அரேபியரின் வெற்றியைப் பற்றியும் விரிவாகக் கூறுமுன்பு, சுற்றிலும் சிறிது உற்று நோக்குவோம். இப்போதுதான் ரோமாபுரி வீழ்ச்சியுற்றதைக் கண்டோம். பழைய கிரேக்க-ரோம நாகரிகம் முடிவடைந்துவிட்டது. அதன்மீது நிருவப்பட்ட சமுதாயக் கட்டுக்கோப்பு அடியோடு கவிழ்ந்து

* சரியாக $11\frac{1}{4}$ நாட்கள்.

† நபி - தீர்க்கதரிசி.

விட்டது. வட ஐரோப்பாவில் வாழ்ந்த மக்கள் இப்போது சற்று முன்னுக்கு வருகிறார்கள். ரோமாபுரியிடமிருந்து அவர்கள் சிறிது கற்றுக்கொள்ள முயன்றாலும், முழுவதும் புதுவகையான ஒரு நாகரிகத்தை அவர்கள் அமைத்து வந்தனர். ஆனால் இது ஆரம்பதசையில் இருந்தபடியால் வெளிப்பார்வைக்குப் புலனாகவில்லை. இவ்வாறாகப் பழையது கழிந்துவிட்டது; ஆனால் அதன் இடத்தில் புதியது புகவில்லை. ஆகவே ஐரோப்பாவில் இருள் குடிகொண்டிருந்தது. அதன் கீழ்ப்பாகத்தில் கீழ் ரோம சாம்ராஜ்யம் தழைத்திருந்தது வாஸ்தவமே. அக்காலத்திலும் கான்ஸ்டாண்டிநோபிள் ஐரோப்பாவிலேயே மிகப் பெரிய நகரமாக விளங்கிக்கொண் டிருந்தது. அதன் அரங்குகளில் பந்தயங்களும் விளையாட்டுக்களும் நடந்தன. எங்கும் வெளி ஆரவாரம் மலிந்து காணப்பட்டது. இவைகளெல்லா மிருந்தும் சாம்ராஜ்யம் ஆட்டம் கொடுத்து வந்தது. பாரசீகத்தை ஆண்ட சசநீதர்களோடு ஓயாமல் போர் நிகழ்ந்து வந்தது. இரண்டாம் குஸ்ரா என்னும் பாரசீக மன்னன் கான்ஸ்டாண்டிநோபிளைச் சேர்ந்த சில பிரதேசங்களைக் கைப்பற்றிக் கொண்டதோடு அரேபியாவையும் பெயரளவில் தன் ஆதிக்கத்தின்கீழ் கொண்டுவந்தான். அவன் எகிப்தையும் ஜெயித்துக் கான்ஸ்டாண்டிநோபிள் வரையில் சென்றான். ஆனால் அங்கு அவன் ஹெராகிளியஸ் என்னும் கிரேக்க சக்கரவர்த்தியால் தோற்கடிக்கப்பட்டான். பிறகு அவன் கவாத் (Kavadh) என்னும் தன் மகன் கையினாலேயே கொலையுண்டான்.

ஆகவே, மேற்றிசையில் ஐரோப்பாவும் கீழ்த்திசையில் பாரசீகமும் உளுத்துப் போயிருக்கக் காண்கிறோம். இத்துடன் கிறிஸ்தவர்கள் தங்களுக்குள் விளைத்துக் கொண்ட பூசல்களுக்கு முடிவே இல்லை. மேல் நாடுகளி

லும் ஆப்பிரிக்காவிலும் கிறிஸ்தவ மதம் அப்போது மிக்க இழி நிலையில் இருந்தது. பாரசீக அரசாங்கத்தின் ஒரு பாகமான ஜாரதுஷ்டிர மதம் ஜனங்கள் மீது பலவந்தமாகத் திணிக்கப்பட்டு வந்தது. ஆகவே அக்காலத்தில் ஐரோப்பாவிலும், ஆப்பிரிக்காவிலும், பாரசீகத்திலும் வாழ்ந்த மக்கள் தங்கள் தங்கள் பிரதேசத்தில் வழங்கிய மதங்களின் யோக்கியதையை நன்கு தெரிந்து கொண்டு விட்டார்கள். ஏறக்குறைய இதே சமயத்தில் - 7-ஆம் நூற்றுண்டின் ஆரம்ப காலம்—ஐரோப்பா முழுவதும் கொள்ளை நோய் பரவி மக்களைக் கோடிக்கணக்கில் மாய்த்து வந்தது.

இந்தியாவில் ஹர்ஷவர்த்தனன் அரசாண்டு வந்தான். யுவான் சுவாங் இந்தியாவுக்குச் சென்றது இக் காலத்தில் தான். ஹர்ஷனின் ஆட்சிக் காலத்தில் இந்தியா ஒரு வலிமை மிக்க நாடாக இருந்தது. ஆனால் அதற்குப் பிறகு வட இந்தியா பிளவுபட்டுப் பலம் குன்றியது. இன்னும் கிழக்கே சென்றால் சீனவில் டாங் வமிசத்தவரின் ஆட்சி அப்போதுதான் ஆரம்பமாகியிருந்தது. கி. பி. 627-இல் டாங் சக்கரவர்த்திகளில் மிகப் பெரியவரான தாய் சூங் (Tai Tsung) சீன சிம்மாசனம் ஏறினர். அவர் காலத்தில் சீன சாம்ராஜ்யம் மேற்கே காஸ்பியன் கடல்வரையில் பரவியிருந்தது. மத்திய ஆசிய நாடுகள் எல்லாம் அவருடைய ஆதிபத்தியத்தை ஒப்புக் கொண்டு அவருக்குக் கப்பம் செலுத்தின. இந்தப் பெரிய சாம்ராஜ்யம் முழுமையையும் ஆதிக்கம் செலுத்த ஒரு மத்திய அரசாங்கம் இல்லை போலும்.

இஸ்லாம் ஜனித்த காலத்தில் ஆசியாவும் ஐரோப்பாவும் மேற்கூறிய நிலையில் இருந்தன. சீனு, பலமும் சக்தியும் வாய்ந்திருந்தது. ஆனல் அது தூரத்தில் இருந்தது. இந்தியா கொஞ்சகாலம் வரையில் பலம் பொருந்தி யிருந்

தது. ஆனால் இதற்குப்பின் நெடுங்காலம் வரையில் அரேபியாவுக்கும் இந்தியாவுக்கும் போராட்டமே நிகழ வில்லை. ஐரோப்பாவும் ஆப்பிரிக்காவும் நாடி தளர்ந்து ஆடி விழுந்துகொண் டிருந்தன.

முகம்மது நபி, மக்காவிலிருந்து மதீனாவுக்கு ஓடிய ஏழு வருஷத்துக்குள் மக்காவுக்குத் திரும்பி வந்தார். ஆனால் இப்போது அவர் அதன் ஒப்பற்ற தலைவராக விளங்கினார். இதற்கு முன்பே அவர் மதீனாவிலிருந்து உலகத்தின் மன்னர்களுக்கும் மண்டலிகர்களுக்கும் தாம் கண்ட ஒரே கடவுளையும் அவருடைய தீர்க்கதரிசியான தம்மையும் நட்புக் கொள்ளுமாறு ஒரு கட்டளை, நிருபம் அனுப்பியிருந்தார். கான்ஸ்டாண்டிநோபிளின் சக்கர வர்த்தி ஹெராகிளியஸ் சிரியாவில் பாரசீகர்களுடன் போரிட்டிக் கொண்டிருக்கும்போது இந்நிருபம் அவனுக் குக் கிடைத்தது. பாரசீக மன்னனுக்கும் இது கிடைத் தது. சீன சக்கரவர்த்தி தாய் சூங் என்பவருக்கும் இது கிடைத்தது. இம் மன்னர்களும் மானிட வீரர்களும் தங்களுக்கே கட்டளை பிறப்பிக்கத் துணிந்த ஊர்பேர் தெரியாத இம்மனிதன் யாரென்று பெரிதும் ஆச்சரியப் பட்டிருக்க வேண்டும். முகம்மது நபி இவ்வாறு உலகத்தை ஒரு குடை நிழலில் ஆண்ட அரசர்களுக் கெல்லாம் தூதர்களை அனுப்பியதிலிருந்து அவருக்குத் தம்மிடத்தும் தாம் சாதிக்கப்பிறந்த திருத்தொண்டி னிடத்தும் இருந்த ஒப்பற்ற மகத்தான நம்பிக்கை நமக்கு ஒருவாறு புலப்படுகிறது. இந்த நம்பிக்கையை அவர் தம் ஜனங்களுக்கும் உண்டாக்க முடிந்தது. இந்த நம்பிக் கையை ஆதாரமாகக் கொண்டு, கவனிப்பாரற்றுக் கிடந்த அப்பாலைவன மக்கள், அக்காலத்தவர் அறிந்திருந்த உலகில் பாதியை வென்று விட்டனர்.

தன்னம்பிக்கை என்பதே பெரிய விஷயம்தான். அத்

துடன் இஸ்லாம் சகோதரத்துவத்தையும் போதித்தது. முஸ்லீம்கள் எல்லோரும் சரிநிகர் சமானம் என்று அது வற்புறுத்தியது. இப்படியாக ஓரளவுக்கு ஜனநாயகத்தை இஸ்லாம் அம்மக்களுக்கு அளித்தது. அக்காலத்தில் இழி நிலை உற்றிருந்த கிறிஸ்தவ மதத்தோடு ஒப்பிட்டுப் பார்க்கும்போது இஸ்லாம் கொண்டுவந்த சகோதரத்துவம் என்னும் செய்தி அரேபியர்களுக்கு மட்டுமின்றி அவர்கள் சென்ற பல நாட்டு மக்களுக்கும் பெரிய உத்வேகத்தை உண்டாக்கி யிருக்க வேண்டும்.

முகம்மது கி. பி. 632-இல் இறந்தார். அதாவது ஹிஜரத் நடந்த பத்து வருஷங்களுக்குப் பின். இந்தப் பத்து வருஷ காலத்தில் அவர் அரேபியாவில் ஒருவரோடொருவர் போரிட்டுக்கொண்டு வாழ்ந்த பலதிறப் பட்ட ஜாதியாரைத் தாங்கள் ஒரு நாட்டார் என்று உணரச் செய்ததோடு அவர்களை ஒரு லட்சியத்தில் ஆர்வமுள்ளவர்களாகவும் செய்துவிட்டார். அவருக்குப் பின் அவர் குடும்பத்தைச் சேர்ந்த அபு பக்ர என்பவர் கலீபா அல்லது தலைவராக வந்தார். இத் தலைவர் தேர்தல் ஒரு பொதுக் கூட்டத்தில் நடைபெறுவது வழக்கம். இரண்டு வருஷங்களுக்குப்பின் அபு பக்ர இறந்து போகவே அவருக்குப் பின் உமர் என்பவர் கலீபா ஆனார். இவர் பத்து வருஷம் கலீபாவாக இருந்தார்.

அபு பக்ர, உமர் என்னும் இவ்விரு பெரியாரும் அரேபிய மேன்மைக்கும், இஸ்லாமின் உயர்வுக்கும் அடிகோலியவர்கள். கலீபாக்கள் என்னும் முறையில் அவர்கள் மதத் தலைவர்களாகவும் அரசியல் தலைவர்களாகவும் விளங்கினர். அதாவது அரசரின் பதவியையும் போப்பாண்டவரின் பதவியையும் கலீபாக்களே வகித்து வந்தார்கள். அவர்கள் மகோன்னதமான பதவியில் இருந்தும், அவர்களுடைய ராஜ்யத்தின் வலிமை நாளுக்குநாள்

வளர்ந்து வந்தும், அவர்கள் எளிய வாழ்க்கை வாழ்ந்து ஆடம்பரத்தையும் வெளிப் பகட்டையும் வெறுத்து வந்தார்கள். அவர்கள் இஸ்லாமின் ஜனநாயகத்தை வெறும் போலியாக எண்ணாமல் உயிருள்ள ஒன்றாக மதித்துப் போற்றி வந்தார்கள். ஆனால் அவர்களுடைய உத்தியோகஸ்தர்களும் அமீர்களும் சீக்கிரத்திலேயே ஆடம்பர வாழ்க்கையை மேற்கொண்டவர்களாய்ப் பட்டாடைகளிலும் இன்னும் மற்றப் போகங்களிலும் நாட்டம் செலுத்தி வந்தார்கள். அபு பக்ர, உமர் ஆகிய இருவரும் இவ்வுத்தியோகஸ்தர்களைக் கண்டித்ததைப் பற்றியும், தண்டித்ததைப் பற்றியும், அவர்களுக்காக கண்ணீர் விட்டதைப் பற்றியும் பல கதைகள் கூறப்படு கின்றன. தங்களுடைய பலம் எளிய, கடினமான வாழ்க்கையினடியில் இருப்பதை அவர்கள் உணர்ந்தார்கள். பாரசீக அரண்மனைகளிலும், கான்ஸ்டாண்டிநோபிள் அரண்மனைகளிலும் காணப்பட்ட ஆடம்பர வாழ்க்கையை மேற்கொண்டால் அரேபியர் இழிநிலை எய்தி வீழ்ச்சி உறுவது திண்ணம் என்பதை அவர்கள் அறிந்திருந்தார்கள்.

அபு பக்ரவும், உமரும் ஆண்ட குறுகிய காலமாகிய இப் பன்னிரெண்டு வருஷத்தில் அரேபியர், கீழ் ரோம சாம்ராஜ்யத்தையும், பாரசீகத்தின் சசநீத மன்னனையும் தோற்கடித்து விட்டனர். கிறிஸ்தவர்களுக்கும் யூதர் களுக்கும் புண்ணிய ஸ்தலமாகிய எருசலேம் நகரை அரேபியர் கைப்பற்றிக் கொண்டனர். சிரியா, இராக், பாரசீகம் ஆகியவை புதிய அரேபிய சாம்ராஜ்யத்தின் கீழ் வந்துவிட்டன.

# 49

## அரேபியர் ஸ்பெயினிலிருந்து மங்கோலியா வரையில் ஜெயிக்கிறார்கள்

மே 23, 1932.

**வே**று மத ஸ்தாபகர்களைப் போல முகம்மது அவர்களும் அக்காலத்திய சமூகப் பழக்க வழக்கங்களில் பலவற்றை எதிர்த்து நின்றார். அவர் போதித்த மதம் நேரான முறையில் எளிதில் பொருள் விளங்கக் கூடியதாகவும், ஜனநாயக வாசனை கமழ்வதாகவும், சமத்துவம் வாய்ந்ததாகவும் இருந்தது. ஆகவே, அது, பக்கத்து நாடுகளில் மனம்போன போக்கில் ஆண்டுவந்த மன்னர்களின் கீழும், அடக்கி ஆளுவதில் அவர்களுக்கு ஒப்பான மத குருக்களின் கீழும் பல்லாண்டுகளாகத் துன்பத்தில் உழன்றுவந்த மக்களின் மனதைக் கொள்ளைகொண்டது. பழைய நிலையில் வெறுப்பும் சலிப்பும் உற்றிருந்த அவர்கள் மாறுதலை எதிர்நோக்கி நின்றார்கள். இஸ்லாம் இம் மாறுதலை அவர்களுக்கு அளித்தது. அவர்கள் அதை வரவேற்றனர். அதனால் அவர்களின் நிலை சீர்திருந்தியதோடு பழைய தீமைகள் பலவும் அறவே மாய்ந்தொழிந்தன. மக்கள் சுரண்டப்படுவதை ஒழிக்கக் கூடிய பெரிய சமுதாயப் புரட்சி எதையும் இஸ்லாம் விளைக்கவில்லை. ஆனால் முஸ்லீம்களைப் பொறுத்தவரையில் அவர்கள் சுரண்டப்படுவதை அது எவ்வளவோ குறைத்து அவர்கள் அனைவரும் ஒரு பெரிய சகோதரவர்க்கம் என்பதை உணரச் செய்தது.

ஆகவே, அரேபியர் எங்கும் எதனிலும் வெற்றி பெற்றனர். பெரும்பாலும் போர்டாமலேயே அவர்களுக்கு வெற்றி கிடைத்து வந்தது. அவர்களுடைய நபிகள் நாயகம் இறந்து இருபத்தைந்தாண்டுகள் கழிவதற்குள்ளாகவே அரேபியர் கீழ்ப்பாகத்தில் பாரசீகம் முழுவதையும், சிரியாவையும், அர்மீனியாவையும், மத்திய ஆசியாவில் ஒரு பகுதியையும், மேற்குப் பக்கத்தில் எகிப்தையும், வட ஆப்பிரிக்காவில் ஒரு பகுதியையும் ஜெயித்து விட்டார்கள். எகிப்து நாட்டை யாதொரு பிரயாசையுமின்றி அவர்கள் எடுத்துக்கொண்டார்கள். ஏனெனில் ரோம சாம்ராஜ்யத்தின் கீழும், கிறிஸ்தவப் பிரிவினர்களின் பகைமையாலும் எகிப்து சொல்லொணுத் துன்பத்துக்குள்ளாகி யிருந்தது. அலெக்சாந்திரியாவிலிருந்த பெரிய நூல் நிலையத்தை அரேபியர் தீக்கிரையாக்கினர் என்று ஒரு கதை வழங்குகிறது. ஆனால் இது பொய்யென்று இப்போது நம்பப்படுகிறது. நூல்களின் மீது பேரன்பும் அபிமானமும் உடைய அரேபியர் இத்தகைய அநாகரிகச் செயலை ஒரு நாளும் புரிந்திருக்க மாட்டார்கள். கான்ஸ்டாண்டிநோபிள் சக்கரவர்த்தியாகிய தியோடோசியஸ் இவ்வழிவுக்குக் காரணமாயிருந்திருக்கலாம். அவரைப்பற்றி முன்பே கூறியிருக்கிறேன். இதற்கு வெகுகாலத்திற்கு முன்னரே ஜூலியஸ் சீசர்காலத்தில் இந்நூல் நிலையத்தின் ஒரு பகுதி ஒரு முற்றுகையின் போது அழிந்துபோயிற்று. தியோடோசியஸ் மதப்பற்று மிகுந்த ஒரு கிறிஸ்தவர். பழைய கிரேக்க தத்துவ ஆராய்ச்சிகளையும், புராண இதிகாசக் கதைகளையும் கொண்ட பழைய கிரேக்க நூல்களை அவர் ஒப்புக்கொள்ளவில்லை. அவர் தாம் குளிக்கும் வெந்நீருக்கு இந்நூல்களை விறகாக எரித்தார் என்று சொல்லப்படுகிறது.

கிழக்கேயும் மேற்கேயும் அரேபியர் முன்னேறிச் சென்றனர். கிழக்கே ஹீரட், காபூல், பால்க், எல்லாம் அவர்கள் வசமாயின. அவர்கள் சிந்து நதிவரையில் வந்தார்கள். இந்தியாவுக்குள் அவர்கள் இதற்குமேல் செல்லவில்லை. இதற்குப் பின்னர் பல நூற்றுண்டுகள் வரையில் அரேபியரும் இந்திய மன்னர்களும் நட்புபூண்டு வாழ்ந்து வந்தார்கள். மேற்கே அவர்கள் மேலும் மேலும் போய்க் கொண்டே இருந்தார்கள். அவர்களுடைய சேனுதிபதியான உக்பா (Okba) என்பவன் வட ஆப்பிரிக்காவைக் கடந்து அதன் மேற்குக்கரையில்-இப்போது மொராக்கோ என்று அழைக்கப்படும் இடம் - அட்லாண்டிக் சமுத்திரத்தை அடைந்தானும். சமுத்திரத்தைக் கண்டதும் அவனுக்குப் பெரிய ஏமாற்றம் உண்டாயிற்ரும். அவன் குதிரை மீதமர்ந்து முடிந்தவரையில் சமுத்திர நீரில் சென்று அல்லாவின் பேரால் ஜெயிப்பதற்கு மேலும் அத்திசையில் பூமி இல்லையே என்று வருத்தப்பட்டானும்.

மொராக்கோவிலிருந்தும், ஆப்பிரிக்காவிலிருந்தும் அரேபியர் குறுகலான கடலைக் கடந்து ஸ்பெயினுக்குள்ளும் ஐரோப்பாவிலும் பிரவேசித்தனர். பண்டைய கிரேக்கர்கள் இக்குறுகலான ஜலசந்தியை 'ஹெர்டுலிஸ் தூண்கள்' என்று அழைத்தார்கள். ஐரோப்பாவில் பிரவேசித்த அரேபிய சேனுதிபதி ஜிப்ரால்டரில் இறங்கினுன். அதன் பெயரே அவனை நமக்கு ஞாபகமூட்டுகிறது. அவன் பெயர் தரீக் (Tariq). ஜபல்-உத்-தரீக் என்பது மருவி ஜிப்ரால்டர் என்ருயிற்று. அரபுவில் 'ஜபல்' என்ருல் குன்று. ஆகவே, ஜபல்-உத்-தரீக் என்பது தரீக்கின் குன்று என்று பொருள்படுகிறது.

ஸ்பெயின் விரைவில் வெல்லப்பட்டது. பிறகு அரேபியர் பிரான்சின் தென்பாகத்தில் பிரவேசித்தனர்.

ஆகவே, முகம்மது இறந்து நூறாண்டு ஆவதற்குள் அரேபிய சாம்ராஜ்யம் தென் பிரான்சு, ஸ்பெயினிலிருந்து வட ஆப்பிரிக்கா, சூயஸ் வரையிலும், இப்பால் அரேபியா, பாரசீகத்திலிருந்து மத்திய ஆசியாவில் மங்கோலிய எல்லை வரையிலும் பரவிவிட்டது. சிந்துப் பிரதேசம் நீங்கலாக இந்தியா அதில் சேரவில்லை. ஐரோப்பாவை அரேபியர் இருபுறத்திலும் தாக்கினர். கான்ஸ்டாண்டி நோபிளை நேர்முகமாகவும், பிரான்சை ஆப்பிரிக்கா வழியாகவும் அவர்கள் தாக்கினார்கள். தென் பிரான்சில் அரேபியர் சிறிய தொகையினராக இருந்தனர். மேலும் அவர்கள் தங்கள் தாய் நாட்டிற்கு வெகு தூரத்தில் இருந்தார்கள். ஆகவே, அவர்கள் அரேபியாவிலிருந்து அதிகமான உதவி எதையும் எதிர்பார்ப்பதற்கில்லை. அரேபியா அப்போது மத்திய ஆசியாவை ஜெயிப்பதில் மும்முரமாக ஈடுபட்டிருந்தது. ஆயினும் தென் பிரான்சி லுள்ள இவ்வரேபியரைக் கண்டு மேற்கு ஐரோப்பிய நாடுகளில் வாழ்ந்தவர்கள் நடுநடுங்கிப் போனார்கள். அரேபியரை எதிர்த்து நிற்பதற்காக ஒரு பெரிய கூட்டு சேர்க்கப்பட்டது. இக்கூட்டுக்குத் தலைவன் சார்லஸ் மார்டெல் (Charles Martel). கி. பி. 732-இல் அவன் பிரான்சில் டூர்ஸ் (Tours) என்னுமிடத்தில் நடந்த சண்டையில் அரேபியரைப் புறங்கண்டான். இத்தோல்வி ஐரோப்பாவை அரேபியரிடமிருந்து காப் பாற்றியது. 'அரேபியர் உலக சாம்ராஜ்யத்தை அடையுந் தறுவாயில் இருக்கும்போது டூர்ஸ் போர்க்களத்தில் அதை இழந்துவிட்டனர்' என்று ஒரு சரித்திராசிரியர் கூறுகிறார். அரேபியர் அங்கு வெற்றி பெற்றிருந்தால் ஐரோப்பியச் சரித்திரமே பெரிய மாறுதலை அடைந் திருக்கும் என்பதில் எள்ளளவும் ஐயமில்லை. அக் காலத்தில் ஐரோப்பாவில் அவர்களைத் தடுத்து நிறுத்து

வோர் வேறு யாரும் இல்லை. அவர்கள் நேரே கான்ஸ்டாண்டிநோபிளுக்குச் சென்று கீழ் ரோம சாம்ராஜ்யத்தையும் வழியிலுள்ள வேறு பல ராஜ்யங்களையும் வென்றிருக்கக்கூடும். ஐரோப்பாவின் மதம் கிறிஸ்தவமாயிருப்பதற்குப் பதிலாக இஸ்லாமாக இருந்திருக்கும். வேறு பல மாறுதல்களும் விளைந்திருக்கலாம். ஆனால் இதெல்லாம் வெறும் கற்பனை. நிகழ்ந்தது என்னவென்றால் அரேபியரின் முன்னேற்றம் பிரான்சில் தடைப்படுத்தப் பட்டது. ஆனால் அதற்குப் பின் பல நூற்றாண்டுகள் வரையில் அவர்கள் ஸ்பெயினில் தங்கி அதை ஆண்டு வந்தார்கள்.

ஸ்பெயினிலிருந்து மங்கோலியா வரையில் அரேபியர் வெற்றி பெற்றனர். பாலை வனங்களில் நாடோடிகளாக வாழ்ந்த அவர்கள் இப்போது பெரிய சாம்ராஜ்யத்தைக் கட்டி ஆளும் மன்னர்களாக மாறிவிட்டார்கள். அவர்கள் சாரசெனியர் (Saracens) என்று அழைக்கப்பட்டார்கள். 'சஹரா' என்றால் பாலைவனம். 'நஷீன்' என்றால் வாசிகள். இந்த இரண்டு சொற்களிலிருந்து அப்பெயர் பிறந்தது போலும். ஆனால் பாலைவனவாசிகள் சீக்கிரத்திலேயே ஆடம்பரமான நகர வாழ்க்கையை மேற்கொண்டனர். அவர்கள் பெரிய அரண்மனைகளில் வாழலாயினர். தூர தேசங்களில் வெற்றி பெற்றும் தங்களுக்குள் சண்டையிடும் பழைய வழக்கத்தை அவர்கள் மறந்து விடவில்லை. ஆனால் இப்போது சண்டையிடுவதற்கு ஒரு காரணம் இருந்தது. ஏனெனில் அரேபியாவின் தலைமை பெரிய சாம்ராஜ்யத்தின் தலைமை அல்லவா ? ஆகவே கலீபாவின் ஸ்தானத்தை அடைவதற்காக சதா சச்சரவு நிகழ்ந்து வந்தது. சிறிய குடும்பச் சண்டைகள் பெரிய உள்நாட்டுப் போராக முற்றின. இப்போராட்டங்கள் இஸ்லாமில் பெரிய பிளவை உண்டு

பண்ணின. சுன்னி, ஷியா என்று இரு பிரிவுகள் தோன்றின. இப்பிரிவுகள் இன்னும் உள்ளன.

முதலில் வந்த அபு பக்ர, உமர் ஆகிய இவ்விரு பெரிய கலீபாக்களின் ஆட்சி முடிவுபெற்றதும் தகராறு ஆரம்பித்துவிட்டது. முகம்மது நபிகளின் புதல்வியான பாதிமா(Fatima)வின் கணவர், அலி என்பவர் சிறிது காலம் கலீபாவாக இருந்தார். ஆனால் இடைவிடாத போராட்டம் நடந்துவந்தது. அலி கொல்லப்பட்டார். சிறிது காலம்கழித்து அவருடைய மகன் உசேன் என்பவன் தன் குடும்பத்தாருடன் கர்பலா என்னுமிடத்தில் கொல்லப்பட்டன். இச் சோக சம்பவத்தின் ஞாபகார்த்தமாகத்தான் முஸ்லீம்கள் அதிலும் ஷியாக்கள் ஒவ்வொரு வருஷமும் மொஹரம் மாதத்தில் துக்கம் கொண்டாடுகிருர்கள்.

கலீபா இப்பொழுது யதேச்சாதிகார மன்னராக மாறுகிருர். ஜனநாயகமோ, தேர்தலோ ஒன்றும் கிடையாது. அக்காலத்தில் யதேச்சாதிகாரம் செலுத்தி வந்த பிற மன்னர்களைப் போலவே அவரும் இருந்தார். பெயரளவில் அவர் மதத் தலைவராகவும் விளங்கினர். ஆனால் இம்மன்னர்களில் சிலர் தங்கள் நடவடிக்கைகளால் தாங்கள் காப்பாற்றிவருவதாகச் சொல்லிக் கொண்ட இஸ்லாம் மார்க்கத்துக்கே இழுக்கைத்தேடினர்.

நூறு வருஷங்கள்வரையில் முகம்மது நபிகளின் குடும்பத்தைச் சேர்ந்த ஒமீயது (Ommeyades) என்னும் பிரிவினர் கலீபாக்களாக இருந்துவந்தனர். டமாஸ்கஸ் அவர்களுடைய தலைநகராயிருந்தது. அப்பழைய நகரில் எழுந்த அரண்மனைகளும், மசூதிகளும், நீர்ச்சிவிறிகளும், சிங்கார மண்டபங்களும் அதற்கு ஒரு புதிய சோபையையும் அழகையும் அளித்தன. டமாஸ்கஸ் நகரின் குடிதண்ணீர் வசதி மிகவும் பேர்போனது. இக்காலத்தில்

அரேபியர் ஒரு தனிவகையான கட்டிட முறையை சிருஷ்டித்து அதை விருத்தி செய்துவந்தனர். அது சாரசெனியக் கட்டிடமுறை என்று அழைக்கப்பட்டது. அதில் அலங்காரம் அதிகமாகக் காணப்படவில்லை. ஆனால் அது எளிய தன்மையும், கம்பீரமும், அழகும் வாய்ந்து விளங்கியது. அரேபியாவிலும், சிரியாவிலும் அழகுபெற வளர்ந்தோங்கிய பேரீச்சமரமே இப்புதிய கட்டிட முறையின் உட்கருத்தாகும். இம்முறையில் கட்டப்படும் கட்டிடங்களின் வளைவுகளும், தூண்களும், ஸ்தூபிகளும், விமானங்களும் விண்ணில் தாழ்ந்தும் உயர்ந்தும் காணப்படும் பேரீச்சம் பொழில்களை நமக்கு நினைவுறுத்துகின்றன.

இக் கட்டிடமுறை இந்தியாவுக்கும் வந்தது. ஆனால் இங்கு அது இந்தியக் கருத்துக்களால் பாதிக்கப்பட்டது. அதனால் இரண்டும் சேர்ந்த ஒரு கலப்புமுறை தோன்றி வளர்ந்தது. சாரசெனிய முறையின் உத்தம லக்ஷணங்கள் பொருந்திய கட்டிடங்கள் இன்னும் ஸ்பெயினில் உள்ளன.

செல்வமும், சாம்ராஜ்ய சம்பத்தும் ஏற்படவே ஆடம்பர வாழ்வுக்குரிய அங்கங்களும் ஏற்படலாயின. குதிரைப் பந்தயம் அரேபியருக்கு மிகவும் பிடித்தமான ஒரு பொழுதுபோக்காயிற்று. அவ்வாறே அவர்கள் போலோ விளையாடுவதிலும், மிருகங்களை வேட்டையாடுவதிலும், சதுரங்கம் ஆடுவதிலும் தங்கள் பொழுதை இன்பமாகப் போக்கினர். சங்கீதத்தில் எல்லாருக்கும் அபார பிரேமை ஏற்படலாயிற்று. பாடகர்களும் அவர்களைச் சேர்ந்தவர்களும் தலைநகரில் நிரம்பியிருந்தார்கள்.

இன்னொரு பெரிய, ஆனால் துர்ப்பாக்கியமான மாறுதலும் சிறிது சிறிதாக விளைந்துவந்தது. இதுதான் பெண்களின் நிலை. அரேபிய மாதர்கள் கோஷாப் பழக்கத்தை அநுஷ்டிக்கவில்லை. அவர்கள் 'விலகி வீட்டிலோர்

பொந்தில் வளர்வில்லை. அவர்கள் வெளியே நடமாடினார்கள்; மசூதிகளுக்கும் பிரசங்கங்கள் கேட்கவும் சென்றார்கள்; தாங்களே பிரசங்கங்களும் செய்தார்கள். ஆனால் அரேபியருக்கு வெற்றி கிடைத்தவுடன் அவர்கள் தங்களுக்கு இரு பாரிசத்திலும் இருந்த பழைய சாம்ராஜ்யங்களான கீழ் ரோமானிய, பாரசீக சாம்ராஜ்யங்களின் அடிச்சுவட்டில் நடக்க ஆரம்பித்தார்கள். கீழ் ரோமானிய சாம்ராஜ்யத்தைத் தோற்கடித்துப் பாரசீக சாம்ராஜ்யத்தை முடிவுக்குக் கொண்டுவந்த அரேபியர் அவைகளின் தீய பழக்கங்கள் பலவற்றிற்கும் அடிமையாகிவிட்டனர். முக்கியமாகப் பாரசீகத்தையும், கான்ஸ்டாண்டிநோபிளையும் பார்த்தே அரேபியர் தங்களுடைய ஸ்திரீகளை விலக்கிவைக்கத் தலைப்பட்டனர் என்று சொல்லப்படுகிறது. சிறிது சிறிதாகப் பெண்கள் அந்தப்புரத்துக்குள் சிறை வைக்கப்பட்டார்கள். சமூக வாழ்வில் ஆண்களும் பெண்களும் ஒருவரையொருவர் சந்திப்பது அரிதாகிவிட்டது. துரதிருஷ்டவசமாக, இவ்வாறு பெண்களை விலக்கிவைப்பது, இஸ்லாமிய சமூகத்தின் ஒரு லட்சணமாகிவிட்டது. முஸ்லீம்கள் இந்தியாவுக்கு வந்த காலத்தில் அவர்களிடமிருந்து இந்தியாவும் இதைக் கற்றுக்கொண்டது. இவ்வநாகரிக வழக்கத்தை இன்னும் சிலர் பொறுத்துக்கொண்டிருப்பது எனக்கு வியப்பைத் தருகிறது. வெளி உலகத்தின் தொடர்பு அற்ற கோஷா ஸ்திரீகளைப்பற்றி எண்ணும்போதெல்லாம் எனக்குச் சிறையின் ஞாபகமும் மிருகக்காட்சிசாலையின் ஞாபகமும் வருகிறது. தன் ஜனத்தொகையில் பாதியைச் சிறைக்குள் மூடி வைத்துவிட்டு எத்தேசம்தான் முன்னுக்குச் செல்ல முடியும்?

அதிருஷ்டவசமாக இந்தியா இக்கோஷாமுறையை விரைவில் உடைத்தெறிந்துவருகிறது. முஸ்லீம் சமூகமும்

இச்சுமையைப் பெரும்பாலும் அகற்றிவிட்டது. துருக்கியில் கமால்பாஷா இதை அறவே ஒழித்துவிட்டார். எகிப்தில் இது விரைவில் மறைந்துவருகிறது.

இன்னும் ஒரு விஷயத்தைக் கூறிவிட்டு இக்கடிதத்தை முடித்துவிடுகிறேன். அரேபியர் தாங்கள் விழித்தெழுந்த புதிதில் தங்கள் மதத்தின்பால் மிகுந்த ஆர்வம் உடையவர்களா யிருந்தார்கள். ஆயினும் அவர்கள் பிற மதத்தினர்மீது துவேஷம் பாராட்டவில்லை. அவர்களுடைய மதத்துவேஷமற்ற இத்தன்மைக்கு எத்தனையோ சான்றுகள் உள. கலீபா உமர் இதை எருசலேமில் மிகவும் வற்புறுத்தி அநுஷ்டித்துவந்தார். ஸ்பெயினில் கிறிஸ்தவர்கள் பெருந்தொகையினராக இருந்தார்கள். அவர்கள் பூரண சுதந்தரத்துடன் தங்கள் மதத்தை அவலம்பித்து வந்தார்கள். இந்தியாவில் சிந்துவைத்தவிர மற்ற இடங்களில் அரேபியர் ஆட்சி நடைபெறவில்லை. ஆனால் அவர்கள் மற்றவர்களுடன் தொடர்பும் நட்பும் பூண்டிருந்தார்கள். கூறப்புகின், இக்காலச் சரித்திரத்தில் முக்கியமாக நம் கவனத்தை ஈர்ப்பது கிறிஸ்தவ ஐரோப்பியர் காட்டிய கொடிய மதத்துவேஷமும், அதற்கு நேர்மாறாக அரேபியமுஸ்லீம் பிற மதத்தினரிடம் காட்டிய சகிப்புத்தன்மையுமே ஆகும்.

# 50

## பாக்தாத் நகரும் ஹாரூன் - ரஷீதும்

மே 27, 1932.

மீண்டும் மற்றத் தேசங்களைக் கவனிக்கப் புகுமுன் அரேபியரின் கதையைத் தொடர்ந்து பார்ப்போம்.

சென்ற கடிதத்தில் கூறியபடி, முகம்மது நபிகளின் குடும்பத்தைச் சேர்ந்த ஒமீயதுப் பிரிவினர் நூறு வருஷங்கள்வரையில் கலீபாக்களாக இருந்தனர். அவர்கள் டமாஸ்கஸ் நகரிலிருந்து ஆட்சி செலுத்திவந்தார்கள். அவர்கள் காலத்தில் முஸ்லீம் அரேபியரின் கொடி தூர தேசங்களில் எல்லாம் பறந்துகொண் டிருந்தது. தூர தேசங்களில் அவர்கள் வெற்றி பெற்றாலும் உள்நாட்டில் சண்டையும் சச்சரவும் மலிந்திருந்தது. கடைசியில் முகம்மதுவின் குடும்பத்தைச் சேர்ந்த இன்னொரு பிரிவினர் ஒமீயதுகளை வென்று அரசாட்சியைக் கைப்பற்றிக் கொண்டனர். இவர்கள் முகம்மதுவின் சிற்றப்பாவான அப்பாஸ் என்பவரின் கால்வழியில் வந்தவர்களாதலால் அப்பாசீதுகள் (Abbasides) என்று அழைக்கப்பட்டார்கள். ஒமீயதுகளின் கொடுமைகளை ஒழிப்பதற்காக அப்பாசீதுகள் போரிட்டார்கள். போரில் வெற்றி கிடைத்தபிறகு கொடுமையிலும் கொலையிலும் அவர்களை மிஞ்சிவிட்டார்கள். ஒமீயதுகள் அனைவரையும், அவர்கள் விடாது தொடர்ந்து மூர்க்கத்தனமாகக் கொன்று குவித்தனர்.

கி. பி. 750-இல் அப்பாசீது கலீபாக்களின் நீண்ட ஆட்சியின் தொடக்கத்தில் இது நிகழ்ந்தது. ஓர் ஆட்சியின் ஆரம்பத்துக்கு இது பெரிய அபசகுனம் என்றே

சொல்லவேண்டும். ஆயினும், அரேபியச் சரித்திரத்தில் அப்பாசிதுகளின் ஆட்சிக்காலம் சிறப்பு வாய்ந்ததாகத் தான் இருந்தது. ஆனால், ஓமீயதுகளின் காலத்துக்கும் இதற்கும் அதிக வித்தியாசம் காணப்பட்டது. அரேபியாவில் நிகழ்ந்த உள்நாட்டுப் போர் அரேபிய சாம்ராஜ்யத்தையே குலுங்கவைத்தது. தாய்நாட்டில் அப்பாசிதுகள் வெற்றி பெற்றனர். ஆனால் ஸ்பெயினில் அரசாண்ட ஓமீயது கவர்னர் அப்பாசிது கலீபாவின் அதிகாரத்தை ஒப்புக்கொள்ள மறுத்துவிட்டான். இதற்குப் பிறகு வெகு சீக்கிரத்திலேயே வட ஆப்பிரிக்காவும் - இது இப்ரிகியா என்று அழைக்கப்பட்டது—ஏறக்குறையச் சுவாதீனமாக இருக்கத் தலைப்பட்டது. எகிப்தும் இவைகளைப் பின்பற்றியது. அது, தனக்கெனத் தனியாக வேறு ஒரு கலீபாவைக்கூட ஏற்படுத்திக்கொண்டது. எகிப்து அருகில் இருந்தபடியால் அதைமட்டும் அரேபியா அடிக்கடி பணியவைத்தது. இப்ரிகியாவை ஏனென்று கேட்பார் இல்லை. ஸ்பெயினைப்பற்றியோ சொல்லவேண்டியதில்லை; அது அவ்வளவு தூரத்தில் இருந்தது. ஆகவே அப்பாசிதுகள் பட்டத்துக்கு வந்ததும் அரேபிய சாம்ராஜ்யம் பிளவுபடுவதைக் காண்கிறோம். இனி, முஸ்லீம் உலகம் முழுமைக்கும் கலீபா தலைவரல்ல. இஸ்லாம் மதத்தினர் அனைவருக்கும் அவர் இப்போது அரசர் அல்ல. இஸ்லாம் தன் ஒற்றுமையை இழந்துவிட்டது. அப்பாசிதுகளும் ஸ்பெயினில் வாழ்ந்த அரேபியரும் ஒருவரையொருவர் பெரிதும் பகைத்துவந்தனர். ஒருவர், மற்றவருக்கு நேரும் தீங்கை வரவேற்கக்கூடிய அளவுக்கு அவர்களுடைய பகைமை முற்றியிருந்தது.

மேற் கூறியவைகளெல்லா மிருந்தும், அப்பாசிது கலீபாக்கள் ஒப்பற்ற சக்கரவர்த்திகளாகத் திகழ்ந்தார்கள். அவர்களுடைய சாம்ராஜ்யமும், சாம்ராஜ்யங்

களுக்குரிய அளவுகோலைக்கொண்டு நோக்குமிடத்து, பெரிதாகத்தான் இருந்தது. குன்றுகளையும் எதிர்நின்று வென்ற, காட்டுத்தீபோல் பரவிய பழைய நம்பிக்கையும், சக்தியும் இப்போது அரேபியரிடம் காணப்படவில்லை. எளிமையும், ஜனநாயகமும் அவர்களைவிட்டுப் பறந்தன. இஸ்லாமிய அரசருக்கும், அரேபியரால் இதற்கு முன் வெல்லப்பட்ட பாரசீக மன்னர் மன்னருக்கும் அல்லது கான்ஸ்டாண்டிநோபிள் சக்கரவர்த்திக்கும் இப்போது யாதொரு வேற்றுமையும் தெரியவில்லை. முகம்மது நபிகளின் காலத்திய அரேபியரிடம் ஒரு புதிய உயிரும் வலியும் காணப்பட்டது. அது அரசர்களின் படைவலியினின்றும் வேறுபட்டதா யிருந்தது. அவர்களை எதிர்த்து நிற்பார் எவரும் இல்லை. தடுக்க முடியாத அவர்தம் படையெடுப்புக்குமுன் மிடுக்குடைய படை மன்னரெல்லாம் ஒடுங்கிப்போயினர். அம்மன்னரின் கீழ் சலிப்பும் களைப்பும் உற்றிருந்த ஏழை எளியவர்கள் அரேபியரால் தங்களுக்கு நற்காலம் பிறக்குமென்று எண்ணினார்கள்.

இப்போது எல்லாம் மாறிவிட்டது. பாலைவனங்களில் வாழ்ந்தவர்கள் இப்போது அரண்மனையில் வாழ ஆரம்பித்தார்கள். எளிய பேரீச்சம்பழத்தை உண்டு காலங் கழித்தவர்கள் பெறுதற்கரிய அறுசுவை உண்டிகள் துய்த்தனர். இவ்வாறு சுகபோகங்களில் மூழ்கிக் கிடந்தவர்கள் மாறுதலையும் சமுதாயப் புரட்சியையும் குறித்து ஏன் கவலைகொள்ளப் போகிறார்கள்? படாடோபத்திலும் வெளி மினுக்கிலும் அவர்கள் பழைய சாம்ராஜ்யங்களோடு போட்டியிட ஆரம்பித்து அவைகளுடைய தீய பழக்கங்கள் பலவற்றையும் விடாது பற்றிக்கொண்டார்கள். நான் ஏற்கெனவே கூறியுள்ள படி, மாதரை விலக்கிவைத்தல் அவைகளில் ஒன்றாகும்.

தலைநகரும் டமாஸ்கஸ் நகரிலிருந்து இராக்கிலுள்ள பாக்தாத் நகருக்குச் சென்றது. இத்தலைநகர் மாற்றமே அர்த்தபுஷ்டி உடையதா யிருந்தது. ஏனெனில் பாரசீக மன்னர்கள் கோடைவாசத்துக்குப் பாக்தாத் செல்வது வழக்கம். டமாஸ்கஸ் நகரைவிட பாக்தாத் ஐரோப்பாவி லிருந்து அதிக தூரத்தில் இருந்தபடியால், அப்பாசீதுகள் இதிலிருந்து ஐரோப்பாவைவிட ஆசியாவின்மீதே அதிக கவனம் செலுத்தலாயினர். இதற்குப்பின், அரேபியர் கான்ஸ்டாண்டிநோபிளைக் கைப்பற்றுவதற்குப் பல தடவை முயன்றனர்; ஐரோப்பிய நாடுகளுடன் பல யுத்தங்கள் நடத்தினர்; ஆயினும், இவைகளெல்லாம் தங்களைக் காத்துக் கொள்வதற்காகச் செய்த முயற்சி களேயன்றி வேறில்லை. எங்கும், எதனிலும் அவர்கள் வெற்றிபெற்ற காலம் முடிவடைந்துவிட்டது. அப்பாசீது கலீபாக்கள், போனதுபோக மிகுந்திருந்த சாம்ராஜ்யத் தைப் பலப்படுத்திக்கொள்ள முயன்று வந்தனர். ஸ்பெயி னும், ஆப்பிரிக்காவும் நீங்கலாக இருந்த சாம்ராஜ்யமே பெரிதாயிருந்தது.

பாக்தாத்! அது உனக்கு நினைவிருக்கிறதா? ஹாரூன் ரஷீத் அல்லது ஹாரூன் - அல் - ரஷீத், (Harunal - Rashid), ஷாஹர்ஜாதி (Shaherazade), 'அரேபிய இரவுகள்' என்னும் நூலிலுள்ள ஆச்சரியமான கதைகள், இவைகளெல்லாம் உனக்கு நினைவிருக்குமே? அப்பாசீது கலீபாக்கள் சிருஷ்டித்த நகரமே 'அரேபிய இரவுகள்' என்னும் நூலில் வர்ணிக்கப்பட்டிருக்கிறது. அந்நகரில் அரண்மனைகளும், பொதுக் காரியாலயங்களும், பள்ளிக் கூடங்களும், கலாசாலைகளும், பெரிய கடைகளும், தோட் டங்களும், பூங்காவனங்களும் நிறைந்திருந்தன. அங் குள்ள வணிகர்பெருமக்கள் மேல்நாடுகளுடனும், கீழ் நாடுகளுடனும் பெரிய வாணிபம் நடத்திக்கொண்டிருந்

தார்கள். அரசாங்க உத்தியோகஸ்தர்கள் பரந்த சாம்ராஜ்யத்தின் பல பாகங்களுடனும் இடைவிடாத தொடர்பு வைத்துக்கொண் டிருந்தார்கள். அரசாங்கத்தில் பல துறைகள் (சிக்கல்) வளரவே அது பல இலாகாக்களாகப் பிரிக்கப்பட்டது. தலைநகருக்கும் சாம்ராஜ்யத்தின் பல பகுதிகளுக்கும் நல்ல தபால் போக்குவரத்து நடந்து வந்தது. வைத்தியசாலைகளுக்குக் கணக்கில்லை. உலகத்தின் பல பாகங்களிலிருந்தும் அந்நகரைப் பார்க்கப் பலர் வந்தனர். கலைஞரையும், அறிஞரையும் கலீபா ஆதரித்துப் போற்றும் விஷயம் உலகப் பிரசித்தியாயிருந்தபடியால் அவருடைய சபையில் பல தேசங்களிலுமுள்ள நூற்கடலையும், கலைக்கடலையும் கரைகண்ட மேதாவிகளும் மாணவர்களும் குழுமியிருந்தனர்.

கலீபா வெகு ஆடம்பரமாக வாழ்ந்துவந்தார். அவருடைய ஏவல்கேட்கும் அடிமைகள் பலர் அவரைச் சூழ்ந்திருந்தனர். ராஜ ஸ்திரீகள் அந்தப்புரத்தில் வாழ்ந்து வந்தனர். ஹாரூன் - ரஷீத் அரசாண்ட காலத்தில்—கி. பி. 786-லிருந்து 809-வரையில்—அப்பாசீது சாம்ராஜ்யம் மகோன்னத தசையில் இருந்தது. கிழக்கே சீன சக்கரவர்த்தியிடமிருந்தும் மேற்கே சார்லமேன் சக்கரவர்த்தியிடமிருந்தும் தூதுகோஷ்டிகள் அவருடைய சபையில் வந்திருந்தன. பாக்தாதும், அப்பாசீது ராஜ்யங்களும் அக்காலத்திய ஐரோப்பாவைவிட—அரேபிய ஸ்பெயின் நீங்கலாக—அரசாங்க முறைகளிலும், வியாபார மேன்மையிலும், கல்விப்பெருக்கிலும் எவ்வளவோ முன்னேற்றம் அடைந்திருந்தன.

அப்பாசீதுகளின் ஆட்சிக்காலத்தில் விஞ்ஞானக் கல்விக்குப் புதிய ஊக்கம் அளிக்கப்பட்டது ஒரு விசேஷம் ஆகும். தற்கால உலகில் விஞ்ஞானம் எவ்வளவு பெரியது என்பதும் அதற்கு நாம் எவ்வளவு கடமைப்பட்டிருக்

கிறோம் என்பதும் உனக்குத் தெரிந்த விஷயங்கள். விஞ்ஞானம் சும்மா கையைக்கட்டி உட்கார்ந்துகொண்டு 'ஈசா, யாவும் உன் செயலே' என்று பிரார்த்தனை புரிவதில்லை. நிகழ்ச்சிகளுக்குக் காரணத்தைக் கண்டு பிடிக்க அது முயற்சிக்கிறது. இடைவிடாமல், மேலும் மேலும் ஆராய்ச்சி செய்துகொண்டே இருக்கிறது. சில சமயங்களில் தோல்வியும் சில சமயங்களில் வெற்றியும் பெறுகிறது. இவ்வாறாக மனித அறிவை அது அதிகரித்துக்கொண்டே செல்கிறது. பண்டைய உலகம் அல்லது இடைக்கால உலகம் இவற்றினின்று நமது தற்கால உலகம் பெரிதும் மாறுபட்டிருக்கிறது. இம் மாறுபாட்டிற்கு முக்கிய காரணம் விஞ்ஞானமேயாகும். ஏனெனில் தற்கால உலகம் விஞ்ஞானத்தாலன்றோ படைக்கப்பட்டிருக்கிறது!

பண்டைய உலகில் எகிப்திலாகட்டும், சீனாவிலாகட்டும், இந்தியாவிலாகட்டும் நாம் இந்த விஞ்ஞான முறையைக் காணவில்லை. பழைய கிரீசில் இதைச் சிறிது காண்கிறோம். மீண்டும் ரோமாபுரியில் இது பூஜ்யமாயிருக்கிறது ஆனால் அரேபியருக்கு இந்த விஞ்ஞான ஆராய்ச்சி உணர்வு இருந்தது. ஆகவே, அவர்களைத் தற்கால விஞ்ஞானத்தின் தந்தையர் என்று கூறலாம். வைத்தியம், கணிதம் போன்ற விஷயங்களில் அவர்கள் இந்தியாவிடமிருந்து எவ்வளவோ கற்றுக்கொண்டனர். இந்தியாவிலிருந்து கணித சாஸ்திரிகளும் கற்றோர் பலரும் பாக்தாதுக்கு வந்தனர். பல அரேபிய மாணவர்கள், வட இந்தியாவில் அப்போதும் பெயர்பெற்று விளங்கிக் கொண்டிருந்த பெரிய சர்வ கலாசாலையாகிய தக்ஷசீலத்துக்குச் சென்றனர். அங்கே அவர்கள் வைத்தியம் கற்றுத் தேர்ந்தனர். ஆயுர்வேதம் முதலிய கலைகளைக் கூறும் வடமொழி நூல்கள் அரபுமொழியில் மொழி

பெயர்க்கப்பட்டன. அரேபியர் சீனுவிடமிருந்து பல விஷயங்கள் கற்றுக்கொண்டனர். உதாரணமாகக் காகிதம் செய்யும் தொழில். ஆனால் பிறரிடமிருந்து கற்றதை ஆதாரமாக வைத்துக்கொண்டு, தாங்களாகவே மேலும் புதிய ஆராய்ச்சிகள் நடத்திப் பல அரிய உண்மைகளைக் கண்டுபிடித்தனர். தூரதிருஷ்டிக் கண்ணுடியையும், மாலுமியின் திசைகாட்டும் கருவியையும் முதல்முதல் செய்தவர்கள் அரேபியரே ஆவர். வைத்தியத் திறமையில் அரேபிய வைத்தியர்களும், சத்திரசிகிச்சை நிபுணர்களும் ஐரோப்பாவெங்கும் பெரும் புகழ்பெற்று விளங்கினுர்கள்.

மேற்கூறிய கலைப்பயிற்சிகளுக்கும், அறிவுப்பயிற்சிகளுக்கும் பாக்தாத் முக்கியமாக விளங்கியது. மேற்கே அரேபிய ஸ்பெயினின் தலைநகரான கார்டோபா (Cordoba) மற்ருெரு முக்கிய ஸ்தானமாக இருந்தது. அறிவியல் வாழ்க்கை செறிந்த சர்வ கலாசாலைகளைக்கொண்ட வேறு பல இடங்களும் அரேபிய உலகில் இருந்தன. கெய்ரோ அல்லது அல் - கஹிரா (வெற்றி பொருந்தியது), பஸ்ரா, கூபா (Kufa): இவைகள் முக்கியமான சில இடங்கள். ஆனுல் புகழ்பெற்ற இந்நகரங்கள் எல்லாவற்றிற்கும் மேலாகப் பாக்தாத் விளங்கியது. 'இஸ்லாமின் தலைநகர், இராக்கின் நேத்திரம், சாம்ராஜ்யத்தின் பீடம், அழகின் கொலுமண்டபம், கலைவாணியின் திருக்கோயில்' என்று ஓர் அரேபியச் சரித்திராசிரியர் பாக்தாத் நகரை வாயாரப் புகழ்ந்திருக்கிருர். 20 லட்சம் மக்கள் வசித்துவந்த அப் பெருந் திருநகர் தற்காலத்திய கல்கத்தா அல்லது பம்பாயைவிட எவ்வளவோ பெரியதாயிருந்தது.

பாக்தாதிலுள்ள பணக்காரர்களிடையில்தான் முதல் முதலில் மேஜோடு அணியும் பழக்கம் ஆரம்பமாயிற்று என்பதை அறிய நீ ஆச்சரியப்படுவாய். அவைகள்

'மோஜா' (Mozas) என்று அழைக்கப்பட்டன. இதிலிருந்துதான் அதற்குரிய ஹிந்துஸ்தானி வார்த்தையும் பிறந்திருக்கவேண்டும். சொக்காய் அல்லது சட்டை என்று பொருள்படும் 'கமிஸ்' என்னும் சொல்லிலிருந்துதான் பிரெஞ்சு மொழியிலுள்ள 'கெமிஸ்' * (Chemise) என்னும் சொல்லும் வந்திருக்கவேண்டும். மோஜா, கமிஸ் என்னும் இரண்டு சொற்களும் அரேபியரிடமிருந்து கான்ஸ்டாண்டிநோபிளுக்குச் சென்று அங்கிருந்து ஐரோப்பாவுக்குச் சென்றன.

அரேபியர் எப்போதும் பெரிய யாத்திரீகர்களாக இருந்து வந்திருக்கிறார்கள். அவ்வழக்கத்தை அவர்கள் இப்போதும் விடாமல், கடல்கடந்து நீண்ட பிரயாணங்கள் செய்து ஆப்பிரிக்காவிலும், இந்தியாவின் கரைகளிலும், மலாயாசியாவிலும், சீனாவிலும் தங்கள் குடியேற்றங்களை ஸ்தாபித்து வந்தார்கள். புகழ்பெற்ற அரேபிய யாத்திரீகர்களில் ஒருவரான அல்பெருனி என்பவர் இந்தியாவுக்கு வந்தார். யுவான் சுவாங்கைப் போல் இவரும் தம் யாத்திரையைப்பற்றிய வரலாறு ஒன்றை எழுதியிருக்கிறார்.

அரேபியர் சரித்திரம் எழுதிவைத்தார்கள். அவர்கள் எழுதிய நூல்கள், சரித்திரங்கள் இவற்றிலிருந்தே நாம் அவர்களைப்பற்றி அதிகம் தெரிந்துகொள்ள முடிகிறது. அவர்கள் எவ்வளவு அருமையான கதைகளையும் கற்பனைக் காவியங்களையும் சிருஷ்டிக்கமுடியும் என்பதை நாம் ஏற்கெனவே அறிந்திருக்கிறோம். அப்பாசீது கலீபாக்களைப் பற்றியும் அவர்களுடைய சாம்ராஜ்யத்தைப் பற்றியும் அநேகர் கேள்விப்பட்டுக்கூட இருக்க மாட்டார்கள். ஆனால் 'ஆயிரத்தோ ரிரவுகள்' ('அல்ப் லைலாவ

* Chemise—மாதர்கள் அணியும் உள்சட்டை.

லேவா'. 'அல்ப்' என்றால் ஆயிரம், 'லேவா' என்றால் இரவு) என்னும் அற்புதநூலில் வர்ணிக்கப்பட்டுள்ள காதலும் கற்பனையும் பொங்கித் ததும்பும் பாக்தாத் நகரை அறியாதார் யார்? நிஜ சாம்ராஜ்யத்தைவிடக் கற்பனையில் காணும் சாம்ராஜ்யம் அதிக உண்மையாயிருக்கிறதல்லவா?

ஹாரூன் - ரஷீதின் மரணத்துக்குப்பின் அரேபிய சாம்ராஜ்யத்துக்குக் கஷ்டகாலம் ஆரம்பமாயிற்று. குழப்பங்கள் மிகுந்தன. பல பாகங்கள் சாம்ராஜ்யத்திலிருந்து பிரிந்துவிட்டன. மாகாண கவர்னர்கள் பரம்பரை மன்னர்களாகி விட்டனர். கலீபாக்களின் அதிகாரம் சிறிது சிறிதாகக் குறைந்துவந்தது. கடைசியில் பாக்தாத் நகர், அதைச் சூழ்ந்த சில கிராமங்கள் இவற்றிற்கு மட்டும் ஒரு கலீபா அரசராயிருக்கும் காலமும் வந்துவிட்டது. ஒரு கலீபாவை அவருடைய படைவீரர்களே அரண்மனையிலிருந்து இழுத்துவந்து கொன்றுவிட்டார்கள். சிறிதுகாலம் வரையில் வேறு பலமுள்ளவர்கள் கிளம்பிப் பாக்தாதை அரசாண்டனர். கலீபா அவர்களுக்கு அடங்கி வாழ்ந்து வந்தார்.

இதற்கிடையில் இஸ்லாமில் ஒற்றுமை மலையேறி வெகுகாலம் ஆய்விட்டது. எகிப்திலிருந்து மத்திய ஆசியாவில் கொராசான் (Khorasan) வரையில் தனித்தனி ராஜ்யங்கள் ஏற்பட்டன. இன்னும் கிழக்கேயிருந்து நாடோடி ஜாதியார்கள் மேற்குநோக்கி வந்துகொண்டிருந்தார்கள். மத்திய ஆசியாவில் வாழ்ந்த பழைய துருக்கியர், முஸ்லீம்கள் ஆகி, பாக்தாதுக்கு வந்து அதைக் கைப்பற்றிக்கொண்டனர். அவர்கள் செல்ஜக் துருக்கியர் என்று அழைக்கப்பட்டார்கள். கான்ஸ்டாண்டிநோபிளின் பைஜாண்டிய சைனியத்தை அவர்கள் அறவே முறியடித்து விட்டார்கள். அதைக் கண்டு ஐரோப்பா ஆச்ச

ரியத்தால் ஸ்தம்பித்து விட்டது. ஏனெனில் அரேபியரும் முஸ்லீம்களும் வலி இழந்து ஒடுங்கிவிட்டார்கள் என்று ஐரோப்பா நினைத்திருந்தது. அரேபியர் வலிகுன்றி விட்டார்கள் என்பது வாஸ்தவமே. ஆயினும் இஸ்லாமின் கொடியை இப்போது செல்ஜுக் துருக்கியர் உயர்த்திப் பிடித்துக்கொண்டு ஐரோப்பாவை அறைகூவி அழைத்தனர்.

அவ்வறைகூவல் சீக்கிரமே ஏற்றுக்கொள்ளப்பட்டதென்பதை நாம் காண்கிறோம். ஐரோப்பாவின் கிறிஸ்தவ நாடுகள் முஸ்லீம்களை வென்று தங்களுடைய புண்ணிய ஸ்தலமாகிய எருசலேமை மீண்டும் கைப்பற்றுவதற்குச் சிலுவைப்போர் தொடங்கின. நூறு வருஷங்களுக்கு மேல் சிரியாவிலும், பாலஸ்தீனத்திலும், சின்ன ஆசியாவிலும், கிறிஸ்தவமும் இஸ்லாமும் பெரும் போர் விளைத்துப் பூமியெங்கும் குருதி தேக்கின. அவைகள் போரிட்ட நாடுகளில் செல்வம் கொழிக்கும் நகரங்களெல்லாம் தங்கள் வியாபாரத்தையும் பெருமையையும் இழந்து வறுமையுற்றன; வளம் கொழிக்கும் வயல்களெல்லாம் தங்கள் விளைவுகளை இழந்து வெறுமையுற்றன.

ஆகவே, இருதிறத்தாரும் போரிட்டார்கள். ஆனால் அவர்களுடைய போர் முடிவெய்து முன்பாகவே மங்கோலியாவில் செங்கிஸ்கான் (Chengiz Khan) என்று ஒருவன் கிளம்பினான். 'உலகத்தையே ஓர் ஆட்டு ஆட்டி வைத்தவன்' என்று அவன் அழைக்கப்படுகிறான். உண்மையில் அவன் ஆசியாவையும் ஐரோப்பாவையும் ஆட்டி வைத்தான். அவனும், அவன்பின் வந்தோரும் பாக்தாத் நகரையும் அதன் சாம்ராஜ்யத்தையும் முடிவாக ஒழித்துக் கட்டினர். அழியாப் பெருமையும் மங்காப் புகழும்படைத்த

அப் பாக்தாத் நகரை மங்கோலியர் நிர்த்தூளியாக்கி விட்டார்கள். அதில் வாழ்ந்துவந்த 20 லட்சம் ஜனங்களில் பெரும்பாலோர் இறந்துவிட்டார்கள். கி. பி. 1258-இல் இது நிகழ்ந்தது.

பாக்தாத் இப்போது மீண்டும் செழித்து விளங்குகிறது. அது இராக் ராஜ்யத்தின் தலைநகர். ஆனால் அது முன்பிருந்த உயர்வுக்கும் இப்போதுள்ள நிலைக்கும் ஏணி வைத்துத்தான் பார்க்கவேண்டும். மங்கோலியர் அதைச் சர்வநாசம் செய்த பிறகு அது இன்னும் பழைய நிலைக்குத் தலை தூக்க முடியவில்லை.

## 51

# ஹர்ஷன் காலத்திலிருந்து கஜினி முகம்மது காலம் வரையில் வட இந்தியாவின் சரித்திரம்

ஜுன் 1, 1932.

அரேபியர் அல்லது சாரசெனியரின் கதையை விடுத்து வேறு நாடுகளைக் கவனிப்போம். அரேபியர் வலிமையுற்று, வெற்றி பெற்று உலகில் பரவிப், பின் க்ஷீணித்த காலத்தில் இந்தியாவிலும், சீனுவிலும், ஐரோப்பிய நாடுகளிலும் என்ன நிகழ்ந்து கொண்டிருந்தது? சிலவற்றை முன்பே கண்டோம். கி. பி. 732-இல் பிரான்சில் டூர்ஸ் என்னுமிடத்தில் அரேபியர் சார்லஸ் மார்டெல் என்பவனல் நடத்தப்பட்ட ஒரு கூட்டுப் படையால் முறியடிக்கப்பட்டதையும், அவர்கள் மத்திய ஆசியாவில் வெற்றி பெற்று, இந்தியாவில் சிந்து வரையில் வந்ததையும் முன்பே கண்டோம். முதலில் இந்தியாவை எடுத்துக் கொள்வோம்.

கன்னேசி மன்னனை ஹர்ஷவர்த்தனன் கி. பி. 648-இல் உயிர்நீத்தான். அவனுடைய மரணத்துக்குப்பின் வட இந்தியா அரசியல் துறையில் க்ஷீணித்து வந்தது நன்கு புலப்பட்டது. சில காலமாகவே இது நிகழ்ந்து வந்தது. ஹிந்து மதத்துக்கும் பௌத்த மதத்துக்கும் ஏற்பட்ட போராட்டம் இதற்கு உதவியாயிருந்தது. ஹர்ஷன் காலத்தில் வெளிப் பார்வைக்கு ஆரவாரம் மலிந்திருந்தது. ஆனல் அதுவும் சிறிது காலத்திற்குத்தான். அவனுக்குப்

பின் வட இந்தியாவில் பல சிறிய ராஜ்யங்கள்தோன்றின. அவைகள் சில காலம் பெருமையுடன் வாழ்ந்தும், சில காலம் ஒன்ருெடொன்று போரிட்டும் வந்தன. ஹர்ஷனுக்குப்பின் 300 ஆண்டுகளுக்கு மேற்பட்ட இக்காலத்திலுங் கூட நாட்டில் இலக்கியச் செல்வமும் கலைச் செல்வமும் வளர்ந்தோங்கினமை வியப்பைத் தருகிறது. இக்காலத்தில் பல அருமையான பொது மராமத்து வேலைகளும் செய்யப் பட்டன.

வடமொழியில் புகழ்பெற்ற கவி சிரேஷ்டர்களான பவபூதியும், ராஜசேகரரும், மற்றும் சிலரும் இக்காலத்தவர்கள்தான். அரசியலில் பெரியவர்களாக இல்லாவிட்டாலும் கல்வியையும் கலையையும் ஆதரித்து வளர்த்த காரணத்தால் பேர் விளங்கப்பெற்ற மன்னர்களும் பலர் இருந்தார்கள். அவர்களில் முக்கியமானவன் போஜ ராஜன். கதைகளில் கூறப்படுவதைப் போன்று, சகல நற்குணங்களும் பொருந்திய ஓர் அரசஞக அவன் பாவிக்கப்பட்டதோடு இன்றும் அவ்வாறே மதித்துப் போற்றப் படுகிருன்.

இவ்வளவு பிரகாசம் இருந்தும், வட இந்தியா க்ஷீணித்து வந்ததென்பதில் ஐயமில்லை. மீண்டும் தென் இந்தியா தலைமை வகித்து நடத்தத் தொடங்கியதோடு வட இந்தியாவைப் பல துறைகளிலும் அது விஞ்சி நின்றது. 44-ஆம் கடிதத்தில் அக்காலத்தில் தென்னிந்தியா இருந்த நிலைமையைப் பற்றிச் சிறிது கூறியிருக்கிறேன். சாளுக்கியர்களைப் பற்றியும், சோழ சாம்ராஜ்யத்தைப் பற்றியும், பல்லவர்களைப் பற்றியும், ராஷ்டிரகூடர்களைப் பற்றியும் கூறினேன். சங்கராச்சாரியரைப் பற்றியும், அவர் தமது சொற்ப வாழ்நாளில் தேசமெங்குமுள்ள பண்டிதர், பாமரர் ஆகிய எல்லோருடைய உள்ளத்தை

யும் கவர்ந்தது பற்றியும், இந்தியாவில் அநேகமாக பௌத்தத்திற்கு முடிவு தேடியதைப் பற்றியும் சொன்னேன். அவர் அவ்வேலையில் ஈடுபட்டிருக்கும்போதே இன்னொரு புதிய மதம் இந்தியாவின் வாயிற்படியில் நின்று கதவைத் தட்டுவதும், பிறகு அதுவே இங்குள்ள மதத்தோடு போரிட்டு வெல்வதும் விசித்திரமாகத் தோன்றுகிறது.

ஹர்ஷன் உயிரோடிருக்கும்போதே அரேபியர் இந்தியாவின் எல்லையை அடைந்துவிட்டனர். அவர்கள் அங்குச் சிறிதுகாலம் தங்கிப் பிறகு சிந்துவைக் கைப்பற்றிக் கொண்டார்கள். கி. பி. 710-இல் பதினேழு வயதுடைய முகம்மதுபின் காசிம் என்னும் அரேபியப் படைத் தலைவன் சிந்து நதிப் பள்ளத்தாக்கை மேற்குப் பஞ்சாபிலுள்ள மூல்தான் வரையில் ஜெயித்தான். இந்தியாவில் அரேபியரின் வெற்றிப் பரப்பு இவ்வளவு தான். ஆனால் அவர்கள் கஷ்டப்பட்டு முயன்றிருந்தால் இன்னும் அதிகமாக ஜெயித்திருக்கலாம். வட இந்தியா பலவீனப்பட்டிருந்தபடியால் அவர்கள் எளிதில் வெற்றி பெற்றிருக்கக்கூடும். ஆனால், அரேபியருக்கும் பக்கத்து நாடுகளை ஆண்ட அரசர்களுக்கும் சதா சண்டையும் சச்சரவும் இருந்துவந்த போதிலும், அரேபியர் அந்நாடுகளை வென்று கைப்பற்ற முயன்றதாகத் தெரியவில்லை. ஆகவே, அரேபியர் சிந்துநாட்டை ஜெயித்த காரணத்தால் அரசியல் துறையில் முக்கிய பலன் எதுவும் நிகழவில்லை என்பதைக் காண்கிறோம். இதற்குப்பின் பல நூற்றாண்டுகள் கழித்து முஸ்லீம்கள் இந்தியாவை ஜெயிக்கப் போகிறார்கள். ஆனால், அரேபியருக்கும் இந்தியருக்கும் ஏற்பட்ட தொடர்பினால் கலைத் துறையில் பெரும் பலன் விளைந்தது.

அரேபியர், தென்னாட்டை ஆண்ட அரசர்களுடன் முக்கியமாக ராஷ்டிரகூடர்களுடன் நட்பு பூண்டிருந்தார்

கள். பல அரேபியர் இந்தியாவின் மேற்குக் கரையில் தங்கிப் பல மசூதிகளைக் கட்டினார்கள். அரேபிய யாத்திரீகர்களும், வியாபாரிகளும் இந்தியாவின் பல பாகங்களுக்கும் சென்றனர். வடக்கே தக்ஷசீலத்தில் இருந்த சர்வ கலாசாலையில் கல்வி பயிலுவதற்காகப் பல அரேபிய மாணவர்கள் வந்தார்கள். அங்கு வைத்தியம் சிறப்பாகக் கற்பிக்கப்பட்டது. ஹாரூன் - ரஷீத் ஆண்ட காலத்தில் இந்தியாவில் கல்வி கற்றுத் தேர்ந்தவர்களுக்குப் பாக்தாத் நகரில் பெருமதிப்பு இருந்துவந்தது. வைத்தியசாலைகளை நிறுவவும், வைத்தியக் கலாசாலைகளை ஸ்தாபிக்கவும் இந்திய ஆயுர்வேதப் பண்டிதர்கள் பாக்தாதுக்குச் சென்றார்கள். வடமொழியிலுள்ள பல கணித நூல்களும் வான நூல்களும் அரபு மொழியில் மொழிபெயர்க்கப்பட்டன.

இவ்வாறாக, அரேபியர் பழைய இந்திய ஆரியரின் கலைப் பொக்கிஷத்திலிருந்து எவ்வளவோ எடுத்துக் கொண்டார்கள். பாரசீகத்தின் ஆரிய கலைப் பண்பினின்றும் அவர்கள் அதிகமாக எடுத்துக் கொண்டார்கள். கிரேக்கர்களின் கலை நாகரிகங்களிலிருந்தும் அவர்கள் சிறிது எடுத்துக் கொண்டார்கள். இளமையும் வலிமையும் ததும்பும் ஒரு புதிய ஜாதியாருக்கு ஏற்ப அவர்கள் தங்களைச் சுற்றியிருந்த பழைய கலை நாகரிகங்களை நன்கு பயன்படுத்திக் கொண்டதோடு, அவைகளிடமிருந்து தாங்கள் கிரகித்த சாரத்தை அடிப்படையாக வைத்துக் கொண்டு அதன்மீது தங்களுக்கே சொந்தமான ஒரு புதிய கலை நாகரிகத்தைச்—சாரசெனியக் கலை நாகரிகம்—சிருஷ்டித்தார்கள். மற்றக் கலை நாகரிகங்களோடு ஒப்பிட்டுப் பார்க்கும்போது சாரசெனியக் கலை நாகரிகத்துக்கு அற்பாயுள் என்றே சொல்ல வேண்டும். அதன் கால எல்லை குறுகியதாயிருந்தாலும் சிறப்புப்பொருந்தியதா யிருந்தது.

ஐரோப்பாவின் இடைக் காலத்தைப் பகைப் புலமாக வைத்துப் பார்க்குமிடத்து அது மிகவும் ஒளிவிட்டுப் பிரகாசிக்கிறது.

அரேபியர், இந்திய-ஆரிய, பாரசீக, கிரேக்கக் கலை நாகரிகங்களுடன் தங்களுக்கு ஏற்பட்ட தொடர்பினால் நன்மை அடைந்ததுபோல, இந்தியரும், பாரசீகரும், கிரேக்கரும் தங்களுக்கு அரேபியருடன் ஏற்பட்ட தொடர்பினால் அதிகப் பலன் அடையவில்லை என்பதைக் காண வியப்படைகிறோம். ஒருவேளை, அரேபியர் ஊக்கமும் வலியும் மிகுந்த ஒரு புதிய ஜாதியாராக இருந்தது இதற்குக் காரணமா யிருந்திருக்கலாம். மற்றவர்கள் மூப்படைந்து பழைய வழிகளிலேயே செல்வோராகவும், மாறுதலை விரும்பாதவர்களாகவும் இருந்தார்கள். ஒரு தனி மனிதனுக்கு வயதாய்விட்டால் அவனிடம் என்னென்ன குணங்கள் காணப்படுமோ அதே குணங்களை வயதான ஓர் இனம் அல்லது ஜாதியாரிடத்தும் காண்கிறோம். அவர்களுடைய வேகம் குறைகிறது; ஊக்கம் குன்றுகிறது; உடலும் மனமும் விறைத்துப் போகின்றன; பழமையை விடாப்பிடியாகப் பற்றிக் கொள்ளுகிறார்கள்; மாறுதல் என்றால் பயப்படுகிறார்கள்.

ஆகவே, அரேபியருடன் சில நூற்றாண்டுகளாக இருந்துவந்த தொடர்பினால் இந்தியா அதிகமாகப் பாதிக்கப்படவும் இல்லை, அதிகமாக மாறுதல் அடையவும் இல்லை. ஆனால், இந்த நீண்ட காலத்தில் இஸ்லாம் என்னும் புதிய மதத்தைப்பற்றி இந்தியா சிறிது தெரிந்து கொண்டிருக்க வேண்டும். முஸ்லீம் அரேபியர் வருவதும் போவதுமாக இருந்தார்கள்; மசூதிகள் கட்டினார்கள்; தங்கள் மதத்தைப் போதித்தார்கள்; சில சமயம் பிறரைத் தங்கள் மதத்துக்கும் மாற்றினார்கள். அந்நாளில் இதற்கு

யாதொரு ஆட்சேபனையும் இருந்ததாகத் தெரியவில்லை. ஹிந்து மதத்துக்கும் இஸ்லாமுக்கும் தகராறோ பூசலோ நிகழவில்லை. இது நமக்கு ஆச்சரியத்தைத் தருகிறது. ஏனெனில் பிற்காலத்தில் இரண்டுக்கும் தகராறும் பூசலும் ஏற்பட்டன. பதினோராம் நூற்றாண்டில், இந்தியாவை ஜெயிக்கும் நோக்கத்துடன் இஸ்லாம் கையில் வாளேந்திவந்த காலத்தில்தான் அதற்கு எதிர்ப்பும் பகையும் ஏற்பட்டன. பழைய சகிப்புத்தன்மை ஒழிந்து துவேஷமும் விரோதமும் விளைந்தன.

இவ்வாறு நெருப்பைக் கக்கிக்கொண்டு கையில் வாளேந்தி வந்தவன் கஜினி முகம்மது. கஜினி என்பது இப்போது ஆப்கானிஸ்தானத்தில் ஒரு சிறு பட்டணம். பத்தாவது நூற்றாண்டில் இந்தக் கஜினி என்னும் ஊரைச் சுற்றி ஒரு ராஜ்யம் தோன்றி வளர்ந்தது. பெயரளவில் மத்திய ஆசிய ராஜ்யங்கள் பாக்தாதிலுள்ள கலீபாவின் கீழ் இருந்தன. ஆனால், நான் முன்பு சொன்னதுபோல் ஹாரூன் - ரஷீதின் மரணத்துக்குப் பிறகு கலீபாவின் வலி குறையத் தலைப்பட்டது. அவருடைய சாம்ராஜ்யம் சிதறவே அதில் பல சுதந்தர நாடுகள் தோன்றின. நாம் பேசுவது இக்காலத்தைப் பற்றித்தான். சுமார் கி. பி. 975-ஆம் ஆண்டில் சுபுக்தகின் என்னும் பேருள்ள துருக்கிய அடிமை ஒருவன் கஜினி, கண்டஹார் இவற்றைச் சுற்றிலும் ஒரு ராஜ்யத்தைத் தனக்கென்று ஏற்படுத்திக் கொண்டான். அவன் கொள்ளையின்பொருட்டு இந்தியா மீது வந்தான். அக்காலத்தில் ராஜா ஜெயபாலன் லாகூரை ஆண்டுவந்தான். அவன் மிகத் துணிவுடன் சுபுக்தகினுக்கு விரோதமாகப் படையெடுத்துச் சென்று காபூல் பள்ளத்தாக்கில் தோல்வியுற்றான்.

சுபுக்தகினுக்குப் பிறகு அவன் பிள்ளை முகம்மது பட்டத்துக்கு வந்தான். அவன் சிறந்த தளகர்த்தனாகவும்

குதிரைப் படையை நடத்துவதில் வல்லவனாகவும் இருந்தான். வருஷா வருஷம் அவன் இந்தியாமீது படையெடுத்துவந்து ஏராளமான பொருளைக் கொள்ளையடித்துச் சென்றான். அவனால் கொல்லப்பட்டவர்களும் சிறை பிடிக்கப்பட்டவர்களும் அநேகர். அவன் பதினேழு முறை படையெடுத்து வந்தான். காஷ்மீரத்தின்மீது சென்ற அவ்வொரு தடவைதான் அவன் தோல்வியுற்றான். மற்றெல்லாவற்றிலும் அவன் வெற்றியே பெற்றான். அவன் பேரைச் சொன்னாலே வட இந்தியாவில் எல்லாருக்கும் நடுக்கம்தான். தெற்கே அவன் பாடலிபுத்திரம், (வட) மதுரை, சோமநாதபுரம் வரையில் சென்றான். தானேஸ்வரத்திலிருந்து அவன் அளவற்ற திரவியத்துடன் 2,00,000 பேரையும் சிறைப்படுத்திக் கொண்டுபோனான் என்று கூறப்படுகிறது. ஆனால் அவனுக்கு மற்றெல்லா இடங்களைக் காட்டிலும் சோமநாதபுரத்தில்தான் அதிக தனம் கிடைத்தது. சோமநாதபுரத்தில் இருந்த மிகப் பெரிய கோயிலில் பல நூற்றாண்டுகளாகப் பக்தர்களால் அளிக்கப்பட்ட செல்வம் குவிந்து கிடந்தது. கஜினி முகம்மது அங்குச் சென்ற காலத்தில் ஆயிரக்கணக்கான ஜனங்கள் கோயிலுக்குள் சென்று ஒளிந்துகொண்டார்களாம். ஏதாவது அற்புதம் நிகழும், தாங்கள் வழிபடும் தெய்வம் தங்களைக் காப்பாற்றும் என்று அவர்கள் நம்பினார்கள். ஆனால், பக்தர்களின் கற்பனையிலன்றி மக்கள் உலகில் அற்புதம் நிகழ்வது அபூர்வமாகத்தானே இருக்கிறது! ஆகவே, அற்புதம் ஒன்றும் நிகழவில்லை. முகம்மது கோயிலை இடித்துப் பாழாக்கினான். அங்குள்ள பொருளைச் சூறையாடினான். நிகழாத அற்புதம் நிகழும் என்று நம்பியிருந்த 50,000 பேர் அவனால் கொல்லப்பட்டனர்.

கி.பி. 1030-இல் முகம்மது இறந்தான். அந்தச் சமயம்

பஞ்சாப் முழுவதும் சிந்துவும் அவன் ஆட்சியின் கீழ் இருந்தன. இந்தியாவில் இஸ்லாம் மார்க்கத்தைப் பரப்ப வந்த மகான் என்று அவனைப் பலர் எண்ணுகிறார்கள். அவனை முஸ்லீம்கள் போற்றுகிறார்கள்; ஹிந்துக்கள் வெறுக்கிறார்கள். உண்மையில் மதத்துக்கும் அவனுக்கும் சம்பந்தமே இல்லை. அவன் முகம்மதியன் என்பது வாஸ்தவம். ஆனால், எல்லாரையும்போல், எல்லாவற்றிற்கும் மேலாக அவன் ஒரு சிறந்த போர்வீரன். போர் வீரர்களின் வழக்கத்தை அனுசரித்து அவன் இந்தியாவை ஜெயிப்பதற்காகவும், கொள்ளையிடுவதற்காகவும் இங்கே வந்தான். அவனுடைய மதம் எதுவாயினும் அவன் இதையே செய்திருப்பான். சிந்துவில் அரசாண்ட முஸ்லீம் மன்னர்களையும் அவன் மிரட்டினான். அவர்கள் அவனுக்கு அடங்கிக் கப்பம் கட்டுவதாக ஒப்புக்கொண்ட பிறகே அவர்களை ஒன்றும் செய்யாமல் விட்டான் என்பது இங்கே கவனிக்கத்தக்கது. அவன் பாக்தாதிலுள்ள கலீபாவிடமிருந்து ஸாமர்கந்த் நகரைக் கேட்டான். கொடுக்காவிட்டால் கொன்றுவிடுவதாகவும் பயமுறுத்தினான். ஆகவே, முகம்மது ஒரு ஜெயசீலனான போர்வீரன் என்பதற்கு மேலாக அவனை மதிப்பிடும் பொதுவான தவறை நாமும் இழைக்கக்கூடாது.

முகம்மது இந்தியாவிலிருந்து ஏராளமான சிற்பிகளையும் கட்டிட வேலைக்காரர்களையும் கஜினிக்கு அழைத்துச் சென்று அங்கே ஓர் அருமையான மசூதி கட்டி அதைத் 'தேவலோக மணமகள்' என்று அழைத்தான். அவனுக்குத் தோட்டங்களில் பிரியம் அதிகம்.

முகம்மது எழுதியிருப்பதிலிருந்து (வட) மதுரை அக்காலத்தில் எவ்வளவு சிறந்த நகரமாக இருந்தது என்று தெரிய வருகிறது. கஜினியிலுள்ள தன் கவர்னருக்கு அவன் பின்வருமாறு எழுதுகிறான் :—

"இங்கே (மதுரையில்) மார்க்கத்தில் திடம் கொண்ட விசுவாசிகளைப்போல் திடமான ஆயிரம் கட்டிடங்கள் இருக்கின்றன. கோடிக்கணக்கான திரவியத்தைச் செல வழித்த பின்பே இந்நகர் இப்போதுள்ள உன்னத நிலையை எய்தியிருக்க வேண்டும். 200 ஆண்டுகளுக்குக் குறைந்த காலத்திற்குள் யாரும் இத்தகைய இன்னொரு நகரத்தை நிருமாணிப்பது அரிது."

முகம்மதுவின் இம்மதுரை நகர் வர்ணனை பிர்தாசி என்பவரால் நமக்கு அளிக்கப்பட்டிருக்கிறது. பிர்தாசி என்பவர் முகம்மது காலத்தில் வாழ்ந்த ஒரு பெரிய பாரசீகக் கவி. அவரைப் பற்றியும் அவர் எழுதிய முக்கிய கிரந்தமான ஷாநாமாவைப் பற்றியும் சென்ற வருஷம் எழுதிய கடிதங்களுள் ஒன்றில் சொல்லியிருப்ப தாக ஞாபகம். ஒரு பாட்டுக்கு ஒரு தீனர் (தங்க நாணயம்) கொடுப்பதாகச் சொல்லி முகம்மது கேட்டுக்கொண்டதன் பேரில் ஷாநாமா எழுதப்பட்டதென்று ஒரு கதை வழங்கு கிறது. ஆனால், பிர்தாசிக்குச் சுருங்கச் சொல்வதில் நம்பிக்கை இல்லைபோலும்! அவர் ஆயிரக்கணக்கில் பாக்களை எழுதி முகம்மதுவுக்குக் காட்டியபோது அவன் அவரைப் புகழ்ந்தான். ஆனால் தங்க நாணயம் கொடுப்ப தாக ஏன் அவசரப்பட்டு வாக்களித்தோம் என்று அவன் நினைக்க நேர்ந்தது. தான் வாக்களித்ததற்குக் குறைவாக ஏதோ கொடுக்க அவன் முன்வந்தான். புலவருக்கோ கோபம். அவர் ஏதும் பெற்றுக்கொள்ள மறுத்து விட்டார்.

ஹர்ஷன் காலத்திலிருந்து முகம்மது காலம் வரையில் நாம் ஒரே தாண்டாகத் தாண்டிவிட்டோம். 350 வருஷத்து இந்தியச் சரித்திரத்தை மூன்று நான்கு பாரா வில் பார்த்துவிட்டோம். இந்நீண்ட காலத்தைப்பற்றி

இன்னும் எவ்வளவோ ரசமான விஷயங்கள் சொல்லக் கூடும். ஆனால் அதைப்பற்றி எனக்குத் தெரியாது. ஆகவே, வாயை மூடிக் கொண்டிருப்பதே கௌரவம். வட இந்தியாவில் அரசாண்ட பல மன்னர்களைப்பற்றி நான் உனக்குச் சொல்லக்கூடும். அவர்கள் ஒருவரோ டொருவர் போரிட்டுக் கொண்டும் சில சமயங்களில் பரந்த ராஜ்யங்களைக்கூட ஸ்தாபித்துக்கொண்டும் இருந் தார்கள். அவைகளில் பாஞ்சால ராஜ்யம் ஒன்று. இன்னும், கன்னோசிமா நகருக்கு ஏற்பட்ட கஷ்டங்களைப் பற்றியும் சொல்லலாம். முதலில் காஷ்மீர மன்னர்கள் அதைத் தாக்கிக் கைப்பற்றினார்கள். பிறகு அது வங்காள மன்னனின் வசமாயிற்று. அதற்குப் பிறகு தெற்கி லிருந்துவந்த ராஷ்டிரகூடர்கள் அதைப் பிடித்துக் கொண்டார்கள். இவற்றையெல்லாம் அடுக்கிக்கொண்டே போனால் உனக்கு வீண் குழப்பம்தான் ஏற்படும்.

இப்போது, இந்தியச் சரித்திரத்தின் ஒரு பெரிய அத்தியாயம் முடிந்து புதிய அத்தியாயம் ஆரம்பமாகிறது. சரித்திரத்தைத் தனித்தனியான பாகங்களாகப் பிரிப்பது கடினம்; தவறுங்கூட. சரித்திரம் நீரோடை போன்றது. அது போய்க்கொண்டே இருக்கிறது. ஆயினும், அது மாறுவதையும், அதன் அம்சம் தொடங்குவதையும் நாம் காணலாம் இத்தகைய மாறுதல்கள் திடீரென்று நிகழ் வதில்லை. ஒன்று மற்றொன்றின்மீது படர்ந்து கலந்து விடுகிறது. ஆகவே, சரித்திரம் என்னும் இம் முடிவற்ற நாடகத்திலே இந்தியாவைப் பொறுத்தவரையில் அதன் ஓர் அங்கம் முடிவடைகிறது. 'ஹிந்து காலம்' என்று கூறப்படும் காலப்பகுதி சிறிது சிறிதாக இறுதியுறுகிறது. ஆயிரக்கணக்கான ஆண்டுகளாகத் தழைத்தோங்கிய இந்திய - ஆரிய நாகரிகம் புதிதாக வந்த ஒன்றோடு போரிட வேண்டியிருக்கிறது. ஆனால், இந்த மாறுதல் சீக்கிரத்தில்

திடீரென்று நிகழ்ந்துவிட வில்லை என்பதை நினைவில் வைக்கவேண்டும். மெல்ல மெல்ல ஆகிவந்த விஷயம் இது. வடக்கே, முகம்மது இஸ்லாம் மார்க்கத்தைத் தன்னுடன் கொணர்ந்தார். ஆனால், இஸ்லாமின் வெற்றி தென் இந்தியாவை வெகுகாலம் வரையில் பாதிக்க வில்லை. 200 ஆண்டுகள் வரையில் வங்காளம்கூட அதனால் பாதிக்கப்படவில்லை. பிற்காலத்தில், ராஜபுத்திர வகுப்புகளின் புகலிடமாகவும், அவர்களுடைய அழியாத வீரத்தின் அடையாளமாகவும் புகழ் பெற்று விளங்கப்போகும் சித்தூரை நாம் வட இந்தியாவில் காண்கிறோம். ஆனால் முஸ்லீம் வெற்றி அலையானது இரக்கமின்றிப் பரவிக் கொண்டே வந்தது. இங்கும் அங்கும் காணப்பட்ட தனித்த வீரம் அதைத் தடுத்து நிறுத்தக் கூடவில்லை. பழைய இந்திய-ஆரிய இந்தியா தாழ்வை நோக்கி இருந்த தென்பதில் சந்தேகமே இல்லை.

வெளியிலிருந்து வந்து தன்னை ஜெயித்து வரும் புது நாகரிகத்தைத் தடுத்து நிறுத்த முடியாத காரணத்தால் இந்திய - ஆரிய நாகரிகம் தன்னைப் பாதுகாத்துக் கொள்ளும் வழியைப் பார்க்க ஆரம்பித்தது. தன்னைக் காக்கும் முயற்சியில் அது, ஆமையைப்போல், ஓர் ஓட்டுக்குள் தன்னை உள்ளே இழுத்துக் கொண்டது. அது வரையில் ஜாதி முறை வளைந்து கொடுக்கக் கூடியதாயிருந்தது. இப்போது அது மாற்ற முடியாததாகவும் கடுமையானதாகவும் செய்யப்பட்டது. பெண்களுடைய சுதந்தரம் குறைக்கப்பட்டது. கிராமப் பஞ்சாயத்துகளில் ஏற்பட்ட மாறுதலும் நன்மை பயப்பதாக இல்லை. தன்னைவிடப் பலம் வாய்ந்த ஒரு கூட்டத்தாரின் முன்பு அது தலைவணங்கிப்போன சமயத்திலும்கூட அது அவர்களைத் தன் வழிக்குக் கொண்டுவரவும் தன் மயமாக்கவும் முயற்சித்தது. தனக்கு அந்நியமானவற்றை உட்கொண்டு

அவற்றைத் தன்னுடன் இயைத்துக் கொள்ள அதற்குரிய சக்திதான் என்னே! தன்னை ஜெயிக்க வந்தவர்களைக் கலைத்துறையில் அது ஓரளவு ஜெயித்தும் விட்டது.

போராட்டம் இந்திய-ஆரிய நாகரிகத்துக்கும் நாகரிக முதிர்ச்சியுள்ள அரேபியருக்கும் அல்ல என்பதை நீ நினைவில் வைக்க வேண்டும். நாகரிகமுற்ற ஆனால் க்ஷீண தசையிலிருக்கும் இந்தியாவுக்கும், நாகரிகமற்ற சமீபத்தில் இஸ்லாம் மதத்தைத் தழுவிய மத்திய ஆசியாவைச் சேர்ந்த நாடோடி ஜாதியாருக்கும் இடையே இப்போது போராட்டம். துரதிருஷ்டவசமாக, இந்தியா இஸ்லாம் மார்க்கத்தோடு அநாகரிகத்தையும், முகம்மதுவின் கொடுமைகளையும் சம்பந்தப் படுத்திப் பார்க்க ஒன்றுக்கொன்று தொடர்புள்ளதாக நோக்க ஆரம்பித்தது. அதனால் கசப்பு அதிகரித்தது.

# 52

## ஐரோப்பிய நாடுகள் உருப்பெறுகின்றன

ஜூன் 3, 1932.

குழந்தாய், இப்போது நாம் சற்று ஐரோப்பாவுக்குப் போய்விட்டு வரலாமா? நாம் சென்ற தடவை அங்குச் சென்றிருந்தபோது அது ஈன நிலையில் இருந்தது. ரோமா புரி வீழ்ச்சி மேற்கு ஐரோப்பாவின் வீழ்ச்சியே. கிழக்கு ஐரோப்பாவில், கான்ஸ்டாண்டி நோபிளுக்கு உட்பட்ட பாகம் தவிர, இதர பாகங்களின் நிலை சீர்கேடுற்றிருந்தது. அட்டிலா என்னும் ஹூணன் ஐரோப்பாக் கண்டத்தில் பெரும் பாகத்தை அழித்துப் பாழ் படுத்திவிட்டான். ஆனால், கிழக்கு ரோம சாம்ராஜ்யம் க்ஷீண தசையில் இருந்தாலும், இவற்றை யெல்லாம் சமாளித்துக்கொண்டு நின்றதோடு அவ்வப்போது தன் சக்தியையும் காட்டி வந்தது.

மேற்கே, ரோமாபுரி வீழ்ச்சி உற்றதால் எல்லாம் கலகலத்துப் போய்விட்டன. இதற்குப் பின்பு எல்லாம் புது மாதிரியாக உருப்பெற ஆரம்பித்தன. எல்லாம் ஒரு நிலைப்படுவதற்கு நீண்டகாலம் பிடித்தது. இந்தப் புதிய அமைப்பை நாம் அதன் வளரும் பருவத்திலேயே கண்டு கொள்ளலாம். கிறிஸ்தவ மதம் பரவுகிறது. கிறிஸ்தவ சாதுக்கள், மகாத்மாக்கள் இவர்களின் பக்தியும் போரில் வல்லவர்களான கிறிஸ்தவ அரசர்களின் கத்தியும் அதற்குத் துணை புரிகின்றன. புதிய ராஜ்யங்கள் தோன்றுகின்றன. பிரான்சிலும் பெல்ஜியத்திலும் ஜெர்மனியின் ஒரு பாகத்திலும் பிராங்கர்கள் (இவர்களும் தற்காலத்துப்

பிரெஞ்சு மக்களும் ஒன்று என்று இன்றும் சொல்வதற்கில்லை) ஒரு ராஜ்யம் அமைத்துக் கொள்ளுகிறார்கள். அவர்களுடைய தலைவனான கிளோவிஸ் (Clovis) கி. பி. 481 முதல் 511 வரை ஆண்டான். இவனுடைய பாட்டனின் பெயரை ஒட்டி இந்த வம்சத்துக்கு மெரோவிஞ்சியன் (Merovingian line) வம்சம் என்று பெயர். ஆனால் விரைவிலேயே அதிகாரம் இம்மன்னர்கள் கையிலிருந்து அவர்களுடைய தர்பாரிலேயே அரண்மனை மேயர் என்னும் (Mayor of the Palace) பதவியை வகித்து வந்தவர்களின் கைக்குப் போய் விட்டது. மேயர்கள் சர்வசக்தி வாய்ந்தவர்களாகி விட்டார்கள். அரசர்கள் அவர்கள் கையில் வெறும் பொம்மைகளாக இருந்தார்கள். மேயர் பதவியும் தலைமுறை தத்துவமாக வரத் தலைப்பட்டது.

இந்த மேயர்களில் ஒருவனான சார்லஸ் மார்டெல் என்பவன் தான் கி. பி 732-இல் பிரான்சில் டூர்ஸ் என்னுமிடத்தில் நடந்த போரில் சாரசெனியரைப் புறமுதுகு கண்டான். இதனால் சாரசெனியரின் வெற்றி தடைப்பட்டது. அவன் ஐரோப்பாவைக் காப்பாற்றியதாகவே கிறிஸ்தவர்கள் எண்ணுகிறார்கள். இதனால் அவன் பேரும் புகழும் பெற்றான். கிறிஸ்தவ உலகின் எதிரியை வெல்லும் தீரனாக அவன் மதிக்கப்பட்டான். அந்தச் சமயம் ரோமாபுரியின் போப்பாண்டவர்களுக்கும் கான்ஸ்டாண்டி நோபிள் சக்கரவர்த்திக்கும் நேசப்பான்மை இல்லை. அவர்கள் சார்லஸ் மார்டெலின் உதவியை நாடினார்கள். அவனுடைய மகன் பெபின் (Pepin) பொம்மை அரசனைத் தொலைத்து விட்டுத் தானே அரசனாக விரும்பினான். இதற்குப் போப்பாண்டவர் சந்தோஷத்துடன் சம்மதித்தார் என்பதைச் சொல்லவும் வேண்டுமோ?

பெபினின் மகன் சார்லமேன். போப்பாண்டவருக்கு மீண்டும் கஷ்டம் ஏற்பட்டது. அவர் சார்லமேனை உதவிக்குக் கூப்பிட்டார். அவன் வந்து அவருடைய பகைவரைத் துரத்தினன். கி. பி. 800-ஆம்ஆண்டில் தேவாலயத்தில் போப்பாண்டவர் சார்லமேனுக்கு ரோம சக்கரவர்த்தியாக முடி சூட்டினர். அந்நாளிலிருந்து பரிசுத்த ரோம சாம்ராஜ்யம் தொடங்குகிறது. இதைப்பற்றி முன்பே எழுதி யிருக்கிறேன்.

இச்சாம்ராஜ்யமே விசித்திரமானது. இதன் பிற்காலச் சரித்திரம் இன்னும் விசித்திரமானது. இது சிறிது சிறிதாக மறைந்து விடுகிறது. *ஆனல், இது வருங்காலத்தில் நடக்க இருக்கும் விஷயம்.

இப் பரிசுத்த ரோம சாம்ராஜ்யம் பழைய மேற்கு ரோம சாம்ராஜ்யத்தின் தொடர்ச்சி அல்ல. இது அதனின்றும் மாறுபட்டது. உலகத்திலேயே இது ஒன்றுதான் சாம்ராஜ்யம். சக்கரவர்த்தி, போப்பாண்டவர் நீங்கலாக, ஏனையோர் யாவருக்கும் தலைவன் என்பது இதன் சித்தாந்தம். சக்கரவர்த்திக்கும் போப்பாண்டவருக்கும் இடையே 'யார் பெரியவர்' என்பது பற்றிப் பல நூற்றாண்டுகளாகப் போட்டி இருந்து வந்தது. ஆனல், இதுவும் பின்னல் நிகழ இருக்கும் விஷயம். இந்தப் புதிய சாம்ராஜ்யம் பழைய, ஒப்புயர்வற்ற ரோம சாம்ராஜ்யத்தின் புனருத்தாரணம் என்று கருதப்பட்டதுதான் இதிலுள்ள விசேஷம். அத்துடன் கிறிஸ்தவ மதம், கிறிஸ்தவ உலகம் என்னும் புதிய கொள்கையும் சேர்க்கப்பட்டது. அதனல்தான் இச் சாம்ராஜ்யம் 'பரிசுத்த'மாய் விட்டது.

---

* 'ஆச்சரிய உலகில் ஆலிஸ்' என்னும் கதையில் எப்படி செஷையர் பூனையின் உடல் கொஞ்சம் கொஞ்சமாக மறைந்து அதன் புன்சிரிப்பு மாத்திரம் நின்றதோ அதுபோல.

இம் மண்ணுலகில் கடவுளின் பிரதிநிதியாக உள்ளவர் சக்கரவர்த்தி என்று கருதப்பட்டது. போப்பாண்டவரும் அவ்வாறே கருதப்பட்டார். ஒருவர் லௌகிக விஷயங்களையும், மற்றவர் பாரமார்த்திக விஷயங்களையும் கவனித்து வந்தனர். அந்த ஏற்பாட்டின் மூலக்கருத்து என்னவோ இதுதான். இதிலிருந்துதான் ஐரோப்பாவில் 'மன்னரின் தெய்விக உரிமை'க் கொள்கை எழுந்தது என்று நினைக்க வேண்டியிருக்கிறது. சக்கரவர்த்தி 'மதக்காவலர்' என்று அழைக்கப்படுகிறார்.

இந்தச் சக்கரவர்த்தியோடு 'விசுவாசிகளின் தலைவர்', (Commander of the Faithful) என்று அழைக்கப்பட்ட கலீபாவை ஒப்பிட்டுப் பார். ஆரம்பத்தில் கலீபாவின் ஸ்தானம், சக்கரவர்த்தி போப்பாண்டவர் இவ்விரு ஸ்தானங்களும் சேர்ந்த ஒன்றாக இருந்தது. பின்பு, கலீபா வெறும் அடையாளமாக ஆகிவிட்டார்.

மேற்கே புதிதாக முளைத்த இப் பரிசுத்த ரோம சாம்ராஜ்யத்தை கான்ஸ்டாண்டி நோபிள் சக்கரவர்த்திகள் ஒப்புக் கொள்ள வில்லை. சார்லமேனுக்கு மகுடாபிஷேகம் நடந்த சமயத்தில் ஐரினி (Irene) என்னும் மாது கான்ஸ்டாண்டி நோபிளில் சக்கரவர்த்தினியாக இருந்தாள். தான் பட்டத்துக்கு வருவதற்காகத் தன் மகனைக் கொன்றவள் அந்தப் புண்ணியவதி. அவள் காலத்தில் ஒன்றும் சரியாக இல்லை. போப்பாண்டவர் கான்ஸ்டாண்டிநோபிளின் தொடர்பை அறுத்துக்கொண்டு சார்லமேனுக்கு முடி சூட்டியதற்கு இது ஒரு காரணம்.

சார்லமேன் இப்போது மேலைக் கிறிஸ்தவ உலகின் தலைவன். உலகில் கடவுளின் பிரதிநிதி, ஒரு பரிசுத்த சாம்ராஜ்யத்தின் சக்கரவர்த்தி. இந்தச் சொற்களிலே எத்தனை ஆர்ப்பாட்டம் நிறைந்திருக்கிறது! ஆனால், இவை மக்களை மயக்கவும் ஏமாற்றவும் பயன்படுகின்றன.

அதிகாரத்தை வகிப்போர் கடவுளையும் மதத்தையும் தங்களுக்குக் கையாளாகக் கொண்டு மற்றவர்களை மடையர்களாக்கவும் தங்களுடைய அதிகாரத்தை வளர்க்கவும் முயன்று வந்திருக்கின்றனர். ராஜா, சக்கரவர்த்தி, மதாசாரியன் என்றால் சாதாரண மனிதன் வாயைப் பிளக்கிறான். அவர்கள் அவன் கண்ணில் தெய்வங்களாகவே தென்படுகிறார்கள். அவர்கள் எங்கே, அவன் எங்கே! அவர்களைப் பற்றி நினைக்கும்போதே அவனுக்கு அச்சம் தோன்றுகிறது. ராஜ சமூகத்திலும் அரண்மனைகளிலும் அமுலில் இருக்கும் விரிவான சட்ட திட்டங்களையும் சம்பிரதாய முறைகளையும், தெய்வ சந்நிதியிலும் கோயில்களிலும் அனுஷ்டிக்கப்படும் விரிவான பூஜா விதிகளையும் ஒப்பிட்டுப் பார்த்தால் இவ்வுண்மை புலனாகும். இரண்டு இடங்களிலும் தலைவணங்குவதையும், முழந்தாள்படியிடுவதையும், சாஷ்டாங்கமாகத் தெண்டனிடுவதையும் பார்க்கிறோம். குழந்தைப் பருவத்திலிருந்தே அதிகார பீடத்தைப் பல உருவங்களில் வணங்குவதற்கு நாம் கற்றுக் கொடுக்கப்படுகிறோம். இது அச்சத்துக்குச் செய்யப்படும் சேவை; அன்புக்கு அல்ல.

பாக்தாதை ஆண்ட ஹாரூன் - ரஷீதும் சார்லமேனும் ஒரே காலத்தவர்கள். இருவருக்கும் கடிதப் போக்குவரத்துகூட நடந்தது. இருவரும் சேர்ந்து கொண்டு கிழக்கு ரோம சாம்ராஜ்யத்தையும் ஸ்பெயினில் உள்ள சாரசெனியரையும் எதிர்க்க வேண்டுமென்று சார்லமேன் எழுதியதாகத் தெரிகிறது. இந்த யோசனையின்படி ஒன்றும் நடவாவிட்டாலும் அரசர்கள், அரசியல் வாதிகள் இவர்களுடைய மனதை உள்ளபடி அறிவதற்கு இது ஒரு நல்ல சாதனமாயிருக்கிறது. கிறிஸ்தவ உலகின் தலைவன், 'பரிசுத்த' சக்கரவர்த்தி, ஒரு கிறிஸ்தவ ராஜ்யத்துக்கும் ஓர் அரேபிய ராஜ்யத்துக்கும் விரோதமாகப்

பாக்தாதிலுள்ள கலீபாவுடன் சேர்ந்து கொள்வதென்ருல், நீயே அதைச் சற்று யோசித்துப் பார். ஸ்பெயினில் இருந்த சாரசெனியர் பாக்தாதை ஆண்ட அப்பாசீது கலீபாக்களுக்கு அடங்கி நடக்க மறுத்துவிட்டார்கள் என்பது உனக்கு நினைவிருக்கலாம். அவர்கள் சுதந்தர மாக இருந்து வந்தார்கள். அதனுல் கலீபாவுக்கு அவர்கள் மீது கோபம். ஆனுல், இரு நாடுகளும் வெகு தூரத்தில் இருந்தபடியால் போர் மூளவில்லை. கான்ஸ்டாண்டி நோபிளை ஆண்டவர்களுக்கும் சார்லமேனுக்கும்கூட விரோதம். இங்கும் இரு நாடுகளுக்கிடை யிருந்த தொலேவே இருவரையும் கைகலக்க ஒட்டாமல் செய்தது. ஆயினும் ஒரு கிறிஸ்தவ நாடும் ஓர் அரேபிய நாடும் சேர்ந்து கொண்டு இன்னெரு கிறிஸ்தவ நாட்டையும் அரேபிய நாட்டையும் தாக்க வேண்டும் என்று யோசனை கூறப்பட்டது. உண்மையில், அரசர்களுடைய அந்தரங்க நோக்கங்களை ஆராய்ந்து பார்த்தால் அவை நாட்டைக் கவர் வதும் செல்வத்தைப் பெருக்குவதுமாக இருக்குமே யொழிய மதாபிவிருத்தியைப் பற்றிய சிந்தனை அவர் களுக்கு லவலேசமும் இல்லை என்பது தெரியவரும். ஆனுல் அவர்கள் தங்களுடைய நோக்கத்தை நிறைவேற்றுவதற்கு மதப் போர்வையை அணிந்து கொள்வார்கள். எங்கும் இப்படித்தான் இருந்து வந்திருக்கிறது. இந்தியாவுக்குள் முகம்மது, மதத்தின் பேரைச் சொல்லிக்கொண்டு நுழைந் ததைப் பார்த்தோம். அதனுல் அவனுக்கு நல்ல லாபம் கிடைத்தது. மதத்தின் பேரால் போடப்படும் கூச்சல் பெரும்பாலும் லாபகரமாகவே இருந்து வந்திருக்கிறது.

மக்களின் மனேபாவம் காலத்துக்குக் காலம் மாறு கிறது. ஆகவே, நெடுங்காலத்துக்கு முன் வாழ்ந்தவர் களைப்பற்றி நாம் ஒரு முடிவுக்கு வருவது சிரமமான காரியம். இதை நாம் நினைவில் வைக்க வேண்டும். இன்று

நமக்குச் சகஜமாகத் தோன்றும் விஷயங்களில் பல அக்காலத்தவருக்கு ஆச்சரியத்தைக் கொடுத்திருக்கும். அவர்களுடைய மனோபலமும் பழக்க வழக்கங்களும் நமக்கு ஆச்சரியத்தைக் கொடுப்பதுபோல. 'பரிசுத்த சாம்ராஜ்யம்' என்றும், அரசர் கடவுளின் பிரதிநிதி என்றும் போப்பாண்டவர் கிறிஸ்துவின் பிரதிநிதி என்றும் வாயினால் உயர்ந்த விஷயங்கள் பேசப்பட்டதே ஒழிய, மேற்கு சாம்ராஜ்யத்தின் நிலை மிகவும் மோசமாயிருந்தது. சார்லமேனுக்குப் பிறகு இதாலியும் ரோமாபுரியும் இகழ் நிலை எய்தின. அவனுக்குப் பின் ஆண்டவர்களைக் கண்டால் நமக்கு வெறுப்பு உண்டாகிறது. அவர்கள் போப்பாண்டவர்களைக்கூட ஆக்கியும் அழித்தும் வந்தார்கள்.

ரோமாபுரியின் வீழ்ச்சிக்குப் பிறகு மேற்கு ஐரோப்பாவில் ஒருவித ஒழுங்கும் வரையறையும் இல்லாது போயின. மீண்டும் சாம்ராஜ்யத்தை உயிர்ப்பித்தால் அந்நிலை சீர்திருந்தும் என்று பலர் நினைக்கலானார்கள். மேலும், கௌரவத்தை உத்தேசித்தும் ஒரு சக்கரவர்த்தி இருக்க வேண்டியது அவசியமாயிருந்தது. சக்கரவர்த்தி என்னும் பெயர் கிறிஸ்தவர்களுக்குள் வழக்கொழிந்து போய்விட்டால் பிற மதத்தவர்கள் தங்களைக் கேவலமாக எண்ணி விடுவார்கள் என்பதற்காகச் சார்லமேன், சக்கரவர்த்தி ஆக்கப்பட்டான் என்று ஒருவர் எழுதுகிறார்.

சார்லமேனின் சாம்ராஜ்யத்தில் பிரான்சு, பெல்ஜியம், ஹாலந்து, ஸ்விட்சர்லாந்து, ஜெர்மனியில் பாதி, இதாலியில் பாதி ஆகிய இவ்வளவும் அடங்கி இருந்தன. அதற்குத் தென்மேற்கில் ஸ்பெயின் அரேபியரின் கீழ் இருந்தது. வடகிழக்கில் ஸ்லாவ் ஜாதியாரும் பிறரும் இருந்தனர்; வடக்கில் டேனியரும் வட நாட்டவர் அல்லது நார்ஸ் மக்கள் எனப்படுவோரும் இருந்தனர்; தென் கிழக்கில்

பல்கேரியரும் செர்பியரும் இருந்தனர். அவர்களுக்கு அப்பால் கான்ஸ்டாண்டி நோபிளைத் தலைநகராக உடைய கிழக்கு ரோம சாம்ராஜ்யம் இருந்தது.

கி. பி. 814-இல் சார்லமேன் மாண்டான். அவனுடைய மரணத்துக்குப் பின்பு சாம்ராஜ்யத்தைப் பற்றி அவனுடைய சந்ததியாருக்குள் தகராறு உண்டாயிற்று. அவர்களுக்கு கார்லோவிஞ்சியர் என்று பெயர். சார்லஸ் என்று ஆங்கிலத்தில் வழங்கப்படுவது லத்தீனில் கரோலஸ் (Carolus) என்று சொல்லப்படுகிறது. அவர்கள் அவ்வளவு திறமை வாய்ந்தவர்கள் அல்ல என்பது அவர்களில் சிலருடைய பட்டப்பெயரிலிருந்தே வெளியாகிறது. ஒருவன் 'உடல் பருத்தவன்' (The Fat); இன்னொருவன் 'வழுக்கைத் தலையன்'; மற்றொருவன் 'சாது.' சார்லமேனின் சாம்ராஜ்யம் சிதறுண்டதால் ஜெர்மனியும், பிரான்சும் உருப்பெறுவதைப் பார்க்கிறோம். கி. பி. 843-லிருந்து ஜெர்மனி ஒரு தேசமாக இருந்து வருகிறது என்று சொல்லுகிறார்கள். கி. பி. 962-லிருந்து 973-வரை ஆண்ட மகா ஆட்டோ (Otto the Great) என்னும் பெயர் பெற்ற சக்கரவர்த்தி ஜெர்மானியரை ஒரு தனி ஜாதியாராகச் செய்தான். அவனுடைய சாம்ராஜ்யத்தில் பிரான்சு தேசம் அடங்கவில்லை. 987-ஆம் ஆண்டில் ஹியூ காபெட் (Hugh Capet) என்பவன் பலமற்ற கார்லோவிஞ்சியரைத் துரத்திவிட்டுப் பிரான்சைத் தன் கீழ்க் கொண்டுவந்தான் என்றாலும் பிரான்சு முழுவதும் அவனுடைய அதிகாரத்தின் கீழ் இருந்தது என்று சொல்லுவதற்கில்லை. பிரான்சு பல பெரிய பாகங்களாகப் பிரிக்கப்பட்டிருந்தது. ஒவ்வொன்றையும் ஒரு பிரபு ஆண்டு வந்தான். அந்தப் பிரபுக்களுள் அடிக்கடி சண்டை நிகழ்வது வழக்கம். ஆனால், அவர்கள் எல்லாருக்கும், சக்கரவர்த்தி, 'போப்பாண்டவர்' என்றால்

ஆவதில்லை. அவர்கள் சக்கரவர்த்தியையும் போப்பாண்டவரையும் எதிர்க்க ஒன்று சேர்ந்தார்கள். ஹ்யூ காபெட் என்பவனின்கீழ் பிரான்சு ஒரு தேசமாகத் தன் வாழ்வைத் தொடங்குகிறது. இந்த ஆதிகாலத்திலேயே பிரான்சுக்கும் ஜெர்மனிக்கும் பகைமை இருப்பதை நாம் பார்க்கிறோம். அது இன்று வரையில், ஆயிரம் ஆண்டுகளாக நிலைத்திருக்கிறது. பிரெஞ்சுக்காரரும் ஜெர்மானியரும் அடுத்தாற் போலுள்ள நாடுகளைச் சேர்ந்தவர்கள் ; நாகரிகத்தில் முதிர்ந்தவர்கள் ; எல்லாவற்றிலும் தேர்ந்தவர்கள். இப்பேர்ப்பட்ட இருநாட்டார் இந்தப் பழம் பகைமையைத் தலைமுறை தலைமுறையாகப் பாராட்டி வளர்த்துக் கொண்டே வருவது ஆச்சரியமா யில்லையா? ஒருவேளை இது அவர்களுடைய தவருக இல்லாமல் இருக்கலாம். அவர்கள் எந்த ஏற்பாடுகளின் கீழ் வாழ்ந்து வருகிறார்களோ அவை இதற்குக் காரணமாயிருக்கலாம்.

ஏறக்குறைய இதே சமயத்தில் ருஷியாவும் சரித்திர அரங்கில் தோன்றுகிறது. வட பகுதியைச் சேர்ந்த ரூரிக் (Rurik) என்பவன் கி. பி. 850-இல் ருஷிய ராஜ்யத்துக்கு அடிகோலினன் என்று தெரியவருகிறது. தென் கிழக்கு ஐரோப்பாவில் பல்கேரியரும் செர்பியரும் பலத்தில் வளர்கிறார்கள். ஹங்கேரியரும் போலந்துக்காரரும் கிழக்கு ரோம சாம்ராஜ்யத்துக்கும் புதிய ருஷியா தேசத்துக்கும் இடையே தங்களுக்கு நாடுகள் ஏற்படுத்திக் கொள்ளுகிறார்கள்.

இதற்கிடையே, வட ஐரோப்பாவைச் சேர்ந்தவர்கள் கப்பல்களில் மேல்நாடுகளுக்கும் தென்னுடுகளுக்கும் வந்து அவற்றைக் கொளுத்தவும், கொள்ளையிடவும், ஜனங்களைக் கொல்லவும் ஆரம்பித்தார்கள். இங்கிலாந்தை இம்சிக்கவும் சூறையாடவும் சென்ற டேனியரைப் பற்றியும் மற்ற வட நாட்டவரைப் பற்றியும் நீ படித்திருப்பாய். இந்த

வடநாட்டவர் நார்மானியர் என்று அழைக்கப்பட்டனர். அவர்கள் தங்கள் கப்பல்களில் மத்தியதரைக் கடலுக்குச் சென்று அங்கிருந்து பெரிய நதிகளின் மூலம் உள் நாட்டை அடைந்தார்கள். அவர்கள் போன இடமெல்லாம் கொள்ளையும் கொலையும்தான். இதாலியில் அராஜகம் மலிந்திருந்தது. ரோமாபுரியின் நிலை இரங்கத்தக்கதாய் இருந்தது. அவர்கள் ரோமாபுரியைச் சூறையாடினார்கள். கான்ஸ்டான்டிநோபிளையும் பயமுறுத்தினார்கள். இந்தக் கொள்ளைக்காரர்கள் நார்மண்டி எனப்படும் பிரான்சின் வடமேற்குப் பாகத்தையும், தென் இதாலியையும், சிசிலித் தீவையும் கைப்பற்றிக்கொண்டு சிறிது சிறிதாக அங்கே குடியேறிப் பெரிய பிரபுக்களாகவும் நிலச்சுவான்தார்களாகவும் ஆய்விட்டார்கள். கொள்ளைக்காரர்கள் செல்வச் சிறப்பை அடைந்ததும் இவ்வாறு மாறிவிடுவது வழக்கமாக இருந்து வருகிறது. பிரான்சில் நார்மண்டியிலுள்ள இந்த நார்மானியர்தாம் கி. பி. 1066-இல் இங்கிலாந்து மீது படை எடுத்துச் சென்று அதை வென்றவர்கள். அவர்களுக்குத் தலைவனான வில்லியம், 'வெற்றி மன்னன்' என்று பேர் பெற்றான். ஆகவே, இங்கிலாந்தும் உருவாகி வருவதைப் பார்க்கிறோம்.

இப்போது நாம், ஐரோப்பாவைப் பொறுத்தவரையில் கிறிஸ்து சகாப்தத்தின் முதல் ஆயிரம் ஆண்டுகளின் முடிவை அடைந்துவிட்டோம். ஏறக்குறைய இந்தக் காலத்தில்தான் கஜினி முகம்மது இந்தியா மீது படை எடுத்து வந்துபோய்க்கொண் டிருந்தான். இன்னும் இதே சமயத்தில் பாக்தாதை ஆண்ட அப்பாசீது கலீபாக்களின் பலம் ஒடுங்கவும் செல்ஜக் துருக்கியர் மேற்கு ஆசியாவில் இஸ்லாமைப் புனருத்தாரணம் செய்துகொண் டிருந்தனர். ஸ்பெயின் இன்னும் அரேபியரின் கீழேயே இருந்து வந்தது. ஆனால் அவர்களுக்கும்

அரேபியாவுக்கும் யாதொரு தொடர்பும் இல்லை. அவர்களுக்கும் பாக்தாத் மன்னர்களுக்கும் பகைமைகூட. வட ஆப்பிரிக்கா பாக்தாதுக்கு அடங்காமல் சுதந்தரமாக இருந்து வந்தது. எகிப்தில் சுதந்தர அரசாங்கம் இருந்ததோடு தனியான கலீபா பீடமும் இருந்தது. சிலகாலம் வரையில் எகிப்தில் இருந்த கலீபா வட ஆப்பிரிக்காவையும் ஆண்டு வந்தார்.

# 53

## நிலமானிய முறை

ஜுன் 4, 1932.

இன்று நாம் அறிந்துள்ள பிரான்ஸ், ஜெர்மனி, ரஷ்யா, இங்கிலாந்து முதலிய தேசங்களின் ஆரம்ப காலத்தைச் சென்ற கடிதத்தில் பார்த்தோம். இக்காலத்தில் நாம் இவைகளைப்பற்றிக் கொண்டுள்ள எண்ணம் போலவே அக்காலத்து மக்களின் எண்ணமும் இருந்தது என்று சொல்லுவதற்கில்லை. வெவ்வேறு தேசங்கள், (ஆங்கிலேயர், பிரெஞ்சுக்காரர், ஜெர்மானியர் என்பது போல) வெவ்வேறு ஜாதியார் என்கிற எண்ணமும் நமக்கு இருக்கிறது. இவர்களில் ஒவ்வொருவனும் தன் நாட்டைத் தாய்நாடு அல்லது தந்தை நாடு என்று கருதுகிறான். இதைத்தான் நாம் தேசீய உணர்ச்சி என்று சொல்லுகிறோம். இது இன்றைய உலகில் எங்கும் தெளிவாகக் காணப்படுகிறது. இந்தியாவில் சுதந்தரத்துக்காக நாம் நடத்தும் போராட்டம் 'தேசீயப்' போராட்டமாகும். ஆனால், அக்காலத்தில் இவ்வாறான தேசீய உணர்ச்சி இல்லை. நாம் கிறிஸ்தவ சமூகத்தைச் சேர்ந்தவர்கள், முஸ்லிம்களும் மற்றவர்களும் நமக்குப் புறம்பானவர்கள், நம்முடையது ஒரு தனி உலகம் என்ற ஒருவிதமான எண்ணம் அவர்களுக்கு இருந்தது. இதேபோல முஸ்லீம்களும் 'நாம் இஸ்லாமிய மதத்தைச் சேர்ந்தவர்கள், மற்ற அவிசுவாசிகள் நமக்குப் புறம்பானவர்கள்' என்று கருதி வந்தார்கள்.

கிறிஸ்தவ உலகம் இஸ்லாமிய உலகம் என்கிற எண்ணங்கள் மக்களின் தினசரி வாழ்க்கையைப் பாதிக்க வில்லை. சில விசேஷ சந்தர்ப்பங்களில் மட்டும் மக்களுக்கு மத வெறியை ஊட்டி அவர்களைத் தங்கள் தங்கள் மதத்துக்காகப் போரிடும்படி செய்வதற்கு அவை பயன் பட்டன. அக்காலத்தில் தேசீய அந்தஸ்துக்குப் பதிலாக மனிதனுக்கும் மனிதனுக்கும் இடையே ஓர் அலாதியான தொடர்பு இருந்து வந்தது. இது, 'ப்யூடல் சிஸ்டம்' (Feudal System) என வழங்கும் நிலமானிய முறையி லிருந்து பிறந்ததாகும். ரோமாபுரியின் வீழ்ச்சிக்குப் பிறகு மேற்கில் பழைய வாழ்க்கை முறை குலைந்து விட்டது. எங்கும் அராஜகமும், குழப்பமும், பலாத் காரமும் மலிந்திருந்தன. வல்லவனாயிருப்போன் தன்னால் முடிந்ததைக் கைப்பற்றிக்கொண்டு தன்னைவிட வல்லவன் ஒருவன் வந்து தன்னை அதிலிருந்து விரட்டும் வரையில் அதைத் தன் வசம் வைத்துக்கொண்டிருந்தான். பலத்த அரண் அமைந்த கோட்டைகள் கட்டப்பட்டன. இந்தக் கோட்டைகளுக்குச் சொந்தக்காரர்களான பிரபுக்கள் தங்களுடைய படைகளுடன் வெளியேசென்று நாட்டுப்புற வாசிகளை இம்சித்தும் கொள்ளை அடித்தும் வந்தார்கள். அவர்களுக்குள்ளும் போர் நிகழுவதுண்டு. இதனால் அதிகக் கஷ்டத்தை அடைந்தவர்கள் நிலத்தை உழுது பிழைக்கும் ஏழைக் குடியானவர்களும் இதரர்களும்தான். இந்தக் குழப்பமான நிலையிலிருந்து நிலமானிய முறை தோன்றி வளர்ந்தது.

குடியானவர்களுக்குக் கூட்டு பலம் இல்லை. இந்தக் கொள்ளைக்காரப் பிரபுக்களிடமிருந்து அவர்களால் தங்களைக் காப்பாற்றிக்கொள்ள முடியவில்லை. அவர்களைக் காப்பாற்றப் போதியபலம் வாய்ந்த மத்திய அரசாங்கமும் இல்லை. ஆகவே, அவர்கள் கொள்ளை அடிப்போரோடு

ஏதாவது ஓர் ஏற்பாட்டைச் செய்துகொள்ள வேண்டி யிருந்தது. தங்களுடைய நிலவருமானத்தில் ஒரு பகுதியை அந்தப் பிரபுவுக்குக் கொடுப்பதாகவும், இன்னும் சில பணிகளும் அவனுக்குப் புரிவதாகவும், அதற்குப் பிரதியாக அவன் தங்களை இம்சிக்காலும் கொள்ளை அடிக்காமலும் இருக்கவேண்டும் என்றும், அவனைப்போன்ற மற்ற பிரபுக்களிடமிருந்து அவன் தங்களைக் காப்பாற்ற வேண்டுமென்றும் அவர்கள் ஓர் ஏற்பாட்டைச் செய்து கொண்டார்கள். இதேமாதிரி சின்னக் கோட்டைக்கு உடையவனான பிரபு பெரிய கோட்டைக்கு உடையவனான பிரபுவோடு ஓர் ஒப்பந்தம் செய்துகொண்டான். ஆனால், சின்னப் பிரபு பெரிய பிரபுவுக்கு நில வருமானத்தில் ஒரு பகுதியை அளிப்பதற்கில்லை. ஏனெனில், அவன் நிலத்தை உழுது பயிரிடும் ஒருவனல்ல. ஆகவே, அவன் படைப்பணி புரிய ஒப்புக்கொண்டான். அதாவது, அவசியம் நேரும் போதெல்லாம் தன் படையுடன் சென்று அவனுக்காகப் போரிடவேண்டும். இதற்கு மாருக பெரியவன் சின்ன வனைக் காப்பாற்றவேண்டும். சின்னவன் பெரியவனுடைய பண்ணையாளாய் இருத்தல் (Vassal). இவ்வாறு, படிப் படியாகப் பெரிய பெரிய பிரபுக்களாக உயர்ந்து கடைசியில் அரசர் வரையில் இது போயிற்று. இந்த நிலமானிய முறையின் உச்சியில் அரசர் வீற்றிருந்தார். ஆனால் அவர்கள் அதோடு நிற்கவில்லை. அவர்களுக்கு மேல் உலகிலும் இதே முறை அமுலில் இருப்பதாகத்தான் எண்ணம். மும்மூர்த்திகள், அவர்களில் உயர்ந்தவர் கடவுள், ஆகவே அங்கும் இத்தகைய முறைதான் ஏதோ ஒன்று நடந்து வருகிறது என்று அவர்கள் எண்ணி யிருந்தார்கள்.

ஐரோப்பாவில் பரவியிருந்த குழப்பமான நிலைமையி லிருந்து சிறிது சிறிதாகத் தோன்றி வளர்ந்தது இம்முறை

தான். அந்தக் காலத்தில் மத்திய அரசாங்கம், போலீஸ் போன்றவை கிடையாதென்பதை நினைவில் வைக்க வேண்டும். ஒரு நிலத்தின் சொந்தக்காரன் அதற்கும் அதில் வாழும் சகல ஜனங்களுக்கும் எஜமானன்; அதை ஆளுவோனும் அவனே. அவன் ஒரு சின்ன ராஜா மாதிரி. ஜனங்கள் தங்கள் நிலவருமானத்திலிருந்து கொடுக்கும் திறைக்காகவும் அவர்கள் புரியும் பணிக்காவும் அவன் அவர்களைக் காப்பாற்றுவதாகக் கருதப்பட்டு வந்தது. அவன் கீழ் வாழும் அவர்களுக்குப் 'பண்ணைக் குடிகள்' அல்லது 'அடிமைகள்' (Villeins or serfs) என்று பெயர். அவன் அவர்களெல்லாருக்கும் மேற்பட்ட பிரபு (Liege-lord). பெயரளவில் அவன் தன் நிலத்தைத் தனக்கு மேற்பட்ட ஒரு பிரபுவிடமிருந்து பெற்றிருந்தான்; அவனுக்குக் கீழ்ப்பட்ட நிலமானியக் குடியாகவும் அவனுக்குப் படைப் பணி புரிவோனாகவும் இருந்துவந்தான்.

கிறிஸ்தவமத ஸ்தாபன உத்தியோகஸ்தர்கள் கூட நிலமானியத் திட்டத்தின் ஓர் அங்கமாக விளங்கினார்கள். அவர்கள் மதபோதகர்களாகவும் நிலமானியப் பிரபுக்களாகவும் இருந்தார்கள். இவ்வாறு ஜெர்மனியில் நிலத்திலும் செல்வத்திலும் ஏறக்குறையப் பாதி, மதகுருமார் (பிஷப்) கையிலும், மடாதிபதிகள் அல்லது தம்பிரான் கையிலும் இருந்தது. போப்பாண்டவர் கூட ஒரு நிலமானியப் பிரபுதான்.

இந்த ஏற்பாட்டில் படிப்படியாக அமைந்துள்ள ஏற்றத் தாழ்வுகளும் வகுப்புக்களும் இருப்பதை நீ காணலாம். இதில் சமத்துவம் என்பதே கிடையாது. இதன் கீழ்த்தளத்தில் பண்ணைக்குடிகள் இருந்தார்கள். சமூக அமைப்பின் முழு பாரத்தையும் அவர்கள் தாங்க வேண்டி இருந்தது. சின்னப் பிரபுக்கள், பெரிய பிரபுக்கள் அவர்களிலும் பெரிய பிரபுக்கள், அரசர் இவர்கள்

எல்லாரும் பண்ணைக் குடிகள்மீது ஆரோகணித்திருந்தார்கள். போப்பாண்டவர், போப்பாண்டவருக்கு அடுத்த படியிலுள்ள மதாசாரியர்கள், மதகுருமார் (பிஷப்), மடாதிபதிகள், சாதாரண மதபோதகர்கள் ஆகியோரைக் கொண்ட மதஸ்தாபனம் நடைபெறுவதற்கான செலவும் பண்ணைக்குடிகள் தலைமீதே விழுந்தது. பிரபுக்கள் என்போர் உணவையோ, வேறுவிதமான செல்வத்தையோ உற்பத்தி செய்யக்கூடிய எவ்வித வேலையையும் செய்வதில்லை. அவர்களுக்கு அது கௌரவக் குறைவாகப் பட்டது. போரிடுவது அவர்களுடைய முதன்மையான தொழில். போர் இல்லாத காலத்தில் வேட்டை ஆடுவதும், விளையாட்டுச் சண்டைகள் போடுவதும், போட்டிப் பந்தயங்கள் நடத்துவதும் அவர்களுக்குப் பொழுது போக்காக இருந்தது. எழுத்துவாசனை அற்ற அம் முரட்டுக் கூட்டத்துக்குச் சண்டையிடுவது, சாப்பிடுவது, குடிப்பது, இவைகளைத் தவிர இன்பமாகப் பொழுது போக்குதற்குரிய வேறு வழிகள் இருப்பது தெரியாது. ஆகவே, உணவையும் இன்னும் வாழ்க்கைக்குத் தேவையான பொருள்களையும் உற்பத்தி செய்யும் முழுப்பாகமும் குடியானவர்கள், தொழிலாளிகள் தலைமீது விழுந்தது. இவ்வாறு கட்டப்பட்ட ஒரு கோபுரத்தின் உச்சியில் அரசர் வீற்றிருந்தார். அவர் கடவுளிடமிருந்து அதிகாரம் பெற்று இந்நிலத்தை ஆள்வதாகக் கருதப்பட்டு வந்தது.

இந் நிலமானியத் திட்டத்தின் பின்னுலுள்ள கருத்து இதுதான். பெயரளவில் பிரபுக்கள் தங்களுக்கு உட்பட்ட ஜமீன்தார்களையும், பண்ணைக்குடிகளையும் காப்பாற்றக் கடமைப்பட்டவர்கள். ஆனால், உண்மையில் அவர்கள் ஒன்றுக்கும் கட்டுப்பட்டவர்களாக இல்லை. அவர்கள் வைத்ததுதான் சட்டம். அவர்களுக்கு மேற்பட்ட பிரபுக்களோ அல்லது அரசரோ அவர்களை ஒன்றும்

கேட்டுக் கொள்வதில்லை. அவர்களுடைய கோரிக்கைகளை எதிர்ப்பதற்குரிய பலம் குடியானவர்களிடம் இல்லை. பலம் மிகுந்த அவர்கள் குடிகளிடமிருந்து எவ்வளவு முடியுமோ அவ்வளவையும் உறிஞ்சிக்கொண்டு அவர்களை உயிர்வாழ மட்டும் விட்டுவைத்தார்கள். எல்லாக் காலத்திலும் எல்லா நாடுகளிலும் நிலம் படைத்தவர்கள் இவ்வாறே செய்து வந்திருக்கிறார்கள். நிலம் படைத்திருப்பது அவர்களுக்குக் குலமேன்மையை அளிக்கிறது. நிலத்தை அபகரித்து அதில் ஒரு கோட்டை கட்டிக்கொண்ட கொள்ளைக்கார 'நைட்' (Knight) ஒருவன் எல்லாருடைய மதிப்பையும் பெறும் ஓர் உயர் குலப் பிரபுவாகவும் வீரனாகவும் மாறிவிடுகிறான். இந்தப் பாத்தியதை அவனுக்கு அதிகாரத்தையும் அளிக்கிறது. அவன் இந்த அதிகாரத்தைக் குடியானவர்களையும் தொழிலாளிகளையும் கசக்கிப் பிழியப் பயன்படுத்திக் கொள்ளுகிறான். சட்டங்களும் நிலம் படைத்தவர்களுக்கு உதவி புரிகின்றன. ஏனெனில், அவை அவர்களாலும் அவர்களுடைய நண்பர்களாலும் இயற்றப்படுபவன அன்றோ? இதனால் தான் நிலம் தனிப்பட்ட நபர்களின் உடைமையாக இராமல், சமுதாய முழுமைக்கும் பொதுவுடைமையாக இருக்க வேண்டுமென்று பலர் நினைக்கிறார்கள். நிலம், அரசாங்கம் அல்லது சமுதாயத்தின் உடைமை என்றால் அதில் வாழும் சகலருக்கும் அது உரியது என்று பொருள் படுகிறதல்லவா? அப்பொழுது யாரும் மற்றவர்களைச் சுரண்டிப் பிழைத்துத் தாம் மட்டும் கொழுத்துக் கிடப்பது இல்லாமல் போய்விடும்.

ஆனால், இந்தக் கருத்துக்கள் அக்காலத்தில் உதயமாக வில்லை; பின்புதான் தோன்றின. நாம் பேசுகின்ற அக்காலத்தில் மக்களின் சிந்தனை இவ்வழிகளில் செல்லவில்லை. பெரும்பாலான மக்கள் துன்பத்தில் உழன்று

வந்தார்கள். ஆனால், அவர்கள் அத்துன்பங்களின் கரையைக் காணவில்லை. ஆகவே, அவர்கள் எல்லா வற்றையும் பொறுத்துக்கொண்டு காலத்தைக் கழித்து வந்தார்கள். 'எஜமானனுக்குக் கீழ்படிதல்' என்னும் பாடம் அவர்களுக்கு இடையருது போதிக்கப்பட்டு வந்த காரணத்தால், அந்த வழக்கம் அவர்கள் உடம்பில் நன்ருக ஊறிவிட்டது. பிறகு, அவர்கள் எதையும் பொறுத்துக் கொள்ளக் கேட்பானேன்! ஆகவே, ஒரு பக்கம் நிலப் பிரபுக்களையும் அவர்களைச் சார்ந்தவர்களையும், இன்னொரு பக்கம் ஏழ்மைத்தனத்தில் உழலும் அவர்களுடைய குடிகளையும் கொண்ட ஒரு சமூகம் வளர்ந்து வருவதை நாம் காண்கிருேம். பிரபுவின் கற்கோட்டையைச் சுற்றிலும் அடிமைகளின் மரக்குச்சுகளும் மண் குடிசை களும் தோற்றமளிக்கின்றன. ஒன்றுக்கொன்று வெகு தொலைவிலுள்ள இரு உலகங்களைப் பார்க்கிருேம். ஒன்று பிரபுவின் உலகம்; மற்ருென்று அடிமையின் உலகம். பெரும்பாலும் பிரபுவின் எண்ணத்தில் அடிமை களுக்கும் கால் நடைகளுக்கும் அதிக வித்தியாசம் இருந்திராது.

சில சமயங்களில் சாதாரண மத போதகர்கள் சிலர் இவ்வடிமைகளை அவர்களுடைய பிரபுக்களிடமிருந்து காப்பாற்ற முயன்ருர்கள். ஆனல், பொதுவாக மத போதகர்களும் குருமாரும் பிரபுக்கள் பட்சத்தில்தான் இருப்பது வழக்கம். மேலும், மத குருமார், மடாதிபதிகள் ஆகியோர் தாங்களே நிலமானியப் பிரபுக்கள் அல்லவா?

இந்தியாவில் இம்மாதிரியான நிலமானிய ஏற்பாடு அமுலில் இல்லை. ஆனல், இதைப் போன்றதொரு ஏற்பாடு இருந்து வந்தது. ராஜாக்கள், பிரபுக்கள், ஜமீன்தார்கள் இவர்களைக் கொண்ட நமது இந்திய சமஸ்தானங்களில் இன்னும் பல நிலமானியப் பழக்க

வழக்கங்கள் பாதுகாக்கப்பட்டு வருகின்றன. இந்திய ஜாதி முறையானது, நிலமானிய முறையினின்று முற்றிலும் வேறுபட்டதாயினும், சமூகத்தை உயர்வு தாழ்வு கொண்ட பல வகுப்புக்களாகப் பிரித்துவிட்டது. சீனுவில், நான் முன்பே கூறியுள்ளபடி, இம்மாதிரியான பிரபு வகுப்பு, உயர்குலம் என்பதெல்லாம் எக்காலத்தும் இருந்ததில்லை. அவர்களுடைய பழைய பரீட்சை முறையினுல் நாட்டிலுள்ள மிக உயர்ந்த பதவியை எந்த மனிதனும் அடையக் கூடியதாகச் செய்துவிட்டார்கள். ஆனுல், நடைமுறையில் பல தடைகள் இருந்திருக்கலாம்.

ஆகவே, நிலமானியத் திட்டத்தில் சமத்துவம், சுதந்தரம் என்கிற சப்தங்களுக்குச் சற்றும் இடமே இல்லை. உரிமைகள், கடமைகளைப் பற்றிய எண்ணம் மட்டும் அதில் இடம் பெற்றிருந்தது. அதாவது ஒரு நில மானியப் பிரபு குடிகளிடமிருந்து பணியும், நில வருமானத்தில் ஒரு பகுதியும் வாங்க உரிமை உடையவன்; அதற்குப் பதிலாக அவர்களைக் காப்பாற்றும் கடமையும் உடையவன். ஆனுல், உரிமைகளை மட்டும் ஞாபகத்தில் வைத்துக்கொண்டு கடமைகளை மறந்து விடுவது யாருக்கும் இயல்புதானே? இன்றுகூட சில ஐரோப்பிய நாடுகளிலும் இந்தியாவிலும் பெரிய ஜமீன்தார்கள் இருக்கிருர்கள். இவர்கள் குடிகளிடமிருந்து பெருந் தொகைகளை வாரமாகப் பெறுகிருர்கள்; ஆனுல், குடிகளுக்காகத் தங்கள் சுண்டு விரலையும் அசைப்பதில்லை. ஆகவே, கடமையைப் பற்றிய எண்ணம் மறந்து போய் வெகு நாளாகிவிட்டது.

ஐரோப்பாவின் பழைய காட்டுமிராண்டி ஜாதியார்கள் சுதந்தரத்தில் பிரியமுள்ளவர்களாக இருந்தார்கள். அவர்கள் எப்படி அந்தச் சுதந்தரத்தை அடியோடு மறுக்கும் இந்த நிலமானிய ஏற்பாட்டுக்குச்

சிறிது சிறிதாக இசைந்தார்கள் என்பதை நோக்கும் போது நமக்கு ஆச்சரியம் உண்டாகிறது. இந்த ஜாதியார்கள் தங்கள் தலைவர்களைத் தேர்ந்தெடுத்து அவர்கள் வரம்பு மீருமல் இருக்கப் பார்த்துக்கொள்வது வழக்கம். இப்போதோ எங்கும் கொடுங்கோன்மையும் யதேச்சாதிகாரமும் தாண்டவமாடுவதைப் பார்க்கிரும். தேர்தல் என்கிற பேச்சுக்கே இடமில்லை. இந்த மாறுதல் ஏன் நிகழ்ந்தது என்று என்ருல் சொல்லக் கூடவில்லை. மத ஸ்தாபனம் பிரசாரம் செய்து வந்த கொள்கைகள், ஜனநாயகத்துக்கு விரோதமான கருத்துக்கள் பரவுவதற்கு உதவி புரிந்திருக்கலாம். பரலோகத்திலுள்ள கடவுளின் சாயையாக இகலோகத்தில் அரசர் கருதப்பட்டார். சர்வ வல்லமை பொருந்திய பரம பிதாவின் சாயையின் கட்டளைகளை மீறி நடக்க நீ யார்? அல்லது அதனேடு நீ எதிர்வாதம் செய்வதுதான் தகுமா? இந்த நிலமானியத் திட்டத்தில் வானுலகும் மண்ணுலகும் அடங்கி இருப்பது போலத் தோன்றியது!

இந்தியாவிலும் சுதந்தரத்தைப்பற்றிய பழைய ஆரியக் கருத்துக்கள் சிறிது சிறிதாக மாறுதல் அடைவதைக் காண்கிரும். அவைகளின் வேகம் படிப் படியாகக் குறைந்து வந்து, கடைசியில் மறைந்தே விடுகிறது. ஆனல், இடைக் காலத்தின் ஆரம்பத்தில் நான் ஏற்கெனவே காட்டியுள்ளபடி, அவைகள் ஓரளவுக்கு அனுஷ்டானத்தில் இருந்து வந்தன என்றே சொல்லவேண்டும். இதற்குச் சுக்கிராச்சாரியார் இயற்றிய 'நீதிசார'மும், தென் இந்தியக் கல்வெட்டுகளும் சான்று பகர்கின்றன.

ஐரோப்பாவில் ஏற்பட்டுள்ள புது முறைகளால் மீண்டும் சுதந்தரம் மெல்லமெல்லத் தலைதூக்க ஆரம்பித்தது. நிலத்துக்கு உடையவர்களான பிரபுக்கள்,

நிலத்தில் வேலை செய்து வந்த பண்ணைக் குடிகள் இவர்களைத் தவிர கைத் தொழிலாளர்கள் வியாபாரிகள் ஆகிய வகுப்புக்களும் அங்கு இருந்தன. இவர்கள் நிலமானிய முறையின் ஓர் அங்கமாக இருக்கவில்லை. குழப்பமான காலத்தில் வியாபாரமும் கைத்தொழிலும் செழிப்பதற்கு வழி இல்லாமல் இருந்தன. ஆனால் சிறிது சிறிதாக வியாபாரம் விருத்தியாகவே கைத்தொழில் வினைஞர்கள், வியாபாரிகள் இவர்களுடைய முக்கியத் துவம் அதிகரிக்க ஆரம்பித்தது. அவர்கள் பணக்காரர்கள் ஆனார்கள். அவர்களிடத்தில் 'பாரன்'களும் (பிரதம மானியதார்) பிரபுக்களும் கடன் வாங்கத் தலைப் பட்டார்கள். அவர்கள் கடன் கொடுத்தனர்; ஆனால் பிரபுக்களிடமிருந்து சில சலுகைகளைப் பெற்றுக் கொண்ட பின்னரே அவ்வாறு செய்தனர். இந்தச் சலுகைகள் அவர்களுடைய பலத்தை அதிகரிக்கச் செய்தன. ஆகவே, இப்போது பிரபுவின் கோட்டையைச் சுற்றிலும் அடிமைகளின் மண் குடிசைகளுக்குப் பதிலாக வேறொரு காட்சியைக் காண்கிறோம். ஒரு தேவாலயம் அல்லது சங்க மண்டபத்தைச் சுற்றிச் சிறு சிறு பட்டணங்கள் தோன்றுகின்றன. வியாபாரிகளும் கைத் தொழிலாளரும் சங்கங்கள் அமைத்துக் கொண்டார்கள். இந்தச் சங்கங்களின் தலைமை ஸ்தானங்களே சங்க மண்ட பங்கள். இவைகளே பிறகு நகர மண்டபங்களாக (டவுன் ஹால்) மாறின.

கொலோன், பிராங்க்பர்ட், ஹாம்பர்க் இன்னும் இவைபோன்ற பல பெரிய நகரங்கள் தோன்றின. இவைகள் நிலமானியப் பிரபுக்களின் அதிகாரத்துக்குப் போட்டியாக விளைந்தன. இந்நகரங்களில் ஒரு புதிய வகுப்புத் தோன்றி வளர்ந்து வந்தது. அதுதான் வியாபாரிகளின் வகுப்பு. இந்த வியாபாரிகள் பிரபுக்

களையும் எதிர்த்து நிற்கக்கூடிய செல்வம் படைத்திருந் தார்கள். இருதிறத்தாருக்கும் நெடுங்காலம் போராட்டம் நடந்தது. தங்களுக்குக் கீழ்ப்பட்ட 'பாரன்கள்', பிரபுக்கள் ஆகியோரின் அதிகாரம் எங்கு மிஞ்சி விடுகிறதோ என்று அஞ்சிய அரசர்கள் பல சமயங்களில் இந்த நகரங்களை ஆதரித்து நின்றார்கள். ஆனால், இவை யெல்லாம் ரொம்ப காலத்துக்குப் பின்னால் நிகழ்ந்தவை.

இந்தக் கடிதத்தை ஆரம்பிக்கும்போது அந்தக் காலத்தில் தேசீய உணர்ச்சி என்பது இல்லை என்று சொன்னேன். ஜனங்கள் தங்களுக்கு மேற்பட்ட பிரபுக் களுக்குத் தாங்கள் விசுவாசமும் கடமையும் கொண்டவர் கள் என்ற எண்ணம் கொண்டிருந்தார்கள். அவர்களுக்கு உண்மையாகத் தொண்டுபுரிவதற்கே அவர்கள் விசுவாசப் பிரமாணம் செய்திருந்தார்கள்; தேசத்துக்கு அல்ல. அரசரைக் கூட அவர்கள் தெளிவாக அறியார்கள்; ஏனெனில் அவருக்கும் அவர்களுக்கும் இடையே உள்ள தூரம் அதிகம். ஒரு பிரபு அரசரோடு சண்டையிட்டுக் கொண்டால் அது அவன் பொறுப்பு. அவனுடைய குடிகள் அவனைப் பின்பற்றி நடக்க வேண்டியவர்களே. இந்த உணர்ச்சிக்கும் இதற்கு நெடுங்காலத்துக்குப் பின் தோன்றிய தேசீய உணர்ச்சிக்கும் அதிக வேற்றுமை இருக்கிறதல்லவா?

54

## சீனு நாடோடிகளை மேற்கே துரத்துகிறது

ஜூன் 5, 1932.

சீனுவைப் பற்றியும் கீழ்க்கோடி நாடுகளைப்பற்றியும் நான் உனக்கு எழுதி வெகு நாளாயிற்று. ஏறக்குறைய ஒரு மாதம் இருக்குமென்று நினைக்கிறேன். ஐரோப்பா விலும், இந்தியாவிலும், மேற்கு ஆசியாவிலும் நிகழ்ந்த பல மாறுதல்களைப் பற்றிப் பேசினோம்; அரேபியர் தங்கள் நாட்டிலிருந்து பரவி பல நாடுகளை ஜெயிப்பதையும், ஐரோப்பா இருளில் வீழ்ந்து அதனின்றும் வெளிவர முயல்வதையும் பார்த்தோம். மேற்சொன்னவை நிகழ்ந்த காலத்தில் சீனு தன் வாழ்க்கையை மற்ற நாடுகளைவிடச் சிறந்த முறையில் நடத்திச் சென்றது என்றே சொல்ல வேண்டும். ஏழாவது எட்டாவது நூற்றுண்டுகளில் டாங் வமிச சக்கரவர்த்திகளின் ஆட்சியின் கீழ் சீனு நாகரிகத்திலும், செழிப்பிலும், ஆட்சி முறையிலும் உலகிலேயே சிறந்த நாடாக விளங்கியது. ஐரோப்பாவை அதனேடு ஒப்பிட்டுக் கூறுவதற்கே இல்லை. ஏனெனில் ரோமாபுரி வீழ்ச்சிக்குப் பிறகு அது அவ்வளவு தாழ் நிலையை அடைந்துவிட்டது. வட இந்தியாவும் ஒன்றும் அதிகமாகச் சிறப்புற்றிருக்கவில்லை. ஹர்ஷன் ஆண்ட காலத்திலும், அதுபோன்ற காலங்களிலும் அது பிரகா சித்ததாலும் பொதுவாக அதற்கு இறங்குமுகம் என்றே சொல்லவேண்டும். தென் இந்தியா வட இந்தியாவைவிட வலிமை பெற்றுத் திகழ்ந்தது என்பதில் ஐயமில்லை. கடலுக்கப்பால் அதன் குடியேற்ற நாடுக

ளாகிய அங்கோர், ஸ்ரீவிஜயம் ஆகியவை தங்களுடைய சிறந்த வருங்காலத்தின் வாயிற்படியில் பிரவேசித்துக் கொண்டிருந்தன. அந்தக் காலத்தில் சில அம்சங்களி லாவது சீனுவுடன் போட்டியிடக் கூடியவை அரேபிய ராஜ்யங்களாகிய பாக்தாத்தும் ஸ்பெயினும்தான். ஆனால் அவைகள் கூடச் சிறிது காலமே உச்ச நிலையில் இருந்தன. இதற்கிடையில் ஒரு ரசமான சம்பவம். ஒரு டாங் வமிச சக்கரவர்த்தி சிம்மாசனத்திலிருந்து துரத்தப்பட்டான். அவன் அரேபியர் உதவியைக் கோரி, அவர்கள் உதவியால் மீண்டும் இழந்த சிம்மாசனத்தை அடைந்தான்.

ஆகவே, அக்காலத்தில் சீனு நாகரிக நாடுகளின் முன்னணியில் இருந்ததென்பது சொல்லாமலே விளங் கும். அக்காலத்திய ஐரோப்பியரை அது அரை-காட்டு மிராண்டிகளாகக் கருதியிருப்பின் அதில் ஆச்சரியப் படுவதற்கு ஒன்றுமில்லை. சரித்திரத்துக்குத் தெரிந்த உலகில் சீனு முதன்மை ஸ்தானம் பெற்றிருந்தது. நான் இவ்வாறு சொல்வதற்குக் காரணம் அமெரிக்காவில் அப்போது நிகழ்ந்ததை நான் அறியாமையே ஆகும். இது மட்டும் தெரிகிறது: மெக்சிகோவிலும் பெருவிலும், அவைகளை அடுத்த நாடுகளிலும் பன்னூறுண்டுகளாக நாகரிகங்கள் தழைத்தோங்கி யிருந்தன. சில அம்சங் களில் அவைகள் ஆச்சரியப்படத்தக்க விதமான முன்னேற்றம் அடைந்திருந்தன; வேறு சில அம்சங்களில் அவைகள் மிகுந்த பிற்போக்கு வாய்ந்தும் இருந்தன. ஆனால், அவைகளைப்பற்றி நான் அறிந்திருப்பது மிகவும் சொற்பம். ஆனால், மெக்சிகோவிலும், மத்திய அமெரிக் காவிலும், பெருவில் இருந்த 'இன்கா' என்ற மன்னர் களின் ராஜ்யத்திலும் பரவியிருந்த மயா நாகரிகத்தை நீ நினைவில் வைக்கவேண்டும். என்னைவிடத் தெரிந்த வேறு பிறர் உனக்கு அதைப்பற்றி அதிகம் சொல்லக்

கூடும். அந்த நாகரிகத்தில் எனக்குள்ள கவர்ச்சி அதிகம் என்பதில் ஐயமில்லை. ஆனால், அதைப்பற்றிய என் அறியாமையும் அதிகமாகவே இருக்கிறது.

இன்னொரு விஷயமும் நீ நினைவில் வைக்கவேண்டும். மத்திய ஆசியாவிலிருந்து பல நாடோடி ஜாதியார்கள் ஐரோப்பாவுக்கும் இந்தியாவுக்கும் சென்றார்கள் என்பதை முன் கடிதங்களில் கண்டோம். ஹூணர், ஸிதியர், துருக்கியர் முதலிய பலர் அலைகளைப் போல் ஒருவர் பின் ஒருவராகச் சென்றார்கள். இந்தியாவுக்கு வந்த வெள்ளை ஹூணர்களையும் ஐரோப்பாவில் அட்டிலாவைத் தலைவனாகக் கொண்ட ஹூணர்களையும் நீ மறந்திருக்க மாட்டாய். பாக்தாது சாம்ராஜ்யத்தைக் கைப்பற்றிய செல்ஜுக் துருக்கியரும் மத்திய ஆசியாவிலிருந்து வந்தவர்களே. துருக்கியரின் இன்னொரு கிளை—இவர்களுக்கு உதுமானியத் துருக்கியர் என்று பெயர்—இனி வரப் போகிறது. அவர்கள் முடிவாகக் கான்ஸ்டாண்டி நோபிளை ஜெயித்து வியன்னா வரையில் செல்லப் போகிறார்கள். மத்திய ஆசியா அல்லது மங்கோலியாவிலிருந்து மங்கோலியர் வரவிருக்கிறார்கள். அவர்களைக் கண்டு உலகமே நடுங்கப் போகிறது. அவர்கள் ஐரோப்பாவின் மத்திய பாகம் வரையில் ஜெயித்துச் சீனாவையும் தங்கள் ஆளுகையின் கீழ்க் கொண்டுவரப் போகிறார்கள். அவர்களின் சந்ததியில் வந்த ஒருவன் இந்தியாவில் ஒரு ராஜ வமிசத்தையும், சாம்ராஜ்யத்தையும் ஸ்தாபிக்கப் போகிறான். அந்த வமிசத்தில் சில புகழ்பெற்ற அரசர்கள் தோன்றப் போகிறார்கள்.

மத்திய ஆசியாவையும் மங்கோலியாவையும் சேர்ந்த இந்த நாடோடி ஜாதியார்களுடன் சீனா இடைவிடாத போர் நடத்திவந்தது. அல்லது இவர்கள் எப்போதும் சீனாவுக்குத் தொந்தரவு அளித்து வந்ததால்

சீனு தன்னைக் காத்துக்கொள்ளப் போரிடவேண்டியிருந்தது என்று சொல்வது இன்னும் சரியாயிருக்கலாம். இவர்களிடமிருந்து சீனுவைக் காப்பதற்காகவே சீனுவின் பெரிய மதிற்சுவர் எடுக்கப்பட்டது. அதனுல் சிறிது நன்மை விளைந்த தென்பதில் ஐயமில்லை. ஆனுல் படையெடுப்புக்களை அதனுல் தடுக்கக் கூடவில்லை. ஒவ்வொரு சக்கரவர்த்தியும் இந்த நாடோடிகளை விரட்டி அடிக்க வேண்டியிருந்தது. இதனுல் சீன சாம்ராஜ்யம் மேற்கே வெகுதூரம், காஸ்பியன் கடல்வரையில் பரவும்படி நேர்ந்தது. சீன மக்கள் சாம்ராஜ்ய ஆசை அதிகமாகக் கொண்டவர்கள் அல்ல. சில சீன சக்கரவர்த்திகள் வேற்று நாடுகளை ஜெயித்துத் தங்கள் சாம்ராஜ்யத்தை விஸ்தரிக்கும் எண்ணம் உடையவர்களா யிருந்தார்கள் என்பது உண்மையே. ஆனுல், மற்றவர்களை நோக்குமிடத்துச் சீனர்கள் சமாதானத்தை நாடுவோராகவும், போரிலும், பிறநாடுகளைக் கைப்பற்றுவதிலும் விருப்பற்றோராகவுமே இருந்தார்கள். சீனுவில் போர்வீரனைக் காட்டிலும் படித்தவனுக்கு எப்போதுமே மதிப்பு அதிகம். இப்படியிருந்தும் சீன சாம்ராஜ்யம் அதிகமாகப் பரந்திருந்ததற்குக் காரணம் இந்த நாடோடி ஜாதியார்கள் சதா வடக்கிலிருந்தும் மேற்கிலிருந்தும் படையெடுத்து வந்து துன்புறுத்திக்கொண் டிருந்ததே ஆகும். வலிமிக்க சீன சக்கரவர்த்திகள் இவர்களுடைய தொல்லையை அடியோடு ஒழித்துத் தலைமுழுகுவதற்காக இவர்களை மேற்கே நெடுந்தூரம் ஓட்டினர். இதனுல் பூரண நிம்மதி ஏற்படா விட்டாலும் சிறிதளவாவது சாந்தி கிடைத்து வந்தது.

ஆனுல், சீனருக்குக் கிடைத்த சாந்தி பிறநாட்டாரின் சாந்தியைக் குலைப்பதற்கு ஏதுவாக இருந்தது. சீனரால் துரத்தப்பட்ட நாடோடி ஜாதியார்கள் பிறநாடுகளைத் தாக்கினுர்கள். அவர்கள் இந்தியாவுக்கு வந்தார்கள்.

மீண்டும் மீண்டும் ஐரோப்பாவுக்குச் சென்றார்கள். சீனாவின் ஹான் சக்கரவர்த்திகளால் ஓட்டப்பட்டவர்கள் ஹூணராகவும், தார்த்தாரியராகவும், இன்னும் பிறராகவும் மற்ற நாடுகளில் பிரவேசித்தார்கள். டாங் சக்கரவர்த்திகளால் ஓட்டப்பட்டவர்கள் துருக்கியராக ஐரோப்பாவில் நுழைந்தார்கள்.

இதுவரையில் சீனா இவர்களை ஒருவாறு சமாளித்து வந்தது. சமாளிக்க முடியாது போய்விட்ட ஒரு காலத்துக்கு இப்போது நாம் வருகிறோம்.

காலக்கிரமத்தில் டாங் வமிசத்தில், திறமையற்ற அரசர்கள் தோன்றலாயினர். எல்லா அரச பரம்பரைகளிலும் இது தவறாது நிகழ்வதை நாம் காண்கிறோம். பின்னால் வருவோரிடம் தங்கள் முன்னோரின் விசேஷ அம்சங்கள் ஒன்றும் காணப்படுவதில்லை. வெறும் சுகபோக விருப்பே எஞ்சி நிற்கிறது. ராஜ்யத்தில் லஞ்சம் முதலிய தீமைகள் தலை எடுத்தன. அத்துடன் வரிச்சுமை அதிகரித்துக் கொண்டே வந்தது. அதனால் ஏழைகள் அதிகமாகப் பாதிக்கப்பட்டனர். ஜனங்களிடையே அதிருப்தி வளர்ந்தது. பத்தாவது நூற்றாண்டின் தொடக்கத்தில், அதாவது கி. பி. 907-ஆம் ஆண்டில் அந்த வமிசம் வீழ்ச்சியுற்றது.

இதற்குப் பின் ஐம்பதாண்டுகள் வரையில் பல சிற்றரசர்கள் சீனாவை ஆண்டுவந்தார்கள். கி.பி. 960-ஆம் ஆண்டில் சீனாவின் மற்றொரு பெரிய அரசவமிசம் தன் வாழ்க்கையைத் தொடங்குகிறது. இதற்குச் சூங் வமிசம் என்று பெயர். இதை ஸ்தாபித்தவன் கௌட்சு (Kao-Tsu) என்பவன். ஆனால், எல்லைப்புறங்களிலும் உள்நாட்டிலும் தொந்தரவு இருந்து வந்தது. குடியானவர்களை வருத்திய நிலவரிச்சுமை பெரிதும் வெறுக்கப்

பட்டது. இந்தியாவைப் போலவே சீனுவிலும் நில உரிமை ஏற்பாடு ஏழைகளை நசுக்குவதாக இருந்தது. இதை அடியோடு மாற்றி அமைத்தாலொழிய அமைதியோ முன்னேற்றமோ ஏற்பட வழியில்லாமலிருந்தது. ஆனால், அத்தகைய மாறுதல்களைச் செய்வது எப்போதுமே அரிதான ஒரு காரியம். உயர்நிலையில் உள்ளவர்கள் நடைமுதல் ஏற்பாட்டினால் நன்மை அடைகிறார்கள். அதை மாற்ற வேண்டுமென்று யாராவது சொன்னால் உடனே அவர்கள் கூச்சலிடத் தொடங்கி விடுகிறார்கள். ஆனால், உரியகாலத்தில் செய்யவேண்டிய மாறுதலைச் செய்யா விட்டால் அது ஒருவரும் அழைக்காமல் தானாகவே வந்துவிடுகிறது. வந்து சகலத்தையும் தலைகீழாக்கி விடுகிறது.

டாங் வமிசம் வீழ்ச்சியுற்றதற்குக் காரணம் அது அவசியமான மாறுதல்களைச் செய்யாததுதான். இதே காரணத்தால் சூங் வமிசத்தாருக்கும் இடைவிடாத இன்னல்கள் விளைந்து வந்தன. இவர்கள் ஆட்சியில் ஒருவன் தோன்றினான். அவன் வெற்றிபெற்றிருக்கலாம். ஆனால், அவன் வெற்றிபெறவில்லை. அவன் பெயர் வாங் ஆன்-ஷி. பதினோராவது நூற்றாண்டில் முதல் மந்திரியாக இருந்தான். கான்பூஷியஸ் மகானின் கொள்கைகளுக்கு இணங்க சீனு ஆளப்பட்டு வந்தது என்று முன்பே கூறியிருக்கிறேன். கன்பூஷிய சாஸ்திரங்களில் பரீட்சை மூலம் தேர்ச்சி பெற்றவர்களே அரசாங்க உத்தியோகங்களை அடையக்கூடும். கன்பூஷியஸ் சொன்ன மொழியை மீறி நடக்கக் கூடிய துணிவு யாருக்கும் கிடையாது. வாங் ஆன்-ஷி அதற்கு விரோதமாகச் செல்லவில்லை. ஆனால் அதற்குப் புதிய முறையில் வியாக்கியானம் செய்தான். ஏதாவது ஒரு சங்கடம் ஏற்பட்டால் அதைக் கடப்பதற்கு அறிவாளிகள்

இத்தகைய வழியை அனுசரிக்கிறார்கள். வாங் கொள்கை களிற் சில, வியக்கத்தக்க முறையில் தற்காலக் கொள்கை களை ஒத்திருக்கின்றன. அவனுடைய முழுநோக்கமும் இதுதான். கொடுக்கச் சக்தியற்ற ஏழைகள்மீதுள்ள வரிப்பளுவைக் குறைத்து, கொடுக்கச் சக்தியுள்ள தனவந் தர்கள்மீது அதை விதிக்கவேண்டும். ஆகவே அவன் நில வரியைக் குறைத்தான். குடியானவர்களுக்குத் தங்கள் வரி யைப் பணமாகக் கொடுப்பது கஷ்டமாக இருந்தால் அவர் கள் அதைத் தானியமாகக்கொடுக்கலாம் என்று அனுமதித் தான். பணக்காரர்களுக்கெல்லாம் வருமானவரி விதித்த தான். வருமானவரி என்பது நம் காலத்தில் காணப்படும் ஒரு புதியவரி என்று நாம் நினைத்துக்கொண்டிருக்கிறோம். ஆனால், 900 ஆண்டுகளுக்கு முன்பே சீனாவில் இவ்வரி விதிக்கப்பட்டதாக அறிந்து நாம் ஆச்சரியப்படுகிறோம். குடியானவர்களுக்கு அரசாங்கம் கடன்கொடுத்து உதவ வேண்டும் என்றும் அறுவடைக் காலத்தில் அதைத் திருப்பிப் பெற்றுக்கொள்ளலாம் என்றும் அவன் ஏற்படுத்தினான். பயிரிடப்படும் தானிய வகைகளின் விலையில் ஏற்படும் ஏற்றத்தாழ்வுகள் குடியானவர் களுக்குக் கஷ்டத்தை விளைவிப்பனவாயிருந்தன. விலை வாசிகள் விழுந்துவிட்டால் ஏழைக் குடியானவர்களுக்கு ஒன்றும் கிடைக்காது. விலைவாசிகள் குறைவாயிருக்கும் காலத்தில் அவர்கள் தங்கள் விளைபொருளை விற்க முடியாது. அதனால் வரி கொடுப்பதற்கும் வேறு பொருள் கள் வாங்குவதற்கும் அவர்களிடம் பணம் இல்லாமல் போகிறது. வாங் இந்தப் பிரச்சினையைத் தீர்க்க முயன்றான். அரசாங்கமே விளைபொருள்களை வாங்கி விற்பதால் விலைவாசிகளை ஏற இறங்க ஒட்டாமல் கட்டுப் படுத்தலாம் என்று அவன் சொன்னான்.

பொது மராமத்து வேலைகளுக்கு யாரிடமும் கட்டாய

வேலை வாங்கக்கூடாது என்று அவன் விதி ஏற்படுத்தினன். உழைக்கும் ஒவ்வொருவனுக்கும் முழுக்கூலியும் கொடுக்கப்பட வேண்டும் என்று அவன் சொன்னன். அவன் ஸ்தலப்படை ஒன்றை நிறுவினன். அதற்குப் பாச்சியா (Pao Chia) என்று பெயர். ஆனல், வாங்செய்த சீர்திருத்தங்கள் அவன் காலத்தை நோக்கும்போது அதிக முற்போக்குள்ளவையாக இருந்தன. ஆகவே, அவை சிறிது காலத்துக்குப் பின்பு வழக்கொழிந்து போயின. அவன் நிறுவிய ஸ்தலப்படைமட்டும் 800 ஆண்டுகள் வரையில் நடைபெற்று வந்தது

தங்களுக்கு முன்னின்ற பிரச்சினைகளைத் தைரியமாகத் தீர்க்கும் திறனற்ற சூங் வமிசத்தார் படிப்படியாக அவைகளுக்கு ஆட்பட்டு விட்டனர். வடக்கில் இருந்த காட்டுமிராண்டிகளான கித்தானியரை இவர்களால் அடக்கமுடியவில்லை. ஆகவே, அவர்களை அடக்குவதற்காக இன்னொரு ஜாதியாரின் உதவியை நாடினர்கள். வடமேற்கில் வாழ்ந்த அவர்களுக்குக் கினியர் அல்லது பொன்னிறத் தார்த்தாரியர் என்று பெயர். கினியர் கித்தானியரை ஓட்டினர்கள். ஆனல் அவர்களை ஓட்டிய பிறகு தாங்கள் நாட்டைவிட்டு நகராமல் தங்கிவிட்டார்கள். வலியற்ற ஒருவனே அல்லது ஒரு நாடோ வலியுள்ள பிறரின் உதவியை நாடினல் எப்போதுமே அவர்கள் தலை எழுத்து இப்படித்தான் முடிவது வழக்கம். கினியர் வடசீனவைத் தங்கள் ஆதிக்கத்தின்கீழ்க் கொண்டு வந்து பீகிங் நகரைத் தங்களுக்குத் தலைநகராக்கிக்கொண்டார்கள். சூங் வமிசத்தார் தெற்கே சென்றுவிட்டார்கள். கினியர் முன்பு, அவர்கள் ஒளி மங்கி வந்தது. ஆகவே, வடசீனவில் கின் சாம்ராஜ்யமும் தென்சீனவில் சூங் சாம்ராஜ்யமும் இருப்பதை நாம் காண்கிறேம். வடக்கே சூங் வமிசம் கி. பி. 960 லிருந்து 1127 வரையில் ஆட்சி புரிந்தது.

தெற்கே அவர்கள் 150 ஆண்டுகள் வரையில் ஆண்டு வந்தார்கள். கடைசியாக கி. பி. 1260-ஆம் ஆண்டில் மங்கோலியர் வந்து அவர்களை ஒழித்தார்கள். ஆனால், சீனாவும் புராதன இந்தியாவைப் போலவே, மங்கோலியரைத் தனக்குள் ஏற்று, கிரகித்துக்கொண்டு அவர்களைப் பெரும்பாலும் சீனர்களாகவே மாற்றிவிட்டது

ஆகவே, சீனா கடைசியில் நாடோடி ஜாதியார்களுக்குப் பணிந்து விடுவதைக் காண்கிறோம். ஆனால். அதே சமயத்தில் அவர்களுக்கு அது தன் நாகரிகத்தை அளித்து அவர்களைத் தன் இனமாக்கி ஸ்வீகரித்துக் கொண்டது. அதனால், ஆசியாவின் பிறபகுதிகளும் ஐரோப்பாவும் நாடோடிகளால் கஷ்ட நஷ்டங்கள் அடைந்த அளவுக்குச் சீனா அடையவில்லை.

வடக்கிலும் தெற்கிலும் ஆட்சிபுரிந்த சூங் வமிசத்தார், அவர்களுக்கு முற்பட்ட டாங் வமிசத்தாரைப் போல் அவ்வளவு பலமுடையவர்களாக இல்லை. ஆனால், அவர்கள் டாங் ஆட்சியின்போது செழித்தோங்கிய உன்னதமான கலைப் பரம்பரையை அறுந்து போகாமல் காப்பாற்றியதோடு அதை அபிவிருத்தியும் செய்தார்கள். சூங் மன்னர்களின் ஆட்சியின்கீழ் தென் சீனா கலையிலும் கவிதையிலும் சிறப்புற்று விளங்கியது. சூங் கலைஞர்கள் இயற்கை அழகில் பெரிதும் ஈடுபட்டவர்கள். அழகிய இயற்கைக் காட்சிகளைக் கொண்ட பல அருமையான ஓவியங்கள் அக்காலத்தில் தீட்டப்பட்டன. பீங்கான், ஒருவித வெள்ளைக்களிமண் கண்டெடுக்கப்படுகிறது. கலைஞனின் கைவிரல்கள் பட்ட மாத்திரத்தில் அது அழகிய பல உருவங்களை அடைகிறது. அதன் அழகும் ஆச்சரியமும் நாளுக்கு நாள் அதிகரிக்கின்றன. கடைசியில் 200 ஆண்டுகளுக்குப் பின் மிங் மன்னர்களின் ஆட்சியில் அதி அற்புதமான வடிவத்தை அடைகிறது. மிங் மன்னர்கள் காலத்திய பீங்கான்பூந்தாழி இன்றும் சீனாவில் பேரானந்தமளிக்கும் அரும்பெறல் பொருளாக மதிக்கப்படுகிறது.

# 55

## ஜப்பானில் ஷோகன் ஆளுகை

ஜுன் 6, 1932

சீனாவிலிருந்து மஞ்சள் கடலைக் கடந்து ஜப்பானுக்குப் போவது சுலபம். இப்போது நாம் ஜப்பானுக்கு வெகு சமீபத்தில் இருப்பதால் அங்குப் போய்வந்து விடலாம். நாம் கடைசியாக அதை எப்பொழுது பார்த்தோம், தெரியுமா? பெரிய குடும்பங்கள் அந்நாட்டை ஆள ஒன்றோடொன்று போரிடுவதையும் மத்திய அரசாங்கம் சிறிது சிறிதாக உருப்பெறுவதையும் முன் தடவை கண்டோம். ஒரு பெரிய, வலிமிக்க கூட்டத்துக்குத் தலைவராக இருந்த சக்கரவர்த்தி மத்திய அரசாங்கத்தின் தலைவராக மாறுகிறார். மத்திய அரசாங்கத்தின் ஆட்சிக்கு அறிகுறியாக நரா (Nara) என்னுமிடத்தில் தலைநகரம் ஸ்தாபிக்கப்பட்டது. பிறகு கியோடோ நகருக்கு அது மாற்றப்பட்டது. சீன அரசாங்க முறைகள் பின்பற்றப்பட்டன. சீனாவிலிருந்தும் சீனா மூலமாகவும் கலை, மதம், அரசியல் முதலிய யாவும் கொணரப்பட்டன. 'சூரியோதய நாடு' என்கிற அதன் பெயரும் சீனாவிலிருந்தே வந்தது.

பலம் வாய்ந்த புஜிவாரா குடும்பம் அதிகாரத்தைக் கைப்பற்றிக்கொண்டு சக்கரவர்த்திகளைக் கைப்பொம்மை போல் ஆட்டிவைப்பதைப் பார்த்தோம். இருநூறு ஆண்டுகள் வரையில் அக்குடும்பம் ஆட்சியை நடத்தி வந்தது. அதனால் வெறுப்புற்ற சக்கரவர்த்திகள் முடி துறந்து மடங்களில் புகுந்து துறவறம் பூண்டனர்.

துறவு பூண்ட சக்கரவர்த்தி அத்துடன் நின்று விடவில்லை. துறவறத்தில் இருந்து கொண்டே சக்கரவர்த்தியாக இருக்கும் தன் மகனுக்கு ஆலோசனைகள் கூறுவதன் மூலம் அவர் அரசாங்க விவகாரங்களில் பெரிதும் தலையிட்டு வந்தார். இந்த உபாயத்தினால் சக்கரவர்த்திகள் புஜிவாரர் குடும்பத்தை ஓரளவு சமாளித்து வந்தார்கள். இதைக் கையாளுவது கஷ்டமான காரியம்தான். ஆயினும், இதனால் புஜிவாரர் குடும்பத்தாரின் செல்வாக்கும் அதிகாரமும் குறைந்து வந்தன. அந்த அளவுக்கு இது வெற்றி பெற்றதென்றே சொல்லவேண்டும். ஒருவர்பின் ஒருவராகச் சிம்மாசனத்தை விட்டுத் துறவறத்தை மேற்கொண்ட சக்கரவர்த்திகளின் கையில்தான் உண்மையான அதிகாரம் இருந்து வந்தது. ஆகவே அவர்கள் 'துறவி அல்லது தம்பிரான் சக்கரவர்த்திகள்' என்று அழைக்கப் பட்டார்கள்.

இதற்கிடையில் வேறு மாறுதல்களும் நிகழ்ந்தன. பெரிய ஜமீன்தார்களைக் கொண்ட ஒரு புதிய வகுப்பு தோன்றியது. அவர்கள் போர்முறை தெரிந்தோராகவும் இருந்தார்கள். புஜிவாரர் குடும்பத்தார் இவர்களை அரசாங்க வரிகளை வசூலிக்க நியமித்தார்கள். இவர்களுக்கு 'தாய் மியோ' வகுப்பார் என்று பெயர். அதன் பொருள் 'பெரிய பெயர்' என்பதாகும். நமது மாகாணத்திலும் பிரிட்டிஷாரின் வருகைக்குமுன் இத்தகைய வகுப்பு ஒன்று தோன்றியது. இரண்டையும் ஒப்பிட்டுப் பார்த்தால் வேடிக்கையாயிருக்கும். அயோத்தி மன்னன் பலவீனனாயிருந்தான். அவன் வரி வசூலிப்போரை நியமித்தான். இவர்கள் தங்களுக்குச் சொந்தமாகச் சிறு சேனைகளும் வைத்திருந்தார்கள். அவற்றின் உதவியால் பலாத்காரமாக வரி வசூலித்ததோடு வசூலித்ததில் பெரும் பகுதியைத் தங்களுக்கென்றே வைத்துக் கொண்டார்கள்.

இவர்கள்தான் தற்காலத்தில் பெரிய தாலுக்காதார்களாக விளங்குகிறார்கள்.

'தாய் மியோ'க்களின் பலம் அதிகரித்தது. ஒவ்வொருவருக்கும் மாகாணங்களும் சிறு சிறு சேனைகளும் ஏற்பட்டன. அவர்கள் தங்களுக்குள் போரிட்டு கியோடோவிலிருந்த மத்திய அரசாங்கத்தைப் புறக்கணித்து வந்தார்கள். முக்கியமான தாய்மியோக் குடும்பங்கள் இரண்டு: டைரா; மினமோடோ. அவர்கள் கி. பி. 1156-இல் புஜிவாரர் குடும்பத்தாரை அடக்குவதில் சக்கரவர்த்திக்கு உதவிபுரிந்தார்கள். பிறகு இருவருள்ளும் போர்மூண்டது. டைரா குடும்பத்தாருக்கு வெற்றி கிடைத்தது. மறுபடியும் எதிரியினால் தங்களுக்கு யாதொரு தீங்கும் நேரிடாமலிருக்கும் பொருட்டு அவர்கள் எதிரி குடும்பத்தைச் சேர்ந்த யாவரையும் கொன்றார்கள். ஆனால், நான்கு குழந்தைகள் மட்டும் இதற்குத் தப்பிப் பிழைத்தன. இந்நால்வரில் பன்னிரெண்டு வயதுள்ள யோரிடோமோ என்னும் பாலகன் ஒருவன். டைரா குடும்பம் எதிரியை அழிக்கும் முயற்சியில் சிறிதுதான் விட்டுக் கொடுத்தது என்றாலும் அதுவே அவர்கள் தலைக்குத் தீங்காக முடிந்தது. இவனால் ஒன்றும் குடி முழுகிப் போகாது என்று விடப்பட்ட யோரிடோமோ என்னும் சிறுவன் டைரா குடும்பத்தின் முழு வைரியாக வளர்ந்தான். பழிக்குப் பழிவாங்கும் விருப்பம் அவனை ஆட்கொண்டது. அவன் அதில் வெற்றிபெற்றான். அவன் தன் எதிரிகளைத் தலைநகரை விட்டுத் துரத்தினான். பிறகு அவர்களை ஒரு கடற்போரில் முறியடித்தான்.

இப்போது யோரிடோமோ சகல அதிகாரங்களையும் செலுத்த வல்லவனாயிருந்தான். சக்கரவர்த்தி அவனுக்குப் பெரிய பட்டம் ஒன்றை அளித்தார். 'செய் - இ - தாய் ஷோகன்' என்னும் அப்பட்டத்தின் பொருள் 'காட்டு

மிராண்டிகளை அடக்கவல்ல பெரிய சேனதிபதி' என்பதாகும். இது கி. பி. 1192-ஆம் ஆண்டில் நிகழ்ந்தது. இந்தப் பட்டம் அவன் கால்வழியில்வரும் யாவருக்கும் உரியதாகும். இந்தப் பட்டத்துக்கு உரியோரே ஆட்சிக்கும் உரியோரா யிருந்தனர். ஜப்பானை உண்மையில் ஆண்டு வந்தது சக்கரவர்த்தி அல்ல; ஷோகன்தான். இவ்வாறு அங்கு ஷோகன் அரசு ஆரம்பமாயிற்று. இவ்வரசு மிக நீண்டகாலம் அதாவது ஏறக்குறைய 700 ஆண்டுகள் வரையில் நடைபெற்று வந்தது. சமீப காலத்தில் புதிய ஜப்பான் தன் பழைய கூட்டை உதறி எறிந்து உதயமான பொழுதுதான் அது முடிவுற்றது.

இதனல் யோரிடோமோவின் சந்ததியாரே ஷோகன்களாயிருந்து 700 ஆண்டுகள் வரையில் ஆட்சி நடத்தி வந்தார்கள் என்று கொள்ளக்கூடாது. ஷோகன்களாக வரக்கூடியவர்களின் குடும்பங்களில் பல மாறுதல்கள் நிகழ்ந்தன. உள்நாட்டுச் சச்சரவுகளும் ஓயாமல் நிகழ்ந்து வந்தன. ஆனல், சக்கரவர்த்திக்கு உண்மையில் யாதொரு அதிகாரமும் இல்லாமல் ஷோகனக யார் வந்தாலும் அவர் சக்கரவர்த்தியின் பேரால் ஆட்சிபுரிவது என்கிற முறை இந்நீண்டகாலம் அமுலில் இருந்து வந்தது. பல தடவைகளில், ஷோகன் ஆக இருப்பவர் வெறும் ஆட்சியின் சின்னமாக மட்டும் இருந்துவர, பல உத்தியோகஸ்தர்கள் உண்மையில் அதிகாரம் செலுத்தி வந்ததும் உண்டு.

தலைநகரான கியோட்டோவில் சுக போகங்களில் திளைத்து ஆடம்பர வாழ்வு வாழ்வதைக்கண்டு யோரிடோமோ அஞ்சினன். அத்தகைய வாழ்வு தன்னையும் தன் தோழர்களையும் பலவீனப்படுத்திவிடும் என்பது அவன் எண்ணம். ஆகவே, அவன் காமகூரா என்னுமிடத்தில் தன்னுடைய ராணுவத் தலைநகரை ஸ்தாபித்தான். அ ல்

இந்த முதல் ஷோகன் அரசு, காமகூரா ஷோகன் அரசு என்று வழங்கி வருகிறது. அது கி. பி. 1333 வரையில் அதாவது ஏறக்குறைய 150 ஆண்டுகள் வரையில் நடைபெற்றது. இக்காலத்தில் பெரும்பாலும் ஜப்பானில் அமைதி நிலவியிருந்தது. பல வருஷங்களாக நிகழ்ந்து வந்த உள்நாட்டுப் போர்களுக்குப் பிறகு நிலவிய இவ்வமைதி மிகவும் விரும்பத்தக்கதாகவும் வரவேற்கத்தக்கதாகவும் இருந்தது. அக்காலத்தில் நாடு பல்வளம் பெற்றுப் பொலிந்தது. அப்போதைய ஜப்பானிய அரசாங்கம் அக்காலத்து ஐரோப்பாவின் வேறு எத்தேச அரசாங்கத்தைக் காட்டிலும் திறமை வாய்ந்ததாக இருந்தது. ஜப்பான் சீனுவுக்கு ஏற்ற சிஷ்யப்பிள்ளைதான். ஆயினும் இவ்விரண்டு நாடுகளின் மனோபாவங்களுக்கிடையே பெரிய வேற்றுமை இருந்தது. நான் ஏற்கெனவே கூறியுள்ளபடி சீனு, சமாதானத்தையும் அமைதியையும் விரும்பும் நாடு. ஜப்பானோ ஆக்கிரமிப்பு நோக்கமும் போர்க்குணமும் கொண்டநாடு. சீனுவில் போர்வீரனையும் போர்த்தொழிலையும் இழிவாகக் கருதினுர்கள். ஜப்பானிலோ உயர் நிலையில் உள்ளவர்கள் போர்வீரர்களா யிருந்தார்கள். ஒரு தாய்மியோவாகவோ அல்லது போர் வீரனுகவோ தான் இருக்கவேண்டுமென்பதே ஜப்பானியனின் நோக்கம்.

ஆகவே, ஜப்பான் சீனுவிடமிருந்து பெற்றுக்கொண்டது அதிகமாயினும் யாவற்றையும் தன் வழியில், தன் மேதைக்கும் பாவத்துக்கும் ஏற்பத் திருத்தி அமைத்துக் கொண்டது. ஜப்பானுக்குச் சீனுவுடன் நெருங்கிய தொடர்பு இருந்துவந்தது. சீனக் கப்பல்கள் மூலம் இரு நாடுகளுக்கு மிடையே வியாபாரமும் நடந்துவந்தது. பதின்மூன்ருவது நூற்றுண்டின் இறுதியில் இவைகளுக்குத் திடீரென்று முற்றுப்புள்ளி வைக்கப்பட்டது. ஏனெனில், மங்கோலியர் சீனுவையும் கொரியாவையும்

கைப்பற்றிக் கொண்டனர். மங்கோலியர் ஜப்பானையும் ஜெயிக்க முயன்றனர். ஆனால், அவர்கள் முயற்சி பலிக்க வில்லை. ஆசியாவை அடியோடு மாற்றி ஐரோப்பாவையும் ஆட்டி வைத்த மங்கோலியரால் ஜப்பானை மட்டும் அசைக்கமுடியவில்லை. ஜப்பான் தன் பழைய வழியில் சென்றுகொண் டிருந்தது. முன்பிருந்த வெளித்தொடர்பு கள்கூட இப்போது அதற்கு இல்லாமல் போயின.

ஜப்பானின் பழைய அரசாங்க ஏடுகளில் அந்நாட் டுக்கு முதல் முதல் பருத்திச்செடி வந்த வரலாறு ஒன்று காணப்படுகிறது. சில இந்தியர்கள் ஏறிவந்த கப்பல் ஜப்பானின் கரையோரத்தில் உடைந்து விட்டதாம். அதில் தப்பிப் பிழைத்தவர்கள் பருத்தி விதைகளைத் தங்களுடன் ஜப்பானுக்குக் கொண்டு வந்தார்களாம். இது நிகழ்ந்தது கி. பி. 799-ஆம் ஆண்டில்.

இதற்குப் பிறகு தேயிலைச் செடி வந்தது. முதன் முதலில் ஒன்பதாம் நூற்றாண்டின் ஆரம்பத்தில் அது கொணரப்பட்டது. ஆனால் அது பரவவில்லை. கி. பி. 1191-இல் ஒரு பௌத்ததுறவி சீனாவிலிருந்து தேயிலை விதைகளைக் கொண்டு வந்தார். உடனே ஜனங்கள் அதை அதிகமாக உபயோகிக்க ஆரம்பித்தார்கள். பிறகு தேயிலைப் பானத்துக்கு வேண்டிய பாத்திரங்களுக்குத் தேவை ஏற்பட்டது. 13-ஆவது நூற்றாண்டின் கடைசியில் ஒரு ஜப்பானியக் குயவன் பீங்கான் செய்யும் தொழிலைக் கற்றுவரச் சீனாவுக்குச் சென்றான். அவன் திரும்பிவந்து அருமையான பீங்கான் பாத்திரங்கள் செய்ய ஆரம்பித் தான். இப்போது ஜப்பானில் தேயிலை பருகுவது ஒரு நுண்கலையாக விளங்குகிறது. அதில் ஒரு பெரிய சம்பிர தாய முறை ஏற்பட்டிருக்கிறது. நீ ஜப்பானுக்குச் சென்றால் சரியான முறையில் தேயிலை அருந்தவேண்டும். இல்லாவிட்டால் நாகரிகம் தெரியாதவளாக மதிக்கப் படுவாய்.

## 56

## மனிதனின் தத்துவ விசாரணை

ஜூன் 10, 1932.

**நா**லு நாளைக்கு முன் நான் உனக்குப் பரில்லி சிறையி லிருந்து எழுதினேன். அன்று மாலையே என்னை மூட்டை முடிச்சுகளுடன் சிறைக்கு வெளியே புறப்படத் தயாராய் இருக்கும்படி கூறினார்கள். விடுதலை செய்வதற்கு அல்ல. இன்னொரு சிறைக்கு மாற்றுவதற்குத்தான். ஆகவே நான்கு மாதம் நான் தங்கியிருந்த என் சிறைக்கோட்ட நண்பர்களிடம் விடை பெற்றுக்கொண்டேன். என்னைச் சூழ்ந்து 24 அடி உயர்ந்திருந்த அந்தச் சுவரைக் கடைசி முறையாக நோக்கினேன். அதன் தண்ணளி நிறைந்த நிழலிலன்றோ நான் இத்தனை காலம் வீற்றிருந்தது! இவ் வாறு எல்லோரிடமும் சொல்லிக்கொண்டு வெளியுல கத்தை மீண்டும் ஒருகணமாவது காண்பதற்குப் புறப்பட் டேன். என்னுடன் இன்னொருவரும் மாற்றப்பட்டார். அவர்கள் எங்களை பரில்லி ஸ்டேஷனுக்கு அழைத்துச் செல்லவில்லை. ஏனெனில், ஜனங்கள் எங்களைப் பார்த்து விட்டால் என்ன செய்வது? நாங்கள்தான் இப்போது கோஷாக்க ளாகிவிட்டோமே! ஐம்பது மைல் எங்களைக் காரில் அழைத்துச் சென்று காட்டிலுள்ள ஒரு ஸ்டேஷ னுக்குக் கொணர்ந்தார்கள். இந்தக் கார்ச் சவாரியை அளித்த அவர்களிடம் எனக்கு நன்றி ததும்பியது. இரவில் வீசும் குளிர்ந்த காற்றின் அநுபவம் பெரு மகிழ்ச்சியைத் தந்தது. பல மாதங்கள் அடைபட்டுக் கிடந்தபிறகு, மரம், மனிதன், விலங்கு ஆகியவற்றின்

நிழல்தோற்றம் நம் பக்கம் விரைந்து செல்வதைக் காணப் பேரானந்தமா யிருந்தது.

எங்களை டேராடூனுக்குக் கொண்டுவந்தார்கள். எங்களுடைய பிரயாணம் கடைசிவரையில் ரயிலில் நடைபெறவில்லை. எங்கே ஜனங்கள் பார்த்துவிடுவார் களோ என்று அஞ்சி விடியற்காலையில் எங்களை ரயிலி லிருந்து இறக்கி மீண்டும் காரில் அழைத்துச்சென்றார்கள்.

ஆகவே, இப்போது நான் டேராடூனிலுள்ள இச் சிறிய சிறையில் உட்கார்ந்திருக்கிறேன். பரில்லியைவிட இந்த இடம் பரவாயில்லை. இங்கு உஷ்ணம் குறைவாய் இருக்கிறது. பரில்லியைப்போல் இங்கு உஷ்ணம் 112 டிக்ரிவரையில் ஏறுவதில்லை. எங்களைச் சுற்றியுள்ள சுவர்களும் சற்றுத் தாழ்வாக இருக்கின்றன. அச்சுவர் களுக்குமேல் காணப்படும் மரங்களும் அங்கிருந்தவற்றை விடத் தழைத்துப் பசுமையாகக் காணப்படுகின்றன. அங்குச் சற்றுத் தொலைவில் ஒரு தென்னைமரம் எங்கள் சுவருக்கு மேல் தன் தலையை நீட்டிக்கொண் டிருக்கிறது. அதைப் பார்க்க எனக்கு இலங்கையும் மலையாளமும் ஞாப கத்துக்கு வருகின்றன. அதில் ஒரு சந்தோஷம். மரங் களுக்கு அப்பால் மலைகள் இருக்கின்றன. எனக்கும் அவை களுக்கும் அதிகதூரம் இல்லை. அவைகளின் உச்சியில் முசூரி உட்கார்ந்திருக்கிறது. அம்மலைகளை நான் காண முடியாது. மரங்கள் அவைகளை மறைத்து நிற்கின்றன. ஆனால் அவைகளின் அருகில் இருப்பதே ஓர் இனிமை அல்லவா? இரவில் தூரத்தே முசூரியின் விளக்குகள் 'மினுக் மினுக்' என்று தோன்றுவதாக நினைத்துக் கொள்வதே ஓர் இன்பம் அல்லவா?

நாலு ஆண்டுகளுக்கு முன்—நான்கா, மூன்று என்பது ஞாபகமில்லை—நீ முசூரியில் இருந்தபோது நான் இக்கடி தங்களை உனக்கு எழுதத் தொடங்கினேன். இந்த மூன்ற

நாலு வருஷத்தில் எவ்வளவோ நடந்துவிட்டன! நீயும் எவ்வளவு பெரியவளாக வளர்ந்துவிட்டாய்! இக்கடிதங்களைப் பெரும்பாலும் சிறையிலிருந்தே, நினைத்தபோது திடீரென எழுதுவதும், பின்னர் நீண்ட இடைக்காலத்திற்குப்பின் எழுதுவதுமாக, எழுயிருக்கிறேன். அதிகம் எழுத எழுத எனக்கே நான் எழுதுவது பிடிக்கவில்லை. இன்னொரு பயமும் எனக்குக் கூடவே உண்டாகிறது. இக்கடிதங்கள் உனக்கு அவ்வளவாகப் பிடிக்குமோ பிடிக்காதோ? ஒருவேளை உனக்கு இவைகள் வெறும் பாரமாக முடிந்துவிட்டால்? பின் ஏன் நான் இவைகளைத் தொடர்ந்து எழுதவேண்டும்?

கடந்தகால நிகழ்ச்சிகளை விரிவாகவும் கோவையாகவும் உனக்குப் படம் பிடித்துக் காட்டவேண்டும்; எவ்வாறு நம்முடைய இந்த உலகம் படிப்படியாக மாறுதல், அபிவிருத்தி, முற்போக்கு, சில வேளைகளில் மேற்பார்வைக்குப் பிற்போக்குங்கூட அடைந்துவந்திருக்கிற தென்பதை நீ உணருமாறு செய்யவேண்டும்; பழைய நாகரிகங்களையும் அவைகள் எவ்வாறு கடல்போல் பொங்கி மீண்டும் அடங்கிப்போயின என்பதையும் உனக்குச் சிறிதளவாவது அறிவுறுத்தவேண்டும்; சரித்திரம் என்னும் நதியானது காலாந்தரங்களிலும் இடையறாமல், முடிவுறாமல், பயங்கரமான சுழல்களோடும் சாந்தமான தேக்கங்களோடும் யாரும் கண்டறியாத ஒரு கடலைநோக்கி அலையெறிந்து விரைந்து செல்வதை நீ காணுமாறு செய்யவேண்டும்; மனிதன் மிருகப் பிராயமாக வாழ்ந்துவந்த ஆதிகாலம் தொடங்கி இன்று அவன் தனது உயர்வான நாகரிகத்தைப்பற்றித் தெரியாத்தனமாக வீண் பெருமை பாராட்டிக்கொள்ளும் கட்டம் வரையில், அவன் நடந்துசென்ற அடிச்சுவட்டில் உன்னை அழைத்துச்சென்று காட்டவேண்டும்: இவைகளே என்

ஆசைகள். நீ முசூரியில் இருந்த நாட்களில் நாம் இப்படித்தான் ஆரம்பித்தோம். மனிதன் நெருப்பைப் பயன்படுத்தத் தொடங்கியது, விவசாயத்தில் ஈடுபட்டது, பட்டணங்களில் குடியேறியது, வேலையைப் பகிர்ந்து செய்தது ஆகியவற்றைப்பற்றிப் பேசினோம். ஆனால், போகப்போக சாம்ராஜ்யங்களிலும் அவைபோன்ற பிற விஷயங்களிலும் நாம் சிக்குண்டுவிட்டதால் அந்தப் பழைய சுவடு நம் கண்ணுக்கு மறைந்துவிட்டது. சரித்திரத்தின் அகண்டபரப்பில் பட்டும் படாததுமாகச் சுற்றி வந்திருக்கிறோம். பழைய நிகழ்ச்சிகளின் சடலத்தைமட்டுமே நான் உன்முன்பு நிறுத்தியிருக்கிறேன். அதைத் தசை கொண்டு மூடி, நரம்புகொண்டு கட்டி, அதனுள்ளே ரத்தத்தைப் பாய்ச்சி உயிரும் ஒளியும் உள்ளதாகச் செய்துதரவேண்டுமென்று விரும்பிவந்திருக்கிறேன்.

ஆனால், அந்த ஆற்றல் எனக்கு இல்லை என்று அஞ்சுகிறேன். அந்த ஆச்சரியத்தை உன் கற்பனையின் உதவியால் நீயேதான் காணவேண்டும். அப்படியாயின், பழைய சரித்திரத்தை நீயே பல நல்ல நூல்களில் படித்துத் தெரிந்துகொள்ளலாமே, நான் வேறு எதற்காக எழுத வேண்டும்? இவ்வாறு பல ஐயங்களிடையே நான் இக்கடிதங்களை எழுதிவந்திருக்கிறேன். இனியும் எழுதி வருவேன் என்று நினைக்கிறேன். உனக்குக் கொடுத்த வாக்கை நான் மறக்கவில்லை. அதை நிறைவேற்ற முயலுவேன். ஆனால், நான் எழுதிவருவதற்கு இதைவிடப் பெரிய காரணம் ஒன்று இருக்கிறது. நான் எழுத உட்காரும் போதெல்லாம் நீ என் அருகிலிருப்பது போலவும் நாம் இருவரும் அளவளாவிக்கொண் டிருப்பது போலவும் என் உள்ளத்தில் பாவித்து உவகை கொள்கிறேனே, அதுதான் அந்தக் காரணம்.

மனிதன் மிருகப்பிராயமான தன் ஆதி நிலையிலிருந்து

தட்டுக்கெட்டுத்தடுமாறி ஒருவாறு முன்னேற ஆரம்பித்த பிறகு அவன் கடைப்பிடித்துச் சென்ற சுவட்டைப்பற்றி மேலே கூறினேன். அப்பாதையில் அவன் பல்லாயிரம் ஆண்டுகளாக நடந்துவந்திருக்கிறான். ஆனால், மனிதன் தோன்றுவதற்கு முன்பே யுக யுகாந்தரங்களாக வந்துள்ள இப்பூமியின் கதையோடு ஒப்பிட்டுப் பார்க்கும்போது மேற்கூறிய கால எல்லை மிகக் குறுகியதாகவே காணப்படு கிறது. ஆனால் நமக்கோ என்றால், மனிதனுக்கு முன்னால் வாழ்ந்தொழிந்த பெரிய மிருகங்களைக் காட்டிலும் மனிதனே அதிக சுவாரஸ்யமாகத் தென்படுகிறான். அதற்குக் காரணம் அவனிடம் மற்றவைகளிடம் காணப் படாத ஒரு புதிய வஸ்து காணப்படுவதுதான். இதைத் தான் நாம் மனம் என்று கூறுகிறோம். அதாவது எல்லா வற்றையும் அறியவேண்டும் என்கிற அவா; எதையும் விசாரணை செய்து பார்க்கவேண்டும், தேடித் தெளிய வேண்டும் என்கிற விருப்பம். ஆகவே, ஆதிகாலத்தி லிருந்தே மனிதனின் இந்தத் தத்துவ விசாரணை ஆரம்ப மாகிறது. ஒரு சிறு குழந்தையைக் கவனி. அது எப்படித் தன்னைச் சூழ்ந்துள்ள புதிய உலகை நோக்குகிறது, எப்படி மக்களையும் மற்றவைகளையும் அடையாளம் கண்டுகொள்கிறது, எப்படி விஷயங்களைத் தெரிந்து கொள்கிறது என்று பார். ஒரு சிறு பெண்ணைக் கூர்ந்து நோக்கு. அவள் சற்று அறிவுள்ளவளாயிருந்தால் தொண்ணூறு விஷயங்களைப்பற்றித் தொள்ளாயிரம் கேள்விகள் கேட்பாள். அதேபோல, சரித்திரோதய காலத்தில், மனிதன் இன்னும் பிள்ளைப் பிராயத்தில் இருந்தபொழுது, உலகம் புதுமையும், வியப்பும், அச்சமும் உடையதாக அவனுக்குக் காட்சி அளித்திருக்க வேண்டும். அவன் தன்னுடைய மருண்ட விழிகளால் உலகை வெறித்துநோக்கிப் பல்லாயிரம் கேள்விகள் கேட்டிருக்க

வேண்டும். அவன் தன்னைத்தவிர வேறு யாரிடம் அவைகளைக் கேட்க முடியும்? அவனுக்கு மறுமொழிகூற வேறு யாரும் இல்லையல்லவா? ஆனால், அவனிடம் இந்த 'மனம்' என்கிற சூட்சுமமான, ஆச்சரியமான ஒரு கருவி இருந்தது. அதன் துணைகொண்டு அவன் மெள்ளமெள்ளச் சிரமப்பட்டுத் தன் அநுபவங்களை யெல்லாம் சேர்த்துத் திரட்டவும், அவைகளிலிருந்து கற்கவும் ஆரம்பித்தான். ஆகவே, ஆதிநாள்தொட்டு இதுகாறும் மனிதனின் இந்த விசாரணை நடைபெற்று வந்துள்ளது. அவன் பல விஷயங்களைக் கண்டுபிடித்தான்; இன்னும் கண்டுபிடிக்கவேண்டிய விஷயங்கள் மேலும் பல இருக்கின்றன. அவன் தன் பாதையில் முன்னேற முன்னேற இன்னும் பல புதிய பரப்புகள் தன்முன் விரிந்துகிடப்பதைக் காண்கிறான். இவைகள், அவன் தன் விசாரணையின் முடிவிலிருந்து (அதற்கு முடிவு என்பது ஒன்று உண்டென்றால்) இன்னும் வெகு தூரத்தில் இருக்கிறான் என்பதை அவனுக்கு உணர்த்துகின்றன.

மனிதனின் இந்த விசாரணைதான் என்ன? அவன் எவ்விடத்தை நோக்கி யாத்திரை செய்கிறான்? பல்லாயிரம் ஆண்டுகளாக மனிதன் இவ்வினாக்களுக்கு விடை காண முயன்றுவந்திருக்கிறான். மதம், தத்துவ சாஸ்திரம், விஞ்ஞானம் யாவும் இவ்வினாக்களை ஆராய்ந்து பலதிறப்பட்ட விடைகள் கண்டுவந்திருக்கின்றன. அவ்விடைகளையெல்லாம் உனக்குக் கூறுவதில் பயனில்லை. ஏனெனில் அவைகளில் பெரும்பாலானவற்றை நானே அறியேன். பொதுவாக, மதம் சில கொள்கைகளை எடுத்துக்கூறி இதுதான் உண்மை, இதைத்தான் எல்லாரும் ஒப்புக்கொள்ள வேண்டும் என்று பிடிவாதமாகவும் பலாத்காரமாகவும் சாதிக்க ஆரம்பித்தது. மதத்துக்கு யாவற்றையும் பகுத்து ஆராய்ந்து, தேடித் தெளியக்கூடிய

அறிவு என ஒன்று இருப்பதைப் பற்றிக் கவலைகிடையாது. விஞ்ஞானம் ஐயத்தோடும் தயக்கத்தோடும் பேசுகிறது. ஏனெனில் விஞ்ஞானத்தின் தன்மையே அதுதான். 'இதுதான் உண்மை' என்று அது எதையும் சாதிக்க இயலாது. பகுத்தறிவின் துணைகொண்டு எதையும் நன்கு சோதித்து, ஆராய்ந்து பார்த்த பிறகே அது ஒன்றை முடிவுகட்ட இயலும். விஞ்ஞானத்தையும், விஞ்ஞான முறைகளையுமே நான் விரும்புகிறேன் என்பதை நான் உனக்குச் சொல்லத் தேவை இல்லை.

மனிதனின் இவ் விசாரணையைப் பற்றிய ஐயவினுக்களுக்கு நாம் நிச்சயமான மறுமொழி கூற இயலாதவர்களாய் இருக்கலாம். ஆனால், இவ்விசாரணை இருவழிகளில் சென்றிருப்பதை நாம் காண்கிறோம். மனிதன் புறநோக்கு, அகநோக்கு ஆகிய இரு நோக்கும் உடையவனாக இருந்து வந்திருக்கிறான். அவன் இயற்கையையும் தன்னையும் உணர முயன்று வந்திருக்கிறான். முன்னையது புற நோக்கு; பின்னையது அக நோக்கு. இரண்டும் உண்மையில் ஒன்றே; ஏனெனில் மனிதன் இயற்கையின் ஒரு பகுதியே அல்லவா? இந்தியா, கிரீஸ் இந்நாடுகளின் புராதன தத்துவ சாஸ்திரிகள் 'உன்னை உணர்' என்று இயம்பினார்கள். இந்த ஞானத்தை அடையப் பழைய ஆரிய முனிவர்கள் செய்த இடைவிடாத, வியக்கத்தக்க முயற்சிகளின் வரலாறுகளே நமது உபநிஷதங்கள். இயற்கையைப் பற்றிய இன்னொரு ஞானத்தை விஞ்ஞானம் தேட ஆரம்பித்தது. அதில் அது அடைந்துள்ள பெரிய முன்னேற்றத்திற்கு நமது தற்கால உலகமே சாட்சி. இப்போது, விஞ்ஞானம் தன் இறக்கைகளை இன்னும் விசாலமாக விரித்து, இவ்விசாரணையின் இரு வழிகளையும் தானே எடுத்துக்கொண்டு இரண்டையும் பொருத்திப் பார்க்க முயன்றுவருகிறது. நமக்கு

வெகு தொலைவிலுள்ள நட்சத்திரங்களையும் அது நம்பிக்கையுடன் நோக்குகிறது. எப்பொழுதும் இயங்கிக் கொண்டிருக்கும் ஆச்சரியமான எந்தப் பரமாணுக்களால் இங்கு எப்பொருள்களும் ஆக்கப்பட்டிருக்கின்றவோ அவைகளைப் பற்றியும் அது நமக்கு எடுத்துச்சொல்லு கிறது.

புதியபுதிய உண்மைகளைக் காணும்வழியில் மனிதனை அவனுடைய மனம் வெகுதூரம் கொண்டு சென்றிருக் கிறது. அவன் இயற்கையை அதிகமாக அறிய அறிய அதைக் கட்டி ஆண்டு தனக்குப் பயன்படுத்திக்கொள்ளத் தலைப்பட்டுவருகிறான். அதனால் அவன் ஆற்றல் வளர்ந்து வருகிறது. ஆனால், இந்த விஷயம்தான் நமக்குத் துக்கத் தைத் தருகிறது. அவன் தனக்குக் கிடைத்துள்ள இப் புதிய ஆற்றலை எப்படிப் பயன்படுத்துவது என்று தெரியாமல் பெரும்பாலும் தவறான வழியிலேயே செலுத்திவந்திருக்கிறான். விஞ்ஞானத்தையே அவன் முக்கியமாக இதற்குத்தான் உபயோகித்துக் கொள்ளு கிறான். இதனிடமிருந்து பயங்கரமான ஆயுதங்களைப் பெற்றுத் தன் சகோதரனைக் கொன்றும், தான் அரும் பாடுபட்டுக் கட்டிய நாகரிகத்தை அழித்தும் வருகிறான்.

# 57

## கி. பி. முதலாயிரம் ஆண்டுகளின் முடிவு

ஜுன் 11, 1932.

நமது பிரயாணத்தில் நாம் இப்போது அடைந்துள்ள கட்டத்தில் சிறிது தங்கி நம்மைச் சுற்றிலும் சற்று உற்று நோக்குவது பயன் தரும் என்று நம்புகிறேன். நாம் எவ்வளவு தூரம் சென்றிருக்கிறோம்? இப்போது நாம் எங்கே இருக்கிறோம்? உலகம் எத்தகைய தோற்றத்தைக்கொண்டிருக்கிறது? சரி, இப்போது நாம் அலாவுதீனுடைய மாய ஜமுக்காளத்தில் அமர்ந்து அக்கால உலகின் பல்வேறு பாகங்களுக்கும் சென்று வருவோமாக.

கிறிஸ்து சகாப்தத்தின் முதலாயிரம் ஆண்டுகளை நாம் இப்போது கடந்துவிட்டோம். சில தேசங்களில் இதற்குச் சிறிது முந்தியும் வேறு சில தேசங்களில் சிறிது பிந்தியும் இருக்கிறோம்.

ஆசியாவில் சீனா சூங் வமிச ஆட்சியின்கீழ் இருக்கிறது. பெருமை பெற்ற டாங் வமிசம் முடிவடைந்துவிடுகிறது. சூங் மன்னர்கள் உள்நாட்டுத் தொல்லைகளையும், வட பகுதியைச் சார்ந்த அநாகரிகர்களான கித்தானியரின் புறத் தாக்குதலையும் ஒருங்கே எதிர்க்க வேண்டியிருக்கிறது. 150 ஆண்டுகள் அவர்கள் எதிர்த்துப் பார்க்கிறார்கள். கடைசியில் பொன்னிறத் தார்த்தாரியர் அல்லது கினியர் எனப்பட்ட இன்னொரு அநாகரிக ஜாதியாரின் உதவியைத் தங்கள் பலவீனம் காரணமாகக் கோருகிறார்கள். கினியர் வருகிறார்கள். ஆனால், தங்கி

விடுகிறார்கள். பாவம், சூங் மன்னர்களின் ஆட்சிப் பரப்புச் சுருங்கி விடுகிறது. அவர்கள் தெற்கே சென்று இன்னொரு நூற்றைம்பது ஆண்டுகள் ஆட்சி புரிகிறார்கள். அவர்களுடைய ஆட்சியின்கீழ் ஓவியம் முதலான அழகிய கலைகள் வளம் பெறுகின்றன. பீங்கான் செய்யும் தொழிலும் சிறப்பெய்துகிறது.

கொரியாவில் சிறிது காலம் போரும் பூசலுமாக இருக்கிறது. பிறகு கி. பி. 935-இல் ஓர் ஐக்கிய சுதந்தர ராஜ்யம் ஸ்தாபிக்கப்படுகிறது. இது 450 ஆண்டுகள் வரையில் நிலைபெற்றிருக்கிறது. கலை, நாகரிகம், அரசாங்க முறைகள் ஆகிய துறைகளில் கொரியா சீனுவிடமிருந்து தாராளமாகக் கடன் வாங்கிக் கொள்ளுகிறது. கொரியாவுக்கும் ஜப்பானுக்கும் இந்தியாவிலிருந்து சீனு வழியாக மதமும், ஓரளவுக்குக் கலையும் செல்கின்றன. கிழக்கே தூரத்தில் இருக்கும் ஜப்பான் ஆசியாவின் துவார பாலகனைப்போல் விளங்குகிறது. அது உலகத்தோடு அதிகத் தொடர்பு கொள்ளாமல் தன் வாழ்க்கையை நடத்திச் செல்லுகிறது. புஜிவாரர் குடும்பம் உச்ச நிலையில் இருக்கிறது. ஒரு கூட்டத் தலைவனைவிடச் சற்று அதிகமான அந்தஸ்தைச் சமீபத்தில் அடைந்த சக்கரவர்த்தி அதிகமாகப் பிரகாசிக்க முடியவில்லை. இதற்குப் பிறகு ஷோகன் ஆளுகை தோன்றுகிறது.

மலாயாசியாவில் இந்தியக் குடியேற்றங்கள் ஓங்குகின்றன. அங்கோர் அணிநகர் கம்போடியாவின் தலைநகராக விளங்குகிறது. இந்த ராஜ்யம் மகோன்னத நிலையில் இருக்கிறது. சுமத்திராவில் ஸ்ரீவிஜயம் பெரிய பௌத்த சாம்ராஜ்யத்தின் தலைநகராகத் திகழ்கிறது. அது கீழைத் தீவுகள் எல்லாவற்றையும் அடக்கி ஆள்வதோடு அவைகளுடன் பெரிய வியாபாரமும் நடத்துகிறது. கிழக்கு ஜாவாவில் ஒரு சுதந்தர ஹிந்து ராஜ்யம்

நடந்து வருகிறது. அது வெகு விரைவில் வளர்ந்து, வருங் காலத்தில் ஸ்ரீவிஜய சாம்ராஜ்யத்துடன் வியாபாரத் துறையில் போட்டியிடுகிறது. அதனால் இரண்டுக்கும் இடையே கடும்போர் மூளுகிறது. தற்காலத்தில் வியா பாரத்தால் வரும் செல்வத்தை உத்தேசித்து ஐரோப்பிய நாடுகள் போரிடவில்லையா, அதைப்போல. முடிவில் இந்த ஹிந்து ராஜ்யம் ஸ்ரீவிஜயத்தை அழித்து வெற்றி பெறுகிறது.

இந்தியாவில், வடக்கும் தெற்கும் பிரிந்துநிற்கின்றன. இத்தொடர்பின்மை சிறிது காலத்திற்குமுன் இருந்ததை விடச் சற்று அதிகமாகிறது. வடக்கே கஜினி முகம்மது அடிக்கடி படையெடுத்துவந்து கொள்ளையிட்டுச் செல் கிறான். அவன் திரண்ட செல்வத்தை வாரிக்கொண்டு போகிறான். பாஞ்சாலத்தை தன் ராஜ்யத்தில் சேர்த்துக் கொள்ளுகிறான். தெற்கே, ராஜராஜனின் கீழும் அவன் மகன் ராஜேந்திரனின் கீழும் சோழ சாம்ராஜ்யம் விரிந்து பலம் பொருந்தியதாய் விளங்குகிறது. தென் இந்தியாவில் அவர்களுடைய ஆதிக்கம் வளருகிறது. சோழர்களுடைய கடற்படைகள் அரபிக் கடலிலும் வங்காள குடாக் கடலிலும் செருக்குடன் உலாவி வருகின்றன. சோழர்கள் இலங்கைமீதும், தென் பர்மாமீதும், வங்காளத்தின்மீதும் படையெடுத்துச் சென்று அவைகளை ஜெயிக்கிறார்கள்.

மத்திய ஆசியாவிலும் மேற்கு ஆசியாவிலும் பாக் தாதைத் தலைநகராகக் கொண்ட அப்பாசீது சாம்ராஜ்யம் சிதறுண்டு கிடப்பதைப் பார்க்கிறோம். பாக்தாது இன்னும் பெருமையுடன்தான் துலங்குகிறது. அதன் புதிய அரசர்களாகிய செல்ஜுக் துருக்கியரின்கீழ் அதன் ஆதிக்கம் நாளுக்குநாள் வலுத்து வருகிறதென்றே கூற வேண்டும். ஆயினும், பழைய சாம்ராஜ்யம் பல சிறு ராஜ்யங்களாகச் சிதறிக்கிடக்கிறது. இஸ்லாம், வெறும்

சாம்ராஜ்யமே என்னும் நிலைமாறி, பல தேசங்களுக்கும் பல மக்களுக்கும் உரிய ஒரு மதம் என்னும் நிலைக்கு, அது வந்துவிட்டது. அப்பாசீது சாம்ராஜ்யத்தின் சிதைவிலிருந்து முளைத்ததுதான் கஜினி ராஜ்யம். அதை ஆண்ட முகம்மதுதான் இந்தியாமீது படையெடுத்து வந்தவன். பாக்தாது சாம்ராஜ்யம் சிதைவுற்றாலும் பாக்தாது நகரின் பெருமை குன்றவில்லை. சேய்மைக்கண், பல இடங்களிலுமிருந்த கலைஞர்களையும், அறிஞர்களையும் அது தன்பால் ஆகர்ஷித்து வந்தது. இக்காலத்தில் மத்திய ஆசியாவில் பொகாரா, ஸாமர்கந்த், பால்க் முதலிய பெரிய நகரங்கள் புகழ்பெற்றுத் திகழ்கின்றன. அவைகளுக்குள் மிகப் பெரிய அளவில் வியாபாரம் நடைபெறுகிறது. பெரிய பெரிய வியாபாரக் கூட்டத்தார் ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்திற்குப் பண்டங்களைக் கொண்டு செல்கிறார்கள்.

மங்கோலியாவிலும் அதைச் சுற்றியுள்ள பிரதேசத்திலும் புதிய நாடோடி ஜாதியார்கள் எண்ணிக்கையிலும் பலத்திலும் வளர்ந்து வருகிறார்கள். இருநூறு ஆண்டுகளுக்குப் பிறகு அவர்கள் ஆசியாவை ஒரு கலக்கு கலக்கப் போகிறார்கள். நாம் குறிக்கும் இக்காலத்தில் மத்திய ஆசியாவிலும் மேற்கு ஆசியாவிலும் வீறுகொண்டு விளங்குவோர் நாடோடிகளின் உற்பத்தி ஸ்தானமாகிய அந்த மத்திய ஆசியப் பிரதேசத்திலிருந்து வந்தவர்களே ஆவர். சீனர்கள் அவர்களை மேற்கே ஓட்டிவிடவே சிலர் இந்தியாவிலும் சிலர் ஐரோப்பாவிலும் பரவலானார்கள். அவ்வாறு மேற்கே ஓட்டப்பட்ட செல்ஜுக் துருக்கியர் பாக்தாது சாம்ராஜ்யத்துக்குப் புத்துயிர் அளிப்பதையும், கான்ஸ்டாண்டிநோபிளைத் தலைநகராகக் கொண்ட கீழை ரோம சாம்ராஜ்யத்தைத் தாக்கி வெற்றி பெறுவதையும் காண்கிறோம்.

இதுவரையில் ஆசியாவைப் பார்த்தோம். செங் கடலுக்கு அப்பால் எகிப்து பாக்தாதுக்கு அடங்கிய நாடாயிராமல் சுதந்தரமாக நிற்கிறது. அதை ஆளும் முஸ்லீம் அரசன் தன்னை ஒரு தனி கலீபாவாக அறிவித்துக் கொள்ளுகிருன். வட ஆப்பிரிக்காவும் ஒரு சுதந்தரமுள்ள தனி முஸ்லீம் நாடாக இருந்தது. ஜிப்ரால்டர் ஜலசந்திக்கு அப்பாலுள்ள ஸ்பெயினிலும் சுதந்தர முஸ்லீம் ராஜ்யம் நடைபெற்று வந்தது. அதற்குக் குர்துபா அமீர் பீடம் அல்லது கார்டோபா என்று பெயர். இதைப்பற்றிப் பிறகு சொல்லுகிறேன். ஆனல், அப்பாசீது கலீபாக்கள் ஆட்சிக்கு வந்தபோது அவர்களுக்கு அடங்கியிருக்க ஸ்பெயின் மறுத்துவிட்டது, உனக்கு முன்னமேயே தெரியும். அதிலிருந்து அது சுதந்தரமாகவே இருந்து வருகிறது. அது பிரான்சை ஜெயிப்பதற்குச் செய்த முயற்சிகள் நெடுங்காலத்துக்கு முன்னரே சார்லஸ் மார்டெல் என்பவனல் நிஷ்பலனைப் போயின. இப்போது கிறிஸ்தவ ராஜ்யங்களின் முறை. அவை வடக்கிலிருந்து முஸ்லீம்களைத் தாக்கின. காலம் செல்லச் செல்ல அவைகள் அதிக நம்பிக்கையோடு தாக்கின. ஆனல், நாம் பேசும் இக்காலத்தில் கார்டோபா அமீர் பீடம் என்பது ஒரு பெரிய முற்போக்கு வாய்ந்த ராஜ்யம். விஞ்ஞானத் துறையிலும், நாகரிகத்திலும் அது மற்ற ஐரோப்பிய நாடுகளைவிட எவ்வளவோ முன்னணியில் இருந்தது.

ஸ்பெயினைத் தவிர்த்து, ஐரோப்பா அக்காலத்தில் பல கிறிஸ்தவ ராஜ்யங்களாகப் பிரிக்கப்பட்டிருந்தது. இதற்கிடையில் கிறிஸ்தவ மதம் ஐரோப்பா முழுவதும் பரவி இருந்தது. வீரர்களையும் கடவுளர்களையும் வழிபடும் பழைய மதங்கள் அநேகமாக மறைந்துவிட்டன என்றே கூறவேண்டும். தற்காலத்திய ஐரோப்பிய நாடுகள்

உருப் பெறுவதைக் காண முடிகிறது. கி. பி. 987-இல் ஹ்யூ காபெட் என்பவனின்கீழ் பிரான்சு தோன்றுகிறது. இங்கிலாந்தில் கி.பி. 1016-இல் டென்மார்க் தேசத்தவனை கன்யூட் மன்னன் ஆட்சி புரிகிறான்; அவன், கடல் அலை களுக்குத் திரும்பிப் போகுமாறு கட்டளையிட்டது உலகப் பிரசித்தியான விஷயம். இதற்கு ஐம்பதாண்டுகளுக்குப் பிறகு நார்மண்டியிலிருந்து வெற்றி மன்னர் வில்லியம் வந்தார். ஜெர்மனி, பரிசுத்த ரோம சாம்ராஜ்யத்தின் ஒரு பாகமாக இருந்தது. அது, பல்வேறு சிறு ராஜ்யங் களாகப் பிரிவுற்றிருந்தாலும் ஒரே தேசமாக உருப் பெற்று வந்தது. ருஷியா கிழக்கே பரவி தனது கப்பற் படையின் பலத்தால் கான்ஸ்டாண்டிநோபிளைப் பய முறுத்தி வந்தது. கான்ஸ்டாண்டிநோபிளின்மீது ருஷியா வுக்கு எப்போதுமே இருந்துவரும் ஒருவித விசித்திரமான மோகத்தின் ஆரம்பத்தை நாம் இப்போது காண்கிறோம். ஆயிரமாண்டுகளாக அப்பெரிய நகரின்மீது ருஷியா ஒரு கண் வைத்து வந்திருக்கிறது. கடைசியாக 14 ஆண்டு களுக்குமுன் முடிவடைந்த சென்ற உலக மகா யுத்தத்தின் பயனாக அதை அடையலாம் என்ற நம்பிக்கையினால் அதற்கு நாக்கில் ஜலம் ஊறிக்கொண்டிருந்தது. ஆனால் திடீரென்று ருஷியாவில் புரட்சி தோன்றியது. பழைய ருஷியாவின் பல திட்டங்களும் தலைகீழாயின.

900 ஆண்டுகளுக்கு முற்பட்ட ஐரோப்பாப் படத்தில் போலந்து, மகியர் (Magyars) வாழ்ந்த ஹங்கேரி, பல்கேரியர், செர்பியர் இவர்களுடைய ராஜ்யங்கள் ஆகிய வற்றை நீ காணலாம். எதிரிகள் பலரால் சூழப்பட்டும் கிழக்கு ரோம சாம்ராஜ்யம் ஒருவாறு காலம் தள்ளி வருவதை நீ காண்பாய். அதை ருஷியர் தாக்கினார்கள்; பல்கேரியர் இன்னல்களுக்கு ஆளாக்கினார்கள்; நார்மா னியர் கடல் மார்க்கமாக வந்து இடைவிடாது துன்புறுத்தி

ஞர்கள். இப்போது, யாவரினும் அபாயமிக்க செல்ஜக் துருக்கியர் அதன் உயிருக்கே உலைவைக்க முயன்று வந்தார்கள். இப்படியெல்லாம் இருந்தும் அது இன்னும் 400 ஆண்டுகள் கழிந்தபின்பே அழியப்போகிறது. இவ்வாறு, வியக்கத்தக்க விதமாக அது நெடுங்காலம் தன் வாழ்க்கையைத் தொடர்ந்து நடத்தியதற்கு ஒரு காரணம் கான்ஸ்டாண்டிநோபிள் நகரம் அமைந்திருந்த இடத்தின் தன்மையேயாகும். எதிரியால் கைப்பற்றப்படுவதற்குக் கஷ்டசாத்தியமான இடத்தில் அது அமைந்திருந்தது. இன்னொரு காரணம் கிரேக்கர்கள் தங்களைப் பகைவரிடமிருந்து காப்பாற்றிக்கொள்வதற்குக் கண்டுபிடித்த புது முறையாகும். அதற்குக் 'கிரேக்கர் தீ' என்று பெயர். அவர்கள் கண்டுபிடித்த அப்பொருள் தண்ணீரில் பட்டவுடன் தீப்பிடித்து எரியும் இயல்புடையது. இக் கிரேக்கர் தீயின் மூலம் கான்ஸ்டாண்டிநோபிளில் வாழ்ந்தவர்கள், பாஸ்பரஸ் ஜலசந்தியைக் கடந்து வரமுயலும் எதிரி சைனியங்களைக்கொண்ட கப்பல்களைக் கொளுத்தி நாசம்செய்து வந்தார்கள்.

கிறிஸ்து சகாப்தத்தின் முதலாயிரம் ஆண்டுகளுக்குப் பிறகு ஐரோப்பாவின் படம் நமக்கு மேற்கண்ட காட்சியை அளிக்கிறது. நார்மானியர் என்போர் தங்கள் கப்பல்களில் வந்து மத்தியதரைக் கடலின் கரையோர நகரங்களையும் இதர வியாபாரக் கப்பல்களையும் கொள்ளையடிப்பதையும் நாம் காண்கிறோம். அவர்களுக்குக் கிடைத்த வெற்றி அவர்களை நாகரிகர்களாகவும் ஆக்கியது. அவர்கள் பிரான்சின் மேல்பாகத்தில் நார்மண்டி என்னுமிடத்தில் தங்களை ஸ்தாபித்துக்கொள்ளுகிறார்கள். அங்கிருந்து இங்கிலாந்தை ஜெயிக்கிறார்கள். முஸ்லீம்களிடமிருந்து சிசிலித் தீவை ஜெயித்து அதைத்

தென் இதாலியோடு சேர்த்து சிசிலியா என்னும் ராஜ்யத்தை ஸ்தாபிக்கிறார்கள்.

ஐரோப்பாவின் நடுவில் வட கடலிலிருந்து ரோமாபுரி வரையில் பரிசுத்த ரோம சாம்ராஜ்யம் வியாபித்திருந்தது. அது பல ராஜ்யங்களையும் ஒரு சக்கரவர்த்தியையும் கொண்டிருந்தது. இந்த ஜெர்மானியச் சக்கரவர்த்திக்கும் ரோமாபுரிப் போப்பாண்டவருக்குமிடையே 'யார் பெரியவர்?' என்கிற போட்டி இடைவிடாது இருந்துவந்தது. சில காலம் சக்கரவர்த்தியின் கை மேலோங்கி நிற்கும், சில காலம் போப்பாண்டவரின் கை மேலோங்கி நிற்கும். ஆனால், சிறிது சிறிதாகப் போப்பாண்டவர்களின் ஆதிக்கம் வலுத்துவந்தது. 'ஜாதிப் பிரஷ்டம் செய்தல்,' அதாவது ஒருவனைச் சமூகத்திலிருந்து தள்ளிவைத்தல் என்பது அவர்கள் கையில் பெரிய ஆயுதமாக விளங்கியது. இறுமாப்புக்கொண்ட ஒரு சக்கரவர்த்திக்கு நேர்ந்த பரிபவத்தைச் சொல்லுகிறேன், கேள். அவன் மன்னிப்பைக்கோரி போப்பாண்டவரிடம் வெறுங்காலுடன் உறைபனியில் நடந்து சென்றான். அவரோ இதாலியில் கனோசா என்னுமிடத்திலுள்ள தமது மாளிகையில் இருந்தார். உள்ளே செல்ல உடனே அநுமதி கிடைக்கவில்லை. இவ்வாறு சக்கரவர்த்தி வெகுநேரம் காத்துக்கிடந்த பிறகு போப்பாண்டவர் கருணைகூர்ந்து அவனைத் தம் சந்நிதானத்துக்கு வரச்சொன்னாராம்!

மேற்கூறிய ஐரோப்பிய நாடுகள் உருப்பெறுவதைக் காண்கிறோம். ஆனால் அவைகள் தற்போதிருப்பதுபோல இல்லை. முக்கியமாக அவைகளில் வாழ்ந்த ஜனங்கள் தற்போதைய மனப்பான்மை உடையவர்களாக இல்லை. அவர்கள் தங்களை ஆங்கிலேயர் என்றோ, பிரெஞ்சுக்காரர் என்றோ, ஜெர்மானியர் என்றோ கூறிக்கொள்ளவில்லை.

ஏழை விவசாயிகள் விதியே என்று தங்கள் தலையெழுத்தைத் தொலைத்து வந்தார்கள். அவர்களுக்குத் தேசமோ தெருப்புழுதியோ ஒன்றும் தெரியாது. தங்கள் பிரபுக்களுக்குத் தாங்கள் அடிமைகள், அவர்கள் காலாலிட்ட வேலையைத் தாங்கள் தலையால் செய்யவேண்டும் என்பது மட்டும்தான் அவர்களுக்குத் தெரியும். பிரபுக்களைப் பார்த்து 'நீங்கள் யார்' என்று கேட்போமேயானால் அவர்கள், 'நாங்கள் இன்ன இடத்துக்கு உடைய பிரபுக்கள். எங்களுக்கு மேற்பட்ட இன்ன பிரபு அல்லது இன்ன அரசனுக்கு நாங்கள் கீழ்ப்பட்ட ஜமீன்தார்கள்' என்று பதில் சொல்லுவார்கள். இதுதான் அக்காலத்தில் ஐரோப்பாவில் வழங்கிவந்த நிலமானியத் திட்டமாகும்.

இதற்குப் பிறகு, நாளாவட்டத்தில் முக்கியமாக ஜெர்மனியிலும் வட இதாலியிலும் பெரிய பெரிய நகரங்கள் தோன்றி வளர்வதைப் பார்க்கிறோம். பாரிஸ் நகரமும் பெருமைபெற்று விளங்குகிறது. இந்நகரங்கள் வியாபாரத்துக்கும் வர்த்தகத்துக்கும் முக்கிய ஸ்தானங்களாக விளங்குகின்றன. அங்கே செல்வம் குவிகிறது. இந்நகரங்களுக்கு நிலமானியப் பிரபுக்களைக் கண்டால் பிடிக்கவில்லை. இரு திறத்தாருக்கும் எந்நேரமும் சண்டைதான். ஆனால், முடிவில் பணந்தான் பேசுகிறது. பணம் படைத்த வணிகர்கள் பிரபுக்களுக்குக் கடன் கொடுக்கிறார்கள். அதன் உதவியால் சில சிறப்புரிமைகளையும் அதிகாரத்தையும் எய்துகிறார்கள். ஆகவே, நகரங்களில் ஒரு புதிய வகுப்பு தோன்றி வளர்வதையும் அது நிலமானிய ஏற்பாட்டில் பொருந்தாமையையும் பார்க்கிறோம்.

இவ்வாறு ஐரோப்பாவில் சமூகமானது நிலமானிய முறையை அனுசரித்து ஒன்றின்மீது ஒன்றாக உள்ள பல பிரிவுகளைக் கொண்டதாக இருப்பதைக் காண்கிறோம். கிறிஸ்தவ மத ஸ்தாபனமும் இம்முறைக்குத் தன் அநு

மதியையும் ஆசியையும் அளிக்கிறது. நாம் இப்போது அறிந்துள்ள தேசிய உணர்ச்சி என்பது அப்போது இல்லை. ஆனால், ஐரோப்பா முழுவதிலும், முக்கியமாக மேல்வகுப்பாரிடையே இவ்வுணர்ச்சியைக் காண்கிறோம். அதாவது, தாங்கள் கிறிஸ்தவ உலகத்தைச் சேர்ந்தவர்கள் என்கிற ஒருவித மனோபாவம். இந்த மனோபாவம் ஐரோப்பாவின் பல நாடுகளையும் ஒன்றாகப் பிணைப்பதற்கு ஏதுவாயிருந்தது. இம்மனோபாவத்தைப் பரப்புவதற்கு மதஸ்தாபனம் உதவி அளிக்கிறது. ஏனெனில், இதனால் அதன் சக்தியும் வளருகிறதல்லவா? மேலும், ரோமாபுரிப் போப்பாண்டவரின் அதிகாரமும் பெருகுகிறது. மேற்கு ஐரோப்பாவில் உள்ள மதஸ்தாபனத்தின் ஒப்புயர்வற்ற தலைவராக அவர் இப்போது விளங்குகிறார். ரோமாபுரியானது கான்ஸ்டாண்டிநோபிள், கிழக்கு ரோம சாம்ராஜ்யம் இவற்றோடு தனக்கிருந்த தொடர்பை ஏற்கெனவே அறுத்துக்கொண்டு விட்டது உனக்கு நினைவிருக்கலாம். கான்ஸ்டாண்டிநோபிளில் பழைய வைதிக கிறிஸ்தவ மதஸ்தாபனம் தொடர்ந்து நடைபெற்று வந்தது. ருஷியா அதனிடமிருந்தே தன் மதத்தை எடுத்துக்கொண்டது. கான்ஸ்டாண்டிநோபிளில் வாழ்ந்த கிரேக்கர் போப்பாண்டவரை ஒப்புக்கொள்ள வில்லை.

ஆனால், அபாய காலத்தில், அதாவது கான்ஸ்டாண்டிநோபிள் எதிரிகளால் சூழப்பட்டபோதும், முக்கியமாகச் செல்ஜுக் துருக்கியரிடமிருந்து அதற்கு அச்சம் விளைந்தபோதும், அது தன் செருக்கையும் பகைமையையும் மறந்து அவிசுவாசிகளான முஸ்லீம்களுக்கு விரோதமாகத் தனக்கு உதவி அளிக்கும்படி போப்பாண்டவரைக் கேட்டது. ரோமாபுரியில் அப்போது போப்பாண்டவராக இருந்தவர் மிகவும் பெருமை வாய்ந்தவர். இவருடைய பெயர் ஹில்டிபிராண்ட் (Hildebrande)

என்பது. இவர் பிறகு போப்பாண்டவர் ஏழாவது கிரெகரி என்றும் பெயர் பெற்றூர். இவருடைய மன்னிப்பைப் பெறுவதற்காகத்தான் அந்த இறுமாப்புக் கொண்ட ஜெர்மானியச் சக்கரவர்த்தி கனோசாவில் உறைபனியில் வெறுங்காலுடன் சென்று காத்துக் கிடந்தது.

இன்னொரு விஷயம் கிறிஸ்தவ ஐரோப்பாவின் கவனத்தைக் கவர்ந்து பெரிய பரபரப்பை உண்டு பண்ணியது. கிறிஸ்துவுக்குப்பின் சரியாக ஆயிரம் ஆண்டுகள் கழிந்ததும் இவ்வுலகம் திடீரென்று முடிவு பெற்றுவிடும் என்று பல கிறிஸ்தவர்கள் உண்மையாக நம்பியிருந்தார்கள். ஆங்கிலத்தில் மில்லென்னியம் (Millennium) என்றால் ஆயிரம் ஆண்டுகள் என்று அர்த்தம் இது இரண்டு லத்தீன் சொற்களிலிருந்து பிறந்ததாகும். லத்தீனில் 'Mille' என்றால் ஆயிரம், 'annus' என்றால் ஆண்டு என்று பொருள். அப்போது உலகின் முடிவு எதிர்பார்க்கப்பட்டதால் மில்லென்னியம் என்றால் புதியதும் இதைவிட இனியதும் ஆன ஓர் உலகம் என்று பலர் எண்ணலானார்கள். அப்போது ஐரோப்பாவில் துன்பம் நிறைந்திருந்ததால் இந்த எண்ணம் பலருக்கு ஆறுதலை அளித்தது. பலர் தங்கள் நில புலன்களை விற்றுவிட்டுப் பாலஸ்தீனத்துக்கு யாத்திரை புறப்பட்டார்கள். உலகம் முடிவுறும்போது புண்ணிய பூமியில் இருக்கவேண்டு மென்பது அவர்களுடைய விருப்பம்.

ஆனால், எதிர்பார்க்கப்பட்டபடி உலகம் முடிவடையவில்லை. அது மட்டுமல்ல, எருசலேம் நகருக்குச்சென்ற பல்லாயிரக்கணக்கான யாத்திரீகர்கள் துருக்கியரால் அவமதிக்கப்பட்டுத் துன்புறுத்தப்பட்டார்கள். கோபமும், அவமானமும் வாட்ட ஐரோப்பாவுக்குத் திரும்பிய அவர்கள், புண்ணிய பூமியில் தங்களுக்குற்ற பரிபவங்

களையும் கஷ்டங்களையும் எல்லோருக்கும் எடுத்துச் சொன்னார்கள். முக்கியமாக, பேதுரு துறவி என்று பேரும்புகழும் பெற்ற ஒரு யாத்திரீகன் கையிலே கோலைத் தாங்கி ஊர்தோறும் சென்று தங்களுடைய புண்ணிய ஸ்தலமாகிய எருசலேமை முஸ்லீம்களிடமிருந்து மீட்க வேண்டும் என்று ஜனங்களுக்கு உபதேசித்து வந்தான். கிறிஸ்தவ உலகெங்கணும் கோபமும் ஆவேசமும் கொழுந்துவிட் டெரிந்தன. இதைக் கண்ட போப்பாண்டவர் இந்த இயக்கத்தைத் தலைமை வகித்து நடத்த ஆரம்பித்தார்.

ஏறக்குறைய இதே சமயத்தில்தான் கான்ஸ்டாண்டிநோபிளும் மேற்கூறியபடி ரோமாபுரியின் உதவியை நாடியது. இப்போது கிறிஸ்தவ உலகம் முழுவதும், ரோமானியர் கிரேக்கர் என்னும் பிரிவினையின்றி, பொங்கிவரும் துருக்கியரை எதிர்க்க ஒன்றுபட்டிருப்பது போலத் தோன்றியது. கி. பி. 1095-ஆம் ஆண்டில் ஒரு பெரிய கிறிஸ்தவ மத ஸ்தாபனத் திருச்சபை கூடிற்று. புண்ணிய க்ஷேத்திரமாகிய எருசலேமை முஸ்லீம்களிடமிருந்து மீட்பதற்காக ஒரு புண்ணிய யுத்தம் தொடுப்பதென்று அது முடிவு செய்தது. அதாவது கிறிஸ்தவ உலகத்துக்கும் இஸ்லாமிய உலகத்துக்கும் யுத்தம்; சிலுவைக்கும் பிறைக்கும் போர். இவ்வாறு தொடங்கி நடைபெற்ற யுத்தங்களைச் 'சிலுவைப் போர்கள்' என்று சரித்திராசிரியர்கள் சொல்லுகிறார்கள்.

# 58

## ஆசியாவையும் ஐரோப்பாவையும் மீண்டும் பார்ப்போம்

ஜூன் 12, 1932.

கிறிஸ்துவுக்குப் பிற்பட்ட முதலாயிர வருஷத்தின் முடிவில் உலகம் எவ்வாறு இருந்ததென்று சுருக்கமாக ஆராய்ச்சி செய்தோம். நமது ஆராய்ச்சியில் அடங்கியவை ஆசியாவும், ஐரோப்பாவும், ஆப்பிரிக்காவில் ஒரு பகுதியும் ஆகும். ஆனால், அவற்றை மறுமுறை பார்ப்போம்.

ஆசியா : இந்தியா, சீனு இவற்றின் தொன்மையான நாகரிகங்கள் தொடர்ந்து முடிவின்றி விளங்குவதைக் காண்கிறோம். இந்தியக் கலைப்பண்பு மலாயாசியாவிலும் கம்போடியாவிலும் பரவிப் பயன் கொழிக்கிறது. சீனக் கலைப்பண்பு கொரியாவிலும் ஜப்பானிலும் ஓரளவுக்கு மலாயாசியாவிலும் பரவுகிறது. மேற்கு ஆசியாவில் அரேபியக் கலைப்பண்பு அரேபியாவிலும், பாலஸ்தீனத்திலும், சிரியாவிலும், மெசபொடேமியாவிலும் சிறந்து விளங்குகிறது. பாரசீகம் அல்லது ஈரானில் பழையஈரானிய நாகரிகம் புதிய அரேபிய நாகரிகத்தோடு கலந்து உறவாடுவதைக் காண்கிறோம். மத்திய ஆசியாவிலுள்ள சில நாடுகள் இந்த ஈரானிய—அரேபிய நாகரிகக் கலப்பில் முகந்துகொள்வதோடு இந்திய-சீனக் கலவையிலும் தாராளமாக அள்ளிக்கொண்டிருக்கின்றன. இந்நாடுகள் எல்லாவற்றிலும் நாகரிகம் மிக உன்னதநிலையில் இருக்கக் காண்கிறோம்; பல்வகைக் கல்வியும் கலைகளும் மல்லிடு

கின்றன ; வாணிபம் பேணி வளர்க்கப்படுகிறது ; மாபெரும் நகரங்கள் எங்கணும் தோன்றிப் பொலி கின்றன ; புகழ்பெற்ற பல்கலைக் கழகங்கள் தூரதேசத்து மாணாக்கர்களையும் தங்கள்பால் ஈர்க்கின்றன. மங்கோலி யாவிலும், சைபீரியாவிலும், மத்திய ஆசியாவில் சில இடங்களிலுந்தான் நாகரிகத்தின் தரம் சற்றுக் குறைவா யிருக்கக் காண்கிறோம்.

ஐரோப்பா : ஆசியாவின் முற்போக்கு வாய்ந்த நாடுகளை நோக்கும்போது ஐரோப்பா பிற்போக்கும் அரைகுறை நாகரிகமும் வாய்ந்து காணப்படுகிறது. பழைய கிரேக்க-ரோம நாகரிகம் நீண்ட காலத்துக்குமுன் கழிந்த பழைமையின் நினைவாகமட்டுமே எஞ்சி நிற்கிறது. கல்வியை விரும்பிப் பயில்வோர் இல்லை ; கலைகள் அருகிக் காணப்படுகின்றன ; ஆசியாவோடு ஒப்பிட்டுப் பார்க்கும்போது வியாபாரமும் மந்தமாகவே இருக்கிறது. இரண்டு இடங்களில் மட்டுமே ஒளியைக் காண்கிறோம். அரேபியரின் ஆட்சிக்குட்பட்ட ஸ்பெயினில் அவர்க ளுடைய உன்னத காலம் பிரதிபலிக்கிறது. கான்ஸ் டாண்டிநோபிள் மெள்ள மெள்ள வீழ்ந்து வந்தாலும் பெரிய நகரமாக விளங்குகிறது. ஆசியா, ஐரோப்பா இரண்டும் சங்கமம் ஆகும் இடத்தில் வீற்றிருக்கும் அம்மாநகரில் எண்ணற்ற மக்கள் வாழ்ந்து வருகிறார்கள் ; ஐரோப்பாவின் பெரும் பகுதியில் அடிக்கடி அமைதி யின்மை காணப்படுகிறது. அப்போது அமுலில் இருந்து வரும் நிலமானிய ஏற்பாட்டின் கீழ் ஒவ்வொரு ‘ நைட்டும் ’, பிரபுவும் தனக்குரிய பிரதேசத்துக்குச் சிற்றரசன்போல விளங்குகிறான். பழைய சாம்ராஜ்யத் தலைநகரான ரோமாபுரி ஒரு சமயத்தில் வெறும் சிற்றூரின் நிலைக்கு வந்துவிட்டது. அதன் பெரிய அரங்கத்தில் காட்டு

விலங்குகள் திரிந்து வந்தன. ஆனால், மீண்டும் அது வளர்ந்து வருகிறது.

ஆகவே, கி. பி. ஆயிரம் ஆண்டுகளுக்குப் பிறகு நீ ஆசியாவையும் ஐரோப்பாவையும் ஒப்பிட்டுப் பார்த்தால் அதன் முடிவு ஆசியாவுக்குப் பெரிதும் அனுகூலமாயிருக்கக் காண்பாய்.

மீண்டும் இன்னொரு முறை பார்ப்போம். மேற்பரப்புக்குக் கீழே சற்று உற்று நோக்க முயலுவோம். மேற்போக்காகப் பார்க்கும்போது ஆசியா நல்ல நிலைமையில் இருப்பதுபோல் தோன்றினாலும் உண்மையில் அவ்வாறு இல்லை என்று காண்கிறோம். பழைய நாகரிகத்தின் இரு ஊற்றுக்களான இந்தியாவும் சீனாவும் இன்னல்களில் தோய்ந்திருக்கின்றன. அதற்குக் காரணம் வெளியிலிருந்து வரும் படையெடுப்புக்கள் மட்டும் அல்ல. அவற்றின் உள்ளுயிரும் உரமும் உறிஞ்சப்பட்டு வருவதே உண்மையான காரணமாகும். மேற்கே அரேபியரின் உன்னத நாட்கள் முடிவு பெற்றுவிட்டன. செல்ஜக் துருக்கியரின் ஆதிக்கம் வளர்ந்து வருவது வாஸ்தவமேயாயினும் அது அவர்களுடைய போர்க் குணத்தைப் பொறுத்ததாக இருக்கிறது. அவர்கள், இந்தியர், சீனர், பாரசீகர், அரேபியர் ஆகியோரைப் போல ஆசியாவின் கலைப் பண்புக்குப் பிரதிநிதிகள் ஆகமாட்டார்கள்; அதன் போர்க் குணத்துக்கே அவர்கள் பிரதிநிதிகள். ஆசியாவில் எங்கணும் பழைய பண்பாடு வாய்ந்த மக்கட் கூட்டத்தார்கள் தங்கள் நிலையினின்றும் திரிந்து சுருங்கி வருவதைக் காண்கிறோம். அவர்கள் தன்னம்பிக்கையை இழந்தவர்களாய்த் தங்களைக் காப்பாற்றிக்கொள்ளும் முயற்சியில் ஈடுபட்டிருக்கிறார்கள். புதிய கூட்டத்தார் எழுகிறார்கள். அவர்களிடையே ஜீவவேகம் ததும்புகிறது. அவர்கள் ஆசியாவின் பழைய கூட்டத்தார்களை வென்று

ஐரோப்பாவையும் கலங்க வைக்கிறார்கள். ஆனால் அவர்களுடைய எழுச்சி நாகரிகத்தின் ஒரு புதிய அலையையோ கலைப்பண்பின் ஒரு புதிய உத்வேகத்தையோ குறிக்கவில்லை. பழைய வகுப்பினர் தங்களை ஜெயித்த இப்புதிய வகுப்பினரை மெல்ல மெல்ல நாகரிகர்களாக்கிப் பின்பு ஜீரணித்துவிடுகிறார்கள்.

ஆகவே, ஆசியாவில் ஒரு பெரும் மாறுதல் நிகழ்வதை நாம் காண்கிறோம். பழைய நாகரிகங்கள் தொடர்ந்து நடைபெறுகின்றன: கலைகள் ஓங்குகின்றன; சுகபோக வாழ்வு விகாசம் அடைகிறது. ஆனால் அதே சமயத்தில் நாகரிகத்தின் நாடி தளர்வெய்துகிறது; அதன் சுவாசம் கொஞ்சங் கொஞ்சமாக அடங்கி வருகிறது. இதற்கு நெடுங் காலத்துக்குப் பின்னரும் அவை உயிர் வாழ்ந்து வருவது உண்மையே. எப்போது அவ்வுயிர் பிரிந்து செல்கிறது என்று நம்மால் திட்டமாகக் கூறமுடிய வில்லை. அரேபியாவிலும், மத்திய ஆசியாவில் மங்கோலியர் வரவின்போதும் அவ்விடத்து நாகரிகங்கள் முடிவெய்துவது நமக்குத் திட்டமாகத் தெரிகிறது. ஆனால், இந்தியாவிலும் சீனாவிலும் அப்படி இல்லை. இங்கே பழைய நாகரிகம் சிறிது சிறிதாக மங்கலடைந்து கடைசியில் ஒரு சித்திரம் போல ஆய்விடுகிறது. இச் சித்திரம் தூரத்திலிருந்து பார்ப்பதற்கு மிகவும் அழகாகவே காணப்படுகிறது. ஆனால், அதற்கு உயிர் இல்லை. நெருங்கிச் சென்று பார்ப்போமானால் அதைச் செல்லரித்துக்கொண் டிருப் பதும் தெரிய வருகிறது.

சாம்ராஜ்யங்களைப் போலவே நாகரிகங்களும் வீழ்ச்சி அடைவதற்கு முக்கிய காரணம் புறப்பகையின் வலிமை அல்ல. அகத்தே உள்ள பலவீனமும் உளைவுமே அதற்குப் பெரும்பாலும் காரணமா யமைகின்றன. காட்டுமிராண்டி ஜாதியாரால் ரோமாபுரி வீழ்ச்சி அடைந்தது என்று

சொல்வதற்கில்லை. ஏற்கெனவே இறந்துவிட்ட ஒன்றை அவர்கள் வீழ்த்தினார்கள் என்றே சொல்லக்கூடும். ரோமாபுரியின் கரங்களும் கால்களும் வெட்டப்பட்ட அன்றே அதன் இதயத் துடிப்பும் நின்றுவிட்டது. இந்தியாவிலும் சீனாவிலும் அரேபியாவிலும் ஏறக்குறைய இதுவே நிகழ்வதைக் காண்கிறோம். அரேபிய நாகரிகத்தைப் பொறுத்த வரையில் அதன் எழுச்சியைப் போலவே அதன் வீழ்ச்சியும் எதிர்பாராத விதமாகவும் திடீரென்றும் நிகழ்கிறது. இந்திய, சீன நாகரிகங்களின் விவகாரம் வேறுமாதிரி இருக்கிறது. அவற்றின் முடிவு நீண்டகாலப்போக்கில் நிகழும் ஒன்றாக இருப்பதால் அதைச் சுட்டிக்காட்ட இயலாமலிருக்கிறது.

கஜினி முகம்மது இந்தியாவுக்கு வருவதற்கு நெடுங்காலம் முன்னரே இந்நிகழ்ச்சி முறை ஆரம்பித்துவிட்டது. மக்களின் மன நிலையிலே நாம் இந்த மாறுதலைக் காண முடிகிறது. புதிது புதிதான கருத்துக்களையும் பாவங்களையும் சிருஷ்டிப்பதற்குப் பதிலாக அவர்கள் ஏற்கெனவே சொல்லப்பட்டதைத் திருப்பித் திருப்பிச் சொல்லவும் அதையே 'காப்பி' அடிக்கவும் தலைப்படுகிறார்கள். அவர்களுடைய அறிவு இன்னும் கூர்மையாகத் தான் இருக்கிறது. ஆனால் நெடுங்காலத்துக்கு முன் எழுதப்பட்டவற்றிற்கும் சொல்லப் பட்டவற்றிற்கும் வியாக்கியானம் செய்வதிலும், விரிவுரைகள் விசேஷ உரைகள் எழுதுவதிலும் அவர்கள் மும்முரமாக ஈடுபடுகிறார்கள். இன்னும் அவர்கள் அற்புதமான சிற்பங்களையும் செதுக்கு வேலைப்பாடுகளையும் சமைக்கிறார்கள். ஆனால், அவை அதிக விசித்திரமும் விரிவும் பெற்று ருசிக்காமல் போய்விடுகின்றன. நூதன கற்பனையையும் உத்வேகம் கொண்ட உன்னத மனோபாவத்தையும் காண்பது அரிதாக இருக்கிறது; ரசாபாசம் தோன்று

கிறது. திருவாளரிடையே உயர்ந்த பண்பின் பொலிவும், கலைப் பயிற்சியும், இன்ப நுகர்ச்சியும் காணப்படுகின்றன. ஆனால், நெற்றி வியர்வை நிலத்தில் சொட்ட உழைக்கும் பெரும்பாலோரான ஏழைமக்களின் துன்பத்தை மாற்றுவதற்கு யாதொன்றும் செய்யப்படவில்லை.

இவைகளெல்லாம் ஒரு நாகரிகத்தின் அஸ்தமன காலத்தின் அடையாளங்கள். இவை காணப்படும்போது அந்த நாகரிகத்தின் ஜீவன் போய்க்கொண் டிருக்கிறது என்று நாம் நிச்சயம் செய்துகொள்ளலாம். ஏனெனில் புதியதைச் சிருஷ்டித்துக்கொண்டிருப்பதே ஜீவனுள்ளதற்கு அடையாளம்; பழைமையையே திருப்பித் திருப்பிப் பல்லவி போலப் பாடுவதும் அதைக் 'காப்பி' அடிப்பதும் அல்ல.

அக்காலத்தில், இந்தியாவிலும், சீனாவிலும் இக் குறிகளைக் காண்கிறோம். ஆனால், நீ இதைப் பிறழ உணரக் கூடாது. இதனால் இந்தியாவும் சீனாவும் இல்லாதொழிந்தன என்றோ அல்லது அநாகரிக நிலை எய்திவிட்டன என்றோ நீ அர்த்தம் செய்துகொள்ளக்கூடாது. நான் கூறுவதெல்லாம் பழங்காலத்தில் இந்தியாவும் சீனாவும் பெற்றிருந்த படைப்புத்திறன் தனது ஆற்றலையும் தூண்டுதலையும் இழந்து வந்ததோடு தன்னைப் புதுப்பித்துக் கொள்ளவும் இல்லை என்பதுதான். சுற்றுப்புற மாறுதல்களுக் கிணங்க அது தன்னையும் மாற்றி அமைத்துக்கொள்ளாமல் ஏதோ ஒருவாறு காலத்தைக் கழித்து வந்தது. இக்கதி ஒவ்வொரு நாட்டிற்கும் ஒவ்வொரு நாகரிகத்துக்கும் நேரிடுவதைப் பார்க்கிறோம். சில குறிப்பிட்ட காலங்களில் நவநவமான சிருஷ்டிகள் தோன்றுகின்றன; எங்கும் யாவும் எல்லையற்று வளர்கின்றன. உடனே, எல்லாம் களைத்துச் சோர்வு மயமாகப் போய்விடும் காலங்களும் வருகின்றன. இந்தியாவிலும்,

சிறுவிலும் இந்தச் சோர்வு இவ்வளவு நீண்ட காலத்துக்குப் பின் தோன்றுவதுதான் வியப்பிற்குரிய விஷயம். அதுவும் பூரண வியாபகம் பெற்றதாக இல்லை.

இஸ்லாம் இந்தியாவுக்கு மக்கள் முன்னேற்றத்துக்கான ஒரு புதிய உத்வேகத்தை அளித்ததென்பதில் ஐயமில்லை. ஓரளவுக்கு அது சிறந்த சமயசஞ்சீவியாக இருந்தது. ஆனால், அதனால் விளைந்திருக்கக்கூடிய நன்மை இரண்டு காரணங்களால் குறைந்துபோயிற்று. ஒன்று, அது தவறான வழியில் வந்தது. இரண்டாவது, அது காலந் தாழ்ந்து வந்தது. கஜினி முகம்மது இந்தியா மீது படையெடுத்து வருவதற்கு முன்பே சில நூற்றாண்டுகளாக முஸ்லீம் மதபோதகர்கள் இந்தியாவின் பல இடங்களுக்கும் சென்று வந்ததோடு எங்கும் நன்றாக வரவேற்கப்பட்டும் வந்தார்கள். அவர்கள் அமைதியான முறையை அனுசரித்தார்கள்; அதிலே சிறிது வெற்றியும் கண்டார்கள். இஸ்லாமுக்கு விரோதமான உணர்ச்சி எங்காவது இருந்ததென்றால் அது மிகவும் குறைவு என்றே சொல்லவேண்டும். பிறகு கஜினி முகம்மது வந்தான். அவன் குருதி கொப்புளிக்கும் வாளோடும் நெருப்பைக் கக்கும் விழிகளோடும் வந்தான். அவன் இந்தியாவை ஜெயிப்பவனாக வந்த விதமும், அவன் புரிந்த கொலை கொள்ளை முதலான அதிக்கிரமச் செயல்களும் வேறெவைகளையும்விட இந்தியாவில் இஸ்லாமின் கீர்த்திக்கு அழிக்க முடியாத களங்கத்தை ஏற்படுத்திவிட்டன. இதர பெரிய ஜெயசாலிகளைப் போலவே அவனும் மதத்தைப் பற்றிக் கவலைகொள்ளாமல் கொலையும் கொள்ளையும் புரிந்தான். ஆனால், நெடுங்காலம் வரையில் அவனுடைய படையெடுப்புக்கள் இந்தியாவில் இஸ்லாமை ஒரு புகைப்படலம்போல் மூடியிருந்தன. அதனால் இஸ்லாமை ஜனங்கள் விருப்பு வெறுப்பின்றி ஆராய்வது

கஷ்டமாகிவிட்டது. இத் துர்க்கதி அதற்கு நேர்ந்திருந்தால் ஒரு வேளை அவர்கள் அதை அவ்வாறு ஆராய்ந்திருக்கக்கூடும்.

இது ஒரு காரணம். இன்னொன்று அது காலம் தாழ்ந்து வந்ததென்பது. இஸ்லாம், தோன்றி 400 ஆண்டுகளுக்குப் பிறகே இந்தியாவுக்கு வந்தது. இந்த நீண்ட காலப்போக்கில் அது தன் சிருஷ்டிசக்தியில் பெரும் பகுதியை இழந்துவிட்டதோடு சிறிதளவு சோர்வடைந்தும் விட்டது. இஸ்லாம் தோன்றியவுடனே அரேபியர் இந்தியாவுக்கு வந்திருப்பின் வளர்ந்துவரும் அரேபியக் கலைப்பண்பு பழைய இந்தியக் கலைப்பண்போடு கலந்து இரண்டும் வினை, எதிர்வினைகளுக்கு ஆளாகியிருக்கும். இத்தகைய இரண்டின் சேர்க்கையால் பெரும் பயன் விளைந்திருக்கலாம். பண்பாடு மிக்க இரு மக்கள் தொகுதியினரின் சேர்க்கையாக அது பரிணமித்திருக்கும். அரேபியர் பிறமதத் துவேஷமின்மைக்கும் மத விஷயங்களில் தர்க்கரீதிக்கும் பேர்போனவர்கள். ஒருகாலத்தில், பாக்தாதில், கலீபாவின் ஆதீனத்தில் ஒரு சங்கம் நடைபெற்றுவந்தது. அதில் சகல மதங்களையும் சேர்ந்தவர்களும், மதங்களில் நம்பிக்கை இல்லாதவர்களும் ஒன்றுகூடி விவாதித்து எல்லா விஷயங்களையும் தர்க்கரீதியிலேயே ஆராய்ந்து வந்தார்களாம்.

ஆனால், அரேபியர் இந்தியாவின்பிரதான பாகத்துக்கு வரவில்லை. அவர்கள் சிந்துவோடு நின்றுவிட்டார்கள். இந்தியா அவர்களால் அதிகமாகப் பாதிக்கப்படவில்லை. துருக்கியர் மூலமாகவும் இன்னும் பிறர் மூலமாகவுமே இஸ்லாம் இந்தியாவுக்கு வந்தது. அவர்கள் வெறும் போர்வீரர்கள். அவர்களிடம் அரேபியரின் பண்பாடோ பிறமதத் துவேஷமற்ற இயல்போ இல்லை.

ஆயினும், முன்னேற்றத்தையும் சிருஷ்டி யத்தனத்தையும் தூண்டும் ஒரு சக்தி இந்தியாவுக்கு வந்தது. இது எவ்வாறு இந்தியாவுக்குச் சிறிது புத்துயிர் அளித்துப் பின் சோர்ந்து படுத்துவிட்ட தென்பதையும் பிறகு பார்ப்போம்.

இந்திய நாகரிகம் வலிகுன்றியதன் இன்னொரு பயனையும் நாம் இப்போது காண்கிறோம். வெளியிலிருந்து தாக்கப்பட்டதும் அது தன்னை மோதவரும் அலையிலிருந்து தன்னைக் காப்பாற்றிக் கொள்வதற்காக தன்னைச் சுற்றிலும் ஒரு கனத்த ஓடு கட்டிக்கொண்டு தன்னை அநேகமாகச் சிறைப்படுத்திக் கொண்டுவிட்டது. இதுவும் பயத்துக்கும் பலவீனத்துக்குமே அடையாளமாகும். இவர்கள் மேற்கொண்ட முறை நேர்விரோதமான பலனையளித்தது. உண்மையான நோய் அந்நியரின் படையெடுப்பு அல்ல; வெறும் தேக்கம்தான் அது. இவ்வாறு ஒதுங்கி நின்ற காரணத்தால் தேக்கம் அதிகமாகி வளர்ச்சி அடையும் வழிகள் தடைபட்டுப் போயின. பின்பு, சீனவும், ஜப்பானும் தங்களுக்குரிய முறையில் இவ்வாறே செய்வதைக் காண்போம். ஓடு மூடியிருப்பதுபோல நாற்புறமும் மூடப்பட்டிருக்கும் ஒரு சமூகத்தில் வாழ்வது சிறிது அபாயகரமானது. அத்தகைய நிலையில் நாம் வீரியம் இழந்து மரத்துப்போய் விடுகிறோம். புதிய காற்றும் புதிய கருத்துக்களும் நமக்குப் பழக்கமற்றுப்போய் விடுகின்றன. தனி ஒருவனுக்கு எப்படிப் புதிய காற்று அவசியமோ அப்படியேதான் சமுதாயங்களுக்கும்.

இவ்வளவும் ஆசியாவைப்பற்றி. இனி ஐரோப்பாவின் சமாசாரம் என்ன? அது பிற்போக்கு வாய்ந்தும் போரில் மூழ்கியும் இருக்கக் கண்டோம். ஆனால், இந்த அமைதியின்மையையும் அநாகரிகத்தையும் ஊடுருவிப் பார்த்தால் அங்கே ஆற்றலும் ஜீவவேகமும் ததும்பு

வதைக் காண்கிறோம். ஆசியா நெடுங்கால ஆட்சிக்குப் பிறகு இறங்குமுகத்தில் இருக்கிறது. ஐரோப்பா தட்டுத் தடுமாறி மேலே ஏற முயன்றுகொண்டிருக்கிறது. ஆனால், ஆசியாவின் நிலைக்குக் கிட்டத்தட்ட வருவதற்குக்கூட ஐரோப்பா இன்னும் நெடுந்தூரம் செல்லவேண்டும்.

இன்று ஐரோப்பா ஆட்சியிலிருக்கிறது. ஆசியா சுதந்தரம் அடைவதற்குக் கஷ்டத்துடன் போராடுகிறது. ஆயினும், மீண்டும் மேற்பரப்புக்குக் கீழே பார்க்க வேண்டும். பார்த்தால் என்ன தெரிகிறது? ஆசியாவில் புதிய உயிரையும், புதிய சக்தியையும், புதிய சிருஷ்டி உற்சாகத்தையும் நீ காண்பாய். ஆசியா மீண்டும் துயிலுணர்ந்து எழுந்து விட்டது. ஆமாம், இதில் ஐயமே இல்லை. ஆனால் ஐரோப்பாவோ—மேற்கு ஐரோப்பா என்று சொல்லுவது பொருத்தமானதா யிருக்கும்—பெருமையுற்றிருந்தாலும் அழிவுக்கான அறிகுறிகளைக் காட்டுகிறது. ஐரோப்பிய நாகரிகத்தை அழிக்கவல்ல அநாகரிகக்கூட்டத்தினர் இப்போது யாரும் இல்லை. ஆனால், சில சமயங்களில் நாகரிகக் கூட்டத்தார்களே அநாகரிகமாக நடந்து கொண்டு நாகரிகத்துக்கு உலைவைத்து விடுகிறார்கள்.

✓ ஆசியா, ஐரோப்பா என்று பாகுபடுத்தி நான் பேசுகிறேன். அவை வெறும் பூகோள பரிபாஷைகளே ஒழிய வேறில்லை. நம்மை எதிர்நோக்கி நிற்கும் பிரச்சினைகளை நாம் ஆசியப் பிரச்சினைகள் என்றோ ஐரோப்பியப் பிரச்சினைகள் என்றோ பிரிக்கக்கூடாது. அவை உலகப் பிரச்சினைகள், மக்கட்சாதியின் பிரச்சினைகள். உலகம் பூராவுக்குமாக நாம் அப்பிரச்சினைகளைத் தீர்த்தாலொழிய தொந்தரவு இருந்துகொண்டுதான் இருக்கும். அப்படியென்றால், உலகெங்குமுள்ள வறுமையையும் துன்பத்தையும் ஒழிப்பது என்றுதான் அர்த்தம். இதற்கு நீண்ட காலம் பிடிக்கலாம். ஆனால் நாம் இதையே குறிக்

கோளாகக் கொள்ளவேண்டும்; இதற்குக் குறைந்த எதையும் குறிக்கோளாகக் கொள்வதும் கூடாது. அப்பொழுதுதான் சமத்துவத்தின்மீது ஸ்தாபிக்கப்பட்ட உயர்ந்த பண்பாடும் நாகரிகமும் தோன்றும். அங்கே, ஒரு தேசமோ, வகுப்போ வேறு ஒன்றைச் சுரண்டிப் பிழைக்காது. அத்தகைய சமுதாயம் முற்போக்கும் சிருஷ்டி சக்தியும் வாய்ந்ததாகவும், மாறிவரும் நிலைமைகளுக்குத் தக தன்னை அமைத்துக்கொள்வதாகவும், தனது அங்கத்தினர்களின் மனப்பூர்வமான ஒத்துழைப்பை ஆதாரமாகக் கொண்டதாகவும் விளங்கும். இறுதியில், அது உலகெங்கணும் பரவி நிற்கவேண்டும். அத்தகைய நாகரிகம், பழைய நாகரிகங்களைப்போல், அழிந்து ஒழிந்துவிடும் என்று நாம் அஞ்சவேண்டியதில்லை.

ஆகவே, நாம் இந்தியாவின் சுதந்தரத்துக்காகப் போராடும்போது இதை மறந்துவிடக்கூடாது. மானிட ஜாதி முழுவதும் சுதந்தரம் பெறுவதே நமது உன்னத லட்சியம். அச்சுதந்தரத்தில் நமது மக்களின் சுதந்தரமும் பிற மக்களின் சுதந்தரமும் அடங்கி நிற்கின்றன.

## 59

# அமெரிக்காவின் மயா நாகரிகம்

ஜூன் 13, 1932.

இக்கடிதங்களில் நான் உனக்கு உலக சரித்திரத்தைக் காட்ட முயலுகிறேன் என்று சொல்லி வந்திருக்கிறேன். ஆனால், உண்மையில் ஆசியா, ஐரோப்பா, வட ஆப்பிரிக்கா இவற்றைப் பற்றியே பேசிக்கொண்டிருக்கிறேன். அமெரிக்காவைப் பற்றியும் ஆஸ்திரேலியாவைப் பற்றியும் நான் யாதொன்றும் கூறவில்லை. ஏதாவது சொல்லியிருந்தால் அது மிகவும் சொற்பமாகும். ஆதிகாலத்தில் அமெரிக்காவில் ஒரு நாகரிகம் இருந்ததென்று மட்டும் நான் உன்னை எச்சரித்திருக்கிறேன். இதைப்பற்றி அதிகமாக ஒன்றும் தெரியவில்லை. நிச்சயமாக, எனக்குத் தெரிந்தது மிகவும் குறைவு. ஆயினும், அதைப்பற்றிச் சிறிதளவேனும் உனக்குக் கூறவேண்டும் என்னும் ஆசையை என்னால் அடக்க முடியவில்லை. ஏனெனில், அமெரிக்காவைப் பற்றிப் பொதுவான தப்பெண்ணம் ஒன்று இருந்து வருகிறது. அதாவது, கொலம்பசும் மற்ற ஐரோப்பியர்களும் அங்குப் போய்ச் சேருமுன் அது வெறும் காட்டுமிராண்டிகள் வாழும் அநாகரிகப் பிரதேசமாயிருந்ததென்பது. இத்தகைய தப்பெண்ணத்தை நீயும் கொள்ளக் கூடாதல்லவா?

கற்கருவிக் காலத்தின்போதே, அதாவது மனிதன் ஓரிடத்தும் நிலைபெறாது வேட்டையாடித் திரிந்த அக்காலத்துக்கும் முன்பே, ஆசியாவுக்கும் வட அமெரிக்கா

வுக்கும் தரை மார்க்கமான தொடர்பு இருந்திருக்கலாம் என்று எண்ணப் படுகிறது. பல ஜாதியார்களும் கூட்டத்தார்களும் அலாஸ்கா வழியாக ஒரு கண்டத்திலிருந்து இன்னொரு கண்டத்துக்குப் போயிருக்க வேண்டும். பின்பு, இப்போக்குவரவு நின்று விடவே அமெரிக்காவில் வாழ்ந்தவர்கள் மெள்ளத் தங்களுக்குரிய ஒரு நாகரிகத்தை வளர்த்துக்கொண்டார்கள். நமக்குத் தெரிந்த வரையில், அவர்களை ஆசியாவுடனே ஐரோப்பாவுடனே பிணைப்பதற்கு யாதொரு சாதனமும் இல்லை என்பதை நீ நினைவில் வைக்க வேண்டும். பதினைரும் நூற்றுண்டில் புது உலகம் கண்டு பிடிக்கப்பட்டதாகக் கூறப்படுகிறதே, அதற்கு முன்பு யாதொரு தொடர்பும் இருந்ததாகத் தெரியவில்லை. அமெரிக்கா, தூரத்தே ஒருதனி உலகமாக இருந்து வந்தது. ஆசிய, ஐரோப்பிய நிகழ்ச்சிகள் அதைப் பாதிக்கவில்லை.

அங்கு, நாகரிகம் மூன்று இடங்களில் வளர்ந்தோங்கியதாகத் தெரிகிறது. 1. மெக்சிகோ. 2. மத்திய அமெரிக்கா. 3. பெரு. அவற்றின் தொடக்கம் எப்போது என்று தெளிவாகத் தெரிய வில்லை. ஆனால், மெக்சிகோ பஞ்சாங்கம் கி. மு. 613-ஆம் ஆண்டு வாக்கில் ஆரம்பிப்பதாகத் தெரிகிறது. கிறிஸ்து சகாப்தத்தின் ஆரம்ப வருடங்களிலேயே, அதாவது இரண்டாம் நூற்றுண்டிலிருந்தே அங்குப் பல நகரங்கள் தோன்றுவதைப் பார்க்கிறோம். கல்லில் செதுக்கு வேலை செய்தல், மட்பாண்டம் செய்தல், நெசவு, சாயம் தோய்த்தல் முதலிய தொழில்கள் வளம்பெறுகின்றன. செம்பும் பொன்னும் ஏராளமாகக் காணப்படுகின்றன. ஆனால், இரும்பைக் காணோம். கட்டிடக் கலை அபிவிருத்தி அடைகிறது. நகரங்கள் ஒன்றோடொன்று போட்டியிட்டுக் கொண்டு மாடமாளிகைகளைக் கட்டுகின்றன. எழுதும் முறை தனிவித

மாகவும் சிறிது சிக்கலாகவும் இருக்கிறது. கலைகள், முக்கியமாகச் சிற்பக்கலை முதலியன மிகுந்த அழகுடன் திகழ்கின்றன.

அந் நாகரிகப் பிரதேசம் ஒவ்வொன்றிலும் பல ராஜ்யங்கள் இருந்தன. பல பாஷைகள் வழங்கி வந்தன. அப்பாஷைகளில் நல்ல இலக்கியமும் இருந்ததாகத் தெரிகிறது. நன்கு அமைக்கப்பட்ட பலம் பொருந்திய அரசாங்கங்களும் இருந்தன. நகரங்களில் கலைப் பண்பும் அறிவு மேம்பாடும் வாய்ந்த சமூகங்கள் வாழ்ந்து வந்தன. அந்த ராஜ்யங்களில் காணப்படும் சட்ட மியற்றும் முறையும் நிதி நிர்வாக முறையும் உயர்தரத்தைச் சேர்ந்தவையாக இருக்கின்றன. கி. பி. 960-இல் உக்ஸ்மால் (Uxmal) என்னும் நகரம் தோற்றுவிக்கப்பட்டது. அது விரைவில் விருத்தி அடைந்து அக்காலத்திய பெரிய ஆசிய நகரங்களுக்குச் சமமான நிலையை அடைந்தது என்று சொல்லுகிறார்கள். லாபுவா (Lobua), மயாபான் (Mayapan), கோமுல்டன் (Chaomultun) ஆகிய பிரசித்தி பெற்ற வேறு நகரங்களும் இருந்தன.

மத்திய அமெரிக்காவின் மூன்று பெரிய ராஜ்யங்களும் ஒன்று சேர்ந்து ஒரு கூட்டுறவை ஏற்படுத்திக் கொண்டன. அதை இப்பொழுது மயாபன் சங்கம் என்று அழைக்கிறார்கள். இது கிறிஸ்துவுக்கு 1000 ஆண்டுகள் பிற்பட்ட நிகழ்ச்சியாகும். இக் காலத்தைத் தான் நாம் ஆசியாவிலும் ஐரோப்பாவிலும் அடைந்திருக்கிறோம். ஆகவே கி. பி. முதலாயிர வருஷ முடிவில் மத்திய அமெரிக்காவில் நாகரிக ராஜ்யங்களின் ஒரு வலிமை வாய்ந்த கூட்டுறவை நாம் காண்கிறோம். ஆனல், அந்த ராஜ்யங்கள் யாவும், மயா நாகரிகமும்கூட மத குருமாரின் வயப்பட்டுக் கிடந்தன. எல்லாச் சாஸ்திரங்களிலும் வான சாஸ்திரம் அதிகமாகப் போற்றப்பட்டது.

அச் சாஸ்திரத்தில் நல்ல பயிற்சி உடைய குருக்கள்மார் பாமர மக்களை ஏமாற்றி வந்தார்கள். இதைப் பார்க்கும் போது நம் நாட்டில் சூரிய, சந்திர கிரகணங்களின் போது ஜனங்கள் ஸ்நானம் செய்யவேண்டு மென்று கூறப் படுவது ஞாபகத்துக்கு வருகிறது.

நூறு ஆண்டுகளுக்கு மேலாகவே மயாபன் சங்கம் நிலை பெற்றிருந்தது. பிறகு சமுதாயப் புரட்சி ஒன்று ஏற்பட்டது போலும். அதில் எல்லைப்புறத்திலுள்ள வேற்று நாடு ஒன்று வந்து தலையிட்டது. கி. பி. 1190-இல் மயாபன் சங்கம் அழிக்கப்பட்டுவிட்டது. ஆயினும், பெரிய நகரங்கள் மட்டும் இருந்து வந்தன. அடுத்த 100 ஆண்டுகளில் வேறொரு ஜாதியார் அரங்கத்துக்கு வருவதைக் காண்கிறோம். இவர்கள் மெக்சிகோவிலிருந்து வந்த ஆஸ்டெகியர் (Aztecs) ஆவர். 14-ஆம் நூற்றாண் டின் ஆரம்பத்தில் அவர்கள் மயா நாட்டை வென்று கி. பி. 1325-இல் டெனுக்டிட்லன் (Tenochtitlan) என்னும் நகரை ஸ்தாபித்தார்கள். விரைவிலேயே இது பெரிய ஜனத்தொகை கொண்டதாய் மெக்சிக உலகிற் கும் ஆஸ்டெகிய சாம்ராஜ்யத்திற்கும் தலைநகராய் விளங் கியது.

ஆஸ்டெகியர் போர்வலி மிக்கவர்கள். அவர்களுடைய ஆட்சியில் ராணுவக் குடியேற்றங்களும், காவல் துருப்பு களும், ராணுவத்தின் உபயோகத்துக்கான பல சாலைகளும் இருந்தன. தங்களுக்கு அடங்கிய நாடுகளைச் சிண்டு முடித்துவிட்டுச் சண்டைபோடச் செய்வதிலும் அவர் கள் கெட்டிக்காரர்கள் என்று தெரிகிறது. அவைகள் பிரிந்திருந்தால் அவைகளை ஆளுவது எளிதல்லவா? ரோமாபுரி இதைத்தான் 'பிரித்தாளுகை' என்று அழைத்தது.

ஆஸ்டெகியர் மற்ற விஷயங்களில் எவ்வளவுதான் சாமர்த்தியசாலிகளாய் இருந்தாலும் தாங்களும் குருக்கள் மார் வயப்பட்டுத்தான் வாழ்ந்து வந்தார்கள். இதைவிட மோசம் என்னவென்றால் அவர்களுடைய மதத்தில் நரபலி கொடுக்கும் கொடிய வழக்கம் நிறைந்திருந்தது. ஆண்டு தோறும் ஆயிரக்கணக்கான மக்கள் இவ்வாறு பலியிடப் ப்பட்டு வந்தார்கள்.

200 ஆண்டுகள் வரையில் ஆஸ்டெகியர் தங்கள் சாம்ராஜ்யத்தை வெகு கண்டிப்புடன் ஆண்டுவந்தார்கள். மேற்பார்வைக்கு அமைதியும் பாதுகாவலும் காணப் பட்டன. ஆனால், ஜனங்கள் ஈவிரக்கமின்றிச் சுரண்டப் பட்டு ஏழைகளாக்கப்பட்டு வந்தார்கள். இத்தகைய அஸ்திவாரத்தின் மீது கட்டப்பட்டு நடைபெற்று வரும் எந்த ராஜ்யமும் நெடுங்காலம் நிலைபெறுதல் இயலாது. அவ்வண்ணமே நிகழ்ந்தது. கி. பி. 1519-ஆம் ஆண்டு, ஆஸ் டெகியர் அப்போது உச்ச நிலையில் இருக்கிறார்கள். அவர் களை எதிர்த்தவர்கள் விரல்விட்டு எண்ணிவிடக் கூடிய சில அந்நியநாட்டுக் கொள்ளைக்காரர்களும் போக்கிரி களும் தான். அவர்களுக்கு ஆற்றாது அந்தப் பெரிய சாம் ராஜ்யம் 'தடால்' என்ற ஓசையுடன் விழுந்து சிதைந்து போயிற்று. ஒரு சாம்ராஜ்யத்தின் வீழ்ச்சிக்கு இது ஒரு பெரிய அதியாச்சரியமான உதாரணம் ஆகும். இந்த மகத்தான நிகழ்ச்சிக்குக் காரணம் ஹெர்னன் கோர்டேஸ் (Hernan Cortes) என்னும் பெயர் பூண்ட ஒரு ஸ்பானி யனும் அவனுடன் வந்த சிறு துருப்புகளுமே. கோர் டேஸ் தைரியமும் துணிச்சலும் வாய்ந்தவன். அவனுக்கு இரு பெரிய சாதனங்கள் இருந்தன. ஒன்று துப்பாக்கி, மற்றொன்று குதிரை. மெக்சிக சாம்ராஜ்யத்தில் குதிரை கள் இல்லைபோலும்; துப்பாக்கிகள் நிச்சயமாக இல்லை. ஆனால், ஆஸ்டெகிய சாம்ராஜ்யத்தின் உயிர் நிலை உளுத்

துப் போகாமலிருந்தால் கோர்டேசின் தைரியமோ, துப்பாக்கிகளோ, குதிரைகளோ இவை ஒன்றும் பயன் பட்டிராது. அது உள்ளே உளுத்துவிட்டது. வெறும் வெளித் தோற்றத்தை மட்டும் வைத்துக்கொண்டிருந்தது. அதைக் கீழே சாய்ப்பதற்குச் சின்ன உதை ஒன்றே போதுமானதாயிருந்தது. 'மக்களைச் சுரண்டல்' என்னும் அடிப்படையின் மீது கட்டப்பட்டிருந்த அச் சாம்ராஜ்யத்தை மக்கள் வெறுத்ததில் யாதொரு வியப்பும் இல்லை. ஆகவே, அது தாக்கப்பட்டபோது ஏகாதிபத்திய வாதிகள் தோல்வி அடைவதை ஜனங்கள் மனப்பூர்வமாக விரும்பி வரவேற்றார்கள். இது நிகழும்போது, வழக்கம் போல் கூடவே சமுதாயப் புரட்சியும் தோன்றியது.

ஒருமுறை கோர்டேஸ் துரத்தியடிக்கப்பட்டான். அவனுக்குத் தலை தப்பியது தம்பிரான் புண்ணியமாயிற்று. ஆனால், அவன் மீண்டும் திரும்பி வந்தான். இந்தத் தடவை அந்த நாட்டைச் சேர்ந்தவர்களிலேயே சிலர் அவனுக்கு ஒத்தாசை செய்தார்கள். அவனுக்கு வெற்றி கிடைத்தது. இதனால் ஆஸ்டெகிய ஆட்சி முடிவு பெற்றதோடு மெக்சிக நாகரிகம் முழுவதுமே முற்றுப் பெற்றுவிட்டதுதான் வேடிக்கையா யிருக்கிறது. சீக்கிரத்திலேயே சாம்ராஜ்யத் தலைநகரான டெனுக்டிட்லன், இருந்த சுவடு தெரியாமல் அழிந்து போயிற்று. அது இருந்த இடத்தில் ஸ்பானியர் ஒரு தேவாலயம் கட்டினார்கள். மற்றப் பெரிய மயா நகரங்களும் மறைந் தொழிந்தன. 'யுகடன்' காடுகள் அவைகளை மூடிக் கொண்டன. அவைகளின் பெயர்களையும் ஜனங்கள் மறந்து விட்டார்கள். அவைகளின் பக்கத்துள்ள கிராமங் களின் பெயராலேயே அவை இப்போது நினைவுகூரப்படு கின்றன. அவர்களுடைய இலக்கியமும் இறந்தொழிந்தது.

இன்று எஞ்சி நிற்பவை மூன்றே மூன்று நூல்கள். அவை களையும் இதுவரையில் படித்தறிந்தவர் யாருமிலர்.

ஏறக்குறைய 1500 ஆண்டுகளாக வாழ்ந்து வந்த ஒரு புராதன ஜாதியும் ஒரு புராதன நாகரிகமும் ஐரோப்பாவி லிருந்து வந்த புதிய ஜாதியாரோடு லேசாக மோதிய வுடனே இவ்வாறு திடீரென்று மறைந்தொழிவதென்றால் அதற்குரிய காரணங்களைக் கண்டறிவது மிகவும் கடின மாகவே இருக்கிறது. இந்த மோதுதல் அவர்களை அழிக்க வந்த ஒரு புதிய கொள்ளை நோயைப் போலல்லவோ தோன்றுகிறது! அவர்களுடைய நாகரிகம் சில அம்சங் களில் உயர்வுற்றிருப்பினும் வேறு சில அம்சங்களில் அவர்கள் மிகவும் பிற்போக்குடையவர்களாக இருந்தார் கள். சரித்திரத்தில் காணப்படும் பல காலப் பகுதிகளின் விசித்திரமான மிசிரம் என்றே அவர்களைக் கூற வேண்டும்.

தென் அமெரிக்காவில் பெரு இன்னொரு நாகரிகத்துக் குத் தாயகமாக விளங்கியது. அதை ஆண்ட மன்னனுக்கு 'இன்கா' என்று பெயர். அவன் தெய்வத்தன்மை உடையவனாக மதிக்கப்பட்டான். இந்தப் பெருவிய நாகரிகம் அதன் பிற்காலத்தில் மெக்சிக நாகரிகத்தோடு யாதொரு சம்பந்தமும் அற்று இருந்தது ஆச்சரியத்தைத் தருகிறது. இரு நாகரிகங்களும் ஒன்றுக் கொன்று வெகு அருகிலேயே இருந்தன. ஆயினும் ஒன்றைப் பற்றி மற்றொன்றுக்குத் தெரியாது. இது ஒன்றே சில அம்சங் களில் அவைகளின் பிற்போக்குத் தன்மையை நன்கு எடுத்துக் காட்டுகிறது. மெக்சிகோவில் கோர்டேஸ் வெற்றி பெற்ற பிறகு இன்னொரு ஸ்பானியன் வந்து இப் பெருவிய ராஜ்யத்தை ஒழித்தான். அவன் பெயர் பிசாரோ என்பது. அவன் கி.பி. 1530-இல் வந்து 'இன்கா' மன்னனை வஞ்சனையால் பிடித்துக்கொண்டான். தங்க

ளுடைய தெய்வாம்சம் பொருந்திய மன்னன் பிடிபட்டு விட்டது ஒன்றே ஜனங்களைப் பெரும் பீதிக் குள்ளாக்கி விட்டது. சிறிது காலம் பிசாரோ இன்காவின் பேரால் அரசாண்டு பெரும் செல்வம் திரட்டினன். பிறகு இந்த நாடகம் கைவிடப்பட்டது. ஸ்பானியர் பெருவைத் தங்கள் ராஜ்யத்தின் ஒரு பகுதியாகச் செய்துகொண்டு விட்டார்கள்.

கோர்டேஸ் டெனுக்டிட்லன் நகரை முதன் முதலில் பார்த்தபோது அதன் கம்பீரத்தைக் கண்டு பிரமித்துப் போய்விட்டான். அதைப் போன்ற நகரத்தை அவன் ஐரோப்பாவில் கண்டதே இல்லை.

மயா, பெருவிய கலைச் சின்னங்களில் எஞ்சி நின்றவை பல இன்று கண்டுபிடிக்கப்பட்டு அமெரிக்காவிலுள்ள, முக்கியமாக மெக்சிகோவிலுள்ள பொருட்காட்சிச் சாலை களில் வைக்கப்பட்டிருக்கின்றன. அருமை வாய்ந்த ஒரு கலைப் பரம்பரையின் சான்றுகளாக அவை இன்று விளங்குகின்றன. பெருவிய பொற் கொல்லர்களின் வேலைப்பாடு பெருஞ் சிறப்பு வாய்ந்ததென்று சொல்லப் படுகிறது. இப்பொழுது காணப்படும் சில சிற்பங்கள், முக்கியமாகக் கல்லில் செய்யப்பட்ட பாம்புருவங்கள், நிரம்ப அற்புதமாயிருக்கின்றனவாம்! ஏனைய சிற்பங் கள் மக்களை அச்சுறுத்துவதற்கென்றே சமைக்கப் பட்டவை போலும். அவை இன்றும் நம்மை அச்சுறுத்து கின்றன.

# 60

## மீண்டும் மொஹெஞ்சோ-தாரோவுக்கு

ஜுன் 14, 1932.

இப்பொழுதுதான் மொஹெஞ்சோ—தாரோவைப் பற்றியும், சிந்து நதிப் பள்ளத்தாக்கின் பண்டைய இந்திய நாகரிகத்தைப் பற்றியும் படித்துக்கொண் டிருந்தேன். இதைப் பற்றி இதுவரையில் தெரிந்தவற்றை யெல்லாம் தொகுத்துக்கூறும் ஒரு புதிய பெரிய நூல் வெளிவந்திருக் கிறது. எவர்களுடைய நேர்ப் பொறுப்பில் அவ்விடத்தில் பூமியைக் குடைந்து தோண்டிப் பார்க்கும் அகழ் ஆராய்ச்சி வேலைகள் நடைபெறுகின்றனவோ அவர்களே இந்நூலை எழுதியுள்ளார்கள். மேலும் மேலும் தோண் டிக்கொண்டே செல்லுகையில் பூமாதாவிடமிருந்து அந் நகரம் வெளிவருவதை அவர்கள் நேரில் கண்டிருக்கிறார் கள். நான் இன்னும் அந்நூலைப் படிக்கவில்லை. அது எனக்குக் கிடைக்குமாயின் நன்றாயிருக்கும். அதைப் பற்றிய விமரிசனம் ஒன்றை நான் படித்தேன். அப் புத்தகத்திலிருந்து சில பகுதிகள் அதில் கொடுக்கப்பட் டிருக்கின்றன. அவற்றை உன்னுடன் பகிர்ந்துகொள்ள விரும்புகிறேன். இச் சிந்து நதிப்பள்ளத்தாக்கு நாகரிகம் ஒரு பெரிய அற்புதம். அதைப்பற்றி அதிகமாக அறிய அறிய ஆச்சரியமும் அதிகரிக்கிறது. ஆகவே, நமது உலக வரலாற்றை இடையிலே நிறுத்திவிட்டு 5000 ஆண்டு களுக்கு முற்பட்ட காலத்துக்கு, இக் கடிதத்தில், சென்று வரலாமென்று நினைக்கிறேன். உனக்கு இதில் ஆட்சே பனை இல்லையே?

மொஹெஞ்சோ–தாரோவின் வயது 5000 ஆண்டுகள் என்று சொல்லுகிறார்கள். ஆனால், நாம் அதைக் காணும்போது, நாகரிகமும் கலைப்பண்பும் மிக்க ஒரு ஜன சமூகத்தின் வாசஸ்தானமாக விளங்கிய அழகிய நகரம் ஒன்றையே காண்கிறோம். இந் நாகரிகம் பன்னூறாண்டுகளாக வளர்ச்சியுற்ற பின்னரே இத்தகைய நிலையை எய்தியிருக்க முடியும். இவ்வாறு அந்தப் புத்தகத்தில் சொல்லப்படுகிறது. அங்கு, அகழ் ஆராய்ச்சிப் பொறுப்பை வகிக்கும் சர் ஜான் மார்ஷல் என்பவர் கூறுவதைக் கேள் :

"ஒரு விஷயம் தெளிவாகவும் திட்டமாகவும் தெரிகிறது. மொஹெஞ்சோ–தாரோவிலும் ஹாரப்பாவிலும் இதுவரையில் கண்டெடுக்கப்பட்ட நாகரிகமானது ஆரம்பதசையிலுள்ள ஒன்றல்ல. இந்திய பூமியில் ஏற்கெனவே அது காலா காலமாக வளம்பெற்று வந்து ஒரு நிரந்தர உருவத்தை அடைந்திருக்கிறது. பல ஆயிரம் ஆண்டுகளில் இடைவிடாது முயன்று செய்யப்பட்டுவந்த மனித யத்தனத்தின் பயனே அது. ஆகவே, இனி இந்தியாவைப் பாரசீகம், மெசபொடேமியா, எகிப்து இவற்றின் வரிசையில் வைத்து எண்ணவேண்டும். நாகரிகத்தைத் தோற்றுவித்து வளர்த்த முக்கியமான இடங்களில் ஒன்றாக அது இனி மதிக்கப்பட வேண்டும்."

இன்னும் நான் உனக்கு ஹராப்பாவைப் பற்றிக் கூறவில்லை என்று நினைக்கிறேன். இது இன்னொரு இடத்தின் பெயர். இங்கும் மொஹெஞ்சோ–தாரோவைப் போலவே பழைய அழிவுகளைப் பூமியைத் தோண்டிக் கண்டு பிடித்திருக்கிறார்கள். இது மேற்குப் பஞ்சாபில் உள்ளது.

ஆகவே, சிந்து நதிப் பள்ளத்தாக்கில் நாம் 5000 ஆண்டுகளுக்கு முற்பட்ட காலத்துக்கு மட்டும் செல்லவில்லை. அதற்கும் பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட

காலத்தின் கரையில் நிற்கிறோம். அவ்வாறு நின்று பார்க்கும்போது மனிதன் முதல் முதலில் நிலைத்து வாழத் தொடங்கிய அப்புராதன காலத்தின் பனிப்படலம் நம்மைக் கவிந்து கொள்ளுகிறது. மொஹெஞ்சோ-தாரோ செழித்தோங்கிய காலத்தில் ஆரியர் இந்தியாவுக்கு வரவில்லை. ஆயினும், அப்புத்தகத்தில் காணப்படும் கீழ்க்கண்ட வாசகம் உண்மையே ஆகும்.

"இந்தியாவின் இதர பாகங்களை விட்டு விட்டாலும், பஞ்சாபிலும் சிந்துவிலும் மட்டுமாவது மிகவும் அபிவிருத்தி அடைந்த, ஒரே தன்மை வாய்ந்த நாகரிகம் ஓங்கியிருந்த தென்பதில் ஐயமில்லை. அது அக்காலத்து எகிப்திய, மெசபொடேமிய நாகரிகங்களைச் சில அம்சங்களில் ஒத்ததாகவும், சில அம்சங்களில் அவற்றினும் உயர்ந்ததாகவும் விளங்கியது."

மொஹெஞ்சோ-தாரோவிலும் ஹாரப்பாவிலும் பூமியைத் தோண்டிப் பார்த்த காரணத்தால் இந்த ஆச்சரியமான, புராதன நாகரிகம் நமக்குப் புலனாகியிருக்கிறது. இந்திய மண்ணின்கீழ் இன்னும் என்னென்ன புதைந்து கிடக்கின்றனவோ! இந்த நாகரிகம் மொஹெஞ்சோ-தாரோவிலும் ஹாரப்பாவிலும் மட்டும் தான் இருந்ததென்று சொல்வதற்கில்லை. அது அநேகமாக இந்தியா எங்கணும் பரந்ததாகவே இருந்திருக்க வேண்டும். இந்த இரண்டு இடங்கள்கூட ஒன்றுக்கொன்று வெகு தூரத்தில் உள்ளவையே.

இந்தக் காலத்தில் 'கல்லால் செய்யப்பட்ட ஆயுதங்களும், பாத்திரவகைகளுடன் கூடவே செம்பினாலும் வெண்கலத்தினாலும் செய்யப்பட்ட ஆயுதங்களும், பாத்திர வகைகளும் உபயோகத்தில் இருந்துவந்தன.' சிந்துநதிப் பள்ளத்தாக்கில் வாழ்ந்தவர்கள் தங்கள் சமகாலத்தவர்களான எகிப்தியர், மெசபொடேமியர் இவர்களிட

மிருந்து எவ்வகையில் மாறுபட் டிருந்தார்கள், எவ்வகையில் மேம்பட்டிருந்தார்கள் என்று சர். ஜான் மார்ஷல் கூறுகிறார்.

"சில முக்கிய விஷயங்களைமட்டும் நான் குறிப்பிட விரும்புகிறேன். பஞ்சை நூற்று ஆடையாக நெய்து உடுத்துக்கொள்ளும் வழக்கம் அக்காலத்தில் இந்தியாவில் மட்டுமே காணப்படுகிறது. இதற்கு 2000 அல்லது 3000 ஆண்டுகளுக்குப் பின்பே மேற்கு உலகத்துக்கு இவ் வழக்கம் பரவுகிறது. மேலும், மொஹஞ்சோ - தாரோவில் காணப்படும் விசாலமான வீடுகள், நன்கு கட்டப்பட்ட நீராடு மிடங்கள் போன்றவைகளைச் சரித்திர காலத்துக்குமுற்பட்ட எகிப்திலாவது, மெசபொடேமியாவிலாவது, அல்லது மேற்கு ஆசியாவில் எந்த இடத்திலாவது காண்பது அரிதாயிருக்கிறது. அந்நாடுகளில் சிந்தனையையும் பணத்தையும் செலவிட்டுக் கடவுளர்க்குக் கோயில்களும், அரசர்களுக்கு அரண்மனைகளும், அவர்கள் இறந்தபிறகு சமாதிகளும் எழுப்பினார்கள். ஆனால், சாதாரண ஜனங்கள் சாமானியமான மண் வீடுகளில் வாழ்ந்து காலங்கழித்து வந்தார்கள். சிந்துநதிப் பள்ளத்தாக்கில் இது மாறிக் காணப்படுகிறது. மிகவும் அருமையான கட்டிடங்கள் என்று சொல்லக்கூடியவை எல்லாம் ஜனங்களின் சௌகரியத்தை முன்னிட்டே கட்டப்பட்டவை ஆகும்".

அவர் மேலும் கூறுகிறார்:

"கலை, மதம் ஆகிய துறைகளிலும் அவர்கள் தங்களுக்கே உரிய தனிச் சிறப்புடன் விளங்குகிறார்கள். மண்ணாலும் பீங்கானாலும் அவர்கள் செய்துள்ள செம்மறியாடு, நாய், இன்னும் பல மிருகங்கள் இவற்றின் உருவங்கள் லாகவத்திலும் அழகிலும் ஒப்புயர்வற்று விளங்குகின்றன. அவர்கள் ரத்தினம் முதலிய கற்களி

லும் மணிகளிலும் செதுக்கியுள்ளவையும் அப்படியே. அவற்றில் சிறந்தவை - முக்கியமாக முசுப்பும் குட்டைக் கொம்பும் உடைய எருதுகள் - இக்கலையிலே விரிந்த மனோபாவத்தையும், ஒப்புயர்வற்ற கற்பனையையும் காட்டுகின்றன. அக்காலத்தில் வேறெந்த நாட்டிலும் இத்தகைய சிற்ப அற்புதம் காணப்படவில்லை. ஹாரப்பாவில் காணப்படும் இரண்டு மனித உருவங்களுக்குச் சமமான வடிவழகையும் ஒசிவையும் காண்பதற்கு நாம் கிரேக்கர்களின் பொற்காலத்துக்கு வரவேண்டி யிருக்கிறது. சிந்து வெளி மக்களின் மதத்தில் பிற நாடுகளில் காண்பதைப்போன்ற சில அம்சங்களைக் காண்கிறோம். இவ்வுண்மை சரித்திர காலத்துக்கு முற்பட்ட மதங்களுக்கும், சரித்திரம் தொடங்கும் காலத்தில் தோன்றிய மதங்களுக்கும் பொதுவானது. ஆனால் மொத்தமாகப் பார்க்குமிடத்து அவர்களுடைய மதம் தனி இந்தியப் பண்பு பெற்று விளங்குகிறது. தற்காலத்தில் வழங்கும் ஹிந்து மதத்தை அது பெரும்பாலும் ஒத்தே இருக்கிறது."

ஹாரப்பாவில் கண்டுபிடிக்கப்பட்ட மனித உருவங்களையாவது அல்லது அவற்றின் படங்களையாவது காண நான் பெரிதும் விழைகிறேன். எப்பொழுதாவது ஒருநாள், ஒருவேளை நீயும் நானும் மொஹஞ்சோ - தாரோவுக்கும் ஹாரப்பாவுக்கும் சென்று அங்குள்ள காட்சிகளைக் கண்ணாரக் கண்டு மகிழலாம். அந்த நன்னாள் வரும் வரையில் நீ பூனாவில் உன்னுடைய பள்ளிக்கூடத்தில் படித்துக்கொண்டிரு; நான் என்னுடைய பள்ளிக்கூடத்தில் படித்துக்கொண் டிருக்கிறேன். என்னுடைய பள்ளிக்கூடத்தின் பெயர் உனக்குத் தெரியுமா? அது தான், டேராடூன் ஜில்லா ஜெயில்.

# 61

## கார்டோபாவும் கிரானடாவும்

ஜூன் 16, 1932.

ஆசியாவிலும் ஐரோப்பாவிலும் நாம் பல ஆண்டுகளாகப் பிரயாணம் செய்து, கி. பி. முதலாயிர வருஷம் முடியும் இடத்தில் நின்று, ஒருமுறை பின்னே நோக்கிப் பார்த்தோம். ஆனால், இந்த வரலாற்றில் அரேபியரின் ஆட்சிக்குட்பட்ட ஸ்பெயின்மட்டும் எப்படியோ விட்டுப் போய்விட்டது. ஆகவே, நாம் மீண்டும் திரும்பிச்சென்று அதை அதற்குரிய இடத்தில் பொருத்திப் பார்க்க வேண்டும்.

ஏற்கெனவே உனக்குக் கொஞ்சம் தெரியும். ஆனால், அது உனக்கு நினைவிருக்கிறதோ, என்னவோ? கி. பி. 711-இல் அரேபிய சேனாதிபதி ஆப்பிரிக்காவைக் கடந்து ஸ்பெயினுக்குள் பிரவேசித்தான். அவன் பெயர் தரீக் என்பது. அவன் இறங்கிய இடத்துக்கு ஜிப்ரால்டர் என்று பெயராயிற்று. இரண்டு வருஷங்களுக்குள் அரேபியர் ஸ்பெயின் முழுதையும் ஜெயித்துவிட்டார்கள். இதற்குச் சிறிதுகாலம் கழித்துப் போர்ச்சுகல் தேசமும் அவர்கள் வசமாயிற்று. அவர்கள் மேலும் மேலும் சென்று கொண்டே இருந்தார்கள். பிரான்சுக்குள் நுழைந்து அதன் தென் பகுதியில் பரவினார்கள். இதைக் கண்டு அஞ்சி நடுங்கிய பிராங்கர்களும் இதர ஜாதியார்களும் சார்லஸ் மார்டெல் என்பவனின்கீழ் ஒன்றுபட்டு அரேபியரைத் தடுத்து நிறுத்தப் பெரு முயற்சி செய்தார்கள். அவர்களுக்கு வெற்றி கிடைத்தது. பிரான்சில் டூர்ஸ் என்னுமிடத்தில்

நடைபெற்ற பெரும் போரில் அவர்கள் அரேபியரைப் புறங் கண்டார்கள். அரேபியர் பெருந் தோல்வி அடைந் தார்கள். ஐரோப்பா முழுவதையும் ஜெயிக்க வேண்டு மென்று அரேபியர் கட்டிய ஆகாசக்கோட்டைகள் எல்லாம் இதனால் தகர்ந்துபோயின. இதற்குப் பின் பலதடவைகள் அரேபியருக்கும் பிராங்கர் முதலிய கிறிஸ்தவர்களுக்கும் போர்கள் நிகழ்ந்தன. சில சமயம் அரேபியருக்கு வெற்றி கிடைக்கும், அவர்கள் பிரான்சில் பிரவேசிப்பார்கள்; சில சமயம் தோல்வி அடைந்து ஸ்பெயினுக்குள் துரத்தப் படுவார்கள். சார்லமேன்கூட ஸ்பெயினில் சென்று அவர் களைத் தாக்கினன்; ஆனால் தோல்வி அடைந்தான். மொத்தமாகப் பார்க்குமிடத்து, நீண்டகாலம் வரையில் இச்சம பல நிலைமை மாருமல் இருந்துவந்தது. அரேபியர் ஸ்பெயினை ஆண்டுவந்தார்கள்; ஆனால், அதற்குமேல் அவர்கள் செல்லவில்லை.

இவ்வாறு பெரிய அரேபிய சாம்ராஜ்யத்தின் ஒரு பகுதியாக ஸ்பெயின் விளங்கியது. அச்சாம்ராஜ்யம் ஸ்பெயின், ஆப்பிரிக்காவிலிருந்து மங்கோலிய எல்லை வரையில் வியாபித்திருந்தது. ஆனால், இந்நிலைமை நெடு நாள் நீடிக்கவில்லை. அரேபியாவில் உள்நாட்டுப் போர் நிகழ்ந்ததும், அப்பாசீது கலீபாக்கள் ஒமீயது கலீபாக்களை விரட்டியதும் உனக்கு நினைவிருக்கலாம். ஸ்பெயினில் இருந்த கவர்னர் ஒமீயது கிளையைச் சேர்ந்தவன். அவன் புதிய அப்பாசீது கலீபாவை ஒப்புக்கொள்ள மறுத்து விட்டான். ஆகவே, ஸ்பெயின் அரேபிய சாம்ராஜ்யத்தி லிருந்து விலகி நின்றுவிட்டது. பாக்தாதில் அரசுபுரிந்த கலீபா நெடுந் தூரத்தில் இருந்ததோடு, பொழுது விடிந்தால் பொழுது போனால் அவர் தொல்லைகளே அவருக்குப் பெரிதாயிருந்தபடியால் அவரால் இதுவிஷ யத்தில் ஒன்றும் செய்ய முடியவில்லை. ஆனால், ஸ்பெயி

னுக்கும் பாக்தாதுக்கு மிடையே பகைமை முற்றிவந்தது. அதனால், இவைகள் ஒன்றுக்கொன்று உதவியாக வாழ்வ தற்கு மாறாக ஒன்றின் கஷ்டங்களைக் கண்டு மற்றொன்று சந்தோஷப்பட்டுக்கொண் டிருந்தது.

ஸ்பெயினில் வாழ்ந்த அரேபியர் இவ்வாறு தங்கள் தாய்நாட்டின் தொடர்பை அறுத்துக்கொண்டது சிறிது அவசரப்பட்ட செய்கையாகும். அவர்கள் தூரதேசத்தில் இருந்தார்கள். அஃதோடு, அவர்களைச் சூழ்ந்திருந்தவர்கள் அந்நியர்களும் விரோதிகளுமே. அவர்கள் தொகையோ சிறிது. ஆபத்துக் காலத்தில் அவர்களுக்கு உதவி புரிவோர் யாரும் இல்லை. இப்படியெல்லா மிருந்தும், அவர்கள் அக்காலத்தில் அபாரமான தன்னம்பிக்கை வாய்ந்தவர்களாகவும் அபாயங்களைப் பொருட்படுத்தாத வர்களாகவும் இருந்தார்கள். உண்மையில், அவர்கள் தன்னந் தனியாக வடக்கேயுள்ள கிறிஸ்தவ தேசங்களின் நெருக்குதலையும் தாக்குப் பிடித்துக்கொண்டு, ஸ்பெயி னின் பெரும் பகுதியை 500 ஆண்டுகள் வரையில் ஆண்டு வந்தது நமக்கு ஆச்சரியத்தையே அளிக்கிறது. இதற்குப் பிறகும் சுமார் 200 ஆண்டுகள் வரையில் அவர்கள் ஸ்பெயினின் தென் பகுதியிலுள்ள ஒரு சிறு ராஜ்யத்தை விடாது பற்றிக்கொண் டிருந்தார்கள். ஆகவே, அவர்கள் பாக்தாது சாம்ராஜ்யம் மாண்ட பிறகும் உயிர் வைத்துக் கொண்டு வந்திருக்கிறார்கள். அரேபியர் கடைசியாக ஸ்பெயினிலிருந்து விடை பெற்றுக்கொண்ட காலத்திற்கு நெடுங்காலம் முன்பே பாக்தாது நகரம் மண்ணோடு மண்ணாய்ப் போய்விட்டதென்று அறிகிறோம்.

ஸ்பெயினில், இந்த 700 வருஷத்து அரேபிய ஆட்சி ஆச்சரியத்தைப் பயப்பதாக இருக்கிறது. இதைவிடப் பெரிய ஆச்சரியம் ஸ்பானிய அரேபியரின் உயர்ந்த நாகரிக மும் கலைப் பண்புமே ஆகும். அவர்கள் ‘மூர்கள்’ என்று

அழைக்கப்பட்டார்கள். உற்சாகத்தில் சிறிது தன்னை மறந்துவிட்ட ஒரு சரித்திராசிரியன் கூறுவதைக் கேள் :

"மூர்கள் ஆண்டுவந்த அந்த கார்டோபா என்னும் ராஜ்யம் ஐரோப்பிய இடைக்காலத்தின் அற்புதமாகத் திகழ்ந்தது. ஐரோப்பா முழுவதும் அறியாமையிலும், போரிலும், அந்தகாரத்திலும் மூழ்கிக் கிடந்தபோது மேற்கு உலகத்துக்கே கல்வி, நாகரிகம் இவற்றின் ஒளியை, அணையாது காத்துத் தந்தது அதுவேயாகும்."

500 ஆண்டுகள் வரையில் குர்துபா அந்த ராஜ்யத்தின் தலைநகராக விளங்கியது. ஆங்கிலத்தில் இதைக் 'கார்டோபா' அல்லது 'கார்டோவா' என்று வழங்குகிறார்கள். சில சமயங்களில், நான் ஒரே பெயரைப் பலவிதமாக மாற்றி எழுதிவிடுகிறேன் என்று எண்ணுகிறேன். இனி, இதைக் கார்டோபா என்றே அழைப்போம். மிகப் பெரிய அந்நகரில் பத்துலட்சம் பேர் வாழ்ந்துவந்தார்கள். அதன் அக நகர் பத்துமைல் நீளமும், புற நகர் இருபத்து நான்கு மைல் பரப்பும் வாய்ந்து விளங்கின. இள மரக்காவும், தண் பூம்பொழிலும் இடையிடை பயின்று வளம்பல கொழித்த அம்மாநகரின் கண் 60,000 அரண்மனைகளும் மாளிகைகளும், 2,00,000 வீடுகளும், 80,000 கடைகளும், 3800 மசூதிகளும், 700 பொது நீராட்ட விடுதிகளும் இருந்தனவாம். மேற்கூறிய எண்கள் சிறிது மிகையா யிருக்கலாம். ஆனால், அந்நகர் இந்தவிதமா யிருக்குமென்று நாம் ஒருவாறு அவ்வெண்களால் அறிந்து கொள்ளுகிறோம். அங்கு பல நூல் நிலையங்கள் இருந்தன. இவற்றில் முக்கியமான அமீரின் அரசாங்க நூல் நிலயத்தில் 4,00,000 நூல்கள் இருந்தனவாம். கார்டோபா சர்வகலாசாலை ஐரோப்பாவெங்கும் மேற்கு ஆசியாவிலுங்கூடப் பேரும் புகழும் பெற்று விளங்கியது. ஏழைகள் கல்வி கற்பதற்கு

இலவச ஆரம்பப் பள்ளிகள் ஏராளமாக இருந்தன. ஒரு சரித்திராசிரியர் சொல்லுவதாவது :

"ஸ்பெயினில் அநேகமாக எல்லோரும் எழுதப் படிக்கத் தெரிந்தவர்களாக இருந்தார்கள். ஆனால், கிறிஸ்தவ ஐரோப்பாவிலோ மதகுருமாரைத் தவிர்த்து உயர் குடும்பங்களில் பிறந்தவர்கள் கூட எழுத்துவாசனை அற்றவர்களாக இருந்தார்கள்."

இவ்வாறு கார்டோபா நகரம் இன்னொரு பெரிய அரேபிய நகரமாகிய பாக்தாதுக்குப் போட்டியாக விளங்கியது. அதன் புகழ் ஐரோப்பா முழுவதும் பரவியிருந்தது. பத்தாவது நூற்றாண்டைச் சேர்ந்த ஒரு ஜெர்மன் ஆசிரியர் அதை 'உலகின் அணிகலன்' என்று கூறுகிறார். அங்குள்ள பல்கலைக் கழகத்தில் கல்வி பயிலுவதற்கு நெடுந் தூரத்திலிருந்து மாணுக்கர் வந்தனர். அரேபிய தத்துவ சாஸ்திரத்தின் பிரபாவம் பாரிஸ், ஆக்ஸ்போர்டு, வட இதாலி ஆகிய இடங்களிலுள்ள இதர ஐரோப்பியப் பல்கலைக் கழகங்களுக்கும் பரவியது. 12-ஆம் நூற்றாண்டில் கார்டோபாவில் அவெரோஸ் அல்லது இபின் ரஷீது என்னும் பெயர்பெற்ற ஒரு பிரபல தத்துவ சாஸ்திரி வாழ்ந்துவந்தார். அவருடைய பிற்காலத்தில் அவருக்கும் ஸ்பானிய அமீருக்கும் மனஸ்தாபம் ஏற்பட்ட காரணத்தால் அவர் நாடு கடத்தப்பட்டார். அதன் பிறகு அவர் பாரிசுக்குச் சென்று அங்கே வசித்துவந்தார்.

ஐரோப்பாவின் மற்றப் பாகங்களைப் போலவே ஸ்பெயினிலும் ஒருவிதமான நிலமானிய முறை அமுலில் இருந்தது. பலம் பொருந்திய பெரிய பிரபுக்கள் தோன்றினார்கள். அவர்களுக்கும் நாட்டை ஆண்டுவந்த அமீருக்கும் அடிக்கடி சண்டையும் சச்சரவுமாய் இருந்துவந்தது. வெளியிலிருந்துவந்த தாக்குதலைவிட இந்த உள்நாட்டுச் சண்டைதான் அரேபிய ராஜ்யத்தை அதிகப் பலவீனப்

படுத்திவிட்டது. அதே சமயத்தில் வட ஸ்பெயினிலிருந்த சில சிறிய கிறிஸ்தவ ராஜ்யங்களின் பலம் அதிகரித்து வந்தது. அவைகள் அரேபியரை நெருக்கித் தள்ளிவந்தன

கி. பி. 1000-ஆம் ஆண்டில்—அதாவது முதலாயிர வருஷம் முடியும் சமயத்தில்—அமீரின் ராஜ்யம் ஸ்பெயின் முழுதும் பரவியிருந்தது. தென் பிரான்சில் ஒரு சிறு பகுதியையும் அது தன்னகத்தேகொண் டிருந்தது. ஆனால், அதற்கு முடிவுகாலம் நெருக்கத்திலேயே இருந்தது. வழக்கம்போல், உள்நாட்டுப் பலவீனமே அதற்குக் காரணமாயிருந்தது. கலைகளும், சுகானுபவங்களும், சுத்த வீரமும் படைத்த அரேபிய நாகரிகம் உண்மையில் பணக்கார நாகரிகமாகவே இருந்தது. கஞ்சிக்கின்றி வாடிய ஏழைகள் கிளர்ந்தெழுந்தார்கள். தொழிலாளர் கலகங்கள் மலிந்தன. சிறிது சிறிதாக உள்நாட்டுப்போர் பரவியது; மாகாணங்கள் பிரிந்து போயின; அரேபியரின் ஸ்பானிய சாம்ராஜ்யமும் சிதறுண்டு போயிற்று. இவ்வாறு பிரிந்த நிலையிலும் அரேபியர் ஒருவாறு காலந் தள்ளி வந்தார்கள். கார்டோபா முடிவாக வீழ்ச்சி அடைவதற்கு கி. பி. 1236-வரை சென்றது. காஸ்டில் கிறிஸ்தவமன்னனால் அது ஜெயிக்கப்பட்டது.

அரேபியர் தெற்கே விரட்டப்பட்டார்கள். ஆயினும் அவர்கள் எதிர்த்து நின்றார்கள்; ஸ்பெயினின் தென் கோடியில் ஒரு சிறு ராஜ்யம் வகுத்துக்கொண்டு வாழ்ந்து வந்தார்கள். அதற்குக் கிரானடா என்று பெயர். அளவில் இது மிகவும் சிறியது. ஆனால் அங்கே அரேபிய நாகரிகம் சிறிய அளவில் மீண்டும் பிறந்து வளர்ந்தது. கிரானடாவில் 'அல்-ஹம்ரா' என்னும் புகழ்பெற்ற அரண்மனையை இன்றும் காணலாம். அதன் வளைவுகளும், தூண்களும், சித்திரமான கொடி வேலைப்பாடுகளும் அக்காலத்தை நமக்கு நினைவூட்டுகின்றன. இத்தகைய அழகிய கொடி

வேலைப்பாடுகளை அரேபியக் கட்டிடங்களிலும் இஸ்லாமிய முறையைத் தழுவிய இதர கட்டிடங்களிலும் நீ இன்றும் காணலாம். உருவங்கள் தீட்டுவதை இஸ்லாம் ஆதரிக்க வில்லை. ஆகவே, சிற்பிகள் தங்கள் கற்பனையில் தோன்றியவாறு சித்திரமான கொடி வேலைகளைக் கட்டிடங்களில் அமைக்க ஆரம்பித்தார்கள். அவர்கள் பெரும்பாலும் குரானிலுள்ள அரேபிய வாக்கியங்களை வளைவுகளின்மீதும் பிற இடங்களிலும் அலங்காரமாக எழுதிச் சித்திரித்து வைத்தார்கள். இத்தகைய அலங்கார வேலைகளுக்கு நீரொழுக்குப் போன்ற அரேபிய எழுத்து பெரிதும் ஒத்து வருகிறது.

கிரானடா ராஜ்யம் 200 ஆண்டுகள் நிலைத்திருந்தது. ஸ்பெயினிலிருந்த இதர கிறிஸ்தவ ராஜ்யங்கள் இதை நெருக்கித் துன்புறுத்தி வந்தன. இவற்றில் முக்கியமானது காஸ்டில். சில காலம் அது காஸ்டிலுக்குக் கப்பம் கட்ட ஒப்புக்கொண்டு வாழ்ந்து வந்தது. கிறிஸ்தவ ராஜ்யங்கள் தங்களுக்குள் பிளவுபட்டிராவிட்டால், அது ஒரு வேளை இத்தனை காலம் நீடிக்க முடிந்திராது. ஆனால் கி. பி. 1469-இல் இரு முக்கிய ராஜ்யங்களை ஆண்டு வந்த பர்டினண்ட் என்பவனுக்கும் இசபெல்லா என்பவளுக்கும் திருமணம் நடந்தேறியது. இதனால் காஸ்டில், அரகான், லியான் ஆகிய மூன்று ராஜ்யங்களும் ஒன்றுபட்டன. பர்டினண்டும் இசபெல்லாவும் சேர்ந்து அரேபிய ராஜ்யமான கிரானடாவை ஒழித்தார்கள். அரேபியர் பல வருஷங்கள் வரையில் தைரியமாகப் போராடினார்கள். ஆனால் அவர்கள் கிரானடாவில் நன்கு வளைத்துக் கொள்ளப்பட்டார்கள். பட்டினியால் பீடிக்கப்பட்ட அவர்கள் கி. பி. 1492-இல் விரோதியிடம் சரண் புகுந்தார்கள்.

அரேபியர் அல்லது சாரசெனியரில் பலரும்ஸ்பெயினை விட்டு ஆப்பிரிக்காவுக்குச் சென்றார்கள். கிரானடாவுக் கருகில் நகரில் ஓர் உயர்வான இடம் இருக்கிறது. அதற்கு 'மூரின் கடைசிப் பெருமூச்சு' என்று பெயர்.

ஆயினும், பெருந் தொகையினரான அரேபியர் ஸ்பெயினிலேயே தங்கிவிட்டார்கள். அவர்களை ஸ்பெயின் நடத்திய விதம், அதன் சரித்திரத்தில் ஓர் இருண்ட பாகமாகும். கொடுமையும் கொலையும் தாண்டவமாடின. மத விஷயமாகத் துவேஷம் பாராட்டுவதில்லை என்று அவர்களுக்குக் கொடுக்கப்பட்ட உறுதிமொழிகள் காற்றில் பறக்க விடப்பட்டன. ஏறக்குறைய இக்காலத் தில்தான் ஸ்பெயினில் மத விசாரணை சபை ஸ்தாபிக்கப் பட்டது. ரோமானிய மத ஸ்தாபனம் தனக்குத் தலை வணங்காதவர்களை அடியோடு தொலைப்பதற்குக் கண்ட கொலைக் கருவியாகும் இது. சாரசெனியரின் கீழ் நன்னிலையில் வாழ்ந்து வந்த யூதர்கள் இப்பொழுது தங்கள் மதத்தை மாற்றிக் கொள்ளும்படி வற்புறுத்தப் பட்டார்கள். பலர் தீயிலிட்டு மாய்க்கப்பட்டார்கள். இக்கொடுஞ் செயலுக்குப் பெண்களும் குழந்தைகளும் கூட விலக்காக மதிக்கப்படவில்லை. "அவிசுவாசிகள் அதாவது அரேபியர், தங்களின் நடையுடை பாவனைகள், பாஷை, பழக்க வழக்கங்கள், சடங்கு முறைகள், பெயர்கள் இவை எல்லாவற்றையும் கைவிட்டு ஸ்பானிய மொழியைப் பேசவேண்டும், ஸ்பானிய நடையுடை பாவனைகளைப் பின்பற்றவேண்டும், ஸ்பானியப் பெயர்களை மேற்கொள்ள வேண்டும் என்று வற்புறுத்தப்பட் டார்கள்'' என்று ஒரு சரித்திராசிரியர் கூறுகிறார். இந்தக் கொடுமைகளை எதிர்த்துக் கிளர்ச்சிகளும் எழுச்சிகளும் தோன்றின என்பது உண்மையே. ஆனால், அவை ஈவிரக்க மின்றி நசுக்கப்பட்டன.

ஸ்பானியக் கிறிஸ்தவர்களுக்குக் 'குளித்தல், துவைத்தல்' என்பன வேப்பங்காயாக இருந்தன போலும். ஸ்பானிய அரேபியர் குளித்து முழுகிச் சுத்தமாயிருப்பதில் விருப்பங்கொண்டு எங்கும் நீராட்ட விடுதிகள் கட்டி வைத்த காரணத்தால் ஒருவேளை அவர்கள் அவ்வாறு நடந்து கொண்டார்கள் போலும். "மூர்கள் ஆண்பெண் அடங்கலும், வீட்டிலோ, வெளியிலோ குளிப்பதோ வெளுப்பதோ கூடாது. அவர்களுடைய நீராடுமிடங்கள் எல்லாம் தரைமட்ட மாக்கப்படவேண்டும்" இவ்வாறு மூர்களைச் சீர்திருத்துவதற்காக, உத்தரவு பிறப்பிக்கும் அளவுக்கு அக்கிறிஸ்தவர்கள் சென்றார்கள் என்றால் பார்த்துக்கொள்ளேன்!

அரேபியர் ஸ்நானபானம் செய்து சுத்தமாயிருந்தது ஒரு பெரும் பாவம். அவர்கள் செய்த இன்னொரு பாவம் என்னவென்றால் அவர்கள் மதத் துவேஷமின்றி யிருந்தது தான். இதைப் படிக்கும்போது நமக்கு வியப்பு உண்டாகிறதல்லவா? ஆயினும், சாரசெனியரை ஸ்பெயினைவிட்டு ஓட்டவேண்டும் என்று சிபாரிசு செய்த வாலன்சியாவின் பிரதான மதகுரு கி. பி. 1602-இல் தான் தயாரித்த "மூர்களின் மதத் துரோகங்களும் குற்றங்களும்" என்னும் பத்திரத்தில் இதை முக்கியக் குற்றங்களில் ஒன்றாக எடுத்துக் காட்டியிருக்கிறார். இதைக் குறித்து அவர் சொல்வதாவது: "அவர்கள் (மாரிஸ்கோவர் அல்லது மூர்கள்) மத சம்பந்தமான எல்லாவிஷயங்களிலும் மனச்சாட்சிக்குச் சுதந்தரம் அளிப்பதை மற்றெல்லா வற்றிலும் மேலாகக் கடைப்பிடித்து வந்தார்கள். இத்தகைய உரிமையைத் துருக்கியரும் மற்றெல்லா முகம்மதியரும் தங்கள் கீழ்வாழும் பிரஜைகளுக்கு வழங்கியுள்ளார்கள்." இவ்வாறு அவர் தாம் விரும்பாமலேயே ஸ்பானிய சாரசெனியருக்குப் புகழ்மாலைசூட்டியிருக்கிறார்!

ஸ்பானிய கிறிஸ்தவர்களின் மனோபாவம் இதினின்று எவ்வளவு மாறுபட்டதாகவும் துவேஷம் நிறைந்ததாகவும் இருக்கிறது!

லட்சக் கணக்கான சாரசெனியர் ஸ்பெயினிலிருந்து பெரும்பான்மை ஆப்பிரிக்காவுக்குள்ளும் சிறுபான்மை பிரான்சுக்குள்ளும் பலாத்காரமாக விரட்டப்பட்டனர். ஆனால், அரேபியர் ஸ்பெயினில் 700 ஆண்டுகள் வாழ்ந்து வந்தனர் என்பதை நீ மறந்துவிடக் கூடாது. ஆகவே, இந்நீண்ட காலத்தில் அவர்கள் ஸ்பெயின் மக்களோடு பெரும்பாலும் ஒன்றுபட்டுக் கலந்து விட்டிருந்தார்கள். ஆதியில் அரேபியராயிருந்து. அப்புறம் போகப் போகப் பெரிதும் ஸ்பானியராக மாறிவிட்டார்கள். பிற்காலத்து ஸ்பானிய அரேபியர் பாக்தாது அரேபியரிடமிருந்து ஒருவேளை பெரிதும் வேறுபட்டிருந்தால் அதில் வியப்புக்கு இடமே இல்லை. இன்றுகூட ஸ்பானிய ஜாதியின் ரத்தக் குழாய்களில் அரேபிய ரத்தம் பெரிதும் ஓடுகிறது.

சாரசெனியர் தென் பிரான்சிலும் ஸ்விட்சர் லாந்திலும் குடியேறி இருந்தனர். இன்றுகூட 'மிடி' பிரதேசத்தைச்சேர்ந்த சில பிரெஞ்சுக்காரரிடம் அரேபிய முக ஜாடையைக் காணலாம்.

இவ்வாறாக ஸ்பெயினில் சாரசெனிய ஆட்சி முடிந்தது. அத்துடன் அரேபிய நாகரிகமும் முற்றுப் பெற்றது. ஏனெனில், ஆசியாவில் இதற்கு முன்பே அது வீழ்ந்து விட்டதென்பதை நாம் சீக்கிரத்தில் காண்போம். அது தன் பிரபாவத்தால் பல தேசங்களையும் பல கலாசாரங்களையும் பாதித்துப் பல ஒளி வீசும் அடையாளங்களையும் விட்டுச் சென்றது. ஆனால், அது பிற்காலச் சரித்திரத்தில் மீண்டும் தலையெடுக்கவே இல்லை.

சாரசெனியர் சென்ற பிறகு, பர்டினண்ட்-இசபெல்லாவின் ஆட்சியில் ஸ்பெயினின் ஆதிக்கம் வளர்ந்தது.

அமெரிக்கா கண்டு பிடிக்கப்பட்ட காரணத்தால் விரைவில் அதற்குப் பெருஞ் செல்வம் வந்து குவிய லாயிற்று. சிறிது காலம் வரையில் ஐரோப்பாவிலேயே ஸ்பெயின்தான் ஆதிக்கமும் செல்வாக்கும் மிகுந்த நாடாக விளங்கியது. ஆனால், அது வெகு விரைவில் வீழ்ந்து விட்டது. மற்ற ஐரோப்பிய நாடுகள் முன்னேறிச் சென்றபோது அது ஒளி குன்றி நின்றது. தான் வாழ்ந்த இடைக் காலத்தைப் பற்றியே கனவு கண்டுகொண் டிருந்த அதற்கு, உலகம் அப்புறம் வெகுவாக மாறி விட்டது என்னும் உண்மை அறிவில் உறைக்கவில்லை.

லேன்பூல் என்னும் ஆங்கிலச் சரித்திராசிரியர் ஸ்பானிய சாரசெனியரைப் பற்றிப் பின்வருமாறு கூறுகிறார்:

"பல நூற்றாண்டுகள் வரையில் ஸ்பெயின் தேசமானது கலைக்கும் நாகரிகத்துக்கும் விஞ்ஞானக் கல்விக்கும் வேறு பல அருங் கலைகளுக்கும் முக்கிய ஸ்தானமாக இருந்து வந்தது. மூர்கள் எய்தியிருந்த பண்பாட்டின் அருகில்கூட இன்னும் எந்த ஐரோப்பிய நாடும் செல்லவில்லை. சிறிது காலமே பிரகாசித்த பர்டினண்ட்-இசபெல்லா ஆட்சியும் சார்லசின் சாம் ராஜ்யமும் நீடித்து நிலைக்கக்கூடிய உயர்வு எதையும் ஸ்தாபிக்க முடியவில்லை. மூர்கள் நாடு கடத்தப்பட்ட பிறகு கிறிஸ்தவ ஸ்பெயின், சிறிது காலம் சந்திரனைப் போல், கடன் வாங்கிய ஒளியால் பிரகாசித்தது. பிறகு அதைக் கிரகணம் பிடித்துக்கொண்டது. அன்றிலிருந்து இன்றுவரையில் அது இருட்டிலேயே உழன்று வருகிறது. மூர்கள் ஒரு காலத்தில் வளப்பம் மிகுந்த திராட்சைத் தோட்டங்களையும், ஆலிவ் தோப்புக்களையும், மாறாத விளைவையும் விளைத்த விளை நிலங்கள் இன்று உப்பும் விளையாத பாழ் நிலங்களாகக் கிடக்கின்றன. மூர்களின்

கீழ் கல்வி அறிவிற் சிறந்திருந்த மக்கள் இன்று அறியாமையில் உழலுகிறார்கள். மூர்களுக்குப் பிறகு அந்நாட்டு மக்கள் வளர்ச்சி குன்றி இழிநிலை எய்தித் தேசங்களின் வரிசையில் மிகவும் தாழ்ந்துவிட்டார்கள். இத்தாழ்வு அவர்களுக்கு ஏற்றதேயாகும். இதுவே மூர்களின் பெருமைக்கு உண்மையான சின்னமாகும்."

மேற்கூறிய தீர்ப்பு நிரம்பவும் கடுமையானது. ஒரு வருஷத்துக்கு முன்பு ஸ்பெயினில் புரட்சி ஏற்பட்டு அரசர் அகற்றப்பட்டார். இப்பொழுது ஸ்பெயின் ஒரு குடியரசு நாடு. குழவிப் பருவத்திலிருக்கும் இக்குடியரசின் உழைப்பின் பயனாக ஒரு வேளை மீண்டும் ஸ்பெயின் பிற நாடுகளைப் போல் முன்னணியில் நிற்கலாம்.

# 62

## சிலுவைப் போர்கள்

ஜூன் 19, 1932.

**போ**ப்பாண்டவரும் அவருடைய திருச்சபையாரும் எருசலேம் நகரை மீண்டும் கைப்பற்றுவதற்காக முஸ்லீம்கள்மீது புனித யுத்தப் பிரகடனம் செய்தார்கள் என்று 57-ஆவது கடிதத்தில் கூறினேனல்லவா? செல்ஜுக் துருக்கியரின் ஆதிக்கம் வளர்ந்து வருவதைக் கண்டு ஐரோப்பாவே நடுங்கியது. அதிலும் முக்கியமாகக் கான்ஸ்டாண்டிநோபிளுக்கு நேர்முகமான அபாயம் இருந்தபடியால் அது பயந்துகொண் டிருந்தது. பாலஸ்தீனத்துக்குச் சென்ற யாத்திரீகர்கள் துருக்கியரால் கொடுமையாக நடத்தப்பட்டார்கள் என்கிற கதைகள் ஐரோப்பாவெங்கும் பரவி மக்களுக்குச் சினமூட்டி வந்தன. ஆகவே, போர் முரசு சாற்றப்பட்டது. போப்பாண்டவரும் மதஸ்தாபனத்தாரும், புண்ணிய ஸ்தலத்தை மீட்பதற்கு ஐரோப்பியக் கிறிஸ்தவர்கள் படை எடுத்துச் செல்ல வேண்டுமென்று கேட்டுக் கொண்டார்கள்.

இவ்வாறு கி. பி. 1095-இல் சிலுவைப் போர்கள் ஆரம்பமாயின. கிறிஸ்தவ மதத்துக்கும் இஸ்லாம் மதத்துக்கும், சிலுவைக்கும் பிறைக்கும் மூண்ட இப்போராட்டம் 150 ஆண்டுகளுக்கு மேலாகவே தொடர்ந்து நடைபெற்றது. இடையிடையே நீண்ட காலம் இரு கட்சியாரும் ஓய்ந்திருப்பார்கள். ஆனால், யுத்த நிலைமை மட்டும் இடைவிடாது நீடித்து வந்தது. கிறிஸ்தவ சிலுவைப் போர் வீரர்கள் 'புண்ணிய பூமியில்'

போரிட்டு ஆவி துறக்கவேண்டி அலை அலையாகக் கிளம்பிப் போனார்கள். இந்த நீண்டகால யுத்தத்தினால் சிலுவைப் படை வீரர்களுக்கு யாதொரு நற்பயனும் கிட்டவில்லை. சில காலம் வரையில் எருசலேம் அவர்கள் கையில் இருந்தது. பிறகு அது துருக்கியரிடம் சென்று அவர்களிடமே தங்கிவிட்டது. இந்த யுத்தத்தினால் பாலஸ்தீனமும் சின்ன ஆசியாவும் ரத்தக் காடாக மாறின. லட்சக் கணக்கான கிறிஸ்தவர்களும் முஸ்லீம்களும் பல வகையான இன்னல்களுக்கு ஆளாகி மாண்டு மடிந்தார்கள். இதைத் தவிர இதனால் கண்ட பலன் வேறில்லை.

இக்காலத்தில் பாக்தாது சாம்ராஜ்யம் எந்நிலையில் இருந்தது? அப்பாசீதுகள் கலீபாக்களாக இருந்து அதை ஆண்டு வந்தது வாஸ்தவம். ஆயினும் அவர்கள், பெயருக்குத்தான் அரசர்கள். உண்மையான அதிகாரம் அவர்கள் கையில் இல்லை. அவர்களுடைய சாம்ராஜ்யம் பிளவுபட்டுச் சிதறியதையும், மாகாண கவர்னர்கள் சுதந்தரமாக அரசாளத் தொடங்கியதையும் ஏற்கெனவே கண்டோம். இந்தியா மீது பலமுறை படையெடுத்து வந்த கஜினி முகம்மது மிகவும் பலம் வாய்ந்தவனாய் இருந்தான். கலீபா அவனுடைய இஷ்டத்துக்கு மாறாக நடக்கும்போதெல்லாம் அவன் அவரைப் பயமுறுத்தி வந்தான். பாக்தாதில்கூட உண்மையான ஆதிக்கம் துருக்கியரிடந்தான் இருந்தது. இதற்குப் பின் துருக்கியரின் இன்னொரு கிளை—செல்ஜக் துருக்கியர்—வந்தது. அவர்கள் விரைவிலேயே தங்கள் ஆதிக்கத்தை நிலைநாட்டி ஜெயசீலர்களாய்க் கான்ஸ்டாண்டிநோபிள் வரையில் பரவினார்கள். ஆனால் கலீபா, கலீபாவாகவே இருந்தார்; ஆயினும் அரசியல் அதிகாரம் அற்றவராக இருந்தார். கலீபா செல்ஜக் அரசர்களுக்குச் சுல்தான் என்னும்

பட்டத்தை வழங்கினார். சுல்தான் ஆட்சிபுரிந்து வந்தார். ஆகவே, சிலுவைப்படை வீரர்கள் இந்த செல்ஜக் சுல்தான்களையும் அவர்கள் பின் வந்தோரையும் எதிர்த்துப் போர் புரிய வேண்டியதாயிற்று.

இச்சிலுவைப் போர்களால் ஐரோப்பாவில் கிறிஸ்தவ உலகத்தைப் பற்றிய எண்ணம் வளர்ந்தது. இப்பொழுது ஐரோப்பா முழுவதற்கும் ஒரு பொதுவான கருத்தும் கடமையும் ஏற்பட்டுவிட்டன; அதாவது, 'அவிசுவாசி' யிடமிருந்து புண்ணிய பூமியை மீட்பது. இப்பொதுவான கடமை உணர்ச்சியானது மக்களுக்குப் பேருக்கத்தை அளித்தது. இவ்வுயர்ந்த லட்சியத்திற்காகப் பலர் வீடுவாசலையும், மனைவி மக்களையும், சொத்துச் சுதந்தரங்களையும் துறந்து போர்க்களத்துக்குச் சென்றார்கள். வேறு பலர், போப்பாண்டவரால் தங்கள் பாவங்கள் மன்னிக்கப்படும் என்னும் நோக்கத்துடன் சென்றார்கள். இவைகளைத் தவிர்த்து வேறு காரணங்களும் இருந்தன. ரோமாபுரி முடிவாகக் கான்ஸ்டாண்டிநோபிளைத் தன்கீழ் கொண்டுவந்துவிட விரும்பியது. கான்ஸ்டாண்டிநோபிள் மத ஸ்தாபனம் ரோமாபுரியினதிலிருந்து வேறுபட்டதென்பது உனக்கு நினைவிருக்கலாம். அது தன்னை வைதிக மதஸ்தாபனம் என்று அழைத்துக் கொண்டது. அதற்கு ரோமாபுரி என்றால் கட்டோடு பிடிப்பதில்லை. போப்பாண்டவரை அது நடுவாந்தரத்தில் வாழ்வடைந்த அற்பனாகவே கருதியது. போப்பாண்டவர் கான்ஸ்டாண்டிநோபிளின் இக் கர்வத்தை அடக்கி அதைத் தமக்குட்பட்டதாகச் செய்ய விரும்பினார். கிறிஸ்தவ மதத் துரோகியான துருக்கியனோடு போரிடுகிற போர்வையில் அவர் தமது நீண்ட கால மனோரதத்தை நிறைவேற்றிக்கொள்ளப் பார்த்தார். ராஜீயவாதிகளும் ராஜதந்திரிகளும் கடைப்பிடிக்கிற வழி இதுதான்!

சிலுவைப் போர்களின் இடையே ரோமாபுரிக்கும் கான்ஸ்டாண்டிநோபிளுக்கும் உள்ள விரோதம் இடையீடின்றித் தலையெடுத்து விடுவதால் இதை நீ நினைவில் வைக்கவேண்டியது அவசியம்.

சிலுவைப் போர்களுக்கு இன்னொரு காரணம் வியாபார சம்பந்தமானது. வியாபாரிகள், முக்கியமாக வெனிஸ் ஜினோவா போன்ற துறைமுகப் பட்டணங்களில் வாழ்ந்தவர்கள், மந்த நிலையிலிருக்கும் தங்கள் வியாபாரத்தைப் பெருக்குவதற்காக இப்போரை விரும்பி வரவேற்றார்கள். ஏனெனில், கீழ்த்திசைக்குச் செல்லும் அவர்களுடைய வியாபார மார்க்கங்களில் பலவற்றைத் துருக்கியர் அடைத்துவிட்டார்கள்.

இக்காரணங்களைப் பொது மக்கள் அறியார்கள். அவர்களுக்கு இவைகளை எடுத்துச் சொல்வார் யாருமிலர். அரசியல் வாதிகள் எப்பொழுதுமே உண்மைக் காரணங்களை ஒளித்து மதம், நீதி, நியாயம், சத்தியம் என்று வாய்ப்பந்தல் போடுவதில் சமர்த்தர்கள். சிலுவைப் போர்களின் காலத்திலும் இதுவே நிகழ்ந்தது. இக்காலத்திலும் இதுவேதான் நிகழ்கிறது. அக்காலத்திலும் ஜனங்கள் ஏமாந்தார்கள். இக்காலத்திலும் பெரும்பாலான ஜனங்கள் அரசியல் வாதிகளின் ஆசை வார்த்தைகளைக்கேட்டு ஏமாறித்தான் வருகிறார்கள்.

ஆகவே, சிலுவைப் படையில் பலர் சேர்ந்தார்கள். அவர்களில் நல்லவர்களும் இருந்தார்கள்; கொள்ளை முதலிய எண்ணங்களால் தூண்டப்பட்ட தீயவர்களும் இருந்தார்கள். இவ்வாறு அக்கூட்டத்தில் மதபக்தி கொண்ட மேன்மக்களோடு எவ்விதப் பழிபாவங்களுக்கும் அஞ்சாத கீழ்மக்களும் சேர்ந்திருந்தார்கள். உயர்ந்த லட்சியத்துக்குச் சேவை செய்யப் போவதாகச் சொல்லிக் கொண்ட இச்சிலுவைப் போர்வீரர்கள், அல்லது அவர்

களில் பெரும்பாலோர் செய்யாத ஈனச்செயல்கள் இல்லை. வழியிலேயே கொள்ளையிலும் தீய கருமங்களிலும் ஈடுபட்டிருந்த காரணத்தால் பாலஸ்தீனத்துக்கு அருகில் கூடச் செல்லவில்லை சிலர் வழியிலேயே யூதர்களைக் கொல்ல ஆரம்பித்தார்கள்; வேறு சிலர் தங்கள் சகோதரக் கிறிஸ்தவர்களையே கொன்ருர்கள். அவர்களுடைய அக்கிரமம் பொறுக்காமல், அவர்கள் கடந்து சென்ற கிறிஸ்தவ நாடுகளிலுள்ள குடியானவர்கள் சில சமயங் களில் கிளர்ந்தெழுந்து அவர்களில் பலரைக் கொன்றும் பலரைத் துரத்தியும் வந்தார்கள்.

கடைசியாக, அச்சிலுவைப் படைவீரர்கள் ஒரு நார் மானியனின் தலைமையின் கீழ் பாலஸ்தீனத்தை அடைந் தார்கள். அவன் பூவிலானைச் சேர்ந்த காட்பிரே என்பவன். எருசலேமை அவர்கள் கைப்பற்றிஞர்கள். அதன் பிறகு ஒருவாரம் வரையில் ஒரே ரத்தக்களரிதான். எங்கும் கோரமான கொலைதான். இதை நேரில் கண்ட ஒரு பிரெஞ்சுக்காரன், 'மசூதியின் முன்மண்டபத்தில் முழங்காலளவு ரத்தம் பிரவகித்தது; அது குதிரைகளின் கடிவாளங்களையும் எட்டிற்று' என்று சொல்லுகிருன். காட்பிரே எருசலேமின் அரசன் ஆஞன்.

எழுபது வருஷங்களுக்குப் பின் எகிப்து சுல்தான் சலாதீன் என்பாஞல் எருசலேம் மீண்டும் கைப்பற்றப் பட்டது. இதைக் கண்ட ஐரோப்பிய மக்கள் ஆத்திரம் அடைந்தார்கள். இதைத் தொடர்ந்து பல சிலுவைப் போர்கள் நிகழ்ந்தன. இம்முறை ஐரோப்பாவின் மன்னரும், மன்னர் மன்னரும் நேரில் வந்தார்கள்; ஆஞல், பலன் ஒன்றும் இல்லை. அவர்கள் பொருமை மிகுதியால் தங்களுக்குள் 'யார் பெரியவன்' என்று சண்டை போட்டுக்கொண்டார்கள். கோரமான கொடிய போரோடு இழிசூழ்ச்சியும் கழிபாவமும் பின்னிக்கிடக்கும் அச்

கதையைக் கேட்பதே கஷ்டமாயிருக்கிறது. ஆனால் இடையிடையே மனிதனின் நல்லியல்பு பிரகாசித்த காலங்களும் உண்டு. எதிரிகள் ஒருவர்க்கொருவர் அன்பாகவும் பண்பு சான்ற வீரத்தோடும் நடந்துகொண்டார்கள். பாலஸ்தீனத்திலிருந்த ஐரோப்பிய அரசர்களுள் இங்கிலாந்தை ஆண்ட 'சிங்க நெஞ்சன்' என்னும் பெயர் பெற்ற ரிச்சர்டும் இருந்தான். அவன் உடல் வன்மையிலும் தீரத்திலும் மிக்கவன். சலாதீனும் சுத்தவீரன். போர்த் திறமையிலும், பெருந்தன்மையிலும் சிறந்தவன். சலாதீனோடு போர்புரிந்த சிலுவைவீரர்கள்கூட அவனுடைய வீரத்தைப் போற்றிப் பாராட்டத் தலைப்பட்டார்கள். ரிச்சர்டு ஒரு காலத்தில் நோய்வாய்ப்பட்டு உஷ்ணமிகுதியால் கஷ்டப்பட்டுக்கொண்டிருந்ததை அறிந்த சலாதீன் மலையுச்சிகளிலிருந்து பனிக்கட்டிகள் கொண்டுவரச் செய்து தன் விரோதிக்கு அனுப்பிவைத்ததாக ஒருகதை கூட வழங்குகிறது. இப்போது, நாம் தண்ணீரை உறையவைத்துப் பனிக்கட்டி செய்து கொள்வது போல், அக்காலத்தில் செய்யக் கற்றூர்கள் இல்லை. ஆகவே, இயற்கையில் உண்டாகும் பனிக்கட்டியை மலைகளிலிருந்து துரிதமாகக் கொண்டுவரும் ஆட்கள் மூலம் எடுத்துவர வேண்டியிருந்தது.

சிலுவைப் போர்கள் நடந்த காலத்தைப்பற்றிப் பல கதைகள் உண்டு. ஆங்கிலப் பேராசிரியர் வால்டர் ஸ்காட் எழுதியுள்ள 'இரட்சை' (Talisman) என்னும் நாவலை நீ வாசித்திருக்கலாம்.

சிலுவைவீரர்களில் ஒரு கூட்டத்தார் கான்ஸ்டாண்டிநோபிளுக்குச் சென்று அதைக் கைப்பற்றிக் கொண்டார்கள். அவர்கள் கிழக்கு சாம்ராஜ்யத்தின் கிரேக்க சக்கரவர்த்தியைத் துரத்திவிட்டு லத்தீன் ராஜ்யத்தையும் ரோமானிய மத ஸ்தாபனத்தையும் ஸ்தாபித்தார்கள்.

கான்ஸ்டாண்டிநோபிளிலும் பலர் கோரமாகக் கொல்லப் பட்டனர். அந்நகரத்தின் ஒரு பகுதி சிலுவைப் படைகளால் எரிக்கவும் பட்டது. ஆனால். இந்த லத்தீன் ராஜ்யம் நீடிக்கவில்லை. ஐம்பது ஆண்டுகளுக்குப் பின் கிழக்கு சாம்ராஜ்யத்தைச் சேர்ந்த கிரேக்கர்கள், அதிக பல மற்றவர்களாக இருந்தும், மீண்டும் திரும்பிவந்து லத்தீன் மார்க்கத்தாரைத் துரத்தியடித்தார்கள். இதற்குப் பின் 200 ஆண்டுகள் வரையில் கான்ஸ்டாண்டிநோபிளைத் தலை நகராகக் கொண்ட கிழக்கு சாம்ராஜ்யம் நீடித்திருந்தது. கி. பி. 1453-இல் துருக்கியர் வந்து அதை முடிவாக ஒழித்தார்கள்.

கான்ஸ்டாண்டிநோபிளைச் சிலுவை வீரர்கள் கைப் பற்றியது, ரோமாபுரி மதஸ்தாபனமும் போப்பாண்டவரும் அதைத் தங்கள் செல்வாக்கின்கீழ்க் கொண்டுவர விரும்பியதை நன்கு எடுத்துக்காட்டுகிறது. கிரேக்கர்கள், அதிகமாகப் பயந்திருந்த சமயத்தில், துருக்கியருக்கு விரோதமாக ரோமாபுரியின் உதவியைக் கோரினார்களாயினும், சிலுவைப்படை வீரர்களுக்கு அவர்கள் யாதோர் உதவியும் செய்யவில்லை; அதற்குமாறாக அவர்களைப் பெரிதும் வெறுத்தார்கள்.

இச்சிலுவைப் போர்கள் எல்லாவற்றிலும் மிகவும் கோரமானது குழந்தைகளின் சிலுவைப்படை என ஒன்று திரட்டப்பட்டதே. பல இளைஞர்கள் உற்சாக மிகுதியில் தங்கள் வீடுகளைவிட்டுப் பாலஸ்தீனத்துக்குப் புறப் பட்டார்கள். இவர்களில் பெரும்பாலோர் பிரான்சிலிருந்தும், சிலர் ஜெர்மனியிலிருந்தும் வந்தவர்கள். பலர் வழியிலேயே மாண்டுவிட்டார்கள்; வேறு பலர் காணாமற் போய்விட்டார்கள். மிகுதியான தொகையினர் மார்சேல்சை அடைந்தார்கள். அவர்களுடைய உற்சாகத்தைக் கண்ட நயவஞ்சகர்கள், அவர்களைப் 'புண்ணிய பூமி'க்கு

அழைத்துச் செல்வதாகப் பொய் புகன்று, தங்களுடைய கப்பல்களில் எகிப்துக்கு ஏற்றிச் சென்று, அங்கே அவர்களை அடிமைகளாக விற்றுவிட்டார்கள்.

இங்கிலாந்து மன்னனாகிய ரிச்சர்டு பாலஸ்தீனத்திலிருந்து திரும்பும் வழியில் கிழக்கு ஐரோப்பாவில் அவருடைய விரோதிகளால் சிறைப்படுத்தப்பட்டார். அவர் தம் விடுதலைக்கு ஈடாகப் பெருந்தொகையை அளித்தபின்பே விடுவிக்கப்பட்டார். ஒரு பிரெஞ்சு அரசர் பாலஸ்தீனத்திலேயே சிறைப்படுத்தப்பட்டுப் பெருந்தொகையைச் செலுத்தியபின்பே விடுதலைபெற்றார். பரிசுத்த ரோம சாம்ராஜ்யத்தின் சக்கரவர்த்தியான பிரடெரிக் பார்பரோசா என்பவர் பாலஸ்தீனத்தில் ஓர் ஆற்றில் முழுகி இறந்தார். இதற்கிடையில், காலம் செல்லச் செல்ல, இச்சிலுவைப் போர்களின் மகிமை குறைந்து வந்தது. ஜனங்களும் அலுத்துப் போய் விட்டார்கள். எருசலேம் முஸ்லீம்களின் கையிலேயே இருந்தது. ஆனால், ஐரோப்பிய அரசர்களும் மக்களும் அதை மீட்பதற்கு உயிரையும் பொருளையும் இனியும் செலவழிக்கத் தயாராயில்லை. அதிலிருந்து ஏறக்குறைய 700 ஆண்டுகள் வரையில் எருசலேம் முஸ்லீம்களிடமே இருந்தது. அது சமீபத்தில்தான், 1918-இல் சென்ற மகா யுத்தத்தின்போது, ஓர் ஆங்கிலத் தளபதியால் துருக்கியரிடமிருந்து கைப்பற்றப்பட்டது.

பிற்காலத்திய சிலுவைப் போர் ஒன்று ரசமாகவும், வழக்கத்துக்கு மாறாகவும் நடப்பதைக் காண்கிறோம். அதைப் பழைய அர்த்தத்தில் சிலுவைப் போர் என்றே சொல்லுவதற்கில்லை. பரிசுத்த ரோம சாம்ராஜ்யத்தின் சக்கரவர்த்தியாகிய இரண்டாவது பிரடெரிக் என்பவர் பாலஸ்தீனத்துக்கு வந்தார். ஆனால், போரிடுவதற்குப் பதிலாக எகிப்து சுல்தானைக் கண்டு பேசினார்! பிறகு

இருவரும் ஒரு சமாதானத்துக்கு வந்தார்கள்! பிரடெரிக் ஓர் அதியாச்சரியமான பேர்வழி. பெரும்பாலான அரசர்களுக்கு எழுதப் படிக்கக்கூடத் தெரியுமா என்று சந்தேகம் இருந்த காலத்தில் அவர் அரபு உள்படப் பல மொழிகளில் புலமைபெற்று விளங்கினர். அவரை 'உலகத்தின் அற்புதம்' என்று அழைக்கிறார்கள். அவர் போப்பாண்டவரைச் சட்டைசெய்யவில்லை. அதனால், அவரைப் போப்பாண்டவர் ஜாதிப்பிரஷ்டம் செய்தார். அவர் அதைக் காதில் போட்டுக்கொள்ளவே இல்லை.

ஆகவே, சிலுவைப் போர்கள், எதையும் சாதித்துக் கிழித்துவிடவில்லை. ஆனல், தொடர்ச்சியான போராட்டத்தால் செல்ஜக் துருக்கியரின் வலிகுன்றியது. இதை விட அதிகமாக செல்ஜக் சாம்ராஜ்யத்தின் அஸ்திவாரத்தை நிலமானிய ஏற்பாடு என்னும் புழு அரித்து வந்தது. பெரிய நிலமானியப் பிரபுக்கள் தங்களைச் சுதந்தரர்களாகவே கருதிவந்தார்கள். சதா அவர்களுக்குள் சண்டைதான். சில சமயங்களில், ஒருவருக்கு விரோதமாக மற்றொருவர் கிறிஸ்தவர்களின் உதவியை நாடும் அளவுக்குக்கூடச் சென்றார்கள். இந்த உள்நாட்டுப் பலவீனம்தான் சில சமயம் சிலுவைப் படையினர்களுக்குச் சாதகமாக இருந்து வந்தது. ஆனல், சலாதீனைப்போன்ற பலம் வாய்ந்த அரசன் ஆண்டகாலத்தில், அவர்களுடைய கை ஓங்கவில்லை.

சிலுவைப் போர்களைப்பற்றிச் சமீபத்தில் ஆங்கிலச் சரித்திராசிரியரான ஜி. எம். டிரெவெலியன் (நீ படித்துள்ள கரிபால்டி நூல்களின் ஆசிரியர்) என்பார் வெளியிட்டுள்ள கூற்று உய்த்துணரத்தக்கது. அவர் சொல்லுவதாவது: "ஐரோப்பா ஒருவிதப் புதிய சக்தியுடன் திகழ்ந்தது. அது வேட்கையுடன் கிழக்கே நோக்கியது. அந்தப் பொதுவான வேட்கையின்—போர் மதம் இவை

சம்பந்தமான—அம்சமே சிலுவைப் போர்கள் என்பவை. அவைகளால் நமது புண்ணிய பூமி மீட்கப்படவும் இல்லை, கிறிஸ்தவ உலகம் ஒற்றுமை அடையவும் இல்லை. ஆனால், ஒருபலன் மட்டும் ஏற்பட்டது. அருங்கலைகள், கைத் தொழில்கள், விஞ்ஞான உணர்வு, அறிவுத்தாகம், ஆடம்பர வாழ்வின் சுகபோகங்கள்—முதலிய, பேதுரு சந்நியாசி வெறுத்திருக்கக் கூடிய, எல்லாவற்றையும் ஐரோப்பா கொண்டு வந்தது."

கி. பி. 1193-இல் சலாதீன் மரணம் அடைந்தான். அவனுக்குப்பின் பழைய அரேபிய சாம்ராஜ்யத்தில் எஞ்சி யிருந்ததும் சிறிதுசிறிதாகச் சிதைவுற்றுப் போயிற்று. சிறிய நிலமானியப் பிரபுக்களுக்கு உட்பட்ட மேற்கு ஆசியாவின் பல பாகங்களிலும் குழப்பம் உண்டாயிற்று. கடைசிச் சிலுவைப் போர் கி. பி. 1249-இல் நடந்தது. அதைத் தலைமை வகித்து நடத்தியவன் பதினைலாவது லூயி என்னும் பிரெஞ்சு அரசன். அவன் தோற்கடிக்கப்பட்டுச் சிறைப்படுத்தப்பட்டான்.

இதற்கிடையில், கிழக்கு ஆசியாவிலும் மத்திய ஆசியா விலும் பெரிய பெரிய சம்பவங்கள் நிகழ்ந்து கொண்டிருந் தன. மங்கோலியர் மகா பலவானன செங்கிஸ்கான் என் னும் தங்கள் தலைவனின் கீழ் அதிவேகத்துடன் முன்னேறி வந்தார்கள். கீழ் வானத்தில் கவிந்து நின்ற இக்கரிய பெருமேகத்தைக் கண்ட கிறிஸ்தவன், முகம்மதியன் இரு வரும் திகில் அடைந்தார்கள். செங்கிஸ்கானைப் பற்றியும், மங்கோலியரைப் பற்றியும் பிறகு சொல்லுகிறேன்.

இக்கடிதத்தை முடிக்குமுன் ஒரு விஷயம் சொல்ல விரும்புகிறேன். மத்திய ஆசியாவில் பொகாரா நகரில் அரேபிய வைத்தியர் ஒருவர் வாழ்ந்து வந்தார். அவருடைய புகழ் ஆசியா, ஐரோப்பா இரு கண்டங்களிலும் பரவி இருந்தது. அவருடைய பெயர் இபின்சினு என்பது.

ஆனால், அவர் ஐரோப்பாவில் ஏவிசென்னா என்றே பெரும்பாலும் அழைக்கப்படுகிறார். 'வைத்திய சிரோமணி' என்று அவர் புகழப்படுகிறார். சிலுவைப் போர்கள் ஆரம்பிக்கும் முன்பே கி. பி. 1037-இல் அவர் இறந்து விட்டார்.

அவர் அடைந்திருந்த புகழுக்காகவே நான் அவரைப் பற்றி இங்கே குறிப்பிட்டேன். ஆனால், அரேபிய சாம்ராஜ்யம் இறங்குமுகத்திலிருந்த இக்காலத்திலும், அரேபிய நாகரிகம் மேற்கு ஆசியாவிலும், மத்திய ஆசியாவின் ஒரு பகுதியிலும் துவங்கி வந்ததென்பதை நீ நினைவில் வைக்க வேண்டும். சலாதீன், சிலுவைப் படைகளை எதிர்த்துப் போராடிவந்த போதிலும், பல பெரிய கலாசாலைகளையும் வைத்திய சாலைகளையும் கட்டினான். ஆனால் இதை அடுத்து அரேபிய நாகரித்திற்குத் திடீரென்று முடிவு ஏற்பட்டு விட்டது. மங்கோலியர் கிழக்கேயிருந்து வந்து கொண்டிருந்தார்கள்.

## 63

# சிலுவைப் போர்கள் காலத்தில் ஐரோப்பா

ஜூன் 20, 1932.

சென்ற கடிதத்தில் 11, 12, 13-ஆம் நூற்றுண்டுகளில் கிறிஸ்தவ மதத்துக்கும் இஸ்லாம் மதத்துக்கும் விளைந்த போராட்டத்தைச் சிறிது பார்த்தோம். 'கிறிஸ்தவ உலகம்' என்னும் கொள்கை ஐரோப்பாவில் வளர்கிறது. இதற்குள் கிறிஸ்தவ மதம் ஐரோப்பா முழுவதும் பரவி விட்டது. கடைசியாகக் கிறிஸ்தவ மதத்தைத் தழுவியவர்கள் கிழக்கு ஐரோப்பாவில் வாழ்ந்த ஸ்லாவ் ஜாதியார் ஆவர். அதாவது ருஷியர் முதலானோர். அதைப் பற்றிய ரசமான கதை ஒன்று உண்டு. ஆனால், அது எவ்வளவு தூரம் உண்மை என்று எனக்குத் தெரியாது. பண்டைய ருஷிய மக்கள் தங்கள் பழைய மதத்தை விடுத்துப் புதிய ஒன்றைத் தழுவுமுன் தாங்கள் கூடிச் சர்ச்சை செய்தார்களாம். அவர்கள் கேள்வியுற்ற புதிய மதங்கள் இரண்டு: கிறிஸ்தவமும் இஸ்லாமும். ஆகவே, அவர்கள் முற்றும் தற்கால ரீதியில், ஒரு தூது கோஷ்டியை இம்மதங்கள் வழங்கிய நாடுகளுக்கு அனுப்பி அவற்றைப்பற்றி நன்கு ஆராய்ந்துவந்து சொல்லச் சொன்னார்களாம். இந்தத் தூது கோஷ்டி இஸ்லாம் வழங்கிய மேற்கு ஆசியநாடுகள் சிலவற்றிற்கும் பிறகு கான்ஸ்டாண்டிநோபிளுக்கும் சென்றதாம். கான்ஸ்டாண்டிநோபிளில் அவர்கள் கண்ட காட்சி அவர்களைத் திகைக்க வைத்தது. வைதிக தேவாலயத்தில் நிகழ்ந்த பூஜா கிரமங்கள் ஆடம்பரமாகவும் கண்ணைப் பறிப்பனவாகவும் இருந்தன. இனிய

சங்கீதமும் பாட்டும் மனதைக் கவர்ந்தன. மத குருமார் விசேஷ உடை அணிந்து வரிசையாக வந்தார்கள். எங்கும் நறுமணம் கமழ்ந்தது. வடக்கேயிருந்துவந்த அரை அநாகரிகர்களான அவர்கள் இதைக் கண்டு மயங்கி விட்டார்கள். இஸ்லாமில் இத்தகைய ஆடம்பரம் ஒன்றும் இல்லை. ஆகவே, அவர்கள் கிறிஸ்தவ மதம் தான் சிறந்தது என்று தீர்மானித்தார்கள். அவ்வாறே, திரும்பிவந்து, தங்கள் அரசருக்கும் தெரிவித்தார்கள். அதன்பேரில், அரசனும் பிரஜைகளும் கிறிஸ்தவர்கள் ஆனார்களாம். கான்ஸ்டாண்டிநோபிளிலிருந்து அவர்கள் கிறிஸ்தவ மதத்தைப் பெற்றதால், ரோமாபுரியைப் பின் பற்றாது வைதிக கிரேக்க மத ஸ்தாபனத்தை அவர்கள் பின்பற்ற ஆரம்பித்தார்கள். அதற்குப்பின் எக்காலத்தும் ருஷியர் ரோமாபுரியிலுள்ள போப்பாண்டவரைக் குரு வாக அங்கீகரிக்கவில்லை.

சிலுவைப் போர்களுக்கு நெடுங்காலம் முன்பே ருஷியாவின் இம் மதமாற்றம் நிகழ்ந்துவிட்டது. பல் கேரியர்கூட ஒருகாலத்தில் இஸ்லாமைத் தழுவலாமா என்று யோசித்துக்கொண் டிருந்தார்களாம். ஆனால், கான்ஸ்டாண்டிநோபிளின் கவர்ச்சி அவர்களுக்கும் அதிகமாயிருந்தது. அவர்களுடைய அரசர் பைஜாண்டிய ராஜகுமாரி ஒருத்தியை மணந்து கொண்டு கிறிஸ்தவராக மாறிவிட்டார். (கான்ஸ்டாண்டிநோபிளின் பழைய பெயர் பைஜாண்டியம் என்பது உனக்கு நினைவிருக்கும்) இவ்வாறே, மற்ற அயல்நாட்டாரும் கிறிஸ்தவ மதத்தை அனுஷ்டிக்க ஆரம்பித்தார்கள்.

சிலுவைப் போர்கள் காலத்தில் ஐரோப்பாவில் என்ன நிகழ்ந்துகொண் டிருந்தது? சில ஐரோப்பிய அரசர் களும் சக்கரவர்த்திகளும் பாலஸ்தீனத்துக்குச் சென்றார் கள் என்பதையும் அவர்கள் அங்குக் கஷ்டத்துக்

குள்ளானூர்கள் என்பதையும் கண்டோம். போப் பாண்டவர் மட்டும் ரோமாபுரியில் உட்கார்ந்துகொண்டு 'புற மதத்தினரான' துருக்கியருக்கு விரோதமாகப் 'புண்ணிய யுத்தம்' புரியும்படி கட்டளைகள் அனுப்பிக் கொண்டிருந்தார். அச்சமயம், போப்பாண்டவர்களின் செல்வாக்கு உச்சநிலையில் இருந்தது. ஆனைப் பட்ட சக்கரவர்த்தியே கனோசாவில் போப்பாண்டவரின் மன்னிப்பைப் பெறுவதற்கு அவர் சந்நிதியை அடையுமுன் உறைபனியில் வெறுங் காலால் நடந்து சென்று வெகு நேரம் வெளியே காத்துக் கொண்டிருந்தார் என்று ஏற்கெனவே கூறியிருக்கிறேன். அவருடைய பழைய பெயர் ஹில்டிபிராண்ட் என்பது. பிறகு அவர் போப் பாண்டவர் ஏழாவது கிரெகரி என்னும் பெயருடன் விளங்கினார். போப்பாண்டவர்களைத் தேர்ந்தெடுப் பதற்கு அவர் ஒரு புது முறையை ஏற்படுத்தினர். ரோமானிய கத்தோலிக்க உலகில் 'கார்டினல்' எனப் படுவோரே போப்பாண்டவருக்கு அடுத்த ஸ்தானத்தி லுள்ள பிரதான மதாசாரியர்கள். இக் கார்டினல்களைக் கொண்ட சபை ஒன்று ஏற்படுத்தப்பட்டது. அதற்குப் 'பரிசுத்த திருச்சபை' என்று பெயர். இந்தச் சபையார் புதிய போப்பாண்டவரைத் தேர்ந்தெடுத்தார்கள். கி. பி. 1039-இல் இம்முறை முதன்முதலாகத் தோற்று விக்கப்பட்டது. அதிலிருந்து இதுநாள் வரையில், சிற்சில மாறுதல்களுடன், இம்முறையே அனுஷ்டித்து வரப் படுகிறது. இப்பொழுதுகூட, ஒரு போப்பாண்டவர் இறந்துவிட்டால், பரிசுத்த திருச்சபையார் உடனே கூடு கிருர்கள். அவர்கள் கூடுவது ஒரு பூட்டப்பட்ட அறையில். தேர்தல் முடியும் வரையில் ஒருவரும் அறைக்குள் செல்வதோ அதிலிருந்து வெளிவருவதோ கூடாது. பல மணி நேரங்கள் ஆலோசித்தும் அவர்கள்

ஏகோபித்த ஒரு முடிவுக்கு வரமுடியாமல் அடிக்கடி திண்டாடுவதுண்டு. ஆனால், ஒரு முடிவுக்கு வராமல் வெளியில் தான் வர முடியாதே! ஆகவே, அவர்கள் எப்படியாவது கடைசியில் ஒரு முடிவுக்கு வந்துதான் தீரவேண்டும். அம்முடிவு செய்யப்பட்டவுடன் வெண்ணிறப் புகைப் படலம் வானில் விரியும். வெளியே காத்திருக்கும். ஜனங்கள் அதைக்கண்டு விஷயத்தைத் தெரிந்து கொள்வார்கள்.

போப்பாண்டவர் தேர்ந்தெடுக்கப்படுவது போலவே பரிசுத்த ரோம சாம்ராஜ்யத்தின் சக்கரவர்த்தியும் தேர்ந்தெடுக்கப்படலானார். ஆனால், அவரைத் தேர்ந்தெடுத்தவர்கள் பெரிய நிலமானியப் பிரபுக்கள். இவ்வாறு தேர்ந்தெடுக்கும் உரிமையுடையோர் எழுவர். அவர்களுக்குத் 'தேர்வு இளவரசர்கள்' என்று பெயர். ஒரு குடும்பத்திலிருந்தே எப்பொழுதும் சக்கரவர்த்தி தேர்ந்தெடுக்கப்படாமலிருப்பதற்காக இவ்வாறு செய்யப்பட்டது. ஆனால், நடைமுறையில், ஒரு குடும்பம் நெடுங்காலம் வரையில் இத்தேர்தல்களில் தன் ஆதிக்கத்தைச் செலுத்தி வருவதும் உண்டு.

ஆகவே, 12, 13-ஆவது நூற்றாண்டுகளில், ஹோஹென்ஸ்டாபென் வமிசம் சாம்ராஜ்யாதிக்கம் செலுத்துவதைக் காண்கிறோம். ஹோஹென் ஸ்டாபென் என்பது ஜெர்மனியில் ஒரு கிராமம் அல்லது சிறு பட்டணத்தின் பெயர் என்று நினைக்கிறேன். ஆதியில் அங்கிருந்துவந்த குடும்பம் அந்தப் பெயரால் தன்னை அழைத்துக் கொண்டது. அக்குடும்பத்தைச் சேர்ந்த முதலாவது பிரடெரிக் என்பவன் 1152-இல் சக்கவர்த்தியாக முடி சூடினான். அவன் பிரடெரிக் பார்பரோசா என்று அதிகமாக வழங்கப்படுகிறான். சிலுவைப்போருக்குச்செல்லும் வழியில் ஒரு நதியில் மூழ்கி இறந்தவன் இவனே. அவனுடைய ஆளுகை, சாம்ராஜ்யச்

சரித்திரத்திலேயே மிகவும் பெருமை வாய்ந்ததென்று கருதப்படுகிறது. ஜெர்மானிய மக்களுக்கு அவன் பெரிய வீரனைக் காட்சி அளிக்கிறான். அவனைப் பற்றிப் பல புராணக் கதைகள் வழங்குகின்றன. அவன் மலையில் ஒரு குகையில் தூங்குவதாகவும், ஏற்ற காலம் வரும்போது துயில் நீங்கி எழுந்திருந்து தன் ஜனங்களைக் காப்பாற்ற வருவான் என்றும் சொல்லப்படுகிறது.

போப்பாண்டவரை எதிர்த்து அவன் பெருமுயற்சி செய்தான். ஆனால், போப்பாண்டவரே முடிவில் வெற்றியுற்றார். பிரடெரிக் அவருக்குத் தலைகுனிய வேண்டியதாயிற்று. அவன் யதேச்சாதிகாரப் பிரியன். ஆனால். அவனுக்குக் கீழ்ப்பட்ட நிலமானியப் பிரபுக்கள் அவனுக்குப் பெருந் தொல்லை விளைத்தனர். இதாலியில் தோன்றி வளர்ந்த பெரிய நகரங்களின் சுதந்தரத்தை பிரடெரிக் அடக்க முயன்றான். ஆனால், அவன் வெற்றி பெறவில்லை. ஜெர்மனியில், முக்கியமாக ஆற்றங்கரைகளில் பெரிய நகரங்கள் தோன்றி வளரலாயின. கொலோன், ஹாம்பர்க், பிராங்க்பார்ட் முதலிய பல நகரங்கள் அவ்வாறு தோன்றின. ஆனால், இங்கு பிரடெரிக் அனுஷ்டித்த கொள்கை வேறு. இங்கு அவன், நிலமானியப் பிரபுக்களின் வலியை ஒடுக்குவதற்காகச் சுதந்தர ஜெர்மானிய நகரங்களை ஆதரிக்க ஆரம்பித்தான்.

அரசனைப்பற்றி இந்தியர் கொண்டிருந்த கருத்தை நான் பலமுறை உனக்குச் சொல்லியிருக்கிறேன். பண்டை ஆரியர் காலத்திலிருந்து அசோகர் காலம் வரையில், சாணக்கியரின் அர்த்த சாஸ்திர காலத்திலிருந்து சுக்கிராச்சாரியரின் நீதிசார காலம் வரையில், அரசன் பொது ஜன அபிப்பிராயத்துக்குப் பணிந்து நடக்க வேண்டுமென்று திருப்பித் திருப்பிச் சொல்லப்பட்டிருக்கிறது

பொதுஜனங்கள்தான் முடிவான எஜமானர்கள். இதுவே இந்திய சித்தாந்தம். (ஆனால், நடைமுறையில் பிற நாடுகளைப் போலவே இந்தியாவிலும் மன்னர்கள் மனம் போனபடி நடந்து வந்திருக்கிறார்கள்.) இத்துடன் பழைய ஐரோப்பிய சித்தாந்தத்தை ஒப்பிட்டுப் பார். அக்காலச் சட்ட பண்டிதர்களின் உரைப்படி சக்கரவர்த்திக்குத் தடையற்ற பூரண அதிகாரம் உண்டு. அவன் வைத்ததுதான் சட்டம். 'பூமியில் சக்கரவர்த்தியின் உருவில் சட்டம் இயங்குகிறது' என்று அவர்கள் சொன்னார்கள். "அரசனுக்குச் சட்டம் விதிக்க மக்களுக்கு உரிமை இல்லை. அவனுடைய கட்டளைகளுக்குக் கீழ்ப்படிந்து நடப்பதே அவர்களுக்குக் கடமையாகும்" என்று பிரடெரிக்கே சொல்லியிருக்கிறான்.

இத்துடன் சீனக் கருத்தையும் ஒப்புநோக்கிப் பார். சீன அரசர்களுக்கும் சக்கரவர்த்திகளுக்கும் 'தேவ குமாரன்' என்பது போன்ற ஆரவாரமான பட்டப்பெயர்களும் விருதுகளும் உண்டு. ஆனால், இதைக் கண்டு நாம் ஏமாறக்கூடாது. கொள்கையளவில் சீன சக்கரவர்த்திக்கும் சர்வ சக்திவாய்ந்த ஐரோப்பியச் சக்கரவர்த்திக்கும் பெரிய வேறுபாடு உண்டு. மெங்சே (Meng-tsa) என்னும் பழைய சீன ஆசிரியர் ஒருவர் பின்வருமாறு எழுதியிருக்கிறார் :—"ஒரு தேசத்தில் முதன்மையானவர்கள் ஜனங்களே. ஜனங்களுக்கு அடுத்தவை கடவுளரும் விளைபொருள்களும். அரசனை மூன்றாவதாகத்தான் சொல்ல வேண்டும்."

ஆகவே ஐரோப்பாவில், சக்கரவர்த்தி என்பவர் இப்பூமியில் யாவரினும் மேம்பட்டவராகவே கருதப்பட்டார் இதிலிருந்துதான் 'அரசரின் தெய்விக உரிமை'க் கொள்கை பிறந்தது. ஆனால், நடைமுறையில் அவர் 'யாவரினும் மேம்பட்டவராக' இல்லை. அவருக்குக்

கீழ்ப்பட்ட நிலமானியப் பிரபுக்களே அவருக்குப் போதிய தொல்லை அளித்து வந்தார்கள். சிறிது சிறிதாக நகரங்களில் புதிய வகுப்புக்கள் தோன்றலாயின. அவர்களும் அதிகாரத்தில் பங்கு கேட்கத் தலைப்பட்டார்கள். அரசனுக்குப் போட்டியாகப் போப்பாண்டவர், தானே புவியில் 'யாவரினும் மேம்பட்டவர்' என்று உரிமை கொண்டாடினர். இவ்வாறு இரு 'யாரினும் மேம்பட்டவர்கள்' சேர்ந்தால் பூசல் விளைவது இயற்கைதானே?

பிரடெரிக் பார்பரோசாவின் பேரனுக்கும் பிரடெரிக் என்றுதான் பெயர். அவன் சிறு வயதிலேயே சக்கரவர்த்தி ஆனன். அவன் இரண்டாவது பிரடெரிக் என்று அழைக்கப்பட்டான். அவன்தான் 'உலகத்தின் அற்புதம்' என்று அழைக்கப்பட்டவன். பாலஸ்தீனத்துக்குச் சென்று எகிப்திய சுல்தானுடன் சிநேகப்பான்மையில் பேசி சமாதானம் செய்து கொண்டவனும் அவனே. அவன், தன் பாட்டனைப் போலவே, போப்பாண்டவரை எதிர்த்து அவருக்குக் கீழ்ப்படிய மறுத்தான். போப்பாண்டவர் அவனை ஜாதிப் பிரஷ்டம் செய்தார். இது போப்பாண்டவர்களின் பழைய ஆயுதம். ஆனல், அது துருப்பிடித்து வந்தது. இரண்டாவது பிரடெரிக் போப்பாண்டவரின் கோபத்தைப் பொருட்படுத்தவில்லை. உலகமும் மாறிக்கொண்டு வந்தது. அவன் ஐரோப்பிய அரசர் அனைவருக்கும் நீண்ட திருமுகங்கள் அனுப்பினன். போப்பாண்டவர்கள் அரசர்களுடைய அரசியல் விவகாரங்களில் தலையிடுவது நியாயமில்லையென்றும், அவர்கள் ஆத்மீக மத விஷயங்களைக் கவனிக்க வேண்டும் என்றும் அவன் எடுத்துக் காட்டினன். மத குருமாருடைய ஊழல்களையும் அவன் விவரித்தான். அவனுடைய கடிதங்கள் தர்க்க ரீதியில் அமைந்து படிப்பதற்கு மிகவும் சுவையுள்ளனவாய் இருக்கின்றன. போப்பாண்டவருக்கும்

சக்கரவர்த்திக்கும் நடைபெற்ற பழைய போராட்டத்தில் தற்கால மனப்பான்மையையும் உத்வேகத்தையும் நாம் முதன்முதலாகக் காண்கிறோம்.

இரண்டாவது பிரடெரிக் பிறமதத் துவேஷம் அற்றவனாக இருந்தான். அவனுடைய சபையில் அரேபிய, யூத தத்துவ சாஸ்திரிகள் இருந்தார்கள். அவர்கள் மூலமாகத்தான் அரேபிய எண்களும், பீஜ கணிதமும் ஐரோப்பாவுக்கு வந்தன என்று சொல்லப்படுகிறது. (ஆதியில் பீஜ கணிதம் இந்தியாவிலிருந்து ஐரோப்பாவுக்குச் சென்றது உனக்கு நினைவிருக்கும்.) நேபிள்ஸ் சர்வ கலாசாலையையும் அவன் ஸ்தாபித்தான். சாலர்னோவிலுள்ள பழைய சர்வகலாசாலையில் வைத்திய சாஸ்திரப் பிரிவையும் ஏற்படுத்தினான்.

இரண்டாவது பிரடெரிக்கின் ஆட்சிக் காலம் 1212-லிருந்து 1250 வரையில். அவனுடைய மரணத்துக்குப்பின் ஹோஹென் ஸ்டாபென் வமிசத்தின் சாம்ராஜ்யாதிக்கம் முடிவுற்றது. சாம்ராஜ்யமே முடிவுற்றதென்று சொல்ல வேண்டும். இதாலி பிரிந்துவிட்டது. ஜெர்மனி சிதறுண்டு போயிற்று. பல வருஷங்கள் வரையில் அங்கே பயங்கரமான குழப்பம் நிலவியது. கொள்ளையடிக்கும் 'நைட்டு'களும் பிறரும் கண்டதையெல்லாம் சூறையாடினார்கள். அவர்களைத் தட்டிக் கேட்க ஆளில்லை. பரிசுத்த ரோம சாம்ராஜ்யத்தின் பளுவைத் தாங்க ஜெர்மனியால் முடியவில்லை. பிரான்சிலும் இங்கிலாந்திலும் அரசர்கள், நிலமானியப் பிரபுக்களின் கொட்டத்தை அடக்கித் தங்கள் நிலைமையைப் பலப்படுத்தி வந்தார்கள். ஜெர்மனியின் அரசன் சக்கரவர்த்தியாகவும் இருந்தபடியால் அவனுக்குப் போப்பாண்டவர் முதலானவர்களோடு போரிடுவதற்கே பொழுது சரியாயிருந்தது. தன் அரசன் சக்கரவர்த்தி

பீடத்தில் அமர்ந்திருக்கிறுன் என்னும் ஒரு பெருமை ஜெர்மனிக்கு இருந்தது. அதற்குப் பிரதியாக உள் நாட்டில் ஒற்றுமையின்மையும் பலவீனமும் மிகுந்து வந்தன. ஜெர்மனி ஒற்றுமை அடையுமுன்பே பிரான்சும் இங்கிலாந்தும் பலம்பொருந்திய தேசங்களாக விளங்கின. நூற்றுக்கணக்கான ஆண்டுகளாக ஜெர்மனி பல சிற்றரசர்களின்கீழ் இருந்து வந்தது. அறுபது ஆண்டு களுக்கு முன்புதான் ஜெர்மனி ஒற்றுமைப்பட்டது. அப்பொழுதும் சிற்றரசர்கள் ஒழியவில்லை. 1914—18-இல் நடந்த மகா யுத்தம் இந்தக் கும்பலைத் தொலைத்துத் தலை முழுகியது.

இரண்டாவது பிரடெரிக்கின் மரணத்துக்குப்பின் ஜெர்மனியில் குழப்பம் அதிகமாயிருந்தபடியால் 23 வருஷங்கள் வரையில் சக்கரவர்த்தி தேர்ந்தெடுக்கப் படவே இல்லை. 1273-இல் ஹாப்ஸ்பர்க் பிரபுவாகிய ருடால்ப் என்பவன் சக்கரவர்த்தியாகத் தேர்ந்தெடுக்கப் பட்டான். இப்போது ஒரு புதிய குடும்பம்—ஹாப்ஸ்பர்க் குடும்பம்—சரித்திர மேடையில் தோன்றுவதைப் பார்க் கிறேம். இது சாம்ராஜ்ய முடிவு வரையில் ஒட்டிக் கொண்டிருக்கிறது. மகா யுத்தத்தின்போது இக்குடும்ப மும்—அரச குடும்பம் என்கிற முறையில்—முடிவடைந்து விட்டது. அப்போது ஹாப்ஸ்பர்க் குடும்பத்தைச் சேர்ந்த பிரான்சிஸ் ஜோசப் என்பவர் ஆஸ்திரியா–ஹங்கேரியின் சக்கரவர்த்தியாக இருந்தார். அவர் மிகவும் வயதானவர். அறுபது ஆண்டுகளுக்கு மேலாகச் சிம்மாசனத்தில் வீற்றிருந்தார். அவருடைய சகோதரன் மகனும் சிம்மா சனத்துக்கு வாரிசுதாரருமாகிய பிரான்ஸ் பர்டினண்ட் என்பவர் தம் மனைவியுடன் பாஸ்னியாவில் சிராஜ்வோ என்னுமிடத்தில்(பால்கன் பிரதேசம்) 1914-இல் கொல்லப் பட்டார். இந்தக் கொலைதான் சென்ற மகாயுத்தத்துக்குக்

காரணமாயிருந்தது. மகா யுத்தத்தில் அழிந்தொழிந்தவை பல. அவற்றில் ஹாப்ஸ்பர்க் வமிசமும் ஒன்று.

பரிசுத்த ரோம சாம்ராஜ்யத்தைப்பற்றி இவ்வளவு சொன்னது போதும். அதற்கு மேற்கே பிரான்சும் இங்கிலாந்தும் அடிக்கடி போரிட்டுவந்தன. அதைவிட அதிகமாக அந்நாடுகளின் அரசர்கள் தங்களுடைய நிலமானியப் பிரபுக்களோடு போரிட்டுவந்தனர். இதில் அவ்வரசர்கள் ஜெர்மானியச் சக்கரவர்த்தியைவிட அதிக வெற்றி பெற்றார்கள். அதனால், பிரான்சும், இங்கிலாந்தும் அதிகமாக ஒற்றுமை அடைந்தன. அந்த ஒற்றுமை அவைகளுக்குப் பலத்தை அளித்தது.

ஏறக்குறைய இக்காலத்தில் இங்கிலாந்தில் ஒரு முக்கிய சம்பவம் நிகழ்ந்தது. அதைப்பற்றி நீ படித்திருக்கலாம். கி. பி. 1215-இல் ஜான் என்னும் அரசன் 'மாக்னா கார்ட்டா' என்னும் பேருரிமைப் பத்திரத்தில் கையெழுத்திட்டதையே நான் குறிப்பிடுகிறேன். சிங்க நெஞ்சன் ரிச்சர்டுக்குப் பிறகு பட்டத்துக்குவந்த அவன் தம்பியே ஜான் என்பவன். அவன் பேராசை உடையவன்; ஆனால், பலவீனமும் உடையவன். அவன் எல்லோருடைய வயிற்றெரிச்சலையும் கொட்டிக்கொண்டான். ஆகவே, அதிருப்திகொண்ட பிரபுக்கள் தேம்ஸ் நதியிலுள்ள நன்னிமீட் என்னும் தீவில் அவனை வளைத்துக்கொண்டு, ஈட்டிமுனையில், அவ்வுரிமைப் பத்திரத்தில் கையெழுத்திடுமாறு செய்தனர். பிரபுக்கள், பிரஜைகள் ஆகியோரின் சில உரிமைகளை அரசன் மதித்து நடப்பதாக அதில் உறுதி கூறப்பட்டிருந்தது. இங்கிலாந்தில் அரசியல் சுதந்தரத்திற்காக நிகழ்ந்த நீண்ட போராட்டத்தில் இதுதான் முதலாவது வெற்றியாகும். அப்பத்திரத்தின்படி அரசன் எப் பிரஜையின் சொத்திலும் சுதந்தரத்திலும் அவனை ஒத்தவர்களின் சம்மதமின்றித்

தலையிடுவது கூடாது. இதிலிருந்து ‘ஜூரிகள்’ விசாரணை முறை ஏற்பட்டது. இதன்படி குற்றம் சாட்டப்பட்டவனுக்குச் சமமான நிலையில் இருப்பவர்கள் தீர்ப்புக் கூறுவதாகக் கருதப்பட்டது. ஆகவே, இங்கிலாந்தில் ஆதியிலேயே அரசனுடைய அதிகாரம் கட்டுப்படுத்தப் பட்டது என்று அறிகிறோம். பரிசுத்த ரோம சாம்ராஜ்யத்தில் வழங்கிய ‘அரசனே யாரினும் மேலானவன்’ என்னும் கொள்கை அப்போதே இங்கிலாந்தில் ஒப்புக் கொள்ளப்படவில்லை.

இங்கிலாந்தில் 700 ஆண்டுகளுக்குமுன்பே வற்புறுத்தப்பட்டு ஒப்புக்கொள்ளப்பட்ட இந்த விதியானது, பிரிட்டிஷ் ஆட்சியில் இந்தியாவில் 1932-ஆம் ஆண்டில் கூட அமுல் நடத்தப்படவில்லை என்பதைக் காண நாம் ஆச்சரியப்படுகிறோம். இன்று, ஒரு தனிநபர் அதாவது வைசிராய், எண்ணற்ற அவசரச் சட்டங்களை இயற்றும் அதிகாரம் படைத்திருக்கிறார். இச்சட்டங்களால் மக்களின் சொத்துச் சுதந்தரங்கள் கேள்வி முறையின்றிப் பறிக்கப்படுகின்றன.

மாக்னகார்ட்டாவுக்குப் பிறகு இங்கிலாந்தில் இன்னொரு முக்கிய சம்பவம் நிகழ்ந்தது. தேசீயசபை என ஒன்று சிறிதுசிறிதாக வளர்ச்சியுறத் தலைப்பட்டது. இதில் நாட்டின் பல தொகுதிகளிலிருந்தும் நகரங்களிலிருந்தும் அனுப்பப்பட்ட ‘நைட்’டுகளும் குடிமக்களும் வீற்றிருந்தார்கள். இதுதான் இங்கிலீஷ் பார்லிமெண்டின் ஆரம்பம். நைட்டுகளையும் குடிமக்களையும் கொண்டது காமன்ஸ் (சாமானியர்) சபை; பிரபுக்களையும் மத குருமார்களையும் கொண்டது பிரபுக்கள் சபை. ஆரம்பத்தில் இந்தப் பார்லிமெண்டுக்கு அதிக அதிகாரம் இல்லை. ஆனால், சிறிது சிறிதாக அதன் அதிகாரம் அதிகரித்து வந்தது. கடைசியில் ராஜா பெரியவனா, பார்லிமெண்டு

பெரிதா என்கிற பிரச்சினையும் போட்டியும் இவ்விரு திறத்தாருக்குள்ளே ஏற்பட்டன. அதன் முடிவு ராஜாவுக்குத் தலைபோயிற்று; பார்லிமெண்டு தடையற்ற தலைமைபூண்டது. ஆனால், இந்நிகழ்ச்சி, நாம் பேசும் இக்காலத்துக்கு 400 ஆண்டுகளுக்குப்பின் பதினேழாவது நூற்றாண்டில் நிகழ்ந்ததாகும்.

பிரான்சிலும் 'முப்பேராயம்' என ஒன்று இருந்தது. பிரபுக்கள், மதஸ்தாபனத்தார், சாமானியர் ஆகிய மூன்று திறத்தாரும் இதில் வீற்றிருந்தார்கள். அரசன் இஷ்டப்பட்டபோது இச்சபை சிலசமயங்களில் கூடும். ஆனால் அதன் கூட்டங்கள் அடிக்கடி நிகழ்வதில்லை. இங்கிலீஷ் பார்லிமெண்டு பெற்ற அதிகாரத்தையும் இது பெறவில்லை. பிரான்சிலும், அரசர்களின் அதிகாரம் ஒழிக்கப்படுமுன் ஓர் அரசன் தன் தலையை இழக்கவேண்டியதாயிற்று.

கிழக்கே, கிரேக்கர்களின் கிழக்கு ரோம சாம்ராஜ்யம் இன்னும் நடைபெற்று வந்தது. அதன் ஆரம்ப காலத்திலிருந்தே அது யாராவது ஒருவரோடு சதா போரிடவேண்டியிருந்தது. பலமுறை அது அழிந்து விடுவது போலவும் தோன்றியது. ஆயினும் முதலில் வடக்கத்திய காட்டுமிராண்டிகளின் தாக்குதலையும், இரண்டாவதாக முஸ்லீம்களின் தாக்குதலையும் அது சமாளித்துக்கொண்டு எழுந்து நின்றது. அதை ருஷியர், பல்கேரியர், அரேபியர், செல்ஜக் துருக்கியர் யாவரும் தாக்கினார்கள். ஆனால், இவை எல்லாவற்றையும்விட சிலுவைப் படைகளின் தாக்குதலே அதற்கு அதிக அபாயத்தை விளைவித்தது. கிறிஸ்தவ வீரர்கள் கிறிஸ்தவ கான்ஸ்டாண்டிநோபிளுக்கு இழைத்த தீங்கைப்போல் வேறு எந்தப் பிற மதத்தினனும், அவிசுவாசியும் அதற்கு இழைக்கவில்லை. இந்தப் பேராபத்தினின்று கான்ஸ்

டாண்டிநோபிள் சாம்ராஜ்யமும் நகரமும் பிழைத்து எழுந்திருக்கவே இல்லை.

மேற்கு ஐரோப்பிய உலகத்துக்குக் கிழக்கு சாம்ராஜ்யத்தைப்பற்றி யாதொன்றும் தெரியாது. அவர்கள் அதை லட்சியம் செய்யவும் இல்லை; கிறிஸ்தவ உலகத்தின் ஒரு பகுதி என்று மதிக்கவுமில்லை. அங்கு வழங்கிய மொழி கிரேக்கு. மேற்கு ஐரோப்பாவின் உயர்மொழியோ லத்தீன். ஆனால், உண்மையைக் கூறுமிடத்து, கான்ஸ்டாண்டிநோபிள் தாழ்வுற்ற காலத்தும் அங்குக் காணப்பட்ட கல்வியும், இலக்கிய மேன்மையும் மேற்கே இல்லை. ஆனால், அது கிழக்கல்வி. அதில் ஊற்றமோ வீரியமோ இல்லை. மேற்கே கல்வி குறைவாயிருந்தது. ஆனால், அதில் இளம்பருவத்துக்குரிய சிருஷ்டிவேகம் ததும்பிக் கொண்டிருந்தது. அது பொங்கிப் பெருகி அழகுள்ள பலவற்றைச் சிருஷ்டிக்கப்போவதை நாம் சீக்கிரத்தில் காண்போம்.

கீழை சாம்ராஜ்யத்தில் ரோமாபுரியில் நடந்ததைப் போல் சக்கரவர்த்திக்கும் மதஸ்தாபனத்துக்கும் போராட்டம் கிடையாது. அங்கே சக்கரவர்த்திதான் உயர்ந்தவன். அவன் யதேச்சாதிகார ஆட்சி செலுத்திவந்தான். சுதந்தரம் என்கிற பேச்சுக்கே அங்கு இடமில்லை. வல்லான் வகுத்ததே வாய்க்கால். ஒன்று அதிக மிருகபலம் படைத்தவர்கள் சிம்மாசனத்தை அடைவார்கள்; அல்லது, அதிக மிருககுணம் படைத்தவர்கள் அதை அடைவார்கள். கொலையும் வஞ்சனையும், பழியும் பாவமும், அதருமமும் அக்கிரமமுமே அரசை அடைவதற்கான வழிகள். இவ்வழிகளில் ஒருவன் அரசைக் கைப்பற்றிய பிறகு மக்கள் நாய்கள்போல் அவனுக்கு அடங்கி வாழ்ந்துவந்தனர். யார் ஆண்டாலும் அவர்களுக்குக் கவலை இல்லை.

கீழை சாம்ராஜ்யம் ஐரோப்பாவின் துவாரபாலக ரைப்போல் விளங்கியது. ஆசியாவின் படையெடுப்பி னின்று அது ஐரோப்பாவைப் பல நூற்றாண்டுகள் பாது காத்து வந்தது. அரேபியரால் கான்ஸ்டாண்டிநோபிளைக் கைப்பற்ற முடியவில்லை; செல்ஜக் துருக்கியர் அதன் அருகில் வந்தார்கள். ஆனால், அவர்களாலும் அதை ஜெயிக்க முடியவில்லை; மங்கோலியர் அதைக் கடந்து வடக்கே ருஷியாவுக்குள் சென்றுவிட்டார்கள். இறுதி யாக வந்தவர்கள் உதுமானியத் துருக்கியர். அவர்களுக்கு அடித்தது யோகம். கி. பி. 1453-இல் சாம்ராஜ்யத் தலைநக ரான கான்ஸ்டாண்டிநோபிள் அவர்கள் வசமாயிற்று. தலைநகரம் விழுந்ததும் கூடவே சாம்ராஜ்யமும் வீழ்ச்சி யுற்றது.

# 64

## ஐரோப்பிய நகரங்களின் உதயம்

ஜூன் 21, 1932.

சிலுவைப்போர்கள் காலத்தில் ஐரோப்பாவில் எல்லாருள்ளத்திலும் நம்பிக்கை நிறைந்திருந்தது. அவர்கள் நாள்தோறும் பலவிதத் துன்பங்கள் அனுபவித்துக்கொண்டிருந்தார்கள். அவர்களுக்கு இந்நம்பிக்கையும் ஆசையும் பெரிய ஆறுதலளித்தன. அக்காலத்தில் கல்வியறிவு சொற்பம்; விஞ்ஞான அறிவு இல்லவே இல்லை. ஏனெனில் நம்பிக்கையும் விஞ்ஞானக் கல்வியும் ஒன்றுக்கொன்று முரணானவை. கல்வியறிவு மனிதர்களின் சிந்தனா சக்தியைத் தூண்டுகிறது. சந்தேகப்பட்டுக் கேள்விகேட்கும் குணத்துக்கும் கண்ணை மூடிக்கொண்டு நம்பும் குணத்துக்கும் கொஞ்சமும் கட்டிவராது. விஞ்ஞானம் எதையும் குத்திக் கிளறிச் சோதித்துப் பார்த்துத் தீரவிசாரிக்கும் இயல்புடையது. நம்பிக்கையோ இதற்கு நேர்மாறான இயல்புடையது. ஐரோப்பாவில், இந்த நம்பிக்கை குறைந்து, ஐயம் எவ்வாறு தலையெடுத்த தென்பதைப் பின்பு காண்போம்.

ஆனால், தற்போது, நம்பிக்கை செழித்தோங்குவதையும், ரோமானிய மதஸ்தாபனம் "விசுவாசி"களுக்குத் தலைமைவகித்து அவர்களைச் சுரண்டுவதையும் காண்கிறோம். பல்லாயிரக்கணக்கான "விசுவாசி"கள் சிலுவைப்படையில் சேர்ந்து பாலஸ்தீனம் சென்றார்கள். ஆனால், அவர்கள் திரும்பி வரவே இல்லை. ஐரோப்பாவில், தமக்கு அடங்காத கிறிஸ்தவ மக்களுக்கு விரோத

மாகவும் போப்பாண்டவர் 'தரும யுத்தம்' தொடுக்க ஆரம்பித்தார். மக்களின் குருட்டு நம்பிக்கையைப் பயன் படுத்திக்கொண்டு போப்பாண்டவரும், மதஸ்தாபனத் தாரும் 'விலக்குச் சீட்டு'களையும் 'கழுவாய்ச் சீட்டு'களை யும் பணத்துக்கு விற்க ஆரம்பித்தார்கள். 'விலக்குச் சீட்டு' என்பது மதஸ்தாபனத்தின் ஏதாவதொரு சட்டம் அல்லது சம்பிரதாயத்தை மீறுவதற்கு அளிக்கப்படும் அனுமதி யாகும். இவ்வாறு, மதஸ்தாபனம் தான் இயற்றிய சட்டங்களைச் சில விசேஷ சந்தர்ப்பங்களில் மீறு வதற்குத் தானே அனுமதி அளித்து வந்தது. ஆகவே, அத்தகைய சட்டங்களை நெடுங்காலம் மதித்து நடப்பது என்பது முடியாத காரியம்தானே! 'கழுவாய்ச்சீட்டு' என்பது இதைவிட மோசம். ரோமானிய மதக் கோட் பாட்டின்படி, மரணத்துக்குப்பின் ஆத்மாவானது சுவர்க் கத்துக்கும் நரகத்துக்கும் இடைப்பட்ட ஓர் இடத்துக்குச் செல்கிறது (இதைப் பாப விமோசன ஸ்தானம் என்று சொல்லுகிறார்கள்.); அங்கே, இம்மண்ணுலகில் தான் செய்த பாவங்களுக்காகத் துன்பம் அனுபவிக்கிறது. இதற்குப்பின், அந்த ஆத்மா சுவர்க்கத்துக்குச் செல்வ தாகக் கருதப்படுகிறது. இந்த இடைத் துன்பத்தை அனுபவிக்காமல் நேரே சுவர்க்கம் செல்வதற்குப் போப் பாண்டவர் ஜனங்களுக்கு உத்தரவாதம் செய்துகொடுத் தார்! ஆனால், உத்தரவாதத்தைப் பெறுவதற்கு தக்ஷிணை செலுத்தவேண்டும்! இவ்வாறு, மதஸ்தாபனம் தன்னை நம்பியவர்களை ஏமாற்றிப் பிழைத்துவந்தது. தானே குற்றங்கள், பாவங்கள் என்று விதித்திருப்பனவற்றைக் கொண்டே பணம் சம்பாதிக்க ஆரம்பித்தது. சிலுவைப் போர்களுக்குப்பின் இச் 'சீட்டு'கள் விற்கும் பழக்கம் அதிகரித்தது. இவ்வழக்கம் எவ்வளவு கீழ்நிலைக்குப் போகமுடியுமோ அவ்வளவுக்கும் சென்றது. பலர்

ரோமாபுரி மதஸ்தாபனத்துக்கு விரோதமாகக் கிளம்பிய தற்கு இது ஒரு முக்கிய காரணம்.

குருட்டு நம்பிக்கையும் வெள்ளையுள்ளமும் படைத்த ஜனங்கள் எவ்வளவு தூரம் அக்கிரமத்தைப் பொறுத்துக் கொள்ளுகிறார்கள் என்பதை நினைக்கும்போது நமக்கு ஆச்சரியம் உண்டாகிறது. இந்தக் காரணத்தால்தான் மதம் என்பது பல நாடுகளில் மிகுந்த பண வருவாயுடைய பெரிய வியாபாரமாக ஆகிவிட்டது. கோயில்களிலுள்ள குருக்கள்மாரைப் பார். கோயிலுக்குப் போவோரிடம் அவர்கள் எவ்வாறு பணம் பறிக்கிறார்கள்! கங்கைக் கரைக்குச் சென்றால், ஏழைக் கிராமவாசிகள் தக்ஷிணை கொடுத்தாலொழிய ஒருவிதக் கிரியையும் செய்யமுடியாது என்று பிடிவாதம் செய்யும் பண்டாக்களைக் காணலாம். குடும்பத்தில் பிரசவமோ, கலியாணமோ, சாவோ எது நேர்ந்தாலும் புரோகிதன் வந்துவிடுகிறான். உடனே அவனுக்குத் தக்ஷிணை கொடுத்துத்தான் ஆகவேண்டும்.

ஒவ்வொரு மதத்திலும் இப்படியேதான். ஹிந்து, கிறிஸ்தவம், இஸ்லாம், ஜாரதுஷ்டிரம் எதுவாயினும் சரி, இதற்கு விலக்கு இல்லை. தன்னிடத்தில் நம்பிக்கை கொண்டோரிடமிருந்து பணம் பறிப்பதற்கு ஒவ்வொன்றும் தனி முறைகளைக் கையாளுகிறது. ஹிந்து மதத்தின் முறைகள் நமக்குத் தெரிந்தே இருக்கின்றன. இஸ்லாம் மதத்தில் புரோகிதர்கள் இல்லை என்று கருதப்படுகிறது. முற்காலத்தில் இது அம்மதத்தினரை மதச் சுரண்டலிலிருந்து ஓரளவு காப்பாற்றி வந்தது. ஆனால், மத விஷயங்களில் தேர்ச்சிபெற்றவர்கள் என்று தம்மைக் கூறிக்கொள்ளும் மனிதர்களும் வகுப்புக்களும் தோன்றலானார்கள். அம்மத சாஸ்திர பண்டிதர்கள் மௌல்விகள் என்றும் முல்லாக்கள் என்றும் அழைக்கப்படுகிறார்கள். அவர்கள் நம்பிக்கைகொண்ட முஸ்லீம்களை ஏமாற்றிப்

பிழைக்க ஆரம்பித்தார்கள். நீண்ட தாடியோ அல்லது சடையோ, நெற்றியில் பட்டை நாமமோ அல்லது விபூதியோ, பக்கிரியின் உடையோ அல்லது சந்நியாசியின் காவி உடையோ சாதுக்களின் சின்னமாகக் கருதப்படுகிற பொழுது ஜனங்களை ஏமாற்றுவதில் என்ன கஷ்டம் இருக்கிறது ?

மிகவும் முற்போக்கு வாய்ந்ததென்று கருதப்படும் அமெரிக்காவுக்கு நீ சென்றால், அங்கும் மதம் மக்களை ஏமாற்றிப் பிழைக்கும் பெரிய தொழிலாக விளங்குவதைக் காண்பாய்.

இடைக்காலத்தையும் கண்மூடித்தனமான நம்பிக்கை சகாப்தத்தையும் தாண்டி நான் நெடுந்தூரம் போய் விட்டேன். மீண்டும் நாம் விட்டு வந்த இடத்துக்குச் திரும்பிச் செல்லவேண்டும். விரைவிலேயே, இந்த நம்பிக்கை கண்ணுக்கு புலனாகும் அழகிய வடிவங் கொள்வதைக் காண்கிறோம். 11, 12-ஆவது நூற்றாண்டுகளில் கட்டிடக்கலை சிறப்பெய்துகிறது. மேற்கு ஐரோப்பா முழுவதும் தேவாலயங்கள் தோன்றுகின்றன. இதற்கு முன் ஐரோப்பாவில் காணாத புதிய கட்டிட முறை தோன்றுகிறது. இதன்படி முக்கிய கட்டிடத்தை ஒட்டி, உதைமானம் அல்லது சார்புச் சுவர்கள் கட்டப்படுகின்றன. மேலுள்ள கூரையின் கனமும் அமுக்கமும் இச்சார்புச் சுவர்கள் மீது வந்து தாங்குமாறு செய்யப்படுகிறது. கட்டிடத்தின் உட்புறம் பார்க்கும்போது மேலுள்ள பெரிய பாரத்தை மெல்லிய தூண்கள் தாங்கி நிற்பதுபோல் காணப்படுகிறது. அரேபிய முறையிலிருந்து வளைவு எடுத்துக்கொள்ளப் படுகிறது. ஆனால், அது வட்ட வடிவத்தை இழந்து கூர்முனைகொள்ளும்படி செய்யப்படுகிறது. அதாவது முக்கோண வடிவுள்ள வளைவு தோன்றுகிறது. கட்டிடத்துக்கு

மேலே கூர்முனைக் கோபுரம் ஒன்று வானை அளாவி எழுகிறது. இதற்குக் காதிக் அல்லது காதியக் கட்டிட முறை என்று பெயர். இது ஐரோப்பாவில் பரிணமித்த தாகும். இது மிகுந்த அழகும் ஆச்சரியமும் வாய்ந்தது. மக்களிடையே ஓங்கி, உயர்ந்த நம்பிக்கைக்கும் அபிலாஷைக்கும் அடையாளமாக இது விளங்கியது. இதுவே நம்பிக்கை சகாப்தத்தின் உண்மையான பிரதிநிதியாகும். கலையிலும் தொழிலிலும் காதலுற்ற சிற்பிகளும் தொழிலாளிகளும் ஒரு பெருமுயற்சியில் மனமுவந்து ஒத்துழைத்தாலொழிய இத்தகைய கட்டிடங்கள் தோன்றுவது சாத்தியமில்லை.

மேற்கு ஐரோப்பாவில் இந்தக் காதிக் முறை தோன்றியது வியப்பிற்குரிய விஷயம். எங்கும் அராஜகமும், அஞ்ஞானமும், துவேஷமும் தாறுமாருகப் பின்னிக்கொண்டு கிடந்த ஒரு குழப்பத்திலிருந்து இத்தகைய அழகு தோன்றுவதாயின் அது பெரிய வியப் பல்லவா? மக்கள் கடவுளை நோக்கிச் செய்யும் இதய பூர்வமான பிரார்த்தனையைப்போல் அது வானுற ஓங்கி வளமுற நிமிர்ந்தது. பிரான்ஸ், வட இதாலி, ஜெர்மனி, இங்கிலாந்து ஆகிய எல்லா இடங்களிலும் ஏககாலத்தில் காதிக் தேவாலயங்கள் தோன்றின. அவை எவ்வாறு ஆரம்பிக்கப்பட்டன என்று யாருக்கும் திட்டமாகத் தெரியாது. அவைகளைக் கட்டிய சிற்பிகள் யார் என்பதும் தெரியவில்லை. அவைகளை ஒரு சிற்பியின் நிர்மாணம் என்று கூறுவதைவிட முழு ஜன சமுதாயத்தினுடைய பொதுவான மனோபீஷ்டம், உழைப்பு இவற்றின் அறிகுறிகள் என்று கூறுவது அதிகப் பொருத்தமுடையதாயிருக்கும். இத்தேவாலயங்களின் ஜன்னல்களுக்கு உபயோகப்படுத்தப்பட்ட வண்ணக் கண்ணுடி இன்னெரு புதுமையாகும். ஜன்னல் கண்ணுடிகள் மீது அழகிய

வண்ணக் கலவைகளைக் கொண்டு சிறந்த சித்திரங்கள் தீட்டப்பட்டன. இவ்வண்ணக் கண்ணாடிகள் மூலம் உள்ளே வரும் வெளிச்சமானது, ஆலயத்துக்குள் புகுந்தவுடன் உண்டாகும் பயபக்தி உணர்ச்சியை இன்னும் அதிகப்படுத்தியது.

சமீபத்தில் எழுதிய கடிதங்களுள் ஒன்றில் நான் ஐரோப்பாவை, ஆசியாவோடு ஒப்பிட்டுச் சில வார்த்தைகள் சொல்லியிருந்தேன். அக்காலத்தில் ஐரோப்பாவைவிட ஆசியா மிகுந்த நாகரிகமும் கலைப்பண்பும் வாய்ந்திருக்கக் கண்டோம். ஆனால், ஆசியாவில் புதிய சிருஷ்டியை நாம் காணவில்லை. இச் சிருஷ்டி சக்தியே உயிரின் அடையாளம் என்று நான் சொன்னேன். அதை இப்போது நாம் நிதர்சனமாகப் பார்க்கிறோம். அரை-நாகரிக ஐரோப்பாவில் முளைத்து வரும் இக்காதிக் கட்டிட முறை அதன் ஜீவத்துடிப்பைக் காட்டுகிறது. நாகரிகக் குறைவினாலும், குழப்பமான நிலைமையினாலும் ஏற்படும் பிரதிகூலங்களையும் எதிர்த்துப் பல வழிகளிலும் ஜீவ சக்தி பொங்கி வழிகிறது. அவைகளில் ஒன்றே காதிக் தேவாலயங்கள். பின்பு, அதுவே, சிற்பத்திலும், சித்திரத்திலும், தீரச் செயலிலும் வெளிப்படுவதைக் காண்போம்.

நீ காதிக் தேவாலயங்களில் சிலவற்றைப் பார்த்திருக்கிறாய். உனக்கு அவை நினைவிருக்கிறதா? ஜெர்மனியில் கொலோனிலுள்ள அழகிய தேவாலயத்தை நீ பார்த்திருக்கிறாய். இதாலியில் மிலானிலும், பிரான்சில் சார்டிரஸ் என்னுமிடத்திலும் இவ்வாறே அழகிய தேவாலயங்கள் உள்ளன. இவ்விடங்கள் எல்லாவற்றின் பேரையும் குறிப்பது கஷ்டம். இத்தேவாலயங்கள் ஜெர்மனி, பிரான்ஸ், வட இதாலி, இங்கிலாந்து ஆகிய நாடுகளில் எங்கும் பரந்திருக்கின்றன. ஆனால், ரோமா

புரியில் முக்கியமான காதிக் கட்டிடம் எதுவும் இல்லாதது ஆச்சரியத்தைத் தருகிறது.

இவ்வாறு கட்டிடக்கலை சிறந்தோங்கிய 11, 12-வது நூற்றாண்டுகளில் காதிக் முறையில்லாத வேறு முறையில் கட்டப்பட்ட தேவாலயங்களும் தோன்றின. உதாரணமாகப் பாரிசிலுள்ள நாட்டர்டாம் தேவாலயத்தையும், வெனிசிலுள்ள செயின்ட்மார்க்கு தேவாலயத்தையும் சொல்லலாம். இவற்றில் பின்னையது பைஜாண்டிய முறையில் கட்டப்பட்டது. அதில் நானு வர்ணமுள்ள கற்களில் இழைத்துள்ள விசித்திர வேலைப்பாடுகளைக் காணலாம்.

நம்பிக்கை சகாப்தம் மறைய ஆரம்பித்ததும் அத்துடன் தேவாலயங்கள் கட்டுவதும் மறைந்தது. மக்களின் கவனம், வியாபாரம் நகர வாழ்க்கை முதலிய பல்வேறு துறைகளில் திரும்பியது. தேவாலயங்களுக்குப் பதிலாக நகர மண்டபங்கள் அல்லது மன்றங்கள் கட்டப்பட்டன. ஆகவே, 15-ஆவது நூற்றாண்டின் ஆரம்பத்திலிருந்து வட மேற்கு ஐரோப்பா எங்கணும் அழகிய காதிக் முறையில் சங்க மன்றங்கள் அல்லது நகர மன்றங்கள் தோன்றுவதைக் காண்கிறோம். லண்டனில் பார்லிமெண்டுக் கட்டிடங்கள் காதிக் முறையில் அமைந்துள்ளன. ஆனால், அவை எப்போது கட்டப்பட்டன என்று எனக்குத் தெரியாது. முதலில் கட்டப்பட்ட காதிக் கட்டிடம் தீக்கிரையானபடியால் மீண்டும் இன்னொன்று காதிக் முறையிலேயே கட்டப்பட்டதென்று எனக்குக் கேள்வி.

11-வது 12-வது நூற்றாண்டுகளில் தோன்றிய பெரிய காதிக் தேவாலயங்கள் பட்டணங்களிலும் நகரங்களிலும் இருந்தன. பழைய நகரங்கள் விழித்தெழுந்தன; புதிய பட்டணங்கள் தோன்றி வளர்ந்தன. ஐரோப்பா முழுதும்

ஒரு மாறுதல் ஏற்படுகிறது. எங்கும் நகரவாழ்க்கை அதிகரிக்கிறது. பழைய ரோம சாம்ராஜ்ய காலத்தில் மத்தியதரைக் கடற்கரை நெடுகிலும் பெரிய நகரங்கள் இருந்தது உண்மையே. ஆனால், அவை ரோமாபுரி, கிரேக்க-ரோம நாகரிகம் இவற்றின் வீழ்ச்சியோடு, குன்றி விட்டன. அரேபிய ஸ்பெயின் நீங்கலாக ஐரோப்பா வெங்கும் கான்ஸ்டாண்டிநோபிளைத் தவிர்த்து வேறு பெரிய நகரம் கிடையாது. இக்காலத்தில் ஆசியாவில், இந்தியா, சீனா, அரேபிய ராஜ்யம் ஆகிய இடங்களில் பெரிய பெரிய நகரங்கள் செழித்தோங்கின. ஆனால், ஐரோப்பாவில் பெரிய நகரங்களே இல்லை. நாகரிகமும் கலைப்பண்பும் நகரங்களைச் சார்ந்தே காணப்படும் போலும். பழைய ரோம சாம்ராஜ்யம் வீழ்ந்தபிறகு நெடுங்காலம் வரையில் ஐரோப்பாவில் இவை காணப் படவில்லை.

ஆனால், இப்போது மீண்டும் நகரவாழ்வு புத்துயிரும் புத்தொளியும் பெறுவதைக் காண்கிறோம். முக்கியமாக, இதாலியில் பல நகரங்கள் வளர்ச்சியுறுகின்றன. பரிசுத்த ரோம சாம்ராஜ்யச் சக்கரவர்த்தியை அவை முன்னைப்போல் உறுத்துகின்றன. ஏனெனில், தங்களுக்குரிய சில உரிமைகள் நசுக்கப்படுவதற்கு அவை இடங்கொடுக்கவில்லை. இதாலியிலும் பிற இடங்களிலும் வளர்ந்த இந்நகரங்கள் வியாபார வகுப்பார் அல்லது மத்திய வகுப்பாரின் வளர்ச்சியைக் குறிக்கின்றன. இவர்கள் 'பூர்ஷுவா' என்னும் பெயரால் வழங்கப் படுகின்றனர்.

அட்ரியாடிக் கடலோரத்தில் கம்பீரமாக வீற்றிருந்த வெனிஸ் ஒரு சுதந்தரக் குடியரசாக ஆய்விட்டது. இன்னும் அது மிக அழகாயிருக்கிறது. கால்வாய்களையே தெருக்களாகவுடைய அந்நகரினூடே கடல் வளைந்து வளைந்து

செல்லும் காட்சி நேத்திரானந்தமா யிருக்கிறது. ஆனல், அந்நகர் கட்டப்படுமுன் அது சதுப்பு நிலமாயிருந்த தென்று தெரிகிறது. ஹூணர் தலைவனை அட்டிலா அக்யுலியாவுக்கு வந்தபோது அங்கிருந்து சிலர் வெனிசின் சதுப்புநிலங்களுக்கு ஓடிவந்து விட்டதாகத் தெரிகிறது. அவர்கள் அங்கு வெனிஸ் நகரைக் கட்டினர்கள். அவர்கள் கிழக்கு, மேற்கு ரோம சாம்ராஜ்யங்களுக்கு நடுவில் இருந்தபடியால் சுதந்தரமாகவே இருந்து வந்தார்கள். இந்தியாவுக்கும் மற்றக் கீழ் நாடுகளுக்கும் வெனிசுக்கும் இடையே வியாபார சம்பந்தம் ஏற்பட்டது. அதனல் வெனிசில் செல்வம் குவிந்தது. அது ஒரு கப்பற்படையைக் கட்டிக்கொண்டு கடல்மீது ஆதிக்கம் செலுத்த ஆரம் பித்தது. அது பணக்காரர்களின் குடியரசு. அதன் தலைவர் டோஜ் என்று அழைக்கப்பட்டார். 1797-இல் நெப்போலியன் வெனிசில் பிரவேசிக்கும் வரை அது நீடித்து வந்தது. அப்போது டோஜ் பதவியில் இருந்தவர் ஒரு கிழவர். நெப்போலியன் வந்துவிட்டான் என்பதைக் கேட்டதும் அவருக்குப் பிராணன் போய் விட்டது. அவர்தான் வெனிஸ் நகரின் கடைசி டோஜ்.

இதாலியின் இன்னெரு புறத்தில் ஜினேவா நகரம் வெனிசுக்குப் போட்டியாக விளங்கியது. அதுவும் வியாபாரத்திலும் கடலோடுவதிலும் சிறந்திருந்தது. இவைகளுக்கிடையே பொலோனு, வைசா, வெரோனு, பிளாரன்ஸ் ஆகிய நகரங்கள் இருந்தன. பொலோனுவில் ஒரு சர்வகலாசாலை இருந்தது. பிளாரென்சில் பல பெரிய கலைஞர்கள் தோன்றப்போகிருர்கள். அது புகழ்பெற்ற மெடிசி குடும்பத்தின் ஆட்சியின் கீழ்ப் பிரகாசிக்கப் போகிறது. வட இதாலியில் மிலான், முக்கிய உற்பத்தி ஸ்தலமாகத் திகழ்ந்தது. தென்பாகத்தில் நேபிள்ஸ் தலை தூக்கிவந்தது. ஹ்யூ காபெட் என்பவன் பாரிசைப் பிரான்

சின் தலைநகராக்கினன். பிரான்சோடு கூடவே பாரிசும் வளர்ந்து வந்தது. பாரிஸ் நகரம் எப்பொழுதுமே பிரான்சின் இருதய கமலமாகத் திகழ்ந்து வந்திருக்கிறது. மற்ற நாடுகளுக்கும் தலைநகர்கள் இருந்து வந்திருக்கின்றன. ஆனால், கடந்த 1000 ஆண்டுகளில் பாரிஸ் நகரம் பிரான்சின்மீது ஆட்சி செலுத்தியதுபோல் வேறு எத்தலைநகரும் தன் நாட்டின்மீது ஆதிக்கம் செலுத்த வில்லை. பிரான்சின் வேறு முக்கிய நகரங்கள் லியான்ஸ், மார்சேல்ஸ் (இது பழைய துறைமுகப் பட்டினம்), ஆர்லீன்ஸ், போர்டோ, பொலோன் ஆகும்.

இதாலியைப் போலவே ஜெர்மனியிலும் 13,14-ஆவது நூற்றாண்டுகளில் சுதந்தர நகரங்கள் அதிகமாகத் தோன்றி வளர்கின்றன. அவைகளின் ஜனத்தொகை அதிகரிக்கிறது. அவைகளுடைய அதிகாரமும் செல்வமும் வளரவளரத் தைரியமும் வளருகிறது. அவைகள் பிரபுக்களோடு மாறுபட்டுப் போரிடுகின்றன. பெரிய பிரபுக்களை அடக்க விரும்பிய காலங்களில் சக்கரவர்த்தி அவைகள் பங்கிலிருந்து தூண்டியும்விட்டார். அந் நகரங்கள் தங்களுடைய உரிமைகளைப் பாதுகாத்துக் கொள்ளப் பெரிய வியாபார சங்கங்கள் அமைத்துக் கொண்டன. இச் சங்கங்கள், சில சமயம் இவைகளுக்கு நேர் எதிரான பிரபுக்கள் சங்கங்களோடு போரும் தொடுத்தன. ஹாம்பர்க், பிரெமென், கொலோன், பிராங்பர்ட், மூனிச், டான்சிக், நூரெம்பர்க், பிரெஸ்லா முதலியவை ஜெர்மனியின் முக்கிய நகரங்களாகும்.

தாழ்நாடுகளில் அதாவது ஹாலந்து, பெல்ஜியம் என்று இப்போது அழைக்கப்படும் பிரதேசத்தில் ஆண்ட்வர்ப், புரூஜஸ், கென்ட் முதலிய நகரங்கள் வியாபாரத்தில் செழித்தோங்கின. இங்கிலாந்தில் லண் டன் நகரம் இருந்தது வாஸ்தவமே. ஆனால், அக்காலத்தில்

அது ஐரோப்பாக் கண்டத்திலுள்ள முக்கிய நகரங்களோடு அளவிலோ, செல்வத்திலோ, வியாபாரத்திலோ ஒப்பிடக்கூடியதாக இல்லை. ஆக்ஸ்போர்டு, கேம்பிரிட்ஜ் சர்வ கலாசாலைகள் மட்டும் கல்விச் சிறப்பில் மிகுந்து வந்தன. கீழை ஐரோப்பாவில் மிகவும் பழைய நகரமாகிய வியன்னு இருந்தது; ருஷியாவில் மாஸ்கோ, கீவ், நோவகிராட் ஆகிய நகரங்கள் இருந்தன.

இந்தப் புதிய நகரங்களின் தன்மை வேறு; பழைய சாம்ராஜ்ய நகரங்களின் தன்மை வேறு. இப்புதிய நகரங்களின் முக்கியத்துவம், எந்த அரசனையோ, சக்கரவர்த்தியையோ பொறுத்ததாக இல்லை; அவைகளின் வியாபாரத்தையே பொறுத்ததாக இருந்தது. அவைகளின் பலம் பிரபுக்களைப் பொறுத்ததாக இல்லை; வியாபார வகுப்பினரையே பொறுத்திருந்தது. அவைகள் வியாபார நகரங்கள். ஆகவே, அவைகளின் வளர்ச்சி 'பூர்ஷுவா'க்களின் வளர்ச்சியையே குறித்தது. இம்மத்திய வகுப்பாரின் சக்தி நாளுக்குநாள் வளர்ந்துவந்தது. கடைசியில் அவர்கள் அரசனையும் பிரபுவையும் எதிர்த்து அவர்களிடமிருந்து அதிகாரத்தைப் பறித்துக் கொண்டார்கள். ஆனால், நாம் பேசும் இக்காலத்துக்கு நெடு நாளைக்குப் பின்பே இது நிகழ்ந்தது.

நகரங்களும் நாகரிகமும் ஒன்றையொன்று பற்றியே செல்கின்றன என்று இப்பொழுதுதான் சொன்னேன். நகரங்களின் வளர்ச்சியோடு கல்வியும், சுதந்தர உணர்ச்சியும் வளருகின்றன. நாட்டுப்புறங்களில் வசிப்பவர்கள் அதிகமாக நெருங்கியிராமல் சிதறி இருக்கிறார்கள். அவர்களிடையே மூடப்பழக்க வழக்கங்கள் அதிகம். அவர்கள் இயற்கை அன்னையின் அருளால் வாழவேண்டியவர்களாக இருக்கிறார்கள். அவர்கள் கஷ்டப்பட்டு உழைக்க வேண்டியவர்களாகவும் அதிக

ஒய்வு அற்றவர்களாகவும் இருக்கிறார்கள். ஆகவே, பிரபுக்களை மீறி நடப்பதென்பது அவர்களால் முடியாத காரியம். நகரங்களிலோ என்றால் பெருந்தொகையினர் நெருக்கமாகக் கூடி வாழ்கின்றனர். அவர்கள் அதிக நாகரிகமும் கல்வியறிவும் வாய்ந்தவர்களாக இருப்பதால், விஷயங்களைத் தெளிவாகச் சிந்தித்து அவற்றின் குண தோஷங்களை ஆராய்வதற்கும், விவாதிப்பதற்கும் அவர்களுக்குச் சந்தர்ப்பம் இருக்கிறது.

ஆகவே, சுதந்தர உணர்ச்சி வளர்கிறது. அரசியல் அதிகாரத்தின் சின்னமான பிரபுக்களையும், ஆத்மீக அதிகாரத்தின் சின்னமான மத ஸ்தாபனத்தையும் அது எதிர்த்து நிற்கிறது. இப்போது, குருட்டு நம்பிக்கை கொண்டிருந்த காலம் மலையேறிவிட்டது. எங்கும், எதிலும் ஐயம் எழுகிறது. போப்பாண்டவரையும், மதஸ்தாபனத்தையும் கண்ணைமூடிக்கொண்டு யாரும் பின்பற்றத் தயாராக இல்லை. சக்கரவர்த்தியாகிய இரண்டாவது பிரடெரிக் போப்பாண்டவரிடம் எவ்வாறு நடந்து கொண்டான் என்று பார்த்தோம். இந்த எதிர்ப்பு உணர்ச்சி வளர்ந்துகொண்டே போகிறது.

12-ஆவது நூற்றாண்டிலிருந்து கல்விப் பெருக்கும் கலைப்பெருக்கும் கரைபுரண்டோடின. ஐரோப்பாவில் கற்றுயர்ந்த பெரியோர்களின் பொதுமொழியாக லத்தீன் விளங்கியது. கல்வியை நாடிப் பலர் ஒரு பல்கலைக் கழகத்திலிருந்து மற்றொரு பல்கலைக் கழகத்துக்குச் செல்லலாயினர். தாந்தே அலகியர் என்னும் இதாலிய மகாகவி 1265-இல் பிறந்தார். இதாலியின் இன்னொரு பெரிய கவிஞராகிய பெட்ரார்க் (Petrarch) 1304-இல் பிறந்தார். இதற்குச் சில காலத்திற்குப் பிறகு ஆங்கில ஆதி கவிஞராகிய சாசர் இங்கிலாந்தில் சிறப்புற்று விளங்கினார்.

இவ்வாறு, கல்வி புத்துயிர்பெற்றுத் திகழ்ந்தது. ஆனால், இதைவிட முக்கியம் வாய்ந்தது, மக்களிடையே விஞ்ஞான ரீதியான ஆராய்ச்சி உணர்வு லேசாகத் தோன்றுவதுதான். இது பிற்கால ஐரோப்பாவில் மகத்தான வளர்ச்சி அடையப்போகிறது. அரேபியரிடம் இவ்வுணர்வு இருந்ததென்றும் அவர்கள் இதன்படி ஓரளவு வேலை செய்து வந்தார்கள் என்றும் நான் கூறியிருப்பது உனக்கு ஞாபகமிருக்கலாம். இடைக்கால ஐரோப்பாவில் எதையும் முன்கூட்டி முடிவு கட்டாத பட்சபாதமற்ற மனத்துடன் சோதித்துப் பார்க்க விரும்பும் விசார உணர்வுக்கு இடமில்லை. மதஸ்தாபனம் அதைப் பொறுக்காது. ஆனால், மதஸ்தாபனத்தையும் மீறி அவ்வுணர்வு தோன்றுகிறது. இக்காலத்தில் ஐரோப்பாவில் முதன்முதலாக இவ்வுணர்வு படைத்தவர்களுள் ரோஜர் பேகன் என்னும் ஆங்கிலேயர் ஒருவர். அவர் 13-ஆவது நூற்றாண்டில் ஆக்ஸ்போர்டில் வாழ்ந்துவந்தார்.

# 65

# இந்தியாமீது ஆப்கானியரின் படையெடுப்பு

ஜூன் 23, 1932.

நேற்று நான் உனக்குக் கடிதம் எழுதிக்கொண்டிருந்தபோது அதற்கு ஒரு தடை ஏற்பட்டது. நான் எழுத உட்கார்ந்தபோது சிறையையும் சிறையில் என்னைச் சுற்றி இருப்பவைகளையும் மறந்து, வாயுவேக மனோவேகமாகக் கடந்துபோன ஐரோப்பிய இடைக்காலங்களுக்குப் பறந்து சென்றேன். ஆனால், அதைவிட அதிக வேகத்துடன் மீண்டும் நிகழ் காலத்துக்குக் கொண்டு வரப்பட்டேன். நான் சிறையில் இருப்பதும் எனக்கு உணர்த்தப்பட்டது. இன்னும் ஒரு மாதம் வரையில் நான் உன் அம்மாவையும் பாட்டியையும் சிறையில் சந்திக்கமுடியாது என்று மேலேயிருந்து உத்தரவு வந்திருப்பதாகச் சொன்னார்கள். ஏன்? காரணத்தை அவர்கள் சொல்லவில்லை. ஒரு கைதிக்குக் காரணம் வேறு சொல்ல வேண்டுமா? உன் அம்மா, பாட்டி இருவரும் என்னைப் பார்ப்பதற்காகப் பத்து நாட்களாக டேராடூனில் காத்துக்கொண்டிருக்கிறார்கள். ஆனால், அவர்கள் என்னைப் பாராமல் திரும்பிச் செல்ல வேண்டியதுதான். இத்தகைய மரியாதை நமக்கு அளிக்கப்படுகிறது. ஆனால், நாம் ஒன்றையும் பொருட்படுத்தக்கூடாது. நாம் இருப்பது சிறை என்பதையும் சிறையில் இவையெல்லாம் தினசரி நிகழ்ச்சிகள் என்பதையும் நாம் மறந்து விடக்கூடாது.

மேற்கூறிய நிகழ்ச்சிக்குப் பிறகு நிகழ் காலத்தை விட்டு இறந்த காலத்துக்குச் செல்ல என்னால் முடிய வில்லை. ஆனால், நேற்றிரவு ஓய்வுக்குப் பிறகு என் மனநிலை சிறிது அமைதி யுற்றிருக்கிறது. ஆகவே, மீண்டும் எழுதத் தொடங்குகிறேன்.

இப்போது நாம் இந்தியாவுக்குத் திரும்பி வருவோம். நாம் நெடுங்காலம் வேறு இடங்களில் இருந்துவிட்டோம். இடைக்கால இருளினின்றும் வெளிவர ஐரோப்பா போராடிக்கொண் டிருந்த பொழுது இங்கு என்ன நிகழ்ந்துகொண் டிருந்தது? ஐரோப்பாவில் நிலமானிய ஏற்பாடும், அராஜகக் குழப்பமும், கொடுங்கோன்மையும் மக்களைப் பெரிதும் நசுக்கிவந்தன; போப்பாண்டவரும் சக்கரவர்த்தியும் தத்தம் செல்வாக்கை நிலை நாட்டு வதற்காக ஒருவரையொருவர் எதிர்த்துப் போராடி வந்தார்கள்; பலநாடுகள் உருவாகிவந்தன; கிறிஸ்தவமும் இஸ்லாமும் தலைமையை நாடிச் சிலுவைப்போர் புரிந்து வந்தன. மேற் கூறியவைகளெல்லாம் ஐரோப்பாவில் நிகழ்ந்துகொண் டிருந்த சமயத்தில் இந்தியாவில் என்ன நிகழ்ந்தது என்று பார்ப்போம்.

இடைக்கால ஆரம்பத்தில் இந்தியா எப்படி இருந்தது என்று ஏற்கெனவே ஒருவாறு பார்த்தோம். கஜினி முகம்மது வளங்கொழிக்கும் வட இந்தியாவுக்கு வந்து அதை அழித்துக் கொள்ளையடித்துச் செல்வதைப் பார்த் தோம். முகம்மதுவின் படையெடுப்புக்கள் மிகவும் கோர மானவையாயினும் அவை இந்தியாவில் பெரிய அல்லது நிலைத்த மாறுதல் எதையும் உண்டுபண்ணவில்லை. அவனால் தேசமே, முக்கியமாக வடநாடு ஆடிப்போயிற்று. பற்பல அருமையான ஞாபகச் சின்னங்களும், கட்டிடங் களும் அவனால் அழிக்கப்பட்டன. ஆனால், சிந்துவும் பஞ்சாபில் ஒரு பகுதியுமே அவனுடைய சாம்ராஜ்யத்தில்

அடங்கியிருந்தன. வட இந்தியாவின் எஞ்சிய பகுதி விரைவிலேயே தன்னைச் சமாளித்துக்கொண்டது. தென் இந்தியாவை அவன் தொடவே இல்லை; வங்காளமும் அப்படியே. முகம்மதுக்குப் பின், 150 ஆண்டுகளுக்கு மேலாகவே, முஸ்லீம்களோ இஸ்லாமோ இந்தியாவில் அதிக முன்னேற்றம் அடையவில்லை.

12-ஆவது நூற்றாண்டின் இறுதியில் (சுமார் கி. பி. 1186) வடமேற்கேயிருந்து மற்றுமொரு படையெடுப்பு நிகழ்ந்தது. ஆப்கானிஸ்தானத்தில் கோரி என்று ஓர் ஊர். அதன் அரசனான ஷஹாபுதீன் கோரி என்பவன் கஜினியைக் கைப்பற்றி அச்சாம்ராஜ்யத்துக்கு முற்றுப்புள்ளி வைத்தான். அவன் லாகூருக்கு வந்து அதைக் கைப்பற்றிக்கொண்டு, டில்லியை நோக்கித் தண்டயாத்திரை கிளம்பினான். அப்போது டில்லியை ஆண்ட பிருதிவிராஜனின் கீழ் பல வட இந்தியச் சிற்றரசர்கள் ஒன்றுபட்டுக் கோரியை எதிர்த்தனர். அவன் அடியோடு முறியடிக்கப்பட்டான். ஆனால், இவ்வெற்றி சில காலமே நிலைத்திருந்தது. அடுத்த வருஷமே ஷஹாபுதீன் பெரும் படையுடன் திரும்பிவந்து பிருதிவி மன்னனைக் கொன்று வெற்றிமாலை சூடினான்.

பிருதிவிராஜன் இன்றும் பலரால் கொண்டாடப் பெறும் ஒரு வீரனாக விளங்குகிறான். அவனைப் பற்றிப் பல கதைகளும் பாட்டுகளும் உண்டு. அவன் கன்னோசி மன்னன் ஜயசந்திரனின் மகளைத் தூக்கிச் சென்ற கதை மிகவும் பிரசித்தி வாய்ந்தது. அதனால் அவனுக்குப் பெருந்தீங்கு விளைந்தது. பல சௌகரியங்களில் சிறந்த தன் துணைவர் பலரை இழந்ததோடு பலமிக்க ஓர் அரசனின் பகைமையையும் அவன் சம்பாதித்துக் கொண்டான். பரஸ்பர மனஸ்தாபங்களுக்கும் பிளவுகளுக்கும் அது

மூலகாரணமா யிருந்தது. அந்நியன் வெற்றியை அது சுலபமாக்கியது.

இவ்வாறு கி. பி. 1192-இல் ஷஹாபுதீன் அடைந்த முதல் பெரிய வெற்றி இந்தியாவில் முஸ்லீம் ஆட்சிக்கு அடி கோலியது. அவர்கள் சிறிது சிறிதாகக் கிழக்கேயும் தெற்கேயும் பரவினார்கள். அடுத்த 150 ஆண்டுகளில் அதாவது கி. பி. 1340-இல் முஸ்லீம் ஆட்சி தென் இந்தியாவின் பெரும் பகுதியில் பரவிவிட்டது. ஆனால், அதற்குப் பிறகு அது குன்றத் தலைப்பட்டது. அங்கே புதிய முஸ்லீம், ஹிந்து ராஜ்யங்கள் தோன்றின. ஹிந்து ராஜ்யங்களில் முக்கியமானவை விஜயநகர சாம்ராஜ்யம். சுமார் 200 ஆண்டுகள் வரையில் இஸ்லாமின் செல்வாக்கு ஓரளவு குறைந்திருந்தது. 16-ஆம் நூற்றாண்டின் இடையில் அக்பர் காலத்தில், ஏறக்குறைய இந்தியா முழுவதும், அது மீண்டும் தலைதூக்கி நின்றது.

முஸ்லீம்களின் வருகையால் இந்தியாவில் பல விளைவுகள் தோன்றின. இவ்வாறு படையெடுத்து வந்த முஸ்லீம்கள் அரேபியரோ, பாரசீகரோ, உயர்ந்த நாகரிகம் படைத்த மேற்கு ஆசிய முஸ்லீம்களோ அல்லவென்பதையும் அவர்கள் ஆப்கானியர் என்பதையும் நீ நினைவில் வைக்கவேண்டும். இந்தியரை நோக்கும்போது, இந்த ஆப்கானியர் நாகரிகத்தில் எவ்வளவோ தாழ்ந்தவர்கள். ஆனால், அவர்கள் இந்தியரைவிட அதிக ஜீவனும், சக்தியும் நிறைந்து விளங்கினார்கள். இந்தியா பழைய சம்பிரதாயக் குட்டையில் விழுந்து, காலத்துக்குத் தகுந்தாற்போல மாறுதலும், முன்னேற்றமும் அடையாமல் இருந்து வந்தது. எல்லாவற்றிலும் பழைய முறைகளையே பற்றிக் கொண்டு, அவைகளை அபிவிருத்தி செய்யவேண்டும் என்பதையே மறந்துவிட்டது. போர் முறைகளிலும் இந்தியா பிற்பட்டு நின்றது. ஆப்கானியர் அதிக ஒற்று

மையும் கட்டுப்பாடும் உடையவர்களாக இருந்தார்கள். ஆகவே, தண்ட யாத்திரையாக வந்த முஸ்லீம்களுக்கு முன்னால் பண்டைய இந்தியா காட்டிய வீரதீரமும், உயிர்த்தியாகமும் பயன்படாதொழிந்தன.

அந்த முஸ்லிம்கள் ஆரம்பத்தில் மிகவும் கொடுமையாகவே நடந்து கொண்டார்கள். அவர்களுடைய ஜன்ம தேசத்தில் மதிப்பு முரட்டுத்தனத்துக்கே யொழிய தயவு தாட்சணியத்துக்கு அல்ல. மேலும், அவர்கள் புதிதாக ஜெயிக்கப்பட்ட நாட்டில், எந்நேரத்திலும் எதிர்த்துக் கலகம் செய்யக்கூடிய எதிரிகளின் நடுவில் இருந்தார்கள். கலக பயம் அவர்களுக்கு எப்பொழுதும் இருந்து வந்தது. பயத்துக்கு ஆட்பட்டவர்கள் பயங்கரமான குரூரச் செயல்களில் இறங்குவது இயற்கையே. ஆகவே, மக்கள் கூட்டம் கூட்டமாகக் கொல்லப்பட்டார்கள். இதை, முஸ்லீம்கள், ஹிந்துக்களை மதம் காரணமாகக் கொன்றார்கள் என்று கொள்வது தவறு; ஜெயித்த அந்நியர்கள் தங்களால் ஜெயிக்கப்பட்டவர்களை அடக்கி ஒடுக்குவதற்காகப் புரிந்த அதிக்கிரமச் செயல் என்று கொள்வதே பொருத்தமாகும். இக்கொடுஞ் செயல்களுக்குச் சமாதானம் கூறும் பொருட்டு மதத்தை இழுத்து விடுவது வழக்கமாயிருந்து வருகிறது. ஆனால், அது சரியல்ல. சில சமயங்களில் மதத்தை ஒரு சாக்காகக் கொண்டு காரியம் செய்வதும் உண்டு. ஆனால், அதன் உண்மைக் காரணங்கள் அரசியல் அல்லது சமுதாய சம்பந்தம் உடையனவாக இருக்கும். இந்தியாவின்மீது படையெடுத்து வந்த மத்திய ஆசிய மக்கள் தங்கள் தாய் நாட்டிலும், ஈவிரக்கமற்ற கொடியவர்களாகவே இருந்து வந்தார்கள். அவர்கள் இஸ்லாமைத் தழுவுவதற்கு நெடுங் காலம் முன்பிருந்தே அவ்வாறு இருந்து வந்தார்கள். ஆகவே, இஸ்லாம் அவர்களுடைய இயற்கையை மாற்ற

வில்லை என்று கூறலாமே ஒழிய அவர்களுடைய இயற்கைக்கே அதுதான் காரணம் என்று கூறமுடியாது. ஒரு புதிய நாட்டை ஜெயித்த அவர்களுக்கு அதை அடக்கித் தங்கள் ஆதிக்கத்தின்கீழ் வைத்துக் கொள்வதற்கு ஒரே ஒரு வழிதான் புலப்பட்டது. அதுதான் பயங்கர அடக்கு முறைக் கொள்கை.

ஆயினும், இந்தியா சிறிது சிறிதாக இப்போர் வீரர்களுடைய மூர்க்கத் தன்மையைக் குறைத்து அவர்களை நாகரிகர்களாக்கி வந்தது. அவர்கள், தாங்கள் வேற்று நாட்டவர்கள் என்பதை மறந்து தங்களை இந்தியர்களாகவே பாவிக்கத் தலைப்படுகிறார்கள். அவர்கள் இந்திய மாதர்களை மணந்து கொள்ளுகிறார்கள். இவ்வாறு, ஆக்கிரமித்தோருக்கும் ஆக்கிரமிக்கப் பட்டோருக்கும் உள்ள வேற்றுமை படிப்படியாகக் குறைகிறது.

வட இந்தியாவைத் துவம்சநாசம் செய்தவர்களுள் முதன்மையானவன் கஜினி முகம்மது. அவன் 'விக்கிரக ஆராதனைக்காரர்'களுக்கு விரோதமாக இஸ்லாமின் கொடியை உயர்த்திப் பிடித்தவன் என்று கூறப்படுகிறான். அப்பேர்ப்பட்டவனின் கீழ் 'திலகன்' என்னும் ஹிந்துவைப் படைத் தலைவனாகக்கொண்ட ஒரு ஹிந்துப்படை இருந்ததென்பதை அறிய நீ ஆச்சரியப்படுவாய். அவன் திலகனையும் அவன் படையையும் கஜினிக்கு அழைத்துச் சென்று, அங்கே தனக்கு விரோதமாகக் கலகம் செய்த முஸ்லீம்களை அவர்களைக்கொண்டு அடக்கினான். ஆகவே, அவனுடைய நோக்கம் இஸ்லாமைப் பரப்புவது அல்ல; பகைவரை வெல்வதும் அவர் நாட்டைக் கவர்வதுமே என்பது நன்கு விளங்குகிறதல்லவா? இந்தியாவில், அவன் தன் முஸ்லீம் படை வீரர்களைக்கொண்டு ஹிந்துக்களைக் கொல்வதற்குச் சித்தமாயிருந்தது போலவே, மத்திய ஆசியாவில் தன் ஹிந்துப் படை வீரர்களைக்

கொண்டு முஸ்லீம்களைக் கொல்வதற்குச் சிறிதும் தயங்க வில்லை.

இஸ்லாம் இந்தியாவை ஒரு குலுக்குக் குலுக்கி எடுத்துவிட்டது. முற்போக்கு என்பது அறவே அற்றுப் போன ஒரு சமுதாயத்தில் அது வீரியத்தையும் உத்வேகத் தையும் புகுத்திற்று. அதன்பயனாக நொந்து நசித்துவந்த ஹிந்துக் கலை வட இந்தியாவில் ஒரு மாறுதல் அடைகிறது. 'சுவை நைந்த பழங்'கலை மாறி அதன் இடத்தில் வீரிய மும் சக்தியும் வாய்ந்த புதுக் கலை தோன்றி வளர்கிறது. இதை இந்து - முஸ்லீம் கலை என்று அழைக்கலாம். பழைய இந்தியக் கலை வல்லாரும் வினை வல்லாரும் முஸ்லீம் களால் கொணரப்பட்ட புதுக்கருத்துக்களால் ஊக்கம் பெறுகிறார்கள். எளிமை வாய்ந்த அவர்களுடைய மதக் கோட்பாடும், வாழ்க்கையைப்பற்றிய மனோபாவமும் அக் காலத்துக் கட்டிடக் கலையில் பிரதிபலித்தன. மீண்டும் கட்டிடக்கலை எளிமையும் மேன்மையும் பெற்றுப் பொலிந்தது.

முஸ்லீம் படையெடுப்பால் முதன் முதலாக விளைந்த பலன், மக்கள் வடக்கேயிருந்து தெற்கு நோக்கிக் கூட்டம் கூட்டமாகக் கிளம்பிச் சென்றதுதான். கஜினி முகம் மதுவின் கொலைகளையும் கொள்ளைகளையும் நேரில் கண்டு அநுபவித்த வட இந்தியா, இஸ்லாம் மார்க்கத்தையே காட்டுமிராண்டித்தனத்தோடும், சர்வ நாசத்தோடும் சேர்த்து எண்ணத் தலைப்பட்டது. ஆகவே, புதிய படை யெடுப்பைத் தடுத்து நிறுத்தமுடியாத காலங்களி லெல்லாம் கற்றோரும், கைவலாரும் கும்பல் கும்பலாகத் தென்னிந்தியாவுக்குச் சென்றார்கள். அங்கே, ஆரியர் கலைப் பண்புக்கு இது பெரிய உத்வேகத்தை அளித்தது.

தென்னிந்தியாவைப்பற்றி ஏற்கெனவே உனக்குக் கொஞ்சம் கூறியிருக்கிறேன். ஆறும் நூற்றாண்டிலிருந்து

200 ஆண்டுகள் வரையில், நடு, மேற்குப் பாகங்களில் சாளுக்கியர் ஆதிக்கம்பெற்று விளங்குகிறார்கள். அப்போது அரசாண்ட இரண்டாவது புலிகேசியை யுவான் சுவாங் சென்று கண்டார். பிறகு ராஷ்டிரகூடர் தோன்றுகிறார்கள். அவர்கள் சாளுக்கியரை வென்று 8-ஆவது நூற்றாண்டிலிருந்து 10-ஆவது நூற்றாண்டின் இறுதி வரையிலும் ஆதிக்கம் செலுத்துகிறார்கள். ராஷ்டிரகூடர்கள் சிந்துவை ஆண்ட அரேபிய மன்னர்களோடு நட்பு பூண்டிருந்தார்கள். பல அரேபிய வியாபாரிகளும், யாத்திரீகர்களும் ராஷ்டிரகூட ராஜ்யத்துக்கு வந்தார்கள். அவர்களில் ஒரு யாத்திரீகன் தான் கண்டதை எழுதிவைத்திருக்கிறான். அவன் அக்காலத்தில் (9-ஆவது நூற்றாண்டு) அரசாண்ட ராஷ்டிரகூட மன்னனை உலகின் நான்கு மகாசக்கரவர்த்திகளுள் ஒருவன் என்று குறிப்பிடுகிறான். மற்ற மூவர் பாக்தாது கலீபா, சீன சக்கரவர்த்தி, ரோமானியச் (கான்ஸ்டாண்டிநோபிள்) சக்கரவர்த்தி என்று அவன் கூறுகிறான். அக்காலத்தில் ஆசியாவில் பிரபலமாக இருந்த அபிப்பிராயத்தைக்காட்டும் முறையில் இவ்வரலாறு நமக்கு மிகவும் பயன்படுகிறது. ஓர் அரேபிய யாத்திரீகன் உச்ச நிலையிலிருந்த பாக்தாது சாம்ராஜ்யத்தோடு ராஷ்டிரகூட சாம்ராஜ்யத்தை ஒப்பிடுவதென்றால் அது மிகவும் உன்னத நிலையில் இருந்திருக்க வேண்டும் என்பதில் ஐயமில்லை.

பத்தாவது நூற்றாண்டில் (கி. பி. 973) ராஷ்டிரகூடர் மீண்டும் சாளுக்கியருக்கு இடம் கொடுக்கிறார்கள். சாளுக்கியர் மீண்டும் இருநூறாண்டு (கி. பி 1190 வரை) ஆதிபத்தியத்தில்இருக்கிறார்கள். இச்சாளுக்கிய மன்னருள் ஒருவனைப்பற்றி ஒரு நீண்ட காவியம் இயற்றப்பட்டிருக்கிறது. அவனை மணந்த கன்னிகை அவனை ஒரு சுயம்வரத்தில் வரித்ததாக அதில் கூறப்பட்டுள்ளது. இவ்வரிய

வழக்கம் இத்துணை நீண்டகாலம் அநுஷ்டானத்தில் இருப்பது ஆச்சரியத்தைத் தருகிறது.

ராஷ்டிரகூட ராஜ்யத்துக்கு இன்னும் தெற்கிலும் கிழக்கிலும் 'வட வேங்கடம் தென் குமரி ஆயிடைத் தமிழ்கூறு நல்லுலகம்' பரந்து கிடந்தது. அங்கே, 3-வது நூற்றுண்டிலிருந்து 9-வது நூற்றுண்டு வரையில், ஏறக் குறைய 600 ஆண்டுகள் பல்லவர்கள் ஆண்டுவந்தார்கள். 6-வது நூற்றுண்டின் இடையிலிருந்து சுமார் 200 ஆண்டு கள் வரையில் பல்லவர்களின் ஆதிபத்தியம் தென்னிந்தியா முழுவதும் பரந்திருந்தது. இப் பல்லவர்கள் மலாயாசியா விலும் கிழக்குத் தீவுகளிலும் குடியேறுவதற்கு மக்களை அனுப்பிவைத்தார்கள் என்பது உனக்கு நினைவிருக்கலாம். பல்லவ சாம்ராஜ்யத்தின் தலைநகராகத் திகழ்ந்தது காஞ்சிமாநகரம். அந்நாளில், 'நகரேஷு காஞ்சி' என்று புலவரால் போற்றப்பெறும் தகைமையதாய்த் திருவினும் அழகினும் மேம்பட்டுப் பொலிந்த அம் மெச்சு புகழ் கச்சியம்பதி இந்நாளிலும் நகரமைப்பில் தலை சிறந்து விளங்குகிறது.

பத்தாவது நூற்றுண்டின் தொடக்கத்தில் பல்லவர் களின் வலி குன்றுகிறது. சோழர்கள் வீறுகொண்டு எழுகிறுர்கள். ராஜராஜனும், ராஜேந்திரனும் கண்ட சோழ சாம்ராஜ்யத்தைப்பற்றி நான் உனக்குச் சிறிது கூறியிருக்கிறேன். கப்பற்படையில் ஒப்பற்று விளங்கிய அவர்கள் இலங்கையையும், பர்மாவையும், வங்காளத் தையும் வெற்றிகொண்டு சிறந்தார்கள். சோழருடைய வெற்றிகளைவிட ஆச்சரியமான விஷயம் அவர்கள் காலத்தில் வழங்கிய தேர்தலை அடிப்படையாகக்கொண்ட பஞ்சாயத்து முறையாகும். இம்முறை கீழேயிருந்து கட்டப்பட்டதாகும். கிராம சபைகள் பல வேலைகளையும் கவனிப்பதற்குப் பல நிர்வாகக் கமிட்டிகளைத் தேர்ந்

தெடுக்கும். ஜில்லா சபைகளும் கிராம சபைகளால் தேர்ந்தெடுக்கப்படும். பல ஜில்லாக்கள் கொண்டது ஒரு மாகாணம்.* என்னுடைய கடிதங்களில் நான் இக் கிராமப் பஞ்சாயத்து முறையைப்பற்றி அடிக்கடி வற்புறுத்திக் கூறிவந்திருக்கிறேன். அதற்குக் காரணம் இப்பஞ்சாயத்து முறை பழைய ஆரிய அரசியலின் அடிப் படையாக இருந்ததேயாகும்.

வட இந்தியா ஆப்கானியப் படையெடுப்புக்கு ஆளாகிய காலையில் தென்னிந்தியா சோழர் குடைநிழலில் தழைத்தோங்கியது. ஆனால், விரைவிலேயே சோழர் தாழத் தலைப்பட்டனர். அதுவரையில் அவர்களுக்கு அடங்கியிருந்த ஒரு நாடு இப்போது தலை தூக்குகிறது. சுதந்தரம் பெற்றவுடன் அதன் வலிமை வளர்கிறது. அதுதான் பாண்டிநாடு. பாண்டிய நாட்டின் தலைநகர் பாடல் சான்ற கூடல் மதுரையாகும். அதன் துறைமுகப் பட்டினம் காயல். புகழ்பெற்ற வெனிஸ் யாத்திரீகரான மார்க்கோபோலோ என்பவர் காயல் பட்டினத்தை இருமுறை (கி. பி. 1288-லும், 1293-லும்) சென்று கண்டார். அவர் அதை 'ஆய்வருஞ் சிறப்பில் காயல் முன்துறை' என்று பாராட்டுகிறார். அரேபியாவிலிருந்தும் சீனாவிலிருந்தும் வந்த கப்பல்கள் நிறைந்திருக்கும் துறை முகத்தை யுடைய அந்நகரில் இடைவிடாத வியாபாரம் நடந்துகொண் டிருந்தது என்று அவர் கூறுகிறார். அவரே சீனாவிலிருந்து இந்தியாவுக்குக் கப்பலில்தான் வந்தார். அவரைப்பற்றி இன்னும் சற்று விரிவாகப் பின்பு சொல்லுகிறேன்.

இந்தியாவின் கீழ்கரையில் 'சிவந்தி வலை போலும்' மெல்லிய மஸ்லின் ஆடை நெய்யப்பட்டு வந்தது என்று

* ஊர், கோட்டம், நாடு, மண்டலம் என்று இவ்வாறாக அக் காலத்தில் தமிழ்நாடு வகுக்கப்பட்டிருந்தது.

மார்கோபோலோ கூறுகிறார். தெலுங்கு நாட்டை நாற்பதாண்டுகள் ஆண்ட ருத்திரமணிதேவி என்னும் மாதரசியை மார்க்கோ மிகவும் புகழ்ந்து பேசுகிறார் தெலுங்குநாடு என்பது சென்னைப் பட்டினத்துக்கு வடக்கேயுள்ள கீழ்கரையைச் சார்ந்த நாடாகும்.

அரேபியாவிலிருந்தும் பாரசீகத்தி லிருந்தும் பல உயர்ந்தஜாதிக் குதிரைகள் கடல் மார்க்கமாகக் கொண்டு வரப்பட்டுத் தென் இந்தியாவில் இறக்குமதி செய்யப் பட்டன என்னும் ரசமான விஷயத்தையும் மார்க்கோ தெரிவிக்கிறார். குதிரை வளர்ப்புக்குத் தென்னிந்தியாவின் சீதோஷ்ண ஸ்திதி ஏற்றதாயில்லை. இந்தியாவின்மீது படையெடுத்துவந்த முஸ்லீம்கள் இந்தியரைவிட நன்கு போரிட்டதற்கு ஒரு காரணம் அவர்களிடம் உயர்ந்த குதிரைகள் இருந்தமையே என்று சொல்லப்படுகிறது. ஆசியாவின் தலைசிறந்த குதிரை வளர்ப்புப் பண்ணைகள் அவர்களுடைய ஆதிக்கத்தில் இருந்தன.

ஆகவே, சோழர் வீழ்ச்சிக்குப்பின் பதின்மூன்றும் நூற்றாண்டில் தமிழரசரான பாண்டியர் தலைசிறந்து நிற்கக் கண்டோம். ஆனால் அடுத்த நூற்றாண்டின் ஆரம்பத்திலேயே (கி. பி. 1310-இல்) முஸ்லீம் படையெடுப்பு தெற்கே தலைகாட்டத் தொடங்கியது. பாண்டியநாடு அதற்கு எதிர் நிற்கமாட்டாமல் விரைவிலேயே வீழ்ந் தொழிந்தது.

இக்கடிதத்தில் தென்னிந்தியச்சரித்திரத்தை ஒருவாறு பார்த்தோம். நான் முன் சொன்னதையே திருப்பிச் சொல்லியிருக்கிறேன் என்று எண்ணுகிறேன். விஷயமும் சிறிது குழப்பத்தை உண்டுபண்ணுவதாக இருக்கிறது. பல்லவர், பாண்டியர், சோழர், சாளுக்கியர் முதலிய பெயர்கள் நமது குழப்பத்தை அதிகரிக்கின்றன. ஆனால், மொத்தமாக எடுத்துக்கொண்டு பார்த்தால் நீ உன் மனத்

திரையில் முழுச் சித்திரத்தையும் எழுதிக்கொண்டு விடலாம். அசோகர், தெற்கில் ஒரு சிறு பகுதி நீங்கலாக இந்தியா முழுவதையும், ஆப்கானிஸ்தானத்தையும், மத்திய ஆசியாவின் ஒரு பாகத்தையும் ஆண்டார். இவ்விஷயம் உன் ஞாபகத்தில் இருக்கும் என்று எண்ணு கிறேன். அவருக்குப்பின் தெற்கே ஆந்திர அரசு எழுந்தது. அது தக்காணம் முழுவதையும் தன்னகத்தே கொண்டு 400 ஆண்டுகள் நடைபெற்றது. ஏறக்குறைய அதேகாலத்தில் வட இந்தியாவில் குஷாணர்களின் எல்லைப்புற சாம்ராஜ்யம் நடைபெற்றுவந்தது. தெலுங்கு ஆந்திர ஆதிக்கம் அஸ்தமித்ததும் தமிழ்ப் பல்லவ அரசு கீழ்கரையிலும் தெற்கிலும் உதயம் ஆகிறது. பல்லவர்கள் நெடுங் காலம், 600 ஆண்டுகள்வரையில், ஆதிக்கம் செலுத்துகிறார்கள். அவர்கள் மலாயாசியாவில் பல குடியேற்றங்களைத் தோற்றுவிக்கிறார்கள். பல்லவர்களுக்குப்பின் சோழர்கள் வாழ்வுபெற்றுப் பல தூர தேசங்களை ஜெயிக்கிறார்கள். அவர்களுடைய கடற்படை கடல்களின்மீது தடையற்ற ஆணை செலுத்துகிறது. 300 ஆண்டுகளுக்குப் பின் அவர்கள் மறையவும் பாண்டியர் அரங்கத்தில் தோன்றுகிறார்கள். அவர்களுடைய தலைநகராகிய 'மதுரைப் பெருநன் மாநகர்' தமிழருடைய கலைப்பண்பின் தலைநகராகவும் திகழ்கிறது. அவர்களுடைய துறைமுகப் பட்டினமாகிய காயல் பெருநகர் பல தூரதேசங்களுடன் வியாபாரத் தொடர்பு பூண்டு எப்பொழுதும் கலகலப்புடன் விளங்குகிறது.

தெற்கும் கிழக்கும் நிற்க, மேற்கே மகாராஷ்டிர தேசத்தில் முதலில் சாளுக்கியரும், பிறகு ராஷ்டிர கூடரும், மீண்டும் இரண்டாம் முறையாகச் சாளுக்கியரும் அரசுபுரிகிறார்கள்.

இவைகளெல்லாம் வெளிப்பார்வைக்கு வெறும் பெயர்களாகத் தோன்றலாம். ஆனால், இவைகள் நிலை பெற்று விளங்கிய நீண்டகாலப் பகுதிகளையும் இவைகள் அடைந்திருந்த மிக உயர்ந்த நாகரிகப் பண்பையும் நீ உன்னிப் பார்க்கவேண்டும். அப்படிப் பார்க்கும்போது இவைகளிடம் ஐரோப்பிய ராஜ்யங்களில் காணப்படாத ஒரு உள்வலியை நீ காண்பாய். அதுதான் இவைகளுக்கு நிலைத்த தன்மையையும் உறுதியையும் அமைதியையும் வழங்கியிருக்க வேண்டும். ஆனால், சமுதாயக் கட்டுக்கோப்பு காலங்கடந்ததாகவும் பயனற்றதாகவும் போய்விட்டது. அதனால் உட்புரையுற்ற இவைகள் 14-ம் நூற்றாண்டின் தொடக்கத்தில் தெற்கே படர்ந்துவந்த முஸ்லீம் படைகளுக்கு ஆற்றாது நிலைகுலைந்து விழுந்துவிட்டன.

# 66

## டில்லியில் ஆண்ட அடிமை அரசர்கள்

ஜூன் 24, 1932.

கஜினி முகம்மதுவைப் பற்றியும், அவனுடைய வேண்டுகோளின் பேரில் பாரசீக பாஷையில் 'ஷாநாமா' என்னும் காவியத்தை இயற்றிய பிர்தாசி என்னும் கவி சிரேஷ்டரைப் பற்றியும் கூறினேன். ஆனால், முகம்மதுவின் காலத்தில் வாழ்ந்து அவனுடன் பஞ்சாபுக்கு வந்த இன்னொரு பெரியாரைப் பற்றி நான் இன்னும் உனக்குக் கூறவில்லை. அவருடைய பெயர் அல்பெருனி என்பது. கல்வி கேள்விகளிற் சிறந்த அவருக்கும் குரூர சுபாவமும் மூடமதப்பற்றும் கொண்ட அக்காலத்துப் போர் வீரர்களுக்கும் அதிக வேற்றுமை உண்டு. அவர் இந்தியா முழுவதும் யாத்திரை செய்தார்; தனக்குப் புதிய இந்நாட்டையும் இந்நாட்டவரையும் அறிந்து கொள்ள முயன்றார். இந்திய மனோபாவத்தை அறிந்து பாராட்டுவதில் அவர் பேரூக்கம் காட்டினார். சம்ஸ்கிருதத்தைக் கற்று அதிலுள்ள முக்கிய ஹிந்துக் கிரந்தங்களைத்தானே படித்தறிந்தார். இந்தியாவின் தத்துவ, விஞ்ஞான சாஸ்திரங்களையும் இதர கலைகளையும் ஆழ்ந்து கற்றார். பகவத் கீதை அவருக்கு மிகவும் பிடித்தமான நூலாகிவிட்டது. அவர் தெற்கே சோழ சாம்ராஜ்யத்துக்குச் சென்றார். அங்கே அவர் கண்ட நீர்ப்பாசன மராமத்து வேலைகள் அவரைப் பேராச்சரியத்தில் ஆழ்த்திவிட்டன. அவருடைய இந்திய யாத்திரைக் குறிப்புகள் அடங்கிய நூல், நமக்குக் கிடைத்துள்ள, தலைசிறந்த, பண்டைய யாத்திரை நூல்

களுள் ஒன்றாகும்.' போரும், கொலையும், பொறாமையும் எங்கும் பொங்கி எழுகின்றன. இந்தப் பொல்லாத காட்சி யின் நடுவே, அமைதியுடன், கண்டும் கேட்டும் கற்றும் அறிந்தும் உண்மையை உற்றுணர முயலும் இந்நல்லாரை யும் நாம் காண்கிறோம்.

பிருதிவி ராஜனை வென்ற ஷஹாபுதீனுக்குப் பிறகு, அடிமை அரசர்கள் என்று அழைக்கப்பட்ட சுல்தான்கள் ஒருவர்பின் ஒருவராக டில்லியில் அரசு புரிந்தனர். அவர் களில் முதலாவது மன்னன் குதுப் உதீன் என்பவன். அவன் ஷஹாபுதீனின் கீழ் அடிமையாக இருந்தான். ஆனால், அடிமைகளும் அரச பதவியை அடைய முடியும். ஆகவே, அவன் டில்லியின் முதல் சுல்தான் ஆனான். அவனுக்குப் பின் வந்தோரில் சிலரும் ஆதியில் அடிமை களாக இருந்தவர்களே. ஆகவே, அவ் வமிசம் அடிமை வமிசம் என்று அழைக்கப்படுகிறது. அவர்கள் எல்லோரும் கொடியோராகவே இருந்தனர். வெற்றி என்றாலே முதலில் நூல் நிலையங்களுக்கும் கட்டிடங் களுக்கும் ஆபத்து, பிறகு பயங்கர அடக்குமுறை என்று தானே அர்த்தம்? இவையன்றி வெற்றி ஏது? ஆயினும் அடிமை அரசர்கள் கட்டிட விருப்புடையோராகவும் இருந்தார்கள். அதிலும் பெரிய அளவில் கட்டுவதையே அவர்கள் விரும்பினார்கள். குதுப் உதீன் டில்லிக்கு அருகில் குதுப்மினார் என்னும் ஸ்தூபியைக் கட்டத் தொடங்கினான். அந்த ஸ்தூபி உனக்கு மிகவும் நன்றாகத் தெரியும். அவனுக்குப்பின் வந்த இல்தத்மிஷ் (அல்தாமஷ்) என்பவன் அதைக் கட்டி முடித்தான். அவன் அதற் கருகில் சில வளைவுகளையும் கட்டினான். இவைகளுக்கு வேண்டிய சாமான்கள் பெரும்பாலும் பழைய ஹிந்துக் கோயில்களிலிருந்தே எடுத்துக் கொள்ளப் பட்டன கட்டிட வல்லுநர் அனைவரும் இந்தியர்களே. ஆனால்,

நான் ஏற்கெனவே கூறியுள்ளபடி, அவர்கள் முஸ்லீம்களால் கொணரப்பட்ட புதுக்கருத்துகளால் ஆட்கொள்ளப்பட் டிருந்தார்கள்.

கஜினி முகம்மது முதற்கொண்டு இந்தியாமீது படையெடுத்து வந்த ஒவ்வொருவரும் கட்டிடக் கலையில் வல்ல இந்திய வினைஞர் பலரைத் தம்முடன் அழைத்துச் சென்றனர். இதனால் இந்தியக் கட்டிடக் கலையின் பிரபாவம் மத்திய ஆசியாவிலும் பரவியது.

பீகாரையும், வங்காளத்தையும் ஆப்கானியர் வெகு எளிதில் ஜெயித்து விட்டார்கள். எதற்கும் அஞ்சாத அவர்களுடைய தீரம் அவர்களுக்கு எதையும் சாதித்துத் தந்தது. எதிரிகள், எதிர்பாராத சமயத்தில் தாக்கப்பட்டுத் தோல்வி அடைந்தார்கள். அமெரிக்காவில் கோர்டேசும் பிசாரோவும் அடைந்த வெற்றிகளைப் போலவே, ஆப்கானியரின் வங்க வெற்றியும் நம்மை ஆச்சரியத்துக் குள்ளாக்குகிறது.

இல்தத்மிஷ் ஆண்ட காலையில் (1211-லிருந்து 1236-வரை) இந்தியாவின் எல்லைப்புறத்தில் கரிய பெரிய மேகத்திரள் கவிந்து நின்றது. இம் முகிற்கணம் செங்கிஸ்கானின் தலைமையில் படையெடுத்து வந்த மங்கோலிய சேனையே ஆகும். பகைவனைத் துரத்திக் கொண்டு அவன் சிந்து நதிவரையில் வந்தான். ஆனால், அதற்குமேல் போகவில்லை. இந்தியா அவனிடமிருந்து தப்பிப் பிழைத்தது. ஏறக்குறைய 200 ஆண்டுகளுக்குப் பிறகு அவனுடைய வகுப்பைச் சேர்ந்த தைமூர் என்பவன் இந்தியாவுக்கு வந்து கொலையும் நாசமும் புரியப்போகிறான். செங்கிஸ்கான் வராவிட்டாலும், பல மங்கோலியர் இந்தியா மீது படையெடுத்து வருவதை வழக்கமாகக்கொண் டிருந்தனர். அவர்கள் லாகூரைக்கூட அடைந்தனர். அவர்களைக் கண்டால் மக்களுக்குத் திகிலும் நடுக்கமும் தான்.

சுல்தான்களையும் அவர்கள் பயமுறுத்தினர். சுல்தான்கள் அவர்களுக்கு லஞ்சம் கொடுத்துத் தப்பிப் பிழைத்தார்கள். பல்லாயிரக்கணக்கான மங்கோலியர் பஞ்சாபில் குடியேறினர்.

டில்லியில் ஆண்ட சுல்தான்களின் வரிசையில் நாம் ஒரு பெண்மணியையும் காண்கிறோம். இல்தத்மிஷின் மகளான அவள் சுல்தானா ரஜியா என்னும் பெயர் பூண்டு விளங்கினாள். அவள் சாமர்த்தியத்திலும் போர்த்திறமையிலும் மிக்கவள் என்று தெரிகிறது. ஆனால், அவளுக்குக் கீழ்ப்பட்ட மூர்க்க ஆப்கானியப் பிரிவுகளும், அவர்களிலும் மூர்க்கமான மங்கோலியரும் அவளுக்குப் பெருந் தொல்லை விளைத்து வந்தனர்.

அடிமை அரசர்களின் ஆட்சி கி. பி. 1290-இல் முடிவு பெற்றது. உடனே அலாவுதீன் கில்ஜி என்பான் அரசன் ஆனான். அவன் தன்னுடைய சிற்றப்பனும் மாமனுமான சுல்தானைக் கொன்று விட்டுச் சிம்மாசனம் ஏறினான். அரசை அடைவதற்கு எவ்வளவு அருமையான சாத்வீக வழி பார்த்தாயா? இதற்கு அடுத்தாற்போல் அவன் தன்னிடம் விசுவாசமற்றவர்கள் என்று தான் சந்தேகித்த முஸ்லிம் பிரபுக்களை யெல்லாம் கொலை செய்தான். இதுவும் போதாதென்று, அவன் தன் நாட்டில் வாழ்ந்த மங்கோலியர் அனைவரும் குஞ்சு குழந்தை ஒன்று பாக்கியில்லாமல் கருவறுக்கப்பட வேண்டும் என்று உத்தரவு பிறப்பித்தான். இவ்வாறு 20,000 அல்லது 30,000 பேர்—இவர்களில் பெரும்பாலோர் ஒருபாவமும் அறியாதவர்கள் — கொல்லப்பட்டனர். மங்கோலியர் தனக்கு விரோதமாகச் சதி செய்வார்கள் என்று அவன் அஞ்சியதே இதற்குக் காரணம்.

இந்தக் கொலைகளைப்பற்றி அடிக்கடி சொல்வது உனக்குத் தலைவலி உண்டாகும் என்று நினைக்கிறேன்.

சரித்திரத்தைப் பரந்து நோக்கும்போது அவை அவ்வளவு முக்கியம் வாய்ந்தவையும் அல்ல. ஆயினும், அக்காலத்தில் வட இந்தியா இருந்த நிலைமையை அவை நமக்கு உணர்த்துகின்றன. உயிருக்கும் உடைமைக்கும் யாதொரு பாதுகாப்பும் இல்லை. நாகரிக முறைகள் மறைந்து, காட்டுமிராண்டித்தனத்தில் நாடு மீண்டும் வீழ்கிறது. இஸ்லாமிய மதம் இந்தியாவுக்கு ஓரளவு முன்னேற்றத்தை அளித்தது. அதே சமயத்தில் முஸ்லீம் ஆப்கானியர் ஓரளவு காட்டுமிராண்டித்தனத்தைப் புகுத்தினார்கள். ஆகவே, பலர் இரண்டையும் ஒன்றாகச் சேர்த்து எண்ணி விடுகிறார்கள். ஆனால், இரண்டுக்கும் உள்ள வேற்றுமையை நாம் தெளிவாக உணர வேண்டும்.

அலாவுதீனும் பிறரைப் போலவே பிற மதத் துவேஷம் நிறைந்தவனாக இருந்தான். ஆனால், சிறிது சிறிதாக, இந்தியாவை ஆண்ட இம்மத்திய ஆசிய மன்னர்களின் மனோபாவம் மாறுவதைக் காண்கிறோம். இந்தியாவை அவர்கள் தங்கள் தாயகமாகவே எண்ணத் தலைப்படுகிறார்கள். அவர்கள் தங்களை அந்நியர்களாகக் கருதவில்லை. அலாவுதீன் ஹிந்து மாது ஒருத்தியை மணந்து கொண்டான். அவன் மகனும் அவ்வாறே செய்தான்.

அலாவுதீன் அரசாங்க முறையைத் திறம்படத் திருத்தி அமைக்க முயன்றதாகத் தெரிகிறது. முக்கியமாகப் பொது ரஸ்தாக்கள் சீராக வைக்கப்பட்டிருந்தன. ராணுவம் ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்துக்குச் செல்வதற்கு இது பெரிதும் பயன்பட்டது. அலாவுதீன் ராணுவத்தைச் சிறப்பாகக் கவனித்து வந்தான். அவன் அதை மிக்க பலம் பொருந்தியதாகச் செய்து, குஜராத்தையும் தெற்கில் பெரும் பகுதியையும் ஜெயித்தான். அவனுடைய தளகர்த்தன் தெற்கேயிருந்து எண்ணற்ற நிதிக்குவை கொணர்ந்தான். அவன் 50,000 மணங்கு

பொன்னும், ஏராளமான முத்துக்களும், வேறு பிற விலையுயர்ந்த ஆபரணங்களும், 20,000 அசுவங்களும், 312 யானைகளும் கொண்டு வந்ததாகச் சொல்லப்படுகிறது.

போருக்கும் வீரத்துக்கும், கற்பனைக்கும் காவியத்துக்கும் தாயகமான சித்தூர் வழக்கொழிந்த கர்னாடகப் போர் முறைகளைக் கையாண்ட காரணத்தால், அலாவுதீனின் திறமை மிக்க சேனை எதிரில் தோல்வியுறுகிறது. கி. பி. 1303-இல் சித்தூர் அலாவுதீனால் நிர்மூலமாக்கப் பட்டது. அவ்வாறு நிர்மூலமாக்கப்படும் முன்பே, ராஜ புத்திர ஆடவரும் பெண்டிரும் 'ஜௌஹர்' (தீக் குளித்தல்) என்னும் தங்களுடைய பயங்கரமான பரம் பரை வழக்கத்தை நிறைவேற்றி விட்டார்கள். அதன் படி வேறு வழியில்லை, தோல்வி நிச்சயம் என்று தெரிந்தவுடன், பெண்கள் எல்லோரும் சிதையை அடுக்கித் தீ மூட்டி அதில் வீழ்ந்து இறந்துவிடுவார்கள்; ஆண்கள் அனைவரும் கையில் வாளேந்திப் போர்க்களத்துக்குச் சென்று போரிட்டு மடிவார்கள். இதை நினைக்கும் போதே, அதிலும் சிறப்பாக ஸ்திரீகளின் தியாகத்தை எண்ணும்போது, நமது நெஞ்சம் கலங்குகிறது. வீரம் பொருந்திய ராஜபுத்திர மாதுசிரோமணிகளும் கையில் வாளேந்திச் சென்று போர்க்களத்தில் மாய்ந்திருந்தால் சற்று ஆறுதலாயிருக்கும். எப்படியிருந்தாலும், பிறரால் ஜெயிக்கப்பட்டு, மானமிழந்து அடிமைத்தனத்தில் உயிர் வாழ்வதைவிட, சாவதே மேல் என்று அவர்கள் கருதியது மிகவும் போற்றற்குரியதாகும்.

இதற்கிடையில், நாட்டு மக்களான ஹிந்துக்கள் மெல்ல மெல்ல இஸ்லாம் மதத்துக்கு மாற்றப்பட்டனர். இம் மதமாற்றம் விரைவில் நிகழவில்லை. சிலர், இஸ்லாமிய மதம் தங்கள் அறிவுக்குச் சிறந்ததாகத் தோன்றிய காரணத்தால் முஸ்லீம்கள் ஆயினர்; வேறு

சிலர் அச்சம் காரணமாகத் தங்கள் சொந்த மதத்தைக் கைவிட்டனர்; மற்றுஞ் சிலர், ஜெயிக்கும் கட்சியில் இருக்க வேண்டுமென்று இயல்பாயெழுந்த விருப்பம் காரணமாகத் தங்கள் மதப் போர்வையை மாற்றிக் கொண்டனர். ஆனால், மத மாற்றத்தின் முக்கிய காரணம் பொருளாதாரத்தைப் பற்றிநின்றது. முஸ்லீம்கள் அல்லாதவர்கள் 'ஜஜியா' என்னும் தலைவரி செலுத்த வேண்டியிருந்தது. ஏழைகளை இது பெரிதும் பாதித்தது. இவ் வரிச்சுமையிலிருந்து தப்பித்துக் கொள்வதற்காகவே பலர் தங்கள் மதத்தை மாற்றிக் கொண்டனர். உயர் வகுப்பார், ராஜ சன்மானம் பெறவும் உயர்பதவியை அடையவும் முஸ்லீம்கள் ஆகியிருக்கலாம். தட்சிணத்தை வென்ற அலாவுதீனின் தளபதியான மாலிக் காபர் என்பவன் ஹிந்துவாயிருந்து பின்பு முஸ்லீம் ஆனவனே.

இன்னொரு டில்லி சுல்தானைப்பற்றி நான் உனக்கு அவசியம் சொல்ல வேண்டும். அவன் ஓர் அசாதாரணப் பேர்வழி. அவனுடைய பெயர் முகம்மதுபின் துக்லக் என்பது. அவன் அரபு, பாரசீகம் ஆகிய இருமொழி களிலும் நல்ல தேர்ச்சி பெற்றவன்; தர்க்கம், கணிதம், விஞ்ஞானம், வைத்தியம், தத்துவம் முதலிய சாஸ்திரங் களைக் கரைகண்டவன். கிரேக்க தத்துவ நூல்களிலும் அவனுக்குப் பயிற்சி உண்டு. அவனைக் கல்விக் கடல், கலைக் களஞ்சியம் என்றே கூறவேண்டும். ஆயினும்,—இதைச் சொல்வதற்கே நா எழவில்லை—அப்பிருகஸ்பதி கொடிய ராட்சசனாகவும் பெரிய பித்துக்குளியாகவும் இருந்தான். சாக்ஷாத் பெற்ற தந்தையையே கொன்று அவன் அரியாசனம் ஏறினான். பாரசீகத்தையும் சீனாவையும் ஜெயிக்க வேண்டும் என்பது போன்ற பைத்தியக் கார எண்ணங்களெல்லாம் அவனுக்கு உண்டு. அம் முயற்சியில் அவன் பெருந் தோல்வியும் துன்பமும்

அடைந்தான் என்று சொல்லத் தேவை இல்லை. ஆனால், அவனுடைய 'மூர்க்கத்தனத்துக்கு முதல் தாம்பூலம் வாங்கிக் கொடுக்கக்கூடியது, அவன் தன் சொந்தத் தலை நகராகிய டில்லியையே பாழ்படுத்தத் தீர்மானித்ததுதான். நகரைச் சேர்ந்த யாரோ சிலர் அவனுடைய போக்கைக் கையெழுத்திடாத மொட்டைப் பிரசுரங்களில் கண்டித்திருந்தார்களாம். உடனே, நமது மகா மேதை மேற் கண்ட முடிவுக்கு வந்துவிட்டான்! தலைநகரை டில்லியிலிருந்து தட்சிணத்திலுள்ள தேவகிரிக்கு (இப்போது ஹைதராபாத் சமஸ்தானத்தில் இருக்கிறது) மாற்ற வேண்டுமென்று அவன் கட்டளையிட்டான். தேவகிரியை அவன் தௌலதாபாத் என்று அழைத்தான். வீட்டின் சொந்தக்காரர்களுக்குச் சிறிது நஷ்ட ஈடு தரப்பட்டது. பிறகு யாவரும், ஒருவர் பாக்கியின்றி, மூன்றே நாளில் நகரை விட்டுப் புறப்பட வேண்டுமென்று உத்தரவிடப் பட்டது.

பெரும்பாலோர் அவ்வாறே செய்தனர். சிலர் பதுங்கிக் கொண்டனர். அவர்கள் கண்டு பிடிக்கப் பட்டுக் கடுமையாகத் தண்டிக்கப்பட்டார்கள். குருடரும் முடவரும்கூட இதற்கு விலக்கில்லை. டில்லியிலிருந்து தௌலதாபாத்துக்கு நாற்பது நாள் பயணம். ஐயோ, பாவம். அவ்வேழை ஜனங்கள் வழியில் எத்தகைய இன்னல்களுக்கு ஆளாகியிருப்பார்கள், அவர்களில் எத்தனைபேர் மாண்டுபோயிருப்பார்கள் என்பதைக் கற்பனை செய்து பார்க்கும்போது நமது நெஞ்சம் 'பகீர்' என்கிறது.

டில்லி நகரம் என்னாயிற்று? இரண்டு வருஷங் களுக்குப் பின் முகம்மது துக்லக் மீண்டும் அதில் மக்களைக் குடியேற்ற முயன்றான். ஆனால், அவன் அதில் வெற்றி

பெறவில்லை. நேரில் கண்ட ஒருவர் கூறுவதுபோல அவன் அந்நகரை முன்பு 'பக்காப் பாலைவனம்' ஆக்கிவிட்டான். எழில் வளர் பொழிலை அழல்வளர் பாலையாக்குவது எளிது; மீண்டும் அப்பாலையைச் சோலையாக்குவது மிகவும் அரிது. ஆப்பிரிக்காவிலிருந்துவந்த இபன்பதூதா என்னும் மூர் யாத்திரிகன் அப்போது சுல்தானுடன் இருந்தான். அவன் டில்லிக்குத் திரும்பிவந்து அதைப் பார்த்தபோது அதன் நிலையைக் கண்டு வருந்திக் கூறுவதைக் கேள்: "டில்லி உலகத்தின் மிகப் பெரிய நகரங்களுள் ஒன்றாகும். அதில் நாங்கள் மீண்டும் பிரவேசித்தபோது அது நான் கூறமுடியாவாறு பாழ்பட்டிருந்தது. திருவும் பிறவும் அதைக் கைவிட்டகன்றன. வறுமையும் வெறுமையும் உற்றுக்கிடந்த அந்நகரில் சொற்ப தொகையினரே வாழ்ந்து வந்தனர்." எட்டு அல்லது பத்துமைல்தூரம் பரந்து செறிந்திருந்த அந்நகரை இன்னொருவன் வர்ணிப்பதையும் கேள்: "எல்லாம் அழிந்துவிட்டது. எங்கும் ஒரே பாழ்ந்தோற்றம். நகரின் அரண்மனைகளிலும், மாடமாளிகைகளிலும், சுற்றுப்புறங்களிலும் ஒரு பூனை அல்லது நாய்கூடத் தென்படவில்லை."

இத்தகைய பித்தன் 25 ஆண்டுகள் (1351 வரை) சுல்தானாக இருந்து அரசுபுரிந்தான். ஜனங்கள் தங்களை ஆளுவோரிடத்துக் காணப்படும் அயோக்கியத்தனம், திறமை யின்மை, கொடுமை இத்தியாதி குணக்கேடுகளை எவ்வளவு தூரம் பொறுத்துக் கொள்ளுகிறார்கள் என்பதை எண்ணிப் பார்க்கும்போது நமக்கு வியப்புண்டாகிறது. ஜனங்கள் இவ்வளவு கோழைகளாக இருந்தும் துக்லக் தன் சாம்ராஜ்யத்தைத் தானே குலைப்பதில் வெற்றிபெற்றான். அவனுடைய பைத்தியக்காரத் திட்டங்களாலும், வரிப்பளுவினாலும் தேசம் நாசமுற்றது. கொடிய பஞ்சங்கள் மக்களை வாட்டின. கடைசியில்

அவர்கள் கலகம் செய்தார்கள். அவனுடைய வாழ் நாளிலேயே, கி. பி. 1340-க்கு மேல் சாம்ராஜ்யத்தின் பல பெரும் பகுதிகள் சுதந்தரமாக வாழத் தலைப்பட்டன. வங்காளம் சுதந்தரம் பெற்று விளங்கியது. தட்சிணத்தில் பல ராஜ்யங்கள் தோன்றின. அவைகளில் முக்கிய மானது ஹிந்து சாம்ராஜ்யமான விஜயநகர சாம்ராஜ்யம். அது 1336-இல் தோன்றியது; தோன்றிப் பத்தாண்டு முடியு முன்பே தட்சிணத்தில் பெரிய வல்லரசாகத் திகழ்ந்தது.

டில்லிக்கு அருகில், முகம்மது துக்லக்கின் தந்தை நிர்மாணித்த துக்லகாபாத் நகரம் பாழ்பட்டுக் கிடப்பதை நீ இன்றும் காணலாம்.

## 67

# செங்கிஸ்கான் ஆசியாவையும் ஐரோப்பாவையும் கலங்க அடிக்கிறான்

ஜூன் 25, 1932.

நான் சமீபத்தில் எழுதிய கடிதங்களில் மங்கோலியரைப் பற்றியும், அவர்கள் விளைத்த அச்சம், இழைத்த அழிவு ஆகியவைகளைப் பற்றியும் குறிப்பிட்டிருக்கிறேன். சீனாவில் நாம் சூங் வமிச வரலாற்றை மங்கோலியரின் வருகையுடன் நிறுத்திவிட்டோம். அவர்கள் மேற்கு ஆசியாவில் தோன்றுகிறார்கள் ; உடனே அங்கும் பழைய நிலைமை முடிவடைகிறது. இந்தியாவில் அடிமை அரசர்கள் அவர்களிடமிருந்து தப்பித்துக் கொள்ளுகிறார்கள் ; ஆனால் அங்கும் அவர்களால் பெருந்தொல்லை விளைகிறது. மங்கோலியாவிலிருந்து பொங்கிப் பரந்த இவர்களுக்கு அகில ஆசியாவும் அடிபணிகிறது. ஆசியா மட்டுந்தானா? ஐரோப்பாவில் பாதியும் இவர்களுடைய பாதத்தில் வீழ்கிறது. என்ன ஆச்சரியம்! திடீரென்று கிளம்பி உலகையே திடுக்கிடச் செய்த இவர்கள் யார்? மத்திய ஆசியாவைச் சேர்ந்த ஸிதியர், ஹூணர் துருக்கியர், தார்த்தாரியர் ஆகியோர் முக்கிய சரித்திர பாத்திரங்களாக விளங்கியதை நாம் ஏற்கெனவே கண்டோம். அவர்களில், செல்ஜுக் துருக்கியர் மேற்கு ஆசியாவிலும், தார்த்தாரியர் வட சீனாவிலும் பிற இடங்களிலும் இன்னும் முக்கியமாக விளங்குவதை நாம் காண்கிறோம். ஆனால், இந்த மங்கோலியர் என்போர்

யார்? இவர்கள் இதுவரையில் அதிகமாக ஒன்றும் சாதித்த தாகத் தெரியவில்லை. மேற்கு ஆசியாவில் ஒருவரும் இவர்களைப்பற்றி அதிகமாகக் கேள்விப்பட்டுக்கூட இருக்கமாட்டார்கள். மங்கோலியாவில் சாதாரணமான பல கூட்டங்களைச் சேர்ந்த இவர்கள், வட சீனாவை ஜெயித்த கினிய தார்த்தாரியருக்கு அடங்கி வாழ்ந்து வந்தார்கள்.

திடீரென்று அவர்களுடைய ஆற்றல் வளர்ந்தது. பல கூட்டங்களாகச் சிதறிக் கிடந்தவர்கள் ஒன்று பட்டார்கள்; தங்களுக்கென ஒரு தலைவனைத் தேர்ந்தெடுத்தார்கள்; அவனுக்குக் கீழ்ப்படிந்து விசுவாசமாக நடப்பதென்று உறுதி பூண்டார்கள். அவர்களுடைய தலைவன் மகாகான் என்று அழைக்கப்பட்டான். அவனுடைய தலைமையில் அவர்கள் பீகிங் நகரின்மீது படையெடுத்துச் சென்றார்கள். அவர்கள் சென்றதுதான் தாமதம்; கினிய சாம்ராஜ்யம் முற்றுப்பெற்றுவிட்டது. மேலும் அவர்கள் மேற்கே சென்றார்கள். வழியில் கண்ட பெரிய ராஜ்யங்களையெல்லாம் துடைத்துப் போக்கினார்கள். ருஷியாவுக்குச் சென்று அதை அடக்கினார்கள். இதற்குப் பின்பு, அவர்கள் பாக்தாது நகரையும் சாம்ராஜ்யத்தையும் அடியோடு இல்லாமொழித்து, ஐரோப்பாவில் போலந்துக்கு அப்பாலும் சென்றார்கள். அவர்களைத் தடுத்து நிறுத்துவார் யாரும் இல்லை. இந்தியா அவர்களிடமிருந்து தப்பிப் பிழைத்தது வெறும் அதிர்ஷ்டமே தவிர வேறொன்றுமில்லை. நெருப்பைக் கக்கும் இம்மங்கோலிய எரிமலையைக் கண்டு யூரேஷிய உலகம் அடைந்திருக்கக்கூடிய வியப்பை வாயினால் சொல்வதைவிட மனத்தினால் எண்ணிப் பார்த்துக் கொள்வதே மேலாகும். இயற்கையே சீறி எழுந்தால் மனிதன் என்ன செய்ய முடியும்? பூகம்பத்தை மனிதன்

எதிர்க்கவோ தடுக்கவோ முடியுமா? அவ்வாறே மங்கோலியரையும் கருத வேண்டியிருக்கிறது.

மங்கோலிய ஆண்களும் பெண்களும், உடற்கட்டும் உறுதியும் வாய்ந்தவர்கள். நாடோடி வாழ்க்கையின் நலங்களுள் இதுவும் ஒன்று. வட ஆசியாவின் அத்து வானப் பெருவெளிகளில் கூடாரங்களில் வாழ்ந்து வந்த அவர்கள் எவ்விதக் கஷ்டங்களையும் பொறுத்துக் கொள்ளும் ஆற்றல் வாய்ந்தவர்களாக இருந்தார்கள். ஆனால், அவர்களுக்கு ஓர் அதிசயமான தலைவன் கிடைத் திராவிட்டால் அவர்களுடைய வல்லமையும் பயிற்சியும் அவ்வளவாகப் பயன்பட்டிரா. அத்தலைவனே செங்கிஸ் கான் என்று வழங்கப்படுகிறான். அவனுடைய ஜனனம் கி.பி. 1155-ஆம் ஆண்டில். அவனுடைய ஆதிப்பெயர் திமுசின் என்பது. அவனுடைய தகப்பனாரான யெசுகை பகதூர் என்பவர் அவனுடைய பாலப்பருவத்திலேயே இறந்து விட்டார். 'பகதூர்' என்னும் பட்டத்தை மங்கோலியப் பிரபுக்கள் மிகவும் விரும்பித் தரித்துக் கொண்டார்கள். பகதூர் என்றால் வீரன் என்று பொருள். 'பஹாதூர்' என்னும் உருதுப் பதம் ஒருவேளை இதிலிருந்து வந்திருக்கலாம்.

செங்கிஸ்கான் சகாயமற்ற பத்து வயதுப் பாலகனாக இருந்தும், வருந்தி முயன்று படிப்படியாக முன்னுக்கு வந்துவிட்டான். கடைசியில் 'குருல்தாய்' என்று அழைக்கப்பட்ட மங்கோலிய மகாசபை அவனை மகாகான் ஆகத் தேர்ந்தெடுத்தது. கான் அல்லது காகன் என்னும் சொல்லுக்குச் சக்கரவர்த்தி என்று அர்த்தம். இதற்குச் சில ஆண்டுகளுக்கு முன்பே அவனுக்குச் 'செங்கிஸ்' என்னும் பெயர் சூட்டப்பட்டது.

'மங்கோலியரின் ரகசியச் சரித்திரம்' என்று ஒரு நூல் 13-ஆம் நூற்றாண்டில் எழுதப்பட்டு 14-ஆம் நூற்றாண்

டில் சீனாவில் வெளியிடப்பட்டது. அது இந்தத் தேர்தலைப் பற்றிப் பின்வருமாறு கூறுகிறது.

"கம்பளிக் கூடாரங்களில் வாழ்ந்துவந்த மங்கோலியர் அனைவரும் ஒரே தலைவனின் கீழ் ஒன்றுபட்டகாலையில், அவர்கள், வேங்கைப்புலி வருஷத்தில், ஓனான் நதியின் உற்பத்தி ஸ்தானத்துக்கருகில் மகாசபை கூடி, நவபாதங்களின் மேல் வெண்கொடியை உயர்த்திக் 'காகன்' என்னும் பட்டத்தைச் செங்கிசுக்கு அளித்தார்கள்."

செங்கிஸ், மகாகான் அல்லது காகன் ஆனபோது அவனுக்கு வயது ஐம்பத்தொன்று. ஆகவே, அவனை இளைஞன் என்று சொல்லுவதற்கில்லை. பெரும்பாலோர் இவ்வயதில் அமைதியையும் ஓய்வையும் விரும்புவது இயற்கை. ஆனால், செங்கிசின் 'வீர வெற்றி வாழ்க்கை' இப்போதுதான் ஆரம்பமாகிறது. இதன் கருத்தை நாம் உணரவேண்டும். ஏனெனில், பெரிய வெற்றி வீரர்கள் பெரும்பாலும் இளம்பிராயத்திலேயே தங்கள் வெற்றிகளைச் சாதிக்கிறார்கள். இது ஒன்று. இரண்டாவது, இளமைக்குரிய வேகத்திலும் உற்சாகத்திலும் செங்கிஸ் அவசரப்பட்டு ஆசியாவின்மீது பாயத் தொடங்கவில்லை என்பதையும் இது காட்டுகிறது. நடுத்தர வயதடைந்த அவன், அவ்வயதுக்குரிய அதிஜாக்கிரதை உணர்ச்சியோடு, தான் எடுத்து முடித்த கருமம் எதையும் எண்ணியே துணிந்தான், துணிந்தபின் எண்ணவில்லை என்று அறிகிறோம்.

மங்கோலியர் நாடோடி வாழ்க்கையில் ஊறினவர்கள் என்று முன்பே கூறியுள்ளேன். நகரத்தையும் நகர வாசனையையும் அவர்கள் வெறுத்தார்கள். அவர்கள் நாடோடிகள் என்கிற காரணத்தால் காட்டுமிராண்டிகளாகத்தான் இருந்திருக்க வேண்டும் என்று பலர் எண்ணுகிறார்கள். இது தவறு. நகரக் கலைகள் பலவற்றை

அவர்கள் அறியார்கள் என்பது உண்மையே. ஆயினும், அவர்கள் தங்களுக்கென ஒரு தனி வாழ்க்கை முறையைச் சிருஷ்டித்து அதை அபிவிருத்தி செய்தார்கள். அவர்களுடைய அமைப்பு, நுட்பமும் சிட்பமும் வாய்ந்திருந்தது. போர்க்களத்தில் அவர்களுக்குப் பெரிய வெற்றிகள் கிடைத்தன என்றால் அதற்குக் காரணம் அவர்களுடைய எண்ணிக்கை அதிகமாயிருந்ததல்ல; ஒற்றுமையும் அமைப்பு விசேஷமுமே ஆகும். எல்லாவற்றிற்கும் மேலாக, செங்கிசின் படைத்தலைமையே மங்கோலியரின் வெற்றிக்கு மூலகாரணம் என்று சொல்லவேண்டும். யுத்த நிபுணத்துவத்தில் செங்கிசுக்கு ஈடுசொல்லக்கூடிய படைப் பெருந் தலைவன் இதுவரையில் சரித்திரத்திலேயே தோன்றவில்லை என்று உறுதியாய்க் கூறலாம். அவனுக்கு முன்னால், அலெக்சாந்தரும் சீசரும் விளக்கின் முன் மின்மினி யெனத் தோன்றுகின்றனர். செங்கிஸ், தன்வரையில் பெரிய தானைத்தலைவன் என்பது மட்டுமல்ல; அவன், தனக்குக் கீழ்ப்பட்ட தளகர்த்தர் பலருக்கும் நல்ல பயிற்சி அளித்து அவர்களையும் படையை நடத்துவதில் ஒப்பற்றவர்களாகச் செய்திருக்கிறான். தங்களுடைய சொந்த நாட்டுக்குப் பல்லாயிரக் கணக்கான மைல் தூரத்தில், முன்பின் தெரியாத இடங்களில், தங்களுக்கு விரோதமான ஜனங்களின் மத்தியில், தங்களைவிடப் பெருந் தொகையினரான எதிரிகளால் சூழப்பட்டும் வெற்றி பெறுவதென்றால் அவர்களுடைய போர்த் திறமைக்கு இதைவிடச் சிறந்த உதாரணம் வேறென்ன வேண்டும்?

செங்கிஸ் தோன்றிய காலத்தில் ஆசியாவும் ஐரோப்பாவும் எத்தகைய காட்சியை அளித்தன? மங்கோலியாவுக்குக் கிழக்கிலும் தெற்கிலும் சீனா பிளவுபட்டுக் கிடந்தது. தெற்கே சூங் சாம்ராஜ்யம்; வடக்கே, சூங்

வமிசத்தாரைத் தெற்கே ஓட்டிய கினியர் அல்லது பொன்னிறத் தார்த்தாரியரின் சாம்ராஜ்யம்; அதற்குத் தலைநகர் பீகிங்; மேற்கே, கோபிபாலைவனத்திலும் அதற்கு அப்பாலும் நாடோடி வகையைச் சேர்ந்த டங்கூட் அல்லது ஹிசையா சாம்ராஜ்யம்; இந்தியாவில் டில்லியைத் தலைநகராகக் கொண்டு அடிமை அரசர்கள் ஆண்டு வந்தார்கள். பாரசீகத்திலும் மெசபொடேமியாவிலும் கொராசம் அல்லது கிவா எனப்படும் பெரிய முஸ்லீம் சாம்ராஜ்யம் நடைபெற்றுவந்தது. இந்திய எல்லை வரையில் வியாபித்திருந்த அதற்கு ஸாமர்கந்த் தலைநகராக விளங்கியது. அதற்கும் மேற்கில் செல்ஜக் துருக்கியரும், எகிப்திலும் பாலஸ்தீனத்திலும் சலாதீனின் சந்ததியாரும் ஆண்டு வந்தார்கள். பாக்தாதையும் அதைச் சுற்றியுள்ள பிரதேசத்தையும் செல்ஜக் துருக்கியரின் பாதுகாப்பில் கலீபா ஆண்டு வந்தார்.

இது சிலுவைப் போர்களின் பிற்காலம். 'உலகத்தின் அற்புதம்' என்று அழைக்கப்பட்ட ஹோஹென்ஸ்டாபென் வமிசத்தைச் சேர்ந்த இரண்டாவது பிரடெரிக் அப்போது பரிசுத்த ரோம சாம்ராஜ்யத்தின் சக்கரவர்த்தியாக இருந்தான். இங்கிலாந்தில் அப்போது 'மாக்ஞ கார்ட்டா' என்னும் பேருரிமைப் பத்திரத்தின் காலம். பிரான்சில் ஒன்பதாவது லூயி ஆண்டு வந்தான். அவன்தான் சிலுவைப் போருக்குச் சென்றகாலையில் துருக்கியரால் பிடித்துக்கொள்ளப்பட்டவன். பின்பு அவனைப் பெருந்தொகை கொடுத்து மீட்கவேண்டி இருந்தது. கீழ் ஐரோப்பாவில் ருஷியா இரு ராஜ்யங்களாகப் பிரிந்திருந்தது. வடபாகம் நவோகிராட் ராஜ்யம் என்றும் தென் பாகம் கீவ் ராஜ்யம் என்றும் அழைக்கப்பட்டன. ருஷியாவுக்கும் பரிசுத்த ரோம சாம்ராஜ்யத்துக்குமிடையே ஹங்கேரியும் போலந்தும் இருந்தன. கான்ஸ்

டாண்டிநோபிளுக்கு அருகில் பைஜாண்டிய சாம்ராஜ்யம் நடந்து வந்தது.

செங்கிஸ் வெற்றி பெறுவதற்கு வேண்டிய முன்னேற்பாடுகளை யெல்லாம் அதிஜாக்கிரதையோடு செய்து முடித்தான். அவன் தன் சேனைகளுக்குச் சிறந்த பயிற்சி அளித்தான். எல்லாவற்றிற்கும் மேலாக அவன் குதிரைகளையும் மாற்றுக் குதிரைகளையும் நன்கு பழக்கி வைத்தான். நாடோடி வாழ்வு நடத்தும் மக்களுக்குக் குதிரைகளைவிட உறுதுணை வேறு ஏது? ஆயத்தங்களெல்லாம் முடிந்தபிறகு அவன் கிழக்கே படையெடுத்துச் சென்று வட சீனுவிலும் மஞ்சூரியாவிலும் பரவியிருந்த கினிய ராஜ்யத்தை ஒழித்துப் பீகிங் நகரைக் கைப்பற்றிக் கொண்டான். பிறகு கொரியாவை ஆட்படுத்தினுன். தென்சீனுவை ஆண்ட சூங் மன்னர்களோடு அவன் சிநேகப்பான்மையுடன் இருந்ததாகத் தெரிகிறது. அவர்கள் கினியருக்கு விரோதமாகச் செங்கிசுக்கு உதவியும் புரிந்தார்கள். பாவம், அடுத்தபடியாகத் தங்களுடைய முறையும் வரலாம் என்பதை அவர்கள் என்ன கண்டார்கள்! பிற்பாடு, செங்கிஸ் டங்கூட் சாம்ராஜ்யத்தையும் வென்றுன்.

இவ்வெற்றிகளுக்குப் பிறகு செங்கிஸ் ஒருவேளை சும்மா இருந்தாலும் இருந்திருக்கலாம். மேற்கே படையெடுத்துச் செல்லவேண்டுமென்னும் விருப்பம் அவனுக்கு இருந்ததாகத் தெரியவில்லை. கொராசம் அரசனுன ஷாவின் நல்லுறவையே அவன் விரும்பினுன். ஆனுல், விதி வேறுவிதமாக இருந்தது. 'கேடு வரும் பின்னே மதி கெட்டு வரும் முன்னே' என்று பொருள்படும் லத்தீன் பழமொழி ஒன்றுண்டு. அந்த ஷா தன் கேட்டைத் தானே தேடிக்கொண்டான். அவனுடைய

கவர்னர் ஒருவன் சில மங்கோலிய வியாபாரிகளைக் கொன்றுவிட்டான். இச்சேதி செங்கிசின் காதுக்கு எட்டிற்று. அப்போதும் சமாதானத்தையே விழைந்த அவன் சில தூதரை ஷாவிடம் அனுப்பித் தவறிழைத்த கவர்னரைத் தண்டிக்கும்படி கேட்டுக்கொண்டான். ஆனால், மடமையும் மண்டைக் கருவமும் கொண்ட ஷா இத்தூதரை அவமதித்துக் கொல்லவும் செய்தான். இச் செயல் செங்கிஸ் பொறுக்கக்கூடிய எல்லையைத் தாண்டி விட்டது. ஆயினும், அவன் அவசரப்படவில்லை. முன் னெச்சரிக்கையுடன் எல்லா ஏற்பாடுகளையும் செய்து முடித்தபிறகே அவன் தன்னுடைய பெருஞ் சேனையுடன் மேற்கு நோக்கித் தண்டயாத்திரை கிளம்பினுன்.

கி. பி. 1219-இல் தொடங்கிய இப்படைச்செலவு ஆசியாவின் கண்களைத் திறந்தது. ஐரோப்பாவும் இதைச் சிறிது அர்த்தம் செய்துகொண்டது. புதிய ஆபத்துத் தோன்றி விட்டதென்பதை அவர்கள் உணர்ந்தார்கள். இம்மங்கோலியப் போர் உருளை தன் கீழ் அகப்பட்ட எத்தனையோ நகரங்களையும் எண்ணிலடங்காத மக்களை யும் இரக்கமின்றி நசுக்கிக் கொன்றது. கொராசம் சாம்ராஜ்யம் போன இடம் தெரியவில்லை. அரண்மனை களும் அழகிய கட்டிடங்களும் நிறைந்ததும், பத்து லட்சத்துக்கும் மேற்பட்ட மக்கள் உறைந்ததும் ஆன பொகாரா நகரம் பொசுக்கிச் சாம்பலாக்கப்பட்டது. சாம்ராஜ்யத் தலைநகராகிய ஸாமர்கந்த் நாசம் செய்யப்பட்டது. அதில் வாழ்ந்த பத்து லட்சம் ஜனங் களில் அரை லட்சம் பேரே உயிர் தப்பிப் பிழைத்தனர். ஹிரெட், பால்க் முதலிய வனநகர்கள் பலவும் அழித்துப் பாழ்படுத்தப்பட்டன. கோடிக் கணக்கான மக்கள் கொல்லப்பட்டார்கள். மத்திய ஆசியாவில் பல நூற்

றுண்டுகளாகத் தழைத்தோங்கிய கலைகளும் கைத் தொழில்களும் பேர் சொல்வதற்கின்றி மறைந் தொழிந்தன. பாரசீகத்திலும், மத்திய ஆசியாவிலும் நாகரிக வாழ்க்கை பூண்டற்றுப் போய்விட்டது போல் தோன்றியது. செங்கிஸ் சென்ற இடமெல்லாம் சுடு காடாயின.

கொராசம் ஷாவின் மகனுன ஜலாலுதீன், இம் மங்கோலிய வெள்ளத்துக்கு அணைபோடப் பெரிதும் முயன்ருன். அவன் காட்டிய வீரம் பயனற்றுப் போயிற்று. அவன் சிந்து நதி வரையில் பின்வாங்கியும் அங்கும் பகைவரால் நெருக்கப்படவே, குதிரை மேலிருந்தபடியே 30 அடிக்குக் கீழே ஓடிக்கொண்டிருந்த சிந்து நதியில் குதித்து நீந்திச் சென்ருன் என்று சொல்லப்படுகிறது. அவனுக்கு டில்லி தஞ்சம் அளித்தது. அங்கும் அவனைத் தொடர்ந்து செல்ல செங்கிஸ் விரும்பவில்லை.

செல்ஜக் துருக்கியருக்கும் பாக்தாதுக்கும் அதிர்ஷ்டம் என்றே சொல்லவேண்டும். செங்கிஸ் அவர்களை ஒன்றும் செய்யாமல் விட்டுவிட்டு வட ருஷியாவுக்குள் பிரவே சித்தான். அங்கு கீவ் கோமகனை வென்று சிறைப் படுத்தினுன். பின்னர் டங்கூட் மன்னரின் கலகத்தை அடக்குவதற்கு அவன் கிழக்கே திரும்பினுன்.

கி. பி. 1227-இல், தன்னுடைய 72-ஆவது வயதில் செங்கிஸ் உயிர் துறந்தான். அவனுடைய சாம்ராஜ்யம் கிழக்கே பசிபிக் மகா சமுத்திரத்திலிருந்து மேற்கே கருங்கடல்வரை பரவியிருந்தது. வலிகுன்ருமல் மேலும் மேலும் அது வளர்ந்துகொண்டே இருந்தது. இவ்வளவு விஸ்தாரமான அவனுடைய சாம்ராஜ்யத்துக்கு மங் கோலியாவிலுள்ள காரகோரம் என்னும் சிற்றூரே தலைநகராக இருந்தது. நாடோடியாயிருந்தாலும் அமைப்

புத் திறனில் செங்கிஸ் மிகவும் தேர்ந்தவன். அவன் தனக்குக் கீழ் மதிவல்லோரான மந்திரிகளை நியமித்து அவர்களின் துணைகொண்டு ராஜரீகம் புரிந்து வந்தான். வெகு விரைவில் வென்று நிலைநாட்டப்பட்ட அவனுடைய சாம்ராஜ்யம் அவனுடைய மரணத்துக்குப் பின் சீர் குலைந்து போகாதது ஒன்றே அவனுடைய கூரிய அறிவுக்கும் திறமைக்கும் சாட்சி சொல்லுகிறது.

அரேபிய, பாரசீகச் சரித்திராசிரியர் கண்களில் செங்கிஸ் ஒரு கொடிய அரக்கனாகத் தென்படுகிறான். அவர்கள் அவனைக் 'கடவுளின் தண்டனைக் கருவி' என்று அழைக்கிறார்கள். அவனை மிகவும் குரூர குணமுள்ளவனாகச் சித்திரிக்கிறார்கள். அவன் குரூரமானவன் என்பதில் ஐயமில்லை. ஆனால், அவனுக்கும் அக்காலத்தில் வாழ்ந்த மற்ற அரசர்களுக்கும் அதிக வித்தியாசம் ஒன்றும் காணப்படவில்லை. இந்தியாவில் ஆப்கானிய அரசர்கள் அவனைப் போலவே, ஆனால் சிறிய அளவில், கொடுமை இழைத்தனர். கி. பி. 1150-இல் ஆப்கானியர் கஜினி நகரைக் கைப்பற்றியபோது ஏதோ பழம் பகைமைக்காக வஞ்சம் தீர்த்துக் கொள்ளும்பொருட்டு அவர்கள் அதை நிர்மூலமாகச் சுட்டெரித்தார்கள். "ஏழுநாள் வரையில் அந்நகர் ஒரே கொள்ளையும் கொலையும் நாசமும் நரகமுமாய் இருந்தது. காணப்பட்ட ஆண்கள் அனைவரும் கொல்லப்பட்டார்கள். பெண்களும் குழந்தைகளும் சிறைப்படுத்தப்பட்டார்கள். சுல்தான் முகம்மதுவின் கால்வழியில் வந்த அரசர்கள் வாழ்ந்து வந்த, உலகத்திலேயே ஒப்புயர்வற்ற அரண்மனைகளும், மாடமாளிகை கூடகோபுரங்களும் அடியோடு அழிக்கப் பட்டன." முஸ்லீம்கள் தங்கள் சகோதர முஸ்லீம்களிடம் நடந்துகொண்ட விதம் இதுவென்றால் மற்றவைகளைப்பற்றிக் கேட்பானேன்? இதற்கும், இந்தியாவில்

ஆப்கானிய மன்னரின் செய்கைக்கும், செங்கிஸ் மத்திய ஆசியாவிலும் பாரசீகத்திலும் புரிந்த நாச பரம்பரைக்கும் சாராம்சத்தில் என்ன வித்தியாசம்? ஒன்றுமில்லை. தன்னுடைய தூதரைக் கொராசம் ஷா கொன்றுவிட்ட படியால், செங்கிஸ் அந்நாட்டின்மீது கொடுங் கோபம் கொண்டிருந்தான். அவனுக்கு அதுவே பழம்பகைமை யாக முடிந்தது. வேறு இடங்களையும் செங்கிஸ் நாசம் செய்திருக்கிறன்; ஆனால், மத்திய ஆசியாவைப்போல் அவ்வளவு அதிகமில்லை என்றே சொல்ல வேண்டும்.

செங்கிஸ் நகரங்களை நாசம் செய்ததற்கு இன்னொரு காரணமும் இருந்தது. நாடோடி உணர்ச்சி மிக்க அவன் நகரங்களையும் பட்டணங்களையும் வெறுத்தான். பாழ் வெளிகளில் வாழ்வதையே அவன் அதிகமாக விரும்பினன். ஒருசமயம் அவன் சீன நகரங்கள் எல்லாவற்றையும் தகர்த்துத் தரைமட்டமாக்கக் கருதினனம். ஆனல், யார் செய்த புண்ணியமோ, அவன் அவ்வாறு செய்யவில்லை. நாகரிகத்தை நாடோடி வாழ்வோடு இயைக்க வேண்டு மென்பது அவனுடைய லட்சியம். ஆனல், அது நிறைவேறவில்லை, நிறைவேறவும் முடியாது.

'செங்கிஸ்கான்' என்னும் பேரைப் பார்த்து நீ அவனை ஒரு முகம்மதியன் என்று எண்ணக்கூடும். ஆனல், அது அவ்வாறல்ல. அது மங்கோலியப் பெயரே ஆகும். மத விஷயத்தில் சிறிதும் துவேஷ உணர்ச்சி அற்றவனுகச் செங்கிஸ் விளங்கினன். அவனுடைய மதம் 'சியாமியம்' என்று சொல்லப்படுகிறது. அதாவது 'என்றுமுள நீல வானை' வணங்குவது என்று அர்த்தம். சீனவில் வழங்கிய டாஓ மதப் பெரியார்களிடம் அவன் நெடுநேரம் மத சர்ச்சை செய்வதுண்டாம். ஆயினும், அவன் கடைசி வரையில் தன் சொந்த மதத்தையே கடைப்பிடித்து

வந்தான். கஷ்டம் வரும்போதெல்லாம் அவன் வாளை நோக்கியே வழி காண முயன்றான்.

செங்கிஸ், மங்கோலிய மகாசபையால் மகா கான் ஆகத் தேர்ந்தெடுக்கப்பட்டான் என்று நான் இக்கடித ஆரம்பத்தில் கூறியிருப்பதை நீ கவனித்திருப்பாய். இந்தச் சபை நிலமானியப் பிரபுக்களைக் கொண்டதாகும்; ஜனப் பிரதிநிதிகள் என்று சொல்லக்கூடியவர்கள் அதில் இல்லை. ஆகவே, செங்கிஸ் நிலமானிய முறையில் அமைந்த ஒரு கூட்டத்துக்குத் தலைவன் என்று ஏற்படுகிறது.

செங்கிஸ் எழுதப் படிக்கத் தெரியாதவன். அவனைப் பின்பற்றியோரும் அப்படியே. 'எழுதுவது' என்று ஒன்று இருப்பதே அவனுக்கு நெடுங்காலம் வரையில் தெரியாது. சாம்ராஜ்யத்தின் ஒரு பாகத்திலிருந்து மற்றொரு பாகத்துக்குச் செய்திகளும், உத்தரவுகளும் வாய்மொழியாகவே அனுப்பப்பட்டன. அவைகள் பெரும்பாலும் செய்யுள் வடிவத்தில் பழமொழிகளாகவும் உவமைகளாகவும் இருக்கும். வாய்மொழி மூலம் ஒரு பெரிய சாம்ராஜ்ய விவகாரங்களை நிர்வாகம் செய்வதென்பது நமக்குப் பேராச்சரியத்தைத் தருகிறது. 'எழுதும் கலை' என ஒன்று இருப்பதாகச் செங்கிஸ் அறிந்தவுடன் அவன் அது மிகவும் உபயோகமாயிருக்கும் என்று உடனே புரிந்துகொண்டதோடு, அதைக் கற்குமாறு தன் பிள்ளைகளுக்கும் உயர்ந்த உத்தியோகஸ்தர்களுக்கும் கட்டளையிட்டான். மங்கோலியரின் பழைய சம்பிரதாய தருமத்தையும், தான் மொழிந்துள்ள வசனங்களையும் எழுத்து வடிவத்தில் கொணரவேண்டுமென்றும் அவன் ஆக்ஞாபித்தான். இந்தப் பழைய சம்பிரதாய தருமம் என்பது, 'என்றும் மாறாத தருமம்' என்று கருதப்பட்டது. யாரும் அதை மீற முடியாது. சக்கர

வர்த்திகூட அதற்கு உட்பட்டவரே. ஆனால், இந்த 'என்றும் மாறாத தரும' சாஸ்திரம் இப்போது காணப் படவில்லை. தற்காலத்திய மங்கோலியருக்கு அதைப் பற்றிய ஞாபகமே இல்லை; பரம்பரை அனுஷ்டானத் திலும் அவர்களிடையே அது காணப்படவில்லை.

ஒவ்வொரு தேசத்திலும், ஒவ்வொரு மதத்திலும் இந்தப் பழைய சம்பிரதாய தருமம் உண்டு. அது எழுதி யும் வைக்கப்பட் டிருக்கிறது. அது எக்காலத்தும் மாறாது நிலைத்திருக்கும் ஒன்று என்று அவரவர்கள் எண்ணிக் கொண்டிருக்கிறார்கள். இது 'அருளிச் செயல்' என்றும் கருதப்படுகிறது; அதாவது, 'கடவுளால் திருவாய் மலர்ந் தருளப்பட்டது' என்று பொருள். கடவுளால் திருவாய் மலர்ந்தருளப்பட்டது மாறக்கூடியதாகவோ, இன்று இருந்து நாளை இல்லாததாகவோ இருக்க முடியாதல்லவா? ஆனால், தருமம் அல்லது விதிகள் என்பன அவ்வக்கால நிலைமைகளுக்குப் பொருந்த வகுக்கப்படுவனவேயாகும். ஜனங்களின் நிலைமை சீர்திருந்துவதற்கு அவை துணைபுரிய வேண்டும் என்னும் நோக்கத்துடனும் அவை வகுக்கப் படுகின்றன. அந்நிலைமைகள் மாறுதல் அடையும்போது பழைய விதிகள் புதிய நிலைமைகளுக்கு எப்படிப் பொருந்தும்? மாறும் நிலைமைகளுக்கு ஏற்ப அவைகளும் மாற வேண்டியதுதானே? இல்லாவிட்டால், நமக்குத் துணைபுரியத் தோன்றிய விதிகள் இரும்பு விலங்குகளாக மாறி நமக்குத் தீங்கு புரிகின்றன. உலகமெல்லாம் முன் னேக்கிச் செல்லும்போது அவை நமது முற்போக்கைத் தடுத்து நம்மைப் பின்னே நிறுத்தி விடுகின்றன. எந்த விதியும் என்றும் மாறாத விதியாக இருத்தல் இயலாது. அது அறிவை அடிப்படையாகக்கொண் டிருக்கவேண்டும்; அறிவு வளர வளர அதுவும் கூட வளர வேண்டும்.

செங்கிஸ்கானைப்பற்றி அவசியத்துக்கு அதிகமாகவே பேசிவிட்டேன் என்று நினைக்கிறேன். அம்மனிதன் என்னை அவ்வளவு தூரம் மயக்கியிருக்கிறான். அவனோ துஷ்டன், குரூர சித்தன், பலாத்காரத்தில் நம்பிக்கை உள்ளவன், ஒரு நாடோடி வகுப்பின் 'நிலமானியத்' தலைவன். நானோ சாது, தயாள சித்தன், அஹிம்சையில் நம்பிக்கை உள்ளவன், நகரவாசி, 'நிலமானிய' வாசனையுள்ள எதையும் விஷமென வெறுப்பவன். இவ்வாறு அவனும் நானும் முற்றிலும் மாறுபட்டிருக்கிறோம். ஆயினும் அவன் என் உள்ளத்தைக் கொள்ளை கொண்டது பெரிய விந்தையல்லவா?

# 68

# மங்கோலியர் உலகத்தைக் கட்டி ஆளுகிறார்கள்

ஜூன் 26, 1932.

செங்கிஸ்கான் மாண்டதும் அவன் மகன் ஒகதாய் மகாகான் ஆனான். செங்கிஸ்கானோடும், மற்ற மங்கோலியரோடும் ஒப்பிட்டுப் பார்க்கும்போது அவன் அமைதியை நாடுவோனாகவும், இரக்கமுள்ளவனாகவும் இருந்தான். "நமது தலைவனான செங்கிஸ் மிகுந்த உழைப்பின்பேரில் நமது சாம்ராஜ்ய வீட்டைக் கட்டினான். இனி, நமது ஜனங்களின் கஷ்டங்களைப் போக்கி அவர்களுக்கு அமைதியையும், சுக சௌகரியங்களையும் அளிக்க வேண்டும்" என்று அவன் அடிக்கடி சொல்வானாம். அவன், ஒரு நிலமானியத் தலைவனுடைய மனோபாவத்துடன், தன் இனத்தவரைப் பற்றியே எண்ணுவதைக் கவனி.

ஆயினும், மங்கோலியரின் ஜெயகாலம் இன்னும் முடிவு பெறவில்லை. அவர்களுடைய சக்தி இன்னும் பொங்கி வழிந்துகொண் டிருந்தது. சாபுதாய் என்னும் பெரிய சேனாதிபதியின்கீழ் அவர்கள் இரண்டாம் முறை ஐரோப்பாவின்மீது படையெடுத்துச் சென்றார்கள். ஐரோப்பிய சேனைகளும், சேனாபதிகளும் சாபுதாய்க்கு ஈடா, சோடா? அவன் முன்கூட்டியே ஒற்றர்களையும் வேவுகாரர்களையும் ஒன்னலர் நாடுகளுக்கு அனுப்பி, அவர்கள்மூலம் அங்குள்ள அரசியல், ராணுவ நிலைமைகளை நன்கு தெரிந்துகொண்டான். ரண பண்டிதனான அவனுக்கு முன்பு ஐரோப்பிய சேனாபதிகள் வெறும்

கற்றுக்குட்டிகளாகக் காட்சி அளிக்கிறார்கள். அவன் நேரே ருஷியாவுக்குள் பிரவேசித்தான்; பாக்தாதையும் செல்ஜுக் துருக்கியரையும் விட்டுவிட்டான். ஆறு வருஷம் அவன் முன்னேறிச் சென்றுகொண்டே இருந்தான். மாஸ்கோ, கீவ், போலந்து, ஹங்கேரி, கிராகோ எல்லாவற்றையும் சூறையாடி அழித்தான். 1241-இல் மத்திய ஐரோப்பாவில், கீழ் சைலீஷியாவில், லிப்னிட்ஸ் என்னுமிடத்தில் போலந்து—ஜெர்மானியச் சேனை ஒன்று அவனால் முறியடிக்கப்பட்டது. ஐரோப்பா முழுவதற்கும் முடிவு காலம் கிட்டிவிட்டது போல் தோன்றியது. மங்கோலியரைத் தடுத்து நிறுத்தவல்லார் ஒருவரும் இல்லை. 'உலகத்தின் அற்புதம்' என்று அழைக்கப்பட்ட இரண்டாவது பிரடெரிக் கூட மங்கோலியாவிலிருந்து பொங்கிவந்த இவ்வுண்மையான அற்புதத்தைக் கண்டு தன் பொலிவு குன்றிப் போயிருக்க வேண்டும். ஐரோப்பாவின் மன்னாதிமன்னர்களின் நெஞ்சமெல்லாம் மங்கோலியர்களைக் கண்டு 'திக், திக்'கென அடித்துக் கொண்டது. திடீரென்று எதிர்பாராவிதமாக அவர்களுடைய ஏக்கம் நீங்கியது.

ஓகதாய் இறந்துவிட்டான். அவனுக்குப் பின் யார் பட்டத்துக்கு வருவதென்னும் விஷயமாக ஏதோ தகராறு எழுந்தது. ஆகவே, மங்கோலியச் சேனைகள், தோல்வியுறாமலிருந்தும், கி. பி. 1242-இல் ஐரோப்பாவை விட்டுத் தங்கள் தாய்நாட்டுக்குத் திரும்ப நேரிட்டது. ஐரோப்பாவுக்கு மீண்டும் மூச்சுச் சரியாக வரத் தொடங்கியது.

இதற்கிடையில் மங்கோலியர் சீனாவில் பரவி வடக்கே ஆண்டுவந்த கினியரையும் தெற்கே ஆண்டுவந்த சூங் மன்னரையும் அடியோடு ஒழித்துவிட்டார்கள். கி. பி. 1252-இல் மங்குகான் மகாகான் ஆனான். அவன் குப்ளே என்பவனைச் சீனாவின் கவர்னராக நியமித்தான்.

காரகோரத்தில் இருந்த மங்குவின் அரசவைக்கு ஆசியாவிலிருந்தும் ஐரோப்பாவிலிருந்தும் பலர் வந்து மொய்த்தார்கள். நாடோடி முறைக்கு ஏற்ப இன்னும் மகாகான் கூடாரங்களில்தான் வாழ்ந்து வந்தான். ஆனால், அக்கூடாரங்களில் உலகையே வென்று கவர்ந்த திரவியங்களெல்லாம் குவிந்து கிடந்தன. இவ்வாறு தனலக்ஷ்மி தாண்டவமாடும் அந்த ராஜதானிக்கு வியாபாரிகள், முக்கியமாக முஸ்லீம் வியாபாரிகள், பல விலையுயர்ந்த பொருள்களுடன் வந்தார்கள். மங்கோலியர் என்ன விலையாயினும் கொடுத்து அவைகளை வாங்கினார்கள். கூடாரையெல்லாம் வென்று விளங்கிய அக்கூடாரத் திருநகரில் கணிதம், ஜோதிஷம், சிற்பம் முதலிய பல கலைப் புலவரும் வந்து குழுமினார்கள். விரிந்து அகன்ற அம்மங்கோலிய சாம்ராஜ்யமெங்கும் அமைதியும் ஒழுங்கும் நிலவின. இரண்டு கண்டங்களையும் இணைத்த வியாபார மார்க்கங்களில் பலர் போன வண்ணமாகவும் வந்த வண்ணமாகவும் இருந்தார்கள். இதனால் ஆசிய-ஐரோப்பியத் தொடர்பு இன்னும் நெருக்கமாயிற்று.

இதற்குப்பின் மதவாதியர் 'நீ முந்தி, நான் முந்தி' என்று போட்டி போட்டுக்கொண்டு காரகோர நகருக்குச் சென்றார்கள். அவர்கள், உலகத்தையே ஒரு குடை நிழலில் ஆளும் மங்கோலியரைத் தத்தம் மதங்களுக்கு மாற்ற விரும்பினார்கள். எல்லாம்வல்ல மங்கோலியரைத் தன்னுடையவர்கள் ஆக்கிக் கொள்ளக்கூடிய மதம் தானும் பிற மதங்களை வென்று எல்லாம் வல்லதாக விளங்குமல்லவா? ஆகவே, போப்பாண்டவர் ரோமாபுரியிலிருந்து தூதர்களை அனுப்பினார்; நெஸ்தோரியக் கிறிஸ்தவர்கள் வந்தார்கள்; அவ்வாறே, முஸ்லீம்களும் பௌத்தர்களும் அங்குச் சென்றார்கள். ஏதாவதொரு புதிய மதத்தைத் தழுவவேண்டுமென்று மங்கோலியர்

அவசரப்பட்டதாகத் தெரியவில்லை. அவர்கள் அதிகமான மதப்பற்றுதல் உடையவர்களும் அல்ல. ஒரு சமயம், மகாகான் கிறிஸ்தவ மதத்தில் சேர விருப்பம் உள்ளவன் போல் காட்டிக் கொண்டான். ஆனால், போப்பாண்டவர் கொண்டாடிய பாத்தியதைகளை அவனால் ஒப்புக்கொள்ள முடியவில்லை. கடைசியில், மங்கோலியர் தாங்கள் எவ்வெவ்விடத்தில் குடியேறினார்களோ அவ்வவ்விடத்து மதத்தை மேற்கொண்டார்கள். சீனாவிலும், மங்கோலியா விலும் அவர்களில் பெரும்பாலோர் பௌத்தர்கள் ஆயினர்; மத்திய ஆசியாவில் வாழ்ந்தவர்கள் முஸ்லீம்கள் ஆயினர்; ருஷியாவிலும் ஹங்கேரியிலும் இருந்த சிலர் கிறிஸ்தவர்கள் ஆகியிருக்கலாம்.

ரோமாபுரியில், 'வாடிகனி'லுள்ள (போப்பாண்டவர் இருக்கை) போப்பாண்டவர் நூல் நிலையத்தில், மகாகான் (மங்கு) போப்பாண்டவருக்கு அனுப்பிய திருமுகம் இன்னும் இருந்து வருகிறது. அது அரபு மொழியில் எழுதப்பட்டுள்ளது. ஒகதாயின் மரணத்துக்குப் பின்பு சிம்மாசனமேறிய புதிய கான் ஐரோப்பாமீது மீண்டும் படையெடுத்து வரக்கூடாதென்று எச்சரித்துப் போப் பாண்டவர் ஒரு தூதனை அவனிடம் அனுப்பியதாகத் தெரிகிறது. அதற்கு மறுமொழியாக மகாகான் அனுப்பிய திருமுகந்தான் மேலே சொல்லப்பட்டது. ஐரோப்பியர் தன்னிடம் சரியாக நடந்து கொள்ளாததால்தான் ஐரோப்பாமீது படையெடுக்க நேரிட்டது என்று அவன் அதில் கூறியிருக்கிறான்.

ஆயினும், மங்குவின் காலத்தில் மற்றுமொரு முறை வெற்றி அலை பொங்கி எழுந்தது; பகைவர் ஊர் படு காடாயிற்று. மங்குவின் சகோதரன் ஹுலகு பார சீகத்தில் கவர்னராயிருந்தான். பாக்தாதை ஆண்ட கலீபா செய்த ஏதோ ஒரு காரியம் அவனுக்கு எரிச்சல்

மூட்டியது. உடனே அவன் கலீபாவுக்கு ஒரு செய்தி அனுப்பினான். தம் வாக்குறுதிகளைக் காப்பாற்றாததற்காகக் கலீபாவைக் கடிந்தும், இனிமேலாவது ஒழுங்காக நடந்து கொள்ளாவிட்டால் அவர் தம் சாம்ராஜ்யத்தை இழக்க நேரிடுமென்றும் அவன் அதில் எச்சரித்திருந்தான். மந்த மதி படைத்த கலீபா, முன்னே பிறருக்கு நேர்ந்ததையும் உணராமல், அவனுடைய எரிச்சலை இன்னும் அதிகமாக்கும் மறுமொழி ஒன்றை அனுப்பி வைத்தார். மங்கோலியத் தூதர்கள் பாக்தாதில் ஒரு ஜனக் கூட்டத்தால் அவமதிக்கப்பட்டார்கள். ஹூலகு இதைக் கேள்விப்பட்டான். மானத்தில் திருஷ்டியுள்ள அவனுடைய மங்கோலிய ரத்தம் கொதித்தது; அவ்வளவுதான், பாக்தாதின்மீது படையெடுத்துச் சென்றான்; நாற்பது நாள் முற்றுகைக்குப் பிறகு அதைக் கைப்பற்றினான். அன்றே, 'அரேபிய இரவு'களில் நாம் காணும் கந்தருவ நகரமும், அதன் ஐந்நூறு வருஷ சாம்ராஜ்ய சம்பத்தும் முற்றுப்பெற்றன. கலீபாவும், அவருடைய பிள்ளைகளும், அவருடைய உற்றார் உறவினரும் கொல்லப்பட்டார்கள். வாரக்கணக்கில் எங்கும் கொலை, கொலை, கூற்றுவனும் கூசி நடுங்கும் கொலை. பதினைந்து லட்சம் ஜனங்கள் எமன்பதி சேர்ந்தனர். டைகிரிஸ் நதியில் தண்ணீர் ஓடவில்லை; ரத்தமே பிரவகித்தது. கலைச் செல்வங்கள், இலக்கியக் கருவூலங்கள், நூல் நிலையங்கள் யாவும் அழிந்தன. மத்திய ஆசியாவை ஆயிரமாயிரம் ஆண்டுகளாக வளம்படுத்திவந்த பழைய நீர்ப்பாசன வசதிகளெல்லாம் அழிக்கப்பட்டன. பாக்தாது முற்றிலும் பாழ்பட்டது.

அலெப்போ, எடெஸ்ஸா முதலிய வேறு பல நகரங்களுக்கும் பாக்தாதுக்கு நேர்ந்த கதியே நேர்ந்தது. மேற்கு ஆசியாவின்மீது இரவின் நிழல் படர்ந்தது. 'கல்வி

கேள்விகளுக்கும் நற்குண நல்லொழுக்கங்களுக்கும் பஞ்சம் வந்துவிட்டது' என்று அக்காலத்தில் வாழ்ந்த சரித்திராசிரியன் ஒருவன் அக்காலத்தை வர்ணிக்கிறான். பாலஸ்தீனத்துக்கு அனுப்பப்பட்ட மங்கோலியச் சேனை ஒன்று எகிப்து சுல்தான் பைபர்ஸ் என்பவனால் தோற்கடிக்கப்பட்டது. இச்சுல்தான் "பந்தூக்தார்" என்று அழைக்கப்படுகிறான். (பந்தூக் என்றால் துப்பாக்கி என்று பொருள்) அவனிடம் துப்பாக்கி தாங்கிய படை ஒன்று இருந்ததே அதற்குக் காரணம். நாம் இப்போது துப்பாக்கிக் காலத்துக்கு வருகிறோம். சீனருக்கு வெகு நாளாகவே துப்பாக்கி மருந்து தெரிந்திருந்தது. அதன் ரகசியத்தை மங்கோலியர் சீனரிடமிருந்து அறிந்திருக்கலாம். ஒருவேளை அவர்களுடைய வெற்றிகளுக்குத் துப்பாக்கிகள் உதவியாயிருந்திருக்கலாம். மங்கோலியர் மூலமாகத்தான் ஐரோப்பாவில் துப்பாக்கிகள் உபயோகத்துக்கு வந்தன.

கி.பி. 1258-இல் பாக்தாது அழிந்தவுடன் அப்பாசீது சாம்ராஜ்யத்தில் கொஞ்ச நஞ்சம் எஞ்சியிருந்ததும் அழிந்தொழிந்தது. மேற்கு ஆசியாவில், தனியான அரேபிய நாகரிகத்தின் முடிவும் இதுவே யாகும். நெடுந்தொலைவில் தென் ஸ்பெயினில், கிரானடாவில் அரேபிய நாகரிகத்தின் சுடர் அணையாது பிரகாசித்து வந்தது. 200 ஆண்டுகளுக்குப் பிறகு அதுவும் அணைந்துவிட்டது. அரேபியாவின் பிரதானமும் விரைவில் குறைந்து விட்டது. அந்நாளிலிருந்து இது வரையில் அந்நாட்டு மக்கள் யாதொரு பெருமையான காரியமும் புரியவில்லை. பிற்காலத்தில் உதுமானிய சாம்ராஜ்யத்தின் ஒரு பகுதியாக அந்நாடு இருந்தது. 1914-18 மகா யுத்த சமயத்தில் துருக்கியருக்கு விரோதமாக அரேபியாவில் ஒரு கலகம் நடந்தது. அதைத்

தூண்டி விட்டவர்கள் ஆங்கிலேயர்கள். அதிலிருந்து அரேபியா ஒருவாறு சுதந்தரமாகவே இருந்து வருகிறது.

இரண்டு வருஷங்கள் வரையில் கலீபாவே இல்லை. பிறகு எகிப்து சுல்தான் பைபர்ஸ் கடைசி அப்பாசீது கலீபாவின் உறவினன் ஒருவனைக் கலீபாவாக நியமித்தான். ஆனால், அந்தக் கலீபா வெறும் மதத் தலைமை மட்டும் பூண்டிருந்தார்; அவருக்கு யாதொரு அரசியல் அதிகாரமும் இல்லை. 300 வருஷங்களுக்குப் பிறகு கான்ஸ்டாண்டிநோபிளில் ஆண்டு வந்த துருக்கி சுல்தான் 'கலீபா' பட்டத்தை அப்பரம்பரையில் கடைசியாக வந்தவரிடமிருந்து பெற்றுக் கொண்டார். அக்காலந் தொட்டு துருக்கி சுல்தான்களே கலீபாக்களாகவும் இருந்து வந்தனர். துருக்கியில் தோன்றிய முஸ்தபா கமால் பாஷா சில வருஷங்களுக்கு முன்புதான் சுல்தான், கலீபா ஆகிய இரு பதவிகளுக்கும் முற்றுப்புள்ளி வைத்தார்.

சொல்லிவந்த கதையை விடுத்து வேறு விஷயம் பேசி விட்டேன். அதற்கு மீண்டும் திரும்புவோம். மகாகான் மங்கு 1239-இல் மரணம் அடைந்தான். அவன் சாகுமுன் திபெத்தையும் ஜெயித்துத் தன் சாம்ராஜ்யத்தில் சேர்த்துக் கொண்டான். சீனாவின் கவர்னராக இருந்த குப்ளே கான் இப்போது மகாகான் ஆனான். குப்ளேகான் சீனாவில் நீண்ட காலத்தைச் செலவழித்தவனாகையால் அந்நாடு அவனுக்கு மிகவும் பிடித்துப் போய் விட்டது. ஆகவே, அவன் தலைநகரைக் காரகோரத்திலிருந்து பீகிங்குக்கு மாற்றினான். அவன் அதன் பெயரைக் "கான் பாலிக்" (கான் நகரம்) என்று மாற்றி வைத்தான். அவன் சீன விவகாரங்களிலேயே பெரிதும் ஈடுபட் டிருந்தபடியால் சாம்ராஜ்ய விவகாரங்களை ஊன்றிக் கவனிக்காது விட்டு விட்டான். அதனால், மங்கோலிய கவர்னர்கள் சிறிது சிறிதாகச் சுதந்தரம் பெற்று வந்தார்கள்.

சீன வெற்றியை முற்றுறச் செய்தவன் குப்ளேகான். ஆனால் குப்ளேயின் போர் முறைக்கும் அவனுடைய முன்னோரின் போர் முறைக்கும் பெரிய வேற்றுமை காணப்பட்டது. பழைய குரூரமும் நாசமும் இப்போது இல்லை. சீனா, ஏற்கெனவே அவனுடைய தீவிரத்தைக் குறைத்து அவனை நாகரிகப்படுத்தியிருந்தது. சீனரும் அவனிடம் துவேஷம் பாராட்டாது பட்சமாகவே இருந்தனர். அவர்கள் அவனைத் தங்களில் ஒருவனாகவே மதிக்கத் தலைப்பட்டனர். அவன் 'யுவான் வமிசம்' என்னும் அசல் சீன அரச வமிசம் ஒன்றையும் ஸ்தாபித்தான். அவன் டாங்கிங், அன்னாம், பர்மா ஆகிய நாடுகளை வென்று தன் சாம்ராஜ்யத்தில் சேர்த்தான். ஜப்பானையும் மலாயாசியாவையுங்கூட அவன் ஜெயிக்க முயன்றான். ஆனால் மங்கோலியருக்குக் கடற் பழக்கமும் கிடையாது, கப்பல் கட்டவும் தெரியாது. ஆகவே, அவனுடைய முயற்சி பலிக்கவில்லை.

மங்குகானின் ஆட்சிக் காலத்தில், பிரான்சை ஆண்ட ஒன்பதாவது லூயி ஒரு தூது கோஷ்டியை அவனிடம் அனுப்பிவைத்தான். ஐரோப்பியக் கிறிஸ்துவ நாடுகளும் மங்கோலியரும் சேர்ந்துகொண்டு முஸ்லீம்களை எதிர்க்க வேண்டும் என்பது லூயி தெரிவித்த யோசனை. ஏனெனில் சிலுவைப் போர்களின் காலத்தில் லூயி சிறை பிடிக்கப் பட்டுப் பல கஷ்டங்களுக்கு ஆளாகியிருக்கிறான். ஆனால், மங்கோலியர் இம்மாதிரியான உறவுகளில் அக்கறை கொள்ளவில்லை. மேலும் ஒரு ஜனக் கூட்டத்தை அவர்களுடைய மதம் காரணமாகத் தாக்குவதில் அர்த்தம் இருப்பதாகவும் அவர்களுக்குப் புலப்படவில்லை.

மேலும், ஐரோப்பாவை ஆண்ட அற்ப அரசர்களோடும் சிற்றரசர்களோடும் உறவு கொள்ளும்படியாக அப்படி என்ன நிர்ப்பந்தம் அவர்களுக்கு ஏற்பட்டு விட்டது? அதுவும் யாருக்கு விரோதமாக? மேற்கு

ஐரோப்பிய நாடுகளிடத்திலோ, முஸ்லீம் நாடுகளிடத்திலோ அவர்களுக்குக் கிஞ்சித்தும் அச்ச மில்லை. மேற்கு ஐரோப்பா அவர்களிடமிருந்து தப்பிப் பிழைத்தது குருட்டு யோகமே தவிர வேறில்லை. செல்ஜுக் துருக்கியர் அவர்களுக்குத் தலைவணங்கிக் கப்பம் கட்டி வந்தார்கள். எகிப்திய சுல்தான் ஒருவனிடந்தான் ஒரு தடவை ஒரு மங்கோலியப் படை தோல்வியுற்றது. ஆனால், அவர்கள் விரும்பியிருந்தால் அவனையும் பணிய வைத்திருக்கக்கூடும் என்பதில் சிறிதும் ஐயமில்லை. ஆசியாவில் ஆரம்பித்து ஐரோப்பா வரையிலும் தனிப் பெரிய மங்கோலிய சாம்ராஜ்யம் பரந்து கிடந்தது. சரித்திரத்திலேயே மங்கோலியர் அடைந்த வெற்றிகளுக்குச் சமமான வெற்றிகளை நாம் வேறெங்கும் காணக் கூடவில்லை; அவர்களுடையதைப் போன்ற சாம்ராஜ்யத்தையும் நம்மால் காண முடியவில்லை. அவர்கள் அக்காலத்தில் உலகத்திற்கே அதிபர்களாகத் தோன்றியிருக்க வேண்டும். இந்தியா அவர்களுடைய ஆட்சிக்கு அப்பாற்பட்டிருந்ததென்பது வாஸ்தவம். ஆனால், அதற்குக் காரணம் அவர்கள் அந்தப் பக்கம் போகாததுதான். அளவில் ஏறக்குறைய இந்தியாவை ஒத்த மேற்கு ஐரோப்பாவும் அவர்களுடைய சாம்ராஜ்யத்துக்குப் புறம்பாக இருந்தது. ஆனால், மங்கோலியரின் தயவினாலேயே அவைகள் இவ்வாறு இருந்து வந்தன என்று நாம் கொள்ளவேண்டும். அவைகளையும் விழுங்கி விடுவதென்று அவர்கள் தீர்மானித்திருந்தால் அவைகளுடைய சுதந்தர வாழ்வு அந்தக் கணத்திலேயே முற்றுப் பெற்றிருக்கும் என்பதில் எள்ளவும் ஐயமில்லை. பதின்மூன்றாவது நூற்றாண்டில் நிலைமை இவ்வாறு தான் இருந்திருக்கவேண்டும்.

ஆனால், மேலும் மேலும் ஜெயித்துக் கொண்டே போவதற்கு அவர்களுக்கு இருந்த அபரிமிதமான சக்தி

சிறிது சிறிதாகத் தேய்ந்து வருவதுபோல் தென்பட்டது. அக்காலத்தில் ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்துக்குச் செல்வதற்குக் கால் நடை, குதிரைச் சவாரி இவைகளைத் தவிர்த்து வேறு துரித சாதனங்கள் இல்லை என்பதை நீ நினைவில் வைக்க வேண்டும். மங்கோலியச் சேனை ஆசியாவில் தன்னிருப்பிடத்திலிருந்து புறப்பட்டு ஐரோப்பாவில் சாம்ராஜ்யத்தின் மேற்கு எல்லையை அடைவதென்றால் குறைந்தது ஒரு வருஷமாவது பிடிக்கும். கொள்ளைக்கு வழியில்லாதபோது, தங்கள் சொந்த சாம்ராஜ்யத்திலேயே இப்பெரிய யாத்திரைகளை மேற்கொண்டு வேற்று நாடுகளை ஜெயிக்கவேண்டும் என்னும் ஊக்கம் அவர்களுக்கு இல்லை. மேலும், பகைவரோடு எதிர்த்த போர்களிலெல்லாம் மங்கோலியக் குதிரைப்படை வீரர்களுக்கு வெற்றி கிடைத்ததோடு பகைவரிடமிருந்து கவரப்பட்ட திரவியங்களால் அவர்களுடைய பைகளும் நிறைந்து போயிருந்தன. அவர்களில் பலரும் தங்களுக்கென அடிமைகளையும் உடையவர்களாய் இருந்திருக்கலாம். ஆகவே, அவர்கள் சாந்தமடைந்து சமாதான சௌகரியங்களை நாடலானார்கள். தம்முடைய மனோபீஷ்டங்களெல்லாம் நிறைவேறப் பெற்றவர்கள் அமைதியையும் ஒழுங்கையும் ஆதரிப்பது இயல்புதானே!

விஸ்தாரமான மங்கோலிய சாம்ராஜ்யத்தைப் பரிபாலனம் செய்வது மிகவும் கஷ்டமான காரியமாய் இருந்திருக்க வேண்டும். ஆகவே, அது பிளவுபட ஆரம்பித்ததில் ஆச்சரியம் ஒன்றுமில்லை. 1292-இல் குப்ளேகான் இறந்துவிட்டான். அவனுக்குப் பின் யாரும் மகாகான் ஆக வரவில்லை. மங்கோலிய சாம்ராஜ்யம் ஐந்து பெரும் பகுதிகளாகப் பிரிவுற்றது. அவைகளாவன:—

1. சீன சாம்ராஜ்யம். இதில் மங்கோலியா, மஞ்சூரியா, திபெத்து ஆகியவை அடங்கியிருந்தன. இதுதான்

பிரதானமானது. யுவான் வமிசத்தைச் சேர்ந்த குப்ளே கானின் சந்ததியார் இதை ஆண்டுவந்தார்கள்.

2. பொன்னிறக் கூட்டத்தாரின் சாம்ராஜ்யம். மேற்குக் கோடியில் இருந்த இதில் ருஷியா, போலந்து, ஹங்கேரி ஆகியவை அடங்கியிருந்தன. அங்கு வாழ்ந்த மங்கோலியர் மேற்கண்டவாறு அழைக்கப்பட்டனர்.

3. இல்கான் சாம்ராஜ்யம். ஹுலகுவால் ஸ்தாபிக்கப்பட்டது. பாரசீகம், மெசபொடேமியா, மத்திய ஆசியாவில் ஒரு பாகம் இவைகளைக் கொண்டது. செல்ஜுக் துருக்கியர் இதற்குத் திறை செலுத்தி வந்தார்கள்.

4. ஜகதாய் சாம்ராஜ்யம். திபெத்துக்கு வடக்கே மத்திய ஆசியாவில் பெரிய துருக்கி என்று அழைக்கப்பட்ட பிரதேசத்தைக் கொண்டது.

5. சைபீரிய சாம்ராஜ்யம். மங்கோலியாவுக்கும் பொன்னிறத்தாரின் ராஜ்யத்துக்கும் இடைப்பட்ட பிரதேசத்தைக் கொண்டது.

இவ்வாறு பரந்து கிடந்த மங்கோலிய சாம்ராஜ்யம் ஐந்து பகுதிகளாகப் பிளவுபட்டாலும் ஒவ்வொரு பகுதியும் பெரிய பலம்பொருந்திய சாம்ராஜ்யமாகவே திகழ்ந்து வந்தது.

## 69

# மகாயாத்திரீகர் மார்க்கோ போலோ

ஜூன் 27, 1932.

காரகோரத் திருநகரில் பிரசித்திபெற்று விளங்கிய மகா கானின் தர்பாரைப் பற்றி நான் உனக்குச் சொன்னேன். மங்கோலியரின் விசய கீர்த்திகள் நாலு திசையிலும் பரவியிருந்தன. அதைக் கேள்வியுற்ற கலைவாணரும் தொழில் வாணரும், மதப் பிரசாரகர்களும் வியாபாரிகளும் ராஜ தர்பாருக்குப் பெருந்திரளாக வந்தார்கள். அவ்வாறு வந்தவர்களை மங்கோலியர் மிகவும் ஆதரித்து உற்சாக மூட்டினர். ஆகவே, அவர்கள் மேலும் மேலும் வர ஆரம்பித்தார்கள். மங்கோலியர் நிரம்பவும் விசித்திரமானவர்கள். சில துறைகளில் விசேஷத் திறமை காட்டிய இவர்கள் வேறுசில விஷயங்களில் குழந்தைகள் போல நடந்து கொண்டார்கள். அவர்களுடைய குரூரமும் கொடுமையும் நம்மைத் திடுக்கிடச் செய்தாலும், அதில்கூட ஒருவிதக் குழந்தைத்தனத்தையே நாம் காண்கிறோம். அத்தறுகண் மறவரிடம் காணப்பட்ட இக்குழந்தைத்தனமே நம்மை அவர்கள்பால் வசீகரிக்கிறது. சில நூற்றாண்டுகளுக்குப் பிறகு ஒரு மங்கோலியன் (இந்தியாவில் மங்கோலியர், மொகலாயர் என்று அழைக்கப்பட்டார்கள்) இந்தியாவை ஜெயித்தான். அவன் தான் பாபர். அவனுடைய தாயார் செங்கிஸ்கானின் கால்வழியில் வந்தவள். இந்தியாவை ஜெயித்த அவன், தன் தாய் நாட்டின் (மத்திய ஆசியா) மந்த மாருதத்தையும், சுகந்த புஷ்பங்களையும், நந்தவனங்

களையும் அனுபவிப்பதற்கில்லையே என்று ஏங்கினனும். காபூல் மூலாம் பழத்தையும் அவன் விரும்பிக் கரைந்ததாகத் தெரிகிறது. அவன் மிகவும் இனிமையான சுபாவம் படைத்தவன். அவன் எழுதியுள்ள வாழ்க்கைக் குறிப்புகள் அவனுடைய மனிதத்தன்மையையும், மோகன இயல்பையும் இன்னும் அதிகரித்துக் காட்டுகின்றன.

ஆகவே, மங்கோலியரால் ஆகர்ஷிக்கப்பட்ட கலை விற்பன்னர் பலரும் உலகின் நாலா பக்கங்களிலுமிருந்தும் வந்து அவர்களுடைய சபா மண்டபத்தை அலங்கரித்தார்கள். கல்வியில் தேட்டமுள்ள மங்கோலியர் அவர்களிடமிருந்து சகல கலைகளையும் கற்க முயன்றனர். அது வரையில் அவர்கள் பாஷையின் ஒலி (பேச்சு) வடிவத்தை மட்டுமே அறிந்திருந்தார்கள். அதற்கு வரி (எழுத்து) வடிவமும் உண்டென்று அறிந்தவுடன் அதன் முக்கியத்துவத்தை உணர்ந்த செங்கிஸ் கான் எவ்வாறு தன் உத்தியோகஸ்தர்களுக்கு உடனே அதைக் கற்குமாறு உத்தர விட்டான் என்று முன்பே சொல்லியிருக்கிறேன். அவர்கள் பிறர் அளிக்கக்கூடிய ஞானத்தை ஏற்றுக் கொள்ளக் கூடிய பக்குவத்தில் இருந்தார்கள். குப்ளேகான் ராஜதானியை பீகிங் நகருக்கு மாற்றி அங்கே அசல் சீன சக்கரவர்த்தியைப் போல் ஆண்டு வந்த போது வெளிதேச யாத்திரீகர்களைப் பெரிதும் விரும்பி வரவேற்ருன். நிகோலோ போலோ, மாபியோ போலோ என்னும் பெயர் பூண்ட சகோதரர்களான இரு வெனிஸ் நகர வர்த்தகர்கள் அவனுடைய சபைக்கு வந்தார்கள். அவர்கள் முதலில் வர்த்தக நிமித்தம் பொகாரா வரையில் சென்ருர்கள். அங்கே குப்ளே கானிடமிருந்து பாரசீகத்தை ஆண்ட ஹுலகுவினிடம் வந்திருந்த சில தூதர்களைக் கண்டார்கள். அத்தூதர்கள் இச்சகோதரர்களை வற்

புறுத்தித் தங்களுடன் அழைத்துச் சென்று மகாகானின் முன்பு சேர்த்தார்கள்.

குப்ளே கான் இரு சகோதரர்களையும் முகமன் கூறி வெகு பிரியமாய் வரவேற்றான். அவர்கள் அவனுக்கு ஐரோப்பாவைப் பற்றியும், கிறிஸ்தவ மதத்தைப் பற்றியும், போப்பாண்டவரைப் பற்றியும் கூறினார்கள். அவன் அவர்கள் கூறிய விவரங்களைக் கேட்டுப் பெரிதும் உவந்தான். அவனுடைய சிந்தை கிறிஸ்தவ மதத்தின்பால் சென்றது. அவன் அவர்களை 1269-இல் ஐரோப்பாவுக்குத் திருப்பி அனுப்பினான். "ஏழ் கலைகளில் வல்லவர்களும்" கிறிஸ்தவ சமய சாஸ்திரங்களில் நல்ல பாண்டித்திய முடையவர்களுமான நூறு பேரைத் தன்னிடம் அனுப்பி வைக்க வேண்டும் என்னும் செய்தியை அவன் அவர்கள் மூலம் போப்பாண்டவருக்குச் சொல்லி யனுப்பினான். போலோ சகோதரர்கள் ஐரோப்பாவுக்குத் திரும்பி வந்து பார்த்தபோது போப்பாண்டவரின் நிலைமை மிகவும் மோசமாயிருந்தது. குப்ளே கான் கேட்டது போன்ற நூறு சமய பண்டிதர்களும் கிடைக்க வில்லை. இரண்டு ஆண்டுகளுக்குப் பிறகு அவர்கள் இரண்டு கிறிஸ்தவத் துறவிகளைத் தங்களுடன் அழைத்துக் கொண்டு சீனாவுக்குத் திரும்பினார்கள். இந்தத் தடவை அவர்களுடன் நிகோலோவின் மகன் மார்க்கோவும் பயணப்பட்டுச் சென்றதுதான் நமக்கு மிகவும் விசேஷம் வாய்ந்ததாகும்.

போலோக்கள் மூவரும் தங்களுடைய நீண்ட, பெரிய, இன்னல் நிறைந்த யாத்திரையைத் தொடங்கினார்கள். ஆசியா முழுவதையும் தரை மார்க்கமாகக் கடந்து சென்றார்கள். ஆகா, எப்பேர்ப்பட்ட யாத்திரை! இப்பொழுதுகூடப் போலோக்கள் சென்ற வழியில் செல்வதாயின் ஏறக்குறைய ஒரு வருஷம் செல்லும். பாதி தூரம் அவர்கள் யுவான் - சுவாங் சென்ற பழைய வழியி

லேயே சென்றூர்கள். பாலஸ்தீனம் வழியாக அர்மீனியாவுக்கும், அங்கிருந்து மெசபொடேமியாவுக்கும், பாரசீக வளைகுடாவுக்கும் சென்றூர்கள். அந்நெய்தல் நிலத்தில் அவர்கள் இந்திய வர்த்தகர்கள் சிலரைச் சந்தித்தார்கள். அங்கிருந்து பாரசீகத்தைக் கடந்து பால்க் நகரை அடைந்தார்கள். அதற்கும் காஷ்கருக்கும் இடையே மலைகளும் காடுகளும் மண்டிக்கிடந்தன. ஆகவே, அவர்கள் அக் குறிஞ்சியையும் முல்லையையும் கடந்து காஷ்கருக்கும் பிறகு கோடானுக்கும் சென்றூர்கள். அங்கிருந்து மீண்டும் புறப்பட்டுச் சென்று லாப்-நார் என்னும் ஏரியைக் கண்டார்கள். அது ஒரு விசித்திரமான ஏரி. இடம் விட்டு இடம் மாறுவது. அதனுல் அதற்கு 'இயங்கு பொய்கை' என்று பேர் வழங்குகிறது. இந்த ஏரிக்கு அப்பால் மீண்டும், நீண்ட பாலைவனம். அக் கொடிய பாலை நெறியை அரிதில் கடந்து சென்ற அவர்கள் சீனுவின் பசிய வயல் வெளிகளையும் பீகிங் நகரையும் கண்ணுற்றூர்கள். அழகிய அம்மருதநிலக் காட்சி அவர்கள் கண்களைக் குளிர்வித்து உள்ளத்தை மகிழ்வித்திருக்குமல்லவா? அவர்களிடம் மிகவும் சிரேஷ்டமான பிரயாண அநுமதிச் சீட்டு ஒன்று இருந்தது. அது பொன் தகட்டில் பொறிக்கப்பட்டு மகா கானுலேயே அவர்களுக்குக் கொடுக்கப்பட்டிருந்தது. அவர்களுடைய பெரும் பிரயாணமும் முடிந்தது! அதை நினைக்கும்போதே நமக்கு மயிர்க்கூச்செறிகிறதல்லவா?

புராதன ரோமாபுரியின் காலத்தில் இதுதான் சீனுவுக்கும் சிரியாவுக்கும் இடையே உபயோகிக்கப்பட்டுவந்த வியாபார மார்க்கம். சில நாளைக்கு முன்பு, ஸ்வீடன்தேசத்து யாத்திரீகரும், தேசாந்தரம் தேடுவோருமாகிய ஸ்வென்ஹெடின் என்பாருடைய கோபிபாலைவன யாத்திரையைப்பற்றிப் படித்தேன். அவர் பீகிங் நகரி

லிருந்து கிளம்பி, மேற்கே பாலைவனத்தைக் கடந்து, லாப்-நார் ஏரியோரமாகச் சென்று கோடானைச் சேர்ந்து, அதற்கு அப்பாலும் போனார் என்று கூறப்பட்டிருந்தது. அவரிடம் தற்காலச் சாதனங்கள், வசதிகள் யாவும் இருந்தன. அப்படியிருந்தும் அவருடைய பிரயாணத்தில் துன்பமும் தொந்தரவும் நேரிட்டனவாம். இந்தக் காலத்திலேயே இப்படியென்றால் 1300 ஆண்டுகளுக்குமுன் யுவான் சுவாங்கும், 700 ஆண்டுகளுக்குமுன் போலோக்களும் அவ்வழியில் செய்த யாத்திரைகள் எப்படி இருந்திருக்க வேண்டுமென்று எண்ணிப்பார்! ஸ்வென்ஹெடின் ஆச்சரியமான உண்மை ஒன்றைக் கண்டுபிடித்தார். லாப்-நார் ஏரி தன் இடத்தை மாற்றிக்கொண்டு வருகிறது என்பதை அவர் கண்டார். டாரின் என்னும் நதி லாப்-நார் ஏரியில் வந்து விழுகிறது. நாலாம் நூற்றாண்டில் அந்நதியின் கதி மாறியது. அதனால், அது பழைமையாக ஓடிய இடத்தில் பாலை மணல் வந்து நிரம்பிவிட்டது. அங்கிருந்த பழைய நகரமாகிய லூலானுக்கும் வெளி உலகத்துக்கும் தொடர்பு அற்றுப் போயிற்று. அங்கு வாழ்ந்த ஜனங்கள் அதைவிடுத்து வேறு இடங்களுக்குச் சென்றுவிட்டார்கள். அதனால் நகரம் அழிந்தது. நதியின் போக்கு மாறவே ஏரியும் இடம் மாறியது. பழைய வியாபார மார்க்கமும் அவ்வாறே மாறியது. சில வருஷங்களுக்கு முன்புதான், டாரின் நதி மீண்டும் தன் போக்கை மாற்றிக்கொண்டு பழைய இடத்திலேயே ஓடத் தலைப்பட்டது. அதைப் பின்பற்றி ஏரியும் சென்றது. மீண்டும் அந்நதி பாழ்பட்டுக் கிடக்கும் பழைய லூலான் நகருக்கருகில் பிரவகிக்கிறது. அதனால், 1600 ஆண்டுகளாக உபயோகிக்கப்படாத அப் பழைய மார்க்கம் மறுபடி உபயோகத்துக்கு வந்தாலும் வரலாம். ஆனால், முன்பு ஒட்டகங்கள் சென்ற இடத்தில் இப்போது மோட்டார்

கார்கள் செல்லும். மேற்கூறிய காரணத்தால்தான் லாப்-நார் ஏரி, 'இயங்கு பொய்கை' என்று அழைக்கப் படுகிறது. டாரின் ஆறும் லாப்-நார் ஏரியும் இடம்விட்டு இடம்பெயரும் செய்தியை ஏன் சொல்லவந்தேனென்றால், நீரோட்டங்களின் மாறுபாடு எவ்வாறு பெரிய பிரதேசங் களை மாற்றி, அதனால் சரித்திரத்தின் போக்கையும்கூட மாற்றிவிடுகிறது என்று காட்டுவதற்காகத்தான். பண் டைக்காலத்தில் மத்திய ஆசியாவில் ஜனநெருக்கம் அதிகமா யிருந்ததென்று கண்டோம். அங்கிருந்த ஜனங்கள் அலை அலையாகக் கிளம்பி மேற்கிலும் தெற் கிலும் சென்று அங்குள்ள நாடுகளை வென்றார்கள். இன்றோ, அது பெரும்பாலும் ஜனசூனியமான வனாந்தர மாகக் கிடக்கிறது. அகண்ட மத்திய ஆசியா முழுமைக்கும் அங்கொன்றும் இங்கொன்றுமாகச் சொற்ப ஜனத் தொகையுள்ள சில பட்டணங்களே காணப்படுகின்றன. முன்காலத்தில் ஒருவேளை அங்குத் தண்ணீர் வசதி அதிகமாக இருந்த காரணத்தால் ஜனத்தொகையும் அதிகமாக இருந்திருக்கலாம். சீதோஷ்ண ஸ்திதி வரவர அதிகமாக வறட்சியுற்றுத் தண்ணீரும் அற்றுப்போக ஆரம்பித்ததால் ஜனத்தொகையும் வரவரக் குறைந்து தேய்ந்துவிட்டது போலும்.

இந்த நீண்ட பிரயாணங்களில் ஓர் அனுகூலம் இருந்தது. புதிய பாஷைகளைக் கற்பதற்கு நிறைய அவகாசம் கிடைத்தது. மூன்று போலோக்களும் வெனிஸ் நகரிலிருந்து பீகிங் நகரை அடைய மூன்றரை வருஷம் சென்றது. இந்தக் காலத்தில் மார்க்கோ மங்கோலிய பாஷையை நன்கு கற்றுத் தேர்ந்துவிட்டான். ஒருவேளை அவன் சீன பாஷையையும் கற்றிருக்கலாம். மார்க்கோ மகாகானுக்கு ரொம்பவும் பிரியமானவனாய்ப் போய் விட்டான். ஏழு வருஷம் அவன் கானுக்குத் தொழும்பு

பூண்டு உழைத்துவந்தான். மகாகான் அவன் தொண்டுக்கு மனமுவந்து அவனைக் கவர்னராக்கிச் சீனுவின் பல பாகங்களுக்கும் அரசாங்க அலுவல்களின் நிமித்தம் அனுப்பிவைத்தான். மார்க்கோவுக்கும் அவன் தந்தைக்கும் வீட்டு ஞாபகம் என்னவோ அதிகமாகத்தான் இருந்தது. அவர்கள் வெனிசுக்குத் திரும்பிச் செல்லப் பெரிதும் விரும்பினூர்கள். ஆனுல், அதற்கு மகாகானின் அனுமதி எளிதில் கிடைப்பதாயில்லை. கடைசியில், திரும்புவதற்கு ஒரு சந்தர்ப்பம் வாய்த்தது. குப்ளேகானின் ஒன்றுவிட்ட சகோதரன், இல்கான் சாம்ராஜ்யாதிபதி தன் மனைவியை இழந்துவிட்டான். அவன் மீண்டும் மணம் செய்து கொள்ள விரும்பினுன். ஆனுல், அவனுடைய முதல் மனைவி அவனிடம் ஒரு வாக்குறுதி வாங்கியிருந்தாள் அதாவது, அவன் தன் ஜாதியை விட்டு வேறு ஜாதியில் கலியாணம் செய்துகொள்ளக் கூடாது என்று. ஆகவே, ஆர்கன் (அதுதான் அம்மன்னனின் பெயர்) சில தூதர்களைக் குப்ளேகானிடம் அனுப்பித் தனக்குத் தகுதியான ஒரு ஸ்திரிரத்தினத்தை அனுப்பிவைக்கும்படி கேட்டுக் கொண்டான்.

அவ்வாறே குப்ளேகான் ஒரு நல்ல ராஜகன்னிகையைத் தேர்ந்தெடுத்துத் தகுந்த காவலோடும் பரிவாரத்தோடும் அனுப்பிவைத்தான். மூன்று போலோக்களும் நல்ல யாத்திரானுபவம் உடையவர்களாகையால் அவர்களும் அப்பரிவாரத்தில் சேர்க்கப்பட்டார்கள். அவர்கள் தென் சீனுவிலிருந்து புறப்பட்டுக் கடல் மார்க்கமாகச் சுமத்திராவுக்குச் சென்று அங்குச் சிலகாலம் தங்கினூர்கள். சுமத்திராவில் அப்போது ஸ்ரீவிஜய பௌத்த சாம்ராஜ்யம் நடைபெற்றுவந்தது. ஆனுல், அப்போது அது சுருங்கி வந்துகொண் டிருந்தது. சுமத்திராவிலிருந்து அவர்கள் தென் இந்தியாவுக்குச் சென்றூர்கள். தென்

பாண்டிய நாட்டில் அப்போது சிறப்புற்று விளங்கிய காயல் துறைமுகத்தை மார்க்கோ சென்று கண்டதைப் பற்றி நான் முன்பே கூறியிருக்கிறேன். மணப்பெண்ணும், மார்க்கோவும், மற்றவர்களும் இந்தியாவில் சிறிதுகாலம் அதிகமாகவே தங்கிவிட்டார்கள். நிதானமாக, இரண்டு வருஷம் கழித்து அவர்கள் பாரசிகத்தை அடைந்தார்கள். ஆனால், மணமகள் போய்ச் சேருவதற்குள் அவளுக்காகக் காத்திருந்த மாப்பிள்ளை காலமாய்விட்டான். அவன் காலமாய்விட்டது அவ்வளவு வருந்தத்தக்க விஷயமில்லை என்றும் சொல்லலாம். அந்த அரசகுமாரி தன் வயதுக்கு ஏற்றவனும், வாலிபனுமாகிய இறந்துபோன அரசனின் மகனை மணவாளனாக அடைந்தாள்.

அரச குமாரியைப் பாரசிகத்தில் கொண்டுசேர்த்த போலோக்கள் கான்ஸ்டாண்டிநோபிள் வழியாகத் தாய்நாடு சென்றார்கள். கி. பி. 1295-இல், தாங்கள் புறப்பட்டு இருபத்துநான்கு வருஷங்களுக்குப் பிறகு, அவர்கள் வெனிஸ் நகரை அடைந்தார்கள். ஒருவராவது அவர்களை அடையாளம் கண்டுகொள்ளவில்லை. தங்களை அறிமுகம் செய்யும்பொருட்டு அவர்கள் தங்களுடைய பழைய நண்பர்களுக்கும் பிறருக்கும் ஒரு விருந்தளித்தார்களாம். அந்த விருந்தின் நடுவில் அவர்கள் தங்களுடைய அழுக்கடைந்த ஒட்டுப்போட்ட உடைகளைக் கிழிக்கவும் அவற்றிலிருந்து வைரமும் மாணிக்கமும் மரகதமும் வேறு பல விலையுயர்ந்த அணிகலன்களும் கலகலவென்று கொட்டி விருந்தினரைப் பேராச்சரியத்தில் ஆழ்த்தினவாம். ஆயினும், போலோக்களின் கதைகளையும் அவர்களுடைய சீன, இந்திய அனுபவங்களையும் பலர் நம்பவில்லை. போலோக்கள், விஷயங்களை மிகைப்படுத்திக் கூறுவதாகவே அவர்கள் எண்ணினார்கள். தங்களுடைய சின்ன வெனிஸ் குடியரசுக்கு வெளியில் வேறொன்றும்

அறியாத கிணற்றுத் தவளைகளான அவர்களால் சீனு முதலிய ஆசிய நாடுகளின் விஸ்தீரணத்தையும், செல்வ மிகுதியையும் கற்பனைசெய்தும் பார்க்க முடியவில்லை.

மூன்று வருஷங்களுக்குப் பிறகு, 1295-இல், வெனிசுக்கும் ஜினோவாவுக்கும் போர் மூண்டது. இரண்டும் கடலரசுகள்; இரண்டுக்கும் போட்டி உண்டு. இரண்டுக்கும் நடந்த பெரிய கடற்போரில் வெனிஸ் தோற்று விட்டது. அதைச்சேர்ந்த பல்லாயிரக்கணக்கான பேர்கள் சிறைப்படுத்தப் பட்டார்கள். அவர்களில் மார்க்கோ-போலோவும் ஒருவர். அவர் ஜினோவாவில் சிறையில் உட்கார்ந்துகொண்டு தம்முடைய யாத்திரை வரலாறுகளை எழுதினுர். அல்லது அவர் சொல்லிக்கொண்டேவர மற்றவர்கள் எழுதினுர்கள் என்று சொல்வது பொருத்தமாயிருக்கும். இவ்வாறு மார்க்கோபோலோவின் யாத்திரை நூல் சிறையில் பிறந்தது. நல்லகாரியம் செய்வதற்குச் சிறை எவ்வளவு ஏற்ற இடம் பார்த்தாயா?

அந்த நூலில் மார்க்கோ சிறப்பாகச் சீனுவையும் அங்கு அவர் செய்த பிரயாணங்களையும் வர்ணிக்கிருர். சையாம், ஜாவா, சுமத்திரா, இலங்கை, தென் இந்தியா ஆகிய நாடுகளைப்பற்றியும் அவர் ஓரளவு கூறுகிருர். சீனுவைப்பற்றி அவர் கூறுவதாவது: பெரிய சீனத் துறைமுகங்கள் பலவற்றில் கீழ்த்தேசக் கப்பல்கள் நிறைந்து காணப்படுகின்றன. அவைகளில் சில 300 அல்லது 400 பேர்களை ஏற்றிச் செல்லக்கூடிய அவ்வளவு பெரியவை. பல நகரங்களையும் பட்டணங்களையும் உடைய சீனதேசம் பல்வளமும் பெற்றுப் பொலிகிறது. பட்டு பீதாம்பரங்களும், 'டபேட்டா' வகைகளும் நெய்யப் படுகின்றன. விளை வயல்களும், திராட்சை முதலிய தோட்டங்களும் நாட்டை அலங்கரிக்கின்றன. அரசாங்க ரஸ்தாக்கள் நெடுகிலும் பிரயாணிகள் வசதியாகத் தங்கு

வதற்குரிய சத்திரம் சாவடிகள் இருக்கின்றன. மாற்றுக் குதிரைகள் மூலம் சாம்ராஜ்யத் தபால் அனுப்பப்பட்டு வந்தது. இது 24 மணி நேரத்தில் 400 மைல் வீதம் சென்றதாம். இதை நல்ல வேகம் என்றே சொல்ல வேண்டும். விறகுக்குப் பதிலாகச் சீனர்கள் பூமியி லிருந்து தோண்டி எடுக்கப்பட்ட 'கறுப்புக் கற்களை' உபயோகித்தார்களாம். இதிலிருந்து, அவர்கள் நிலக்கரிச் சுரங்கங்களில் வேலைசெய்து நிலக்கரியை உபயோகித் தார்கள் என்று ஏற்படுகிறது. குப்ளேகான் காகித நாணயம் வழங்கினான். அதாவது, தற்காலத்தில் இருப் பதுபோலவே கரன்சி நோட்டுகள் அச்சிடப்பட்டு அவை களுக்கு ஈடான பொன் கேட்கும்போது கொடுக்கப்படும் என்று உறுதி கூறப்பட்டது. உறுதி கூறுவோனுடைய நல்லெண்ணத்திலும் சக்தியிலும் நம்பிக்கை வைப்பதை அடிப்படையாகக் கொண்ட தற்கால நாணய முறை அக்காலத்திலேயே அமுலுக்குக் கொண்டுவரப்பட்டது என்பதைக் கேட்க நமக்கு ஆச்சரியம் உண்டாகிறது. பிரெஸ்டர்ஜான் என்பவனுடைய ஆட்சியில் ஒரு சிறு கிறிஸ்தவக் குடியேற்றமும் சீனாவில் இருந்தது என்று மார்க்கோ கூறுகிறார். ஒருவேளை இவர்கள் மங்கோலி யாவில் வாழ்ந்த பழைய நெஸ்தோரியக் கிறிஸ்தவர்களாக இருக்கலாம். இச் செய்தியைக் கேட்ட ஐரோப்பியர் ஆச்சரியமும் பரபரப்பும் அடைந்தார்கள்.

ஜப்பான், பர்மா, இந்தியா ஆகிய நாடுகளைப்பற்றியும் மார்க்கோ தாம் கண்டவற்றையும் கேட்டவற்றையும் எழுதியிருக்கிறார். அவருடைய யாத்திரை வரலாறு அன்று போலவே இன்றும் அற்புதமானதாய் இருக் கிறது. தங்களுடைய சின்னஞ்சிறு நாடுகளில் தங்க ளுடைய சின்னஞ்சிறு பொறாமை, குரோதங்களையே பெரிதாக எண்ணி வாழ்ந்துவந்த ஐரோப்பிய மக்களின்

கண்களை அது திறந்தது. அவர்களுக்குப் புறம்பான பெரிய உலகின் பெருமைகளையும், தன தானிய சம்பத்துக் களையும், அற்புதங்களையும் அது அவர்களுக்கு உணர்த் திற்று. அவர்களுடைய கற்பனையையும், தீரத்தையும், பேராசையையும் அது தூண்டிவிட்டது. அதனால் அவர்கள் சீமுத்திரத்தை அதிகமாக நாடலானார்கள். ஐரோப்பா வளரும் பருவத்தில் இருந்தது. யௌவன தசையிலிருந்த அதன் நாகரிகம் தன் பலத்தைப் பெருக்க வும், தன்னை இறுகப் பிணித்த இடைக்காலத்தின் கட்டுகளை அறுக்கவும் முயன்றுவந்தது. வாலிபன் மனிதத் தன்மையை அடையும் தறுவாயில் பெற்றிருக்கும் நிறைந்த வீரியத்தைப்போல அது பெற்றுத் திகழ்ந்தது. செல் வத்தை நாடிய ஐரோப்பியர் துணிந்து கடல்களின்மீது செல்ல ஆரம்பித்தார்கள். அது காரணமாக அவர்கள் இதற்குப் பின்னர் அமெரிக்காவுக்கும், பசிபிக் மகா சமுத்திர மார்க்கமாக சீன, ஜப்பான் நாடுகளுக்கும், நன்னம்பிக்கை முனையைச் சுற்றிக்கொண்டு இந்தியா வுக்கும் சென்றார்கள். சமுத்திரம் உலகத்தின் ராஜ மார்க்கமாக மாறவே கண்டங்களை இணைத்த வியாபார மார்க்கங்களின் பெருமை குறையத் தொடங்கியது.

மார்க்கோ போலோ சீனாவைவிட்டுப் புறப்பட்ட சிறிது காலத்திற்குள் குப்ளேகான் இறந்துவிட்டான். அவன் சீனாவில் ஸ்தாபித்த யுவான் வமிசம் அவனுடைய மரணத்துக்குப்பின் அதிக காலம் நிலைத்திருக்கவில்லை, மங்கோலியரின் ஆதிக்கம் விரைவில் குன்ற ஆரம்பித்தது. அந்நியர்களாகிய அவர்களுக்கு விரோதமாகச் சீன தேசிய ஆவேச அலை பொங்கி எழுந்தது. அறுபது ஆண்டு களுக்குள் மங்கோலியர் தென் சீனாவிலிருந்து விரட்டப் பட்டனர். சீன தேசத்தான் ஒருவன் நாங்கிங் நகரில் தன்னைச் சக்கரவர்த்தியாக ஏற்படுத்திக்கொண்டான்.

அதற்குப் பன்னிரண்டு வருஷங்களுக்குப் பிறகு யுவான் வமிசம் முடிவாக வீழ்ந்துவிட்டது. மங்கோலியர் பெரிய மதிலுக்கு அப்பால் கி. பி. 1368-இல் துரத்தப்பட்டனர். இப்போது 'தாய்–மிங்' என்னும் இன்னொரு பெரிய சீன வமிசம் தோன்றுகிறது. நெடுங்காலம் வரையில், ஏறக்குறைய 300 வருஷங்கள் இவ்வமிசத்தார் சீனுவை ஆண்டுவந்தார்கள். அவர்களுடைய ராஜ்யபார காலம் நல்ல ஆட்சிமுறைக்கும், உயர்ந்த கலைப் பண்புக்கும், நாட்டின் செழிப்புக்கும் பேர்போனது. அவர்கள் பிற தேசங்களை ஜெயித்துத் தங்கள் சாம்ராஜ்யத்தை விஸ்தரிக்கும் முயற்சிகளில் ஈடுபடவில்லை.

சீனுவில் மங்கோலிய சாம்ராஜ்யம் சிதைவுற்றதன் பலனுக ஆசியாவுக்கும் ஐரோப்பாவுக்கும் இருந்துவந்த தொடர்பு அற்றுவிட்டது. ஏனெனில், அப்போதிருந்த காலநிலையில் தரை மார்க்கங்களை நிர்ப்பயமாய் உபயோகிப்பதற்கு முடியவில்லை. கடல் மார்க்கங்களோ இன்னும் அதிகமாக உபயோகத்துக்கு வரவில்லை.

# 70

# ரோம தேவாலய ஸ்தாபனம் ராணுவக்கோலம் கொள்கிறது

ஜூன் 28, 1932.

குப்ளேகான் நூறு கிறிஸ்தவ சமய சாஸ்திரப் பண்டிதர்களைத் தன்னிடம் அனுப்பிவைக்குமாறு போப் பாண்டவருக்குச் செய்தி அனுப்பினான் என்று முன்பே சொன்னேனல்லவா? ஆனால், போப்பாண்டவர் அவ்வாறு செய்யவில்லை. அந்தச் சமயத்தில் அவர்பாடே நிரம்பத் திண்டாட்டமா யிருந்தது. சக்கரவர்த்தியாயிருந்த இரண்டாவது பிரடெரிக் இறந்தபிறகு, 1250-லிருந்து 1273 வரையில் சக்கரவர்த்தியே இல்லாதிருந்த காலம் அது. மத்திய ஐரோப்பாவின் நிலைமை அப்போது மிகவும் பரிதபிக்கத்தக்கதா யிருந்தது. கொள்ளைக்கார 'நைட்' டுகள், எங்கும் கொள்ளை, களவு, குழப்பத்தை உண்டாக்கினார்கள். 1273-இல் ஹாப்ஸ்பர்க் வமிசத்தில் வந்த ருடால்ப் சக்கரவர்த்தி ஆனார். அதனால் நிலைமை ஒன்றும் சீர்திருந்தவில்லை. சாம்ராஜ்யம் இதாலியை இழந்தது.

அரசியல் குழப்பம் மட்டும் அல்ல, ரோமானிய மத ஸ்தாபனத்தின் அபிப்பிராயப்படி, மதக் குழப்பமும் தலையெடுக்க ஆரம்பித்தது. மத ஸ்தாபனத்தின் கட்டளைகளுக்கு மக்கள் முன்னைப்போல் கீழ்ப்படிந்து நடக்கவில்லை. அவர்களுக்குச் சந்தேகம் தோன்றிவிட்டது. மத விவகாரங்களில் சந்தேகம் என்பது மிகவும் ஆபத்தான விஷயம். இரண்டாவது பிரடெரிக், போப்பாண்டவரின்

ஜாதிப்பிரஷ்ட உத்தரவிற்கும் கவலைகொள்ளாமல் அவரிடம் அலட்சியமாக நடந்துகொண்டதை மேலே பார்த்தோம். அவன் போப்பாண்டவரோடு ஒரு வாதமும் தொடங்கினன். அந்த வாதத்தில் போப்பாண்டவரால் தம் கட்சியை நன்கு நிலைநாட்ட முடியவில்லை. பிரடெரிக்கைப்போல் பல சந்தேகப் பிராணிகள் அக்கால ஐரோப்பாவில் இருந்திருக்கவேண்டும். வேறுபலர், மதஸ்தாபனமோ அல்லது போப்பாண்டவரோ கொண்டாடும் உரிமைகளைக் குறித்துச் சந்தேகம்கொண்டு ஆட்சேபிக்கா விட்டாலும், மதஸ்தாபனத்தில் பெரிய பதவி வகிப்போரின் ஆடம்பர வாழ்வையும் அவர்களிடம் காணப்பட்ட ஊழலையும் பெரிதும் வெறுத்தார்கள்.

சிலுவைப் போர்கள் பொசுபொசுவென்று போய்க்கொண்டிருந்தன. அவைகளின் முடிவு, மிகவும் வெட்கக்கேடானது. பெரிய நம்பிக்கையுடனும் உற்சாகத்துடனும் தொடங்கப்பட்ட அப்போர்கள் எதையும் சாதிக்கவில்லை. இவ்விதத் தோல்விகளின் பிரதிபலன் எப்போதும் மோசமாகவே இருக்கும். மதஸ்தாபனத்தில் அதிருப்தி கொண்டவர்கள் சந்தேகநிவர்த்திக்கு வேறு இடங்களை நாடலானார்கள். இதற்குப் பிரதியாக மதஸ்தாபனம் பலாத்காரத்தில் இறங்கியது. பயங்கர முறைகளைக் கையாண்டு அது மக்களின் மனஉலகில் தனக்குள்ள ஆதிக்கத்தை நிலைநிறுத்த முயன்றது. மனிதனின் மனம் பெரிய மாயா ஜால வஸ்து என்பதையும், அதன்முன்பு மிருகபலம் நிஷ்பலனாகவே முடியுமென்பதையும் அது மறந்துவிட்டது. ஆகவே, அது மக்களின் மனச்சாட்சியையும் பகுத்தறிவின் மலர்ச்சியையும் மென்னியைப் பிடித்துக் கொல்ல முயன்றது. நியாயமான சந்தேகத்தை அறிவுக்குப் பொருத்தமான வாதத்தைக்கொண்டு தெளிவிக்காமல், அது அதற்கு

விரோதமாகக் குறுந்தடியையும், *எரிமரத்தையும் உபயோகிக்க ஆரம்பித்தது.

கி. பி. 1155-ஆம் ஆண்டிலேயே மதஸ்தாபனத்தின் கோபம் ஜன ஆதரவு பெற்ற உண்மையான மதப்பிரசாரகர் ஒருவர்மீது பாய்ந்தது. இதாலியில் பிரெச்சியாவைச் சேர்ந்த அவருடைய பெயர் ஆர்னால்டு என்பது. அவர் மத குருமார்களின் ஊழல்களையும் ஆடம்பர வாழ்வையும் கண்டித்துப் பிரசாரம் செய்தார். அதற்காக அவர் தூக்கிலிடப்பட்டார். அவருடைய சவம் எரித்துச் சாம்பலாக்கப்பட்டு அந்தச் சாம்பலும் டைபர் நதியில் எறியப்பட்டது. ஜனங்கள் அவருடைய எலும்பு முதலியவற்றைப் புண்ணிய ஞாபகச் சின்னங்களாக வைத்துக் கொள்ளக் கூடாது என்ற நோக்கத்துடன் அவ்வாறு செய்யப்பட்டது. ஆர்னால்டு என்னும் அப்பெரியார் கடைசி வரையில் கலங்குதலின்றி அமைதியாகவும் உறுதியாகவும் இருந்தார்.

மதநம்பிக்கை விஷயத்தில் சிறிதளவு மாறுபட்டாலும் சரி, மத குருமார்களை அதிகமாகக் குறை கூறினாலும் சரி, அவர்கள் அனைவரும் மதப் பிரஷ்டர்கள் என்று போப்பாண்டவர் அறிவித்தார். பல கிறிஸ்தவ மத உட்பிரிவினரும், கோஷ்டிகளும் இவ்வாறு மதப் பிரஷ்டர்கள் ஆனார்கள். அவர்களுக்கு விரோதமாகச் சிலுவைப் போர்கள்கூடத் தொடுக்கப்பட்டன. அவர்கள் பலவகைப்பட்ட பயங்கரமான குரூர தண்டனைகளுக்கு உட்படுத்தப்பட்டார்கள். தென் பிரான்சில் டுலூசைச் சேர்ந்த அல்பிஷுவா அல்லது அல்பிஜெனியர் எனப்படுவோரும், வால்டோ என்பவனைப் பின்பற்றிய வால்டெனியர் எனப்படுவோரும் மேற்கூறிய இம்சைகளுக்கு ஆளாக்கப்பட்டார்கள்.

---

*இதில் மனிதர்களைக் கட்டிவிட்டு உயிரோடு எரித்துவிடுவது.

ஏறக்குறைய இக்காலத்தில் அல்லது இதற்குச் சற்று முன்பு, கிறிஸ்தவ மதத்தின் சரித்திரத்திலேயே ஓர் அதிசய புருஷர் இதாலியில் உயிர் வாழ்ந்து வந்தார். அவர்தான் அசிசியைச் சேர்ந்த பிரான்சிஸ் என்ற பிரசித்தி பெற்ற துறவி. மிகுந்த தனவந்தரான அவர் எல்லாவற்றையும் துறந்து ஏழ்மை விரதம்பூண்டு, ஏழைகளுக்கும் நோயாளிகளுக்கும் சேவை செய்யும்பொருட்டு வெளிக்கிளம்பி விட்டார். நோயாளிகளுக்குள்ளும் குஷ்டரோகிகள் அதிகமாகத் துன்புறும் அநாதைகளாயிருந்தபடியால் அவர் அவர்களுடைய சேவையில் விசேஷமாக ஈடுபட்டார். அவர் ஒரு சங்கத்தையும் தோற்றுவித்தார். 'அர்ச் பிரான்சிஸ் சங்கம்' என்று அது அழைக்கப்பட்டது. அது ஏறக்குறையப் பௌத்த சங்கத்தைப் போன்றது. அவர் ஊரூராகச் சென்று மதப்பிரசாரமும், பொதுஜன சேவையும் புரிந்துகொண்டு, கிறிஸ்துவைப் போலவே வாழ முயன்றுவந்தார். அவரைத் தரிசிக்கவும், அவருடைய உபதேசங்களைக் கேட்கவும் பலர் வந்தார்கள். பலர் அவருடைய சீடர்கள் ஆயினர். அவர் எகிப்துக்கும், பாலஸ்தீனத்துக்கும் சென்றார். பாலஸ்தீனத்தில் அப்போது சிலுவைப் போர்கள் நடந்துவந்தன. அவர் கிறிஸ்தவராயிருந்தும் முஸ்லீம்கள் அவர் விஷயத்தில் தலையிட்டு ஒன்றும் செய்யவில்லை. அதற்குமாறாகக் கண்டவர் விரும்பும் நல்லியல்பும் நற்குணமும் வாய்ந்த அவரை அவர்கள் பெரிதும் மதித்துப் போற்றினார்கள். அவருடைய ஜீவியகாலம் 1181-ஆம் ஆண்டிலிருந்து 1226 வரையில் என்று சொல்லப்படுகிறது. அவர் அந்திம திசையை அடைந்த பிறகு, அவருடைய சங்கத்துக்கும் மத ஸ்தாபனத்துக்கும் தகராறு ஏற்பட்டது. 'உடைமைகளைத் துறந்து ஏழ்மையை மேற்கொள்ள வேண்டும்' என்னும் அச்சம் கிறிஸ்தவ மதத்தில் வற்புறுத்தப்பட்

டிருப்பதை மதஸ்தாபனம் அவ்வளவு பெரிதாக எடுத்துக் கொள்ளவில்லை. கிறிஸ்தவ மதம் முதிர்ச்சி அடையாத நிலைமையில் வழங்கிய இக்கொள்கையைக் கடந்து மத ஸ்தாபனம் இப்போது வெகுதூரம் முன்னேறியிருந்தது. ஆகவே, 1318-இல் மார்சேல்சில் நான்கு பிரான்சிஸ் சங்கத் துறவிகள் பாஷண்டர்கள் என்று குற்றம் சாட்டப்பட்டு உயிரோடு எரிக்கப்பட்டார்கள்.

சில வருஷங்களுக்குமுன் அசிசி என்னும் ஊரில் ஒரு பெரிய பிரான்சிஸ் திருவிழா நடந்தது. அது அப்போது நடந்ததற்கான காரணம் எனக்கு ஞாபகமில்லை. அந்த மகான் இறந்த 700-ஆவது ஆண்டு விழாவைக் கொண் டாடினார்கள் என்று நினைக்கிறேன்.

பிரான்சிஸ் சங்கத்தைப் போலவே, ஆனால் தத்து வத்தில் அதற்கு முற்றிலும் விரோதமானதாய், மத ஸ்தாபனத்துக்குள்ளேயே இன்னொரு சங்கம் தோன் றியது. அர்ச் டாமினிக் என்பவரால் தோற்றுவிக்கப் பட்ட இதற்கு 'டாமினிக் சங்கம்' என்று பெயர். இது பலாத்காரத்தையும் வைதிகத்தையும் அனுசரித்தது. இவர்களுக்கு மத நம்பிக்கையைக் காப்பாற்றுவதுதான் தலையாய தருமம். மற்ற யாவும் அதற்கு உட்பட்டு அனுசரிக்க வேண்டியவையே. அதை நல்ல பேச்சுச் சொல்லி நிறைவேற்ற முடியாவிட்டால் பலாத்காரத்தைக் கொண்டாவது நிறைவேற்றவேண்டும். இதுதான் அந்தச் சங்கத்தின் கொள்கை.

கி. பி. 1233-இல் 'மத விசாரணை சபை' என ஒன்றை நிறுவி மதஸ்தாபனம் மத விஷயங்களில் பலாத்கார ஆட்சியை உத்தியோகமுறையில் அங்குரார்ப்பணம் செய்து வைத்தது. இந்த 'மதவிசாரணை சபை' ஒரு நீதி மன்றம்போல. அவர்கள், மக்களின் மத நம்பிக்கைகள் எந்த அளவுக்கு வைதிகமாயிருக்கின்றன என்று விசா

ரித்து நிர்ணயம் செய்வார்கள். அது ஒரு குறிப்பிட்ட தரத்துக்குக் குறைவாயிருந்தால், அக்குற்றத்துக்கு அவர்கள் சாதாரணமாக அளிக்கும் தண்டனை 'உயிரோடு எரித்து விடுவதே'யாம். 'நாஸ்திகர்' அல்லது 'பாஷண்டர்' எனப்பட்டோரை வேட்டையாடிப் பிடித்துவந்து எரிமரத்தில் கட்டி உயிரோடு எரித்தார்கள். இவ்வாறு நூற்றுக்கணக்கான பேர் கொளுத்திக் கொல்லப்பட்டார்கள். கொளுத்தியதையும்விடக் கொடூரமானது என்னவென்றால், அவர்களைத் தங்களுடைய 'பாஷண்'டக் கொள்கைகள் தவறு என்று பகிரங்கமாக ஒப்புக்கொள்ளுமாறு செய்ய அவர்களுக்கு அளிக்கப்பட்ட சித்திரவதையே ஆகும். அபாக்கியவதிகளான ஸ்திரீகள் பலர் 'சூனியக்காரிகள்' என்று குற்றம் சாட்டப்பட்டுக் கொளுத்தப்பட்டனர். மேற் கூறிய தண்டனைகள் பெரும்பாலும், மத விசாரணை சபையாரின் உத்தரவில்லாமலேயே, ஜனக்கூட்டத்தால் நிறைவேற்றப்பட்டு வந்தன. இவ்வாறு நிகழ்ந்த இடங்களில் இங்கிலாந்தையும் ஸ்காட்லாந்தையும் முக்கியமாகச் சொல்ல வேண்டும்.

ஒவ்வொரு மனிதனும் மதஸ்தாபனத்துக்கு ஒரு வேவுகாரனாக இருக்க வேண்டுமென்று போப்பாண்டவர் ஒரு 'மதக் கட்டளை' விடுத்தார். அவர் ரசாயன சாஸ்திரத்தைச் சாத்தான் சாஸ்திரம் என்று சொல்லிக் கண்டித்தார். மேற்கூறிய பயங்கர, பலாத்காரச் செயல்களுக்குப் பொறுப்பானவர்கள் உண்மையான மத நம்பிக்கை காரணமாக அவற்றைப் புரிந்து வந்தார்கள். அதாவது ஒருவனை எரிமரத்தில் கட்டி எரிப்பதனால் அவனுடைய ஆத்மாவையும், மற்றவர்களுடைய ஆத்மாக்களையும் பாவத்திலிருந்து மீட்டுக் காப்பாற்றுவதாக அவர்கள் உண்மையில் நம்பினார்கள். மதவாதியர்

பெரும்பாலும் தங்களுடைய தலைமையையும் கொள்கைகளையும் மக்கள்மீது பலாத்காரமாகத் திணித்து வந்திருக்கிறார்கள். அதுவே பொதுஜன சேவை என்றும் அவர்கள் நம்பி வந்திருக்கிறார்கள். கடவுளின் பேரால் அவர்கள் செய்த கொலைகளுக்கும் அதிக்கிரமங்களுக்கும் அளவில்லை. 'அழியாத ஆத்மா'வைக் காப்பாற்றும் பொறுப்பைத் தங்கள்மீது போட்டுக்கொண்ட அவர்கள் 'அழியும் உடலை'க் கொளுத்திச் சாம்பலாக்கத் தயங்கவில்லை. இவ்வாறு மதத்தின் சரித்திரம் களங்கமுற்றிருக்கிறது. ஆயினும், பழி பாவத்துக்கஞ்சாத பாதகச்செயலில் 'மத விசாரணை சபை'யை விஞ்சக்கூடிய வேறொன்று இவ்வுலகில் இருக்குமென்று எனக்குத் தோன்றவில்லை. இத்தகைய அட்டூழியங்களுக்குப் பொறுப்பானவர்களில் பலர், சொந்த லாபத்தை நாடி அவைகளைச் செய்யாமல், தாங்கள் செய்வதுதான் சரியென்று நம்பி அவைகளைச் செய்து வந்ததுதான் நம்மை ஆச்சரியத்துக்குள்ளாக்குகிறது.

போப்பாண்டவர்கள் இத்தகைய 'பயங்கர ஆட்சி'யை ஐரோப்பாவில் நடத்திக்கொண்டு வந்தபோது, தாங்கள் அரசர்களுக்கும் சக்கரவர்த்திகளுக்கும் தலைவர்களாயிருந்து அவர்களை மேய்த்துவந்த அந்த உன்னத நிலையை இழந்து வந்தார்கள். சக்கரவர்த்திகளையும் 'மதப்பிரஷ்டம் செய்துவிடுவோம்' என்று பயமுறுத்தி அவர்களைப் பணியவைத்த காலம் இப்போது மலையேறிவிட்டது. பரிசுத்த ரோம சாம்ராஜ்யம் சக்கரவர்த்தியின்றிச் சீரழிவு பெற்றிருந்த காலத்திலும் அல்லது சக்கரவர்த்தி ரோமாபுரிக்கு வெகு தொலைவில் இருந்த காலத்திலும், பிரான்சு அரசன் போப்பாண்டவர்களுடைய விவகாரங்களில் தலையிட ஆரம்பித்தான். 1303-இல் போப்பாண்டவர் செய்த ஏதோ ஒரு காரியம் அவனுக்குப்

பிடிக்கவில்லை. உடனே அவன் ஓர் ஆளைப் போப்பாண்டவரிடம் அனுப்பினுன். அந்த ஆள் போப்பாண்டவரின் அரண்மனைக்குள் பலாத்காரமாகப் புகுந்து, அவருடைய படுக்கையறைக்கே சென்று, அங்கே அவரை முகத்துக்கு எதிரிலேயே அவமானப்படுத்திவிட்டு வந்தான். இதை அடாத செயல் என்று எந்த நாட்டிலும் யாரும் கூறவில்லை. இந்த நிலைமையையும், கனேசாவில், உறைபனியில், வெறுங்காலுடன் போப்பாண்டவரின் பேட்டிக்காக ஒரு சக்கரவர்த்தியே காத்துக் கிடக்கும்படி நேரிட்ட அந்த நிலைமையையும் ஒப்பிட்டுப்பார் !

சில ஆண்டுகளுக்குப்பிறகு, 1309-இல் ஒரு பிரெஞ்சுக்காரர் போப்பாண்டவராக வந்தார். இவர் பிரான்சில் அவினியன் (Avignon) என்னுமிடத்தில் வாழ ஆரம்பித்தார். இந்த இடத்தில், பிரெஞ்சு அரசர்களின் செல்வாக்குக்கு உட்பட்டு, 1377 வரையில் போப்பாண்டவர்கள் வாழ்ந்து வந்தார்கள். 1378-இல் 'கார்டினல்' திருச்சபையில் பிளவு ஏற்பட்டது. இது 'பெரும் சமயப் பிளவு' என்று அழைக்கப்படுகிறது. கார்டினல்கள் இரு பிளவாகப் பிரிந்து இரு போப்பாண்டவர்களைத் தேர்ந்தெடுத்தார்கள். ஒரு போப்பாண்டவர் ரோமாபுரியில் வசித்தார். சக்கரவர்த்தியும், ஏனைய வட ஐரோப்பிய நாட்டினரும் இவரைக் குருவாகக் கொண்டார்கள். இன்னொரு போப்பாண்டவர்—இவர் போட்டிப் போப்பாண்டவர் என்று அழைக்கப்பட்டார்—அவினியனில் வசித்து வந்தார். பிரெஞ்சு அரசனும் அவனைச் சேர்ந்தவர்கள் சிலரும் இவரை ஆதரித்தார்கள். இந்நிலைமை நாற்பதாண்டுகள் நீடித்தது. அந்தக் காலத்தில் போப்பாண்டவரும் போட்டிப் போப்பாண்டவரும் ஒருவரையொருவர் சபித்தும், மதப்பிரஷ்டம் செய்தும் வந்தார்கள். 1417-இல் இரு கட்சிகளும் சமரசப்பட்டு, ஒரு புதிய போப்

பாண்டவரைத் தேர்ந்தெடுத்தன. அவருடைய வாசஸ்தலம் ரோமாபுரி. இவ்வாறு சமரசம் ஏற்பட்டாலும், போப்பாண்டவர்களுக்குள் நடந்த இந்த ஆபாசமான சண்டை மக்களுடைய மனோபாவத்தில் பெரிய மாறுதலை உண்டாக்கியிருக்க வேண்டும். பூமியில் கடவுளின் பிரதிநிதிகள் என்று தங்களை அழைத்துக் கொள்ளுகிறவர்கள் இவ்விதமாக நடந்துகொண்டால், அவர்களுடைய வாழ்க்கையின் பாரமார்த்திகத்தன்மையையும், சொல்லின் மெய்த்தன்மையையும் ஜனங்கள் சந்தேகிக்க ஆரம்பிக்கிறார்கள். ஆகவே, மத அதிகாரத்துக்கு இதுவரையில் கண்மூடித்தனமாக அடங்கியிருந்தவர்களை, இந்தச் சண்டை ஓர் உலுக்கு உலுக்கி, அவர்கள் தங்களுடைய போக்கை மாற்றிக்கொள்ளப் பெரிதும் உதவியது. ஆனால், ஜனங்களுடைய முழு உறக்கத்தையும் கலைப்பதற்கு அவர்களை இன்னும் அதிகமாக உலுக்க வேண்டி யிருந்தது.

மதஸ்தாபனத்தை அதிகமாகக் கண்டிக்க ஆரம்பித்தவர்களில் விக்ளிப் என்னும் ஆங்கிலேயரும் ஒருவர். ஆக்ஸ்போர்டில் ஆசிரியரா யிருந்த அவர் ஒரு மதபோதகராகவும் இருந்தார். பைபிளை முதன்முதலில் ஆங்கிலத்தில் மொழி பெயர்த்த பெருமை அவருக்கே உரியது. அவர் தம் வாழ்நாளில் ரோமாபுரியின் கோபாவேசத்திலிருந்து எப்படியோ தப்பித்துக்கொண்டார். ஆனால், அவர் இறந்து முப்பத்தோராண்டுகள் கழித்து, அதாவது 1415-இல், ஒரு மதஸ்தாபன சபை அவருடைய எலும்புகளைத் தோண்டி எடுத்துக் கொளுத்தவேண்டும் என்று உத்தரவிட்டது! இந்த உத்தரவும் நிறைவேற்றப் பட்டது!

விக்ளிப்பின் எலும்புகளின் புனிதத்தைக் கெடுத்து அவற்றைக் கொளுத்தினாலும் அவருடைய கொள்கைகள்

பரவுவதைத் தடுப்பது அவ்வளவு எளிதாயில்லை. அவை தூரத்திலிருந்த பொஹிமியாவுக்கும் (இப்போதைய செக்கோஸ்லொவாகியா) சென்று அங்கு வாழ்ந்த ஜான் ஹஸ் என்பவரை ஆட்கொண்டன. அவர் பிரேக் சர்வகலாசாலையின் தலைவராகவும் இருந்தார். அவர், தம்முடைய கொள்கைகளுக்காகப் போப்பாண்டவரால் மதப் பிரஷ்டம் செய்யப்பட்டார். அவர், தம்முடைய நகர ஜனங்களிடையே செல்வாக்கு வாய்ந்தவராகவும், அவர்களுடைய பிரியத்துக்குப் பாத்திரமானவராகவும் இருந்தபடியால் போப்பாண்டவரின் ஆட்கள் அவரை ஒன்றும் செய்ய முடியவில்லை. ஆகவே, அவர்கள் ஒரு தந்திரம் செய்தார்கள். ஸ்விட்சர்லாந்தில் கான்ஸ்டன்ஸ் என்னுமிடத்துக்கு வரவேண்டும் என்று அவருக்கு ஓர் அழைப்பு அனுப்பப்பட்டது. வழியில் அவருக்கு யாதொரு தீங்கும் நேராதென்று சக்கரவர்த்தியால் உறுதி கூறப் பட்டது. அவர் அந்த அழைப்பிற்கிணங்கிச் சென்றார். அங்கே ஒரு மத ஸ்தாபன சபை கூடியிருந்தது. அவர்கள் அவரைத் தம் குற்றத்தை ஒப்புக்கொள்ளுமாறு வற்புறுத்தினார்கள். தம் கொள்கை தவறென்று தம் அறிவிற்குப் பொருந்த அவர்கள் எடுத்துக்காட்டினாலொழியத் தாம் அவ்வாறு செய்ய முடியாதென்று அவர் மறுத்துவிட்டார். அதன்பேரில் அவர்கள் தங்கள் வாக்குறுதியையும் மீறி, அவரை உயிரோடு எரித்து விட்டார்கள். இது 1415-இல் நிகழ்ந்தது. ஹஸ் மகா தீரர். தாம் பொய்யென்று கண்டதை மெய்யென்று அங்கீகரிப்பதைவிடச் சித்திரவதைக்கு ஆளாகி உயிர் துறப்பதே மேலென்று கருதினார். மனச்சாட்சியின்படி நடக்கும் சுதந்தரத்துக்காகவும், பேச்சு சுதந்தரத்துக்காகவும் அவர் தம் உயிரையே பலியாக அர்ப்பணம் செய்தார். தங்களுடைய வீர புருஷர்களில் ஒருவராக அவர் இன்னும் செக் ஜனங்களால் போற்றப்படுகிறார்.

ஜான் ஹஸ்ஸின் உயிர்த்தியாகம் வீணாகவில்லை. அவருடைய தியாக நெருப்பு, பொஹிமியாவில் அவரைப் பின்பற்றுவோருடைய எழுச்சியாகக் கொழுந்து விட்டெரிந்தது. போப்பாண்டவர் அவர்களுக்கு விரோதமாகச் சிலுவைப் போர் தொடுத்தார். சிலுவைப் போர் தொடுப்பதென்பது அவ்வளவு மலிவாய்ப் போய்விட்டது. அதைத் தங்களுக்குப் பயன்படுத்திக் கொள்ளும் கயவர் கூட்டத்துக்கும் குறைவில்லை. இச்சிலுவைப் போர் வீரர்கள் ஒரு பாவத்தையும் அறியாத ஜனங்களை 'அதிபயங்கரமான அக்கிரமச் செயல்களு'க்கு ஆளாக்கினார்கள் என்று ஆசிரியர் எச். ஜி. வெல்ஸ் கூறுகிறார். ஹஸ்ஸைப் பின்பற்றுவோரின் படை தன்னுடைய யுத்த கீதத்தை முழக்கிக்கொண்டு முன்வரவும் சிலுவைப் போர் வீரர்கள் வந்தவழியே விரைவாகத் திரும்பிச் சென்று விட்டார்கள். 'தட்டிக் கேட்க ஆளில்லாவிட்டால் தம்பி சண்டப்பிரசண்டன்' என்பார்களே அதுபோல ஏழைக் கிராமவாசிகளைக் கொன்று கொள்ளையடிப்பதற்கு மார் தட்டி முன்வந்த இவ்வீரர்கள், உண்மையான போர் வீரர்களைக் கண்டவுடன், பின்புறத்தில் கால்தட்ட ஓட்டம் பிடித்தார்கள்.

இந்த எதிர்ப்பு ஐரோப்பாவெங்கும் கிளர்ச்சித் தீயை மூட்டியது. தான் கொண்டதே சரி என்று சாதிக்கும் மத யதேச்சாதிகாரத்துக்கு விரோதமாகப் பல எழுச்சிகளும் கலகங்களும் தோன்றின. இதனால் ஐரோப்பா கத்தோலிக், பிராடெஸ்டண்டு என்று இரு போட்டிப் பிரிவுகளாகப் பிளவுபட்டது.

# 71

## சர்வாதிகாரப் போக்கை எதிர்த்துப் போராட்டம்

ஜூன் 30, 1932.

ஐரோப்பாவில் நிகழ்ந்த மதப் போராட்டங்களைப் பற்றி நான் கூறியது உனக்கு அவ்வளவாக ருசித்திருக்காது என்று நினைக்கிறேன். ஆனால், மேற்கூறிய விவரங்கள் முக்கியமானவை. தற்கால ஐரோப்பா வளர்ச்சி அடைந்த விதத்தை அவை நமக்குக் காட்டுகின்றன. ஐரோப்பாவை நாம் அறிந்துகொள்ளவும் அவை உதவுகின்றன. ஐரோப்பாவில், 14-ஆவது நூற்றாண்டிலும் அதற்குப் பிறகும் தோன்றி வளர்ந்து வரும் மத சுதந்தரப் போராட்டமும், அதை அடுத்துத் தோன்றப்போகும் அரசியல் சுதந்தரப் போராட்டமும் உண்மையில் ஒரே போராட்டத்தின் இரு அம்சங்களாகும். இப்போராட்டம் சர்வாதிகாரத்தையும் சர்வாதிகாரப் போக்கையும் எதிர்த்து எழுந்ததாகும். பரிசுத்த ரோமராஜ்யமும், போப்பாண்டவரின் ஆட்சி முறையும் கலப்பற்ற சர்வாதிகாரத்தின் பிரதிநிதிகளாக விளங்கின. மனிதனின் ஆத்மாவை அவை அடக்கி ஒடுக்க முயன்றன. சக்கரவர்த்தி 'தெய்விக உரிமை' பூண்டவராக விளங்கினார். போப்பாண்டவரைப் பற்றியோ சொல்ல வேண்டியதில்லை. இதை மறுப்பதற்கோ, அவர்களிடமிருந்து வரும் உத்தரவுகளை மீறுவதற்கோ யாருக்கும் உரிமை கிடையாது. எதற்கும் கீழ்ப்படிவது பெரும் புண்ணியமாகக் கருதப்பட்டது. எதையும் சொந்த அறிவைக் கொண்டு ஆராய்வது பெரும் பாபமாகக் கருதப்பட்டது.

எனவே, இப்போது குருட்டுத்தனமாகத் தலை வணங்குவதற்கும் சுதந்தரமாகத் தலை நிமிர்வதற்கும் போராட்டம் என்பது தெளிவாக ஏற்பட்டுவிட்டதல்லவா? ஐரோப்பாவில், பல நூற்றுண்டுகளாக மனச்சாட்சி அல்லது மத சுதந்தரத்துக்காகவும், பின்னர் அரசியல் சுதந்தரத்துக்காகவும் பெரும் போராட்டம் நிகழ்ந்தது. பல உயர்வு, தாழ்வுகளுக்குப் பின் ஓரளவு வெற்றி கிடைத்தது. அதையும் மிகவும் கஷ்டப்பட்டுச் சம்பாதிக்க வேண்டியிருந்தது. ஜனங்கள் சுதந்தரம் கிடைத்துவிட்டதாகச் சந்தோஷப்பட ஆரம்பித்தார்களோ இல்லையோ, அவர்கள் நினைத்தது தவறு என்று அவர்களுக்குப் புலப்பட்டது. ஏழ்மைத்தனம் இருக்கும் வரையில், பொருளியல் சுதந்தரம் இல்லாதவரையில், உண்மையான சுதந்தரம் வெறும் பகற்கனவேயாகும். பட்டினியால் வாடும் ஒருவனைச் சுதந்தர புருஷன் என்று கூறுவது அவனைப் பரிகசிப்பது போலாகும். ஆகவே, அடுத்தது பொருளியல் சுதந்தரப் போராட்டம். அப்போராட்டம் இன்று உலக முழுவதும் நிகழ்ந்து வருகிறது. ஒரே ஒரு தேசத்தில்தான் ஜனங்கள் போரிட்டுப் பொருளியல் சுதந்தரத்தைச் சம்பாதித்து அநுபவித்து வருகிறார்கள் என்று சொல்லமுடியும். அந்தத் தேசம் ருஷியா அல்லது சோவியத் யூனியன் ஆகும்.

இந்தியாவில் மனச்சாட்சி அல்லது மத சுதந்தரத்துக்காக இத்தகைய போராட்டம் நிகழ்ந்ததாகத் தெரியவில்லை. ஆதிகாலத்திலிருந்தே இச்சுதந்தரம் யாருக்கும் மறுக்கப்பட்டதாகத் தெரியவில்லை. மக்கள் தங்களுக்கு இஷ்டமான எக்கொள்கையிலும் நம்பிக்கை வைக்கலாம். இதைத்தான் நம்பவேண்டும் என்கிற கட்டாயம் கிடையாது. மக்களின் மனதை அறிவுக்குப் பொருந்திய வாதத்தின் மூலம் மாற்ற முயன்றார்களே ஒழிய குறுங்

தடியையும் எரிமரத்தையும் பிரயோகிக்கவில்லை. சிற்சில சமயங்களில் வற்புறுத்தல் அல்லது பலாத்கார முறை கையாளப்பட்டிருக்கலாம். ஆனால் பழைய ஆரியக் கொள்கையில் மனச்சாட்சி சுதந்தரம் ஒப்புக்கொள்ளப் பட்டிருந்தது. இதன் பலனாக முழுவதும் நன்மை விளைய வில்லை என்பதை அறிய நமக்கு ஆச்சரியம் உண்டாகிறது. தங்களுக்குத்தான் சுதந்தரம் இருக்கிறதே என்ற எண்ணத்தில் அவர்கள் அதைக் கண்ணும் கருத்துமாகக் காப்பாற்ற முயலவில்லை. கிரியைகளிலும், சடங்குகளிலும் மூடப் பழக்க வழக்கங்களிலும் சிக்கிக்கொண்ட அவர்கள் மதத்தையே இழிநிலைக்குக் கொண்டுவந்து விட்டார்கள். அவர்கள் வளர்த்துவந்த மதசித்தாந்தம் அவர்களை மிகுந்த பிற்போக்காளர்களாகவும், மத-அதிகாரத்தின் அடிமை களாகவும் ஆக்கிவிட்டது. அதிகாரம் என்றால் போப் பாண்டவரைப் போன்ற ஒரு தனி மனிதனின் அதிகாரம் அல்ல. வேத சாஸ்திரங்கள், சம்பிரதாயங்கள, பழக்க வழக்கங்கள் ஆகியவற்றின் அதிகாரத்தையே நான் குறிப்பிடுகிறேன். ஆகவே, நாம் மத சுதந்தரத்தைப் பற்றிப் பேசிக்கொண்டும், பெருமைப்பட்டுக்கொண்டும் இருந்தோமே ஒழிய, உண்மையில் அதற்கும் நமக்கும் வெகு தூரம் இருந்தது. சாஸ்திரப் பிரமாணமும் சம்பிரதாயத் தளையும் நம்மைப் பிணித்திருந்தன. வேறு வகையான சர்வாதிகாரமும், சர்வாதிகாரப் போக்கும் நம் அறிவை அடக்கி ஆண்டுவந்தன. நம் உடலைப் பிணிக்கும் கட்டுகள் மிகவும் கெடுதலானவையே; ஆனால் அவைகளைவிடப் பன்மடங்கு கெடுதலானவை நம் அறிவைப் பிணிக்கும் கட்டுகள். இவை மனோபாவங்களின் வடிவமானவை, அதனால் சூட்சுமமானவை, கண்ணுக்குத் தெரியாதவை, நாமே சிருஷ்டித்துக் கொள்பவை, நம்மை அறியாமலே நம்மைப் பிணித்து நிற்பவை.

முஸ்லீம்கள் இந்தியாவின் மீது படையெடுத்து வந்த தானது மத விஷயங்களில் ஓரளவு நிர்ப்பந்தத்தைப் புகுத்தியது. முஸ்லீம்களுக்கும் ஹிந்துக்களுக்கும் நிகழ்ந்த போராட்டமானது உண்மையில் ஜெயித்தோருக்கும் ஜெயிக்கப்பட்டோருக்கும் நிகழ்ந்த அரசியல் போராட்ட மாகும். ஆனால், அதன்மீது சமயச் சாயை படர்ந்திருந்தது. சிற்சில சமயங்களில் மதத்தின் பேரால் ஹிம்சையும் இழைக்கப்பட்டது. ஆனல், இஸ்லாமுக்கும் இந்த ஹிம்சைக்கும் சம்பந்தம் உண்டென்று நினைப்பது தவறு. 1610-இல் அரேபியர் ஸ்பெயினிலிருந்து துரத்தப்பட்ட போது அவர்களில் ஒருவன் கூறியதாக ஒரு ரசமான குறிப்புக் காணப்படுகிறது. அவன் மத விசாரணை சபையின் முறைகளைக் கண்டித்துச் சொல்லிய வாசகம் வருமாறு: 'எங்கள் முன்னோர்கள் ஸ்பெயினை ஜெயித்து ஆண்ட காலத்தில் எப்போதாவது கிறிஸ்தவ மதத்தை நாட்டிலிருந்து கல்லி எறியமுயன்றார்களா? அவர்கள் நினைத்திருந்தால் எளிதில் அவ்வாறு செய்திருக்கலாமே? எங்கள் முன்னோர் தங்களுக்கு அடிமைகளான உங்கள் முன்னோருக்குப் பரிபூர்ண மதசுதந்தரம் வழங்கவில்லையா? எப்போதாவது சில கட்டாய மதமாற்றங்கள் நிகழ்ந் திருக்கலாம். அவைகளைப் பெரிதாகவே சொல்வதற்கில்லை. ஏனெனில், அவை அவ்வளவு அபூர்வமாயிருந்திருக் கின்றன. அவைகளுக்குக் காரணமானவர்களைக் கடவு வுளுக்கும் நபிகளுக்கும் பயந்தவர்கள் என்று சொல்வதற் கில்லை. அவர்களுடைய செய்கை இஸ்லாமிய மதக் கட்டளைகளுக்கும், கொள்கைகளுக்கும் நேர்விரோத மானவை. அவைகளை மீறுவது தெய்வத் துரோகமாகும். அவைகளை மீறுவோன் எவனும் முசல்மான் என்னும் பேருக்குத் தகுதியுடையவன் ஆகான். உங்களுடைய மகா பாதகமான மதவிசாரணை சபை ரத்தவெறிகொண்டு

அலைகிறது. மத நம்பிக்கையில் மாறுபடுவதற்காக மக்களை உயிருடன் அக்கினிக்கு இரையாக்குகிறது. எங்களில் அத்தகைய சபை ஒருக்காலும் உண்டாகமாட்டாது. எங்களுடைய மதத்தைச் சுயமாகவே தழுவ விரும்பு வோரை நாங்கள் இரு கைகளாலும் வரவேற்க என்றும் சித்தமாயிருக்கிறோம் என்பது உண்மையே. ஆனால், எங்களுடைய பரிசுத்த குரான் மக்களின் மனச்சாக்ஷியின் மீது கொடுங்கோன்மை செலுத்துவதை அனுமதிக்க வில்லை."

ஆகவே, பழைய இந்திய வாழ்வின் முக்கிய அம்சங் களான மத சுதந்தரமும், மதத் துவேஷமின்மையும் நம்மை விட்டு ஓரளவு நழுவிவிட்டன. அச்சமயம், ஐரோப்பா நம்மை எட்டிப் பிடித்துவிட்டதோடு, பல போராட்டங் களுக்குப் பிறகு மேற்கூறிய தத்துவங்களை ஸ்தாபிப்பதில் நம்மைக் காட்டிலும் முன்னேறியும் சென்றுவிட்டது. இன்றைய இந்தியாவில் சில சமயங்களில் வகுப்புப் பூசல் விளைகிறது. ஹிந்துக்களும் முஸ்லீம்களும் போரிட்டு ஒருவரையொருவர் கொன்று வருகிறார்கள். இதுவும் சில இடங்களில் சில சமயங்களில்தான் நிகழ்கிறது என்பது வாஸ்தவம். நாம் பெரும்பாலும் சமாதான மாகவும் சினேகமாகவும் வாழ்ந்து வருகிறோம். ஏனெனில், நமது உண்மையான நலங்கள் இருவருக்கும் பொது வானவை. ஒரு ஹிந்துவோ அல்லது முஸ்லீமோ தன் சகோதரனோடு மதத்தின் பேரால் சண்டையிடுவது வெட்ககரமான விஷயம். இதை நாம் ஒழிக்கவேண்டும், ஒழிக்கவும் ஒழிப்போம். ஆனால், மதப் போர்வையில் மறைந்துகொண்டு நம்மைப் பிணித்து நிற்கும் சம்பிரதாய மூடக் கட்டுகளை நாம் தகர்த்தெறிய வேண்டுவது மிகவும் முக்கியமாகும்.

மத சுதந்தரத்தைப் போலவே அரசியல் சுதந்தரத்திலும் இந்தியா பிறநாடுகளை விட முன்னணியில் இருந்தது. நமது கிராமக் குடியரசுகளும், அரசரின் அதிகாரங்களும் ஆதியில் கட்டுப்படுத்தப்பட்டிருந்த விதம் உனக்கு ஞாபகமிருக்கும். ஐரோப்பாவில் வழங்கிய 'அரசரின் தெய்விக உரிமை'க் கொள்கை இந்தியாவில் கிடையாது. நமது அரசியல் தத்துவம் முழுவதும் கிராம சுதந்தரத்தை அடிப்படையாகக்கொண் டிருந்தபடியால், 'யார் அரசன்' என்பது பற்றி ஜனங்கள் கவலைகொள்ளவில்லை. அவர்களுடைய கிராம சுதந்தரம் பறிக்கப்படாமல் பாதுகாக்கப்பட்டால், மேலே யார் ஆண்டாலென்ன? ஆனல், இந்த மனப்பான்மை மடமை வாய்ந்தது, அபாயமானது. மேலேயிருந்தவன், சிறிதுசிறிதாகத் தன் அதிகாரங்களை விஸ்தரித்துக்கொண்டும், கிராம சுதந்தரத்தை ஆக்கிரமித்துக்கொண்டும் சென்ருன். கடைசியில் ஒருகாலம் வந்தது. அப்போது அரசர்களின் யதேச்சாதிகாரம் கட்டுக்கடங்காததாயிற்று. கிராம சுயாட்சி மறைந்தது. மேல்படி, கீழ்ப்படி, எங்கும் சுதந்தரத்தின் நிழல்கூடத் தென்படவில்லை.

## 72

# மத்தியகால முடிவு

ஜூலை 1, 1932.

**13**-ஆவது நூற்றூண்டிலிருந்து 15-ஆவது நூற்ருண்டு வரையில் ஐரோப்பா எங்ஙிலையில் இருந்ததென்று மீண்டும் பார்ப்போம். ஐரோப்பாவெங்கும் குழப்பமும், போராட்டமும், பலாத்காரமும் தாண்டவமாடுகின்றன. இந்தியாவிலும் நிலைமை மோசமாகத்தான் இருந்தது. ஆனல், ஐரோப்பாவை நோக்கும்போது இந்தியா எவ்வளவோ அமைதியாயிருந்தது என்றுதான் சொல்லத் தோன்றுகிறது.

மங்கோலியருடைய கைங்கரியத்தால் ஐரோப்பியர் இப்போது துப்பாக்கிகளையும் துப்பாக்கி மருந்தையும் உபயோகித்து வந்தார்கள். அரசர்கள், தங்களுக்கு அடங்காத நிலப் பிரபுக்களை அடக்குவதற்கு இதைப் பயன்படுத்திக் கொண்டார்கள். இதில் அவர்களுக்கு நகரங்களில் வாழும் புதிய வியாபார வகுப்பாரின் உதவியும் கிடைத்தது. பிரபுக்கள் தங்களுக்குள் சண்டை போட்டுக் கொள்வதும் உண்டு. இது அவர்களைப் பல வீனப்படுத்தியதோடு நாட்டையும் நாசப்படுத்தி வந்தது. அரசனின் அதிகாரம் பெருகியதும் அவன் இந்தத் தனிச் சண்டையை ஒழித்தான். சில இடங்களில் சிம்மாசனத் துக்காக இருவர் போட்டியிடுவதும் உண்டு. அதனல் உள்நாட்டுப் போர்கள் மூண்டன. இவ்வாறு, இங் கிலாந்தில் யார்க் வமிசம், லங்காஸ்டர் வமிசம் என்னும் இருவமிசங்களுக்குள் சண்டை உண்டாயிற்று. ஒரு

கட்சி வெண்ணிற ரோஜாப் பூவையும், மற்ெருரு கட்சி செந்நிற ரோஜாப்பூவையும் தங்களுக்குரிய சின்னங்களாகக் கொண்டன. ஆகவே, அவைகளுக்குள் நடந்த யுத்தங்கள் 'ரோஜாப்பூ யுத்தங்கள்' என்று அழைக்கப் படுகின்றன. இத்தகைய யுத்தங்களில் பல நிலப் பிரபுக்கள் தங்கள் உயிரை இழந்தனர். சிலுவைப் போர்களிலும் அவர்களில் பலர் இறந்தொழிந்தனர். இவ்வாறு அவர்களுடைய கொட்டம் சிறிது சிறிதாக அடங்கிவிட்டது. இதனுல், அதிகாரம் அவர்கள் கையிலிருந்து ஜனங்கள் கைக்கு மாறிவிட்டது என்று சொல்வதற்கில்லை. இதனுல், அரசனின் அதிகாரமே அதிகரித்து வந்தது. ஜனங்களின் நிலே ஏறக்குறைய முன்போலவே இருந்தது. இப்போது தனிப்பட்ட சண்டைகள் குறைந்து விட்டபடியால் அந்த அளவுக்கு அவர்களுடைய கஷ்டமும் சிறிது குறைந்திருந்தது. ஆனுல், அரசனின் யதேச்சாதிகாரம் வரவர வளர்ந்துகொண்டே வந்தது. அரசனுக்கும் புதிய வியாபார வகுப்பாருக்கும் நிகழ்ந்த போராட்டம் இனி வருங்காலத்தில் நிகழ்ந்த ஒன்ருகும்.

போர், கொலே இவைகளினும் பெரிய பீடை ஒன்று ஐரோப்பாவை 1348-இல் பீடித்தது. இதைப் 'பெருங் கொள்ளே நோய் என்றும், 'கருஞ்சாவு' என்றும் அழைக்கிருர்கள். சின்ன ஆசியா, ருஷியாவிலிருந்து ஆரம்பித்து இங்கிலாந்து வரையில் இது ஓர் இடம் பாக்கியின்றிப் பரவியது. இது எகிப்துக்கும், வட ஆப்பிரிக்காவுக்கும், மத்திய ஆசியாவுக்கும் சென்று அங்கிருந்து மேற்கு முகமாகப் பரவியது. லட்சோபலட்சம் ஜனங்கள் இதற்குப் பலியானுர்கள். இங்கிலாந்தின் ஜனத்தொகையில் மூன்றில் ஒருபங்கு இதனுல் இறந்துபட்டதாகச் சொல்லப்படுகிறது. சீனுவிலும் பிற இடங்களிலும்

மாண்டவர்களின் தொகை மிகவும் அதிகம். இந்நோய் இந்தியாவுக்கு வராதது ஓர் ஆச்சரியமாகும்.

இந்நோயினால் பாதிக்கப்பட்ட தேசங்களின் ஜனத் தொகை வெகுவாகக் குறைந்துவிட்டது. நிலத்தை உழுது பயிரிடுவதற்குப் போதிய ஜனங்கள் இல்லை. வேலைசெய் வோரின் தொகை குறைந்து விட்டபடியால், இதுவரையில் அவர்களுக்குக் கொடுக்கப்பட்டு வந்த மிகக் குறைந்த கூலி சற்றே உயரத்தலைப்பட்டது. ஆனால், பார்லிமெண்டுகள் பெரியநிலச்சுவான்கள் கையிலும் முதலாளிகள் கையிலும் இருந்தபடியால், அவர்கள் பழைய குறைந்த கூலிக்கே ஜனங்கள் வேலைசெய்ய வேண்டுமென்று நிர்ப்பந்திக்கும் சட்டங்களை இயற்றினார்கள். சுரண்டலும் துன்பமும் பொறுக்க முடியாத அளவுக்குப் போய்விடவே, குடியான வர்களும் ஏழைகளும் எதிர்த்துக் கலகம் செய்தார்கள். மேற்கு ஐரோப்பாவெங்கும் இக்குடியானவர் கலகங்கள் ஒன்றின் பின் ஒன்றாக நிகழ்ந்து வந்தன. 1358-இல் பிரான்சில் ஒரு 'ஜாக்கெரி' உண்டாயிற்று. 'ஜாக்கெரி' என்றால் கலகம் என்று பொருள். 1381-இல் இங்கிலாந்தில் ஒரு கலகம் நிகழ்ந்தது. அதற்குக் காரணமான 'வாட் டைலர்' என்பவன் அரசனுக்கு முன்னர் கொல்லப் பட்டான். மேற் கூறிய கலகங்கள் குரூரமான முறையில் அடக்கி ஒடுக்கப்பட்டன. ஆனால், சமத்துவத்தைப் பற்றிய புதிய கருத்துக்கள் மெள்ள மெள்ளப் பரவி வந்தன. பலர் ஏழைகளாகவே கிடந்து பட்டினியால் வாடுவதேன் ? சிலர்மட்டும் தனவந்தர்களாய் ஒரு குறைவு மின்றிச் சுகமாக வாழ்வதேன் ? சிலர் பிரபுக்களாகவும் சிலர் அடிமைகளாகவும் இருப்பதற்குக் காரணம் என்ன ? சிலர் உயர்ந்த ஆடையாபரணங்களுடன் உலவி வரும் போது வேறு சிலர் உடலை முழுவதும் மறைப்பதற்குக் கந்தையும் இன்றி உழல்வதேன் ? மேற்கண்ட கேள்விகள்

மக்களின் மனதை உலப்பிவந்தன. நிலமானியத் திட்டத்தின் அடிப்படையான 'அதிகாரத்துக்கு அடங்கி நடத்தல்' என்னும் பழைய மனப்பான்மை கட்டுத் தளர்ந்து வந்தது. ஆகவே, குடியானவர்கள் மீண்டும் மீண்டும் கிளர்ந்து எழுந்தார்கள். ஆனால், அவர்கள் பலமும் கட்டுப்பாடும் அற்றவர்களாய் இருந்தபடியால் அடக்கப்பட்டார்கள். அடக்கப்பட்ட சில காலத்துக்கெல்லாம் மறுபடியும் பொங்கி எழுந்தார்கள். இப்படியே நடந்துவந்தது.

இங்கிலாந்தும் பிரான்சும் இடைவிடாது போரிட்டு வந்தன. 14-ஆவது நூற்றாண்டின் முதலிலிருந்து 15-ஆவது நூற்றாண்டின் இடைவரையில் அவைகளுக்குள் நடந்த போர் 'நூறாண்டுப் போர்' என்று அழைக்கப்படுகிறது. பிரான்சின் கீழ்ப்பாகத்தில் பர்கண்டி இருந்தது. அது பெயரளவில் பிரெஞ்சு அரசனுக்கு உட்பட்ட ஒரு பலம் பொருந்திய ராஜ்யம். அது அரசனுக்கு அடங்காமல் சதா தொந்தரவு கொடுத்து வந்தது. இங்கிலாந்து, பிரான்சுக்கு விரோதமாக, பர்கண்டியோடும் மற்ற நாடுகளோடும் ரகசியச் சூழ்ச்சி செய்தது. சிலகாலம் வரையில் பிரான்சு நாலுபக்கங்களிலும் பகைவரால் சூழப்பட்டிருந்தது. மேற்குப் பிரான்சில் பெரும்பகுதி நெடுங்காலம் வரையில் ஆங்கிலேயருடைய ஆதிக்கத்தில் இருந்தது. இங்கிலாந்தின் அரசர் தம்மைப் பிரான்சின் அரசர் என்றும் அழைத்துக் கொண்டார். பிரான்சு மிகவும் தாழ்வுற்று நம்பிக்கை இழந்திருந்த தருணத்தில் ஓர் இளம் குடியானப் பெண் தோன்றி அதற்கு நம்பிக்கை ஊட்டி வெற்றி அளித்தாள். அவள்தான் ஆர்லீன்ஸ் அல்லது ஆர்க் நங்கை ஜோன். அவள் உனக்கு மிகவும் பிடித்த வீரப்பெண் அல்லவா? ஊக்கம் குன்றி, உணர்வு அழிந்து கிடந்த தன் ஜனங்களுக்கு அவள் நம்பிக்கையையும்

ஆவேசத்தையும் மூட்டினாள். அவளுடைய தலைமையில் அவர்கள் புரிந்த தீரச்செயலால் ஆங்கிலேயரை நாட்டை விட்டோடச் செய்ய முடிந்தது. அவள் தன் தாய் நாட்டுக்குச் செய்த இப்பேருபகாரத்துக்காக அடைந்த பரிசு மரணமேயாகும். ஆங்கிலேயர் அவளைப் பிடித்துக் கொண்டார்கள். அவளை ஒரு சூனியக்காரி என்று மத ஸ்தாபனம் சொல்லுமாறு செய்தார்கள். மத விசாரணை சபை அவளை விசாரித்து, அவள் எரிமரத்துக்கு இரை யாக்கப்பட வேண்டுமென்று தீர்ப்புக் கூறியது. 1430-இல் அத்தீர்ப்பின்படி அவளை ஆங்கிலேயர் ரூவன் நகரத்துக் கடைவீதியில் உயிரோடு கொளுத்திக் கொன்றனர் பல வருஷங்களுக்குப் பிறகு ரோமானிய மதஸ்தாபனம் அந்தப் பழைய தீர்ப்பை மாற்றி அவள் குற்றவாளி அல்ல என்று கூறிற்று. ஆனால், நடந்தது நடந்துவிட்டது. அதை எப்படி மாற்ற முடியும்? அதற்கும் நெடுங்காலத்துக்குப் பிறகு அவர்கள் அவளைப் பரிசுத்த கன்னி ஆக்கினார்கள்!

ஆர்க் ஜோன், பிரான்சு பிரெஞ்சு மக்களின் தந்தை நாடு என்றும், அதை அந்நிய ஆதிக்கத்திலிருந்து மீட்க வேண்டும் என்றும் பேசினாள். இந்தப் பேச்சே புது மாதிரியான பேச்சாயிருந்தது. நிலமானியத் திட்டத்தின் கீழ் வாழ்ந்துவந்த மக்களுக்குத் தேசீயத்தைப்பற்றி நினைக்க அவகாச மேது? ஆகவே, ஜோன் பேசிய மாதிரி அவர்களை ஆச்சரியத்துக்குள்ளாக்கியது. அவள் பேச்சை அவர்களால் புரிந்துகொள்ள முடியவில்லை. அவள் காலத்திலிருந்து பிரான்சில் தேசீயத்தின் உதய ஒளி தோன்றத் தொடங்குவதை நாம் காண்கிறோம்.

ஆங்கிலேயரை நாட்டைவிட்டு ஓட்டிய பிறகு பிரெஞ்சு அரசன் தனக்குத் தொந்தரவு அளித்துவந்த பர்கண்டியின் மீது கவனம் செலுத்தினான். 1483-இல் அவன் அதை முடிவாக அடக்கிப் பிரான்சின் ஒரு பாக

மாகச் சேர்த்துக்கொண்டான். இப்போது பிரெஞ்சு அரசனின் பலம் அதிகரிக்கிறது. எல்லா நிலமானியப் பிரபுக்களும் அவனுக்கு அடிபணிந்து வாழ்கிறார்கள். அடிபணியாதவர்கள் அழிக்கப்படுகிறார்கள். பர்கண்டி பிரான்சில் சேர்த்துக்கொள்ளப்பட்ட பிறகு பிரான்சும் ஜெர்மனியும் எதிரெதிராக நின்றன; இரண்டின் எல்லைகளும் ஒன்றையொன்று தொட்டன. ஆனால் பிரான்சு பலம் பொருந்திய, அதிகாரம் அனைத்தும்கொண்ட முடியரசாக விளங்கியது; ஜெர்மனியோ பல ராஜ்யங்களாகப் பிளவுபட்டுப் பலவீனமுற்றுக் கிடந்தது.

இங்கிலாந்து ஸ்காட்லாந்தையும் வெல்ல முயன்று வந்தது. இதுவும் ஒரு நீண்ட போராட்டம். ஸ்காட்லாந்து பெரும்பாலும் இங்கிலாந்துக்கு விரோதமாகப் பிரான்சின் பக்கம் இருந்து வந்தது. 1314-இல் ராபர்ட் புரூசின் தலைமையின் கீழ் ஸ்காட்டுகள் ஆங்கிலேயரை பானக்பர்ன் என்னுமிடத்தில் தோற்கடித்தார்கள்.

இதற்கும் முன்னால், பன்னிரண்டாவது நூற்றாண்டிலேயே ஆங்கிலேயர் அயர்லாந்தை ஜெயிக்கும் முயற்சியில் ஈடுபட்டார்கள். அதாவது 700 ஆண்டுகளுக்கு முன்பு. அந்நாளிலிருந்து அயர்லாந்து யுத்தத்துக்கும், கலகத்துக்கும், பீதிக்கும், கொடூரத்துக்கும் ஆளாகி வந்திருக்கிறது. இந்தச் சிறிய நாடு அந்நிய ஆதிக்கத்துக்குத் தலைவணங்க மறுத்துத் தலைமுறை தோறும் கிளர்ந்தெழுந்து 'சுதந்தரம், சுதந்தரம்' என்று முழங்கிவந்தது.

13-ஆவது நூற்றாண்டில் ஐரோப்பாவின் இன்னொரு சிறிய நாடாகிய ஸ்விட்சர்லாந்து தன் சுதந்தர உரிமையை நிறுவியது. அது பரிசுத்த சாம்ராஜ்யத்தின் ஒரு பகுதியாக இருந்து ஆஸ்திரியாவால் ஆளப்பட்டு வந்தது. வில்லியம் டெல் என்பவரையும் அவர் குமாரனையும் பற்றிய கதையை நீ படித்திருக்கலாம். ஆனால், அதை

நிஜம் என்று சொல்வதற்கில்லை. ஆனால், அதைவிட ஆச்சரியமான விஷயம் ஸ்விட்சர்லாந்தின் எளிய குடியான வர்கள் பெரிய சாம்ராஜ்யத்தை எதிர்த்தெழுந்து அதற்குப் பணிந்து வாழ மறுத்ததுதான். இக்கிளர்ச்சியை முதலில் தொடங்கியவை மூன்று மாகாணங்கள். அம்மூன்றும், 1291-இல் ஒன்று சேர்ந்து 'என்றுமுள சங்கம்' என ஒன்றை அமைத்தன. நாளாவட்டத்தில் மற்ற மாகாணங்களும் அதில் சேர்ந்தன. 1499-இல் ஸ்விட்சர்லாந்து ஒரு சுதந்தரக் குடியரசாகத் தலை நிமிர்ந்து நின்றது. பல் வேறு மாகாணங்களைக் கொண்ட அக்குடியரசு 'ஸ்விஸ் கூட்டரசு' என்று அழைக்கப்பட்டது. ஸ்விட்சர்லாந்தில் ஆகஸ்டு முதல்தேதி யன்று, மலைகளின் உச்சியில் நாம் சொக்கப்பனைகள் கொளுத்தப்பட்டதைப் பார்த்தது உனக்கு நினைவிருக்கிறதா? அது ஸ்விஸ்மக்களின் தேசீயத் திருநாள்கொண்டாட்டம். அந்நாளில்தான் அவர்களுடைய புரட்சி ஆரம்பமாயிற்று. அந்நிய ஆட்சிக்கு எதிராக அனைவரும் ஏககாலத்தில கிளம்புவதற்குச் சொக்கப்பனை கொளுத்துவது ஓர் அடையாளமாகக் கொள்ளப்பட்டது. ஆகவே, ஆண்டுதோறும் அந்நாளில் அவர்கள் சொக்கப் பனை கொளுத்தித் தேசீயத் திருநாள் கொண்டாடு கிறார்கள்.

கீழ் ஐரோப்பாவில் கான்ஸ்டாண்டிநோபிளில் என்ன நிகழ்ந்துகொண்டிருந்தது? கி. பி. 1204-இல் ரோமன் சிலுவைப் படைகள் கிரேக்கர்களிடமிருந்து இந்நகரைக் கைப்பற்றியது உனக்கு நினைவிருக்கும். 1261-இல் கிரேக் கர் அவர்களைத் துரத்திவிட்டு மீண்டும் கீழ் சாம்ராஜ் யத்தை ஸ்தாபித்தார்கள். ஆனால், அவர்களுக்கு இதை விடப் பெரிய இன்னொரு அபாயம் காத்திருந்தது.

மங்கோலியர் ஆசியா வழியாகக் கம்பீரமாகப் படை யெடுத்துச் சென்றபோது 50,000 உதுமானியத் துருக்கியர்

அவர்களுக்கு எதிர் நிற்க ஆற்றுமல் ஓடிவிட்டார்கள். இவர்கள் வேறு, செல்ஜக் துருக்கியர் வேறு. இவர்களுடைய மூதாதை அல்லது வமிச கர்த்தா உத்மான் அல்லது உஸ்மான் என்று அழைக்கப்பட்ட ஒருவர். ஆகவே, இவர்கள் உதுமானியத் துருக்கியர் என்று பேர் பெற்றுர்கள். இவர்கள் மேற்கு ஆசியாவில் செல்ஜக் துருக்கியரிடம் தஞ்சம் புகுந்தார்கள். செல்ஜக் துருக்கியரின் வலி ஒடுங்கவே இவர்களுடைய வலி ஓங்கியது. இவர்கள் பரவிக்கொண்டே சென்றுர்கள். தங்களுக்கு முன்னுல் வேறு பலர் செய்ததுபோல் இவர்கள் கான்ஸ்டாண்டிநோபிளே நேர்முகமாகத் தாக்காமல் அதைக் கடந்து 1353-இல் ஐரோப்பாவுக்குள் சென்றுர்கள். பிறகு வெகு விரைவில் பரவி பல்கேரியாவையும் செர்பியாவையும் வென்று ஆட்ரியநோபிளேத் தலைநகராகக் கொண்டார்கள். ஆசியாவிலும் ஐரோப்பாவிலும் கான்ஸ்டாண்டிநோபிளேச் சுற்றி உதுமானிய சாம்ராஜ்யம் வியாபித்திருந்தது. கான்ஸ்டாண்டிநோபிள் நகரம் மட்டும் அதில் அடங்கவில்லை. ஆனுல் ஆயிரம் ஆண்டுகளாகக் கம்பீரமாக விளங்கி வந்த கீழ் ரோம சாம்ராஜ்யம் கான்ஸ்டாண்டிநோபிள் நகரத்தின் நாற்பால் எல்லைக்குள் சுருங்கிவிட்டது. துருக்கியர், கீழ் ரோம சாம்ராஜ்யத்தை விரைவில் விழுங்கி வந்தாலும், சுல்தான்களும் சக்கரவர்த்திகளும் நட்புபூண்டு ஒழுகியதோடு ஒருவர் குடும்பத்தில் மற்ருெருவர் பெண்கொண்டும், கொடுத்தும் வந்தார்கள். கடைசியாக 1453-இல் துருக்கியர் கான்ஸ்டாண்டிநோபிளேக் கைப்பற்றினுர்கள். இனி துருக்கியர் என்று நான் பேசுவதெல்லாம் உதுமானியத் துருக்கியரையே குறிக்கும். செல்ஜக் துருக்கியர் சரித்திர அரங்கத்திலிருந்து மறைந்து விடுகிறுர்கள்.

கான்ஸ்டாண்டிநோபிளின் வீழ்ச்சி, வெகு காலமாக

எதிர்பார்க்கப்பட்டதாயினும் ஐரோப்பாவைப் பேரதிர்ச்சிக்கு ஆளாக்கியது. அதன் உட்பொருள் என்ன? ஆயிரம் ஆண்டுகளாக நீடித்து வந்த பழைய கிரேக்கக் கீழ் சாம்ராஜ்யம் முடிவாக முடிந்துவிட்டது. இன்னொரு முஸ்லீம் படையெடுப்புக்கு ஐரோப்பா ஆளாகிவிட்டது. துருக்கியர் மேன்மேலும் சென்று கொண்டே இருந்தார்கள். ஒரு காலத்தில் அவர்கள் ஐரோப்பா முழுவதையுமே ஜெயித்து விடுவார்கள் என்று தோன்றியது. ஆனால், வியன்னா நகர வாயிலில் அவர்கள் தடுத்து நிறுத்தப்பட்டார்கள்.

16-ஆவது நூற்றாண்டில் ஐஸ்டினியன் சக்கரவர்த்தி கட்டிய செயின்ட் சோபியா என்னும் பெரிய கிறிஸ்தவ தேவாலயம் ஒரு மசூதியாக மாற்றப்பட்டு 'ஆயா சூபியா' என்று அழைக்கப்பட்டது. அதன் புராதன பொக்கிஷம் கொள்ளையிடப்பட்டது. கிறிஸ்தவ ஐரோப்பா இதைக் கேட்டு மனம் கொதித்தது. ஆனால், அதனால் ஒன்றும் செய்ய முடியவில்லை. ஆயினும், உண்மையில், துருக்கி சுல்தான்கள் வைதிக கிரேக்க மதஸ்தாபனத்திடம் பகைமை இன்றியே நடந்து கொண்டார்கள். கான்ஸ்டாண்டிநோபிள் கைப்பற்றப்பட்ட உடனே இரண்டாவது சுல்தான் முகம்மது என்பவன் தன்னைக் கிரேக்க மதஸ்தாபனத்தின் காவலனாக அறிவித்துக்கொண்டான். அவனுக்குப் பின் வந்த ஒரு சுல்தான்—இவன் ராஜ கம்பீர சுலேமான் என்று அழைக்கப்படுகிறான்—தன்னைக் கீழ் சாம்ராஜ்யச் சக்கரவர்த்திகளின் பிரதிநிதியாகவே கருதி, 'சீசர்' என்னும் பட்டத்தை மேற்கொண்டான். பழைய சம்பிரதாயத்தின் சக்தியை என்னென்பது?

கான்ஸ்டாண்டிநோபிளில் வாழ்ந்த கிரேக்கர்கள் உதுமானியத் துருக்கியரின் வருகையை விரும்பவில்லை என்று சொல்வதற்கில்லை. பழைய சாம்ராஜ்யம்

சீர்குலைந்து வந்தது அவர்களுக்கு நன்கு புலப்பட்டது. போப்பாண்டவரையும், மேலைக் கிறிஸ்தவர்களையும்விடத் துருக்கியரே மேல் என்று அவர்களுக்குத் தோன்றிற்று. ரோமன் சிலுவைப் படைகளிடம் அவர்கள் பட்ட பரிபவம் அவர்களுக்கன்றோ தெரியும்! 1453-இல் கான்ஸ்டாண்டிநோபிள் கடைசியாக முற்றுகை யிடப்பட்ட போது, ஒரு பைஜாண்டியப் பிரபு 'போப்பாண்டவரின் மகுடத்தைவிட முகம்மது நபிகளின் பாகையே நல்லது' என்று சொன்னானம்!

துருக்கியர் புதுவிதமான படை ஒன்றைச் சிருஷ்டித்தார்கள். அதன் பெயர் 'ஜானிசாரி' என்பது. 'ஜான்' என்றால் உயிர், 'நிசார்' என்றால் தியாகம். அதாவது 'உயிரைத் தியாகம் செய்வது' என்று பொருள். துருக்கியர் கிறிஸ்தவர்களிடமிருந்து அவர்களுடைய சிறுவர்களைத் திறையாகப் பெற்று அவர்களுக்குத் தனியான பயிற்சி அளித்தார்கள். பெற்றோர்களிடமிருந்து சிறுவர்களைப் பிரிப்பது கொடுமையேயாயினும், அச்சிறுவர்களுக்கு அதனால் சில அனுகூலங்கள் இல்லாமற் போகவில்லை. அவர்கள் நல்ல பயிற்சி பெற்று ராணுவ உயர் குலத்தோராக விளங்கினார்கள். இந்த 'ஜானிசாரி'ப் படை உதுமானிய சுல்தான்களின் ஆதார ஸ்தம்பமாகத் திகழ்ந்தது.

இதைப் போலவே எகிப்திலும் 'மாமலூகியர்' படை என ஒன்று நிறுவப்பட்டது. அது மிகுந்த ஆற்றலுள்ளதாக இருந்ததோடு அதைச் சேர்ந்தவர்கள் சில சமயங்களில் எகிப்து சுல்தான்களாகவும் விளங்கினர்.

பைஜாண்டியச் சக்கரவர்த்திகளிடமிருந்து கான்ஸ்டாண்டிநோபிளைக் கைப்பற்றிய உதுமானிய சுல்தான்கள் அவர்களுடைய தீய பழக்கங்களாகிற கோலாகல வாழ்வின் ஆடம்பரங்களையும், ஊழல்களையும் கூடவே

பற்றிக்கொண்டதாகத் தெரிகிறது. இழிந்த பைஜாண்டிய சாம்ராஜ்ய முறை முற்றும் அவர்களைச் சுற்றிக்கொண்டு அவர்களுடைய சத்தைக் கொஞ்சம் கொஞ்சமாக உறிஞ்சிவிட்டது. ஆனால், சில காலம் வரையில், அவர்களுடைய வல்லமையைக் கண்டு கிறிஸ்தவ ஐரோப்பா அஞ்சி நடுங்கியது. அவர்கள் எகிப்தை ஜெயித்தார்கள். பலவீனர்களான அப்பாசீது கலீபாக்கள் அப்போது அதை ஆண்டு வந்தார்கள். அவர்களிடமிருந்து கலீபா என்னும் பட்டத்தையும் துருக்கியர் எடுத்துக் கொண்டார்கள். அக்காலத்தி லிருந்து உதுமானிய சுல்தான்கள் தங்களைக் 'கலீபாக்கள்' என்று அழைத்துக் கொண்டார்கள். சில வருஷங்களுக்கு முன்புதான் முஸ்தபா கமால்பாஷா சுல்தான் பட்டம், கலீபா பட்டம் இரண்டையும் ஒழித்துக் கட்டினுர்.

கான்ஸ்டாண்டிநோபிள் வீழ்ந்த நாள், சரித்திரத்தில் மிக முக்கியமான ஒரு நாளாகும். ஒரு சகாப்தம் முடிவுற்று இன்னொரு சகாப்தம் தொடங்கும் நாளாக அது கருதப்படுகிறது. இடைக் காலம் கழிந்துவிட்டது. ஆயிர வருஷத்து இருண்ட காலம் முடிந்துவிட்டது. ஐரோப்பாவில் புதிய ஜீவனும் புதிய சக்தியும் காணப் படுகின்றன. இதை மறுமலர்ச்சி என்று அழைக்கிருர்கள். அதாவது கலையும் கல்வியும் புனர்ஜன்மம் எடுக்கின்றன. நீண்ட உறக்கத்திலிருந்து எழுவதுபோல் மக்கள் விழித் தெழுகிருர்கள். பல நூற்றுண்டுகளுக்கு முன் உன்னத முற்று விளங்கிய கிரீசை நோக்குகிருர்கள். அந்நாட்டின் சரித்திரத்திலிருந்து ஊக்கமும் உணர்ச்சியும் பெறு கிருர்கள். அவர்களுடைய உள்ளத்திலே புரட்சி தோன்றுகிறது. மத ஸ்தாபனம் வளர்த்துவந்த வாழ்க் கையைப் பற்றிய இருண்ட மனேபாவம் மாய்கிறது. மனித உணர்ச்சியைச் சூழ்ந்து நின்ற பாசம் விலகுகிறது.

பழைய கிரேக்கர்கள் வளர்த்து வந்த அழகுக் காதல் தோன்றுகிறது. ஐரோப்பாவில் சிறந்த சிற்பக்கலையும், சித்திரக்கலையும், கட்டிடக் கலையும் மலர்கின்றன.

கான்ஸ்டாண்டிநோபிள் வீழ்ந்தவுடன் மேற்கூறிய நிகழ்ச்சிகளெல்லாம் திடீரென்று ஏற்பட்டு விடவில்லை. அவ்வாறு எண்ணுவது தவறு. துருக்கியர் அந்நகரைக் கைப்பற்றியதால் பல கல்விமான்களும் அறிவாளிகளும் அதை விட்டு மேற்கே சென்றார்கள். அதனால் மேற்கண்ட மாறுதல் சிறிது துரிதப்படுத்தப்பட்டது. கிரேக்க இலக்கியப் பொக்கிஷங்களை அவர்கள் தங்களுடன் இதாலிக்குக் கொணர்ந்தார்கள். அந்தச் சமயம் மேற்கு ஐரோப்பா அவைகளை அறிந்து அனுபவிக்கும் பக்குவத்தில் இருந்தது. இந்த முறையில் கான்ஸ்டாண்டிநோபிளின் வீழ்ச்சி ஐரோப்பிய மறு மலர்ச்சியின் உதயத்துக்குச் சிறிது உதவிபுரிந்தது என்று கூறலாம்.

ஆனால், அப்பெரிய மாறுதலுக்கு இது ஒரு சிறிய காரணம் என்றே சொல்லவேண்டும். பண்டைய கிரேக்க இலக்கியமும், தத்துவமும் இதாலிக்கோ இருண்டகாலத்து மேற்கு ஐரோப்பாவுக்கோ புதியவை அல்ல. பல்கலைக் கழகங்களில் அவை இன்னும் பயிலப்பட்டு வந்தன. கற்றோர் அவற்றை அறிந்தே இருந்தார்கள். ஆனால், சிலரிடம் மட்டுமே அவை அடைபட்டுக் கிடந்தன. அக்காலத்திய வாழ்க்கை மனோபாவத்தோடு அவை பொருந்தாமையால் விரிந்து பரவவில்லை. மக்கள் மனதில் ஐயம் தோன்ற ஆரம்பித்தது. அது புதிய வாழ்க்கை மனோபாவம் உதயமாவதற்கான நிலைமையைப் பண்படுத்தியது. அக்கால நிலை அவர்களுக்குத் திருப்தி அளிக்கவில்லை. அதைவிடச் சிறந்த நிலைமையை அவர்கள் தேடிக்கொண்டிருந்தார்கள். அவர்கள் இவ்வாறு பழைமையில் அதிருப்தியும், புதுமையில்

ஆர்வமும் கொண்டு நின்றபொழுது அவர்களுக்குக் கிரீசின் பழைய பாஷண்ட தத்துவம் குருடனுக்குப் பார்வை கிடைத்ததுபோல் கிடைத்தது. அவர்கள் அதன் இலக்கியத்தை ஆரப் பருகினர்கள். அவர்கள் எதைத் தேடிக் கொண்டிருந்தார்களோ அது கிடைத்துவிட்டது. அவர்கள் ஆனந்தத்துக்கு எல்லையும் உண்டோ?

மறுமலர்ச்சி முதலில் உதயம் செய்தது இதாலியில். பிறகு பிரான்சிலும், இங்கிலாந்திலும், மற்ற இடங்களிலும் அதன் ஒளி பரவியது. அதைக் கிரேக்க இலக்கியம், தத்துவம் இவற்றின் மறுபதிப்பு என்றுமட்டும் சொல்வதற்கில்லை. அதைவிடப் பெருமையும் உயர்வும் வாய்ந்தது அது. கண்ணுக்குப் புலனுகாமல், ஐரோப்பாவின் மனேகர்ப்பத்தில் நெடுங்காலம் கருக்கொண்டு முதிர்ந்த ஒன்றின் புறவெளிப்பாடே அது. அந்த ஆர்வம் பல வழிகளில் பொங்கி வழிந்தது. மறுமலர்ச்சி அவைகளில் ஒன்ருகும்.

# 73

## கடல்மார்க்கங்கள் கண்டு பிடிக்கப்படுகின்றன

ஜூலை 3, 1932

ஐரோப்பாவில் நாம் இப்போது அடைந்துள்ள கட்டத்தில் 'பழையன கழிந்து புதியன புகுவதைப்' பார்க்கிறோம். இடைக்கால உலகம் குலைவுறுகிறது. அந்த இடத்தில் புதிய உலகம் தோன்றுகிறது. அக்கால நிலைமைகளைக் குறித்து வெறுப்பும் அதிருப்தியும் ஏற்படுகின்றன. இந்த உணர்ச்சியிலிருந்து மாறுதலும் முன்னேற்றமும் பிறக்கின்றன. நிலமானிய முறையினாலும், மதஸ்தாபன முறையினாலும் சுரண்டப்பட்டு வந்த வகுப்பார் அனைவருடைய உள்ளத்திலும் அதிருப்தி குடிகொண்டிருந்தது. எங்கும் குடியானவர் கலகங்கள் அல்லது 'ஜாக்கெரி'கள் ('ஜாகஸ்' என்பது ஒரு பிரெஞ்சுக் குடியானவப் பெயர். அதிலிருந்து குடியானவர் கலகத்துக்கு 'ஜாக்கெரி' என்று பெயர் வந்தது) நிகழ்வதை நாம் ஏற்கெனவே பார்த்தோம். குடியானவர்கள் கலகம் செய்தது தான் மிச்சம். அதனால் அவர்கள் ஒன்றும் நன்மை அடைய முடியவில்லை. ஏனெனில், அவர்கள் இன்னும் பலமற்றவர்களாகவும், பிற்போக்கு வாய்ந்தவர்களாகவுமே இருந்து வந்தார்கள். அவர்களுக்கு நற்காலம் இனிமேல்தான் வரப்போகிறது. பழைய நிலமானிய வகுப்புக்கும் புதிய மத்திய வகுப்புக்கும்தான் இப்போது உண்மையில் சண்டை. மத்திய வகுப்பார் நன்கு விழித்துக்கொண்டு தங்களுடைய அதிகாரத்தைப் பெருக்கி

வந்தார்கள். நிலமானிய ஏற்பாட்டின்கீழ் செல்வம் என்பது நிலத்தைப் பொறுத்ததாய் இருந்தது ; ஏன், நிலத்தையே செல்வம் என்று சொல்லிவிடலாம். ஆனால், இப்போது ஒரு புது வகையான செல்வம் சேர்க்கப்பட்டு வந்தது. இது நிலத்திலிருந்து வரவில்லை ; கைத்தொழில், வியாபாரம் இவற்றிலிருந்து வந்தது. இதனால் பலனும், பலமும் அடைந்தவர்கள் புதிய மத்திய வகுப்பார், அதாவது, 'பூர்ஷுவா'க்கள். இந்தச் சண்டை பழைய சண்டைதான். ஆனால் இதில் ஈடுபட்டுள்ள இரு திறத்தாரின் நிலைமையிலும் மாறுதல் ஏற்பட்டிருக்கிறது. அதைத்தான் நாம் இப்போது காண்கிறோம். நிலமானிய ஏற்பாடு, இன்னும் அமுலில் இருந்தாலும், தானே மேற்சென்று வலியத்தாக்கும் நிலைமை மாறி, பிறர் தாக்குதலினின்று தன்னைக் காப்பாற்றிக்கொள்ளும் நிலைமைக்கு வந்துவிட்டது. 'பூர்ஷுவா' வகுப்போ, தன்னுடைய புதிய பலத்தில் நம்பிக்கை கொண்டதாய், வலியச் சென்று தாக்கத் தொடங்குகிறது. இப்போராட்டம் நூற்றாண்டுக் கணக்கில் இடைவிடாது நடந்து வருகிறது. காலம் செல்லச் செல்லப் 'பூர்ஷுவா'க்களின் கை மேலோங்குகிறது. ஐரோப்பாவின் வெவ்வேறு நாடுகளில், இப்போராட்டம், வெவ்வேறு தன்மை கொண்டதாக இருக்கிறது. கீழ் ஐரோப்பாவில் இப்போராட்டம் நிகழவில்லை. மேல் ஐரோப்பாவில்தான் 'பூர்ஷுவா' வகுப்பு முதலில் பிரதானியம் பெறுகிறது,

பழைய கட்டுகள் இற்று விழுந்ததும் பல துறைகளில் முன்னேற்றம் ஏற்படலாயிற்று. கலை, இலக்கியம், விஞ்ஞானம், கட்டிட முறை எல்லாவற்றிலும் அபிவிருத்தி காணப்பட்டது. புதுப்புது விஷயங்கள் கண்டு பிடிக்கப்பட்டன. மனித உணர்ச்சி கட்டுகளை உடைத்துக் கொண்டு கிளம்பும்போது எங்கும் இது நிகழக் காண்

கிறோம் விடுதலை அடைந்த சக்தி விரிந்து பரவுகிறது. நமது நாடும் விடுதலை பெறும்போது நமது ஜனங்களின் மேதாவிலாசம் பலதுறைகளிலும் விகசித்து வியாபிப் பதைப் பார்ப்போம்.

மதஸ்தாபனத்தின் ஆதிக்கம் குறையக் குறைய, மக்கள் ஆலயங்கள் கட்டுவதும் குறைகிறது. பல இடங் களில் அழகிய கட்டிடங்கள் தோன்றுகின்றன. ஆனால், அவைகள் நகரமன்றங்களாகவும் அவைபோன்ற வேறு கட்டிடங்களாகவும் இருக்கின்றன. காதிக் முறையும் மறைந்து விடுகிறது. புதியமுறை தோன்றி வளர்கிறது.

மேற்கு ஐரோப்பா இவ்வாறு புதியவேகம் நிறைந்து காணப்பட்ட சமயத்தில், கீழ்த்திசைப் பொன்னாசை அதைப் பலமாகப் பிடித்துக்கொண்டது. இந்தியாவுக்கும் சீனாவுக்கும் சென்றுவந்த மார்க்கோ போலோ முதலிய யாத்திரீகர்களின் கதைகள் அவர்களுடைய மன உலகில் ஒரு பரபரப்பை உண்டாக்கின. கீழ்த்திசையின் ஏராள மான ஐசுவரியம், பலரைக் கடலோடும் முயற்சியில் செலுத்தியது. அதே சமயம், கான்ஸ்டாண்டிநோபிளும் துருக்கியர் வசமாயிற்று. கீழ்த்திசைக்குச் செல்லும் தரை மார்க்கங்களும் கடல் மார்க்கங்களும் துருக்கியர் ஆதிக்கத்தில் இருந்தன. அவர்கள் வியாபாரம் பெருகு வதை ஆதரிக்கவில்லை. இதைக் கண்டு பெரிய வியாபாரி கள் மனம் புழுங்கினார்கள். கீழ்த்திசைப் பொன்னை அடையத் துடித்துநின்ற வேறு சிலரும் வயிறெரிந் தார்கள். ஆகவே, அவர்கள் பொன்மயமான கீழ்நாடு களைச் சேர்வதற்குப் புது மார்க்கங்களை நாடலானார்கள்.

நமது பூமி உருண்டை வடிவமானதென்றும், அது சூரியனைச் சுற்றி வருகிறதென்றும், இக்காலத்தில் பள் ளிச் சிறுரும் அறிந்திருக்கிறார்கள். இது நமக்கு மிகவும் சாதாரணமாகவே தோன்றுகிறது. ஆனால், முன் காலத்

தில் அப்படி இல்லை. மேற்கூறியவாறு நினைக்கவும் பேசவும் துணிந்தவர்கள் மத ஸ்தாபனத்தின் கோபத்துக்குப் பாத்திரமானார்கள். அதையும் பொருட்படுத்தாமல் பலர் 'பூமி உருண்டையானது தான்' என்று எண்ணத் தொடங்கினார்கள். பூமி உருண்டையாய் இருப்பது வாஸ்தவமாயின் மேற்கு நோக்கிச் சென்றால் கூட இந்தியாவையும் சீனாவையும் சேர்வது சாத்தியமாய் இருக்கவேண்டும். இவ்வாறு சிலர் எண்ணினார்கள். வேறு சிலர் ஆப்பிரிக்காவைச் சுற்றிக்கொண்டு இந்தியாவுக்குப் போகலாம் என்று கருதினார்கள். அக்காலத்தில் சூயஸ் கால்வாய் இல்லை என்பதை நீ மறந்துவிடக்கூடாது. ஆகவே, கப்பல்கள் மத்தியதரைக் கடலிலிருந்து நேராகச் செங்கடலுக்குச் செல்லமுடியாது. இரு கடல்களுக்கும் இடையேயுள்ள நிலப்பிரதேசத்தில் சாமான்களும் பண்டங்களும் ஒட்டகங்களின்மீது அனுப்பப்பட்டுப் பிறகு மறுபக்கத்திலுள்ள கப்பல்களில் ஏற்றிக்கொள்ளப்பட்டன. இந்த முறை எக்காலத்திலும் அவ்வளவு சௌகரியமாக இருந்ததாகத் தெரியவில்லை. எகிப்தும் சிரியாவும் துருக்கியரின்கீழ் வந்த பிறகு இதிலுள்ள கஷ்டம் இன்னும் அதிகரித்தது.

ஆனால், இந்தியாவின் ஐசுவரியம் மக்களைக் காந்தம் போல் கவர்ந்து இழுத்தது. புது நாடுகளைத் தேடிக் காணும் கடற்பிரயாணங்களில் ஸ்பெயினும் போர்த்துகலும் முந்திக்கொண்டன. ஸ்பெயின் அப்போதுதான் மூர்களைக் கிரானடாவிலிருந்து முடிவாக விரட்டிக் கொண்டிருந்தது. அரகான் அரசனாகிய பர்டினண்டுக்கும் காஸ்டில் ராணியாகிய இசபெல்லாவுக்கும் நடந்த திருமணம் கிறிஸ்தவ ஸ்பெயினில் ஒற்றுமையை உண்டாக்கியது. 1492-இல் அதாவது துருக்கியர் கான்ஸ்டாண்டிநோபிளைக் கைப்பற்றி 50 ஆண்டுகள் ஆனபின்பு அரேபிய

கிரானடா வீழ்ச்சியுற்றது. உடனே, ஸ்பெயின் ஐரோப்பாவின் வல்லரசாக விளங்கியது.

போர்த்துகீசியர் கிழக்கு நோக்கியும், ஸ்பானியர் மேற்கு நோக்கியும் செல்லத் தலைப்பட்டார்கள். 1445-இல் போர்த்துகீசியர் வர்ட் முனையைக் கண்டு பிடித்தார்கள். இது ஆப்பிரிக்காவின் மேல்கோடி முனை. ஆப்பிரிக்காப் படத்தைப் பார்த்தால், ஐரோப்பாவிலிருந்து இதை நோக்கிச் செல்வோர் தென்மேற்கு திசையில் செல்ல வேண்டுமென்பது தெரியவரும். வர்ட் முனையை அடைந்த பிறகு தென்கிழக்காகத் திரும்பிச் செல்ல வேண்டியிருக்கிறது. இம்முனை கண்டு பிடிக்கப்பட்ட காரணத்தால் ஆப்பிரிக்காவைச் சுற்றிக்கொண்டு இந்தியாவுக்குப் போக முடியும் என்று பலர் நம்பத் தொடங்கினார்கள்.

இதற்குப் பிறகு நாற்பதாண்டுகள் சென்றன. கி. பி. 1486-இல், பார்த்தலோமியோ டையஸ் என்னும் போர்த்துகீசியன் ஆப்பிரிக்காவின் தென்கோடி முனையைச் சுற்றிக்கொண்டு சென்றான். அது நன்னம்பிக்கை முனை என்று அழைக்கப்படுகிறது. இதற்குச் சில வருஷங்களுக்குள் வாஸ்கோடகாமா என்னும் இன்னொரு போர்த்துகீசியன் இதைப் பயன் படுத்திக்கொண்டு நன்னம்பிக்கை முனை வழியாக இந்தியாவுக்கு வந்து சேர்ந்தான். மலையாளக் கரையில் கள்ளிக்கோட்டை என்னுமிடத்தை அவன் 1498-இல் அடைந்தான்.

ஆகவே, இந்தியாவுக்குச் சென்று சேர்கிற பந்தயத்தில் போர்த்துகீசியர் வெற்றிபெற்றனர். ஆனால், உலகின் மற்றொரு பக்கத்தில் பெரு நிகழ்ச்சிகள் நிகழ்ந்து கொண்டிருந்தன. ஸ்பெயின் அதனால் நல்ல லாபம் அடையப் போகிறது. 1492-இல் கிறிஸ்தாபர் கொலம்பஸ் அமெரிக்காவைக் கண்டுபிடித்தான். ஜினோவாவைச் சேர்ந்த

அவன், உலகம் உருண்டையானது என்னும் நம்பிக்கையி ளுல், மேற்குமுகமாகப் பிரயாணம் செய்து ஜப்பானையும் இந்தியாவையும் அடைய நினைத்தான்! ஆனால், அவன் ஓர் ஏழை. தான் மேற்கொள்ள நினைத்த பிரயாணம் அவ்வளவு அதிக தூரம் இருக்கும் என்று அவன் கருதவில்லை. அவன் ஒவ்வோர் அரசனிடமும் சென்று தன் பிரயாணத்துக்கு வேண்டிய உதவிபுரியுமாறு கேட்டான். கடைசியில், ஸ்பெயினை ஆண்ட பர்டினண்டும் இசபெல்லாவும் அவனுக்கு உதவிபுரியச் சம்மதித்தார்கள். எண்பத்தெட்டுப் பேரைக்கொண்ட மூன்று கப்பல்களோடு கொலம்பஸ் தன் பிரயாணத்தைத் தொடங்கினான். எதிரில் என்ன இருக்கிறதென்று யாருக்கும் தெரியாது. ஒருவரும் அறியாத இடத்தை நோக்கிச் செய்யப்பட்ட அப்பிரயாணம் வீரதீரம் நிறைந்ததென்றே சொல்ல வேண்டும். கொலம்பஸ் அசைக்கமுடியாத நம்பிக்கை கொண்டிருந்தான். அவனுடைய நம்பிக்கை வீண் போகவில்லை. 69 நாள் கடலில் பிரயாணம் செய்தபிறகு அவர்கள் கரையை அடைந்தார்கள். அதுதான் இந்தியா என்று கொலம்பஸ் எண்ணினான். ஆனால் உண்மையில் அது ஒரு சிறிய தீவு. மேற்கு இந்தியத் தீவுகளில் ஒன்று. கொலம்பஸ் அமெரிக்காக் கண்டத்தை அடையவே இல்லை. அவன் தன் ஆயுள் முழுதும் ஆசியாவைச் சென்று கண்டுவிட்டதாகவே எண்ணியிருந்தான். அவன் செய்த இந்த வேடிக்கையான தவறுதல் இன்றும் மாருமல் இருந்து வருகிறது. அந்தத் தீவுகள் இன்றும் மேற்கு இந்தியத் தீவுகள் என்று அழைக்கப்படுகின்றன. அமெரிக்காவின் ஆதிகுடிகளும், இந்தியர் அல்லது செந்நிற இந்தியர் என்று இன்றும் அழைக்கப்படுகிருர்கள்.

கொலம்பஸ் ஐரோப்பாவுக்குத் திரும்பிவந்து, அடுத்த வருஷம் இன்னும் அதிகக் கப்பல்களுடன் சென்ருன். இந்

தியாவுக்குப் புதுவழி கண்டு பிடிக்கப்பட்டு விட்டது— அமெரிக்காவுக்குச் செல்லும் வழி அப்போது அவ்வாறு கருதப்பட்டது—என்கிற விஷயம் ஐரோப்பாவைப் பெரிய பரபரப்புக் குள்ளாக்கியது. இதற்கு அடுத்தாற் போல்தான் வாஸ்கோடகாமா கிழக்கு நோக்கி விரைந்து சென்று கள்ளிக்கோட்டையைச் சேர்ந்தது. கிழக்கிலும் மேற்கிலும் புது நாடுகள் கண்டுபிடிக்கப்பட்ட செய்தி கள் ஐரோப்பாவுக்கு எட்ட எட்ட அதன் பரபரப்பு அதி கரித்தது. இந்தப் புது நாடுகளின் ஆதிக்கத்துக்காகப் போட்டியிட்டவை போர்த்துகலும் ஸ்பெயினும்தான். இவ்விரு நாடுகளுக்கும் தகராறு முற்றிவிடாதபடி போப் பாண்டவர் மத்தியஸ்தம் செய்யப் புறப்பட்டார். கடைத் தேங்காயை எடுத்து வழிப்பிள்ளையாருக்கு உடைப்பதில் கஷ்டம் என்ன இருக்கிறது? 1493-இல் அவர் ஓர் எல்லைப் பிரிவினைக் கட்டளை விடுத்தார். அவர், அஜோர்ஸ் தீவுகளுக்கு மேற்கே 100 லீக் (1 லீக்—3 மைல்) தள்ளி வடக்குத் தெற்காக ஒரு கற்பனைக் கோட்டைக் கிழித்து, அந்தக் கோட்டுக்குக் கிழக்கே உள்ள கிறிஸ்தவ நாடல் லாத மற்றெல்லாவற்றையும் போர்த்துகலும், அதேபோல் அந்தக் கோட்டுக்கு மேற்கே உள்ள நாடுகளை ஸ்பெயினும் எடுத்துக்கொள்ளலாம் என்று தீர்ப்பளித்தார். ஐரோப்பா நீங்கலாக, உலகம் முழுவதையும். இவ்வாறு அவ்விரு நாடு களுக்கும் வழங்கிய போப்பாண்டவரின் வள்ளன்மையை என்னென்பது! இவ்வளவு பெரிய கொடையை வழங்கிய அவருக்குக் கையைவிட்டுத் தம்பிடி கூட நஷ்டமாகவில்லை. அஜோர்ஸ் தீவுகள் அட்லாண்டிக் சமுத்திரத்தில் உள் ளவை. அவைகளுக்கு 300 மைல் மேற்கே கோடிடுவ தென்றால், வட அமெரிக்கா முழுவதும், தென் அமெரிக்கா வில் பெரும் பகுதியும் அக்கோட்டுக்கு மேற்கே இருக் கின்றன. ஆகவே, வட அமெரிக்கா, தென் அமெரிக்கா

இரண்டையும் ஸ்பெயினுக்கும், இந்தியா, சீனு, ஜப்பான் முதலிய கீழ் நாடுகளையும் ஆப்பிரிக்காக் கண்டம் முழு வதையும் போர்த்துகலுக்கும் போப்பாண்டவர் தாராள மாகத் தானம் செய்து விட்டார்!

உடனே, போர்த்துகீசியர் தங்கள் பங்குக்கு வந்த பெரிய நிலப்பரப்பைத் தங்கள் சுவாதீனத்துக்குக் கொண்டுவரத் தலைப்பட்டார்கள். இது அவ்வளவு எளிதாயில்லை. ஆனுல், அவர்கள் சிறிது முன்னேற்றம் அடைந்தார்கள். அவர்கள் கிழக்கு நோக்கிச் சென்று கொண்டே இருந்தார்கள். 1510-இல் இந்தியாவில் கோவா வையும், 1511-இல் மலாய் தீபகற்பத்தில் மலாக்காவையும் அதை அடுத்து ஜாவா தீவையும், 1576-இல் சீனுவையும் அவர்கள் சென்று சேர்ந்தார்கள். இதிலிருந்து மேற் கண்ட இடங்களை அவர்கள் சுவாதீனம் செய்து கொண் டார்கள் என்று அர்த்தம் பண்ணக்கூடாது. சில இடங் களில் அவர்களுக்குச் சிறிது கால் வைக்க இடம் கிடைத்தது; அவ்வளவுதான். கீழ்த் திசையில் அவர் களுடைய வருங்கால வரலாற்றை அடுத்த கடிதம் ஒன்றில் பேசலாம்.

கீழ்த் திசையில் பர்டினண்ட் மகெல்லன் என்னும் பேர்கொண்ட ஒரு போர்த்துகீசியன் இருந்தான். அவன் தன்னுடைய போர்த்துகீசிய எஜமானர்களோடு பிணங் கிக்கொண்டு, ஐரோப்பாவுக்குத் திரும்பிவந்து ஸ்பானியக் குடியாகி விட்டான். இந்தியாவுக்கும், கிழக்குத் தீவு களுக்கும் கீழ் மார்க்கமாக அதாவது நன்னம்பிக்கைமுனை வழியாகச் சென்ற அவன், இப்போது மேல் மார்க்கமாக அதாவது அமெரிக்கா வழியாக அங்குச் செல்ல விரும் பினன். ஒருவேளை, கொலம்பஸ் கண்டுபிடித்த நாட்டுக்கும் ஆசியாவுக்கும் யாதொரு சம்பந்தமும் இல்லையென்று அவன் உணர்ந்திருந்தான் போலும்! உண்மையைச்

சொல்லுமிடத்து, 1513-இல் ஒரு ஸ்பானியன், பால்போ என்னும் பேருடையவன், மத்திய அமெரிக்காவில் பனுமா மலைகளைக் கடந்து அப்பால் சென்று பசிபிக் சமுத்திரத்தைக் கண்டான். யாது காரணம் பற்றியோ, அவன் அதைத் தென்கடல் என்று அழைத்தான். அதன் கரை மீது நின்று கொண்டு, அவன் தான் கண்டுபிடித்த அப்புதிய கடலும் அதன் அலையால் அலம்பப் பெற்ற சகல நாடுகளும் தனது தலைவனாகிய ஸ்பானிய அரசனுடையவை என்று உரிமை கொண்டாடினன்!

1519-இல் மகெல்லன் தனது மேற்குப் பிரயாணத்தைத் தொடங்கினன். இதுதான் எல்லாப் பிரயாணங்களிலும் பெரிதாக முடிந்தது. அவனிடம் ஐந்து கப்பல்கள் இருந்தன; அவனுடன் 270 கலவர்* சென்றனர். அவன் அட்லாண்டிக் சமுத்திரத்தைக் கடந்து தென் அமெரிக்கா சென்றான். அங்கிருந்து தெற்கிலேயே சென்று அதன் தென்கோடி முனையை அடைந்தான். இதற்குள் ஒரு கப்பல் உடைந்து நாசமாய்விட்டது; இன்னொன்று அவனை நடுக்கடலில் கைவிட்டுத் திரும்பிவிட்டது; எஞ்சியவை மூன்று கப்பல்கள். இம்மூன்று கப்பல்களுடன் அவன் தென் அமெரிக்காவுக்கும் அதற்குத் தெற்கே உள்ள ஒரு தீவுக்கும் இடையிலுள்ள குறுகிய ஜலசந்தியைக் கடந்து மேற்கேயுள்ள பெரும் †பௌவத்தை அடைந்தான். அதை அவன் பசிபிக் மகா சமுத்திரம் என்று அழைத்தான். ஆங்கிலத்தில் 'பசிபிக்' என்றால் 'அமைதியான' என்று அர்த்தம். அட்லாண்டிக் சமுத்திரத்தோடு ஒப்பிடும்போது அது மிகவும் அமைதியுடன் விளங்கியதாம். மகெல்லன் பசிபிக் சமுத்திரத்தைச் சேர்வதற்குப் பதினன்கு மாத காலம்

* கலவர் - கப்பலில் செல்வோர்.

† பௌவம் - சமுத்திரம்.

பிடித்தது அவன் கடந்து சென்ற ஜலசந்தி அவன் பெயரால் 'மகெல்லன் ஜலசந்தி' என்று இன்றும் வழங்கி வருகிறது.

இதற்குமுன் யாரும் கடந்தறியாத கடலின்மீது மகெல்லன் வெகு தீரத்துடன் முதலில் வடக்காகவும் பிறகு வடமேற்காகவும் சென்றான். அவனுடைய பிரயாணத்தில் மிகவும் நெஞ்சு நடுங்கும்படியான பகுதி இதுதான். அவனுடைய பிரயாணம் முடிய எவ்வளவு காலம் பிடிக்கும் என்று யாருக்குத் தெரியும்? ஏறக் குறைய 4 மாதம், சரியாகச் சொன்னால் 108 நாட்கள், மகெல்லனும் அவனுடன் சென்ற புலம் பெயர் மாக்களும் நடுக்கடலில் அன்னந் தண்ணீருக்குக் கஷ்டப்பட்டுக் கொண்டிருந்தார்கள். இவ்வாறு, பல இன்னல்களுக்குப் பிறகு, அவர்கள் பிலிப்பைன் தீவுகளை அடைந்தார்கள். அங்கு வாழ்ந்த ஜனங்கள் அவர்களிடம் பட்சம் காட்டிய தோடு அவர்களுக்கு உண்டி முதலியனவும் கொடுத்து உதவினார்கள். அவர்களோடு பல பொருள்களைப் பரி வர்த்தனை செய்து கொண்டார்கள். ஆனால், ஸ்பானியர் மதம் பிடித்தவர்களாகவும், வலுச்சண்டைக்காரர்களாக வும் இருந்தார்கள். அத்தீவின் இரண்டு தலைவர்களுக்குள் விளைந்த சிறுபோரில் தலையிட்டு மகெல்லன் தன் தலையை இழந்தான். வேறு பல ஸ்பானியரும் தங்கள் உயிரை இழந்தனர். எல்லாவற்றிற்கும் அவர்களுடைய தலைக் கொழுப்புதான் காரணம்.

ஸ்பானியருக்கு வாசனைத் திரவியங்கள் விளையும் தீவின்மீது நோக்கம். ஆகவே, அவர்கள் அத்தீவுகளை நாடிச் சென்றார்கள். மூன்று கப்பல்களில் ஒன்று எரிந்து நஷ்டமாகி விட்டது. மீந்தவை இரண்டுதான். இவை களில் ஒன்று பசிபிக் சமுத்திர வழியாக ஸ்பெயினுக்கும், இன்னொன்று நன்னம்பிக்கைமுனை வழியாக ஸ்பெயி

னுக்கும் திரும்பிச் செல்வதென்று தீர்மானிக்கப்பட்டது. பசிபிக் சமுத்திர வழியாகப் புறப்பட்ட கப்பல் அதிக தூரம் போவதற்குள் போர்த்துகீசியர் கையில் சிக்கிக் கொண்டது. 'விட்டோரியா' என்னும் பெயர் பூண்ட மற்றொரு கப்பல், ஆப்பிரிக்காவைச் சுற்றிக்கொண்டு 1522-இல் ஸ்பெயினில் செவில் என்னுமிடத்தை, தான் புறப்பட்ட மூன்று வருஷத்துக்குப் பிறகு, பதினெட்டே பேருடன் அடைந்தது. உலகத்தைச் சுற்றிவந்த முதற் கப்பல் அதுதான்.

'விட்டோரியா'வின் பிரயாணத்தைப்பற்றி நான் சற்று விரிவாகவே பேசிவிட்டேன். ஏனெனில், அது அவ்வளவு ஆச்சரியகரமாயிருக்கிறது. இப்போது நாம் பெரிய கப்பல்களில் யாதொரு குறைவுமின்றி நீண்ட பிரயாணங்கள் செய்கிறோம். ஆனால், இந்த ஆதி கடற் பிரயாணிகளை எண்ணிப் பார்! அவர்கள், எவ்விதமான அபாயத்தையும் பொருட்படுத்தாமல், பார்த்தும் பழகியும் அறியாத கடல்களின்மீது, காணாத நாடுகளைக் காணப் புறப்பட்டுத் தங்களுக்குப் பின் வருவோருக்காகக் கடல் மார்க்கங்களைக் கண்டுபிடித்தார்கள். அக்காலத்துப் போர்த்துகீசியரும், ஸ்பானியரும் குரூர சுபாவமும், செருக்கும் படைத்திருந்தார்கள் என்பது வாஸ்தவம். ஆனால், அவர்கள் ஒப்பற்ற தைரியசாலிகளாகவும் துணிச்சல் நிறைந்தவர்களாகவும் இருந்தார்கள் என்பதை யாரும் மறுக்க முடியாது.

மகெல்லன் உலகைச் சுற்றி வந்துகொண்டிருந்த போது கோர்டேஸ், மெக்ஸிகோ நகரவாயிலில் ஜெயசாலி யாகப் பிரவேசித்துக்கொண் டிருந்தான். ஆஸ்டெகிய சாம்ராஜ்யத்தை அவன் ஸ்பானியக் கொடியின்கீழ் கொண்டுவர முயன்றுகொண் டிருந்தான். இந்த வரலாற் றைப் பற்றியும் அமெரிக்காவின் மயா நாகரிகத்தைப்

பற்றியும் நான் ஏற்கெனவே உனக்குக் கூறியிருக்கிறேன். 1519-இல் கோர்டேஸ் மெக்சிகோவை அடைந்தான். 1530-இல் பிசாரோ தென் அமெரிக்காவிலுள்ள இன்கா சாம்ராஜ்யத்தை (இப்போது 'பெரு' உள்ள இடம்) அடைந்தான். கோர்டேஸ், பிசாரோ இருவரும், உள் நாட்டுப் பிரிவினையைப் பயன்படுத்திக் கொண்டு, மோசம் நாசம் எதையும் கூசாது செய்து, தங்களுடைய தைரியத்தினாலும் சௌரியத்தினாலும் இரு பழைய சாம்ராஜ்யங்களை இருந்த இடம் தெரியாமல் ஒழித்துவிட்டார்கள். ஆனால், அச்சாம்ராஜ்யங்களும் காலத்துக்கு ஏலாத கர்நாடக சம்பிரதாயங்களைப் பற்றிக்கொண்டு வாழ்ந்து வந்தன. ஆகவே, எதிரியின் கை பட்டவுடன் 'பொல பொல' என்று உதிர்ந்துவிட்டன.

புது நாடுகளைக் கண்டுபிடிக்க வேண்டும் என்னும் பெருநோக்கத்துடன் முதலில் சிலர் சென்றார்கள். அவர்கள் கண்டுபிடித்த இடங்களுக்கு, கொள்ளை முதலிய இழிநோக்கத்துடன் பலர் பிறகு சென்றார்கள். ஸ்பானிய அமெரிக்காவில் இக்கீழோர் கூட்டத்தின் உபத்திரவம் அதிகமாயிருந்தது. அவர்கள் கொலம் பசுக்குக்கூட இன்னல் விளைத்தார்கள். ஆனால் பெருவிலிருந்தும், மெக்சிகோவிலிருந்தும் பொன்னும் வெள்ளியும் இடைவிடாது ஸ்பெயினுக்குச் சென்றுகொண்டே இருந்தன. அவை ஸ்பெயினில் ஏராளமாகக் குவிந்தன. அதைக் கண்டு ஐரோப்பா பிரமித்து விட்டது. இப்போது ஸ்பெயின் ஐரோப்பாவிலேயே ஆதிக்கம் மிகுந்த நாடாக விளங்கியது. அங்கிருந்து பொன்னும் வெள்ளியும் பிற ஐரோப்பிய நாடுகளுக்கும் பரவின. ஆகவே, கிழக்கிலிருந்து வரும் பொருள்களை வாங்குவதற்கு ஐரோப்பியரின் கையில் பணத்துக்குக் குறைவில்லை.

ஸ்பெயினும் போர்த்துகலும் அடைந்த வெற்றியைக்

கண்டு மற்ற நாடுகளும் மனக்கோட்டை கட்ட ஆரம்பித்தன. இவைகளில் பிரான்சு, இங்கிலாந்து, ஹாலந்து, வட ஜெர்மானிய நகரங்கள் ஆகியவை முக்கியமானவை. அவைகள் முதலில் ஆசியாவுக்கும் அமெரிக்காவுக்கும் வடக்கு மார்க்கம் ஒன்றைக் கண்டுபிடிக்க வருந்தி முயன்றன. நார்வேக்கு வடக்காக ஆசியாவுக்கும், கிரீன்லாந்து வழியாக அமெரிக்காவுக்கும் அவர்கள் போக முயன்றனர். ஆனால், அவர்கள் இதில் வெற்றி பெறவில்லை. ஆகவே, பழைய மார்க்கங்களையே கடைப் பிடிக்க ஆரம்பித்தார்கள்.

அக்காலத்தில், உலகம் தன்னையும் தன்னகத்தே மறைந்து கிடக்கும் எண்ணற்ற பொக்கிஷங்களையும், அற்புதங்களையும் மனித ஜாதிக்குத் திறந்து காட்டுவது போலிருந்தது. அது மிகவும் ஆச்சரியமயமான காலமாய் இருந்திருக்க வேண்டும். புதிது புதிதான கடல்களும், நாடுகளும் ஒன்றன்பின் ஒன்றாகக் கண்டுபிடிக்கப்பட்டு வந்தன. 'எள்ளே, திறவாய்' என்னும் மந்திரத்தை உச்சரிக்க வேண்டியதுதான். அத்தனை ஐசுவரியமும் மனிதனை வந்து அடைந்துவிடும் போலிருந்தது. இந்த வீர தீரச் செயல்களின் மாய மந்திரம் காற்றிலேயே கலந்து வீசுவது போலிருந்தது.

உலகம் இப்போது குறுகிக் காணப்படுகிறது. புதிதாகக் கண்டுபிடிக்க அதில் ஒன்றும் இல்லை என்று தோன்றுகிறது. ஆனால், அப்படி நினைப்பது தவறு. விஞ்ஞானமானது பல புதிய வழிகளைத் திறந்துவிட்டிருக்கிறது. அவைகளை நாம் துருவி ஆராய வேண்டும். ஆகவே, துணிகர முயற்சிக்கு இப்போதும் பஞ்சம் ஒன்றும் இருப்பதாகத் தெரியவில்லை. விசேஷமாக இன்றைய இந்தியாவில் அதற்கு வேண்டிய இடம் இருக்கிறது!

# 74

## மங்கோலிய சாம்ராஜ்யங்களின் சீர்குலைவு

ஜூலை 9, 1932.

ஐரோப்பாவில் இடைக்காலம் முடிவடைகிறது; புது உணர்ச்சியும் புது விழிப்பும் புது வேகமும் தோன்றுகின்றன. அந்த வேகம் பல வழிகளில் பாய்ந்தோடுகிறது. எங்கு நோக்கினும் மூர்த்தன்னியமான முயற்சி, சிருஷ்டிகரமான செயல். தங்களுடைய சிறு நாடுகளில் நூற்றுக் கணக்கான ஆண்டுகளாக அடைபட்டுக்கிடந்த ஐரோப்பிய மக்கள், திடீரென்று எல்லாக் கட்டுகளையும் உடைந்தெறிந்துவிட்டு, அகண்ட சமுத்திரங்களையெல்லாம் கடந்து உலகின் மூலை முடுக்குகளிலும் சென்று சேர்கிறார்கள். தங்களுடைய புதிய பலத்தில் நம்பிக்கை கொண்ட அவர்கள் சென்ற இடங்களிலெல்லாம் ஜெயம் பெறுவதோடு, அதியாச்சரியமான தீரச் செயல்களும் புரிகிறார்கள்.

திடீரென்று இம்மாறுதல் எப்படி விளைந்ததென்று ஆச்சரியப்படலாம். 13-ஆவது நூற்றாண்டின் இடையில் ஆசியாவிலும் ஐரோப்பாவிலும் மங்கோலியருடைய அதிகாரம் கொடிகட்டிப் பறந்தது. கீழ் ஐரோப்பா அவர்களுடைய ஆட்சியில் இருந்தது. மேல் ஐரோப்பா அவர்களைக் கண்டு உள்ளம் நடுங்கியது. அவர்களை வெல்வது யாருக்கும் அரிதென்றே தோன்றியது. ஐரோப்பாவை ஆண்ட பட்டவர்த்தனர், மகுடவர்த்தனர் யாவரும் சேர்ந்தாலும் மங்கோலிய மகாகானின் ஒரு சேனாதிபதிக்கேனும் இணை சொல்லமுடியுமா?

இருநூறு ஆண்டுகள் கழித்து சாம்ராஜ்யத் தலைநகரான கான்ஸ்டாண்டிநோபிளும், தென் கிழக்கு ஐரோப்பாவில் பெரும்பகுதியும் உதுமானியத் துருக்கியர் வசமாயின. முஸ்லீம்களும் கிறிஸ்தவர்களும் 800 ஆண்டுகள் போரிட்ட பிறகு, அரேபியாவையும் செல்ஜக் துருக்கியரையும் மயக்கிய அப்பெரும் பரிசு உதுமானியத் துருக்கியர் கையில் வீழ்ந்தது இதனாலும் அவர்களுடைய பசி அடங்கவில்லை. மேல் நாடுகளையும் ரோமாபுரியையும் கூட அவர்கள் ஜெயித்துச் சேர்த்துக் கொள்ள விரும்பினார்கள். ஹங்கேரியை வென்று வியன்னாவின் வெளி மதிலையும் இதாலிய எல்லையையும் கிட்டிய அவர்கள் ஜெர்மானிய (பரிசுத்த ரோம) சாம்ராஜ்யத்தையும் இதாலியையும் வெகுவாகப் பயமுறுத்தி விட்டார்கள். கிழக்கே பாக்தாதையும், தெற்கே எகிப்தையும் அவர்கள் தங்களுடைய சாம்ராஜ்யத்தில் சேர்த்துக்கொண்டார்கள். 16-ஆவது நூற்றாண்டின் இடையில் இப்பெரிய துருக்கிய சாம்ராஜ்யத்துக்குச் சுல்தான் சுலேமான் தலைவனாய் இருந்தான். இப்பெரிய சாம்ராஜ்யத்தைக் கட்டி ஆண்ட அவனுடைய ஆணை கடல்மீதும் தடையின்றிச் சென்றது.

அப்படியாயின், மேற்கூறிய மாறுதல் எங்ஙனம் நேர்ந்தது? மங்கோலிய பயத்தை ஐரோப்பா எவ்வாறு தொலைத்தது? துருக்கிய அபாயத்துக்கு அது எப்படித் தப்பிப் பிழைத்தது? அதுமட்டுமா? தானே பலாத்காரத்தில் இறங்கி அது பிறநாடுகளைப் பயமுறுத்திய விதம் என்ன?

மங்கோலிய பயம் ஐரோப்பாவில் நெடுநாள் நீடிக்கவில்லை. ஒரு புதிய கானைத் தேர்ந்தெடுப்பதற்குத் தாங்களாகவே தாயகம் சென்ற மங்கோலியர் பிறகு திரும்பி வரவே இல்லை. மங்கோலியாவிலிருந்து மேற்கு ஐரோப்பா வெகு தொலைவில் இருந்தது. மேலும், பரந்த

பாழ்வெளிகளில் வாழ்ந்து பழகிய அவர்களுக்குக் காடடர்ந்த மேல் ஐரோப்பா கவர்ச்சி அளிக்கவில்லை என்றும் சொல்லலாம். எப்படியோ மேல் ஐரோப்பா மங்கோலியரிடமிருந்து தப்பிப் பிழைத்துக்கொண்டது. அதற்குக் காரணம் அதனுடைய பராக்கிரமம் அல்ல. மங்கோலியர் வேறு காரியங்களில் ஈடுபட்டவர்களாய் அதன்மீது கவனம் செலுத்தாதபடியால்தான் அது தப்பிப் பிழைப்பது சாத்தியமாயிற்று. கீழ் ஐரோப்பாவில் அவர்கள் சிறிது காலம் தங்கியிருந்தார்கள். அதற்குப் பிறகு அவர்களுடைய ஆதிக்கம் சிறிது சிறிதாகச் சிதைந்துவிட்டது.

1452-இல் துருக்கியர் கான்ஸ்டாண்டிநோபிளைக் கைப்பற்றியது ஐரோப்பியச் சரித்திரத்தில் ஒரு முக்கிய மான மாறுதல் நிகழும் கட்டமாகக் கொள்ளப்படுகிறது என்று முன்பே கூறியுள்ளேனல்லவா? சௌகரியத்துக் காக அவ்வாண்டு, இடைக் காலத்தின் மறைவையும் மறு மலர்ச்சியின் பிறப்பையும் குறிப்பதாகக் கருதப்படுகிறது. அம்மறுமலர்ச்சி பல துறைகளிலும் ஒளிர்ந்து மணம் கமழ்ந்தது. ஆகவே, ஐரோப்பாவைத் துருக்கியர் எச் சமயத்தில் பயமுறுத்திக்கொண் டிருந்தார்களோ, எச் சமயத்தில் அவர்களுக்கு அநேகமாக வெற்றி கிடைத்து விடும் என்று தோன்றியதோ, அதே சமயத்தில் ஐரோப்பா தன் கால்களை நிலத்தில் அழுந்த ஊன்றித் தன் ஆற்றலை வளர்த்துக்கொள்ளத் தொடங்கியது. துருக்கியர் சில காலம் மேல் ஐரோப்பாவில் மேலும் மேலும் சென்று கொண்டே இருந்தார்கள். அந்தக் காலத்தில் நவீன நாடு காண வேட்கை கொண்ட ஐரோப்பியர் உலகை வலம் வந்து புது நாடுகளையும் புதுக் கடல்களையும் கண்டு பிடித்துக்கொண் டிருந்தார்கள். சுலேமானுடைய ஆட்சி யில் (1520-லிருந்து 1566-வரை) துருக்கிய சாம்ராஜ்யம்

வியன்னுவிலிருந்து கிழக்கே பாக்தாது, தெற்கே கெய்ரோ வரையில் பரவியிருந்தது. ஆனால், அதற்குப் பிறகு அபிவிருத்தி தடைப்பட்டு விட்டது. கான்ஸ்டாண்டிநோபிளை ஆண்ட பழைய கிரேக்கர்களின் ஊழல் சம்பிரதாயங்களுக்கு அடிமைகளாய்ப் போன துருக்கியர் தங்களுடைய பழைய பலத்தையும் சக்தியையும் இழந்து வந்தார்கள். ஐரோப்பாவின் பலமும் சக்தியும் வளர்ந்து வந்தன.

கடந்த காலத்தில் ஆசியா ஐரோப்பா மீது பன்முறை படையெடுத்துச் சென்றிருக்கிறது. ஐரோப்பாவும் ஆசியாமீது சில தடவை படையெடுத்து வந்திருக்கிறது. ஆனால், ஆசியாவின் படையெடுப்புக்களைப் போல், ஐரோப்பாவின் படையெடுப்புக்கள் அவ்வளவு முக்கியத்துவம் வாய்ந்தவை அல்ல. அலெக்சாந்தர் ஆசியாவைக் கடந்து இந்தியாவுக்கு வந்தான். அதனால் பெரிய பலன் ஒன்றும் விளையவில்லை. ரோமானியர் மெசபொடேமியாவைத் தாண்டி அப்பால் செல்லவே இல்லை. இதற்கு மாருக, ஐரோப்பா ஆதிகாலத்திலிருந்தே பல்வேறு ஆசிய ஜாதியார்களின் படையெடுப்புக்கு ஆளாகி வந்திருக்கிறது. இவைகளில் கடைசியானது உதுமானியரின் படையெடுப்பு. மெள்ள மெள்ள நிலைமை தலைகீழாக மாறுகிறது. ஐரோப்பா பலாத்காரத்தை மேற்கொள்ளுகிறது. இம்மாறுதல் 16-ஆவது நூற்ருண்டின் இடையில் நிகழ்வதாகக் கொள்ளலாம். புதிதாகக் கண்டுபிடிக்கப்பட்ட அமெரிக்கா விரைவில் ஐரோப்பாவுக்கு அடிபணிந்து விடுகிறது. ஆசியாவின் கதை அவ்வளவு எளிதில் முடிந்து விடுவதாயில்லை. 2000 ஆண்டுகள் வரையில், ஆசியாக் கண்டத்தின் பல்வேறு பாகங்களில் கால் பாவுவதற்கு வேண்டிய இடங்களை ஐரோப்பியர் முயன்று தேடிக்கொள்ளுகிருர்கள். 18-ஆவது நூற்ருண்

டின் நடுவிற்குள் சில பாகங்களில் ஆதிக்கம் செலுத்தவும் ஆரம்பித்து விடுகிறார்கள். இவ்வுண்மையை நினைவில் வைக்கவேண்டியது மிகவும் அவசியம். ஏனெனில் சரித்திரம் அறியாத சிலர் ஐரோப்பா எப்போதுமே ஆசியாவுக்கு எஜமான ஸ்தானத்தில் இருந்து வந்திருக்கிறது என்று தவறாக எண்ணிவிடுகிறார்கள். சிறிது காலமாகத்தான் ஐரோப்பா இப்புதிய வேஷத்தில் தோன்றி நடித்து வருகிறது. இதற்குள்ளாகவே 'சீன்' மாறி வருவதால் இவ்வேஷமும் பொருத்தமற்றதாகத் தோன்றுகிறது. கீழ் நாடுகளில் புதிய கருத்துக்களும் விடுதலையை நோக்கமாகக் கொண்ட பெரிய இயக்கங்களும் ஐரோப்பிய ஆதிக்கத்துக்கு எதிராகத் தோன்றி அதற்கு உலை வைக்க முயன்று வருகின்றன. இத்தேசீயக் கருத்துக்களைக் காட்டிலும் ஆழ்ந்தும் பரந்தும் காணப்படும் சமூக சமத்துவ சம்பந்தமான கருத்துக்கள் சாம்ராஜ்ய வாதத்தையும், சுரண்டல் கொடுமையையும் ஒழித்துத் தலைமுழுக முயன்று வருகின்றன. வருங் காலத்தில், ஐரோப்பா ஆசியாவின்மீது ஆதிக்கம் செலுத்துவதா, அல்லது ஆசியா ஐரோப்பாவின்மீது ஆதிக்கம் செலுத்துவதா என்கிற பிரச்சினைக்கு இடமே இல்லை. இனி, எந்தத் தேசமும் வேறொரு தேசத்தைச் சுரண்டிப் பிழைப்பதென்பது கூடவே கூடாது.

முகவுரை மிகவும் நீண்டுவிட்டது. மீண்டும் மங்கோலியரைக் கவனிப்போம். அவர்களுக்கு என்ன நேர்ந்ததென்று பார்ப்போம். 'மகாகான்'களாக யிருந்தவர்களின் வரிசையில் கடைசியாக வந்தவன் குப்ளேகான் என்பது உனக்கு ஞாபகமிருக்கலாம். 1292-இல் அவன் மரணமடைந்த பிறகு, ஆசியாவில் கொரியாவிலிருந்து ஐரோப்பாவில் போலந்து, ஹங்கேரி வரையில் வியாபித்துக் கிடந்த விஸ்தாரமான மங்கோலிய சாம்

ராஜ்யம் ஐந்து பெரும் பகுதிகளாகப் பிளவுபட்டது. இவை ஒவ்வொன்றையும் ஒரு பெரிய சாம்ராஜ்யத்துக்கு நிகராகவே சொல்லலாம். 68-ஆவது கடிதத்தில் இவைகளின் பெயர்களைக் கூறியுள்ளேன்.

இவைகளில் முக்கியமானது சீன ராஜ்யம். இதில் மஞ்சூரியா, மங்கோலியா, திபெத்து, கொரியா, அன்னம், டாங்கிங், பர்மாவில் ஒரு பாகம் ஆகியவை அடங்கியிருந்தன. குப்ளேகானின் சந்ததியாரான யுவான் வமிசத்தார் இதை ஆண்டு வந்தார்கள். ஆனால், அவர்களுடைய ஆட்சி அதிக காலம் நீடிக்கவில்லை. சிறிது காலத்திற்குள்ளாகவே, சாம்ராஜ்யத்தின் தென் பகுதியில் சில இடங்கள் பிரிந்து போய்விட்டன. கி. பி. 1368-இல் அதாவது குப்ளேகான் இறந்து 76 வருஷங்களுக்குப் பிறகு, அவனுடைய வமிசம் வீழ்ச்சியுற்றது; மங்கோலியரும் சீனாவைவிட்டு ஓடவேண்டியதாயிற்று.

மேற்குக் கோடியில் பொன்னிறக் கூட்டத்தாரின் சாம்ராஜ்யம் நடைபெற்றுவந்தது. பேர் எவ்வளவு அழகாயிருக்கிறது, பார்! குப்ளேகான் இறந்து 200 வருஷங்கள் வரையில் ருஷியப் பிரபுக்கள் அதற்கு அடங்கிக் கப்பம் கட்டிக்கொண்டு வாழ்ந்து வந்தனர். இதற்குப் பிறகு அதன் வலி குன்றத் தொடங்கியது. ருஷியப் பிரபுக்களின் தலைவனாக விளங்கிய மாஸ்கோ கோமகன் அதற்குக் கப்பம் கட்ட மறுத்தான். இவன் மகா இவான் என்று அழைக்கப்படுகிறான். வட ருஷியாவில், வியாபாரிகளின் ஆதிக்கத்தின்கீழ், பழைமையான நவோகிராட் குடியரசு நடந்துவந்தது. இவான் அதை வென்று தன்னுடைய ராஜ்யத்தில் சேர்த்துக் கொண்டான். இதற்கிடையில் துருக்கியர் கான்ஸ்டாண்டிநோபிளைக் கைப்பற்றிப் பழைய சக்கரவர்த்தி குடும்பத்தாரை அங்கிருந்து விரட்டிவிட்டார்கள். அக்குடும்பத்தைச் சேர்ந்த பெண்

ஒருத்தியை இவான் மணந்துகொண்டு தான் பழைய பைஜாண்டியச் சக்கரவர்த்தி பரம்பரையைச் சேர்ந்தவன் என்று உரிமை கொண்டாடினான். 1917-ஆம் வருஷத்துப் புரட்சியில் முடிவாக மறைந்தொழிந்த ருஷிய சாம்ராஜ்யம் இவ்வாறு மகா இவானின் தலைமையில் ஆரம்பமாயிற்று. இவானின் பேரன் மிகவும் கொடியவனாய் இருந்தான். ஆகவே, அவன் கொடிய இவான் என்று அழைக்கப் பட்டான். அவன் தன்னை 'ஜார்' என்று அழைத்துக் கொண்டான். 'ஜார்' என்னும் பட்டம் 'சீசர்' என்பதைப்போல் சக்கரவர்த்தி என்னும் பொருள் கொண்டது.

இவ்வாறு, மங்கோலியர் ஐரோப்பாவிலிருந்து முடிவாக விடை பெற்றுக்கொண்டனர். பொன்னிறக் கூட்டத்தாரில் எஞ்சி நின்றவர்களைப் பற்றியோ, மற்ற மத்திய ஆசிய மங்கோலிய சாம்ராஜ்யங்களைப் பற்றியோ நாம் அதிகமாகக் கவலைப்பட வேண்டியதில்லை. மேலும், அவைகளைப்பற்றி எனக்கும் அதிகமாகத் தெரியாது. ஆனால், ஒரு மனிதன்மட்டும் நமது கவனத்தைக் கவர் கிறான்.

அவனுடைய பெயர் தைமூர் என்பது. அவன் இரண்டாவது செங்கிஸ்கானாக விளங்க விரும்பினான். அவன் தன்னைச் செங்கிஸ்கானின் கால்வழியில் வந்தவன் என்று கூறிக்கொண்டான். ஆனால், உண்மையில் அவன் ஒரு துருக்கியன். அவன் முடவனா யிருந்தபடியால் தைமூர் லங் அல்லது தைமூர்லேம் என்று அழைக்கப்பட்டான். ('லங்' என்றால் பாரசீக மொழியில் முடவன் என்று அர்த்தம். 'லேம்' என்றால் ஆங்கிலத்தில் 'முடமான' என்று அர்த்தம்.) அவன், தன் தந்தை இறந்தபிறகு, 1369-இல் ஸாமர்கந்தின் அரசன் ஆனான். உடனே அவன் பிற நாடுகளை ஜெயிக்க ஆரம்பித்தான். அவன் பெரிய சேனாதிபதி; ஆனால் மகா குரூரமானவன். இதற்குள்

மத்திய ஆசியாவில் வாழ்ந்த மங்கோலியர் முஸ்லீம்களாய்விட் டிருந்தனர். தைமூரும் ஒரு முஸ்லீம்தான். ஆனால், அவன் முஸ்லீம்களிடத்தில்கூடச் சிறிதேனும் கருணை காட்டவில்லை. அவன் போன இடமெல்லாம் கொலையும் நாசமும்,நோவும் துன்பமும்தான்.மனிதர்களின் மண்டையோடுகளைக் கோபுரம் கோபுரமாக அடுக்கிப் பார்ப்பதில் அவனுக்குத் தனி ஆனந்தமாம். கிழக்கே டில்லியிலிருந்து மேற்கே சின்ன ஆசியாவரை, அவன் பல்லாயிரக் கணக்கான மக்களைக் கொன்று குவித்து, அவர்களுடைய மண்டை யோடுகளால் மேற்கூறியவாறு கபால கோபுரங்கள் கட்டுவித்துக் கண்டு மகிழ்ந்தானும்!

செங்கிஸ்கானும் அவனுடைய மங்கோலியரும் குரூரமாக நடந்துகொண்டு, கண்டதை நாசம் செய்து வந்தது வாஸ்தவமே. ஆயினும், அவர்களுக்கும் அவர்கள் காலத்தில் வாழ்ந்த மற்றவர்களுக்கும் அதிக வித்தியாசம் இல்லை. தைமூரின் விஷயம் அப்படி அல்ல. அக்கொடிய அரக்கனை யாரோடும் சேர்த்து எண்ணுவதற்கில்லை. அவன் ஒரு தனிப் பிறவி. வேண்டுமென்றே, கொடுமைக்காகவே கொடுமை இழைக்கும் அசுரத்தனத்தில் அவனுக்கு அவனேதான் இணை. ஓரிடத்தில், அவன் 2000 பேரைக் கோபுரம்போல் நிற்கவைத்துச் சுற்றிலும் சுவர் எழுப்பி, அவர்கள் அனைவரையும் உயிரோடு மூடிவிட்டானும்!

இவ்வாறு, மக்களை உயிரோடு சமாதி வைக்கும் இக்கொடிய ராட்சசனை இந்தியாவின் ஐசுவரியம் கவர்ந்தது. இந்தியாவின்மீது படையெடுத்துச் செல்ல அவனுடைய தளபதிகளும் பிரபுக்களும் எளிதில் ஒப்பவில்லை. இதை ஆலோசிப்பதற்கு ஸாமர்கந்தில் ஒரு பெரிய மந்திராலோசனை சபை கூடியது. இந்தியாவில் உஷ்ணம் தாங்க முடியாது என்று அவர்கள் ஆட்சேபித்தார்கள். கடைசி

யில், தைமூர், இந்தியாவில் அதிகநாள் தங்குவதில்லை என்றும், வெறுமே ஊரைச் சூறையாடி அழித்துவிட்டுத் திரும்பிவிடுவதாகவும் உறுதி கூறியதன்பேரில் அவர்கள் அதற்கு ஒத்துக்கொண்டார்கள். அவன் சொன்னபடியே நடந்துகொண்டான்.

வட இந்தியாவில் அப்போது முஸ்லீம் ஆட்சி நடந்து வந்தது. டில்லியில் சுல்தான் ஆண்டுவந்தான். ஆனால், அவனுடைய ராஜ்யம், மங்கோலியருடன் எல்லைப்புறங்களில் இடைவிடாது நிகழ்ந்துவந்த போர்களினால் பலவீனப்பட்டுக் கிடந்தது. ஆகவே, தைமூர் ஒரு மங்கோலியச் சேனையுடன் இந்தியாவுக்கு வந்தபோது அவனை உறுதியுடன் எதிர்த்து நிற்பார் ஒருவரும் இல்லை. ஹிந்துக்கள், முஸ்லீம்கள் என்கிற வித்தியாசமின்றி அவன் அனைவரையும் கொன்று குவித்துக் கபால கோபுரங்கள் கட்டுவித்தான். சிறைப்படுத்தப்பட்டோரின் தொகை அதிகமாகவே, அவன் அவர்கள் அனைவரையும் கொன்றுவிடும்படி உத்தரவிட்டான். அதன்படி லட்சம் பேர் கொல்லப்பட்டார்கள். ஓரிடத்தில் ஹிந்துக்கள், முஸ்லீம்கள் ஆகிய இருதிறத்தாரும் ராஜபுத்திர வழக்கமாகிய 'ஜௌஹரை' மேற்கொண்டு போர்க்களம் சென்று வீர மரணம் எய்தினர் என்று சொல்லப்படுகிறது. இந்தப் பயங்கரமான வரலாற்றை நான் ஏன் வளர்த்துக்கொண்டே போகவேண்டும்? தைமூர் சென்ற இடமெல்லாம் இதே கதைதான். அவனுடைய சேனை பஞ்சத்தையும் நோயையும் விதைத்துக்கொண்டே சென்றது. அவன் டில்லியில் 15 நாள் தங்கியிருந்தான். அப்போது அந்நகரம் பெரிய கொலைக்களமாகக் காட்சி அளித்தது. வழியில் காஷ்மீரைச் சூறையாடிவிட்டு அவன் ஸாமர்கந்த் நகருக்குத் திரும்பினான்.

தைமூர், கொடிய அரக்கனாயிருந்தாலும், ஸாமர்கந்திலும் மத்திய ஆசியாவைச் சேர்ந்த மற்ற இடங்களிலும் அழகிய கட்டிடங்களை நிருமாணிக்க எண்ணினான். ஆகவே, அவன், தனக்கு முன் சுல்தான் முகம்மது செய்தது போல, இந்தியாவிலிருந்து கட்டிடக்கலை வல்லாரையும் வேறு பல தேர்ந்த கைவினைஞரையும் தன்னுடன் அழைத்துச் சென்றான். இவர்களில் தலையானவர்களை அவன் தன்னுடைய ஊழியத்திலேயே வைத்துக்கொண்டு, மற்றவர்களை முக்கிய மேற்கு ஆசிய நகரங்களுக்கு அனுப்பிவைத்தான். இவ்வாறு புதிய கட்டிடக்கலை ஒன்று அபிவிருத்தியாயிற்று.

தைமூர் வந்து போனபிறகு, டில்லியில் மரணம் கோர நர்த்தனம் புரிந்தது. பஞ்சமும் நோயும் மக்களைப் படாத பாடுபடுத்தின. இரண்டு மாதங்கள் வரையில் வான் முறையான ஆட்சியோ, ஒழுங்கோ யாதொன்றும் இல்லை. அங்கு வாசம் செய்தவர்களோ மிகவும் சொற்பம். தைமூர், டில்லியில் தனக்குப் பிரதிநிதியாக இருக்கும்படி நியமித்துச் சென்றவனும் டில்லியைவிட்டு மூல்தானுக்கு ஓடிவிட்டான்.

பிறகு, தைமூர் மேற்குநோக்கிச் சென்று பாரசீகத்தையும் மெசபொடேமியாவையும் பாழ்படுத்தினான். 1402-இல், அங்காராவில், அவனுடைய சேனைக்கும் உதுமானியத் துருக்கியரின் சேனைக்கும் போர் மூண்டது. தைமூர், தன்னுடைய சேனையைத் திறமையாக நடத்திப் பகைவர் சேனையை முறியடித்தான். ஆனால்,சமுத்திரத்தை வெல்ல அவனால் முடியவில்லை. பாஸ்பரஸ் ஜலசந்தி குறுக்கிட்டதால் ஐரோப்பா அவனிடமிருந்து தப்பிப் பிழைத்தது.

இது நடந்து மூன்று வருஷத்துக்குப் பிறகு, 1405-இல் தைமூர் இறந்துவிட்டான். அவன் அப்போது சீனாவை

நோக்கிப் படையெடுத்துச் சென்றுகொண் டிருந்தான். அவனுடன் அவனுடைய சாம்ராஜ்யமும் ஒழிந்தது. ஏறக்குறைய மேற்கு ஆசியா முழுவதும் அதில் அடங்கி யிருந்தது. உதுமானியர், எகிப்தியர், பொன்னிறக் கூட்டத்தார் யாவரும் அவனுக்குத் திறை வழங்கி உயிர் வாழ்ந்து வந்தனர். அவன் ஒரு தலைசிறந்த சேனாபதி. அவனுடைய சேனாபதித்துவம் அதியாச்சரியமானது. சைபீரியாவின் உறைபனியில் அவன் நடத்திய சில போர்கள் அவனுடைய அசாதாரண சாமர்த்தியத்தைக் காட்டுகின்றன. இதைத் தவிர வேறு திறமைகள் அவனிடம் இல்லை. காட்டுமிராண்டித்தனமும் குரூரமும் நிறைந்த நாடோடியாகிய அவன், செங்கிஸ்கானைப்போல், சிறந்த அரசியல் அமைப்பையோ, தனக்குப்பின் சாம் ராஜ்ய பரிபாலனம் செய்வதற்குத் தகுந்த மனிதர்களையோ விடுத்துச் செல்லவில்லை. ஆகவே, அவனுடைய சாம்ராஜ் யம் அவனுடனேயே முடிந்துவிட்டது. அவன் மக்களைக் கொன்று, ஊர்களைப் பாழாக்கிய ஞாபகம்மட்டும் எஞ்சி நின்றது. எத்தனையோ வெற்றி வீரர்கள் மத்திய ஆசியாவைக் கடந்து சென்றிருக்கிறார்கள். ஆனால், அவர் களில் நால்வரைமட்டும் அங்குள்ளவர்கள் இன்றும் மறக்காமலிருக்கிறார்கள். அவர்கள் முறையே அலெக் சாந்தர், சுல்தான் முகம்மது, செங்கிஸ்கான், தைமூர் என்னும் இந்நால்வரே ஆவர்.

தைமூர் உதுமானியத் துருக்கியரைத் தோற்கடித்து நிலைகுலையச் செய்தான் என்பது உண்மையே. ஆயினும், அவர்கள் விரைவில் சமாளித்துக்கொண்டு 1453-இல், அதாவது அதற்கு 50 வருஷங்களுக்குள், கான்ஸ்டாண்டி நோபிளைக் கைப்பற்றினார்கள் என்பதை நாம் முன்பு கண்டோம்.

இப்போது நாம் மத்திய ஆசியாவிடமிருந்து விடை

பெற்றுக்கொள்ள வேண்டும். அது நாகரிக ஏணிப் படியில் தாழ்ந்து, அந்தகாரத்தில் ஆழ்ந்துவிடுகிறது. இனி, நமது கவனத்தைக்கவரும் முக்கிய நிகழ்ச்சி எதுவும் அங்கு நிகழவில்லை. ஒருகாலத்தில் தழைத்தோங்கிப் பின்பு மனிதனால் அழிக்கப்பட்ட பழைய நாகரிகங்களின் ஞாபகம் மட்டுமே எஞ்சி நிற்கிறது. மனிதன் மட்டுமா? இயற்கையும் அதற்கு வைரியாக வந்து வாய்த்தது. அதன் சீதோஷ்ண ஸ்திதி நாளுக்குநாள் வறட்சியுற்றதால், அதுவும் வரவர வாசத்துக்கு யோக்கியமற்றதாகிவிட்டது.

இப்போது நாம் மங்கோலியரிட மிருந்தும் விடை பெற்றுக்கொள்ள வேண்டும். ஆனால், அவர்களின் ஒரு கிளைமட்டும் பிற்காலத்தில் இந்தியாவுக்கு வந்து இங்கே ஒரு பெரிய, புகழ்பெற்ற சாம்ராஜ்யத்தைக் கட்டி ஆண்டது. அதைப் பின்பு காண்போம். இப்போதைக்கு, செங்கிஸ்கானும் அவன் சந்ததியாரும் ஸ்தாபித்த சாம்ராஜ்யம் சீர்குலைவதையும், மங்கோலியர் சிற்றரசர்களின் கீழ் மீண்டும் தங்களுடைய ஜாதிப்பண்புகளை மேற்கொள்வதையும் காண்கிறோம்.

# 75

## இந்தியா ஒரு கஷ்டமான பிரச்சினைக்கு விடைகாண முயலுகிறது

ஜுலை 12, 1932.

சென்ற கடிதத்தில் தைமூரைப்பற்றியும் அவனுடைய கோரக் கொலைகளைப் பற்றியும், கபால கோபுரங்களைப்பற்றியும் எழுதினேன். அக்குரூரச் செயல்களை நினைக்கும் போதே நெஞ்சு நடுங்குகிறது! நமது நாகரிக காலத்தில் அவ்வாறு நடக்க முடியாதென்று நாம் எண்ணுகிறோம். ஆயினும், அவ்வளவு நிச்சயமாக ஒன்றும் சொல்வதற்கில்லை. நம்முடைய நாட்களிலேயே என்ன நடக்கக்கூடும், என்ன நடந்தது என்பதைச் சமீபத்தில் தான் கேட்கவும் கேட்டோம், பார்க்கவும் பார்த்தோம். செங்கிஸ்கானும் தைமூரும் பெரிய உயிர்ச்சேதமும், பொருட்சேதமும் உண்டாக்கினார்கள் என்பது உண்மையே. ஆனால், நமது கண்ணெதிரில், 1914-18-ஆம் வருஷத்து மகாயுத்தத்தின்போது விளைந்த உயிர்ச்சேத, பொருட் சேதங்களை நோக்கும்போது மேற்கூறியவை மிகவும் அற்பமாகத் தோன்றுகின்றன. மங்கோலியர் இழைத்த கொடுமைகளுக்குச் சமதையான கொடுமைகளை நம் கால நிகழ்ச்சிகளிலும் காண்கிறோம்.

ஆயினும், செங்கிஸ் அல்லது தைமூர் இவர்களின் காலத்திலிருந்ததைவிட நாம் பல வழிகளில் முன்னேறியிருக்கிறோம் என்பதை யாரும் மறுக்கமுடியாது. நமது வாழ்க்கை பலபட விரிந்து, நிறைவும் செறிவும் பெற்று விளங்குகிறது. இயற்கைச் சக்திகள் பலவற்றை மனிதன்

அறிவால் ஓர்ந்துணர்ந்து தனக்குப் பயன்படுத்தியும் வருகிறான். உலகம் முன்னையினும் தற்போது நாகரிகமும் பண்பும் பெற்றுத் துலங்குகிறது என்பதில் ஐயமில்லை. அவ்வாறாயின், யுத்தகாலத்தில் நாம் நம்மைமறந்து மிருகப் பிராயமாக நடந்துகொள்வது ஏன்? ஏனெனில், யுத்த மென்பதே நாகரிகத்துக்கும் நற்பண்புகளுக்கும் நேர் மாறானது. அவற்றின் மாண்புகளையும் அது மறுக்கிறது. மனித அறிவை மேன்மேலும் கொடியகொலைக் கருவிகளைக் கண்டுபிடிப்பதற்கு மட்டும் அது உபயோகப்படுத்திக் கொள்ளுகிறது. யுத்தவெறி மக்களின் அறிவைக் கவ்விக் கொள்வதால் அவர்கள் நாகரிகத்தின் நலங்களையும், வாய்மையின் வளமைகளையும், வாழ்வின் நயங்களையும் அறவே மறந்துவிடுகிறார்கள். அப்போது, அவர்களுக்கும் ஆயிரக்கணக்கான ஆண்டுகளுக்கு முன்பு மிருகப்பிராய மாக வாழ்ந்த அவர்களுடைய முன்னோர்களுக்கும் வேற்றுமை தெரிவது கஷ்டமாகி விடுகிறது. ஆகவே, யுத்தமென்பது எக்காலத்தில் எவ்விடத்தில் நடப்பினும் வெறுத்தொதுக்க வேண்டிய பயங்கர நிகழ்ச்சி என்பதில் ஐயமும் உண்டோ?

இந்த உலகத்துக்கே புதிதான ஒருவன் யுத்தகாலத்தில் மட்டும் நம்மை வந்து பார்ப்பதாக வைத்துக்கொள்வோம். அமைதியான காலத்தில் அவன் நம்மைப் பார்த்தறியான் என்றும் வைத்துக்கொள்வோம். அவன் நம்மைப் பற்றி என்ன நினைப்பான்? நாம் குரூரமானவர்கள், ஈவிரக்கமற்றவர்கள், காட்டுமிராண்டிகள், அவ்வப் போது தீரமும் தியாகமும் புரிந்தாலும் மொத்தத்தில் ஒருவரை யொருவர் கொல்லவேண்டும் என்னும் ஒரே உணர்ச்சிக்கு ஆட்பட்டவர்கள், நற்குண நல்லொழுக் கங்கள் இல்லாதவர்கள் என்கிற அருமையான முடிவுக்குத் தான் அவன் வரக்கூடும். ஏனெனில் அவன் நமது

குறுதிசயத்தின் ஒருபாகத்தை மட்டும் பார்க்கிறான்; அவன் நம்மைப் பார்க்கும் வேளையும் நமக்கு அனுகூல மானதல்ல. ஆகவே, அவன் மேற்கூறியவாறு நம்மைப் பற்றித் தவறான, ஒருதலைப்பட்சமான முடிவுக்கு வருகிறான்.

அதுபோலவே, நாமும் கடந்த காலத்தை 'யுத்தங்கள், படுகொலைகள்' என்னும் கண்ணாடியை அணிந்துகொண்டு நோக்கினால் அதைத் தவறாகவே மதிப்பிடுவோம். துரதிருஷ்ட வசமாக யுத்தங்களும் படுகொலைகளும் நமது கவனத்தைப் பெரிதும் கவர்வது உண்மையே. மக்களின் தினசரி வாழ்க்கையில் அத்தகைய அம்சம் எதுவும் இல்லை. அது சாரமற்றுக் காணப்படுவதால் சரித்திராசிரியனுக்கு அதைப்பற்றி என்ன சொல்வதென்று தெரியவில்லை. ஆகவே, அவன் ஏதாவதொரு சண்டையை எடுத்துக் கொண்டு அதைப்பற்றிப் பிரமாதமாக வர்ணிக்க ஆரம் பித்து விடுகிறான். யுத்தங்களை நாம் அலட்சியம் செய்வதற்கில்லைதான். ஆனால், அவைகளுக்கு அளவுக்கு மீறிய பிரதானியம் அளிப்பது கூடாது. ஆகவே, கடந்த காலத்தையும் கடந்தகால மனிதர்களையும் மதிப்பிடும் போது தற்காலத்தையும் தற்கால மனிதர்களையும் நினைவில் வைத்துக் கொள்வது நலம். அத்தகைய மதிப்பு அதிக மனிதத்தன்மை கொண்டதாக இருக்கும். அவ்வப்போது நிகழும் யுத்தங்கள் அவ்வளவு முக்கியமானவை அல்ல. மக்களின் தினசரி வாழ்க்கையும், அவர்களுடைய மன உலகில் கிளைத்தெழும் சிந்தனைகளுமே அதிக முக்கிய மானவை என்பதையும் நாம் நன்கு உணர்வோம். சரித் திரப் புத்தகங்களில் யுத்தங்களைப்பற்றிய செய்திகளே அதிகம் காணப்படுவதால் நான் இதை வற்புறுத்திச் சொல்ல வேண்டியிருக்கிறது. என்னுடைய கடிதங்களி லும் இக் குற்றம் ஓரளவு காணப்படுகிறதென்றே நினைக்

கிறேன். இதற்குக் காரணம் தினசரி வாழ்க்கையைப்பற்றி எழுதுவதிலுள்ள கஷ்டமும் எனது அறியாமையுமே ஆகும்.

தைமூர் இந்தியாவில் இழைத்த கொடுஞ்செயல்களைக் கண்டோம். அவன் சென்ற இடமெல்லாம் சுடுகாடாயிற்று. அதை நினைக்கவும் மயிர்க்கூச்செறிகிறது. ஆனால், இந்தியாவின் மேல், கீழ், தென், நடுப்பாகங்கள் அவனுடைய கொடுமைக்கு ஆளாகவில்லை என்று அறிய, சற்றே ஆறுதல் உண்டாகிறது. தற்போது ஐக்கிய மாகாணம் என அழைக்கப்படும் பிராந்தியத்தில் பெரும் பகுதியும் அவனிடமிருந்து தப்பி உய்ந்தது. டில்லி, மீரட் நகரங்களுக்கருகில் ஒரு சிறு பகுதிமட்டும் அவனால் அலைக்கழிவுண்டது. டில்லி நகரமும், பஞ்சாப் மாகாணமும் பெருங் கேட்டுக்கு ஆளாயின. பஞ்சாபிலும் தைமூர் சென்ற வழியில் வாழ்ந்தவர்கள் அடைந்த கஷ்டம்தான் மிகவும் அதிகமானது. தைமூரின் படையெடுப்பு பஞ்சாபின் பெரும்பாலான மக்களைப் பாதிக்கவில்லை. அவர்கள் யாதொரு விக்கினமும் இன்றித் தத்தம் தொழிலை நடத்திவந்தார்கள். ஆகவே, இந்த யுத்தங்கள், படையெடுப்புக்கள் இவற்றை மிகைப்படுத்திவிடாமல் நாம் மிகவும் எச்சரிக்கையுடன் இருக்கவேண்டும்.

14, 15-ஆவது நூற்றாண்டுகளில் இந்தியாவின் நிலைமையைக் கவனிப்போம். டில்லியில் சுல்தான்களின் அரசு தேய்ந்துவந்து, தைமூர் வந்தவுடன் மறைந்துவிடுகிறது. இந்தியாவெங்கும் பல சுதந்தர ராஜ்யங்கள் தோன்றி நடைபெற்று வருகின்றன. இவற்றில் பெரும்பாலானவை முஸ்லீம் ராஜ்யங்கள். தென்னிந்தியாவில் மட்டும் ஹிந்து ராஜ்யமான விஜயநகர ராஜ்யம் பலம்பொருந்தியதாக இருக்கிறது. இப்போது இஸ்லாம் இந்தியாவுக்குப் புதுமையானதும் அல்ல, அந்நியமானதும் அல்ல. அது

இங்கு நன்ருக வேர்ஊன்றி விடுகிறது. ஆதியில் படையெடுத்துவந்த ஆப்கானியரின் குரூரத் தன்மையும், அடிமை அரசர்களின் கொடுமைக் குணமும் வெகுவாகக் குறைந்து காணப்படுகின்றன. இப்போது, முஸ்லீம் மன்னரும் ஹிந்து மன்னரோடொப்ப இந்தியர்தான். அவர்களுக்கு வெளி உறவுகள் ஒன்றும் இல்லை. ராஜ்யங்களுக்குள் போர்கள் நடைபெறுகின்றன. ஆனால், அவை அரசியல் காரணங்களைக் கொண்டவையே ஒழிய மத சம்பந்தமான காரணங்களைக் கொண்டவை அல்ல. முஸ்லீம் ராஜ்யத்தில் ஹிந்துப் படைகளும், ஹிந்து ராஜ்யத்தில் முஸ்லீம் படைகளும் ஏகதேசம் சேவகம் புரிகின்றன. முஸ்லீம் மன்னர்கள் ஹிந்து ஸ்திரீகளை மணந்துகொள்ளுகிருர்கள். அவர்களின்கீழ் ஹிந்துக்கள் மந்திரிகளாகவும் இன்னும் இதர உயர்பதவிகளிலும் ஊழியம் புரிகிருர்கள். ஜெயித்தவன் ஜெயிக்கப்பட்டவன், ஆள்பவன் ஆளப்படுபவன் என்கிற உணர்ச்சி இருதிறத்தாரிடமும் இல்லை. முஸ்லீம்களில் சில அரசர்கள் உள்படப் பெரும்பாலோர் ஹிந்துக்களாயிருந்து இஸ்லாமைத் தழுவியவர்களே ஆவர். ராஜ சம்மானத்தையோ, பொருளியல் அனுகூலத்தையோ அடையலாம் என்னும் நம்பிக்கையினுல் பலர் முஸ்லீம்கள் ஆனுர்கள். முஸ்லீம்கள் ஆனபின்பும் அவர்கள் தங்களுடைய பழைய வழக்கங்களைக் கைவிடவில்லை. சில முஸ்லீம் அரசர்கள் பலாத்காரமாக மக்களை மதம்மாற்றினுர்கள். அவர்களுடைய மதபக்தி இதற்குக் காரணம் அல்ல. தங்களுடைய ஹிந்துப் பிரஜைகள் முஸ்லீம் பிரஜைகளாய் விட்டால் தங்களிடம் இன்னும் அதிக விசுவாசத்துடன் இருப்பார்கள் என்னும் அரசியல் நோக்கமே அவர்களுடைய செய்கைக்குக் காரணமாகும். ஆனுல், மதமாற்றத்துக்குப் பலாத்காரத்தைவிடப் பொருளியல்

காரணமே அதிக உதவி புரிந்தது. முஸ்லீம் அரசர்கள் முஸ்லீம்களல்லாத தங்கள் பிரஜைகள்மீது 'ஜஜியா' என்னும் தலைவரியை விதித்தார்கள். இவ்வரி செலுத்துவதினின்றும் தப்பித்துக்கொள்வதற்காகப் பலர் முஸ்லீம்கள் ஆயினர்.

மேற்கூறிய நிகழ்ச்சிகளெல்லாம் நகரங்களில்தான் நிகழ்ந்து வந்தன. கிராமங்களில் வாழும் லட்சக்கணக்கான மக்கள் எதனாலும் பாதிக்கப்படாமல் தங்களுடைய பழைய வழியிலேயே ஒழுகி வந்தார்கள். ஆனால், அவர்களுடைய வாழ்க்கையில் அரசாங்க உத்தியோகஸ்தர்கள் இப்போது அதிகம் தலையிட ஆரம்பித்துவிட்டார்கள். கிராமப் பஞ்சாயத்துக்களின் அதிகாரம் முன்னையினும் குறைந்துவிட்டது. ஆயினும், அவைகள்தான் இன்னும் கிராம வாழ்க்கையின் இருதய ஸ்தானமாகவும், முதுகெலும்பாகவும் விளங்குகின்றன. சமூக, மத சம்பந்தமான விஷயங்களில் கிராம வாழ்க்கையில் யாதொரு மாறுதலும் நேரவில்லை. இன்றுகூட இந்தியா லட்சக்கணக்கான கிராமங்கள் நிறைந்த நாடு என்பது உனக்குத் தெரியுமல்லவா? பட்டணங்களும் நகரங்களும் வெறுமே விளிம்பில் ஒட்டிக்கொண்டிருக்கின்றன. உண்மையான இந்தியா அன்றும் இன்றும் கிராமங்களில்தான் உள்ளது. அந்த இந்தியாவை இஸ்லாம் அதிகமாக ஒன்றும் மாற்றிவிடவில்லை.

இஸ்லாமின் வருகை ஹிந்து மதத்தை இரண்டு வழிகளில் ஆட்டிவிட்டது. இவ்விரண்டு வழிகளும் ஒன்றுக்கொன்று மாறுபட்டிருப்பதுதான் ஆச்சரியப்பட வேண்டிய விஷயம். ஒரு புறம், அது பழைமையை இன்னும் உறுதியாகப் பற்றிக் கொண்டது. வெளித் தாக்குதலினின்று தன்னைக் காத்துக் கொள்வதற்காக அது இன்னும் அதிகமாக இறுகி ஓர் ஓட்டுக்குள் புகுந்து

கொண்டது. ஜாதி முறை அதிகக் கடுமையானதாகவும் புற இனச் சேர்க்கையைத் தடுப்பதாகவும் மாறியது. பெண்கள் அந்தப்புரத்தில் அடைக்கப்பட்டார்கள். அவர்களிடையே கோஷா வழக்கமும் பரவியது. இன்னொரு புறம், ஹிந்து மதத்துக்குள்ளேயே ஒரு புரட்சி தோன்றியது. ஜாதிக்கட்டுப்பாடும், அளவுக்கு மீறிய பூஜா விதிகளும் எதிர்க்கப்பட்டன. மத சீர்திருத்தத்துக்கான வேறு பல முயற்சிகளும் செய்யப்பட்டன.

ஆதி காலத்திலிருந்தே ஹிந்து மதத்தில் பல பெரியார்கள் தோன்றி அதைத் தூசி துடைத்து, மாசு போக்கித் தூய்மைப் படுத்த முயன்று வந்திருக்கிறார்கள் என்பது உண்மையே. அவர்களில் தலை சிறந்தவர் கௌதம புத்தர். ஸ்ரீமத். ஆதி சங்கரரைப் பற்றியும் நான் உனக்குச் சொல்லியிருக்கிறேன். அவர் 8-ஆவது நூற்றாண்டில் வாழ்ந்தவர். அதற்கு 300 ஆண்டுகளுக்குப் பிறகு, தென்னிந்தியாவில் சோழ சாம்ராஜ்யத்தில் இன்னொரு பெரியார் தோன்றினார். அவருடைய திரு நாமம் ஸ்ரீமத். ராமாநுஜர் என்பது. அவருடைய விசிஷ்டாத்வைத சித்தாந்தம் சங்கரருடைய அத்வைத சித்தாந்தத்தினின்று மாறுபட்டது. சங்கரர் சைவர்; மகா மேதாவி. அவருடைய மதம் புத்தியையும் தர்க்க ரீதியையும் அடிப்படையாகக் கொண்டது. ராமாநுஜர் வைஷ்ணவர், மகா பக்திமான். அவருடைய மதம் பக்தியையும் நம்பிக்கையையும் அடிப்படையாகக் கொண்டது. ராமாநுஜருடைய கீர்த்திப் பிரபாவம் இந்தியா முழுவதும் பரவியது. சரித்திரத்தின் ஆரம்பத்திலிருந்தே இந்தியாவானது, அரசியலில் ஒன்றோடொன்று மாறுபட்ட பல்வேறு ராஜ்யங்களாகப் பிரிவுற்றிருந்தாலும் கலைத் துறையில் எவ்வாறு ஒன்றுபட்டு விளங்கி வந்திருக்கிறது என்பதை நான் அடிக்கடி எடுத்துக்காட்டி வந்திருக்கிறேன். எங்கேனும், எப்பொழுதே

னும் ஒரு பெரியாரோ அல்லது ஒரு பெரிய இயக்கமோ தோன்றினால் அதன் பிரபாவம் அரசியல் எல்லைகளைக் கடந்து இந்தியா முழுவதும் வியாபித்து வந்தது.

இஸ்லாம் இந்தியாவில் வேரூன்றிய பிறகு, ஹிந்துக்களிலும் முஸ்லீம்களிலும் புதுவகையான பெரியார்கள் தோன்ற ஆரம்பித்தார்கள். அவர்கள் இவ்விரு மதங்களையும் இணக்க முயன்றார்கள். அவர்கள் இரண்டிலுமுள்ள பொதுவான அம்சங்களை வற்புறுத்தி, இரண்டிலும் காணப்படும் சம்பிரதாயங்களையும் சடங்குகளையும் எதிர்த்து வந்தார்கள். இவ்வாறு இரு சமயங்களையும் கொண்ட ஒரு சமரச சன்மார்க்கத்தைக் காண அவர்கள் பெரிதும் முயன்றார்கள். உபய வாதிகளிடையிலும் விரோதமும் துவேஷமும் மிகுந்திருந்த படியால் மேற்கூறிய சமரச முயற்சி அதிக சிரம சாத்தியமானதாகவே இருந்தது. ஆனால், பல நல்லோர் இதற்காக ஒவ்வொரு நூற்றாண்டிலும் இடைவிடாது முயன்று வந்தார்கள். சில முஸ்லீம் அரசர்கள் கூட—அவர்களில் அக்பர் சக்கரவர்த்தியை முக்கியமாகச் சொல்ல வேண்டும்—இச் சமய சமரசத்தை ஸ்தாபிக்கப் பெரிதும் முயற்சித்தார்கள்.

பதினைலாவது நூற்றாண்டில், தட்சிணத்தில் வாழ்ந்த ராமானந்தர் என்னும் பெர்யார் முதன் முதலாக மேற்கூறிய சமய சமரசத்தைப் போதிக்க ஆரம்பித்தார். அவர் ஜாதியை ஒழிக்க வேண்டுமென்று பிரசாரம் செய்தார். அவருடைய சிஷ்யர்களில் கபீர் என்னும் முஸ்லீம் நெசவாளி ஒருவர் இருந்தார். ராமானந்தருக்கும் பிறகு கபீருடைய புகழ் பெரிதும் பரவியது. சர்வ ஜனங்களும் அவரைப் போற்றினார்கள். அவருடைய ஹிந்திப் பாடல்கள் இன்று வட இந்தியாவின் மூலைமுடுக்குகளிலும் பாடப்படுகின்றன. அவர் ஹிந்துவுமல்ல, முஸ்லீமும் அல்ல. அவர் இரு மதங்களையும் சேர்ந்தவர் அல்லது

இரண்டுக்கும் பொதுவான ஒன்றைச் சேர்ந்தவர் என்று சொல்லலாம். ஹிந்துக்களிலும், முஸ்லீம்களிலும், எல்லா ஜாதிகளிலும் அவருக்குச் சிஷ்யர்கள் இருந்தார்கள். கபீரின் மரணத்தைப் பற்றி ஒரு கதை உண்டு. அவர் இறந்த போது அவருடைய தேகத்தை ஒரு துணியால் மூடி விட்டு அதைக் கொளுத்த வேண்டுமென்று அவருடைய ஹிந்து சிஷ்யர்களும், புதைக்க வேண்டு மென்று அவருடைய முஸ்லீம் சிஷ்யர்களும் வாக்குவாதம் செய்ய ஆரம்பித்தார்கள். கடைசியில் துணியை எடுத்துப் பார்க்கும்போது கபீரின் தேகம் இருந்த இடத்தில் சில நறு மலர்கள் இருந்தனவாம். இந்தக் கதை வெறுங் கற்பனையாயிருக்கலாம். ஆனால், மிகவும் சுவாரஸ்யமாக இருக்கிறது.

கபீரை அடுத்து வட இந்தியாவில் இன்னொரு மதப் பெரியார் தோன்றினார். குருநானக் என்னும் பெயர் பூண்ட இப்பெரியார் சீக்கிய மதத்தை ஸ்தாபித்தவர். அவருக்குப் பின், ஒருவர்பின் ஒருவராகச் சீக்கிய மதத்தின் பத்து குருமார்கள் தோன்றினார்கள். கடைசியாக வந்தவர் குருகோவிந்த சிங் என்பவர்.

இன்னொரு பெரியாரைப் பற்றியும் நான் இங்குக் கூறவேண்டும். இந்திய மத உலகிலும் கலை உலகிலும் அவருக்கு நிரந்தர ஸ்தானம் உண்டு. அவர்தான் ஸ்ரீசைதனியர். 16-ஆவது நூற்றாண்டில் வங்காளத்தில் வாழ்ந்தவர். கல்விக் கடல். கல்வியால் பயனில்லை என்று கண்ட அவர் ஆண்டவனிடம் அன்பு செலுத்த ஆரம்பித்தார். அப்பக்த சிரோமணி ஆண்டவனைப் பஜனை பாடித் தோத்திரம் செய்துகொண்டே தீர்த்த யாத்திரை செய்தார். வங்காளத்தில் வைஷ்ணவ மதத்தை நிறுவியவர் அவரே. அவருடைய பிரபாவம் இன்னும் வங்காளத்தில் விளங்கிக்கொண் டிருக்கிறது. நிற்க.

இச் சீர்திருத்த வேகமும் சமரசபாவமும் வாழ்க்கையின் மற்றத் துறைகளிலும் பிரதிபலித்தன. தெரிந்தும் தெரியாமலும் அவை பரவிவந்தன. கலைப்பண்பில் ஒரு புதுமை, கட்டிடத்தில் ஒரு புதுமை, பாஷையில் ஒரு புதுமை, இவ்வாறு எதிலும் புதுமை பூத்தது. ஆனால், இவைகளெல்லாம் கிராமங்களைக் காட்டிலும் நகரங்களில்தான் அதிகமாக நிகழ்ந்து வந்தன என்பதை நீ மறந்துவிடக்கூடாது. அதிலும் முக்கியமாகச் சாம்ராஜ்யத் தலைநகராகிய டில்லியிலும் இன்னும் மற்ற பெரிய மாகாணத் தலைநகர்களிலும்தான் இவை நிகழ்ந்து வந்தன. யாவருக்கும் மேல்நிலையில் வீற்றிருந்த அரசன் முன்னையினும் அதிகமாக யதேச்சாதிகாரம் செலுத்தி வந்தான். பழைய இந்திய அரசர்களின் யதேச்சாதிகாரத்தை ஓரளவாவது கட்டுப்படுத்துவதற்குச் சட்டமும் சம்பிரதாயமும் உதவின. புதிதாக வந்த முஸ்லீம் அரசர்களுக்கு அந்தக் கட்டுப்பாடும் இல்லை. இஸ்லாம் மார்க்கத்தில் கொள்கை அளவில் அதிக சமத்துவம் இருந்தது. ஓர் அடிமைகூட சுல்தானாக வரமுடியும் என்பதை முன்பே கண்டோம். ஆயினும், அரசனின் யதேச்சாதிகாரம் வரம்பின்றி வளர்ந்துகொண்டே சென்றது. இதற்கு உதாரணம் வேண்டுமென்றால், பைத்தியக்காரத் துக்லக் டில்லியிலிருந்து தௌலதாபாத்துக்குத் தலைநகரை மாற்றிய செய்கை ஒன்றே போதுமே! அதைவிட வேறு என்ன வேண்டும்?

அடிமைகளைக் கொள்ளும் வழக்கம் மிகப் பிரபலமாகி வந்தது. முக்கியமாகச் சுல்தான்களின் கீழ் ஏராளமான அடிமைகள் இருந்தனர். யுத்தத்தில் அடிமைகளைச் சிறைப்படுத்திக் கொணர விசேஷ முயற்சி செய்யப்பட்டது. அவர்களில் கைத்தொழில் வன்மை உடையவர்கள் அதிகமாக விரும்பப்பட்டார்கள். மற்றவர்கள்

சுல்தானின் காவல்படையில் சேர்த்துக் கொள்ளப்பட்டார்கள்.

நாளந்தாவிலும் தக்ஷசீலத்திலும் இருந்த பெரிய சர்வகலாசாலைகள் என்ன ஆயின? அவைகள் மறைந்து நெடுநாள் ஆய்விட்டது. ஆனால், பல புதுவகையான சர்வகலாசாலைகள் தோன்றலாயின. அவைகள் 'டோல்' என்று அழைக்கப்பட்டன. அவைகளில் சம்ஸ்கிருதக் கல்வி அளிக்கப்பட்டது. பழமையைப் பெரிதும் பாராட்டிய அவைகள் காலத்துக்கு ஏற்றவைகளாக இராமல் பிற்போக்கு நிலைக்களனாக இருந்தன. நெடுங்கால முதற்கொண்டே அத்தகைய முக்கிய ஸ்தானங்களுள் ஒன்றாகக் காசி க்ஷேத்திரம் இருந்து வருகிறது.

கபீர் ஹிந்தியில் இயற்றிய பதங்களைப் பற்றியும் பாடல்களைப் பற்றியும் முன்பு சொன்னேன். ஆகவே, 15-ஆவது நூற்றாண்டிலேயே ஹிந்தி மக்களிடையே பெருவாரியாக வழங்கி வந்ததோடு இலக்கியத்துக்கு எடுத்த பாஷையாகவும் இருந்தது என்று தெரிகிறது. சம்ஸ்கிருதம் வழக்கொழிந்து நெடுங்காலம் ஆய்விட்டது. குப்த அரசர்கள், காளிதாச மகாகவி இவர்கள் காலத்தில்கூட சம்ஸ்கிருதம் கற்றவரிடையில் மட்டும்தான் வழக்கத்தில் இருந்தது. சாதாரண ஜனங்கள் சம்ஸ்கிருதச் சிதைவான பிராகிருத மொழியைப் பேசி வந்தார்கள். சம்ஸ்கிருதத்திலிருந்து பிறந்த ஹிந்தி, வங்காளி, மராத்தி, குஜராத்தி ஆகிய மொழிகள் வளர்ந்து வந்தன. பல முஸ்லிம் ஆசிரியர்கள் ஹிந்தியில் நூல்கள் எழுதினார்கள். 15-ஆவது நூற்றாண்டில் ஜான்பூரை ஆண்ட ஒரு முஸ்லீம் அரசன் மகாபாரதத்தையும் பாகவதத்தையும் சம்ஸ்கிருதத்திலிருந்து வங்காளியில் மொழிபெயர்ப்பித்தான். தெற்கே, பீஜபூரை ஆண்ட முஸ்லீம் அரசர்கள் தங்களுடைய கணக்கு வழக்குகளை மராத்தியில்

எழுதிவந்தார்கள். ஆகவே, 15-ஆவது நூற்றாண்டிலேயே சம்ஸ்கிருதத்திலிருந்து தோன்றிய மேற்கூறிய மொழிகள் நல்ல வளர்ச்சி அடைந்திருந்தன என்று தெரிகிறது. தென்னிந்தியாவில் வழங்கிவந்த திராவிட மொழிகளான தமிழ், கன்னடம், தெலுங்கு, மலையாளம் ஆகியவை இம் மொழிகளைவிட மிகவும் பழைமையானவை என்று சொல்லவேண்டியதில்லை.

முஸ்லீம் ராஜ்யங்களில் பாரசீக பாஷை அரசாங்க பாஷையாக விளங்கியது. அரசாங்க உத்தியோக சம்பந்த முடையவர்களெல்லாம் பாரசீகத்தை விரும்பிக் கற்றார்கள். இவ்வாறு, ஹிந்துக்களில் பலர் பாரசீக பாஷா ஞானம் உடையவர்களாக இருந்தார்கள். மெள்ள மெள்ளப் பாசறைகளிலும் கடைவீதிகளிலும் ஒரு புது மொழி விருத்தியாயிற்று. அது 'உருது' என்று அழைக்கப்பட்டது. 'உருது' என்றால் 'பாசறை' அல்லது 'முகாம்' என்று அர்த்தம் உண்மையில் இது ஒரு புது மொழி அல்ல. ஹிந்தியே சிறிது மாறுபட்டு உருதுவாகத் தோற்றமளித்தது. அதில் பாரசீக பாஷைச் சொற்கள் அதிகமாக எடுத்தாளப்பட்டன. மற்றப்படி அது ஹிந்திதான். இந்த ஹிந்தி - உருது அல்லது ஹிந்துஸ்தானி பாஷை வட மத்திய இந்தியா முழுவதும் விரைவில் பரவிற்று. இப்பாஷையைச் சிற்சில மாறுதல்களுடன் இன்று பதினைந்து கோடி மக்கள் பேசுகிறார்கள். இன்னும் அதிகமான பேர் அதைப் புரிந்துகொள்ளுகிறார்கள். ஆக, பேசுவோரின் தொகையை நோக்குமிடத்து ஹிந்துஸ்தானியானது உலகின் முக்கிய மொழிகளுள் ஒன்றாக இன்று விளங்குகிறது.

கட்டிடக் கலையிலும் புதுமுறைகளும் புதுப் பாணிகளும் அபிவிருத்தியாயின. பீஜப்பூர், விஜயநகரம், கோல்கொண்டா, ஆமதாபாத், ஜான்பூர் ஆகிய இடங்களில்

கம்பீரமும் அழகும் பொருந்திய பல கட்டிடங்கள் தோன்றின. ஆமதாபாத் அந்நாளில் அழகு வாய்ந்த பெருநகராய் இருந்தது. ஹைதராபாதுக்கு அருகில் நாம் கோல்கொண்டா அழிவுகளைச் சென்று கண்டது உனக்கு நினைவிருக்கிறதா ? கோட்டைமீது ஏறி அப்பழைய நகரின் மாடமாளிகைகளும் ஆவணவீதிகளும் பாழ்பட்டுக் கிடப்பதைக் கண்டோமல்லவா ?

ஆகவே, அரசர்கள் ஒருவரோடொருவர் மாறு கொண்டு மலைந்த காலத்தும் சமரசத்துக்கான முயற்சி இடைவிடாமல் நடைபெற்று வந்தது. சகல இந்தியரும் ஒன்றுபட்டு வாழ்ந்து, கூட்டு முயற்சியை மேற்கொண்டு மேல்நிலை எய்த வேண்டுமென்று பலர் அரும்பாடு பட்டனர். சில நூற்றுண்டுகளில் வெற்றியும் கிடைத்தது. ஆனால், அவர்களுடைய முயற்சி முற்றுப்பெறுமுன் நிலைமை மறுபடியும் தலைகீழாக மாறியது. அதுவரையில் அடைந்த முன்னேற்றம் சிறிது தடைப்பட்டது. மீண்டும் இன்று நாம் அவர்கள் சென்ற வழியிலேயே சென்று சமரசத்துக்கு முயல வேண்டியவர்களாக இருக்கிறோம். எல்லாவற்றிலுமுள்ள நல்ல அம்சங்களை நாம்கொள்ள வேண்டும். ஆனால், இம்முறை அஸ்திவாரம் பலமானதாயிருக்கவேண்டும். சுதந்தரத்தையும் சமுதாய சமத்துவத்தையும் அடிப்படையாகக்கொண் டிருப்பதாகவும், சிறந்த உலக ஏற்பாட்டோடு பொருந்துவதாகவும் அது இருக்கவேண்டும். அப்பொழுதுதான் அது நிலைத்து நிற்கும்.

சமய சமரசத்திலும் கலாசமரசத்திலும் நாட்டம் கொண்ட இந்திய மேலோர் பல நூற்றுண்டுகள் வரையில் அதிலேயே ஈடுபட்டிருந்து விட்டார்கள். அதனால், அவர்கள் அரசியல், சமுதாய சுதந்தரத்தை அடியோடு மறந்துவிட்டார்கள். ஆகவே, ஐரோப்பா பல துறை

களிலும் விரைவான முன்னேற்றம் அடைந்த காலத்தில் இந்தியாமட்டும் வீரியமிழந்து பின்தங்கிவிட்டது.

ஒரு காலத்தில் இந்தியா வெளிநாட்டு 'மார்க்கெட்டு' களில் ஆதிக்கம் செலுத்தியது. அதற்குக் காரணம் இந்தியாவின் ரசாயன நூலறிவாகும். வேறுபல காரணங்களும் இருந்தன. இங்கே சாயங்கள் செய்யப்பட்டன. எஃகு வடிக்கப்பட்டது இந்திய மரக்கலங்கள் சரக்குகளை ஏற்றிக்கொண்டு தொலைநாடுகளுக்குச் சென்றன. நாம் பேசுகிற இக்காலத்தில் இந்தியா இம்முதன்மையையும் ஆதிக்கத்தையும் இழந்து நெடுநாளாகிவிட்டது.

ரையில், கிழக்கேயிருந்து மேற்கே பாய்ந்துவந்த 16-ஆவது நூற்றாண்டில் மேற்கேயிருந்து கிழக்கே த் தொடங்கியது. ஆரம்பத்தில் சிற்றாறாக இருந்த வரவரப் பெருகி மகாநதி ஆகிவிட்டது.

---

Printed at KABEER PRINTING WORKS, Madras P. I. C. MS. 524
Published by Navayuga Prachuralayam, Karaikudi R. 68-A

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 3 | 2 | பதிலளிப்பானும் | பதிலளித்தானும் |
| 9 | 7 | ஆனால்... நிற்கிறது. | ஆனால், |
| 15 | 18 | பல்விருக்ஷமாகிப் | பல்விருகமாகிப் |
| 18 | 9 | உன் ஆத்மாவை | ஆத்மாவை |
| 43 | 25 | நிலைமைகளிலும் | நிலைமைகளாலும் |
| | 27 | நேர்ந்தாலும் | நேர்ந்ததாலும் |
| 64 | 23 | கொடுமையாக | கடுமையாக |
| 75 | 13 | எல்லாம் | எவ்வாறு |
| 79 | 23 | வளப்பையும் | வனப்பையும் |
| 103 | 25 | உங்களைப் | உன்னைப் |
| 113 | 5 | புலனாகுமென்பது | நன்கு |
| 117 | 13 | நாடாயகி | நாடாகிய |
| 121 | 2 | ஏற்படும்பொழுது | ஏற்பட்டபொழுது |
| 152 | 15 | நாகரிகத்தின் | நாகரிகத்தில் |
| 194 | 22 | பொருளில் | பொருளில் வழங்க |
| 195 | 30 | என்றும் | என்னும் |
| 201 | 18 | தம்முன் | தம்முள் |
| 205 | 24 | மொழி கூட நமது | மொழிகூட |
| 212 | 25 | அந்நாளையச் | அந்நாளைய |
| 215 | 1 | நிகழ்ந்த | திகழ்ந்த |
| 218 | 27 | உட்படுத்தப்படும் | உட்படுத்தப்பட்டும் |
| 219 | 5 | அக்காலத்தில் | அக்காலத்திய |
| 229 | 23 | நின்றார்கள் | நிற்கிறார்கள் |
| 234 | 1 | சர்க்கார்ப் பந்தயங்கள் | சர்க்கஸ் பந்தயங்கள் |
| 239 | 7 | இஸ்தாம்பூல் | இஸ்தம்பூல் |
| 249 | 2 | ஓர் உலகுடன் | ஓட உலகுடன் |
| 262 | 25 | விளைஞர் | வினைஞர் |
| | 27 | ,, | ,, |
| | 30 | கடல்வாள் | கடல்வாழ் |
| 264 | 11 | இளைஞர்களால் | வினைஞர்களால் |
| 267 | 28 | ,, | ,, |
| 271 | 10 | பன்னிரெண்டு | பன்னிரண்டு |
| 275 | 21 | பிக்ஷுர்களின் | பிக்ஷுக்களின் |
| 277 | 2 | ஏகாதிபத்தியம் | ஏகாதிபத்தியக் காலம் |
| | 7 | நினைவு கூறுவதற்குக் | நினைவுகூருவதற்குக் |
| 285 | 11 | செல்வம் மங்கியது | செல்வம் மல்கியது |
| 301 | 1 | பார்த்தால் | பார்த்ததில் |
| 309 | 19 | வெறியாரைக் | வெறியரைக் |
| 317 | 26 | நாடகாசிரியருங்கூட | நாடகாசிரியனும் கூட |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 319 | 29 | இந்தியா | இந்திரா |
| 354 | 29 | பன்னிரெண்டாம். | பன்னிரண்டாம் |
| 360 | 1 | வெற்றிக்குச் | பெற்றிக்குக் |
| 369 | 17 | நாதத்தின் | நாதத்தில் |
| 374 | 27 | நிருவ | நிறுவ |
| 377 | 11 | நட்புக் கொள்ளு மாறு | ஒப்புக்கொள்ளு மாறு |
| 379 | 11 | அவர்களுக்காக | அவர்களுக்காகக் |
| | 21 | பன்னிரெண்டு | பன்னிரண்டு |
| 382 | 20 | ஹொர்டுலிஸ் | ஹொர்குலிஸ் |
| 410 | 7 | வகுப்புகளின் | வகுப்பினரின் |
| 418 | 3 | மஜேபலமும் | மஜேபாவமும் |
| 427 | 19 | முழுப்பாகமும் | முழுப்பாரமும் |
| 429 | 4 | கீழ்படிதல் | கீழ்ப்படிதல் |
| 445 | 16 | பன்னிரெண்டு | பன்னிரண்டு |
| 448 | 18 | பௌத்ததுறவி | பௌந்தத்துறவி |
| 471 | 15 | உரிஞ்சப்பட்டு | உறிஞ்சப்பட்டு |
| 476 | 1 | நேர்ந்திருந்தால் | நேராதிருந்தால் |
| 483 | 25 | முடித்துவிட்டு | முடிந்துவிட்டு |
| 485 | 2 | பயன் பட்டிராது. | பயன்பட்டிரா. |
| 488 | 7 | அகழ் ஆராய்ச்சி | அகழ்வு ஆராய்ச்சி |
| 508 | 3 | விடுவதால் | வருவதால் |
| 525 | 22 | நன்னிமீட் | ரன்னிமீட் |
| 537 | 20 | முன்னைப்போல் | முன்னைப்போல் |
| 545 | 26 | சௌகரியங்களில் | சௌரியங்களில் |
| 552 | 27 | சிவந்தி | சிலந்தி |
| 559 | 10 | பிரிவுகளும் | பிரபுக்களும் |
| | 30 | உண்டாகும் | உண்டாக்கும் |
| 561 | 7 | சேனை எதிரில் | சேனைக்கு எதிரில் |
| 570 | 4 | சிட்பமும் | திட்பமும் |
| 573 | 27 | வனநகர்கள் | வளநகர்கள் |
| 577 | 1 | வாளை | வானை |
| 606 | 27 | திசையை | தசையை |
| | 30 | அச்சம் | அம்சம் |
| 612 | 2 | பொஷி மியாவுக்கும் | பொஹமியாவுக்கும் |
| 665 | 25 | ராமானந்தருக்கும் | ராமானந்தருக்குப் |
| 668 | 10 | பிற்போக்கு | பிற்போக்குக்கு |